# முன்னுரை

## திரு. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள்

அகிலன் அவர்களை இன்று உலகம் அறியும். 'வேங்கையின் மைந்தன்' என்ற நாவலுக்குச் சாகித்ய அகாடமியின் பரிசைப் பெற்றவர்.

சிறு கதைகளையும், நாவல்களையும் எழுதி, இருபதாம் நூற்றாண்டின் தமிழைப் புதிய இலக்கியப் படைப்புகளின் வழியாக வளர்த்து வருபவர். அப்படிப் பட்டவருடைய மற்றொரு புதிய படைப்பாகிய 'கயல் விழி'யைத் தமிழ்நாட்டிற்கு நான் அறிமுகம் செய்வது என்பது என்னை தமிழ்நாட்டிற்கு அறிமுகம் செய்து கொள்வதாகத்தான் முடியும்.

முன் எல்லாம் காப்பியங்கள் இலக்கியத்தின் முடிமணிகளாக விளங்கின. இன்று காப்பியங்களின் உயர்வை நாவல்கள் பெற்று ஒளிவிடுகின்றன. நாவல்கள் தமிழ்நாட்டில் இந்த நூற்றாண்டின் அண்மைப் பகுதியில்தான் சிறப்பாக எழுதப் பெறுகின்றன. அறிஞர்களும் இதனைப் புறக்கணிக்காது எழுதி வருகின்றனர், பாராட்டி வருகின்றனர். ஓர் அளவு வெற்றியும் இந்தத் துறையில் தமிழ்நாடு பெற்றுள்ளது என்பதனையும் எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். ஆனால் எது சிறந்த நாவல் என்பதில் கருத்து வேறுபாடு இருப்பது இயல்பு. சென்ற நூற்றாண்டில்-ஏன் இந்த நூற்றாண்டிலும்-சிறந்த ஆங்கில நாவல்கள் என அறிஞர்கள் விரும்பிக் கற்றவையெல்லாம், உலக நாவல்களை எல்லோரும் அறிந்த பின்னர் ஒரு சிறிது ஒதுக்கித் தள்ளப்படுவதைக் காண்கிறோம். ஆங்கிலப் பாடப்புத்தகப் பட்டியலை ஆராய்ந்தாலும் இந்த உண்மை தோன்றும். எனவே இதுதான் எல்லோரும் ஏற்கும் தலைசிறந்த நாவல் என்று உறுதி கூற முடியாது; மக்கள் முகம்போல மனமும்

வேறுபடும். ஆனால், பொதுவாகப் பெரும்பான்மையான இலக்கியக் கலைஞர்கள் பாராட்டக் கூடிய பகுதிகள் நிறைந்த நாவல் எனக் 'கயல் விழி'யைக் கூறலாம். அதனை நான் படித்ததின் பயனாக எழுந்த கருத்து இது. அதனைப் படித்த பலர் பாராட்டியதையும் பலரோடு ஆராய்ந்தேன். புதிய யுக மாணவர்களின் மனப்போக்கைத் தன் பக்கம் இந்த நூல் ஈர்த்துள்ளது. 'கல்கி'யில் அதனைப் படித்தவர்கள் முடிவில் கூறிய முடிவுகளும் அதனையே வற்புறுத்துகின்றன.

''நாவலா?'' என்று எள்ளி நகையாடிய காலமும் உண்டு. அந்தக் காலம் மலையேறிப் போய்விட்டது. நாவலாசிரியர்கள் பலர் நோபல் இலக்கியப் பரிசு பெற்றுச் சுவைப் பேரறிஞர்கள் எனப் போற்றப் பெறுகிறார்கள். ஒவ்வொரு நாவலும் ஒவ்வொரு புதிய வழியை வகுத்து விடுவதனைக் காண்கிறோம். அந்த மேனாட்டு வளர்ச்சியின் எதிர் ஒலியும் எதிர் ஒளியும் அகிலன் எழுத்துக்களிலும் காணலாம்; மகிழலாம்.

நம்முடைய நாட்டினர் தம் பழமையில் பெரிய ஈடுபாடு கொண்டவர்கள். பிறரைப் பழிக்காதபோது, இந்தப் பழம் பெருமை, வீழ்ந்து கிடக்கும் நாட்டுக்கு ஓர் எழுச்சியைத் தருகிறது. அதனால் அந்த ஈடுபாட்டை அகிலன் பயன் படுத்திக்கொள்வது தவறு அல்ல. 'சிவகாமியின் சபதம்' தமிழ் இலக்கியத்தில் ஒரு திருப்பம்உலக இலக்கியத்தில் அல்லஎனலாம். பிறரைப் பின்பற்றும் வகையில் எழுந்த திருப்பம் ஆனாலும் அதில் ஒரு தனித் தமிழ்த் தன்மை உண்டென்றே கூறவேண்டும். பின் வந்த நூல்கள் வரலாற்றில் வருவோரின் பெயர் கோவையாக மாறி நாவலின் உயர்நிலையை மாற்றவே முனைந்துவிட்டன. ஆனால் கயல்விழியோ அப்படி அல்லாமல் நாவலை மறவாது பழமையைப் புதியதாகப் படைத்துக் காட்டுகிறது. கதைத் தலைவி கயல்விழி வரலாற்றுப் பாத்திரம் அல்ல. ஆனால், அவளைப் படைத்த அகிலனார் தமிழர் ஆயிரம்ஆயிரம் ஆண்டுகளாகக் கனாக் கண்டு போற்றி வரும் பெண்மை

யையே படைத்துவிட்டார். பழையவர்கள் படைக்க அஞ்சிய ஒரு பாத்திரத்தைப் புதுமை உலகில் வாழும் இவர் படைத்து விட்டார். இதுவே ஒரு பெரிய முன்னேற்றம்.

பல்லவர் காலம், சோழர் காலம் இவை எல்லாம் நாவல்கள் வழியே நமக்குத் தெரிய வந்துவிட்டன. கடாரங்கொண்ட சோழரைப்போல, கடாரங்கொண்ட பாண்டியனும் உண்டு. அந்தப் பாண்டிய மறுமலர்ச்சியோ வரலாற்று ஆசிரியர்கள் உள்ளத்திலும் இருள் அடைந்தே கிடக்கிறது. அங்கே தம் இலக்கிய ஒளியை வீசி அனைத்தையும் தெளிவாக்குகிறார் அகிலன். சோழர் வீழ்ச்சி இதில் நன்கு விளங்குகிறது. சோழரும் பாண்டியரும் மாமாடிகள் என்று பாராட்டிய போசலர் இடையீடும் தெளிவாகிறது.

இந்த நிலையில் வரலாற்றுச் சுந்தரபாண்டியனைத் தமிழ் வாழும் அளவும் வாழத்தக்க தமிழனாக ஆசிரியர் படைத்துள்ளார். இவை எல்லாமே வரலாறா என்று கேட்டுப் பயனில்லை. ஆசிரியர் தம் இலட்சியக் கண் கொண்டு வரலாற்றைக் காணும் உரிமை அவருக்கு உண்டு. மெகாலேயும் கிப்பனும் வரலாறு எழுத வந்தபோதும் தம் கருத்தை மறக்கவில்லையானால், நாவலாசிரியர் ஏன் மறக்க வேண்டும்? இலக்கிய ஆசிரியன் படைப்புகள், சென்ற காலத்தின் சிறப்பினை வருங்கால மக்கள் உள்ளத்தில் பாயவிட்டு இனி வரும் உயர்வாக வளரவிடுவதே ஆகும்.

எனவே, கதைப் படைப்பிலும், பாத்திரப் படைப்பிலும், இலட்சியப் படைப்பிலும், இவற்றிற் கெல்லாம் ஏற்ற தமிழ் நடைப் படைப்பிலும் தன் தனித்தன்மையை ஆசிரியர் விளக்கியுள்ளார். அந்த நடையின் எளிமையில் பாண்டியன் உள்ளத்தின் ஆழமும் கயல்விழியின் தெய்வீகமும் விளங்கக் காண்கிறோம். வாழ்க ''கயல்விழி!'' வாழ்க அகிலன்! வாழ்க தமிழர்!

**தெ.பொ. மீனாட்சி சுந்தரன்**

# நன்றி

'கல்கி'யில் அண்மையில் தொடர்கதையாக வெளிவந்த நாவல் இது. இந்தக் கதையில் வரலாற்றுச் சான்றுகள் உள்ள இடங்களை நேரில் சென்று காணவும் குறிப்புகள் சேகரிக்கவும் எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தவர்கள் 'கல்கி'யின் ஆசிரியர் திரு.டி.சதாசிவம் அவர்கள். பேராசிரியர் கல்கிஅவர்களின் குமாரரும் துணை ஆசிரியருமான திரு.கி.இராஜேந்திரன் அவர்களும் ஓவியர் திரு.வினு அவர்களும் உடன் வந்து உதவிகள் செய்திருக்கிறார்கள். இந்த நூலுக்கும் அட்டைப்படம் வரைந்து கொடுத்திருக் கிறார் திரு. வினு அவர்கள்.

வரலாற்றுப் பேராசிரியர்கள் கருத்துக்களும் இலக்கியப் பேராசிரியர்களின் கருத்துக்களும் என்னுடைய இந்தக் கற்பனைக்கு உரம் தந்திருக்கின்றன. பாண்டிய நாட்டுக் கோயில்கள், கல்வெட்டுக்கள், சிற்பங்களை நான் காணப் பலர் துணை புரிந்திருக்கிறார்கள். அவர்கள் அனைவருக்கும் இப்போது புத்தகமாக இதைத் தமிழ்ப் பெருமக்களுக்கு வழங்கும் தாகம் பதிப்பகத்தாருக்கும், இதற்கு மனமுவந்து முன்னுரை அளித்துள்ள தமிழ்ப் பேராசிரியர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களுக்கும் அழகாக அச்சிட்ட அச்சகத்தாருக்கும் என் உளம் நிறைந்த நன்றி.

-அகிலன்

# இதயக் கபாடம் திறமினோ!

## (முன்னுரை)

**வருவார் கொழுநர் எனத்திறத்தும்**
**வாரார் கொழுநர் எனவடைத்தும்**
**திருகும் குடுமி விடியளவும்**
**தேயும் கபாடம் திறமினோ!**

கலிங்கத்துப்பரணி

'இன்று வருவார், இதோ வந்து விடுவார்!' என்று ஆவல் மிக்க துடிப்போடு அடிக்கடி கணவனின் வரவை எதிர்பார்த்துக் கதவைத் திறந்துவைத்துக் காத்திருக்கும் பெண்கள் பலர் பின்னர், 'இல்லை, வரமாட்டார், எங்கே வரப்போகிறார்!' என்ற ஏக்கப் பெருமூச்சோடு அவர்களே கதவைத் தாழிடுவதும் உண்டு. இப்படியே இரவெல்லாம் பத்தினிப் பெண்டிர் கதவைத் திறப்பதும் தாழிடுவதுமாக இருந்ததால் கதவின் முனைகூடச் சிறிது சிறிதாகத் தேய்ந்து விட்டதாம்.

எங்கே சென்றனர் வீட்டுத் தலைவர்கள்? எதற்காக அவர்களை இவ்வளவு ஆவலோடும் கவலையோடும் எதிர்பார்க்கிறார்கள் பெண்கள்?

**எழுந்தது சேனை எழலும்**
**இரிந்தது பாரின் முதுகு**
**விழுந்தன கானும் மலையும்**
**வெறுந் தரையான திசைகள்!**

போருக்கென்றெழுந்த சேனை வெள்ளத்தில் ஒன்றிக் கலந்து புறப்பட்டு விட்டார்கள் அவர்கள். அந்த வெள்ளப் பெருக்கின் வேகத்தால் பூமியின் முதுகெலும்பு முறிந்தது. காடுகளும் மலைகளும் அதன் அதிர்ச்சி தாங்காது நிலை குலைந்து வீழ்ந்தன.

அது மட்டுமா?

**அதிர்ந்தன நாலு திசைகள்!**
**அடங்கின ஏழு கடல்கள்!**
**பிதிர்ந்தன மூரி மலைகள்**
**பிறந்தது தூளி படலம்!**

திசைகள் அதிர்ந்தன; கடல்கள் அடங்கின; வலிமை கொண்ட மலைகள் சிதறின; புழுதிக் கூட்டம் மண்ணிலிருந்து விண்ணை முட்ட எழும்பியது.

போர், போர், போர்! வீட்டுத் தலைவியரின் உள்ளத் துடிப்பிலும் வெளியில் பொங்கிய சேனை வெள்ளத்திலும் அன்றைய நாட்டின் நிலையை அற்புதமாகப் படம் பிடித்து விட்டார் தென் தமிழ்த் தெய்வப் பரணி பாடிய சயங்கொண்டார். கள வேள்விக்குத் தலைவர்களை அனுப்பி விட்டுத் துடிதுடிக்கும் நெஞ்சங்களோடு வீடுகளில் காத்திருக்கும் பெண்களுக்கு உற்சாக மூட்டுவதற்காகப் பரணி பாடுகிறார்.

''உங்களுடைய வீரர்களின் கதையை உங்களுக்குச் சொல்கிறேன்; வீட்டுக் கதவுகளைத் திறந்து கொண்டு வந்து கேளுங்கள்!'' என்று இன்சொற் கவிதையால் கூவி அழைக்கிறார். கதவுகளை மட்டுமா திறக்கச் சொல்கிறார்? இல்லை; இதயக் கதவுகளையுந்தான்!

போருக்கு வீரர்களின் தினவெடுத்த தோள்களை மட்டும் நம்பியிருக்கவில்லை அந்தக் காலத்துத் தமிழகம், நாட்டிலுள்ள ஒவ்வோர் ஆண், பெண்ணின் உள்ளத்து உறுதியையும் அறிவையும் அது நம்பியிருந்தது. கொற்றவை எனும் காளித் தாயே வீரர்கள் வழிபட்ட தெய்வம். மனைமாட்சிமிக்க பெண்டிர் தங்கள் அன்பெனும் ஆக்க சக்திக்கு நோன்பினால் வலிமை சேர்த்து எண்ணற்ற

வெற்றிகளைத் தேடித் தந்திருக்கிறார்கள். ஆகவேதான் பெண்டிரைக் கூவி அழைத்துக் கவி பாடுகிறார் சயங்கொண்டார்.

சயங்கொண்டார் சோழ நாட்டைப் பாடினார்; நான் பாண்டிய நாட்டைப் பாட முன் வந்திருக்கிறேன். அவர் பதினோராம் நூற்றாண்டு வாழ்க்கையை வெளியிட்டிருக்கிறார். அவருக்குப் பின்னால் சுமார் இரண்டு நூற்றாண்டுகளுக்கு உட்பட்ட வாழ்க்கையைச் சொல்ல நான் முன் வந்திருக்கிறேன். அவருடையது கவிதையாலான தேன் தமிழ்த் தெய்வப்பரணி; நான் எழுதுவது குற்றங்குறைகள் மலிந்த மானுடனின் உரைநடைக் கதைப் பரணி.

நோக்கம் ஒன்றுதான். குலோத்துங்க சோழனையும் கருணாகரத் தொண்டைமானையும் முன் வைத்துப் பாடித் தமிழ்ப் பெருமக்களின் உள்ளத்தில் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டுகிறார் அவர். நானோ, பிற்காலப் பாண்டியப் பேரெழுச்சித் தலைவனான முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியனையும் அவனது உள்ளத்தில் மாபெரும் சக்தியாக மலர்ந்து மணம் வீசிய வாட்தடங்கண் பேரழகி கயல்விழியையும் பாடி, வாசகப் பெருமக்களுக்கு மகிழ்ச்சியூட்ட விரும்புகிறேன்.

போர்களை நாம் அறவே வெறுக்கும் காலம் இது. அன்றுதொட்டு இன்றுவரையில் போர் செய்யும் முறைகளில் எத்தனையோ மாற்றங்கள் இருந்தாலும் முடிவுகளில் மாற்றங்கள் இல்லை. நகரங்களை எரிப்பது, உயிர்களை அழிப்பது, பெண்களின் நிறையைச் சீர்குலைப்பது, அடிமை கொள்ளப்பட்ட மக்களை இழிவுபடுத்துவது இவையெல்லாம் அன்றும் நடந்தன; இன்றும் நடக்கின்றன. மக்களின் நம்பிக்கைகள், கொள்கைகள், இலட்சியங்கள் யாவற்றையுமே குலைத்து அறவாழ்வைக் கெடுக்கக் கூடியவை போர் நிகழ்ச்சிகள்.

நாம் போர் வெறி கொண்டவர்களாக இருக்க வேண்டாம். ஆனால் போர் வெறி கொண்ட அண்டை அயலார்களுக்கு மத்தியில் விழிப்போடிருக்க வேண்டியது அவசியமல்லவா? சிந்தனையிலே தான் போர்கள் முதலில் தொடங்கப் பெறுகின்றன. நமது சிந்தனையில் பாதுகாப்பு உணர்ச்சியும் போர்களைப் பற்றிய விவரங்களும் விழிப்பும் இருக்குமானால் நம்மை யாரும் இனி உலகில் தாழ்த்திவிட முடியாது.

ஆகவேதான், பேராடி வாழ்ந்த நமது பரம்பரையை இந்தச் சமயத்தில் திரும்பிப்பார்த்துக் கொள்ளவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியன் பாண்டியர் குல வரலாற்றில் பொன்னொளி வீசி வாழ்பவன். ஆனால் கயல்விழியோ வரலாற்று ஆசிரியர்களின் விழிகளுக்கே அகப்படாத பேதைப் பெண்; பேதைப் பெண்தானா அவள்?

'அரசியல் பிழைத்தார்க்கு அறமே கூற்றாகு'மென்று கூறி மதுரையம்பதியை முன்னொரு நாள் தீக்கிரை யாக்கினாள் கற்புக்கரசியாம் கண்ணகி. அதன் பின்னரும் பல முறைகள் மதுரை மாநகர் தீ வாய்ப்பட்டுத் துடித்திருக்கிறது. 'மதுராந்தகர்' என்ற செருக்குப் பெயர் கொண்டு சோழப் பேரரசே மதுரைக்கு ஒரு முடிவு கட்ட வேண்டுமென்று முனைந்திருக்கிறது. அத்தகைய ஒரு கடும் போரின் போது தீக்குளித்த மதுரை மாநகரில் தீக்குளித்து வந்த பெருஞ்செல்விதான் இக்கதைத் தலைவி கயல்விழி.

அமுதத்தை நல்லோருக்கு வழங்குவதற்காக அதனூடே திரண்ட விஷத்தை உண்ணப் புகுந்த ஆலவாய் அழகனின் நகரம் மதுரை. கயற்கண்ணியே அந்த அழகனைக் காத்து, விஷத்தை அவன் கண்டத்தில் தங்கச் செய்து உலகை உய்வித்தாள் என்பது கதை.

சுந்தரபாண்டியனைக் காத்த மங்கை கயல்விழி. பன்முறை தீக்குளித்த மதுரை நல்லாள் எப்படித் தன் பத்தினித் தன்மையால் இன்னும் அழகு குலையாது இளமை பொங்கத் தலை நிமிர்ந்து நிற்கிறாளோ, அப்படியே கயல்விழியும் தீயால் சுடப்பட்டவள் எனினும், பின்னர் தீயையே சுட்டு வஞ்சம் தீர்த்துக் கொண்டவள்.

'வரலாற்றுச் சுந்தரபாண்டியனைத் தமிழ் வாழும் அளவும் வாழத்தக்க தமிழனாக ஆசிரியர் படைத்துள்ளார்' என்று தமது பேரன்பின் காரணமாக முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்கள் தமிழ்ப் பேராசிரியர் திரு. தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள். அத்தகைய ஓர் பெருமைக்கு நான் உரியவன் அல்லன் என்று கருதினாலும், எனக்குச் சிறந்ததோர் மனிதனைப் படைத்துப் பார்க்க வேண்டுமென்ற பேராசை மட்டிலும் உண்டு.

தலைவனைப் படைக்கவேண்டுமென்ற துடிப்பின் விளைவே சுந்தரபாண்டியன். வீட்டுக்கு வீடு தலைவர்கள் வேண்டும். நாட்டின் ஒவ்வொரு சிறியபெரிய துறைகளிலும் தலைவர்கள் வேண்டும். 'எண்சாண் உடலுக்குத் தலையே முதன்மையானது' என்பதுபோல், நாட்டின் வளம் நிறைந்த வீறுகொண்ட வளர்ச்சிக்கு வழிகாட்டக் கூடியவர்கள் தலைவர்களே. அரசு, குடும்பம், தொழில், கலை முதலிய எல்லாத் துறைகளிலும் புதிய தலைமுறைத் தலைவர்கள் தோன்றமாட்டார்களா என்று கனவு கண்டு வருபவன் நான்...அந்தக் கனவே இதில் சுந்தரபாண்டியனாக உருப் பெற்றிருக்கக்கூடும். அவரிடம் ஏதும் தனித்தன்மை கொண்ட நற்பண்புகள் இருக்குமானால் அவை எனது அன்புக்குரிய வாசகர்களின் உள்ளங்களில் குடிபுகுந்து கொள்ள வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

'பழையவர்கள் படைக்க அஞ்சிய ஒரு பாத்திரத்தைப் புதுமை உலகில் வாழும் இவர் படைத்து விட்டார்' என்று

கதைத் தலைவி கயல்விழி பற்றிக் குறிப்பிடுகிறார்கள் பேராசிரியர் அவர்கள். ஆனால் அவளையே, 'தமிழர் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகக் கனாக் கண்டு போற்றி வரும் பெண்மையின் உருவம்' என்று அவர்கள் அன்போடு கூறும்போது என் கண்களில் ஆனந்தம் பொங்குகிறதுநான் தமிழனாகவும் தமிழ்த்தாயின் தொண்டனாகவும் பிறந்ததில் பெருமையுறுகிறேன்.

நான் ஆராய்ச்சியாளன் அல்லன்; ஆராய்ச்சிகளின் துணை கொண்டு கற்பனை செய்து கதை சொல்பவன். கயல்விழி என்ற பாணர்குலப் பேரழகியை நான் கல்வெட்டுக்களிலோ, மெய்க் கீர்த்திப் படிவங்களிலோ, காணவில்லை. அங்கயற் கண்ணியாம் மீனாட்சி அம்மையின் பொற்றாமரைத் திருவடிகளிலே அவளைக் கண்டேன். சின்னஞ்சிறு பூவண்டாகச் சுழன்று ரீங்காரம் செய்தாள். என் கற்பனைக் கனவில் அவள் வந்து கூறிய கதை இது.

சயங்கொண்டார் கலிங்கத்துப் பரணி பாடியுள்ளார். அவர் மரபில் வந்த மறுமலர்ச்சியாளனாகிய நானும் சுந்தரபாண்டியன் மீது ஆவலால் பரணி பாட விழைகிறேன். போர்ப் பரணிபோல் தோன்றினாலும் அன்புப் பரணி இது. குற்றங்குறைகளைப் பொறுத்தருளும் பண்போடு 'இதயக் கபாடம் திறமினோ!' என்று எனது அன்பு நிறைந்த வாசகப் பெருமக்களை அழைக்கிறேன்.

தொடர்கதையாகப் படித்த வாசகர்களில் நூற்றுக் கணக்கானோர் எனக்கும் பத்திரிகைக்கும் அன்போடு கடிதங்கள் எழுதியுள்ளார்கள். 'கல்கி'யில் வெளிவந்த கடிதங்கள் சிலவற்றை மட்டும் கதையின் முடிவை அடுத்து சேர்த்துள்ளேன்.

வணக்கம்.

**அகிலன்**

# 1. சொல்லேர் உழவன்தானோ?



**கொ**ங்கு நாட்டுத் தலை நகரான கருவூரின் நெடிதுயர்ந்த கோட்டை மதிலை வளைத்துக் கொண்டு ஆன்பொருனை நதி செந்நீர் கலந்த தண்ணீரோடு சலசலத்து ஓடிக் கொண்டிருந்தது. கோட்டைக்குள்ளேயும் ஆற்றங் கரையிலும் கொங்கு நாட்டுப் படைகளுக்கும் சோழப் பேரரசின் படைகளுக்கும் கடுமையான போர். கொங்கு நாடோ சிற்றரசு; சோழப் பேரரசோ கொங்கு நாட்டைப்போல் நூற்றுக்கு மேற்பட்ட நிலப்பரப்பைத் தன்னகத்தே கொண்டிருந்தது.

போரின் முடிவு எப்படியிருக்குமென்று முன்னமேயே தெரிந்து கொண்டுதான் கொங்கு நாட்டரசனும் எதிர்க்கத் துணிந்தான். முடிசாய மறுத்து மோதி நின்றான். கடைசியில் அவன் கொடி சாய்ந்தது. மூன்றாம் குலோத்துங்கப் பேரரசின் புலிக்கொடி இப்போது அந்த நெடிதுயர்ந்த மதிலின் உச்சியில் நெடிதுயர்ந்து பறந்தது.

கருவூர் நகரத்தின் அருமையை அந்தக் கோட்டை மதில் கூட அவ்வளவாக உணர்ந்ததில்லை. அதைப்போல் எத்தனையோ மதில்கள் தோன்றி வளர்ந்து சரிந்து விட்டன. ஆனால் சிற்றூராக அது பிறந்து வளர்ந்து, பின்னர் சேரர்களின் தலைநகரமான வஞ்சியாய் வாழ்ந்த காலந்தொட்டு அதை ஊட்டி வளர்த்திருக்கிறது ஆன்பொருனை.

அகமும் புறமும் பாடிய சங்கப் புலவர்கள் அந்த நகரையும் நதியையும் சேர்த்து எத்தனை அழகாய்ப் பாடியிருக்கிறார்கள்! ஆன்பொருனை தனது சில்லிட்ட காற்றால் நீண்ட பெருமூச்சுவிட்டது.

வெற்றி விழாக்களும் வீராபிஷேக விழாக்களும் கோட்டைக்குள் கோலாகலமாக நடந்து கொண்டிருந்தன. நகர்ப்புறத்திலும், நதிக்குள்ளும், நதிக்கரையிலும் இரத்த வெள்ளத்தைப் பெருக்கெடுத்து ஓடச்செய்த குலோத்துங்க சோழர் கொங்கு நாட்டரசனின் அரண்மனையில் வீற்றிருந்து சோழ கேரளன் என்ற பெயர் சூடி வீராபிஷேகமும் செய்து கொண்டார். ஆன்பொருனை நதி தனது செந்நீர் கலந்த தண்ணீரையே அவரது அபிஷேகத்துக்கும் அனுப்பி வைத்தது!

போருக்கு என்ன காரணம்? யாருக்கும் விளங்க வில்லை. முன்னமேயே சோழப் பேரரசிடம் சிற்றரசாக இருந்தவன்தான் கொங்கு நாட்டரசன். திறை செலுத்தி வந்தவன் என்றாலும், அவன் சோழ நாட்டு வீரர்களை அலட்சியப்படுத்தினான் என்று குற்றம் சாட்டி அவன் மீது பாய்ந்தது சோழப் பேரரசு.

கடல்போல் பரந்து விரிந்து கிடந்த சோழப் பெரும்படைக்கு வேலைகள் கொடுக்க வேண்டுமே? படைகளை வைத்துக்கொண்டு போர்களை நிகழ்த்தாமல் இருக்கலாமா!

வெற்றி விழாக்கள் முடிந்த மறுநாள் காலைப் பொழுது மிகவும் அயர்வோடு விடிந்தது. கோட்டைக் கதவுகளும் வழக்கத்துக்கு ஒரு நாழிகைப் பொழுது சென்ற பின்னரே திறக்கப்பட்டன. கோட்டைக் காவலர்களும் களியாட்டங்களில் கலந்து கொண்ட பின்னர் காவலுக்கு வந்ததால், அவர்களிடமும் அந்த வெற்றிச் சோம்பல் தென்பட்டது.

கதவு எப்போது திறக்கப்படும் என்று காத்திருந்தது போல் பரபரப்போடு ஏட்டுச் சுவடிகளும் கையுமாக ஓர் இளைஞன் அங்கிருந்து வெளிப்பட்டான். உயர்ந்ததோர் செந்தேக்குச் சிற்பம் போன்ற உடற்கட்டு, திரண்ட தோள், பரந்து விரிந்த மார்பு, கூரிய விழிகள், விசாலமான நெற்றி.

வாயிற் காவலர்களின் தலைவனுக்கு வெற்றி மிதப்பில் ஏதாவது அவனிடம் வம்பு பேச வேண்டும்போல் தோன்றியது போலும்.

''நில்! யார் நீ?'' என்று இளைஞனின் கரத்தைப் பற்றி அவனைத் தடுத்து நிறுத்தினான்.

''ஆ!'' என்று பிடியின் வலி தாங்காதவன்போல் முகம் சுளித்துக் கூவினான் இளைஞன். ''ஏன், பார்த்தால் தெரியவில்லையா? சொல்லேர் உழவனைய்யா, சொல்லேர் உழவன்!'' என்று ஏட்டுச் சுவடிகளை அவன் முகத்துக்கெதிரே உயர்த்திப் பிடித்து மற்றொரு கரத்தால் இடுப்பிலிருந்து எழுத்தாணியை உருவிக் காட்டினான்.

''வாளை உருவுகிறது போலல்லவா எழுத்தாணியை உருவுகிறாய்!''

''உம்முடைய வாள் முனையைவிட, இந்த எழுத்தாணியின் முனை கூர்மையுடையது, தெரியுமா? நீர் வில்லேர் உழவர்; உமக்குக் கொல்லத் தெரியும், நானோ சொல்லேருழவன்! கொல்லாமலே வெல்லத் தெரியும்! எது கூர்மையானது?''

''கொங்கு நாட்டுக் கவியோ?''

''பாண்டி நாட்டுப் பைந்தமிழ்க் குமரன் நான். பாண்டிய நாட்டிலிருந்து பல காதங்கள் நடந்து, கொங்கு நாட்டரசைப் பாடிப் பரிசில் பெற வந்தேன். வந்த இடத்தில் சோழச் சக்கரவர்த்திகளின் வீராபிஷேகத்தையே கண்டு மகிழும் பேறு கிடைத்தது. ஆனால், பாடிப் பரிசில் பெறும் வாய்ப்புத்தான் கிட்டவில்லை.''

''உன்னுடைய பாண்டிய நாட்டிலேயே உனக்கு அந்த வாய்ப்புக் கிடைக்கும்!'' என்று பெருமையோடு கூறினான் வாயிற் காவலன்.

''பாண்டிய நாட்டிலா!''

''ஆமாம், எங்கள் சக்கரவர்த்திகளுக்கு அடுத்த வீராபிஷேகம் உங்கள் குலசேகர பாண்டியருடைய

அரண்மனையில்தான் நடக்கப்போகிறது. கொங்குநாட்டுக் கருவூரை வென்றதால் 'சோழ கேரளன்' ஆகிவிட்டார்; அடுத்தாற்போல் மதுரைக்கு திக்விஜயம் செய்து, 'சோழ பாண்டியர்' என்ற பெயரும் சூடிக்கொள்வார். சோழ, சேர, பாண்டிய மும்மண்டலங்களுக்கும் அதிபதியாவதால் மதுரையிலேயே 'திரிபுவன வீர தேவர்' என்ற பெரும் பெயரும் பெறப்போகிறார்.''

''என்ன!'' என்று வியப்போடு கூவி, ''திரிபுவன... வீர...தேவர்!'' என்று சொல் பிரித்துப் பார்ப்பதுபோல் தனக்குள் கூறிக் கொண்டான் இளைஞன்.

''சக்கரவர்த்திகளின் பெயரையா இகழ்ந்து பேசுகிறாய்?'' என்று மீசை துடிக்க, கண் சிவக்க, வாளை உருவினான் காவலன்.

''இகழ்ந்து பேசுகிறேனா! என்னுடைய நினைவில் நிறுத்திக் கவிபாடுவதற்கல்லவோ சொல்லிப் பார்க்கிறேன். 'திரிபுவன வீர தேவா!'' என்று தொடங்கி ஒரு பாமாலை புனைந்து சூட்டினால் எவ்வளவு சிறப்பாக இருக்கும்! மூளையைத் தீட்டிக் கொள்கிறேன் ஐயா. மூளையைத் தீட்டிக் கொள்கிறேன். எங்களுடைய ஒரே ஆயுதம் இதுதான்!'' என்று எழுத்தாணியால் தன் தலையைச் சுட்டிக் காட்டினான்.

சொல்லேர் உழவர்கள் பகையும், பாணர்கள், கலைஞர்கள் முதலியோர் பகையும் வேண்டாமென்று ஏற்கனவே சோழப் பேரரசு, படைகளுக்குக் கட்டளை யிட்டிருந்தது. வாயிற்காவலன் புலவனுடைய பேச்சிலிருந்து தப்பினால் போதுமென்று அவனை அனுப்பி வைத்தான்.

புலவன், அமராவதி என்று இன்று அழைக்கப்பெறும் ஆன்பொருனையைக் கடந்து நெடுஞ்சாலையில் விரைந்து நடந்தான். கோட்டைக் காவலனிடம் பேசிய குழைவும் துடுக்குத்தனமும் இப்போது அவன் முகத்தில் இல்லை. கடுமையாகச் சிந்திக்க வேண்டிய பொறுப்பை அந்த இளம்

பிராயத்திலேயே பெற்றவன்போல் ஏதோ சிந்தனையில் தன்னை மறந்தான்.

குன்றைச் சூழ்ந்த சிற்றூர் ஒன்றில் அவனுடைய குதிரை ஒன்று வணிகனின் பாதுகாப்பில் விடப்பட்டிருந்தது. பராமரிப்புக் கான பொற்கழஞ்சுகளைக் கொடுத்து விட்டு, மௌனமாக அதன்மீது தாவி ஏறினான். களையும் கம்பீரமும் வாய்ந்த அரபு நாட்டுப் பரி அது.

பாண்டிய நாடு செல்லும் சாலையில் குதிரை காற்றின் வேகத்தில் கடுகிப் பறக்கத் தொடங்கியது. இளைஞனின் மனோ வேகமோ அப்போதே போய் மதுரைமாநகரில் குதித்துவிட முடியாதா என்பதுபோல் சிறகடித்தது. புரவியின் பிடரியோடு ஒன்றிப் படுத்துக் காற்றைக் கிழித்த வண்ணம் அவன் கடுகிச் சென்றான்.

சோழப் பேரரசின் ஆதிக்கம் திக்கெட்டும் பரவிக் கிளைத்துச் செழித்து வளர்ந்த காலம் அது. விஜயாலய சோழரால் தஞ்சையில் ஏற்படுத்தப் பெற்ற ஆட்சி, தலைமுறை தலைமுறையாக அந்த மாவீரர்களால் மாபெரும் சாம்ராஜ்யமாக விளங்கிச் சிறந்தது. கங்கை கொண்ட சோழபுரத்தில் தலைநகரை அமைத்துக் கொண்ட சோழர்கள் தலைநகரைச் சுற்றிலும் திரும்பிய பக்கமெல்லாம் வீரர்களின் குடியிருப்புகளை எழுப்பியிருந்தார்கள். மூன்றாம் குலோத்துங்கச் சக்கரவர்த்திகளுக்கு வயதும் முதிர்ந்து விட்டது. யார்மீதும் போர் தொடுப்பதற்கோ, புதுப் புகழ் சேர்ப்பதற்கோ வேண்டிய முகாந்திரமும் ஏதும் இல்லை. அப்படியிருக்கும்போது திடீர்திடீரென்று சிற்றரசர்கள் மீது பாய்வதன் நோக்கம்?

படைகள்! போர்ப் படைகள்! மிதமிஞ்சிய பெரும் படைகளைத் திரட்டி வைத்துக் கொண்டிருப்பவர்களால் அமைதியாக இருக்க முடியாது போலும்!

'சாகப்போகிற காலத்தில் சக்கரவர்த்திக்கும் புதிய வாகைகள் சூடிப் புதிய பெயர்களால் தம்மை அழைத்துக்

கொள்ள வேண்டுமென்ற ஆவல் எழுந்திருக்கிறது. அல்லது தம்முடைய குமாரன் மூன்றாம் இராஜராஜனுக்கும் போர்ப் பயிற்சிகள் அளிப்பதற்காக இந்தப் போர்களா? எதுவாக இருந்தாலும் சரி, இனி இந்தச் சோழர்கள் நம்முடைய பாண்டிய நாட்டை அமைதியோடு வாழவிடப் போவதில்லை!'

அமைதியற்ற மனத்தினனாய் இளைஞன் பசியையும் தாகத்தையும் மறந்து விரைந்தான். பாண்டிய நாட்டின் எல்லைக்குள் வந்த பின்னர்தான் தனது குதிரையின் முகத்தை உற்றுப் பார்த்தான் இளைஞன். சிவந்த கண்களிலிருந்து நீர் வடியத் தொடங்கியது. கடிவாயில் தும்பைப் பூவின் நிறத்தில் நுரை பொங்கியது. மாலை நேரமும் வந்துவிட்டது.

இரவு நேரத்தில் தங்குவதற்காக வழியில் தென்பட்ட சிறுநகரத்தின் அஞ்சினான் புகலிடத்தை அடைந்தான் இளைஞன். அஞ்சினான் புகலிடம் என்ற பெயர் அவனுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அச்சம் என்ற சொல்லே அவனுக்கு வெறுப்பைத் தந்தது. 'ஏன், வழிப்போக்கர் புகலிடம் என்று இருந்தால் என்ன?' என்று எண்ணியபடியே குதிரையைக் கோட்டத்தில் கட்டிவிட்டு உள்ளே புகுந்தான்.

களைப்பாற அங்கே குளிக்க முடிந்தது. பசிதீர அவனுக்கும் அவன் குதிரைக்கும் உணவு கிடைத்தது. உணவைப் பரிமாறும் பணியாளனுடைய போக்கில் சிறிது பரபரப்புக் காணப்படவே, ''என்ன செய்தி? வெளியூருக்குப் புறப்படுகிறவர் போல் அவசரப்படுகிறீரே!'' என்று கேட்டான் இளைஞன்.

''இருந்திருந்தும் இன்றைக்கு யாரும் வெளியூருக்குப் புறப்படுவார்களா? வெளியூர்களிலிருந்து மக்கள் கூட்டம் இங்கே திரண்டு வந்திருப்பதை நீங்கள் பார்க்கவில்லையா? ஊர்தோறும் மாவிலைப் பந்தலும் தென்னங்குருத்தின் தோரணமும் வாழையும் கமுகுமாக இருப்பதை நீங்கள் காணவில்லையா?''

இளைஞனுக்கே இதைக் கேட்க நாணமாகத்தான் இருந்தது. அவனுடைய ஐம்புலன்களும் மதுராபுரியில் இருந்ததால் அவன் தன்னைச் சூழ்ந்துள்ள உலகையே மறந்திருந்தான்.

''நீங்கள் கவியென்றீர்களே! ஒருவேளை கற்பனை உலகில் மிதந்திருப்பீர்கள்.''

''இந்த நகரில்...?''

''கொற்றவைத் திருவிழாவின் கடைசிநாள் இன்றைக்கு. எங்கள் ஊர்மக்கள் இன்றைக்குத் தங்கள் கண்கள் பெற்ற பயனை அனுபவிக்கப் போகிறார்கள். நம்முடைய ஆடரங்கில் இன்றைக்கு ஆட்டக்கதை நடக்கப்போகிறது. கவிஞருக்கும் கருத்திருந்தால் அவர் கண்கள் பெற்ற பலனைப் பெற்றுக் கொள்ளலாம்.''

''ஆட்டம், பாட்டு, கூத்து! இதிலொன்றும் குறை வில்லை நம்முடைய மக்களுக்கு!'' என்று எரிச்சலோடு கூறினான் இளைஞன்.

''என்ன! என்ன! என்ன!''

உணவு பரிமாறுவதைப் பாதியிலேயே நிறுத்தி விடுவதுபோல் விழித்தான் பரிசாரகன். பாண்டிய நாட்டுக் கவி என்று தன்னை அழைத்துக் கொள்ளும் ஒருவனுக்கு ஆட்டக் கதையிடம் இத்தனை வெறுப்பிருந்தது அவனுக்கு வியப்பைத் தந்தது.

''பத்தினித் தெய்வம் கண்ணகியின் கதை நடக்கிறது இங்கே. பாணர் குலப் பேரழகி கயல்விழியின் பெயரையாவது நீங்கள் கேள்வியுற்றதுண்டா?''

இளைஞன் அப்படி ஒரு பெயரைக் கேள்வியுற்றது மில்லை. அவன் அதைக் கேள்வியுற விரும்பவுமில்லை. பரிமாறுகிறவனைப் பகைத்துக் கொள்ள வேண்டாம் என்பதற்காக அன்றைய நிகழ்ச்சிகளைப்பற்றி அவனிடம் விவரங்களையெல்லாம் கேட்டுத் தெரிந்துகொண்டான்.

# 2. கொற்றவைக் கோயில்



**பை**ந்தமிழ்க் குமரன் என்று தன்னைக் கூறிக்கொண்ட இளைஞன் அந்தப் புகலிடத்திற்கு வந்து தன்னோடு சேர்ந்து கொள்வதாகக் கூறியிருந்த மற்றொரு பெரியவருக்காகச் சிறிது நேரம் காத்துக் கொண்டிருந்தான். காரணை விழுப்பரையர் என்ற அந்தப் பெரியவர் அவனுடைய ஆசிரியர், வழிகாட்டி, பாதுகாவலர். இருவரும் அந்த இரவில் அங்கு சந்தித்த பின்பு ஒன்றாகச் சேர்ந்து மதுரைக்குப் புறப்படுவதாக முன்பே பேசிக்கொண்டிருந்தனர்.

விழுப்பரையருக்காக வழி பார்த்துக் கொண்டிருந்தான் இளைஞன். இன்னும் அவர் வந்துசேரவில்லை. பொழுது புலர்வதற்குள் எப்படியும் வந்துவிடுவார் என்ற நம்பிக்கை அவனுக்கு உண்டு.

இளைஞன் புகலிடத்தின் வெளிப்புறத்துத் திண்ணையில் படுத்துறங்க நினைத்தான். படுத்தானே தவிர, உறக்கம் வரவில்லை. விழாக்கோலம் பூண்ட நகரத்தின் பல்வேறு ஒலிகள் வந்து அவனைத் தங்கள்பால் ஈர்த்தன. கொம்பொலி, சங்கொலி, உடுக்கையொலி, பறையொலி இவையனைத்துமாகச் சேர்ந்து ஊரையே உவகைப் பெருக்கில் ஆழ்த்திக் கொண்டிருந்தன.

அன்றைக்குப் பரணி நட்சத்திரம் என்பது அவனுக்கு நினைவுக்கு வந்தது. கொற்றவைத் தேவியின் சிறப்பு நட்சத்திரம் அது. ஆகவேதான் அதைக் கடைசி நாள் திருவிழாவாக வைத்துக் கொண்டாடுகிறார்கள் போலும்.

பரணித் திருநாளையும் அதற்குரிய கொற்றவைத் தாயையும் நினைத்தவுடனேயே பயபக்தியோடு படுக்கை

யிலிருந்து துள்ளி எழுந்தான் இளைஞன். கொற்றவை வீரர்கள் வழிபடுகிற தனித் தெய்வம்; படையினருக்குத் தலைமையேற்று அவர்களைப் போருக்கு வழி நடத்திச் செல்லும் காளித்தாய் அவள். பகைவரைக் கொன்று வீரருக்கு வெற்றி வாகை சூடுபவள். பரணியில் பிறந்தவள் தரணியாளப் பிறந்தோரின் மூல சக்தியாவாள்.

சோர்வையும் களைப்பையும் உதறி எறிந்துவிட்டுப் பைந்தமிழ்க் குமரன் நேரே கொற்றவைக் கோயிலை நாடி நடந்தான். கோயிலுக்கு உள்ளும் புறமும் தீப்பந்தங்கள் கொழுந்துச் சுடர்விட்டு இரவைப் பகலாக்கிய வண்ணம் இருந்தன. பலிபீடத்தில் முன்னம் வெட்டப்பட்ட எருமைக் கிடாய்களின் இரத்தம் அப்படியே உறைந்து உலர்ந்திருந்தது. காளித்தாய் மக்களின் தாமச குணமாகிய சோம்பலைப் பலி யிட்டுத் தரச் சொல்வதற்கு அடையாளமாக நடந்த பலி அது.

கருவறைக்கு வெளியே பெரிய வட்டச் சட்டியில் அகில் புகைந்தவண்ணமிருந்தது. உள்ளே இருளை மிகுதியாக்கும் மங்கலான விளக்கொளியில் காளித்தாய் செவ்வரளியின் நீண்ட நெடுமாலை புனைந்து கோழைகள் நடுங்கும் கம்பீரத்துடன் காட்சியளித்தாள். எண்ணற்ற தடக்கைகளிலும் பல்வேறு வகையான ஆயுதங்கள், காண்போர் சிந்தனைகளில் தீப்பொறியூட்டும் விழிகள், எல்லையற்ற சக்திகளின் கூட்டுருவாக அவள் நிமிர்ந்து நின்றாள். கண்ணிமைக்காமல் சற்று நேரம் இந்தக் காட்சியைப் பார்த்தான் இளைஞன்.

பின்னர் சிரந்தோய விழுந்தெழுந்து கண்ணீர் பெருக்கி நின்றான்.

''தாயே! எருமைகளைக் கொல்ல மறந்தாரில்லை; தங்களுக்குள்ளே வளர்ந்துவிட்ட தாமச குணத்தைக் கொல்ல மறந்து உறங்குகிறார்கள். நாட்டை விழிப் படையச் செய்து எங்கள் சோம்பலைக் கொன்று எங்களைக் காத்தருள் செய்!''

இளைஞனின் மனக்கண்ணில் கொங்குநாட்டுக் கருவூரில் நடைபெற்ற போர்க்கோலக் காட்சிகள் முன்வந்து நின்றன. தீப்பட்ட தெருக்கள், புகைசூழ்ந்த வானம், திரும்பிய பக்கமெல்லாம் கொலை, கொள்ளை, வெறிச் செயல்கள், மக்கள் கூட்டத்தின் மரண ஓலங்கள்!

கொற்றவைக் கோயிலைவிட்டு வெளியில் வந்தவுடன் அவன் கண்ணெதிரில் கண்ட தெருக் காட்சிகள் அவனது மனக் காட்சிகளுக்கு முற்றும் மாறுபட்டிருந்தன. புத்துடை உடுத்து, புதுமலர் சூடி, வில்லெழுதி, விழியெழுத்திக் காதலிளம் கன்னியரும், களிறுகளெனத் தோற்றமளித்த காளையரும், குழந்தைகளும், முதியோரும், திரும்பிய திசைகளிலெல்லாம் சிரிப்பொலி சிந்தி நடந்தனர். எங்கும் ஆட்டம், பாட்டு, களிக்கூட்டமாக இருந்தது. கருவூரில் கண்ட காட்சிகளோடு இவற்றை ஒப்பிட்டுப் பார்த்தான் இளைஞன், நெடு மூச்செறிந்தான்.

கூட்டத்தோடு அவனும் ஒன்றிக் கலக்கவே, அது அவனை அலைப்பட்ட துரும்பாக்கி நேரே ஆடரங்கை நோக்கி இழுத்துச் சென்று நிறுத்தியது. மக்கள் கூட்டத்தின் நாவில் கயல்விழி என்ற பெயரும், அவள் ஆடவிருந்த சிலம்புக் கூத்தின் பெயரும் ஆயிரம் முறை தவழ்ந்தன.

கண்ணால் கண்டிராத, காதால் கேட்டிராத அந்தக் கயல்விழியிடம் அவனுக்குச் சினம் பொங்கியது. நாடாளும் குலசேகர பாண்டியரைவிட, இந்தப் பாணர் குலப் பெண்ணிடம் அல்லவோ பாண்டிய மக்கள் பரிவு கொண்டிருக்கிறார்கள்!

ஆடரங்கினுள் தீவர்த்திகள் ஒளியுமிழ, மக்கள் கூட்டமெனும் கடலுள் மிதக்கும் மணிவயிரப் பெருங்கலம் போல் அது காட்சியளித்தது. இளைஞனால் அருகில் சென்று காட்சியைக் காண முடியவில்லை. தொலைதூரத்தில் நின்று கவனித்தான்.

வீணை ஒலித்தது; யாழ்ஒலி பொங்கியது; குழலோசை கூவியது; மத்தளம் விம்மியது. அன்றைய ஆட்டமான

சிலம்புக் கூத்தைப் பற்றிக் கட்டியம் கூற முன் வந்தார் ஒரு பாணர். பாண்டியர் நெடுஞ்செழியன் வேடத்திலிருந்த அவரைச் சிலர் கயல்விழியின் தந்தை என்றனர்; வேறு சிலர் வளர்ப்புத் தந்தை என்றனர்.

கட்டியம் கூற வந்தவர், சேரனின் தம்பி எழுதிய சிலம்புக் காவியத்திலிருந்து மதுரைக் காண்டத்தை மட்டும் அன்று நடத்தப் போவதாகக் கூறினார். மதுரை மாநகரில் கோவலன் கொலையுண்ட செய்தியை மங்கையொருத்தி கண்ணகியிடம் ஓடிவந்து கூறுவதிலிருந்து ஆட்டக் கதை* தொடங்குமென்றார்.

முன்னுரையைக் கேட்டவுடனேயே முகம் சுளித்தான் குமரன். பாண்டிய நாட்டில் வாழும் பாணர்களே முன்னம் ஒரு பாண்டியன் அறியாமையால் செய்த தவறை மீண்டும் சுட்டிக் காட்டுவதுபோல் அவனுக்குத் தோன்றியது. மேலும் துன்பவியலில் தொடங்கப் பெறும் கூத்தை அவனுக்கு நின்று பார்க்கப் பொறுமை இல்லை. திரும்பிச் செல்ல நினைத்தான்.

'கலீர்!' என்று சிலம்பு ஒலித்தது. மத்தளம் அதிர்ந்தது. ஆடலரங்கில், அவள் தோன்றிவிட்டாள். நெடுஞ்தொலைவிலிருந்து கண்ணுற்ற இளைஞனுக்கு இரண்டு மட்டிலும் நெஞ்சில் பதிந்தன. அவை விழிகளா? அல்லது கயல்களா?

செய்தி கேட்டுப் பொங்கி எழுந்தாள்; கீழே வீழ்ந்தாள்; விக்கினாள்; விம்மினாள்; தனது ஒளிக்கதிர் பொங்கும் மதி முகத்தில் கார்முகிற் கூந்தலைப் புயலென வீசச் செய்தாள். கருங்கண் செங்கண்ணாகச் சிவக்கும்படி கதறியழுதாள்; சினங்கொண்டாள், சீறினாள். செங்கதிரோனைப் பார்த்து, தன் கணவன் கள்வன்தானா என்று கேட்டாள்.

---

*ஆட்டக் கதா அல்லது கதகளி என்ற பெயருடன் இன்று கேரள நாட்டின் தனிப்பெரும் நடனமாக விளங்கும் ஆட்டம் தமிழகத்தின் பழம்பெரும் கூத்துக்களுடன் தொடர்புடையதாக இருந்திருக்க வேண்டும் என்று நம்புவதற்கிடமிருக்கிறது. ஆராய்ச்சியாளர்கள் முயற்சி செய்தால் நமது நடனக்கலை பற்றிய பல உண்மைகள் புலனாக வழியுண்டு. ஆட்டம்—கதை—ஆட்டக்கதை: கதை—களி——கதகளி.

பைந்தமிழ்க் குமரன் சிலப்பதிகாரத்தை விழுப்பரையரிடம் பாடம் கேட்டவன். சேரன் எழுதிய அந்தச் சித்திரத்தின் சொல்லுக்குச் சொல் இப்படியெல்லாம் உயிர்கொடுத்து நடிக்க முடியும் என்றே அவன் எதிர்பார்க்கவில்லை. ஊனும் உணர்வும் நெகிழ்ந்துருக ஆடலரங்கில் கயல்விழி கண்ணகியாகவே மாறித் துடித்தாள்.

தன்னையும் மறந்தவாறு பையப் பையக் கூட்டத்தில் முன்னேறி ஆடலரங்குக்கு அருகில் வந்துவிட்டான் இளைஞன். சிலம்புச் செய்யுளை நினைவில் வைத்துக் கொண்டே ஆட்டக் கதையில் மனம் ஒன்றினான்.

பாண்டியன் நெடுஞ்செழியனின் அரண்மனை வாயிலுக்குச் சிலம்பு ஒன்றேந்திய கையினளாய் அவள் வந்து நின்றாள். அந்தத் தோற்றத்தைக் கண்ட இளைஞனின் உள்ளம் அச்சத்தால் நடுக்கமுற்றது. சற்று முன்பு கோயிலில் கண்ட கொற்றவைத் தெய்வந்தான் ஆடலரங்கை நாடி வந்து விட்டதா!– 'இல்லை; அவள் கொற்றவையோ, பிடாரியோ, பத்திரகாளியோ அல்லள்' என்று அரங்கினுள் வாயிற் காவலன் கூறும்போதுதான் இளைஞனுக்கும் அது மெய் யென்று பட்டது.

அரசியல் நீதியில் அறம் வழுவிய பாண்டியனிடம் சீறிச் சினந்து தன் சிலம்புடைத்து, மாணிக்கப் பரல் காட்டி, கோவலன் குற்றமற்றவன் என்பதை நிலைநாட்டினாள் அவள். பாண்டியன் துஞ்சி வீழ்ந்தவுடன் மதுராபுரியின் தெருக் களுக்கு வந்து வெஞ்சினமுரைத்து அதை எரியூட்டினாள்.

பாண்டியன் வீழ்ந்த கோலம் கண்டு பதறித் துடித்தான் இளைஞன். அடுத்து மதுரையை அவள் எரிக்க முற்பட்டதை அவனால் பொறுக்கவே முடியவில்லை.

அவளோ செந்தழல் தேவனிடம் ஆணையிடத் தொடங்கினாள்.

**பார்ப்பார், அறவோர், பசு,**
**பத்தினிப் பெண்டிர்,**

**மூத்தோர், குழவி எனும்**
**இவரைக் கைவிட்டுத்**
**தீத்திறத்தார் பக்கமே சேர்!**

''நிறுத்துக!'' என்று தன்னையும் மறந்து ஆடரங்கினுள் பாய்ந்தான் இளைஞன்; ''மதுரை மாநகரை எரிக்காதே!'' என்று கத்தினான்.

வைணிகர், குழலூதுவோர், யாழ் மீட்டுவோர், மத்தளம் முழங்குவோர் அத்தனை பேர்களும் திடுக்கிட்டுத் தங்களது செயல்களை நிறுத்தினர். கயல்விழி பெண் புலியானாள்.

காதளவோடிய புருவங்களான இரு வில்களிலிருந்தும் கூரம்பு விழிகள் இரண்டு மின் வேகத்தில் புறப்பட்டன.

பேசும் நிலையில் அவள் இல்லை. ஆனால் அவள் பேசாத பேச்சுக்களனைத்தும் அவள் விழிகள் நொடிப் பொழுதில் பேசிவிட்டன. உச்சி முதல் உள்ளங்கால் வரையில் நடுங்க அவள் கொற்றவையானாள்.

அவளுடைய விழிகளை அருகிலிருந்து கண்ணுற்ற இளைஞனும் பேச நா எழாது திகைப்புற்று நின்றான்.

# 3. போர்வெறிச் செருக்கர்!



**மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்**
**பூவொடு புரையும் சீரூர்—பூவின்**
**இதழகத் தனைய தெருவமி தழகத்**
**தரும்பொகுட் டனைத்தே**
**அண்ணல் கோயில்,**
**தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்!.....**
—பரிபாடல்

**மா** மதுரைத் திருநகரை ஒரு மங்கை எரிக்கத் துணிவதா? 'உலகெலாம்தான் வாட, வாடாத தன்மைத்தே தென்னவன் நான் மாடக் கூடல் நகர்!' என்றொரு

புலவன் பாடினானே, அதை வாடச் செய்வதா! திருமாலின் உந்தியில் உதித்து இதழ் விரித்து நிற்கும் செந்தாமரை போன்ற தெருக்களை உடைய மதுரையை, தாமரையின் மையத்தே அமைந்த குமிழ் போன்ற கோவிலை உடைய மதுரையை, தாமரையின் பூந்தாதுக்களைப் போன்ற தேனினுமினிய தமிழ்க் குடிமக்கள் மிகுந்த மதுரையை எரிப்பதா!

இளைஞனின் மனத்துக்குள்ளே தீப்பட்ட கருவூர் நகரக் காட்சி ஒருபுறம் குமுறிக் கொண்டிருந்தாலும், நடைபெறுவது கூத்து என்ற நினைவே எழாதபடி கயல்விழி நடித்து வந்ததாலும் அவன் வெகுண்டெழுந்தான்.

''நீ பாண்டிய நாட்டைச் சேர்ந்தவளாக இருக்க முடியாது. சோழர்களின் ஒற்றர் கூட்டத்தைச் சேர்ந்தவளாக இருக்கவேண்டும்! இல்லாவிட்டால் இதை நடிக்கத் துணிந்திருக்கமாட்டாய்...!''

கடையிதழில் அலட்சியமாகப் புன்னகையை மலரவிட்ட கயல்விழி, ''ஏன் மதுரைமாநகர் தீப்பட்டு எரிந்தால் தான் என்ன!'' என்று மிடுக்கோடு கேட்டாள்.

இளைஞனின் இடுப்பில் உடைவாள் இல்லை. எழுத்தாணிதான் இருந்தது. அதைச் சட்டென எடுத்துக் கொண்டு அவளை நெருங்கப் போனான். கயல்விழியின் துடுக்கான பதில் கேட்டு அஞ்சிய அவள் தந்தை, இளைஞனின் செயல் கண்டு மேலும் அஞ்சினார்.

இதற்குள் கூட்டத்துக்குள்ளிருந்து ஓடி வந்த ஒருவர் அரங்கில் ஏறி இளைஞனின் கரத்தைப் பற்றினார். அவனுடைய செவிகளுக்கு மட்டும் கேட்கும்படியாக, ''ஆறுவது சினம்! ஆறுவது சினம்!'' என்று பன்முறை கூறினார்.

பைந்தமிழ்க் குமரன் திரும்பிப் பார்த்தான். படமெடுத்துச் சீறும் நாகம் பிடாரன் கை வேர் கண்டு தலையொடுங்குவதுபோல், அவர் சொல் கேட்ட மறுகணமே

ஒடுங்கிவிட்டான். அவன் புகலிடத்தில் எதிர்பார்த்துக் கொண்டிருந்த காரணை விழுப்பரையர் தான் அவர்.

எதிர்பாராது எதிர்ப்பு அடங்கிவிடவே முன்னிலும் துடுக்காகப் பேசினாள் கயல்விழி:

''காலம் காலமாய்ச் சோழர்களிடம் அடிமைப்பட்டுக் கிடக்கும் நமது மதுரை, தன்னை ஒரு மாநகர் என்று அழைத்துக்கொள்ள முடியுமா? அது தீப்பட்டு அழிந்தால் என்ன நேர்ந்துவிடும்...!''

''ஆறுவது சினம்!'' என்று விழுப்பரையர் மீண்டும் அவனிடம் கூறினார். அவனுடைய இரத்தம் கொதிக்கத் தொடங்கிவிட்டது.

''வேறு கூத்து ஒன்றும் இல்லையா? சிலம்புக் கூத்து மட்டுந்தானா போட வேண்டும்?''

''கொற்றவைத் தாயின் திருநாளில் பத்தினித் தாயின் கூத்தை நடத்தாமல் வேறு எதை நடத்துவார்களாம்! ஆண்களும் தங்கள் சக்தியை மறந்து விட்டார்கள்; பெண்களும் தங்கள் சக்தியை மறந்து வருகிறார்கள். பத்தினிப் பெண்களின் சக்தி என்ன தெரியுமா! சிலம்புச் செல்வியும் ஒரு பெண்; கொற்றவைத் தேவியும் ஒரு பெண்! ஆண்களாகிய உங்களுடைய வீரத்தையும் வெற்றியையும் உங்களுக்கே நினைவூட்டத்தான் இந்தக் கூத்து!''

பைந்தமிழ்க் குமரனை இறுகப் பற்றி அணைத்துக் கொண்டு அரங்குக்கு வெளியில் வந்தார் விழுப்பரையர். திரண்டிருந்த பெருமக்களிடம் சலசலப்பு ஏற்பட்டுப் பின்னர் அமைதி நிலவியது. இளைஞன் அப்போதே புகலிடத்துக்குத் திரும்பிச் செல்ல நினைத்தான். ஆனால் விழுப்பரையரோ கூட்டத்துக்குப் பின்னால் அவனை இருக்கச் சொல்லித் தாமும் அமர்ந்தார்.

''உங்களுடைய உணர்ச்சி புனிதமான உணர்ச்சி என்பதை நான் அறிவேன்; நாடகத்தில்கூட நமது தலைநகரம் பற்றி எரிவதை உங்களால் பொறுக்க முடியவில்லை. ஆனால்

எப்போதுமே உணர்ச்சிகளை ஒருமுகப்படுத்தித் தேக்கி வைத்துக்கொண்டு வெளிப்படுத்த வேண்டும். ஓலையில் எழுதுகிற எழுத்தாணியைக் கூர்வாள் என்றும், வேல்விழி மங்கையரை வாளேந்தும் பகைவரென்றும்கூட மதி மயங்கச் செய்யக் கூடியவை உணர்ச்சிகள்!''—விழுப்பரையர் இளைஞனிடம் மிகுந்த அன்பும் பரிவும் கொண்டிருந்தார் என்றாலும் அவனுக்கு உண்மைகள் கூறித் திருத்தவும் தயங்கவில்லை.

''அவள் கூறியதை நீங்கள் கேட்டீர்களோ?''

''கேட்டேன்; நானும் உங்களை ஒத்த வயதில் இருந்தால் அவளை அரங்கத்திலேயே கொன்றுகூட இருப்பேன். என்றாலும் சிந்தனை செய்து பார்க்கும்போது அவள் கூற்று மெய்யாகவே எனக்குப்படுகிறது. நம்முடைய சக்தி அழிந்து விட்டதென்று நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். ஆனால் ஆழ்ந்த உறக்கத்தில் அது செயலற்றுக் கிடக்கிறது. அடிமைத் தனத்துக்குப் பழக்கப்பட்டுவிட்ட நாடு விரைவில் விழிப்புறுவதில்லை.''

இடையில் தடைப்பட்டு விட்ட கூத்து மீண்டும் தொடங்கப் பெற்றது. அப்போது கயல்விழியின் தந்தை, கூத்தினிடையே குறுக்கிட்ட இளைஞரின் வீர உணர்ச்சிக்குத் தாம் தலைவணங்குவதாகவும், ஆனால் இனிமேல் ஆடரங்கில் அதை வெளிப்படுத்த வேண்டாமென வேண்டிக் கொள்வதாகவும், குறிப்பிட்டார். மீண்டும் ஒலிகள் இழைந்தன; கயல்விழி கண்ணகியாகி மதுரையை அழல்பட வைத்தாள். பைந்தமிழ்க் குமரன் மெல்லக் கூட்டத்தினின்றும் எழுந்தான். அவனுடைய நிலையைப் புரிந்து கொண்ட விழுப்பரையரும் அவனைப் பின்பற்றலானார். இருவரும் நெடுஞ்சாலையை ஒட்டியிருந்த அஞ்சினான் புகலிடத்தை நோக்கி நடந்தனர்.

புகலிடத்துக்குள்ளிருந்து சாளரத்தின் வழியே கசிந்த விளக்கொளியில் குதிரைகள் கட்டியிருந்த இடத்தில் மேலும் இரு குதிரைகள் கட்டப்பட்டிருந்தன. இளைஞனிடம்

சமிக்ஞை செய்துவிட்டு, மெல்ல இருளில் பதுங்கியவாறே திண்ணைப் புறம் எட்டிப்பார்த்தார் விழுப்பரையர். சோழ நாட்டைச் சேர்ந்த வீரர்கள் இருவர் அங்கு இருந்தனர். கருவூரிலிருந்து மதுரைக்குச் செல்பவர்கள் என்பது தெரிந்தது. குலசேகர பாண்டியரிடம் செல்லும் தூதுவர்களாகத் தான் இருக்க வேண்டும் என்பதை ஊகித்துக் கொண்டார். மதுரைக்கு வந்து 'சோழ பாண்டியன்' என்று தங்கள் மன்னர் பட்டம் சூட்டிக் கொள்ள நினைத்திருப்பதை அறிவிக்கவே அவர்கள் சென்று கொண்டிருக்க வேண்டும்.

தூதுவர்கள் இருவரும் நெடுநாள் சோழப் பேரரசிடம் பணியாற்றியவர்கள் என்பது தெரிந்தது. பாண்டிய நாட்டின் நிலையைத் துரும்பென மதிப்பவர்கள் போலவும் உலகமே தங்களது சக்கரவர்த்தியின் ஆணைக்கு அடங்கி நடப்பது போலவும் அவர்களிடம் செருக்கிருந்தது. வழக்கமாகத் தூதுவர்களிடம் இருக்கவேண்டிய நாவடக்கமும் இரகசியப் பேச்சும்கூட அவர்களிடம் இல்லை. யார்தான் ஏது செய்துவிட முடியும் என்ற அலட்சியத்தோடு அவர்கள் தங்களுக்குள் உரக்கவே பேசிக் கொண்டனர்.

இளைஞனுக்குத் துடிதுடிப்பு மிகுதியாகியது. விழுப்பரையரோ அவர்களுடைய பேச்சிலிருந்து எவ்வளவு செய்திகளைச் சேகரிக்க முடியுமோ அவ்வளவையும் சேகரித்துக் கொண்டார். தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாத இளைஞன், ''சிற்றரசர்களாக இருந்து திறை செலுத்துவது வேறு? தங்களைத் தாங்களே சிறுமைப் படுத்திக் கொள்வதற்கு உடன்படுவது வேறு'' என்றான்.

சட்டென இளைஞனின் வாயைப் புதைத்தார் பெரியவர். பின்னர் பேச்சுக் குரல்கள் அடங்கிக் குறட்டை ஒலிகள் எழுந்தன. ஓசை செய்யாது தங்கள் இருவருடைய குதிரைகளையும் அவிழ்த்துக் கொண்டார்கள். சூழ்ந்துக் கழியைப் புகலிடத்தின் ஒரு மூலையிலிருந்து எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டார் விழுப்பரையர்.

வெளியிலே கருத்த இருட்டு. விண்ணில் மீன் கூட்டம் நிறைந்து மதுரைச் சாலையின் இருளை மிகைப்படுத்திக் காட்டியது.

# 4. கன்றல்ல; களிறு!



**நா**ன்மாடக் கூடலாம் 'பாடசால் சிறப்பின் பாண்டியன் பெருஞ்சீர் மாட மதுரை' நகரத்துப் பெருமக்கள் பரணித் திருநாளை மறந்து மூன்று நூற்றாண்டுகளாகி விட்டன. பரந்துவிரிந்து கிடந்த சோழ சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாகப் பாண்டித் திருநாடு மாறிய பின்னர் அதன் வீரர்களும் தமது வீரத் தேவியின் பிறந்த நாளை மறந்து வந்தனர் போலும். நாட்டின் உட்பகுதிகளில் மட்டிலும் ஆங்காங்கே ஒரு சில ஊர்களில் விழா நடைபெற்று வந்தது.

ஆனால் பேரரசர் குலசேகர பாண்டியர் மட்டிலும் அந்த நன்னாளை மறந்தாரில்லை. நாடு முழுவதும் அதைக் கொண்டாடச் சொல்லிக் கட்டளையிட வேண்டும் என்பது அவர் எண்ணந்தான். என்றாலும் சோழப் பேரரசின் மேலாட்சி தனது ஒற்றர் கூட்டத்தாலான ஆயிரமாயிரம் விழிகளால் அவரது செயல்களைக் கண்காணித்து வந்தது.

காலம் காலமாகச் சிதறுண்டு உட்பகையை வளர்த்துக் கொண்டிருந்த பாண்டிய நாடு அவருடைய ஆட்சியில்தான் ஒரு கொடிக்கீழ் வந்தது. அதைக் கட்டிக் காத்து ஒரு முனைப்படுத்துவதிலேயே அவர் கண்ணும் கருத்துமாக இருந்தார். படைவீரர்களைப் பெருக்கினாலோ, வீரத்திரு விழாக்களை மீண்டும் பாண்டிய மக்களுக்கு நினைவூட்டினாலோ, குலோத்துங்க சோழரின் கழுகுக் கண்களான ஒற்றர்கள் ஒன்றினைப் பத்தாக்கி விடுவார்கள்.

இவற்றையெல்லாம் கருத்தில் கொண்ட பாண்டியர் அதைத் தமது அரண்மனைக்குள்ளாகவே குடும்பத் திருநாளாகக் கொண்டாடி வந்தார். இராஜ கம்பீரன் என்று மக்களால் பரிவோடு அழைக்கப்பெற்ற பாண்டியரும் அரசியார் உலக முழுதுடைய பெருந்தேவியுமே தொழுகைக்குரிய ஏற்பாடுகளை நேரில் இருந்து கவனித்தனர்.

வீரர்களின் அரசன் என்ற பொருளில் 'மழவராயன்' என்று போற்றி அழைக்கப்பெற்ற பாண்டியப் பேரரசின் சிங்காதனம் அரசியாரால் பொன்னாலும் மணிகளாலும் அலங்கரிக்கப் பெற்றது. புத்தம் புது மலர்கள் அதன்மேல் தூவப்பட்டன. அரசியாரின் பணிவிடைகளை அருகிலிருந்து கண்ணுற்ற பாண்டியர் அங்கு நின்ற திருக்கோலம், கோயில் வாயிலைக் காத்துநிற்கும் துவாரபாலகர் ஒருவரின் கருங்கற் சிலையை ஒத்திருந்தது. ஐம்பது வயதைக் கடந்து நின்ற உடற்கட்டா அது!

பாண்டியர் குலத்தின் வீரத் திருவாளை உயர்த்திப் பிடித்து, அதன் கூர்மையைப் பதம் பார்ப்பது போன்று தமது விரல்களை மெல்ல அதன்மீது படரவிட்டார் பாண்டியர். சரேலென்று பீறிட்டுப் பொங்கியது செவ்விரத்தம். பெருமிதத்தோடு புன்னகை பூத்து, அதில் ஒரு துளியைச் சுண்டி எடுத்துத் தமது நெற்றியில் திலகமாக அணிந்து கொண்டார். வேலம்பூ மாலை அருகே வாழை இலையில் சித்தமாக இருந்தது. அதை எடுத்துத் திருவாளுக்கு அணிவித்துச் சிங்காதனத்தின் மீது வைத்தார். வாளுக்கருகே செங்கோல் துலங்கியது. திருக்குறள் ஏட்டுச் சுவடி ஏற்றம் பெற்றது. பொற்கலத்தில் அமுது படைத்து அதனையும் கொண்டு வந்து வைத்திருந்தார் அரசியார் கோப்பெருந்தேவி.

''படை, குடி, கூழ், அமைச்சு நான்கும் சித்தமாகி விட்டன. நட்பும் அரனும் நம்மிடம் ஏற்கனவே இருக்கின்றன'' என்றார் குலசேகர பாண்டியர் புதிர் போடுவது போல.

விளக்கம் கோருவதுபோல் கோப்பெருந்தேவி பாண்டியரின் முகத்தை ஏறிட்டு நோக்கினார்.

''தேவி! இன்றைக்கு நமக்குப் படைத் திரட்டும் உரிமை இல்லாதிருக்கலாம்; ஆனால், நாளைக்கு இதே வாளைச் சுற்றித்தான் பாண்டிய நாடே படை வீடாகத் திரண்டெழுந்து நிற்கப்போகிறது. வள்ளுவப் பெருந்தகை அரசர்க்குரிய அறுவகை இலட்சணங்களைக் கூறுகிறாரல்லவா? அதில் படைக்குத்தான் முதலிடம் கொடுத்திருக்கிறார்.''

அடுத்தாற்போல் செங்கோலைச் சுட்டிக் காட்டினார் பாண்டியர்.

''குடிமக்களின் அன்பைப் பெறாத எந்த ஆட்சியும் எந்தக் காலத்திலும் நிலைத்திருக்காது. ஆட்சியில் நேர்மை உள்ள வரையில் மக்களின் அன்பு மாறாதிருக்கும். அதை நினைவூட்டவே இந்தச் செங்கோல்!''

''திருக்குறள் சுவடி...'' என்று வியப்போடு வினவினார் அரசி.

''எந்த நல்லரசுக்கும் எந்தக் காலத்துக்கும் ஆலோசனை கூறக்கூடிய பெருந்தகை நமது திருவள்ளுவர். நமது பாண்டியப் பேரரசின் இப்போதைய அமைச்சர்கள் நமது கால மாறுதல்களுக்கு ஏற்ற ஆலோசனைகளைக் கூறுகிறவர்கள். அவற்றைக் கேட்டு முடிவு செய்வதற்கு முன்பு நான் வள்ளுவரையும் தனிமையில் கண்டு ஆலோசிப்பது உண்டு. அவர் எனது அந்தரங்கமான முதலமைச்சர்.''

பொற்கலத்தில் படைத்துள்ள புத்தமுதைப் பற்றிக் கோப்பெருந்தேவிக்கு முன்னமேயே தெரியும். நாட்டு மக்கள் அனைவருக்கும் உணவு வழங்கவேண்டிய கடமை அரசுக்கு உண்டு என்று அரசர் அடிக்கடி கூறுவார். பஞ்சம், பசி, பட்டினி என்ற சொல்லே அவர் செவியில் விழக்கூடாது.

குலசேகர பாண்டியர் குறித்த வேளையில் எதையும் செய்து முடிப்பவர். அன்று மட்டிலும் ஏனோ அரசியாரிடம் மனம்விட்டுப் பேசியவாறே காலத்தைக் கடத்திக் கொண்டு

வந்தார். அரசியாருக்கும் அதன் காரணம் விளங்காமலில்லை. ஒவ்வொரு கணமும் அவருடைய மனம் சுந்தர பாண்டியனின் வரவுக்காகத் துடித்த துடிப்பு அரசியாருக்கல்லவோ தெரியும்!

நடுச்சாமம் ஆயிற்று. இனியும் எதிர்பார்ப்பதில் பயனில்லை என்பதுபோல், அரசியாரும் அவருமாகச் சிங்காதனத்தைத் தொழுதெழுந்தனர். அதே வேளையில்தான் பாண்டிய நாட்டின் எல்லைப்புற நகரத்திலும் அந்த இளைஞன் கொற்றவைக் கோயிலில் வழிபட்டுக் கொண்டிருந்தான்!

அரசர் உணவு கொள்ளும் வேளையில் அவருடைய நெற்றிச் சுருக்கம் கவலைக்குறி காட்டியது. பிறிதொரு நாளாக இருந்திருந்தால் அரசியாருக்கு அவரிடம் வாய் திறந்து பேசவே துணிவு பிறந்திருக்காது. ஆனால் அரசருடைய அன்றைய மனநிலை அரசியாருக்குச் சாதகமாகத் தோன்றியது.

''இந்த ஆண்டுதான் சுந்தரபாண்டியன் நம்மோடு உடனிருந்து வழிபடவில்லை'' என்று தொடங்கினார் கோப்பெருந்தேவி.

''திரும்பிவிடக் கூடும் என்றுதான் நினைத்தேன். ஆனால் சென்ற இடத்தில் நடந்த நிகழ்ச்சிகள் அவனைத் தாமதப்படுத்தியிருக்கலாம்.''

''தாமதமானாலும் போகட்டும்... ஆனால் ...'' கோப்பெருந்தேவியின் நாத் தழுதழுத்தது; ''பயமறியாத இளங்கன்று அது. கருவூர்ப் போரை நேரில் சென்று காண வேண்டும் என்று அவன் துடியாய்த் துடித்தபோது அரசரின் அனுமதி கிடைக்குமென்று நான் நம்பவில்லை.''

''இளங்கன்று என்றா கூறினாய்?'' என்று புன்முறுவல் பூத்தார் பாண்டியர். ''கன்று என்ற பாசத்தோடு நீ வளர்த்து வருகிறாயே, அது கன்றல்ல; களிறு! வேங்கையையே எதிர்த்துத் துரத்தப் பிறந்த வேழம் அது. தன்னை அது உணர்ந்துகொள்ளும் காலம் வந்து விட்டது; பாசத்தால் இனி அதை விலங்கிட்டு வளர்க்க முடியாது.''

குலசேகர பாண்டியருக்குச் சுந்தரபாண்டியன் தம்பி தான், உலகமுழுதுடைய தேவிக்கு அவன் மைத்துனன் தான் என்றாலும் அவர் அவனைத் தம்பியாகவும் அரசியார் அவனை மைத்துனனாகவும் கருதவில்லை. மகப்பேறில்லாத அவர் களுக்கு அவன் குலம் விளங்க வந்த செல்வக் குமாரனாகவே விளங்கினான்.

''கருவூர்ப் போரைக் காணவேண்டுமென்று அவன் கேட்காமல், போரில் ஏதாவது ஒரு பக்கம் சேர்ந்து வாளேந்து வதாய்க் கூறியிருந்தால்கூட நான் மறுத்திருக்க மாட்டேன்.''

''அரசே!'' என்று துணுக்குற்றுக் கூவினார் கோப் பெருந்தேவி.

''தேவியாருக்கு இன்னும் அவன் குழந்தைதான்; என்றுமே குழந்தைதான். ஆனால் பாண்டிய மக்களின் தந்தையாக வேண்டியவன் அவன்.''

அச்சம் என்பதையே அறியாத பிள்ளையாகிய அவன் போரைக் கண்டமாத்திரத்தில் வெறிகொண்டு களம் புகுந்து விடுவான் என்று அரசியார் பதறினார். வேலும் வாளும் மோதுவதைக் கண்டால், கரியும் பரியும் தாவுவதைக் கண்டால் அவன் தன்னையே மறந்து விடுவான் என்ற கவலை அவருக்கு.

பாண்டியர் தம் தேவியாருக்கு ஆறுதல் கூறினார். ''தேவி, விழுப்பரையர் அவனோடு சென்றிருக்கிறார். அவனுக்குத் தெரியாமல் ஆபத்துதவிகளையும் அனுப்பி யிருக்கிறேன். ஒரு தீங்கும் நேர்ந்துவிடாது.''

கோப்பெருந்தேவிக்குத் தம்மைத் தேற்றிக்கொள்ளவே முடியவில்லை! குலசேகர பாண்டியருக்கும் அரசியாருக்கும் திருமணமாகிப் பல ஆண்டுகள் கழிந்து விட்டன. இளமைப் பருவத்தில் மூன்று நான்கு ஆண்டுகள் மட்டுமே அவர்கள் இணைபிரியாது வாழ்ந்திருக்கிறார்கள். பிறகு அவர் தந்தையார் காலத்தில் போர்கள் குறுக்கிட்டு அவர்களைப் பிரித்தன. பின்னரே அங்கு நிலையான ஆட்சி தொடங்கியது.

ஆட்சிக்குக் குலசேகர பாண்டியர் வந்த பிறகு சிறிது சிறிதாகக் கோப்பெருந்தேவியின் பிடியிலிருந்து விலகி, முழு நேரமும் அரசியல் விஷயங்களிலேயே முழுகி வந்தார். அன்பு செலுத்துவதற்கும் மக்கட்பேறு இல்லாமற் போகவே, சுந்தர பாண்டியன்தான் கோப்பெருந்தேவியின் அன்புப் பெருக்கில் திக்குமுக்காடித் திணற வேண்டியிருந்தது. பெற்ற தாயின் முகம் காணாத அவனுக்கு அவர்தாம் தாய்.

அடிக்கடி கைகளிலும் கால்களிலும் காயங்களோடு வந்து சேர்வான் சுந்தரபாண்டியன்.

அரபு நாட்டுப் புதுக் குதிரையைப் பழக்க முயன்றதாலோ, மலைநாட்டு யானையின் மீதிருந்து தாவியதாலோ ஏற்பட்ட காயங்களாக இருக்கும் அவை. கோப்பெருந்தேவியார் பதறித் துடிப்பார்; அவன் சிரிப்பான். வேதனையும் வலியும் அவருக்குத் தான்; அவன் முகம் சுளிப்பது கூட இல்லை. உறக்கத்தில்கூடத் தன்னை மறந்து தன் வலியை அவன் வெளியிடமாட்டான்.

கோப்பெருந்தேவிக்கே அவனிடம் ஓர் அச்சம் உண்டு. கண்ணீரை ஆறாய்ப் பெருக்கி அவனிடம் மன்றாடுவார். விழிப்போடு நடந்து கொள்ளச் சொல்வார். காலம் குறிப்பிட்டு, அதுவரையில் பயிற்சிக்களம் செல்லக் கூடாதெனக் கட்டளையிடுவார். ''ஆகட்டும்!'' என்று உறுதிமொழி கூறிவிட்டு, அடுத்தமுறை முழங்காலைப் பெயர்த்துக் கொண்டு வந்து நிற்பான்.

குலசேகர பாண்டியர் கூடியவரையில் அவன் போக்கில் குறுக்கிடுவதில்லை. அரசியார் அவனைப் பற்றிக் குறை கூற வந்தால், ''கயல்மீனை நீந்தவேண்டாமென்று நான் கட்டளை யிட வேண்டுமா?'' என்று கேட்பார். அரசரிடம் இரத்தபாசமே இல்லை போலும் என்றுகூட அரசியார் நினைத்ததுண்டு.

ஆனால் அவர் போக்குப் பெருந்தேவியால் அறிந்து கொள்ள முடியாதது. களப் போர்களை அவர் மிகுதியாக நடத்தவில்லையே தவிர, தமது சிந்தனையையே ஒரு பெரும்

களமாக மாற்றிக் கொண்டிருந்தார். அந்தக் களத்திலே சுந்தர பாண்டியன் நடமாடாத நாளில்லை.

தெற்கே குமரிக் கடலிலிருந்து மாமதுரைப் பதிவரையிலும் மறுபக்கம் சேதுக் கடற்கரை வரையிலும் பரவிக் கிடந்தது அவரது நாடு. சிதறுண்டுபோய் உட் பகை நிறைந்த நாடாகச் சீர்கெட்டிருந்த அதை ஒரு குடைக்கீழ்க் கொண்டு வந்து நிலையான ஆட்சிக்கு கட்டுப்படச் செய்வதே பெரும் போருக்கொப்பானதுதான்.

குலசேகர பாண்டியரின் கயல் கொடி வானளாவப் பறந்து கொண்டுதான் இருந்தது. ஆனால் பாண்டிய நாட்டின் அந்தப் பரந்த வானத்தில் அதே சமயம் சோழப் பேரரசின் மேலாட்சி என்னும் கார்மேகத் திரள் மண்டிக் கிடந்ததும் மெய்தான்.

## 5. இழிவா? அழிவா?



மறுநாள் முற்பகல் பத்து நாழிகை பொழுதிருக்கும், குலசேகர பாண்டியரது அரண்மனைத் தோட்டத்து வேப்ப மரங்கள் தங்களது வெண்ணிற மலர்களைத் தரையில் உதிர்த்த வண்ணம் சலனமின்றி நின்று கொண்டிருந்தன. காவலர்களது கண்ணோட்டமும் விழிப்பு நிறைந்ததாக இருந்தது.

பாண்டியரின் அந்தரங்க ஆலோசனை மண்டபம் நான்கு புரங்களும் மரங்களால் சூழப் பெற்றுத் தனித்து நின்றது. அதன் வாயில்களைக் காத்த வீரர்களின் கூர் வேல்கள் அவர்களது கூர்மை பெற்று மின்னிய ஐம்புலன்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்கின; செய் தொழில்களும் கடமைகளும் பலப்பல உண்டு அவர்களுக்கு; ஆனால் சிந்தனை ஒன்றே ஒன்றுதான்! குலசேகரப் பாண்டியரின்

குறிப்பறிந்து நடந்து கொள்வது; அவருக்காக எந்தக் கணத்திலும் தங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையுமே தியாகம் செய்வது.

பாண்டியரின் முகக் குறிப்பிலிருந்தே மிக முக்கியமான விஷயம் என்பதை உணர்ந்து கொண்டார்கள் அவர்கள். உள்ளே பாண்டியர் தமது ஆசனத்தில் வீற்றிருந்தார். அவருக்கு இருபுறங்களிலும் சுந்தரபாண்டியனும் காரணை விழுப்பரையரும் காணப்பட்டார்கள். உறக்கமற்ற இரவுகள் அந்த இருவரது விழிகளையும் சிவக்கச் செய்திருந்தன. களைப்பையும் சோர்வையும் விரட்டுவதற்காக அவ்விரு வருமே குளித்து முழுகி உடைமாற்றி வந்திருந்தனர் என்றாலும் அவர்களை அவர்களது விழிகளிலிருந்து உணர்ந்து கொண்டார் பாண்டியர்.

விழுப்பரையரின் குரல் மெல்லத்தான் ஒலித்தது! ஆனால் சொற்களில் வலிமையின் துடிப்பிருந்தது.

''கருவூர்ப் போருக்குக் காரணம் கொங்கு நாட்டுச் சிற்றரசர் உரிய காலத்தில் திறை செலுத்தவில்லையென்றும், சோழப்பேரரசை இழிவு படுத்தினார் என்றும் சோழர்கள் பக்கம் பேசப்படுகிறது. ஆனால் அந்தப் பேச்சு மெய்யென்று எனக்குத் தோன்றவில்லை.''

பேரரசரின் விழிகள் காரணை விழுப்பரையரின் முகத்தை உற்று நோக்கின.

''கொங்கு நாட்டில் ஓடும் ஆன்பொருனையில் வெள்ளம் வந்ததால் கொங்கு நாட்டுப் பயிர்களுக்கு இந்த ஆண்டு பெருத்த சேதம். காவேரியில் அது கலந்தோடுவதால் சோழ நாட்டுக்குச் செழிப்பையும் கொங்கு நாட்டுக்குச் சேதத்தையும் விளைவித்திருக்கிறது. கொங்கு நாட்டின் குடிகளை வருத்தி திறை பெறும் நிலையில் இல்லை சிற்றரசர். ஆகவே சோழப் பேரரசுக்கு ஓலை அனுப்பியிருக்கிறார். தாமதத்தைப் பொறுத்தருளும் படியும் பின்னர் சேர்த்தனுப்பு வதாகவும் வேண்டுதல் விடுத்திருக்கிறார்.''

குலசேகர பாண்டியரின் நெற்றி சுருங்கியது. குலோத்துங்க சோழர் மாவீரர். விரிந்த மனப் போக்குடையவர். சிற்றரசின் துன்பம் கண்ட பின்னரும் சீறி எழும் வழக்கம் அவரிடம் இருந்ததில்லை. ''வேறு என்ன காரணம் இந்தப் போருக்கு?'' என்று வினவினார் பாண்டியர்.

''என்னுடைய சிற்றறிவுக்கு எட்டிய வரையில் வேறு என்னவோ காரணங்கள் புலப்படுகின்றன'' என்று தமது ஆழ்ந்த அறிவின் செருக்கறுத்துப் பணிவோடு தொடங்கினார் விழுப்பரையர்.

சுந்தர பாண்டியனுடைய முகம் சிவந்தது. சினந்து எதையோ குறுக்கிட்டுக் கூற வந்தவன், விழுப்பரையரின் பணிவு கண்டு அமைதியுற்றான். தலைவனைத் தெய்வ மென்று போற்றிய காலம் அது; ஆனால் தெய்வமே பிழைத்தாலும், 'பிழைத்தாய் நீ!' என்று பணிவோடு சுட்டிக் காட்டத் தயங்காத காலம்.

விழுப்பரையர் கூறலானார்;

''வடக்கே கன்னடமும் களிதெலுங்கும் பேசப்படுகிற நாடுகளிலிருந்து தெற்கே குமரிவரையில் பரந்து விரிந்து கிடக்கிற சோழ சாம்ராஜ்யத்துக்கு இப்போது தன்னுடைய வலிமையிலேயே நம்பிக்கை குறையத் தொடங்கி யிருக்கிறது; தன் வலிமையைத் தானே நம்புவதற்காகத் தொடங்கப்பட்ட போர் இது.''

''குலோத்துங்க சோழரின் ஆட்சியிலா வலிமைக் குறைவு?'' எனக் குறுக்கிட்டார் பாண்டியர். பாண்டியர் புதிதாக விழுப்பரையரிடமிருந்து தெரிந்து கொள்கிறவரைப் போன்றுதான் கேட்டாரெனினும், ஏற்கனவே தமது ஒற்றர்கள் வாயிலாக அறிந்ததை உறுதிப்படுத்திக் கொள்ளத்தான் கேட்டார்; விழுப்பரையரும் இதை அறிந்தவர்தாம்!

''குலோத்துங்க சோழர் தமது காலத்தில் தம்மால் செய்ய முடிந்ததனைத்தையும் செய்துவிட்டார். ஆனாலும் அவரது புதல்வர் இராஜராஜனைப் பற்றிய கவலை அவருக்கு ஏற்படத்

தொடங்கி விட்டது. சோழ நாட்டு இளவரசருக்குச் சக்கர வர்த்திகளின் அருமை தெரியவில்லை. அவருடைய புதல்வராகப் பிறந்தும், அவரிடம் வளர்ந்தும், அவருடைய குண இயல்புகள் பலவற்றின் அருமைகளை உணரத் தவறி விட்டார்; மனத்தில் ஒற்றுமையில்லை; குணத்தில் கோழை; இன்ப வாழ்வை விழையும் இயல்பினர் என்றும் தெரிகிறது.''

குலசேகர பாண்டியரின் உள்ளம் பெருமிதத்தால் பொங்கியது. சாம்ராஜ்யம் என்ற மாபெரும் மரக் கலத்தின் ஆற்றலை, அதை வழி நடத்திச் செல்லும் தலைவன் ஒருவனுடைய தன்மையைக் கொண்டு ஆராயும் கூர்மதி ஒரு சிலருக்கே உண்டு.

சுந்தர பாண்டியன் கூறினான்; ''மிகப் பெரிய மலைச் சிகரத்தினருகில் வாழக் கொடுத்து வைத்த சிலருக்கு அதன் வலிமையும் உயரமும் தெரிவதில்லை. அப்படித்தான் இராஜராஜன் தனது தந்தையின் ஆற்றலைப் போற்ற மறந்து தன்னையே தாழ்த்தி வருகிறான்.''

பாண்டியர் ஒரு கணம் தம் இரு விழிகளையும் மூடித் திறந்தார். எதிர்கால நம்பிக்கையின் பேரொளிச் சுடர்களாகத் திகழும் இருவரும் தம் அருகிலிருந்தது அவருக்கு எல்லையற்ற மன நிறைவைக் கொடுத்தது. தம்மை ஒரு பெரிய மலை போன்றவர் என்று மதித்து அதைச் சுந்தர பாண்டியன் குறிப்பால் உணர்த்தவும் செய்ததைவிட வேறு எதுவுமே அவருக்குப் பெரும் பேறாகத் தோன்றவில்லை.

''அப்படியானால் அந்தக் கோழைப் புதல்வனுக்கு வீர மூட்டுவதற்கென்றே சக்கரவர்த்திகள் போர் தொடுத்திருக் கிறார் என்கிறீர்களா?'' என்று நேரடியாகத் தெளிவு கோரிக் கேட்டார் குலசேகர பாண்டியர்.

''அதுவே மூலகாரணம். மேலும் சோழ நாட்டுப் பெரும் படைகள் இப்போது சோம்பிக் கிடக்கின்றன. இளவரசரும் வலிமையற்றவர் என்ற நிலை ஏற்பட்டால், பிறகு படை பெருக்கியும் பயனில்லையல்லவா?

இளவரசருக்கும் படையினருக்கும் விழிப்பூட்டவே இது நடைபெற்றிருக்கிறது.''

முக்கியமான செய்தியை இன்னும் கூறாமல் தாமதம் செய்கிறாரே என்று துடித்தான் சுந்தர பாண்டியன்.

''கருவூர்ப் போர் எப்படி இருந்தது?'' என்று கேட்டார் பாண்டியர்.

''புலிக் கூட்டமும் யானைக் கூட்டமும் எருதுகளின் மீதும் மான்களின்மீதும் பாய்ந்து அழிப்பதுபோல் இருந்தது. செருக்கெடுத்த வெறிப் போர்!'' என்று குறுக்கிட்ட சுந்தர பாண்டியன், ''போர் இத்துடன் நிற்காது போல் தோன்றுகிறது; இதை ஒரு வெற்றியாகவும் இந்த வெற்றிச் செருக்கை விழாக்கள் நடத்தி மிகைப்படுத்திக் கொள்ள வேண்டும் என்றும் அவர் திட்டமிட்டிருக்கிறார் அரசே! தூதுவர்கள் நமக்குக் கருவூரிலிருந்து ஓலை கொண்டு வருகிறார்கள்; இன்றையப் பொழுதுக்குள் இங்கு வந்துவிடுவார்கள்'' என்று கொதிப்போடு கூறினான்.

பாண்டியர் அதைக் கேட்டு அதிர்ச்சியுறவில்லை.

''குலோத்துங்க சோழச் சக்கரவர்த்திகளுக்குப் பாண்டியப் பதியின் அரண்மனைக்கு வந்து, நமது 'மழவராயன்' வீரசிங்காதனத்தில் அமர்ந்து வைகைத் தண்ணீரால் அபிஷேகம் செய்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் எழுந்திருக்கிறது. வீராபிஷேகம் செய்துகொள்ளும் போதே 'சோழ பாண்டியன்' என்ற பட்டத்தையும் 'திரிபுவன வீரதேவன்' என்ற சிறப்பையும் நாம் அவருக்குச் சூட்ட வேண்டும். இந்தப் பாண்டிய நாட்டின் பெயரையும் மாற்றிச் 'சோழ பாண்டிய மண்டலம்' என்று வைத்துவிட வேண்டும். அவருடைய இந்த ஆணைகளை நாமே விரும்பிச் செய்வது போல் மேற்கொண்டுவிட வேண்டும். இவ்வளவுதானே?''

சுந்தர பாண்டியனின் விழிகளும் விழுப்பரையரின் விழிகளும் சந்தித்துக் கொண்டன. செய்திகள் அனைத்தையும் அறிந்திருந்தும் அமைதி குலையாமல் ஆத்திரம் கொள்ளாமல்

இவரால் எப்படி இருக்கமுடிகிறது என்று நினைத்தான் சுந்தரபாண்டியன்.

பாண்டியர் அடுத்தாற்போல் கூறிய சொற்கள் அவனுக்குப் பேரதிர்ச்சியைக் கொடுத்தன.

''ஏன், சக்கரவர்த்திகளுக்கோ வயது முதிர்ந்து விட்டது. தம்முடைய குமாரனுக்குச் சோழப் பேரரசின் ஆதிக்கத்தைச் சுட்டிக்காட்டுவதற்கு அவர் இவ்வாறெல்லாம் செய்ய முனைந்திருக்கிறார். இதில் என்ன தவறு? அவரது விருப்பத்துக்கு இணங்கி அவ்வாறே செய்து விடலாமே!''

இப்போது சுந்தரபாண்டியனின் தலைமட்டிலுமல்ல, விழுப்பரையரின் தலையுமே சேர்ந்து சுழன்றன. பாண்டியரை அவர் கோழை என்று கருதச் சித்தமாக இல்லை. ஆனால், இப்படியும் ஓர் ஆலோசனை அவரிடமிருந்து பிறக்குமென்று விழுப்பரையர் எதிர்பார்க்கவில்லை.

''அரசே!'' என்று கண்களில் நீர் மல்க எழுந்தார் விழுப்பரையர். சுந்தரபாண்டியன் சின்னஞ்சிறு குழந்தை போல் தேம்பித் தேம்பி அழுதுவிடுவான் போலிருந்தது. தாவிச் சென்று பாண்டியரின் கால்கள் இரண்டையும் பற்றிக் கொண்டு, ''அரசே! தங்களது உடைவாளை என் நெஞ்சில் பாய்ச்சிக் கொன்றுவிட்டுச் சோழச் சக்கரவர்த்திகளுக்கு அந்த முடிவினைக் கூறுங்கள்'' என்று கதறினான்.

இதைக் கேட்டதும், கலங்கியறியாப் பாண்டியரின் செங்கயற் கண்கள் கூடக் கலக்கமுற்றன. மெல்ல அவனைப் பற்றித் தமக்கு அருகில் அமர்த்திக் கொண்டார் பாண்டிய மன்னர். பிறகு பேசத் தொடங்கினார்:

''தம்பி! ஐந்து பாண்டியர்கள் தமக்குள்ளே பிரித்துக் கொண்டு உட்பகை வளர்த்ததால் அடிமைப்பட்ட பாண்டிய மண் இது. சோழர்களும் அந்த உட்பகையை உரமூட்டி வளர்த்து வந்தார்கள். அப்படிச் சிதறிக் கிடந்த நாட்டை இதே குலோத்துங்கச் சோழர்தாம் நம் தந்தையார் விக்கிரம பாண்டியருக்கு ஒன்றாக்கித் தந்திருக்கிறார். நமக்குள்

பகைத்தெழுந்த வீர பாண்டியரை அடக்கி, 'நம் தந்தையை ஆளச் செய்த வீரர் இந்தக் குலோத்துங்கர் தாம்மு அந்த நாட்களின் நினைவுகள் உனக்கிருக்க நியாயமில்லை. நமது தந்தையாரின் கடைசிக் காலத்தில் பிறந்தவன் நீ.''

விழுப்பரையருக்கு அரசர் படும் வேதனை விளங்கத் தொடங்கியது.

''அன்றைக்குச் சக்கரவர்த்திகளிடமிருந்த பரந்த மனப் போக்கு இன்றைக்கு இல்லையே!'' என்றான் சுந்தர பாண்டியன். பின்னர் தொடர்ந்து, ''நாம் திறை செலுத்து கிறோம். சோழப் பேரரசின் மேலாணையை ஏற்றுக் கொள்ளு கிறோம். இவ்வளவிருந்தும் போதாதா? பாண்டிய நாடு தன்னைத்தானே இழிவுபடுத்திக்கொள்ள வேண்டுமா?'' என்று கேட்டான்.

''இழிவு!'' என்று பெருமூச்செறிந்தார் பாண்டியர். ''இழிவுதான்! இழிவைப் பொறுக்காவிட்டால் அழிவு!''

''அழிந்துவிடுவது மேல்! நம்முடைய மக்களுக்கு முன்பாகவே நாம் நமது உரிமையை அழித்துக்கொண்டு, மானத்தை அழித்துக்கொண்டு, பெயரை அழித்துக் கொண்டு, வாழ்வதைவிட அழிந்துவிடுவது மேல்!''

''நம்முடைய ஏழகப் படை வீரர்களும் மறவப் படை வீரர் களும் சோழப் பெருஞ்சேனைக்கு முன் எதிர்த்து நிற்க முடியுமா? படைபெருக்கும் உரிமையும் நமக்கு இல்லையே...!''

''நம்முடைய நாட்டுக்குள் தானே போர் நடைபெறும்? பெருக்கிக்கொள்ள முடியாத நம் வீரர்களை மட்டும் நம்பி நாம் எவ்வளவு காலம் ஆட்சி நடத்த முடியும்? பாண்டிய நாட்டில் வாழும் ஆண்கள் அனைவருக்கும் ஆண்மை யில்லையா? அவர்களுக்குப் பொறுப்பில்லையா? சிறுமை யைப் பொறுத்துக் கொள்ளச் சொல்லி நமது மக்களைப் பழக்கு வதைவிட, இழிவை எதிர்த்து நின்று அழியச் சொல்ல லாமே! அடிமையான பாண்டியநாடு அழிந்து அதன் சாம்பலி லிருந்து ஒரு புதுநாடு முளைத்தெழட்டுமே!''

அந்த நாட்டில் தாம் இருக்க முடியாதென்று கவலை பாண்டியருக்கு இல்லை. சுந்தரபாண்டியனும் இருக்க மாட்டானே என்ற வேதனைதான்.

வாயிற் காவலனின் நிழல் தட்டியது. தலையசைத்தார் பாண்டியர்.

''அமைச்சர் சயங்கொண்ட சோழ ஸ்ரீ வல்லபர் வருகிறார்கள்'' என்றான் காவலன் மெல்லிய குரலில்.

பாண்டிய நாட்டின் அமைச்சரான சயங்கொண்ட சோழ வல்லபர், சோழ சாம்ராஜ்யத்தின் சார்பில் பாண்டியரிடம் பணி புரிந்தவர். பாண்டியரிடம் எவ்வளவு ஈடுபாடும் பய பக்தியும் உண்டோ, அவ்வளவு குலோத்துங்க சோழரிடமும் உள்ளவர்.

அவரைத் தூரத்தில் கண்ட மாத்திரத்தில், ''இனித் தூதுவர்கள் இங்கு வரமாட்டார்கள்; ஓலை வந்து கொண்டிருக்கிறது'' என்றார் பாண்டியர்.

சயங்கொண்ட சோழ வல்லபரின் முகம் உணர்ச்சியற்ற இரும்பை ஒத்திருந்தது.கொண்டு வரும் செய்தியை மிகவும் எளிதான விஷயம்போல எடுத்துக்கூறிப் பாண்டியரின் ஒப்பு தலைப் பெறும் ஆற்றல் அவருக்கு உண்டு. 'சக்கரவர்த்திகளின் இந்தச் சிறு விருப்பங்களை நிறைவேற்றுவதால் நமக்குத் தானே பெருமை?' என்று கூடக் கூறக் கூடியவர். நாட்டு மக்களை நாம் விரும்பும் முறையில் மாற்றிவிடலாம் என்ற நம்பிக்கை அவருக்கு.

ஆனால் அவருடைய முகத்தில்கூட இன்று பரபரப்புக் காணப்பட்டது. பாண்டியருக்கு மௌனமாகவே வணக்கத்தைத் தெரிவித்து விட்டு ஓலையை நீட்டினார். எதிர்பார்த்த செய்திகளுக்கு மேலாகவும் அதில் ஒன்று இருந்தது. சுந்தர பாண்டியனை உடனடியாகச் சிறை செய்து விழா முடியும் வரையில் நிலவறையில் வைத்திருக்க வேண்டும். பாண்டிய மக்களுக்கு இந்தச் செய்தி தெரிந்திருக்க வேண்டும் என்பதில்லை. வீராபிஷேகம் வெற்றிகரமாக நடந்தேறுவதற்குப் பாண்டியரின் பெருந்துணையை வேண்டியிருந்தது சோழப் பேரரசு.

குலசேகர பாண்டியர் ஓலையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். சயங்கொண்ட சோழ வல்லபரின் கண்கள் சுந்தரபாண்டியனைச் சுற்றி வளைக்கத் தொடங்கின.

குலசேகர பாண்டியரின் முன்பு இருகாட்சிகள் மாறி மாறித் தோன்றின; தந்தையார் காலத்திலிருந்து அமைதி காத்து வளர்த்த பாண்டியத் திருநாடு ஒரே தீக்காடாகி நின்றது. அடுத்தாற்போல் நிலவறைக்குள் சுந்தரபாண்டியன் தலை கவிழ நின்றான்.

சட்டென எழுந்து சுந்தர பாண்டியனின் கரத்தைப் பற்றினார் பாண்டியர். அவனுக்கோ விழுப்பரையருக்கோ ஏதும் விளங்கவில்லை.

# 6. வீரனின் கண்ணீர்



மலைகுலைந்தாலும் மனம் குலையாத குலசேகர பாண்டியர், குலோத்துங்க சோழரின் ஓலையைக் கண்ணுற்ற மாத்திரத்தில் பதற்ற மடைந்தது அமைச்சர் சயங் கொண்ட சோழ வல்லபருக்குப் பேரதிர்ச்சியைத் தந்தது. சுந்தர பாண்டியனின் கரத்தை அரசர் இறுகப் பற்றியவுடனேயே அவரது முடிவு எப்படியிருக்கும் என்பதை உணர்ந்து கொண்டார் அமைச்சர்.

சுந்தரபாண்டியனைச் சிறையில் அடைப்பதற்காக அரசர் அவனைப் பற்றவில்லை. வாழ்விலும் தாழ்விலும் தமது உடன் பிறந்தானுக்கு இழிவு நேராது காப்பதற்காகக் கொதித்தெழுந்து விட்டார் அவர்.

''அரசே!'' என்று முறையிட்டார் அமைச்சர்: ''ஓலையின் செய்திகளுக்கு நாம் மறுமொழி அளிப்பது பற்றி இப்போது ஆலோசனை நடத்துவோம். நாம் செய்யப்

போகும் முடிவின் நன்மை தீமைகளைச் சீர்தூக்கி, எது நன்மை என்று அரசுக்குத் தோன்றுகிறதோ அவ்வாறே செய்வோம்.''

''குலோத்துங்க சோழச் சக்கரவர்த்திகளுக்குத் 'தியாக விநோதர்' என்ற பெயரும் இருக்கிறதல்லவா! அதை நிலை நாட்டுவதற்காகவே இதுபோன்ற விநோதங்களும் நிகழ வேண்டு மென எதிர்பார்க்கிறார் போலும்!'' என்றார் பாண்டியர்.

• சுந்தரபாண்டியனைப் பற்றிய செய்தியை அங்கே அப்போதே வெளியிட்டு விடப் போகிறாரோ என்ற அச்சம் அமைச்சருக்கு. இரகசியங்களைக் காப்பாற்றும் பழக்க முள்ளவர் பாண்டியர். பலருக்கு மத்தியிலும் அமைச்சருக்கு மட்டிலும் விளங்கும்படியாக அரசாங்கச் செய்திகளைப் பேசுபவர் அவர். அந்த நம்பிக்கையின் பேரில்தான் சுந்தரபாண்டியனும் காரணை விழுப்பரையரும் அருகில் இருக்கும்போதே ஓலையை அரசரிடம் கொடுத்து விட்டார்.

சிறிது அமைதிபெற்ற அரசர் தமது ஆசனத்தில் சாய்ந்து ''தங்களது ஆலோசனைகளைக் கூற முடியுமா?'' என்று அமைச்சரிடம் கேட்டார்.

அமைச்சரின் குரல் அமைதியோடு ஒலித்தது.

''சோழப் பேரரசு நமது தலைநகருக்கு வந்து வீராபிஷேகம் செய்து கொள்ளவும் விருதுப் பெயர்கள் சூடவும் விரும்பு கிறது. இது நமது நாட்டுக்குப் பெருமையே தவிரச் சிறுமை யல்ல. பாண்டிய நாட்டைச் 'சோழ பாண்டிய மண்டலம்' என்று அழைப்பதால் இரு நாடுகளுக்குள்ளும் ஒற்றுமையே வளரும். மற்றொரு விஷயம் பற்றி...'' என்று பாண்டியரின் முகத்தை ஏறிட்டு நோக்கி ''அது அரசரின் முடிவைப் பொறுத் தது; அதுவும் தற்காலிகமான அரசியல் ஏற்பாடு என்பதால் அதிலும் இழுக்கிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை'' என்று முடித்தார். சுந்தரபாண்டியனைச் சிறையிடுவது பற்றி அவர் வெளிப்படக் கூறாது குறிப்பால் சுட்டினார்.

சயங்கொண்ட சோழ வல்லபர் குலோத்துங்க சோழரின் விருப்பத்தின்படி பாண்டியரின் அமைச்சராக வந்தவர்

என்றாலும் குலசேகர பாண்டியருக்குப் பல வழிகளிலும் ஆலோசனைகள் கூறிப் பாண்டிய நாட்டில் நிலையான ஆட்சி ஏற்படுத்த உதவியவர். ஆனால் ஒரு விஷயத்தில் மாத்திரம் அவர் என்றுமே விழிப்புடன் இருந்து வந்தார். சோழ சாம் ராஜ்யத்தின் நலனும் பாண்டிய நாட்டின் நலனும் முரண்படு மெனத் தெரிந்த போதெல்லாம் அவரது சிந்தனை சோழ சாம் ராஜ்யத்தின் பக்கமே சாய்ந்தது. அவருடைய கடமை அது.

அரசரும் அவரது விழிப்பை உணர்ந்தவர்; அரசரின் விழிப்பும் அமைச்சர் அறிந்ததுதான். இருவருமே கத்தி முனைகளில் நடமாடுவது போன்று ஒருவர் மற்றவரின் சித்த முனைகளில் நடமாடி வந்தனர்.

குலசேகர பாண்டியர் அடுத்தாற்போல் அவைக்களப் புலவரான காரணை விழுப்பரையரை வினவினார். புலவருக்குப் புலவர், அந்தரங்க ஆலோசகர், வீரருக்கு வீரர் அவர். வள்ளுவம் என்ற பொய்யாமொழித் தராசினில் எடையிட்டுக் கூறும் சிந்தனை அவருடையது.

விழுப்பரையர் கூறலானார்: "போரிட்டு தோல்வியுற்ற நாட்டில்தான் வெற்றிகொள்வோர் வீராபிஷேகம் நடத்துவார்கள்; விருதுகள் சூடுவார்கள். அடுத்தாற்போல் 'சோழ பாண்டிய மண்டலம்' என்று இந்தப் பாண்டிய நாட்டின் பெயரை மாற்றுவதால் ஒற்றுமை வளரும் என்று என் சிற்றறிவுக்கு எட்டவில்லை. மாறாக வேற்றுமை உணர்வும் வெறுப்பும் வளர்வதற்கு வகையுண்டு. ஓலைக்குப் பொருள் என்னவெனின், போருக்கு அஞ்சிப் போர் தொடுக்காமலே மற்றொரு தோல்வியைப் பாண்டிநாடு ஏற்றுக் கொள்ள வேண்டும்."

அமைச்சரை விழுப்பரையரின் கருத்து முணுமுணுக்க வைத்தது. 'இவரை யார் இதற்கெல்லாம் விளக்கம் கேட்டார்கள்? எது நாட்டுக்கும் அரசுக்கும் இந்தச் சமயத்தில் வேண்டுமோ அதை மட்டும் கூறியிருந்தால் போதுமே' என்று நினைத்தார். "முடிவு செய்யவேண்டியவர் அரசர். கயல்

மீனுக்குத் தன் வலிமையும் தனக்குப் பகையான வேங்கையின் வலிமையும் தெரியாமலிராது. ஓலையில் உள்ள எழுத்துக்களை மட்டும் படித்துவிட்டுப் பொருள் கூறுபவர் இன்றைய நாட்டின் நிலைமையையும் கற்றுக் கொண்டு ஆலோசனை கூறவேண்டும்.''

அரசரின் முடிவை எதிர் நோக்கினார் அமைச்சர். விழுப்பரையரும் சுந்தரபாண்டியனும் அதையே ஆவலுடன் எதிர்பார்த்தார்கள். ஆனால் பாண்டியரோ சுந்தரபாண்டியன் பக்கம் திரும்பி, ''இளவரசரின் ஆலோசனைகளையும் நாங்கள் அறிந்துகொள்ளலாமோ?'' எனக் கேட்டார்.

அவையில் உடனிருக்கச் சுந்தரபாண்டியனுக்கு உரிமை உண்டு, ஆனால் அவனுக்கு ஆலோசனை கூற உரிமை யில்லை. குறிப்பாக அமைச்சர் அருகில் இருக்கும்போது அவன் தனது நாவினைக் காக்கவேண்டுமென்பது கட்டளை. இப்போது அவனிடமே அரசர் ஆலோசனை கேட்க முற்பட்டது அமைச்சருக்குப் பொறுக்கவில்லை.

''அரசே!'' என்று குறுக்கிட்ட அமைச்சர், ''எது வந்தாலும் போர்க்களம் சென்று பொருத வேண்டுமென்ற வீரத்துடிப்பு மிக்க காளைப் பருவத்தினர் இவர். நாமோ இன்று வயதிலும் ஆட்சித் திறனிலும் படை பெருக்கிலும் முதிர்ந்த குலோத்துங்க சோழருக்கு மறுமொழி கூறக் கடமைப் பட்டிருக்கிறோம். கடலினும் பெரிய படையுடன் மோதி நாம் நமது நாடு நகரங்களை அழித்துக் கொள்ளத்தான் வேண்டுமா? சக்கரவர்த்திகளின் மேலாட்சிக்கு நான் பரிந்துரை செய்வதாக எண்ண வேண்டாம். பிறப்பில் சோழநாட்டான் என்றாலும் வைகைப் பெருக்கால் விளைந்த செந்நெல் உண்டவன். எண்ணித் துணிய வேண்டிய கருமம் இது?''– சயங்கொண்ட வல்லபரின் குரல் தழுதழுத்தது.

அமைச்சர் உணர்ச்சி வயப்பட்டு இதுவரை அரசர் கண்டதில்லை. 'அரசியல் பணிகளில் இருதலைக் கொள்ளி போல், கடமைகள் வந்து முன்னே நிற்பதுண்டு. இம்முறை

உண்மையிலேயே அவர் பாண்டிய மண்ணுக்காகக் கலங்கு கின்றார்' என்பதை உணர்ந்தார் குலசேகரர்.

விழுப்பரையர் பணிவோடு எழுந்து நின்றார்.

''இளவரசரின் ஆலோசனைகளையும் கேட்ட பின்னர் முடிவு செய்தலே நலம் என்று தோன்றுகிறது. 'ஒருவர் இளையவர் என்பதாலோ உறவின் முறையினர் என்பதாலோ அவர் பெற்றுள்ள தகுதிகளை மறக்கலாகாது' என்பது வள்ளுவர் வாக்கு.''

சுந்தரபாண்டியனின் கருத்தை எதிர்பார்ப்பதுபோல் அவன் பக்கம் திரும்பினார் பாண்டியர். இளைஞன் எழுந்தான்.

''வீராபிஷேகத்தை மதுரையில் நமது அரண்மனையில் அவர்கள் நடத்துவதற்கான நியாயமான முகாந்திரம் ஏதும் இருப்பதாய்த் தெரியவில்லை. அப்படி ஏதும் இருந்தால் அது படைச் செருக்கு ஒன்றுதான். படை வலிமையைக் காட்டியே, போரிடாமலே நமது தோல்வியை ஒப்புக்கொள்ளச் செய்யும் ராஜதந்திரம் சோழப் பேரரசுக்குப் புதுப் புகழைத் தரக்கூடும். ஆனால் அதை அப்படியே ஏற்றுக்கொள்வது நமக்கு இழுக்காகும். போரிடாமல் தோல்வியின் வடுவை மட்டும் ஏற்றுக் கொள்வதைவிடப் போர் செய்து விழுப்புண்களுடன் வீரசுவர்க்கம் புகுந்து அதே தோல்வியைத் தழுவுவோமானால் அது பெருமை தரும்.''

''ஒன்றை இங்கு கூற நான் கடமைப்பட்டவன்'' என்று இடையில் குறுக்கிட்ட சயங்கொண்ட சோழ வல்லபர் ''குலோத்துங்க சோழ தேவருடன் நான் அருகில் இருந்து பழகியவன். எவ்வளவு பரந்த மனம் அவர்களிடம் உண்டோ அவ்வளவுக்கு வெஞ்சினமும் உண்டு. நெஞ்சில் தாம் இகழப் பட்டதாக வஞ்சம் கொண்டார்களானால், ஊழிக் காலத்தின் பிரளய வேகத்தோடு அவர்கள் போர்க்கோலம் பூணுவார்கள்– துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு'' என்றார்.

''எண்ணியே துணிவோம்!'' என்றான் சுந்தரபாண்டியன், ''நெடு நாட்களாக எண்ணத்தில் துணிவுகொள்ள மறந்து விட்டது இந்த நாடு. நேற்றுத்தான் பாணர் குலப் பெண்மணி

ஒருத்தி 'அடிமைத்தளையில் ஆழ்ந்துள்ள இந்த மாமதுரை அழிந்தால் என்ன?' என்று தனது கூத்தினிடையே கேட்டாள். அந்த எண்ணத்தின் வலிமையைப் பின்னர்தாம் உணர்ந்தேன். அந்த எண்ணம் நாடு முழுவதும் பரவியிருக்குமானால், யாருடைய வெஞ்சினம் நம்மை... ஏது செய்யும்? ***'எண்ணியாங்கு எய்துவர், எண்ணியர் திண்ணயராகப் பெறின்'*** என்று கூறிய அறநூலை அரங்கேற்றிய பாண்டியப் பகுதி இது. நான் இன்று எண்ணுகிறேன் 'இந்த நாட்டை இனி யாராலும் அடிமை கொள்ள முடியாதென்று!' இந்த எண்ணத்தில் திண்மை சேர்க்கவேண்டும் என்பதுதான் என் கருத்து. இதற்காக நானும் இந்த நாட்டு ஆண் மக்களும் பிடி சாம்பலாவோமானால், அந்தச் சாம்பிலிலிருந்து ஒரு சக்தி பிறக்கும்! 'இது அடிமை நாடு' என்ற எண்ணத்தை ஊட்டக்கூடிய இந்தக் கட்டளைகளுக்கு நாம் இணங்க மறுப்போம்! எது வந்தாலும் ஏற்போம்'' என்று கண்களில் அனல்பொறி தெறிக்கக் கூறினான்.

குலசேகர பாண்டியர் தமது இரு விழிகளையும் மூடி ஒருகணம் ஆலவாய் அழகனைத் தியானித்துக்கொண்டார். 'மனிதன் படைப்பதுதான் நாடு. ஆனால் மனிதனைப் படைப்பது நீ. நான் இங்கு ஒரு மனிதனைக் கண்டுவிட்டேன்' என்று அவர் உளம் பூரித்தார்.

சயங்கொண்ட சோழவல்லபரின் தலைசாய்ந்தது. துள்ளும் இளம் கயல் மீனாகச் சுந்தரபாண்டியன் இப்போது அவருக்குக் காட்சியளிக்கவில்லை. எண்ணம் எனும் மாபெரும் ஆயுதத்தை வள்ளுவர் அவனுக்கு வழங்கி விட்டார். தம்மை அரங்கேற்றிப் போற்றிய நாட்டுக்குப் பெருமை தரத் துணிந்துவிட்டாரா அந்தத் தெய்வமாக்கவி?

குலசேகர பாண்டியர் மெல்லத் தம்மிடமிருந்த சோழப் பேரரசின் திருமந்திர ஓலையை எடுத்தார். அவரது வலிமை மிகுந்த கரத்துக்கு அந்தச் சிற்றோலை ஒரு தாங்க முடியாத சுமையாக இருந்ததுபோலும்! நடுங்கும் கரத்தால் மௌனமாக அதைச் சுந்தர பாண்டியனிடம் நீட்டினார்.

நீட்டோலை வாசித்தோன் நெடுநேரமாக நின்றான். அதில் அவனையே விழா முடியும்வரை நிலவறைக்குள் சிறையிட்டு வைக்கும்படியான ஆலோசனை இருந்தது. ஆலோசனையா அது? சோழப் பேரரசின் மறுக்க முடியாத ஆணையாகும்.

அமைச்சருக்கு இப்போது குறுக்கிடத் துணிவில்லை.

செங்கயற் செல்வன் சுந்தர பாண்டியனின் விழிகளில் வைகை பெருக்கெடுத்தோடியது. மூவருடைய ஆலோசனை களையும் கேட்ட பின்னர் முடியரசர் ஓலையை அவனிடமே நீட்டுவதன் பொருளென்ன? வாய்மொழியால் ஆணை பிறப்பிக்காமல் குறிப்பால் உணர்த்தி, 'இதை நிறைவேற்று!' என்று கூறுகிறாரா?

''அரசே! ஓலையின் முழுச் செய்தியையும் நான் முன்பு அறியவில்லை. இளையவனின் ஆலோசனைகள் அரசுக்குத் தவறென்று தோன்றியிருக்கலாம். தங்கள் முடிவை ஏற்று இந்தக் கணமே நான் சிறை புகச் சித்தமாக இருக்கிறேன்!''

வணங்கா முடியினன் வணங்கினான்; கலங்கா வீரன் கலங்கினான்; விழுப்பரையரின் விழிகளினின்றும் கிளம்பிய செந்தீப்பொறி அமைச்சர் சயங்கொண்ட சோழவல்லபரைச் சுட்டது. ஓலையில் இருந்த திடுக்கிட வைக்கும் செய்தியை இப்போது அறிந்து கொண்டதும் அதை அமைதியே உருவான விழுப்பரையரும் தாங்க முடியாது தவித்தார். 'சோழப் பேரரசர் இப்படி ஒரு சிறுமைச் செயலையா செய்யச் சொல்கிறார்!

அதற்குள் பாண்டியர், அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபரிடம், ''தூதுவர்களிடம் இன்று ஏதும் முடிவு கூற முடி யாது'' என்று தமது முடிவைக் கூறினார். ''அவர்கள் வெகுண் டெழுந்து உடனே திரும்ப வேண்டுமென்று கூறக்கூடும், அப்படி அவர்கள் வற்புறுத்துவார்களானால், விரைவில் தாங்களே அங்கு தூது வருவதாகச் சொல்லுங்கள்.''

''நான் சென்று சக்கரவர்த்திகளை நேரில் பார்ப்பதாகவா?''

''ஆமாம், மறுமொழியுடன் தாங்களே செல்வீர்கள்.'' அமைச்சருக்கே இப்போது அரசரை ஆழம் காணமுடிய வில்லை.

# 7. தவிர்க்க முடியா முடிவு



சுந்தரபாண்டியன் வெளியூருக்குச் சென்று வந்தவுடன் அங்கு தான் கண்டு கேட்ட விஷயங்களைத் தம்மிடம் கூறி மகிழப் போகிறான் என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் கோப்பெருந் தேவியார். ஆனால் அவனுடைய போக்கில் திடீரென்று ஒரு மாறுதல் புலப்பட்டு விட்டது. அரசியாரிடம் கூட அவன் சரியாகப் பேசவில்லை. விரும்பிக் கேட்ட போதும், வேறெங்கோ நினைவாகப் பதிலளித்தான். உண்ணும் உணவிலும் அவனது நாட்டம் செல்லவில்லை என்பதை அறிந்துகொண்டார் அரசியார்.

பொழுது சாய்வதற்கு முன்பே படுக்கைக்குச் சென்று விட்டான். பல நாட்கள் ஓய்வு உறக்கமின்றி அலைந்த களைப்பாக இருக்கக்கூடும் என்று தம்மைத் தேற்றிக் கொள்ள முனைந்தார், கோப்பெருந்தேவி. என்றாலும், இனம் புரியாத துன்பமொன்று அவரை வாட்டத் தொடங்கியது.

அந்தப்புரத்துக்கு வந்த அரசரின் முகத்திலும் அரசியாருக்கு ஒரு மாறுதல் புலப்பட்டது. அவராகப் பேசுவதற்கு அஞ்சியிருந்தபோது, அரசரே சுந்தரபாண்டியனைப் பற்றி விசாரித்தார். கோப்பெருந்தேவியின் கண்கள் கலங்கின. ''அரச குலத்தில் பிறந்தாலே பாசமும் பற்றும் நாளடைவில் தேய்ந்துவிடும் போலிருக்கிறது'' என்று நடந்தவற்றைக் கூறினார் தேவியார்.

''பாசமும் பற்றுதலும் ஒருபோதும் தேய்வதில்லை. அது வளர்ந்து பெரிதாகி நாடு முழுவதும் படரப் பார்க்கிறது. நாடு என்பது என்ன? பல வீடுகள் சேர்ந்ததுதானே? பறவைக்குச் சிறகு முளைத்த பின்னரும் அது கூண்டுக்குள் அடைபட்டுக் கிடக்க வேண்டுமெனத் தாய்ப்பறவை ஏங்குகிறது. பறவைக்குச் சிறகு எப்படியோ அப்படித்தான் ஆண் மகனுக்குச் சிந்தனையும். சுந்தரபாண்டியன் சிந்திக்கத் தொடங்கி விட்டான்'' என்றார் பாண்டிய மன்னர்.

'நீங்கள் சிந்தனை செய்யுங்கள்: சிந்தும் கண்ணீர் பற்றிய கவலையுறாதீர்கள்' என்று தமக்குள் கூறிக் கொண்டார் கோப்பெருந்தேவி.

உணவு முடிந்த பின்னர் இரவில் ஓய்வு கொள்ளவில்லை பாண்டியர். சுந்தரபாண்டியனின் பள்ளியறைக்குச் சென்று பஞ்சணையில் அவன் நித்திரையுடன் போராடிக் கொண்டிருப் பதைக் கண்ணுற்றார். அவன் உளறினான்: 'முடியாது, முடியாது! இழிவைப் பொறுப்பதைவிட நாம் அழிவைப் பொறுப்போம்.. போர்... வெற்றி!... வீரமரணம்!'

மெல்ல அவனது தோளில் கரம் வைத்தார் அரசர். அவன் விழித்துக் கொள்ளவில்லை. ஆனால் உறக்கத்தில் அவன் பேசிய பேச்சு நின்றது. தாமே சென்று சாளரத்தை மறைத்திருந்த பூந்துகிலை ஒதுக்கிவிட்டு, வைகையின் குளிர்ந்த காற்றைக் கூடத்தினுள் வரவேற்றார். சாளரத்தின் வழியே பார்த்தபோது மங்கலான இருளில் விழுப்பரையர் வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

எதிர்சென்று வரவேற்றுத் தமது தனி அறைக்கு அழைத்துச் சென்றார். விழுப்பரையரை அரசர் தமது அந்தப்புர மாளிகைக்கு அழைத்திருந்தாரென்றால், அவர்களது அந்தரங்கப் பேச்சில் இரவு பகலாகிவிடுமென்பதை அரசியார் முன்னமே உணர்ந்தவர்.

'ஏதோ ஒன்று நடக்கப் போகிறது. அது நல்லதாக இருக்க வேண்டுமே!' என்று அண்ணலை வேண்டிக் கொண்டு

தமது பணிப் பெண்களுக்கிடையில் அவர் கவலைகளை மறக்க முயன்றார்.

அரசரின் அந்தப்புரத் தனி மாளிகையில் சிறியதொரு தூண்டா மணிவிளக்கு மட்டுமே சுடர் வீசிக்கொண்டிருந்தது. தனியானதோர் ஆசனத்தில் அமரப்போன விழுப்பரையரை, நீண்டு விசாலமாக இருந்த தமது இருக்கையிலேயே உடன் இருக்கும்படி செய்தார் அரசர். ''நீங்கள் சிறுபொழுதாவது கடமைகளை மறந்து ஓய்வு கொள்ள வேண்டும் என்பதற் காகவே உங்களுடைய மாளிகைக்கு அனுப்பி வைத்தேன். ஆனால் உங்களுடைய உறங்காத விழிகள் உங்களைக் காட்டிக் கொடுக்கின்றன!'' என்று கூறிச் சிரித்தார் பாண்டியர்.

''அரசர் அவர்களது அகம் கனிந்த சொல்லுக்கும் முகம் கனிந்த மலர்ச்சிக்குமுள்ள ஆற்றலே என் சோர்வுகள் அனைத் தையும் நீக்கிப் புத்துயிர் தருகிறது. ஓய்வாலும் உறக்கத்தாலும் பெறமுடியாத பேரின்பம் பெறுகிறேன் நான்.''

சொல்லைத் தெய்வமெனப் போற்றும் பண்புள்ள புலவராகவும் விழுப்பரையர் இருந்ததாலே இன்சொல்லால் எப்போதும் அவரை இன்புறச் செய்வதில் அரசர் தயங்கு வதில்லை. அதனால் பன்மடங்கு சொல்லின்பம் பாண்டி யருக்கே திரும்பிக் கிடைத்தது. உயிரோம்பும் அமுதமல்லவா இனிமை நிறைந்த மொழி!

மன்னர் குலோத்துங்க சோழரின் ஓலையை எடுத்து விழுப்பரையரிடம் கொடுத்து, ''நாம் உடனடியாக முடிவு செய்தாக வேண்டும். நாம் இப்போது எடுக்கும் முடிவில் தான் இந்த நாட்டின் ஊழ்வினைப் பயனே அடங்குவதாக இருக்கும்'' என்றார் பாண்டியர்.

விழுப்பரையருக்கு அன்றையப் பகலிலேயே, சுந்தர பாண்டியன் தன்னைச் சிறையிடும்படி பணிந்து விட்ட போதே, ஓலையின் முழு விவரங்களும் தெரிந்து விட்டன.

''தங்களுக்கு என்ன தோன்றுகிறது?'' என்றார் பாண்டியர்.

''முகாந்திரம் என்னவென்று தெளிவாக இப்போது விளங்குகிறது. சோழ சாம்ராஜ்யத்துச் சக்கரவர்த்திகள் நெஞ்சத்தில் இதுவரை அவரைக் கண்டு அஞ்சி ஒளிந்து கொண்டிருந்த அச்சம் இப்போது நன்றாகக் குடிபுகுந்து விட்டது. சாம்ராஜ்யத்து இளவரசன் இராஜராஜனின் ஆண்மையற்ற தன்மையையும், அதனால் எதிர்காலத்தில் சோழ சாம்ராஜ்யத்துக்கு நிகழவிருக்கும் இன்னல்களையும் அறிந்து அஞ்சுகிறார். அதைத் தடுப்பதற்கான அவரது கடைசி முயற்சி இது.''

தமது உள்ளத்தில் உள்ளவற்றை அப்படியே விழுப்பரையரும் பிரதிபலிப்பதாகத் தோன்றியது பாண்டியருக்கு. அன்பு நிறைந்த நெஞ்சங்களில் ஒன்றாக உணர்வு பிறப்பது போலவே அறிவு நிரம்பிய சிந்தை களிலும் எண்ணங்கள் மலர்வதுண்டல்லவா?

''சக்கரவர்த்திகளுக்குத் தமது இளவரசனைப் பற்றிய கவலையோடு; நம்முடைய இளவரசரைப் பற்றிய கவலையும் ஏற்பட்டுவிட்டது. எப்படித்தான் சுந்தரபாண்டியனை இனம் கண்டு கொண்டார்களோ, தெரியவில்லை.''

''தாழை மலர்ந்தால் அதன் மணத்தை நம்மால் சிறையிட்டு வைக்க முடியாது. மேலும் ஒற்றர்கள் பலர் இங்கு நடமாடுகிறார்கள். நம்முடைய அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபருக்கே நமது இளவரசரின் ஆற்றல் அச்சம் தருகிறது.''

குலசேகர பாண்டியரின் உள்ளத்தில் சுரீரென நெருஞ்சிமுள் பாய்வது போலிருந்தது. சுந்தரபாண்டியனைப் பற்றிய செய்திகள் அமைச்சரிடமிருந்து வந்தாலல்லாது, குலோத்துங்கர் இந்த முடிவுக்கு வந்திருக்கமாட்டார் என்று அவர் ஊகித்துத்தான் வைத்திருந்தார்.

விழுப்பரையர் மேலே கூறினார்: ''குலோத்துங்கர் இலக்கியங்களை விரும்பிக் கற்றவர். புலவர்கள் சூழ

இருப்பவர். 'பகைத் திறனை அழிக்க வேண்டுமானால் முதலில் அதன் செருக்கை அழிக்க வேண்டும். அதுவும் முட்செடி இளம் பயிராக இருக்கும்போதே அதனைக் களைந்துவிட வேண்டும்; வளர்ந்த பின்பு களைய நினைத்தால் அழிவு தாமதம் செய்வோருக்குத்தான்' என்ற குறள்தான் இந்த விழிப்பை அவருக்குக் கொடுத்திருக்க வேண்டும்.''

சொற்களை ஏற்றுக்கொண்டு ஆலோசித்த பாண்டியர், ''யாருடைய விழிகளிலிருந்து இளவரசன் தப்பி வளர்ந்தால் நலமென்று நினைத்தேனோ அது நடைபெற வில்லை. இப்போது இரண்டு முடிவுகளில் எதைச் செய்தாலும் அது அவனைப் பாதிக்கும்; பாண்டிய நாட்டின் எதிர்காலத்தைப் பாதிக்கும்'' என்றார்.

''பாண்டியப் பதியின் எதிர்காலம்!'' என்று நீண்ட நெடுமூச்செறிந்து மௌனத்தில் மூழ்கினார் விழுப்பரையர். பாண்டியரும் தம்முள் மூழ்கினார். பின்னர் அந்த மௌனத்தை இருவராலும் பொறுக்க முடியவில்லையோ, அல்லது விழுப்பரையர் தீர்க்கமான முடிவுக்கு வந்து விட்டாரோ தெரியவில்லை, அரசரை நிமிர்ந்து பார்த்தார்.

''போருக்கு நாம் சித்தமாகிவிட வேண்டும்'' என்று அமைதியோடு கூறினார்.

''போர் என்றால் சுந்தரபாண்டியனைத் தடுத்து நிறுத்தி விட்டு நாம் போரிட முடியாது; அப்படிச் செய்தால் அவன் செருக்கும், வீரர் செருக்கும், மக்களின் ஆர்வமும் ஒன்றாக அழியும். இந்தப் போரில் எப்படியும் சுந்தரபாண்டியனைத் தனியே இழுத்துக் கொன்றுவிடுவாிர் குலோத்துங்கர். குலோத்துங்கர் என்றாலே குலம் விளங்க வந்தவர் என்று தானே பொருள்? சோழர் குலம் விளங்கப் பாண்டியர் குலமழித்து மதுரைக்கு முடிவு கட்டி 'மதுராந்தகர்' ஆன பரம்பரை அது. போரென்றால் நாடும் அழியும், அதன் எதிர்காலக் காவலனும் அழிவான்.''

'ஆனால் நம்பிக்கை அழியாது' என்றார் விழுப்பரையர். 'சுந்தரபாண்டியரின் நலனைப் பாண்டியப் பதியின் நலனோடு சேர்ந்துத்தான் நாம் எண்ணுகிறோம். கோழையாக அவரை மாற்றி அவர் எண்ணத்தை அழிக்க நாமே துணை செய்வதைவிட போரில் அவர் உயிர் அழியுமானால்கூட நாம் துணிந்து விடுவதுதான் நலம்.''

குலசேகர பாண்டியரின் உள்ளம் தீப்பற்றி எரிந்தது. ஆனால் ஆலோசனை கூறுபவரோ தம்மைவிட உயிருக் குயிராகச் சுந்தரபாண்டியனைப் போற்றி வளர்த்தவர். விழுப்பரையர் இப்படிக் கூறாது வேறு யார் கூறியிருந்தாலும் கூறியவரின் தலை இதற்குள் தரையில் உருண்டிருக்கும்.

கண்களை மூடித் திறந்தார் அரசர். ''சரி! போர் தான் முடிவு! சென்று வரலாம்!'' என ஆவேசம் கொண்டவர்போல் அவருக்கு விடை கொடுத்தார். 'போர்தான் முடிவென்றால் பாண்டிய நாட்டின் முடிவுதான் முடிவு! சுந்தர பாண்டியனின் வணங்காமுடி குலோத்துங்கரின் காலடியில் துண்டிக்கப்பட்டு வீழ்வதுதான் முடிவு!' என்று உள்ளம் அலைபொங்க ஆரம்பித்தது. அஞ்சா நெஞ்சம் விம்மி விம்மிக் குலுங்கியது.

விழுப்பரையரின் நடமாட்டத்துக்கு அந்த அரண்மனையில் எப்போதுமே தடை இருந்ததில்லை. நேரே அவர் சுந்தர பாண்டியன் படுத்திருந்த பள்ளியறைக்குச் சென்றார். குனிந்து அவன் முகத்தை உற்று நோக்கினார். கண்ணீரை அடக்க முயன்றார்; முடியவில்லை. கண்ணீரின் நனைப்பினால் அவன் விழித்துக்கொண்டு விடக்கூடாதே என்று விலகி வந்தார்.

அந்தக் கூடத்திற்குள் அவரது விழிகள் எதையோ தேடி அலைந்தன. தம்மை யாராகிலும் கவனிக்கிறார்களா என்பதையும் பார்த்துக் கொண்டார். களவு நடத்த வந்த கள்வர் போன்று அங்கிருந்த சில பொருள்களை எடுத்து மறைத்துக் கொண்டு வெளியில் நடந்தார். கண்ணுறங்காமல் வெளியில் நின்ற காவலர்கள் அவருக்குச் சிரம் தாழ்த்தி வணக்கம்

தெரிவித்தார்கள். அவர்களுடைய கண்களில் தாம் எடுத்துச் செல்லும் பொருள் தட்டுப் பட்டுவிடக் கூடாதே என்ற பரபரப்போடு விரைந்தார் அவர்.

தமது செந்தமிழ்ச் சொல்லாலும் செஞ்சோற்றுக் கடமை உணர்வாலும் அந்த அரண்மனைத் தலைவரின் உள்ளம் கவர்ந்த அந்தக் கள்வர், அரசர் தவிர வேறு யார் முன்பும் என்றும் சிரம் தாழ நடந்ததில்லை. ஆனால், அன்றைக்கோ அவருடைய குதிரையின் மீது ஏறும்போது கூடப் பொருள் திருடிய கள்வனைப் போலத்தான் நடந்து கொண்டார்.

சந்தடியற்ற மதுரை நகரத்தின் தெருக்கள் வழியே நகரத்துக் காவலர்களின் குரலோசைகளைக் கேட்டவாறே அவர்களுடைய கண்களுக்குப் படாமல் இருளைக் கிழித்தார் விழுப்பரையர்.

## ௮. ஐம்படைத்தாலி



**கா**ரணை விழுப்பரையரின் சிறு விடிவிளக்கு அவரது வரவு நோக்கித் துடிதுடித்துக் கொண் டிருந்தது. அவரது மனைவியார் திருவுடைத்தேவி இன்னும் கண் ணுறக்கம் கொள்ளவில்லை. பல நாட்களாகத் தலைவர் மதுரையில் தங்கவில்லையாதலால் திரும்பி வந்தவுடன் அவரிடம் முக்கியமான குடும்பச் செய்திகளைப் பேச வேண்டியிருந்தது. திரும்பி வந்தவரோ உடனடியாக அரண்மனைக்கே சென்று விட்டார்.

இரவு எவ்வளவு நாழிகையானாலும் அவரிடம் தனித்துப் பேசி விட்டுத்தான் உறங்க வேண்டும் என்ற

பிடிவாதத்துடன் காத்திருந்தார் திருவுடைத்தேவி. விஷயம் மிகவும் முக்கியமானது. அவர்களுடைய ஒரே புதல்வனின் திருமணத்தைப் பற்றிய விஷயம். நெடுநாட்களாகவே அவர் அவனுடைய மனப்போக்கை அறிந்துகொள்ள முயற்சி செய்தார், அண்மையில்தான் அது சாத்தியமாயிற்று. அவர்களுடைய குமாரன் ஆலவாய் நம்பி பாண்டியரின் ஏழகப் படையில் பணியாற்றி வந்தான். ஐந்நூற்றவர் படைக்குத் தலைவனாகும் வாய்ப்பு மிகவும் இளமைப் பருவத்திலேயே அவனுக்குக் கிடைத்துவிட்டது. நாட்டில் போர்களும் இல்லை; வயதும் காளைப் பருவம்; அன்னையாரின் வற்புறுத்தலுக்குச் செவிசாய்க்காமலே, சிரித்து மழுப்பிய வாறே தனக்குத் திருமணத்தில் நாட்டமில்லை என்று கூறி வந்தான்.

ஆனால், நாட்டமில்லை என்று அவன் கூறியது நாணத்தினால் என்பதை எப்படியோ கண்டுபிடித்து விட்டார் திருவுடைத்தேவி. அவனுடைய நாட்டம் வேறெங்கோ இருந்தது. நாட்டமில்லாதவன் நள்ளிரவு வேளைகளில் வீட்டைவிட்டுச் செல்வது ஏன்? ஏதோ ஏக்கங்கொண்டவன் போல் உணவு மறந்து, உறக்கம் துறந்து, தனிமையை நாடத் தொடங்கியிருப்பது ஏன்? காரணம் அவருடைய காதுக்கு எட்டிவிட்டது.

கானக் குறத்தியின் காதலனாக குமரன் உறைந்த திருப்பரங்குன்றத்தில் ஆலவாய் நம்பியை அப்படி உருக்குலைத்த ஒரு பேதைச் சிறுமி அவனோடு கனவில் ஆடி, வாழ்ந்து வந்தாளாம். கண்களால் சிரித்து, கள்ளப் பேச்சில் மகிழ்ந்து, கண்ணீர் சிந்திப் பிரிவதையே அவள் வழக்கமாகக் கொண்டிருந்தாளாம். கொற்கைத் துறைமுகத்தில் வாணிபம் செய்து வந்த பெருங்குடி வாணிபரின் மடமகளாம் அவள். திருப்பரங் குன்றத்துக் காட்டிடையே நம்பிக்கையாகக் குதூகலத் துடிப்போடு காத்து நிற்பதும், பிரியும்போது நீராயுருகி நெடுமூச்செறிந்து அவனை வாட்டிவதைப்பதுமே அவளுடைய அன்றாடச் செயல்களாம்.

திருவுடைத்தேவியும் தமது குமாரனுக்குத் தெரியாமலேயே அந்தப் பெண்ணின் குடும்பத்தினரைப் பற்றிக் கேட்டறிந்தாள். பெண்ணின் குண இயல்புகளையும் தமது மூத்த பணிப் பெண் மூலம் கண்டுகொண்டார். ஒத்த குடி, ஒத்த மனம்; உயிருக்குயிராகும் உணர்வுக் கலப்பு! வேறென்ன வேண்டும்?

அன்னையார் கேட்டபோது நாணித் தலைகுனிந்தான் நம்பி. வீரத் தலைமகனான அவன், மன்னராணையைத் தவிர வேறு எதற்கும் தலைவணங்காதவன், தன் களவுச் செய்தியை தாயிடமிருந்து கேள்வியுறவே பிடிபட்ட கள்வனாக மாறினான். வேர்த்துக் கொட்டியது அவன் முகம். பிறகு அன்னையாரின் ஆதரவு கண்டவுடன் ஓடிச் சென்று பஞ்சணையில் முகம் புதைத்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். சிட்டாய்ப் பிறந்திருந்தால் சிறகடித்துச் சென்று அவள் செவிகளில் அந்தக் கணமே இன்ப கீதம் இசைத்திருக்கலாமே என்று அவன் பூரித்தான்.

அன்று மாலைச் சந்திப்பின்போது, ''இனி நான் வந்து தனியே உன்னைக் காணப் போவதில்லை!'' என்று மிடுக்காகக் கூறினான்.

பதறித் துடித்த அந்தப் பசுங்கொடியோ, ''இப்படி ஓர் அவச்சொல் சொல்கிறீர்களே!'' என்று கலங்கினாள். அவள் துடித்த துடிப்பையெல்லாம் ஆவல் நிறைந்த விழிகளால் பருகிவிட்டு, ''நமது களவு நிலை தெரிந்துவிட்டது! இனி மணந்துகொண்டு கற்பு நெறி காக்க வேண்டிய காலம் வந்து விடும் போலிருக்கிறது!'' என்றான் பெருமையோடு.

''மெய்தானா? உங்களுடைய இந்தச் சொல்லையாவது நம்பலாமா?''

''ஆமாம், இனிமேல் நான் உன்னைத் தனியே வந்து இங்கு காணப் போவதில்லை! நமது களவு வெளிப்பட்டு விட்டது. விரைவில் என் அன்னையாரும் தந்தையாருமே உன் வீடு தேடி வருவார்கள்! உன் பெற்றோர்களைக் கண்டு

பேசுவார்கள். அப்போது நீ ஏதுமறியாக் கள்ளிபோல் அவர்கள் எதிரில் நாணிக் கண் புதைப்பாய்!''

அப்போதே அவ்விடத்தே நாணிக் கண் புதைத்தாள் உய்ய வந்தாள். அவளை அந்தக் கணமே அள்ளியணைத்துச் சுமந்து வந்து தன் அன்னைக்கு முன்பு நிறுத்தவேண்டும் என்று தோன்றியது இளைஞனுக்கு. 'பொறு நெஞ்சே, பொறு, தந்தையார் திரும்பி விடுவார்! அன்னையார் அயரமாட்டார்! பொறு நெஞ்சே பொறு!' என்று தன்னைத் தேற்றிக் கொண்டான் அவன்.

''களவுக் காலம் நீண்டு விட்டதே என்று இனிமேல் நீ என்னைக் குறைகூற மாட்டாயல்லவா?'' என்று கேட்டான்.

''சொல் செயலான பிறகே உங்களை நம்ப முடியும்!'' என்றாள் அவள். ''என்று வருவார் உங்கள் தந்தை? காலமெல்லாம் காத்திருந்தேன். இனிமேல் இந்த நற்செய்தி கேட்டபிறகு கணப்பொழுதும் காத்திருக்க முடியாது போல் தோன்றுகிறது.''

அவள் கண்களில், குரலில், மூச்சில் வெம்மை நிறைந்த கண்ணீர் கலந்தது. வீரன் அந்தக் கண்ணீர் கண்டு கோழையாகிப் பின்வாங்கினான். தன்னுடைய ஏக்கம் பெரிதா, தனக்கு அதை அளித்த அவளுடைய ஏக்கம் பெரிதா என்று ஆலவாய் நம்பிக்கு விளங்கவில்லை.

தனது மாளிகைக் கூடத்தில் பஞ்சணையில் படுத்துறங்கிய ஆலவாய்நம்பி, கனவுலகில் அந்தக் கள்ளி உய்ய வந்தாளோடு மெய்மறந்து உலவிக் கொண்டிருந்தான். உறக்கம் கலைந்தால் கனவு கலையுமோ என்ற அச்சத்தோடு அந்த ஆனந்த உலகின் இன்பங்களையெல்லாம் அவன் கண்ணுறக்கத்திலேயே காண விழைந்தான்.

கதவு தட்டப்படும் ஓசை அவன் தலையில் அடித்தாற்போல் கேட்டது. அன்னையாரின் சிலம்பொலி வீட்டின் பின் புறத்திலிருந்து ஒலித்து நெருங்குவதைச் செவியுற்றான். தாயார் வந்து கதவைத் திறக்கும் வரையில்

அவனால் பொறுக்க முடியவில்லை. தந்தையாரிடம் அவன் அன்னை அன்று எதைப் பேசுவார் என்று அவனுக்குத் தெரியும். ஆகவே பஞ்சணையிலிருந்து துள்ளியெழுந்து ஓடிவந்தான். நாணித் தலை குனிந்தவாறே கதவின் தாழைத் திறந்து விட்டு ஒதுங்கி நின்றான். அதற்குள் திருவுடைத்தேவியும் கதவருகே வந்து விட்டார்.

தாயும் தனயனும் அங்கே ஒன்றாக வந்து நிற்கும் காட்சியை விழுப்பரையர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. விடிவிளக்கின் ஒளி கூடத்திலிருந்து அவர் முகத்தில் விழுந்தது. அதைக் கண்டவுடனேயே திருவுடைத் தேவியும் துணுக்குற்றார். ஆலவாய் நம்பியோ தனது பூரிக்கும் உள்ளச் சுமையால் தன் தந்தையைக்கூட ஏறிட்டுப் பார்க்க வெட்கமுற்றவனாய்த் தலைகுனிந்து நின்றான். விழுப்பரையரின் விழிகள் பெரும் பசியுற்றவைபோல் அவனை உச்சி முதல் உள்ளங்கால்வரை உற்றுப் பார்த்தன. அவரது உடம்பு நடுங்கியது. கையில் பற்றியிருந்த சிறு மூட்டை அவரையறியாது கீழே விழுந்தது.

''ஐயா!'' என்று குனிந்து சென்று அதை வாரி எடுத்தான் ஆலவாய்நம்பி.

''எடுத்துச் செல்; அது உனக்குத்தான்!''

ஆலவாய்நம்பி மூட்டையுடன் தனது அறைக்குள் சென்றான். படுக்கை மீது அமர்ந்து தனிமையில் அதைப் பிரித்துப் பார்த்தபோது அவனுக்கு வியப்பு மிஞ்சியது. அவனுடைய திருமணச் செய்தியை ஊகித்தறிந்து மணக் கோலத்தில் அணிவிப்பதற்காகப் புத்துடைகள் வாங்கி வந்திருக்கிறாரா? பித்தேறியிருந்த அவனுக்கு யாவுமே அவன் கனவைச் சுற்றியே படர்ந்தன. உடனே அவற்றை அணிந்து கொண்டு தன்னை அழகு பார்த்துக் கொண்டான். ''அடடா! இளவரசு போலன்றோ இருக்கிறது, இப்போது! இருக் கட்டும்; என் இளவரசிக்கு முன்னால் இதே தோற்றத்துடன் போய் நின்று அவளை மயங்கி விழச் செய்கிறேன்!'

அவன் பஞ்சணையில் நெஞ்சிழந்து மயங்கி வீழ்ந்தான்.

விழுப்பரையரின் முகக் குறிப்பைக் கண்டு வாய் திறக்கவும் அஞ்சினார் திருவுடைத்தேவி. உணவு கொள்வாரோ மாட்டாரோ என்று ஊசலாடியது அவர் மனம். அரண்மனைக்குச் செல்வதற்கு முன்பு அவர் உண்ணவில்லை. ஆனால் விழுப்பரையரோ திருவுடைத்தேவியைத் திருப்தி யுறச் செய்வதற்காக உணவு கொள்ள முனைந்தார். தம்மிடம் துணைவியார் தயக்கமின்றிப் பேசலாம் என்பது போல் தமது முகத்தில் குழைவு காட்டிக் கொண்டார். அன்போடு தமக்குப் பாலும் பழமும் தாம்பூலமும் கொண்டு வரச் செய்தார்.

திருவுடைத்தேவிக்குத் துணிவு பிறந்தது. மெல்ல மெல்லத் தமது குரலை இழைத்து, இனிதாக்கிக் கொண்டு கண்களில் கனிவு பொங்கச் செய்து கொண்டு மௌனமாக பணிவிடைகளுக்குப் பிறகு, தமது ஆவலை வெளியிடத் தொடங்கினார். ஆலவாய்நம்பியின் ஆவலைத் தம் ஆவ லுடன் சேர்த்துக் கொண்டு, அவனுடைய திருமணம் பற்றிப் பேசினார். நடந்தவற்றையெல்லாம் வெளியிட்டு, அவனது அன்புக்குரியவள், பண்பு மிகுந்தவள் என்றும் கூறினார்.

விழுப்பரையர் விருப்பத்தோடு அனைத்தையும் கேட்டுக் கொண்டார். தமது மனைவியின் ஆர்வமும், புதல்வனின் துடிப்பும் அவருக்குப் புலப்பட்டுவிட்டன.

''நமக்கோ ஆலவாய் நம்பி ஒரே புதல்வன்; அவனுடைய விருப்பமும் ஏற்ற விருப்பமாக இருக்கிறது. உய்ய வந்தாள் நல்ல பெண். நம்முடைய குலம் விளங்கவரும் பேரக் குழந்தையை எடுத்து நாம் கொஞ்சி மகிழ வேண்டாமா? மதுரை மாநகர் சிறக்க நாம் இருவரும் அந்த வணிகர் வீட்டுக்குச் சென்று குறிப்பு உணர்த்தி வருவோமா?'' திருவுடைத்தேவி பணிவோடு பேசினார்.

விழுப்பரையரின் விழிகள் அவரையறியாமலே நீர்த்திரையிட்டன. கலக்கம் காணாக்கண்கள் தமது காதல் மனைவியின் முன்பே கலங்குவது அவருக்கே சிறிதும்

பிடிக்கவில்லை; மெல்ல அவற்றைத் துடைத்து விட்டுக் கொண்டார். ஆலவாய்நம்பி அவனுடைய கூடத்தில் நன்றாக உறங்கியிருப்பான் என்ற நினைவு அவருக்கு.

மனைவியின் சொற்களுக்கு மறுமொழி எதுவுமே கூறாமல், ''பிள்ளைப் பருவத்தில் நம்முடைய நம்பிக்குச் செய்து சூட்டிய ஐம்படைத்தாலி பாதுகாப்பாக இருக்கிறதல்வா?'' என்று கேட்டார்.

திருவுடைத்தேவிக்கு இப்படி அவர் கேட்டது சிறிது கூடத் தொடர்பு இல்லாத விஷயமாகத் தோன்றியது. ஆனாலும் அவர் சொல்லுக்கு எதிர்ச்சொல் பேசி அவர் நா பழகியதில்லை.

''பேழையில்தான் இருக்கிறது'' என்றார் திருவுடைத்தேவி.

''இப்போது அதைச் சற்று எடுத்து வர முடியுமா?'' என்றார் விழுப்பரையர்.

திருவுடைத்தேவி மௌனமாக எழுந்தார். தனது இல்லத்துக்கு வரவிருக்கும் நங்கைநல்லாளின் கழுத்துக்குச் செம்பொன்னால் திருத்தாலி செய்யவேண்டிய பொழுதில், குமரனின் பயில் நடைப்பருவத்துக் கழுத்தணியை எடுத்துவரப் பணிக்கிறாரே! நேருக்கு மாறாக சிந்தனையில் செல்கிறதே அவர் உள்ளம்? ஆலவாய் அழகனையும் அங்கயற்கண்ணி அம்மையையும் மனத்தால் பூசித்துக் கொண்டே பொன்னும் மணிகளும் நிறைந்த பேழையைத் திறந்தார் திருவுடைத்தேவி.

தமது குமாரன் மாலை சூடவிருந்த மங்கைக்காகப் பல ஆண்டுகளாகவே சேகரிக்கப்பெற்ற அணிகலன்கள் அதில் நிறைந்திருந்தன. கேசம் முதல் பாதம் வரையிலும் அலங்கரித்து அழகு பார்ப்பதற்கான ஆபரணச் செல்வங்கள்! தனக்குப் பெண் குழந்தை பிறவாக் குறையைத் தமது மருமகள் வாயிலாகத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை அவருக்கு.

மைந்தன் சூடிக்கொண்டு ஆடிக்களித்த ஐம்படைத்தாலி அவர் கரத்தில் அகப்பட்டது. அதை எடுத்து உற்றுப் பார்த்தார். பசும்பொன்னால் செய்யப் பெற்ற ஐந்து அணிகளின் சேர்க்கை அது. அவர் அதை நன்றாகப் பார்த்தார். புதிய விழிகளோடும், புதிய கருத்தோடும் நோக்கினார். அணிகலன்களா? அல்ல, அல்ல, படைக்கலன்கள்! பதினைந்து இருபது ஆண்டுகளுக்கு முன்பு அவன் சிறுவனாக ஆடிக்களித்தபோது அணிந்து கொண்ட கழுத்தணி அது.

மின்னும் பொன்னாலான கயல், வில், வேல், வாள், கேடயம்!

விழுப்பரையர் தம்மிடம் திருவுடைத்தேவி அதனைக் கொடுக்கும்போது, தேவியாரின் விரல் நுனி அனலாய்க் கொதிப்பது கண்டார். வாங்கி அதை உற்று நோக்கினார். கயல், வில், வேல், வாள், கேடயம் என்று ஒவ்வொன்றையும் பார்த்துக் கணக்கிட்டார்.

''இந்த நாட்டு ஆண் மக்களுக்கு நாம் எதற்காக ஐம்படைத் தாலியைச் சிறு பருவத்திலேயே சூட்டுகிறோம் தெரியுமா?'' என்று தேவியைக் கேட்ட விழுப்பரையர், ''அவர்களுடைய ஆண்மையையும் வீரத்தையும் அந்தப் பருவத்திலிருந்தே வளர்த்து வருவதற்குத்தான்!'' என்று அதற்கு மறுமொழியும் கூறினார்.

''இப்போது வந்து...?'' திருவுடைத்தேவியால் இனியும் கேட்டுத் தெரிந்து கொள்ளாவிட்டால் நெஞ்சு வெடித்து விடும்போல் இருந்தது.

''ஆலவாய்நம்பி இந்தப் பாண்டிய மண்ணில் பிறந்தவன். அவன் ஒரு படைத்தலைவன். இப்போது இந்த நாட்டுக்குப் போர் வந்துவிட்டது!'' அவ்வளவே போதும் திருவுடைத் தேவிக்கு. அவர் அனைத்தையுமே விளங்கிக் கொண்டு விட்டார்.

# ௯. களப்பலி

**"போ**ர் வந்து விட்டது!'' – இப்படியொரு செய்தி கேட்ட சங்க காலத்து மங்கை நல்லாள் ஒருத்தி தனது ஒரே மகனைப் போர்க் களத்துக்கு அனுப்பி வைத்தாள். போரில் அவளுடைய மைந்தன் புறமுதுகு காட்டி ஓடி வந்தானாம்; பகைவரின் வேல் அவன் முதுகில் பாய்ந்து அவனைக் கொன்று விட்டதாம். யாரோ இப்படிக் கூறிய செய்தி கேட்டுக் குமுறினாள் தாய். மகன் இறந்து விட்டானே என்பதற்கல்ல; புறமுதுகு காட்டிக் கோழையாகச் செத்துவிட்டானே என்பதற்காக!

வெகுண்டெழுந்த அவள் வீரச் சூளுரைத்தாள். ''இந்தச் செய்தி மெய்யானால் அவனுக்குப் பாலூட்டி வளர்த்த கொங்கைகளை அறுத்தெறிவேன்!'' என்று அவள் நடந்தாள். ஆனால் அவளுக்குப் பிறந்தவனா புறமுதுகு காட்டுவான்? வீரனாகவே நெஞ்சில் வேல்வாங்கித் துஞ்சியிருந்தான் அவன். அவன் மாண்டு கிடந்த அந்தக் காட்சியைக் கண்டவுடன் அவன் பிறந்தபோது அடைந்த ஆனந்தத்தை விடப் பேரானந்தமடைந்தாளாம் அவள்.

விழுப்பரையர் வாயிலாகத் திருவுடைத்தேவி இந்தக் கதையை முன்னமேயே கேட்டிருக்கிறார். ஆனால் கதை அதோடு முடிந்து விட்டதாக அவருக்குத் தோன்றவில்லை. அந்தத் தாய் அந்தக் கணத்தில் வேண்டுமானால் அப்படி மகிழ்ந்திருக்கலாம். பிறகு எப்படி அவளால் தனது மகனின் நினைவில்லாமல் உயிர் சுமந்து வாழ முடிந்தது? பத்துமாதம் சுமந்து, பல மாதம் பாலூட்டி, காளைப் பருவம் வரையிலும் கண்ணிமைக்குள் காத்து வளர்த்தவளல்லவா அவள்?

காலமெல்லாம் அவனை நினைத்து, நினைத்து அவள் என்ன பாடுபட்டிருப்பாள்?

திருவுடைத்தேவிக்கும் போர்க் கொடுமை என்றால் என்னவென்று முன்னரே தெரியும். அவர் தமது இளமைப் பருவத்தில் விழுப்பரையரின் கைத்தலம் பற்றியவுடனேயே போரும் வந்துவிட்டது. களம் புகுந்துவிட்டார் கட்டிளங் காளையான விழுப்பரையர். அவர் மாண்டுவிட்டதாகச் சிலர் கூறினார்கள். மீண்டும் வருவார் என்ற நம்பிக்கை பொய்த்து விடுமோ என்று தேவியார் ஏங்கித் தவித்த தவிப்பை இன்று நினைத்தாலும் அவர் உள்ளம் பதறியது.

அந்தப் புண் மறைந்து தழும்பாகி அது வடுப்பட்ட காலத்தில் அதை மீண்டும் கீறி விட்டுவிட்டாரே? மகனின் திருமணத்து மன மாளிகைகளை எழுப்பிவிட்டு அவருடைய துணை கேட்கப் போகும் நேரத்தில்தானா அவர் போர்ச் செய்தி கூறவேண்டும்? ''பெண் குலமே, நீ அழப் பிறந்தாய்! கண்ணீர் வற்றும் வரையில் அழுதுவிடு; ஆண்கள் அழிக்கப் பிறந்தவர்கள்; அவர்களால் முடிந்தவரையில் அழிக்கட்டும்!'' கண்ணீர்ப் பெருக்கை மஞ்சத்தில் பொசியவிட்டு அவர் விம்மினார்.

விழுப்பரையர் உறங்கச் செல்லும்போது, ''கருக் கிருட்டு நேரத்தில் முதற் சேவல் கூவியவுடன் என்னையும் நம்பியையும் துயிலெழுப்பு'' என்று தேவியிடம் கூறியிருந் தார். பல நாட்கள் உறக்கமின்றிக் கழித்ததால் அன்றிரவு நல்ல உறக்கம் அவருக்கு. தேவியால் எப்படி உறங்கமுடியும்?

விடிவெள்ளியைக் கண்டவுடனேயே தமது மைந்தனை எழுப்பிவிட்டு, ''உன் தந்தையார் உன்னை அழைக்கிறார்'' என்றார். இருவரும் தங்களது புரவிகளை அவிழ்த்துக் கொண்டு ஊருக்குக் கிளம்பினார்கள். ''இன்று நமக்கொரு நன்னாள்; வைகையில் நீராடிக் கொற்றவைத் தேவியின் முன்பு சூளுரைத்து நீ ஒரு வீர சபதம் எடுத்துக் கொள்ளவேண்டும்; அதற்காகவே உன்னை அழைத்தேன்'' என்றார் விழுப்பரையர்.

இளைஞனுக்கு ஏதும் விளங்கவில்லை. இரவில் தனது திருமணப் பேச்சு முடிந்திருக்குமென்றும் அது பற்றித் தனித்துப் பேசவே அவர் அழைத்திருப்பார் என்றும் அவன் நம்பினான். ஆனால் அவரோ, அப்படி ஏதாவது அவன் நினைத்துவிடப் போகிறானே என்று, எடுத்த எடுப்பிலேயே தமது நோக்கத்தைத் தெளிவுபடுத்திவிட்டார்.

கிழக்கு வெளுத்த நேரத்தில், குளிர்ந்துபோன ஈயப் பாகுபோல் வைகை நீரின் மேற்பரப்பு காட்சியளித்தது. ஊரைவிட்டு நெடுந்தூரம் வந்தவுடன் வைகையின் குறுக்கே தமது குதிரையைச் செலுத்தினார் விழுப்பரையர். ஆலவாய் நம்பியும் பரியின் கடிவாளத்தோடு தனது நெஞ்சின் கடிவாளத்தையும் இறுகப் பற்றிக் கொண்டு அவரைத் தொடர்ந்து சென்றான். ஆற்றின் மறுகரையில் குதிரைகளை மேயவிட்டார்கள்; உடை வாட்களையும், கைப்பொருளை யும் கரையில் வைத்துவிட்டு நீரில் மூழ்கிக் குளித்தார்கள்.

ஈரம் உலரா உடையும் கைவாளுமாகத் தமது தனயனைப் பின்பற்றச் சொல்லி முன்னே நடந்தார் விழுப்பரையர். அப்போது இலையுதிர் காலமாதலால் ஆற்றங்கரைக் காட்டில் காய்ந்த சருகுகளும், தழையற்ற மொட்டை மரங்களும் பாலைநிலம் போன்ற தோற்றத்தை அதற்குத் தந்தன. ''நம்பி! விரைவில் இந்த மொட்டை மரங்களில் தளிரும் மலரும் குலுங்கப் போகின்றன; இந்தப் பாலைக் காட்சி சோலைக் காட்சியாக மாறப்போகிறது'' என்றார்.

ஆலவாய்நம்பியால் அவன் தந்தையின் கருத்தை உணர முடியவில்லை. மொட்டை மரங்களின்மீது தென்பட்ட சில கழுகுகளே அவனுடைய கண்களில் நின்றன. திரும்பிய பக்கமெல்லாம் வெம்மையால் வாடிய பசுஞ்செடி கொடிகள் அவனுள் காரணமற்ற ஒரு சோக உணர்வையே எழுப்பிக் கொண்டிருந்தன. காட்டுக்குள்ளிருந்த காளித்தாயைக் காணச் செல்கிறார் தந்தை என்பது மட்டிலும் அவனுக்கு உறுதியாகி விட்டது.

இலைகளற்ற மரச்சூழலுக்கு மத்தியிலிருந்த அந்தக் கோயில் தேடுவாரற்ற கோயிலாகவும் நாடுவாரற்ற வெற்றிடமாகவும் இப்போது காணப்பட்டது. பலிபீடம் பச்சை இரத்தம் கண்டு எத்தனை காலமாயிற்றோ, தெரிய வில்லை. கருவறைத் திருவும் தனது தாகத்தின் வேகத்தைத் தணித்துக் கொள்ள முடியாதவள்போல் வாடியிருந்தாள். வைகைத் தண்ணீரால் அடங்குகிற தாகமல்லவே அவளுடையது?

'எத்தனை எத்தனை வீரர்கள் கூடி, எத்தனை எத்தனை விதமாகத் தங்களது பிரார்த்தனைகளை இங்கு செலுத்தி யிருப்பார்கள்! விழாக் காலமென்றால் இந்தக் காடு முழுவதிலும் இவளுடைய செம்மை நிறைந்திருக்குமே!' என்று நினைத்தார் அவர். இரத்தச் சிவப்பில் பூக்கும் தன்மைகொண்ட செவ்வரளி, செம்பருத்தி, கல்யாண முருங்கை, புரசு முதலியவை மட்டிலும் கோயிலைச் சுற்றி மண்டிக் கிடந்தன.

''ஆலவாய்நம்பி, இந்தா நீ அணிந்திருந்த ஐம்படைத் தாலி!'' என்று அவனிடம் நீட்டினார் விழுப்பரையர். அவன் கரம் நீட்டி அதை வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டான். ''இன்று ஒரு நன்னாள் என்று கூறினேனல்லவா? ஆமாம். மிகச் சிறந்த பொன்னாள் இது!'' என அவரே மீண்டும் கூறினார்.

**நாமார்க்கும் குடியல்லோம்,**
**நமனை அஞ்சோம்!**
**ஏமாப்போம், பிணியறியோம்**
**பணிவோ மல்லோம்...**
**இன்பமே என்னாளும் துன்பமில்லை!**

தந்தையும் மைந்தனும் ஒன்றாகக் குரலெழுப்பி அந்தத் தேவாரத் திருப்பதிகத்தை முழங்கினார்கள். கோடை வானத்திலே குமுறி எழுந்த இடிகளெனக் கூடிக் கிடுகிடுத்தன அவர் தம் குரல்கள்.

ஆவேசம் கொண்டவர்போல் பேசலானார் சொல்லேர்ப் புலவரும் வில்லேர் வீரருமான விழுப்பரையர்:

''இந்த நாடு இந்தக் கணத்தில் தனது அடிமைத் தளையை ஆயிரம் சுக்கலாய் உடைத்தெறிந்து தன்னுரிமை பெற்றுத் தலை நிமிர்ந்து நிற்கிறது! இனி இதை என்றும் எவராலும் அடிமைகொள்ள முடியாதவாறு காத்து நிற்போம் பகைவருக்குப் பணியோம்; எமன் வரினும் அஞ்சோம்; இந்தத் தாயின் மேலாணை!''

நாடு தன்னுரிமை பெற்று விட்டதா? தலை நிமிர்ந்து நிற்கப் போகிறதா? இந்த நற்செய்தியை நம்பவே முடியவில்லையே! ஆலவாய் நம்பிக்கு ஆனந்தக் கூத்தாட வேண்டும்போல் தோன்றியது.

''முதன்முதலில் உனக்குத்தான் இந்த நற்செய்தியைக் கூறுகிறேன். அரசர் குலசேகர பாண்டியருக்கோ, இளவரசர் சுந்தர பாண்டியருக்கோ கூட இன்னும் இது தெரியாது. நான் புலவன்; வருவதை வருவதற்கு முன்பே கண்டு உன்னிடம் சொல்கிறேன்!''

'சோழப் பேரரசுக்கு இந்தச் செய்தி எட்டுமானால் நாட்டைச் சுட்டெரித்துச் சுடுகாடாக்கிவிடுமே!' என்ற நினைவும் அவனிடம் துளிர்விட்டது.

அதனைக் கண்டு கொண்டவர்போல் ''அழிவுக்குத் துணிந்தவனால்தான் ஆக்கம் பிறக்கிறது உலகத்தில்! கோழைகள் தங்களையும் அடக்கி ஆள்வதில்லை; நாடாள்வதுமில்லை!'' என்றார். ''முதன் முதலில் களப்பலி கொடுப்பதற்குத்தான் உன்னை இங்கு அழைத்து வந்திருக்கிறேன்.''

பிறந்த பயன் வென்றுவிட்ட பேரானந்தம் ஆலவாய் நம்பிக்கு. ஆனந்தக் கண்ணீர் சொரிய அந்த ஐம்படைத் தாலிக்கு முத்தம் கொடுத்தான். அதனைக் கண்களில் ஒற்றிக் கொண்டான். கற்புடைப் பெண்டிற்குத் திருமாங்கல்யம் எத்தனை பெருமையுடையதோ அத்தனை பெருமையுடையது கடமைக் கற்புடைய வீரத் திருமகனுக்கு அந்தத் தாலி.

''ஐயா! நான் பாக்கியம் செய்தேன்; இந்த நாட்டுரிமையைக் காக்க எத்தனை முறை பிறந்தாலும் அத்தனை முறையும் என்னைக் களப்பலி கொள்ளலாம்.''– ஆலவாய் நம்பி கரம் கூப்பி மண்டியிட்டு அவர் முன் சிரம் தாழ்த்தினான்.

''நம்பி, எழுந்திரு! உன் உயிரைக் களப்பலி கொடுத்தால் போதாது. அதைக்கொடுக்க வேண்டிய காலம் விரைவில் வரும்! அப்போது கொடுக்கலாம். இப்போது நீ உன் உயிரினும் மேலான ஒன்றை, உன் காதலியிடம் நீ கொண்டுள்ள அன்பை, இந்தக் காளித்தாயின் முன்பு பலியிட்டுத் தரவேண்டும்!''

ஆலவாய்நம்பி இதைக் கேட்டவுடன் உயிரொடுங்கிய சவமானான். அவனது சிரம் துண்டிக்கப் பெற்று அந்தக் காளித்தாயின் திருவடிகளில் வீழ்ந்திருந்தால், அவன் உடல் எப்படியெல்லாம் துடித்திருக்குமோ தெரியாது. ஆனால் இப்போது அவன் உயிர் துடித்த துடிப்புக்கு முன்பாக அது அற்பத்திலும் அற்பமான காட்சியே.

''அந்தப் பெண்ணின் உயிரை உன் உயிரிலிருந்து பிரித்துப் பலியிட்டு, அந்த இடத்தில் இளவரசர் சுந்தர பாண்டியரை வீற்றிருக்கச் செய்யவேண்டும். இளவரசர் சுந்தரபாண்டியரின் உருவத்தில் முளைத்துவிட்டது விடிவெள்ளி. அவருடைய உடல், உயிர், மானமெல்லா வற்றையும் உன் பொறுப்பில் இன்று விடுகிறேன். அவரைக் காப்பது இந்த நாட்டைக் காப்பதற்குச் சமமானது. உன் உள்ளத்தில் ஓர் அணு அளவு இடமும் இனி யாருக்கும் கொடுக்கக்கூடாது என்பதால் தான் முதலில் அவளை உன் இதயக்கோயிலின் பலிபீடத்தில் காவு கொடுக்கச் சொல்கிறேன். பெண்டிரின் உள்ளத்தில் கணவனும் வீரனின் உள்ளத்தில் தலைவனும் தெய்வமாக விளங்க வேண்டும்!''

''அவ்வாறே அவளைக் கொன்றுவிட்டேன் ஐயா!'' என்று நா தழுதழுக்கக் கூறினான் ஆலவாய்நம்பி. மாலை மாலையாய்க் கண்ணீர் வடித்தான்.

''உனக்கு ஒரு புதிய பொறுப்புக் கொடுக்கிறேன். நீ ஏழகப் படையிலிருந்து நம்பிக்கை மிகுந்த சிலரைப் பொறுக்கியெடுத்து, ஆபத்து உதவிகளுக்குரிய வீர சபதம் பெற்றுக்கொள்ள வேண்டும். நீயே அதன் தலைவன். இளவரசரை நிழலாய்த் தொடரும் முதல் ஆபத்து உதவி நீதான்! இப்போது நீ அந்தச் சூளுரைத்து ஆணையிட்டுக் கொள்!''

''தாயே! என்னுயிர் போக்கியும் என் தலைவர் சுந்தர பாண்டியர் உயிரினைக் காப்பேன். அப்படிக் காக்கத் தவறினால் உன் முன்னால் வந்து என் உடைவாளாலேயே என் சிரத்தை உனக்குக் காணிக்கையாக்குவேன்.''

வீரர்கள் வழக்கமாகச் செய்துகொள்ளும் இந்தச் சபதத்தால் விழுப்பரையரின் மனம் முழுமையாக நிறைவு கொள்ளவில்லை.

''இப்படியும் சொல்லிச் சூளுரை செய்!'' என்றார். ''இளவரசரைக் காக்கத் தவறவே மாட்டேன்; காக்கும் முயற்சியிலே நான் உயிர் நீத்தால் என் தந்தையார் உள்ளவரையிலும் அவர் உள்ளத்தில் உறைந்து வாழ்வேன். இல்லையெனில் முதலில் என் தந்தையாரின் சிரமரிந்து உனக்குக் காணிக்கை செலுத்திவிட்டு அடுத்தாற்போல் என்னையே தருவேன்.''

அவரை ஏறிட்டுப் பார்த்தான். அவர் சிலையாகி நின்றார்.

தனயன் தயங்கினானில்லை. மந்திரத்தால் கட்டுண்டவன் போல் அவ்வாறே வாளெடுத்துச் சூளுரைத்தான். விழுப்பரையரின் பூரிப்புச் சொல்லிலடங்காதது. தாம் முற்பிறவியில் செய்த பெரும்பேறே புதல்வனின் உருவாக வந்து பிறந்திருப்பதாய்க் கண்ணருவி பொங்கிவிட்டார் அவர். அவனை நெஞ்சாரத் தழுவிக்கொண்டு, ''தாயே! இந்த மண்ணில் உரிமை மலர்ந்து விட்டது! உரிமை மலர்ந்து விட்டது!'' என்று கூவினார்.

# 10. முதல் முழக்கம்



தெற்கே ஒருபுறம் குமரி முனை வரையிலும் மறுபுறம் சேது சமுத்திரக்கரை வரையிலும் பரவி யிருந்த பாண்டிய மண்டலத்தின் வளநாட்டுத் தலைவர் அனைவரும் குலசேகர பாண்டியரின் அரண் மனைப் பேரவையில் குழுமி யிருந்தனர். மறவர் படைத்தலைவர் மழவச் சக்கரவர்த்தி, ஏழகப்படைத் தலைவர் அழகியபெருமாள், அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபர், அவைப்புலவரும் அந்தரங்க ஆலோசகருமான காரணை விழுப்பரையர் முதலானோர் தத்தமக்குரிய ஆசனங்களில் அமர்ந்திருந்தனர்.

பாண்டிய நாட்டின் பழம் பெருமை மிக்க சிங்காதனங்கள் இரண்டும் இருபெரும் சிங்கங்களைச் சுமந்து கொண்டிருந்தன. 'மழவராயன்' என்ற ஆசனத்தில் குலசேகர பாண்டியரும், 'காலிங்கராயன்' என்ற ஆசனத்தில் சுந்தரபாண்டியனும் வீற்றிருந்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

ஏதோ மிகப் பெரிய விஷயம் ஒன்றை முடிவு செய்வதற்காகவே அவ்வளவு பேரும் அங்கு கூடியிருந்தார்கள் என்பது ஒவ்வொருவரது முகத்திலிருந்தும் தெரிந்தது. வடநாட்டுத் தலைவர் ஒவ்வொருவரும் பாண்டியரின் அதிகாரத்தின் கீழ், நாடுகள் என்றும் கூற்றங்கள் என்றும் பிரிக்கப்பட்ட பல பகுதிகளை அரசின் ஆணைப்படி ஆட்சி செலுத்தி வந்தார்கள். அவர்கள் அனைவருமே அங்கு குழுமியிருந்தார்கள் என்றால், பாண்டிய நாடு முழுவதுமே அந்த அவைக்குள் நிறைந்து விட்டது போலத்தான்.

அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபரின் முகம் மட்டிலும் உயிரற்றுத் தென்பட்டது. மறுநாள் தம்மிடம்

முடிவு கூறுவதாகத் தெரிவித்த பாண்டியர், அப்படிக் கூறாமல் பாண்டிய மண்டலத்தையே அங்கு கூட்டிவிட்டது தான் அவருக்கு வேதனையைத் தந்தது.

அவர் சோழ நாட்டுத் தூதுவர்களிடம் அப்போதே ஓலை கொடுத்து அனுப்பிவிட்டார். தாமதத்தைச் சிறிது கூட மன்னிக்காதவர் குலோத்துங்கச் சக்கரவர்த்தி. ஆகவே பாண்டியருக்கு உடல் நலம் சரியில்லை என்றும், விரைவில் தாமே மறுமொழியோடு சக்கரவர்த்தியை வந்து சந்திப்பதாகவும் எழுதிவிட்டார்.

இங்கோ பாண்டியர் அதற்குள் மண்டலத்தையே தமது மண்டபத்துக்குள் நிரம்பி வழியச் செய்திருக்கிறார். எதற்காக இந்த ஏற்பாடுகள்?

குலசேகர பாண்டியர் சோழச் சக்கரவர்த்தி தமக்கு அனுப்பி வைத்த ஓலை பற்றிக் குறிப்பிட்டுவிட்டு அதையே படித்துக் காட்டும்படி தமது திருமந்திர ஓலையாளிடம் நீட்டினார். இரகசியமாக அனுப்பப்பட்ட செய்தி இந்த அளவுக்குப் பகிரங்கமானவுடனேயே அமைச்சர் சயங் கொண்ட சோழ வல்லபருக்கு அங்கு இருப்புக் கொள்ள வில்லை. முள்ளின்மேல் அமர்ந்தவர்போல் புழுங்கத் தொடங்கினார்.

சபை நடுவே ஓலையைப் படித்த அதிகாரியின் குரல் அதன் கடைசி வரிகளைப் படிக்க முற்பட்டபோது தழுதழுத்தது. அவருடைய கண்களில் நீர் நிறைந்ததால் அதைத் துடைத்து விட்டுக்கொண்டு அவர் படிக்கலானார். ''சக்கரவர்த்திகளுக்கு மதுரை மாளிகையில் வீராபிஷேகம் நடக்கும்போது ஏதேனும் விரும்பத்தகாத செயல்கள் நடந்து அதன் பெருமைக்குப் பங்கம் விளையக்கூடாது. அதற்காகவே விழா முடியும் வரையிலும் இளவரசர் சுந்தரபாண்டியனைச் சிறை செய்து நிலவறைக்குள் வைத்திருக்க வேண்டும்.''

வளநாட்டுத் தலைவர்களின் இரத்தம் கொதித்தது. ஏழகப் படைத்தலைவர் அழகியபெருமாள் தமது பற்களைக்

கடித்தார். மறவர் படைத்தலைவரான மழவச் சக்கர வர்த்தியின் விழிகள் அனலைக் கக்கின. அவர்களுடைய உணர்ச்சிகளை அளவெடுத்து விட்ட பாண்டியர் கூறினார்.

''சுந்தரபாண்டியன் மீதுள்ள பேரன்பால் உங்களது உள்ளம் குமுறுவதை நான் அறிந்து கொண்டு பெருமைப் படுகிறேன். உங்களுடைய அன்பின் வலிமையாலேயே எதிர்காலத்தில் இந்தப் பாண்டிய மண்டலத்தின் ஆட்சிப் பொறுப்பைச் சுமக்கப் போகிறவன் அவன். அவனுக்கு ஓர் இழுக்கென்றால் அது பாண்டிய நாட்டின் பெருமைக்கே இழுக்கு என்று நீங்கள் கருதுவது முற்றிலும் பொருத்தமானதுதான்.''

விழுப்பரையர் தமது ஆசனத்தில் நிமிர்ந்து உட்கார்ந்தார். சயங்கொண்ட சோழ வல்லபரின் சிரம் தாழ்ந்தது. பாண்டியரின் குரல் தொடர்ந்து ஒலித்தது.

''இதைவிட முக்கியமான விஷயம் ஒன்று அந்த ஓலையில் மறைபொருளுடன் கூறப்பட்டிருக்கிறது. பாண்டிய நாட்டுக்குச் 'சோழ பாண்டிய மண்டலம்' என்று பெயர் சூட்ட ஒப்புக் கொள்வதன் மூலம் நாம் நேரடியான சோழ ஆட்சிக்கே இந்த நாட்டை விட்டுவிடச் சம்மதிக்கிறோம். இப்போது திறை வாங்கும் மேலாட்சி மட்டும் இருக்கிறது. என் ஆயுளுக்குப் பிறகோ அல்லது அதற்குள்ளேயோ நேரடியான சோழர்களின் ஆட்சியே இங்கு வந்துவிடும். சுந்தர பாண்டியன் இனி இந்த நாட்டுப் பொறுப்பை ஏற்க நினைக்கக் கூடாது என்பதற்காக இப்போதே சோழப் பேரரசு நமக்கு முன்னெச்சரிக்கை விடுத்திருக்கிறது.''

சயங்கொண்ட சோழ வல்லபர் திடுக்கிட்டார். பாண்டியரின் நுண்ணறிவுக்குக் குலோத்துங்க சோழரின் நுணுக்கமான ராஜதந்திரம் புலப்பட்டு விட்டது. அதை அவர் வெளிப்படையாகவே கூறியும் விட்டார். இதைப் புரிந்துகொண்ட வல்லபரின் உள்ளம் நடுக்கம் காணத் தொடங்கியது.

குலோத்துங்க சோழரின் ராஜதந்திரத்தைப் புரிந்து கொண்டு செயலாற்றத் துணிந்த பாண்டிய மன்னர், "நாம் முடிவு செய்ய வேண்டும். அதை, இப்போதே இரண்டில் ஒன்றை முடிவு செய்ய வேண்டும்" என்று தம் குரலை உயர்த்தி அழுத்தமாகப் பேசினார். "பாண்டிய மண்டலத்தைச் சோழர்களிடமே விட்டுவிட்டு நாம் அடிமைகளாகப் பணிந்து விடுவது; அல்லது இப்போதே இந்தக் கணத்திலேயே பாண்டிய நாடு தன் உரிமையோடு வாழத் துணிவது. முடிவு கூறுங்கள்!"

"வாழ்க, குலசேகர பாண்டியர்! வாழ்க, பாண்டியத் திருநாடு! நாம் உரிமையோடு வாழ்வோம்!"

ஆரவாரங்களும் ஆனந்தக் கூக்குரலும் மகிழ்ச்சிப் பெருவெள்ளமும் அடங்குவதற்குச் சிறிது நேரமாகியது. பொறுக்கும்படி சைகை செய்த பாண்டியர், "தன்னுரிமை என்பது வீரமுள்ள ஆண் மக்கள் வாழும் நாட்டில்தான் மலரக்கூடியது. அதற்காகச் செலுத்தவேண்டிய காணிக்கை யையும் நாம் மறக்கலாகாது!" என்றார். பின்னர், "அறுபதாயிரம் யானைகளைக் கொண்ட யானைப் படையை யும், லட்சத்துக்கு மேற்பட்ட குதிரை வீரர்களையும், பல லட்சம் பேர் கொண்ட பயிற்சிபெற்ற காலாட் படையையும் தன்னிடம் வைத்துக் கொண்டிருக்கிறது சோழ சாம்ராஜ்யம். நம்முடைய உரிமை வாழ்வின் வெகுமதியாக முதலில் போர்க் களத்தில் நாம் அதனைச் சந்திக்க வேண்டியதாயிருக்கும்" என்று தமது படைத் தலைவர்களைப் பார்த்துக் கூறினார்.

"ஏழகப்படை எந்தக் கணத்திலும் சித்தமாக இருக்கிறது" என்றார் அழகிய பெருமாள்.

"மறவப் படையும் கட்டளைக்குக் காத்திருக்கிறது" என்றார் மழவச் சக்கரவர்த்தி.

"படைத் தலைவர்களின் வீரத்தைப் போற்றுகிறேன்; பகைவரின் வலிமையை அறிந்த பிறகும் அவர்கள் கலங்கவில்லை. ஆனால் நமது இரு படைகளும் சேர்ந்து

சோழர்களது பெருஞ் சேனைக்கு முன்பாக நூற்றில் ஒரு பங்கே தேறும்! இன்னும் நமக்கு வீரர்களும் வேண்டும்; ஆயுதங்களும் வேண்டும்.''

''பாண்டிய நாடே போர்க்களமாகும்; ஒவ்வொரு வீடுமே பாசறையாகும்'' என்று துள்ளி எழுந்து கூவினார் விழுப்பரையர். ''பாண்டிய மக்கள் தங்களுடைய எண்ணத்தில் மனத்திண்மையை விதைத்துக் கொண்டால் போதும். 'உலகத்தில் எந்தப் பகைக்குமே இனித் தலை வணங்கி அடிமைகளாக வாழமாட்டோம்' என்று உறுதி பூண்டு விட்டார்களானால் போதும். 'எண்ணிய எண்ணியாங் கெய்துவர், எண்ணியர் திண்ணியராகப் பெறின்' என்று கூறிய வள்ளுவப் பெருந்தகையின் நூலை அரங்கேற்றிய நாடு இது. அந்தப் பொய்யாமொழியை நாம் இதுவரை மறந்திருந் தோம். இனி மறக்கமாட்டோம். போர் மூண்டு இந்த நாடே அழியுமென்றாலும், இனி இந்த மண்ணில் வேறொருவரின் ஆட்சியை நடைபெறவிடமாட்டோம். இன்றே உரிமை பெற்றுவிட்டோம். இனி உரிமைக்குள்ள கடமைகளை ஒரு போதும் மறவோம்!''

''வெல்க பாண்டிய நாடு, வாழ்க வீர மறவர் திருநாடு!''– அந்த மாளிகையே வாழ்த்தொலியால் அதிர்ந்தது.

சபை கலைந்தவுடன் குலசேகர பாண்டியர் அமைச்சர் சயங்கொண்ட சோழவல்லபரைத் தனியே அழைத்தார். அவரிடம் தமது திருமந்திர ஓலையை நீட்டினார். ''அமைச்சர் அவர்களே! குலோத்துங்க சோழரது ஒற்றர் படைத் தலைவராக இருந்த தாங்கள் இந்த நாட்டின் அமைச்சராக அங்கிருந்து அனுப்பப் பெற்றீர்கள். அமைச்சர் என்ற முறையில் தாங்கள் ஆற்றிய அரும்பணிகளை இந்த நாடு என்றுமே மறக்காது. ஆனால் தாங்கள் தங்களை இந்தப் பதவிக்கு உயர்த்திய சக்கரவர்த்திகளின் பணிகளையும் சிறிதும் மறந்துவிடவில்லை. சுந்தரபாண்டியனின் போக்கும், அவனிடம் இந்த நாட்டு மக்கள் கொண்டிருக்கும் பற்றுதலும் சோழ சாம்ராஜ்யத்துக்கே ஆபத்தாகிவிடுமோ என்று தாங்கள்

அஞ்சுகிறீர்கள். சக்கரவர்த்திகளையும் அவ்வாறே அஞ்சச் செய்திருக்கிறீர்கள். இந்த விஷயத்திலும் தங்களுடைய கடமையைத்தான் சக்கரவர்த்திக்குத் தாங்கள் செய்திருக் கிறீர்கள்.''

சயங்கொண்ட சோழவல்லபர் தம் வாழ்நாளிலேயே இப்படி ஓர் அனுபவம் பெற்றதில்லை. தலைநிமிர்ந்து நோக்கத் திறனின்றிக் குனிந்திருந்தார்.

''கங்கைகொண்ட சோழபுரத்துக்குத் தாங்கள் இன்றே புறப்பட்டுச் செல்லலாம். பாண்டிய நாடு உரிமை பெற்றுவிட்டது. ஆனாலும் இது பகையை விரும்பவில்லை. குலோத்துங்க சோழரும் இங்கு விருந்தினராக வரலாம். ஆனால் நட்புரிமை கொண்ட விருந்தினராக வரலாமே தவிர, வெற்றி கொண்டவராக வரமுடியாது.''

''அரசே, பாண்டியர்களின் வீரத்துக்கு நான் தலை வணங்குகிறேன். நானும் என் குடும்பத்தாரும் இப்போது விடைபெற்றுக் கொள்கிறோம். தங்களுடைய அன்பு நிறைந்த பண்பை என்னால் எளிதில் மறந்துவிட முடியாது.'' சயங்கொண்ட சோழவல்லபரின் நாத்தழுதழுத்தது.

வருத்தத்துடன் சிரிக்க முயன்றார் பாண்டியர். பல ஆண்டுகளாகப் பழகியவரின் பிரிவு அது. கடமைகளின் காரணமாகக் கருத்துக்களில் வேறுபாடு கொண்டிருந்தாலும் எப்படியோ ஒருவகை அன்பு அவர்களைப் பிணைத்திருந்தது.

''ஒருவேளை நாமே மீண்டும் போர்க்களத்தில் சந்திக்க வேண்டிய நிலை ஏற்படும்! அப்படித்தானே?'' என்றார் பாண்டியர்.

சயங்கொண்ட சோழ வல்லபருக்கு மறுமொழி கூறத் தெம்பில்லை. எந்தப் பாண்டிய மன்னரின் அன்பாலும், ஆதரவாலும், பொன்னாலும், மணிகளாலும், தமது வாழ்வை யும், தமது குடும்பத்தினர் வாழ்வையும் வளப்படுத்திக் கொண்டாரோ அவருக்கு எதிராகவே போர்க்களத்தில் வாள் உயர்த்தத்தான் வேண்டுமா? அவருடைய இராஜதந்திர

வாழ்க்கையில் அந்த ஒரு கணம் மட்டிலும் அவருக்குக் கலக்கம் ஏற்பட்டது.

''சந்திப்போம், சென்று வாருங்கள்!'' என்ற பாண்டியர், ''தங்களையும், குடும்பத்தாரையும் சோழ நாட்டுக்கு அனுப்பி வைக்க ரதங்கள் சித்தமாகிவிட்டன'' என்று முடித்தார்.

# 11. நெருப்பு



மதுரை மாநகரத்தின் உள் மதிலுக்கப்பால் அதன் புற மதிலுக்குள்ளே அமைந்திருந்த பெரியதொரு மாளிகை மரங்களாலும், பூங்கொடிகளாலும் சூழப்பெற்றுக் கண்ணுக்கினிய காட்சியைக் கொடுத்துக் கொண்டிருந்தது. ஆங்காங்கே அதன் சுற்றுச் சுவருக்குள் காணப் பெற்ற தனித்தனிக் கூட்டங்களிலிருந்து பலவகையான இசைக்கருவிகளின் ஒலிகள் எழுந்து கொண்டிருந்தன. சிவிகைகளும், ரதங்களும், குதிரைகளும் ஆங்காங்கே தென்பட்டு அதில் வசித்தவர்களது செல்வச் செழிப்பை எடுத்துக் காட்டின.

குதிரை வீரர்கள் இருவர் அதன் வாயில் முகப்பு வழியே உள்ளே புகுந்து கண்களால் அந்த மாளிகையின் அழகைப் பருகிக்கொண்டே மெல்ல ஊர்ந்து வந்தனர். அவர்களது உடைத்தோற்றம் அவர்கள் சோழ நாட்டைச் சார்ந்தவர்கள் என்பதைக் குறிப்பிட்டது.

''நாடோடிகளாகத் திரிந்து வள்ளல்களையும், அரசர்களையும் களிப்புறச் செய்வதே பாணர்களின் வழக்கம். பாணர்கள் செல்வர்களாக வாழ்ந்ததை நாம் கண்டதில்லை. இங்கு பாண்டிய நாட்டிலோ தனி மாளிகை எழுப்பிக் கொண்டு சிறப்பாக வாழ்கிறாள் ஒரு பாணர் குல மங்கை!'' என்றான் ஒருவன்.

''இவ்வளவுக்கும் குலசேகர பாண்டியரின் ஆதரவு இவளுக்குக் கிடையாதாம். பாண்டிய நாட்டு மக்களுக்கு இவள் பெயரைக் கேட்கும்போதே மகிழ்ச்சி பொங்குகிறது. சேர நாட்டிலும் ஈழநாட்டிலும் கூட இவளுடைய கூத்தென்றால் மக்கள் பெரும் திரளாகக் கூடுவார்களாம்.''

''கயல்விழிக்கு அதிர்ஷ்டம் பிறந்து விட்டது!'' என்று பெருமையோடு கூறினான் அவன். ''நம்முடைய இளவரசர் இராஜராஜருடைய செவிகளுக்கு இவளுடைய அழகின் புகழும் ஆட்டத்தின் புகழும் எட்டிவிட்டன. அரசகுலத்து இளவரசிகளைவிட இவள் பாக்கியம் செய்தவள்.''

''சோழ நாடு பாக்கியம் செய்திருக்கிறதென்று சொல். பெரிய சக்கரவர்த்திகள் ஒட்டக்கூத்தர், கம்பர் போன்ற பெரும் புலவர்களை ஆதரித்துப் புகழ் பெற்றவர். இளவரசருக்கோ இசைகளிலும், நடனங்களிலும் நாட்டம்.''

''பெரிய சக்கரவர்த்திகளுக்கு இளவரசரின் இந்தப் போக்குத்தான் கவலையைத் தருகிறது. அதனால்தான் நம்மைக் கூடச் சக்கரவர்த்திகளுக்குத் தெரியாமல் இங்கு அனுப்பி வைத்திருக்கிறார் இளவரசர்.''

குலோத்துங்க சோழர் தம்முடைய குமாரனிடம் இன்பம் விழையும் மனப்போக்கு மிகுந்திருப்பதைக் கண்டு கவலையுறுகிறார் என்பது நாடறிந்த இரகசியமாகிவிட்டது. அரசியல் பொறுப்பை ஏற்கும் தகுதி களியாட்டங்களில் மிகுதியாக ஈடுபடுவோருக்கு அமைந்து விடுவதில்லை என்பது அவர் கருத்து. அரசியல் வாழ்வின் துன்பங்களைச் சற்று மறப்பதற்காகவே அவற்றை நாட வேண்டுமே தவிர, அவைகளில் ஆழ்ந்து மூழ்குவது அரசியலுக்கு ஆபத்து என்பார். இராஜராஜனோ இவ்விஷயத்தில் தந்தையாருக்கு நேர்மாறானவனாக இருந்தான்.

கயல்விழியின் மாளிகையின் உள் முகப்பில் அவளுடைய தந்தை ஆதிச்சதேவர் வந்தவர்களை வரவேற்று அவர்கள் வந்த நோக்கத்தை வினவினார்.

வந்தவர்கள் தாங்கள் கொண்டுவந்திருந்த மூட்டைகளை அவருக்கு எதிரில் அவிழ்த்தார்கள். உட்புறமிருந்து சாளரத்தில் பூந்துகிலுக்குப் பின்னால் கயல்விழியின் மதிமுகம் உதயமாகித் தனது குளிர்ந்த விழிக்கிரணங்களால் அவற்றைப் பார்வையிட்டது. பார்த்த விழிகள் இமைப்பை மறந்தன. இத்தனை வகையான ஆபரணங்களையும், அணிமணிகளையும் அவளே கூட ஒருங்குசேரத் தன் விழிகளால் அதற்கு முன் கண்டதில்லை.

பொன்னாரங்கள், நவரத்தின மாலைகள், மணியிழைத்த நெற்றிப் பட்டம், செவிகளை அலங்கரிக்கும் மகரக் குழை, பொற் கலங்கள், பொன்னாலான பெட்டகங்கள், பொற் கழஞ்சுகள் நிறைந்த பட்டுத் துகில் முடிச்சுகள், இன்னும் நவநவமான அணிகளும், மணிகளும் கண்களைப் பறித்தன.

ஆதிச்ச தேவருக்கு அவற்றைப் பார்த்தவுடனேயே அச்சம் பிறந்து விட்டது. ''ஐயா! பாண்டியரின் அந்தப்புரத்து அணிகளையோ, அல்லது வேறெந்த நாட்டு மன்னரின் உடைமைகளையோ நீங்கள் கவர்ந்து கொண்டு வந்திருக்கிறீர்கள். எங்களிடம் இதை வாணிபம் செய்ய முயற்சி செய்ய வேண்டாம். நாளைக்கே அரண்மனைக் காவலர்கள் இங்கு வந்து குழுமிவிடுவார்கள். நாங்கள் உழைத்துப் பாடுபட்டுப் பொருள் சேர்ப்பவர்கள்; நீங்கள் சென்று வாருங்கள்.''

கயல்விழியின் விழிகள் அங்கிருந்த மகரக் குழைகளில் தங்களைப் பறிகொடுத்துக் கிறங்கின. மகர மீன்கள் துள்ளிக் குதிப்பது போன்ற காதணி, மீன்களின் விழிகளில் இரத்தச் சிவப்பு பதிக்கப் பெற்றிருந்தது.

கலகலவென்று சிரித்தார்கள் வந்தவர்கள். ''ஐயா, பாணரே! வழிப்பறி நடத்தி வந்து வாணிபம் செய்ய வருபவர்கள் உங்களிடம் பொற்கழஞ்சுகளுக்குமா விலை பேசுவார்கள்?'' என்று கேட்டு மூன்று நான்கு பொன் முடிச்சுக்களை எடுத்து அவர் முன்னே வீசினான் ஒருவன்.

''உம்முடைய குமாரத்தி முற்பிறப்பில் என்ன தவம் செய்திருக்கிறாளோ தெரியவில்லை; மாபெரும் சோழ சாம்ராஜ்யத்துச் சக்கரவர்த்திகளின் திருக்குமாரர் இராஜராஜ சோழர் அவளுக்குத் திறை செலுத்துகிறார். கலைத் தேவியின் திருவருள் பெற்ற அந்தப் பெண்ணரசிக்குத் தம்முடைய வாழ்த்துக்களைக் கூறி இந்தப் பரிசில்களையும் அளித்து வரும்படி எங்களை அனுப்பியிருக்கிறார்.''

வாயடைத்துப் போனார் ஆதிச்சதேவர். பூந்துகிலுக்குப் பின்னால் தோன்றிய மதிமுகம் சிந்தனை செய்தது.

''இந்த மகரக்குழை இருக்கிறதே, இதை எங்கள் இளவரசே நேரில் பொற்கொல்லரிடம் கூறிக் கயல் விழிக்காகச் செய்துவரப் பணித்தார். கயல்களிரண்டும், உங்கள் புதல்வியின் செவிகளை அலங்கரித்தவாறே எங்கள் இளவரசரை அன்போடு விழித்து நோக்க வேண்டுமாம்! இந்த மகர மீன்களின் விழிகளையும் உங்களது புதல்வியின் விழிகளையும் ஒப்பிட்டு நோக்கி மகிழ்ந்தார் அவர்.''

கயல்விழி சட்டென்று தனது செவிகளை இரு கரங்களாலும் மூடிக் கொண்டாள். என்றாலும் அடுத்தவன் பேசிய சொற்கள் அவள் செவிகளுக்கு எட்டின.

''தங்களது குமாரத்தி நடனமாடும்போது எங்களது ஓவியர் ஒருவர் வந்து அவளது உருவத்தை வண்ணக் கலவையில் வரைந்து இளவரசரிடம் கொடுத்திருக்கிறார். இப்போது நேரிலேயே கண்டு களிக்கும் வாய்ப்பையும் இளவரசர் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்.''

மற்றொருவன் குறுக்கிட்டுத் தாங்கள் வந்த காரணத்தை விளக்கினான். ''கருவூர்ப் போரின் வெற்றியைக் கொண்டாடுவதற்காகக் கங்கைகொண்ட சோழபுரத்தில் விழா நடைபெறவிருக்கிறது. அந்த விழாவில் தங்களது புதல்வியின் கூத்து நடைபெற வேண்டும். சக்கரவர்த்திகளும், இளவரசருமே அதைக் கண்டுகளிக்கப் போகிறார்கள்.''

''ஒரு முக்கியமான செய்தியை நான் உங்களுக்குக் கூற வேண்டியிருக்கிறது!'' என்று உறுதியான குரலில் அவர் களுக்கு மட்டிலும் கேட்கும்படியாகக் கூறினார் ஆதிச்சதேவர். ''கூத்துக்கு வரும் விறலியரென்றால் அவர்களைத் தங்களது வேட்கைப் பொருளென்று சில வள்ளல்களும், செல்வந்தர் களும், அரசர்களும் கருதுகிறார்கள். கயல்விழியை உங்கள் இளவரசர் நெருப்பாக மதிக்க வேண்டும். நெருப்பைத் தீண்டும் துணிவு திரிலோகங்களையும் ஒரு குடைக் கீழ் ஆளும் சக்கரவர்த்திகளுக்கும் கூடக் கிடையாதல்லவா? நெருப் பென்னும் நினைவிருந்தால் அதனிடம் இன்பம் விழையும் எண்ணம் இருக்காதல்லவா?''

போர்ப்பறை கேட்ட கோழைகள்போல் அந்த வீரர்கள் இருவரும் அஞ்சி நடுங்கி ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். அரசகுலத்து ஆண்களைக் கண்டு உலகத்துப் பெண்களே மதிமயங்கியதாகப் புலவர்கள் சிலர் அப்போது உலாக்களையும், கோவைகளையும் எழுதியிருந்தார்கள். சோழ சாம்ராஜ்யத்து இளவரசனின் புன்னகை ஒன்று கிடைத்தால் போதுமென்று ஏங்கிய விறலியரும் கூத்தியரும் எத்தனையோ பேர்! அவ்விதம் இருக்க இந்தப் பாண்டிய நாட்டுப் பாணனுக்கு எத்தனை துணிவிருந்தால் இந்த மொழி கூறியிருப்பான்?

''பாணரே! இந்தச் சொல் கூறிய நீர் இப்போது சோழ நாட்டில் வாழாமல் இருந்ததால் உயிர் தப்பினீர். இளவரசரின் கலையுள்ளம் மகிழ்ச்சியுற்றால் ;தல்வி இந்திரனின் சபையில் ஆடும் ஊர்வசியைவிட உயர்ந்து விடுவாள். எங்களுக்கு இந்த விவரங்கள் ஏதும் தெரியாது; இதைப் பற்றிப் பேசவும் எங்களுக்கு உரிமை இல்லை. ஆனால் ஒன்று மட்டும் கட்டாயம் நடந்தேறிவிடும். தங்களது குமாரத்தியின் செருக்கால் இளவரசரின் மனம் சிறிது வருந்தினாலும் முதலில் எங்கள் தலைகளே தரையில் உருளும்.''

அதே சமயம் தூரத்தில் ஏதோ முரசம் அதிரும் சத்தம் கேட்டது. வந்தவர்களுக்கோ ஆதிச்சதேவருக்கோ முரசச் செய்தி எதுவும் தெளிவாக விளங்கவில்லை. சாளரத்துக்குப்

பின்னால் நின்ற கயல்விழி பூஞ்சிட்டெனப் பறந்து சென்றாள். பிறகு துள்ளிக் குதித்து ஆனந்த நடனம் புரிந்துகொண்டே வெளிமுகப்புக்கு ஓடிவந்தாள்.

''ஐயா! ஐயா! முரசுச் செய்தி கேட்டீர்களா? கேட்டீர் களா?'' என்று மீண்டும் அங்கே ஆடினாள். ஆதிச்சதேவருக்கே தம்முடைய குமாரத்தியின் இந்தச் செய்கை விநோதமாகத் தோன்றியது.

''பாண்டியநாடு தன்னுரிமை பெற்று விட்டது ஐயா! இனி நாம் சோழர்களுக்கு அடிமை இல்லை ஐயா!''

''கயல்விழி!'' என்று அதட்டினார் ஆதிச்சதேவர். ''இவ்வளவு பரிசுப் பொருள்களையும் உனக்காகச் சோழ சாம்ராஜ்யத்தின் இளவரசர் இராஜராஜர் அனுப்பி வைத்திருக் கிறார். கருவூர்ப்போரின் வெற்றி விழாவுக்காக நீ சோழ சாம்ராஜ்யத்தின் தலைநகரத்தில் கூத்து நடத்த வேண்டுமாம். இளவரசரின் கட்டளையைமறுத்தால் உயிர் வாழ முடியாது என்கிறார்கள் இந்தத் தூதுவர்கள்.''

கயல்விழியின் செவிகளில் அவளுடைய தந்தையாரின் கடுஞ்சொல் ஏறவில்லை. கீழே குனிந்து அந்த மகரக் குழைகளை மட்டும் கையில் எடுத்தாள். உற்றுப் பார்த்தாள்.

''ஐயா! இதை மட்டும் அவர்கள் விற்பனை செய்வதாக இருந்தால் வேண்டும் பொன் கொடுத்து வாங்குங்கள். நம்முடைய நாட்டின் விடுதலை விழாவுக்கு நானே கூத்தாடப் போகிறேன். பாண்டிய மன்னர் நம்மை அழைக்க வேண்டு மென்பதுகூட இல்லை. அனுமதி கிடைத்தால் அரண்மனை யில் ஆடுவோம்; இல்லையென்றால் மக்களுக்கு மத்தியில் பொது அரங்கில் ஆடுவோம்!''

நெருப்பைக் கக்கும் விழிகளுடன் எழுந்தார்கள் இருவரும். ஒருவன் அவள் கரத்திலிருந்த மகரக் குழைகளை வெடுக்கெனப் பற்றி இழுத்து ''விழா நடக்கப் போகிறதா விழா? பார்ப்போம்! இந்த நகரத்தில் என்ன விழா நடைபெறுமென்று!'' எனச் சீறினான்.

''உம்முடைய புதல்வியை நெருப்பென்று கூறினீரல்லவா? அந்த நெருப்பூட்டு விழாவைத்தான் நீங்கள் இருவருமே இங்கு கண் குளிரக் காணப் போகிறீர்கள்!''

பரிசுப் பொருள்களைப் பத்திரமாகச் சேகரித்து மூட்டை கட்டிக்கொண்டு பாயும் புரவிகளில் ஏறிக் காற்றெனக் கடுகி விரைந்தார்கள் அவர்கள்.

ஆதிச்சதேவரின் முகம் பேயறைந்த தோற்றம் அளித்தது.

# 12. புலியும் பூனையும்



**க**ங்காபுரித் தலைநகரத்தின் வானளாவிய கோவில் கோபுரம் அதை முதன் முதலில் உருவாக்கிய மாவீரர் கங்கை கொண்ட சோழப் பெருமகனின் மனத் திண்மை போலவும் சிந்தனைச் சிகரம் போலவும் கம்பீரமாக நிமிர்ந்து நின்றது. அவருக்குப் பின்பு பல தலைமுறைகள் அதைக் கோநகராகக் கொண்டு ஆட்சி செலுத்தி விட்டன. இப்போது மூன்றாம் குலோத்துங்கரின் ஆட்சியிலும் அந்த நகரம் சீரும் சிறப்பும் பெற்றுத்தான் விளங்கியது.

வடக்கே கன்னடமும் களிதெலுங்கும் பேசப்பட்ட நாடுகள் முதல், தெற்கே பாண்டிய மண்டலத்தின் குமரிக் கடல் வரையிலும் தனது மேலாட்சியை நிலைநாட்டியிருந்த சோழ சாம்ராஜ்யத்தின் தலைநகரமல்லவா கங்காபுரி! அதன் அழகையும் வளத்தையும் வெளிப்படுத்துவதைப் போல் நகரமெங்கும் மாடமாளிகைகள், கூட கோபுரங்கள், அங்காடிகள், ஆடரங்குகள், படைவீடுகள் நிறைந்திருந்தன.

அதிலிருந்து அப்போது ஆட்சி செலுத்திய மூன்றாம் குலோத்துங்கர் தமது முன்னோர்களையெல்லாம்விட ஒரு

வகையில் பெரும் பேறு பெற்றவர். கவிச்சக்கரவர்த்தி கம்பரைத் தமது அன்பால் கவர்ந்து இராமனின் கதையைத் தீந்தமிழ்க் கவிதையால் பாடவைத்தவர் அவர்.

கம்பர் தமது இராமாயணத்தில் அயோத்திமா நகர்ப் படலத்தைப் பாடியபோது, அவர்தம் கண்ணெதிரே பரந்து விரிந்து கிடந்தது கங்கைகொண்ட சோழபுரம்தான். அவருடைய கற்பனையின் அயோத்தியான கங்காபுரியின் மண்டபங்கள் சிலவற்றை மட்டிலும் நாம் கம்பரின் கவிச் சித்திரத்தின் வாயிலாகவே கண்டுவிட்டு, அடுத்தாற்போல அரண்மனைக்குச் சென்று சக்கரவர்த்தியைக் காணுவோம்.

**மன்னவர் தருதிறை அளக்கும் மண்டபம்!**
**அன்னமென் நடையவர் ஆடும் மண்டபம்!**
**உன்னரும் அருமறை ஓதும் மண்டபம்!**
**பன்னரும் கலைதெரி பட்டி மண்டபம்!**

சிற்றரசர்கள் யானைகள் மீதும் பொதி மாடுகள் மீதும் அனுப்பிக் கொண்டிருக்கும் திறைப் பொருட்களை அள விட்டுக் கணக்கெடுப்பதற்காக உள்ள திறை மண்டபம் ஒருபுறம் கட்டுக்காவல்களோடு காட்சி தருகிறது. கலை யினொடும் கலைவாணர் கவியினொடும் இசையினொடும், கலை மாதர் கலாப மயில்களெனச் சிலம்பொலித்து ஆடிக் களிக்கும் ஆடரங்கு ஒருபுறம் மக்கள் கூட்டத்தால் பொங்கி வழிகிறது. பல்வகைச் சாத்திரங்களையும் இலக்கியங்களை யும் பயின்றொழுகும் அறவோர் கூடும் நீதி நெறிமண்டபம் ஒருபுறம் நிமிர்ந்து நிற்கிறது. பல்வகைக் கலைகளையும் கற்றுத் தேர்ந்த புலவர்கள் வாதப் போர் புரியும் பட்டி மண்டபம் ஒருபுறம் கற்றறிந்தோரால் காமுறப்பட்டு விளங்கு கிறது. இந்த மண்டபங்களின் வாயிலாகவே நாம் அந்த ஆட்சி யின் சிறப்பை ஒருவாறு உணர்ந்து பெருமையுறுகிறோம்.

அடுத்தாற்போல் பல மதில்களைத் தாண்டி, அரண்மனை மாளிகையின் புறவாயிலையும் கடந்து உள்ளே சென்றால், அதென்ன காட்சி அங்கே!

ஆமாம், இன்று வெள்ளிக்கிழமையல்லவா! சக்கரவர்த்தி இளவரசர் இராஜராஜனுடன் தமது படைகளின் அணிவகுப்பை நேரில் பார்வையிடச் செல்கிறார். அதற்கான முன்னேற்பாடுகள் சித்தமாகி விட்டன.

வாயிற் கதவோரம் முரசுகள் தாங்கிய யானையின் மீது முரசறைவோர் நின்றுகொண்டிருக்கிறார்கள். இரு புறமும் வரிசை வரிசையாகக் கூர்வேலில் கொடி தாங்கிய குதிரை வீரர்கள் சக்கரவர்த்திகளைச் சூழ்ந்து செல்ல ஆயத்தமாகி விட்டனர். பட்டத்துப் பெரும் களிறொன்றும் சிறு களிறொன்றும் அம்பாரிகளுடன் அசைந்தாடி நிற்கின்றன.

சக்கரவர்த்தியைத் தூரத்தில் கண்டுவிட்ட பெரும் களிறு திடீரென்று ஆனந்தத்தோடு தனது துதிக்கையை மேலே தூக்கிய வண்ணம் பிளிறத் தொடங்கி விட்டது. மலைபோன்ற தனது உடலைக் கூனிக்குறுகிக் கொண்டு நாய்க்குட்டிபோல் அவர் முன்பு குழைந்து மண்டியிட்டது.

காலடியில் தரை அதிர, கைவீச்சால் காற்றசைய, கண் விழிப்பால் கனல் உமிழ, அவரது பாதங்களுக்காக விரிக்கப் பெற்ற பட்டுப் பரிவட்டத்தின் மீது வேகமாக நடந்து வந்தார் குலோத்துங்க சோழர். அவர்மீது 'குலோத்துங்கன் கோவை' பாடிய புலவர் அவரிடம் இல்லாத சிறப்பைச் சொல்ல வில்லை. 'கரு வீர மேகம்' என்றும் 'உருவாலும் உறுப்பாலும் மதனன்' என்றும், 'காட்டாண்மை வீமன்' என்றும் அவரைக் குறிப்பிட்டது முற்றிலும் பொருத்தமே. அவருடைய வயதின் முதிர்ச்சி உடற்கட்டின் இளமைக்குள் பதுங்கிவிட்டது.

நேரே சென்று யானையின் மதம் பொழியும் மத்தகத்தை வருடிக்கொடுத்துவிட்டு, பாயும் வேங்கையென அதன்மேல் தாவி ஏறினார் சக்கரவர்த்தி. அம்பாரிக்கு அருகில் சென்ற வுடன் அடுத்த களிற்றைத் திரும்பிப் பார்த்தார். இளவரசன் இராஜராஜன், நிதானமாக யானைப் பாகனின் உதவியோடு அதன்மேல் ஏறிக்கொண்டிருந்தான். சக்கரவர்த்தியின் நெற்றி சுருங்கியது, அதில் கவலைக்குறி தோன்றி மறைந்தது.

அம்பாரியில் அமரப்போன சமயத்தில் அரண்மனைக்கு வந்து கொண்டிருந்த பாண்டிய நாட்டு அமைச்சர் சயங் கொண்ட சோழ வல்லபரைப் பார்த்துவிட்டார் குலோத்துங்கர்.

''சயங்கொண்டவல்லபரே! மதுரையிலிருந்து இப்போது தான் வருகிறீர் போலும், செய்தியைக் கேட்பதற் காக இங்கு காலம் தாழ்த்திக்கொண்டிருக்க முடியாது. நீரும் நம்முடன் இந்த யானையின் மீதே வரலாம்.''

'சக்கரவர்த்திகளோடு நாமும் யானைமீது சரியா சனத்தில் அமர்ந்து பேசுவதா?' நடுங்கியது சயங்கொண்ட வல்லபரின் உடல். நெருப்பும் குலோத்துங்கரும் ஒன்று என்பது அவர் பழக்கத்தால் அறிந்த விஷயம். நெருங்கினாலும் சுட்டுப் பொசுக்கும்; தொலைவில் விலகினாலும் அதன் வெப்பம் தகிக்கும்.

''ஏன் காலம் கடத்துகிறீர்?'' என்று உறுமினார் சக்கரவர்த்தி.

வாய் பேசாது யானை மீதேறி அம்பாரிக்குச் சென்று, அவர் பாதங்களை ஒட்டி அதன் கீழே அமர்ந்தார் சயங்கொண்ட வல்லபர்.

யானைமீது கட்டிய வார் முரசங்கள் அதிர்ந்தன. யானைகளின் கழுத்துக்களை அலங்கரித்த வெண்கல மணிகள் கிண் கிணி நாதம் எழுப்பின. காலைக் கதிரொளியில் யானைத் தந்தங்களை அலங்கரித்த தங்கப் பூண்களும், அவற்றின் நெற்றிப்பட்டங்கள் முதுகுப் போர்வைகளும் கண்கள்ளைப் பறித்தன. குதிரைகளின் குளம்பொலியும் கூடவே எழுந்தது. புறப்பட்டுவிட்டார் சக்கரவர்த்தி.

குலோத்துங்கரைக் கண்டுகளிப்பதற்காக வெள்ளிக் கிழமையின் வரவை எதிர்பார்த்திருக்கும் நகர மாந்தர் சாலைகள் தோறும் குழுமியிருந்தனர். மேல் மாடங்களில் கூடியிருந்த பெண்களின் மென் கரங்கள் மலர் தூவத் துடித்துக்

கொண்டிருந்தன. ஆண்கள் வாழ்த்தொலி எழுப்பக் காத்திருந்தனர்.

மலர்மாரி பொழிந்த வண்ணமாகவும், வாழ்த்தொலி எழுந்த வண்ணமாகவும் இருந்தன. சக்கரவர்த்தி தம் வலக்கரத்தை உயர்த்தி ஆசி கூறியபடியே சென்றார். சயங்கொண்ட வல்லபரிடம் இன்னும் அவர் செய்தியை விசாரித்தறியவில்லை; அவருடைய கவனமெல்லாம் மக்களின் மகிழ்ச்சிப் பெருக்கை அளவெடுப்பதில் இருந்தது.

சட்டென்று ஓரிடத்தில் பின்புறம் வந்து இளவரசனின் யானையைத் திரும்பிப் பார்த்தார் சக்கரவர்த்தி, அவர் நினைத்தபடியே தான் அங்கும் நடந்தது. இராஜ இராஜன் அழகிய மகளிர் கூட்டமொன்றைப் பின்புறம் திரும்பி நோக்கிக் கொண்டிருந்தான். சக்கரவர்த்தியின் முகம் இப்போது இரண்டாவது முறையாகக் கவலையால் சுருங்கியது. 'தன்னை அடக்கி ஆளத் தெரியாதவன் எப்படி சாம்ராஜ்யத்தைக் கட்டி ஆளப்போகிறான்?' என்று தம்மையே கேட்டுக் கொண்டார் அவர்.

நகரத்தின் உள் மதிலைத் தாண்டி மரங்கள் சூழ்ந்த சாலை வழியே படையிருப்புக்களை நோக்கி நடந்து கொண்டிருந்தது யானை. சயங்கொண்ட சோழவல்லபரிடம் திரும்பி, 'செய்தியை இனிமேல் கூறலாம்' என்பதுபோல் உற்றுப் பார்த்தார்.

நடந்த விஷயங்களை முதலில் கூறிவிட்டுப் பின்பு ஓலையைக் கொடுக்கலாமா, அல்லது ஓலையைக் கொடுத்து விட்டு நடந்தவற்றைக் கூறலாமா என்று அதுவரையில் தவித்துக் கொண்டிருந்தார் வல்லபர். முடிவில் ஓலையை முதலில் கொடுப்பதே நலமென்று தோன்றியது. அவ்வாறே குலசேகர பாண்டியர் அனுப்பிய ஓலையை நடுங்கும் கரத்தால் சக்கரவர்த்தியிடம் நீட்டினார்.

ஓலையை வாங்கிப் படித்த குலோத்துங்கரின் முகம் அதைப் படித்த மாத்திரத்திலேயே பயங்கரமாக மாறியது.

சயங்கொண்ட சோழவல்லபரை அவர் உருட்டி விழித்தார். தாங்கிக்கொள்ள முடியாத அவமானம் நேர்ந்துவிட்டது போல் ஆத்திரமடைந்த அவர் அந்த ஓலையைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து, அதை வாங்கிக் கொண்டு வந்த சயங்கொண்ட வல்லபரின் முகத்தில் ஓங்கி அடித்தார்.

''இதைக் கொண்டுவந்து எம்மிடமே நீர் நீட்டு வதற்குத் தான் உம்மை அங்கே அமைச்சராக அனுப்பி வைத்தேன் போலும்! வல்லபரே, பாண்டியநாடு நமக்கு ஒரு துரும்புக்குச் சமம். ஆனால் எப்படி அந்தத் துரும்புக்கு நம்மை எதிர்த்து நிற்கத் துணிவு வந்தது என்பதைத்தான் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. தன்னுரிமையாம், தன்னுரிமை! இந்த நெஞ்சு உரம் அவர்களுக்கு எப்படி வந்தது?''

அமைச்சர் தடுமாறினார். 'நெருப்பு அருகில் இழுத்து வைத்துக்கொண்டு பொசுக்கத் தொடங்கிவிட்டது' என்ற எண்ணம் வந்துவிட்டது அவருக்கு.

''சக்கரவர்த்திகளிடம் இதுவரையில் நன்றியோடு தான் இருந்து வந்தார் குலசேகர பாண்டியர். அவருடைய தந்தை விக்கிரம பாண்டியருக்காகத் தாங்கள் போர் தொடுத்து நாட்டை மீட்டுக் கொடுத்ததை அவர் மறக்கவில்லை. ஆனால்... இளவரசன் சுந்தரபாண்டியனின் செருக்கும் அஞ்சாத நெஞ்சும் அவன்மேல் பாண்டியர் வைத்திருக்கும் பாசமும்தான் இப்படி ஓர் அவசர முடிவுக்கு அவரை வரச்செய்து விட்டன.''

''சுந்தர பாண்டியன்!'' என்று பட்டத்து யானையே பதறும் வண்ணம் கர்ஜித்தார் சக்கரவர்த்தி. ''அவனுடைய செருக்கு அஞ்சா நெஞ்சு... அவன்மேல் பாண்டியன் வைத்த பாசம்...''

சக்கரவர்த்தியால் சுந்தரபாண்டியனைப் பற்றிய செய்தியையே தாங்கிக்கொள்ள முடியவில்லை. பல போர்களை நடத்தி, பல வெற்றிகளைக் கண்டு, ஒரு மாபெரும்

சாம்ராஜ்யத்துக்கே அதிபதியாகியிருந்த அவர், ஏனோ அந்த ஓர் இளைஞனின் மனத் திண்மையைப் பொறுக்க முடியாமல் துடித்தார்.

பல லட்சம் போர் வீரர்களை அவரால் அடக்கி ஆள முடிந்தது. பல்லாயிரக்கணக்கான அதிகாரிகளைக் கண் காணித்து ஆட்சித் திறமையால் மக்களைக் காப்பாற்ற முடிந்தது. யார் குற்றமிழைத்தாலும் தண்டனை விதித்து யார் சிறப்பாக உழைத்தாலும் ஏற்றம் தந்து, ஒடுக்க வேண்டிய வர்களை ஒடுக்கிப் போற்ற வேண்டியவர்களைப் போற்ற முடிந்தது. காரணம் அவர் முதன்முதலில் தம்மையே அடக்கி ஆளக் கற்றுக் கொண்டிருந்தார்.

ஆனால் அவருடைய குமாரனும் எதிர்காலத்தின் ஆட்சிச் சுமையை ஏற்கப் பிறந்தவனுமாகிய ஒருவனை மட்டிலும் அவர் பிள்ளைப் பிராயத்திலிருந்தே கண்காணித்து வளர்க்கத் தவறி விட்டார். ஐந்திலேயே வளைத்து ஒழுங்கும் கட்டுப்பாடுமாய் உருவாக்கத் தவறிவிட்டார். 'குலசேகர பாண்டியன் வேறு எதையுமே சாதிக்காவிட்டால்கூட வலிமை கொண்ட ஓர் இளைஞனை உருவாக்கி விட்டான் போலிருக்கிறதே!' என்று கசப்புடன் நினைத்தார்.

அவருடைய பார்வை உடனே இராஜஇராஜன் பக்கம் திரும்பியது. அவன் அப்போது கையில் ஏதோ ஒரு சிறிய திரைச் சீலையை வைத்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். 'எந்தப் பெண்ணின் ஓவியத்தையாவது வைத்துக் கொண்டு ஏக்கப் பெருமூச்சு விடுவான்! தன்னையே அடக்கி ஆளத் தெரியாத இந்த ஆண்மையற்றவனிடம் அரசியல் பீடம் நிலைத்து நிற்குமா?'

விழிகளில் வெறுப்பையும் வேதனையையும் உமிழ்ந்தார் சக்கரவர்த்தி.

# 13. விதி வழியே மதி சென்றால்



மதிவழியே விதியறிந்து நடப்பவர்களுக்கு அந்த விதியே பணிந்து கொடுத்துக் குற்றேவல் செய்து அவர்களுக்கு ஏற்றம் தருகிறது. அப்படி அடங்கிக் குற்றேவல் செய்யும் விதியே, மதி வழியே தன்னை மனிதர்கள் நடத்தாதபோது அவர்களைக் குப்புறத் தள்ளிவிட்டு வேடிக்கையும் பார்க்கிறது. மதிவழியே செல்லும் விதி பாகனின் அங்குசத்துக்கு அடங்கிய பழக்கப்பட்ட யானை; தன் வழியே மதியை இழுக்கும் விதி கட்டுக்கடங்காது வெறிபிடித்தோடும் மதயானை.

குலோத்துங்க சோழரின் மன வலிமையான அங்குசத்தால் அறுபதாயிரம் யானைகள் அவருடைய படைவீடுகளில் அடங்கிக் கிடந்தன. பட்டத்து யானையின் மீது சென்று கொண்டிருந்த அந்த வீர வேங்கை தம்முடைய மைந்தனின் மீது ஏற்பட்ட வெஞ்சினத்தைப் பாச உணர்ச்சியெனும் பலவீனத்தால் அவன் மீது காட்ட முடியாமல், தம்மெதிரில் இருந்த சயங்கொண்ட சோழ வல்லபர் மீதே திருப்பினார். மதி புரண்டது; விதி இழுத்தது.

''வல்லபரே! அந்தச் சுந்தரபாண்டியன் அப்படி வளர்ந்து இப்படி மாறும் வரையில் நீர் அங்கே என்ன செய்து கொண்டிருந்தீர்? ஒரே நாளில் அவனை ஒழித்திருக்கலாம்; அல்லது குலசேகரனுக்கு எதிராக அவனைத் திருப்பிவிட்டு அவர்களது சக்தியைச் சிதறடித்திருக்கலாம். இத்தனை காலம் அமைச்சராக இருந்த நீர் அங்கு என்ன செய்து கொண்டிருந்தீர்? பதவிக்குச் சென்றவுடன் எந்தச் சக்தியால் நாம் அப்படி உயர்ந்தோம் என்பதை மறந்து விட்டீரா?''

மறுமொழி கூறாது தலை குனிந்தார் சயங்கொண்ட வல்லபர். முன்பே சுந்தரபாண்டியனின் தீவிரப் போக்கு பற்றித் தம்முடைய இரகசிய ஓலைகளில் கோடிட்டுக் காட்டியிருந்தார் அவர். ஆனால் அப்போது தம் வலிமையில் அசையாத நம்பிக்கை கொண்டிருந்த சக்கரவர்த்தி அதைப் பொருட்படுத்தவில்லை. 'சக்கரவர்த்திகளுக்குத் தம் எதிர் காலமான அடுத்த தலைமுறையிடம் நம்பிக்கை இல்லை; அதனால்தான் சிறிய பகையைப் பெரிதாக்கிப் பதறுகிறார்' என்று அச்சம் கொண்டார் வல்லபர்.

''ஒன்றும் ஒன்றும் சேர்ந்தால் இரண்டு என்னும் கணக்கு, அறிவில்லாதவர்கள் கற்கும் அரிச்சுவடிக் கணக்கு! ஒருவனுடைய சிந்தனையும் மற்றொருவனுடைய சிந்தனையும் ஒன்று சேர்ந்துவிட்டால் அவர்கள் இருவரும் ஓராயிரம் பேர்களின் வலிமையைப் பெறுகிறார்கள். அரசியல் சூழ்ச்சி தெரியாமலா உம்மைப் போய்ப் பாண்டியனுக்கு அமைச்சராக்கினேன்? நீரோ அவர்களுடைய ஒற்றுமைக்கு வாழ்த்துக் கூறி மகிழ்ந்திருக்கிறீர்!''

''என்னுடைய தவறு மன்னிக்க முடியாத தவறு, சக்கரவர்த்திகளே!''

''தவறு அல்ல, அது குற்றம்; அரசியல் குற்றம்!''

மன்னித்து அருளும்படி மன்றாடிய வல்லபர், ''இப் போதும் காலந்தாழ்ந்துவிடவில்லை; சுந்தர பாண்டியனை முளையிலேயே கிள்ளிவிடலாம்'' என்றார்.

''கிள்ளி எறிவதா? கூடாது!'' என்றார் சக்கரவர்த்தி. ''கிள்ளி எறிந்தால் போதாது. சாணக்கியர் என்ற இராஜதந்திரியைப் பற்றிய கதை ஒன்று தெரியுமா உமக்கு? அவர் நடந்து செல்லும்போது முட்செடி ஒன்று அவர் காலில் தைத்துவிட்டதாம். அவர் அதைக் கிள்ளி எறியவில்லை, அப்படியே ஆணிவேருடன் அதைப் பறித்து வாயிலிட்டு மென்று அதன் சக்கையைக் காறி உமிழ்ந்தாராம்! கிள்ளி எறிந்தால் மறுபடியும் துளிர்த்து விடுமல்லவா?''

பின்னர் சக்கரவர்த்தி வல்லபரிடம் ஏதும் பேசவில்லை. தம் அடுத்த திட்டங்களைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்தார்.

பின்புறம் வந்த இளவரசன் இராஜராஜனும் ஒரு வகையில் மனக் கொதிப்போடுதான் வந்து கொண்டிருந்தான்; மதுரைக்கு அவன் இரகசியமாக அனுப்பி வைத்த வீரர்கள் இருவரும் முதல் நாள் மாலையே அவனிடம் வந்து செய்தியைக் கூறிவிட்டார்கள். கயல்விழிக்காக அவன் அனுப்பி வைத்த பரிசில்கள் யாவும் அப்படியே திரும்பி வந்து விட்டன. பாண்டிய நாட்டில் அவர்கள் கேள்வியுற்ற முரசுச் செய்தியையும் தெரிவித்தார்கள் அவர்கள்.

முரசுச் செய்தியால் பாண்டியநாடு சோழ சாம்ராஜ்யத்தின் மேலாதிக்கத்தை உதறித் தள்ளியதுகூட இராஜராஜனுக்கு ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை! ஆடல் நங்கை கயல்விழியால் எப்படி அந்த அழைப்பை அலட்சியப்படுத்த முடிந்தது? இளவரசராகிய தானே பரிசும் ஆளும் அனுப்பியதை அவளால் எப்படி மறுக்க முடிந்தது? ஒரு பேதைப் பெண், அதிலும் பாணர் குலப்பெண், பரிசுகள் பெறுவதும் பரிசு வழங்குவோரை மகிழ்விப்பதையுமே முறை யாகக் கொண்ட பெண் இப்படி அவமதித்து அனுப்புவதா?

என்றாலும் அவனுடைய வேட்கை வெட்கமறிய வில்லை. தனது மேலங்கியினுள் மறைத்து வைத்திருந்த அவளது ஓவியச் சுருளை மெல்ல எடுத்து விரித்தான். அம்பாரிக்குள் அவன் தனித்திருந்ததால் அந்த ஓவியத்தை அவன் கண்ணிமைக்காமல் காண முடிந்தது. அரச குலத்துப் பெண்டிரை விட, பரிவார மகளிரைவிட, அடிமைகொண்ட வேற்று நாட்டு வேள மகளிரை விட, ஏன் அவன் கண்ணில்பட்ட எல்லாப் பெண்களிடமும் இல்லாத ஏதோ ஒரு தனித்தன்மை அவளிடம் இருந்தது.

காதளவோடிய நெடுங்கயல்கள், தூண்டில் முள் போன்று உதட்டில் துள்ளிய புன்னகை, இடது கன்னத்தில் கண்ணை ஒட்டியிருந்த கருநீல மச்சம், இளமை செழிக்கும்

கன்னங்கள், பருவ மலர்ச்சியின் மணம் கமழும் மார்பகம். சந்தனத்தால் கடைந்தெடுத்த சிற்பம் போன்ற உடற்கட்டு... விழிகளால் அந்த ஓவியத்தை விழுங்கத் தொடங்கினான் இளவரசன். அவனுடைய கண்ணோட்டம் கலைமான் தான் விரும்பும் பிணைமானை நோக்கும் கண்ணோட்டமாக இருக்கவில்லை. பிணைமானை தனது வெம்பசிக்கு இரையாக்கத் துடிக்கும் சிறு புலியின் வெறிநோக்காக இருந்தது அது.

படை வீரர்களது வரவேற்பாகிய முரசுகளின் முழக்கத்தையும் சங்கொலியையும் கேட்ட பின்னர்தான் இராஜராஜ னுக்குத் தன்னுணர்வு வந்தது. தலை தூக்கிப் பார்த்தான். நாலாபுறங்களிலும் கண்ணுக்கெட்டிய தூரம் வரையிலும் பெருங்கடல் போல் பரவியிருந்த படை வெள்ளத்தினூடே அவனும் சக்கரவர்த்தியும் யானைகளாகிய தோணிகளில் மிதந்து சொல்வதுபோல் தோன்றியது அவனுக்கு.

திரும்பிய பக்கமெல்லாம் போர் வீரர்கள், லட்சக் கணக்கான குதிரைகள், ஆயிரக்கணக்கான யானைகள்! வேலும் வில்லும் கூர் வாளும் கேடயங்களும் காலைக் கதிரொளியில் கண்களைப் பறித்தன. தினவெடுத்த திண்தோள் குதிரைகள் தரையை உதைத்துப் புழுதிப் படலம் எழுப்ப முயன்றன. அசைந்தாடும் குன்றுகள் கூட்டமென அச்ச மூட்டிக் கொண்டிருந்தன யானைகள். அனைத்தையுமே தமது சுண்டு விரலின் நுனியால் ஆட்டி வைத்த குலோத்துங்கர், கம்பீரமாகச் சுற்றி வந்து தமது மேற்பார்வையை முடித்தார்.

பிறகு மையத்திலிருந்த படைக் கூடாரத்துக்குள், சோழ சாம்ராஜ்யத்தின் தலைமைப் படைத்தலைவரான சாமந்த நாயகர் பல்லவராயரிடம் அவருடைய ஆலோசனை நடைபெற்றது.

''பல்லவராயரே! அடுத்த வெள்ளிக்கிழமை நம் எல்லாப் படைகளும் புறப்பட்டுப் பாண்டிய நாட்டை எல்லாத் திசைகளிலிருந்தும் பொருதுகின்றன!''

''எல்லாப் படைகளும் எதற்கு?'' என்பதுபோல் ஏறிட்டுப் பார்த்தார் பல்லவராயர். ''மதுராந்தகர் என்று எம்முடைய முன்னோர்கள், சூடிக்கொண்ட பட்டத்தை நாம் இப்போது மெய்ப்பிக்க வேண்டும். அவர்கள் யாரும் மதுரைக்கு அந்தம் தேடவில்லை. அப்படி முடிவே தேடியிருந்தால் இன்று இந்த நிலை வந்திருக்காது. ஆகவே நம்முடைய தலைநகரத்தின் படை, பழையாறை நகரைச் சுற்றிலுமுள்ள ஆரியப் படையூர், புதுப்படையூர், பம்பைப் படையூர், மணப் படையூர் ஆகிய எல்லாப் படையூர் களிலுமுள்ள படைகள் தஞ்சையிலும் உறையூரிலும் உள்ள படைகள் இவ்வளவும் ஒன்றாகப் புறப்பட வேண்டும்!''

அதிர்ச்சியுற்றார் பல்லவராயர். பாண்டிய நாடு தாங்குமா இவ்வளவு படைகளையும்!

''கயல்மீனைக் கொத்தி இழுத்துப்போட்டுக் கொல்வதற்குச் சிறிய தூண்டில் முள் போதும் என்று நீர் நினைக்கலாம்; போதாது; இனி எந்த மீன்களுமே நீந்த முடியாதபடி அந்த வைகையாறு இரத்த ஆறாக ஓட வேண்டும். பாண்டியப் பூண்டு முளைப்பதற்கே இனி மதுரை என்று ஒரு நகரம் இந்த மண்ணில் இருக்கக் கூடாது!''

''சித்தம் சக்கரவர்த்திகளே!'' என்றார் பல்லவராயர்.

''ஆனால் நம்முடைய வீராபிஷேகத்துக்கு மட்டிலும் ஒரே ஒரு அரண்மனை மாளிகையை விட்டுவைக்க வேண்டும்.''

இவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந்த இராஜ ராஜனின் முகம் திடீரென மலர்ச்சியுற்றது. தந்தையாரிடம் அணுகி, ''சக்கரவர்த்திகளே! நானும் இந்தப் போரில் கலந்து கொள்ள வேண்டும்'' என்று அனுமதி கேட்டான்.

அவனாகவே முன் வந்து கேட்டது சக்கரவர்த்திக்கு வியப்பாக இருந்தது.

''நீ கங்காபுரியில் தங்கிச் சில நாட்கள் கம்பரின் காவியத்தைப் பாடம் கேட்டுக் கொள். இராமனின்

குணச்சித்திரத்திலிருந்து நீ எவ்வளவோ கற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. முதலில் அது உன் உட்பகையை ஒழிக்கப் பெருந்துணை செய்யும்.''

''உட்பகையா!''

''ஆமாம், நான் வெளிப் போர்களில் வெற்றி பெறுவதற்கு முன்னால் என்னிடமுள்ள மனத்தோடு போரிட்டு வெற்றி பெற்றிருக்கிறேன். இந்த வெற்றி எவ்வளவுக்குக் கிடைக்கிறதோ, அவ்வளவுதான் வெளியிலும் உனக்கு வெற்றி உண்டு. முதலில் நீ இதைச் செய்.''

''போர் முடிந்து திரும்பியவுடன் நான் காவியம் கற்கிறேன்'' என்றான் இராஜராஜன். இப்படிக் கூறினால் அவர் ஏற்றுக்கொள்வார் என்பதை அவன் அறிந்தவன்.

''சரி, நீயும் உடன் வருகிறாய்!'' என்றார் சக்கரவர்த்தி.

அவனுடைய மகிழ்ச்சிக்கோர் எல்லையில்லை. களப்போர் புரிந்து வெற்றிமாலை சூட வேண்டும் என்பதால் ஏற்பட்ட மகிழ்ச்சியா அது? அல்லது நெருப்புக்கும் சாவுக்கும், கொடுமைகளுக்கும் இடையில் நிணம் கொத்தும் கழுகெனப் பறந்து களியாட்டப் போரில் கலந்து கொள்ள முடியும் என்பதால் ஏற்பட்ட மகிழ்ச்சியா? தந்தைக்கோ அது களப் போர், தனயனுக்கோ களியாட்டப் போர்!

# 14. உய்யவந்தாள்



**ம**துரையில் முரசு முழங்கத் தொடங்கிய அதே வேளையில் அதன் வளநாடுகள், கூற்றங்கள், சிற்றூர்கள் முதலிய எல்லாப் பகுதிகளிலும் அதன் எதிரொலி எழும்பியது. மக்கள் கூடும் இடங்களான நகர மண்டபங்கள், பொதுச் சபைகள், கோயில்கள் எங்கும்

ஆயிரக்கணக்கான முரசங்கள் அந்தப் பாண்டிய மண்டலம் முழுவதிலும் அதிர்ந்தன. நாடு தன்னுரிமை பெற்று விட்டதைக் கூறி, அந்த உரிமையைக் காப்பதற்காக உயிர் துறக்கச் சித்தமாக இருக்கும் வீரர்களைப் போர்ப் படையில் சேருமாறு பாண்டியர் அழைப்பு விட்டிருந்தார்.

இளம் உழவர்கள் தங்கள் ஏர்க்கால்களை முதியோரிடம் வீசி எறிந்துவிட்டு வாள் பிடிக்க ஓடி வந்தார்கள்; நெசவாளர் தச்சர், கொத்தர் முதலிய பல்வேறு தொழிலாளர்கள் தங்கள் வேலைகளைப் போட்டுவிட்டு வேல்பிடிக்கக் கூடி நின்றார்கள்; கொல்லர்களின் உலைக்களங்கள் மட்டிலும் இரவு பகலாகக் கருவிகளைச் செய்து குவித்த வண்ணமாக இருந்தன.

காதலிளம் கன்னியரைத் தழுவியிருந்த கட்டிளம் காளையருக்கு வெற்றித் திருவையோ வீர மரணத் தேவியையோ தழுவி இன்புற வேண்டுமென்ற பேராசை பிறந்து விட்டது. இத்தனை ஆண்டுகளாக உறங்கிக் கிடந்த பாண்டியநாடு இந்த முரசுகளின் முழக்கத்தால் திடீரென்று விழித்துக் கொண்டு தோள் தட்டத் தொடங்கியது. கொடும் போர் ஒன்று வரப் போகிறதெனத் தெரிந்தவுடன் கோடிப் பேர் திரண்டு விட்டனர்.

முரசுகள் முழங்கிய ஒருநாள் காலைப்பொழுது...

திருப்பரங்குன்றத்து வாணிகர் வீட்டிலிருந்து ஓர் அழகான சிவிகை புறப்பட்டு வந்து காரணை விழுப்பரையரின் மாளிகை முன்பு நின்றது. சிவிகை தூக்கிகளிடமிருந்து செய்தியை அறிந்த விழுப்பரையரின் பணியாள் வந்து, 'திருப்பரங்குன்றத்துப் பெருவணிகர் சொக்கநாதர் தமது மனைவியாரோடு தங்களைக் காண வந்திருக்கிறார்' என்று விழுப்பரையரிடம் தெரிவித்தான். விழுப்பரையருக்கும் திருவுடைத்தேவியருக்கும் வந்திருப்பவர்கள் யார் என்பதும் அவர்கள் வந்த நோக்கமும் விளங்கிவிட்டன. ஆலவாய் நம்பி பயிற்சிக்களத்துக்குச் சென்றிருந்தான்.

மலர்கள், பழங்கள், கொற்கை முத்துச்சரம், வெற்றிலை பாக்கு முதலியவை நிறைந்த வெண்பொற் பேழையைக் கொண்டு வந்து விழுப்பரையரின் முன் வைத்து வணங்கிச் சென்றனர் சிவிகைத் தூக்கிகள். இலட்சுமிதேவி போன்ற பேரெழிலோடு தம் கணவரையும் அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தார் உய்யவந்தாளின் தாய். திருவுடைத்தேவி அவரை அன்போடு வரவேற்று உட்புறம் அழைத்துச் சென்றார். ஆண்கள் இருவரும் தனித்து அமர்ந்திருந்தனர்.

சொக்கநாதர் வணிகராதலால் தம்முடைய பொருளைக் கொடுக்கும் சாதுரியத்தோடும், தமக்கு அதைவிட அரியதொரு பொருளைத் தேடிக்கொள்ளும் திறமையோடும் முன்னுரை பேசினார். ''தாங்கள் எங்கள் குமாரத்தியைப் பார்ப்பதற்காக வரக்கூடும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். தங்களுக்கு மிகப் பொறுப்பான கடமைகள் இருக்குமென்பதால், குல வழக்கையும் பொருட்படுத்தாமல் நாங்களே வந்திருக்கிறோம். இன்று தொடங்கும் நம்முடைய புது உறவு ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரோட வேண்டும்.''

எவ்வித உணர்ச்சிகளுக்கும் தம்மை ஆளாக்கிக் கொள்ளாதிருந்த விழுப்பரையர், ''போர் தொடங்கி விட்டது! இப்போது திருமணம் நடத்துவதைவிடப் போர் முடிந்தவுடன் அதைப் பற்றிப் பேசுவது ஏற்றதாக இருக்குமே'' என்றார் எடுத்த எடுப்பில்.

''தாங்கள் வருவதற்குத் தாமதமானவுடனேயே நாங்கள் அவ்வாறுதான் நினைத்தோம். ஆனால் எங்கள் குமாரத்தியின் துன்பத்தை எங்களால் தாங்க முடியவில்லை. உய்யவந்தாள், எங்களுடைய மூத்த குமாரத்தி, மற்றவர்களெல்லாம் சிறு குழந்தைகள். சில தினங்களாக அவள் சித்தம் கலங்கியவள் போல் நடந்து கொள்கிறாள், அவளுடைய உயிரையும் வாழ்வையும் காப்பாற்றுவதற்குத் தங்களால்தான் முடியும்.''

கருங்கற் பாறையாகத் தமது உள்ளத்தை உறுதியாக்கிக் கொண்டிருந்த விழுப்பரையர், அந்தத் திருமணம் நடை பெறக்கூடாது என்பதற்கான காரணங்கள் அனைத்தையும் கூறினார். வைகைக்கரைக் காளி கோயிலில் தமது குமாரன் தம்மிடம் சபதமிட்டதையும் தெரிவித்தார். பாண்டிய நாட்டை அப்போது சூழ்ந்திருந்த பேராபத்தை எடுத்துக் கூறி, 'என்னுடைய குமாரன் போரை முன்னின்று நடத்தப் போகும் படைத்தலைவன்! அவனை உங்கள் குமாரத்தி இப்போது மணந்துகொள்ளுவதால் அவளுக்கோ தங்களுக்கோ நலன் உண்டு என்று நான் நினைக்கவில்லை' என்று முடித்தார்.

பெண்ணைப் பெற்றவர் இருதலைக்கொள்ளி எறும்பானார். அவருடைய இருதயம் சல்லடைக் கண்களாக விழுப்பரையரால் துளைக்கப் பெற்றது. உட்புறத்தில் அவருடைய மனைவியும் திருவுடைத் தேவியாரும் தேம்பியழும் ஓசையும் அவருக்குக் கேட்டது.

''எனக்காக இந்த ஒரு வேண்டுகோளையாவது தாங்கள் நிறைவேற்ற வேண்டும். தாங்கள் இருவரும் இப்போதே புறப்பட்டு வந்து என் குமாரத்தியைக் காணுங்கள். அவளிடம் கூறி அவளைத் தேற்றிவிட்டு வாருங்கள். இல்லையேல், அவளைக் காப்பாற்ற முடியும் என்று எனக்குத் தோன்ற வில்லை. தயைசெய்து இதை மட்டும் மறுக்காதீர்கள்.''

விழுப்பரையரும் திருவுடைத் தேவியும் அவர்களுடன் திருப்பரங்குன்றத்துக்குப் புறப்பட்டார்கள். சிறியதோர் அரண்மனையின் சிறப்புக்களோடு விளங்கியது வணிகரின் மாளிகை. அங்கே தனது கண்களில் உயிரை வைத்துக் கொண்டு அவர்களின் வரவு நோக்கிக் காத்திருந்தாள் நங்கை. திருவுடைத்தேவியார் பெண்ணைப் பெறாதவர். தம்முடைய செல்வக் குமாரனின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அந்த சின்னஞ்சிறு சித்திரப் பாவையைப் பஞ்சணை மஞ்சத்தில் கண்டவுடன் அன்போடு அணைத்துக் கொண்டு கண்ணீர் வடித்தார்.

விழுப்பரையரின் இரும்பு நெஞ்சும் இளகிவிட்டது, அந்தக் காட்சியைக் கண்டு. அனலில் வாடிய மல்லிகை மாலையெனப் பஞ்சணையில் சுருண்டு கிடந்தாள் உய்யவந்தாள். என்றாலும் தமது கடமையை மனத்தில் கொண்டு அவளிடம் சிறிது சிறிதாக விவரங்களைக் கூறினார் விழுப்பரையர்.

அவள் மருண்டு நோக்கியவாறே வாயடைத்துப் போனாள்.

''பெண்ணே! நம்பியும் நீயும் பழகும்போது இந்த நாட்டில் போர் நிகழக்கூடுமென்பதை நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள்; ஆனால் இப்போது நிலைமை மாறிவிட்டது. செஞ்சோற்றுக் கடன் தீர்க்கப் பிறந்தவன் அவன்'' என்றார் விழுப்பரையர்.

''அவர் போர்வீரர் என்பது எனக்கு முன்னமேயே தெரியும்; நானே அவருக்கு வீரத்திலகமிட்டு அனுப்பவும் மறக்க மாட்டேன்'' என்று துணிவோடு கூறினாள் அவள். 'பாண்டிய நாட்டுப் பெண்ணல்லவா' என்று தமக்குள் எண்ணிப் பெருமையடைந்தார் விழுப்பரையர்.

''இதோ பார்! போர் என்றால் முதலில் அதன் தீமையையும் எண்ணிப் பார்க்க வேண்டும். களத்துக்குப் போகும் வீரர்கள் அங்கே வீழ்ந்து படுவதற்கும் இடமுண்டு...'' இப்போது அவர் குரல் தழுதழுத்தது. ''அதனால்தான் நான் கூறுகிறேன்; போர் முடிந்தபின் ஆலவாய்நம்பி மீண்டும் திரும்பி வந்தால் நீ அவனையே மணந்து கொள்ளலாம். இல்லாவிடில் வேறு யாரையேனும் மணந்து நீ சுகமாக வாழலாம். திருமணத்தை முடிவு செய்ய வேண்டிய காலம் இதுவல்ல!''

செவிகள் இரண்டையும் பொத்திக் கொண்டு குமுறினாள் உய்யவந்தாள். ''இந்தப் பிறவியில் இனி எனக்கு வேறு வாழ்க்கை கிடையாது. என் உயிரும் உங்கள் போர் வரும் வரையில் நிலைத்திருக்காது. முதலில் என்னைக் கொன்று விட்டுப் பிறகு உங்கள் குமாரர் களத்துக்குச்

செல்லட்டும்.'' எவ்வளவோ கூறிப் பார்த்தார் விழுப்பரையர். உய்யவந்தாள் தன் பிடிவாதத்திலிருந்து தளரவில்லை. அவருக்கோ கோபம் வந்துவிட்டது. ''கொற்றவைத்தாயின் முன்பாக அவனை ஆணையிடச் செய்திருக்கிறேன் நான். முதலில் அவன் தன்னுடைய காதலை அங்கே களப்பலி கொடுத்திருக்கிறான். அடுத்தாற்போல் தன் உயிரையே களத்தில் கொடுப்பதாகவும் சூளுரைத்திருக்கிறான். அவனையா நீ மணந்து கொள்ள வேண்டுமென்கிறாய்?''

''அவர் தம்முடைய காதலைப் பலி கொடுத்திருக் கலாம். ஆனால் என் கற்பைப் பலி கொடுத்திருக்க மாட்டாரே! தாங்களும் அதைக் கேட்டிருக்க மாட்டீர்களே! உள்ளத்தால் அவரோடு வாழ்ந்து விட்டேன் நான். என்னுடைய வீர மறவர் நான் நினைத்ததையெல்லாம் விடப் பெரு வீரரென்று தெரிகிறது. இப்போது நான் முன்னிலும் பன்மடங்கு அவர் கரம் பிடிக்கத் துடிக்கிறேன். கரம் பிடித்த மறுகணமே நான் இறந்தாலும் அது எனக்குப் பெருவாழ்வு ஆகும். எனக்கு வாழ்வு தரமாட்டீர்களா?''

''வாழ்வா இது?'' என்று கலங்கினார் விழுப்பரையர். காதலைப் பலி கொடுக்கும்படி எவனுக்குக் கட்டளை யிட்டாரோ அவனிடம் மீண்டும் போய் இவளை மணந்து கொள்ளும்படி எங்ஙனம் சொல்வது? பாறையாகிவிட்ட அவனுடைய நெஞ்சத்தில் மறுபடியும் சலனம் ஏற்பட்டால் அது யாருடைய குற்றம்? நெடுநேரம் யோசனையில் ஆழ்ந்தார் விழுப்பரையர்.

'என் கற்பைப் பலி கேட்க நீங்கள் யார்?' என்று கேட்கும் இந்தப் பெண் இனி வேறொருவனை மணந்து கொண்டு வாழ இசையமாட்டாள் என்பது திண்ணமாகி விட்டது. அவ ளுடைய மனக்குறையோடு, தாபத் துடிப்போடு அவனைக் கடமையாற்றத் தூண்டுவதைவிட, அவளுடைய ஆறுதலுடன் அவனை அனுப்பி வைத்தால் என்ன?

வணிகர் சொக்கநாதர், அவர் மனைவியார், திருவுடைத் தேவியார், உய்யவந்தாள், ஆகிய நால்வரின் உயிர்களும்

விழுப்பரையர் கூறப் போகும் முடிவை ஆவலுடன் எதிர்பார்த்துத் துடித்தன.

''உங்கள் அனைவரின் விருப்பமும் அதுவானால் நாளைப் பொழுது புலர்ந்தவுடன் குன்றத்துக் குமரன் முன்னிலையில் திருமணம் நிறைவேறட்டும்!'' என்றவர் உடனே, ''மறுநாள் காலையில் அவன் போருக்குப் புறப் படுகிறான்'' என்று முடித்தார்.

உய்யவந்தாளின் கண்ணீர் ஆனந்தக்கண்ணீரா அல்லது துயரக் கண்ணீரா அல்லது இரண்டுமே இரண்டறக் கலந்த கண்ணீரா?– விழுப்பரையருக்கு விளங்கவில்லை.

அன்றைக்கு இரவு வீட்டுக்குத் திரும்பிய ஆலவாய் நம்பியிடம் திருவுடைத்தேவியார் நடந்தவற்றைக் கூறினார். கூறிவிட்டு, ''உன் தந்தையார் உன்னிடம் கூறித் திருமணத் துக்குச் சித்தமாகும்படி தெரிவித்தார்'' என்றார்.

அவனுடைய சித்தமெல்லாம் வேறு எங்கோ இருந்தது. ''சரி, அவ்விதமே ஆகட்டும்'' என்று எவ்வித உணர்ச்சியு மின்றி மறுமொழி கூறினான் அவன்.

## 15. காதலல்ல; கடமை



புதிதாகப் படையில் சேர்ந்த வீரர்களைத் துயில் எழுப்பிப் பயிற்சிக் களத்துக்கு அழைப்பதற்காக அதி காலையில் நகருக்குள் வீரமுரசுகள் முழங்கத் தொடங்கின. அவற்றோடு திருப்பரங்குன்றத்துக் குமரன் கோவிலில் ஒலித்த மங்கல வாத்திய இசைகளும் ஒன்று கலந்தன. வீரக் குமரன் ஆலவாய்நம்பி கோலக் குமரி உய்யவந்தாளின் கழுத்தில் மங்களநாண் பூட்டினான். உயிர் பெற்றாள் உய்யவந்தாள்.

மணப் பெண் மாளிகையில் விருந்தை முடித்துக் கொண்டு விழுப்பரையர் மட்டிலும் அவசரமாக வெளியில்

கிளம்பினார். பெண்ணின் தாயாரும் திருவுடைத் தேவியாரும் கலகலப்பாகப் பேசத் தொடங்கினர். உய்யவந்தாளின் நெருங்கிய தோழிகள் அவளுடைய அழகுக்கு அழகு செய்து அளவற்ற ஆனந்தங் கொண்டார்கள்.

ஊருக்கும் உற்றம் சுற்றத்துக்கும் தெரிவிக்காதபடி, திருமணம் நிறைவேறினாலும், பணியாட்களையும் நகரத்து நண்பர்களையும் மறந்து விடவில்லை பெண்ணின் தந்தையார். விருந்துக்கு வந்தவர்கள் போரைப் பற்றிப் பெரும் பொழுதும் பேசினார்கள். முதியோர், பெண்கள், குழந்தைகள் முதலியவர்களை நகரத்தைவிட்டு அப்புறப்படுத்தும்படி பாண்டியர் இருதினங்களுக்கு முன்பே கட்டளையிட்டு விட்டார். பெரும்பாலோர் தென்பாண்டி நாட்டிலுள்ள கிராமப்புறங்களுக்குத் தங்களது குடும்பங்களை அனுப்பு வதாக இருந்தனர். மற்ற மூன்று புறங்களிலும் சோழப்படை சூழ்ந்துகொள்ளும் அபாயம் இருந்தது. தென்பாண்டி நாட்டுக்கு அவ்வளவு அபாயமில்லை.

மணப் பெண்ணின் குடும்பமும் தென்பாண்டி நாட்டுக்குத்தான் புறப்படுவதாக இருந்தது. சொக்க நாதருக்குப் பொதிகை மலைச் சாரலை அடுத்த பகுதிகளில் உறவினர்கள் இருந்தார்கள். உய்யவந்தாளை மணமகன் வீட்டில் விட்டுச் செல்ல வேண்டும் என்ற முறை இருந்த தாலும் அவளும் அதை வற்புறுத்தியதாலும், அந்த ஒரு கவலைதான் அவர்களுக்குப் பெரும் கவலையாக இருந்தது. பெண்ணின் தாயார் அதையே மெதுவாகத் திருவுடைத் தேவியிடம் குறிப்பிட்டார்.

''நானும் உங்கள் பெண்ணுமே எங்காவது வெளி யூருக்குத் தான் செல்லவேண்டியதிருக்கும்? எந்த ஊருக்கு என்று இன்னும் அவர் கூறவில்லை'' என்றார் திருவுடைத் தேவி. ''தந்தையையும் மைந்தனையும் போருக்கு அனுப்பிவிட்டு ஒவ்வொரு நாளும் இனி அவர்களுடைய வரவை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்க வேண்டியது தான்'' என்று பெருமூச்சு விட்டார் அவர். தமக்குப் பெண்

குழந்தை இல்லாததால், உய்யவந்தாளின் வரவால் அந்தக் குறை தீர்ந்ததென்று ஒருவகையில் ஆறுதலடைந்தார்.

திருமணக் கோலத்திலிருந்த ஆலவாய் நம்பியின் நினைவு வேறு எங்கேயோ இருந்தது. அது அவனிடம் இல்லை; உய்ய வந்தாளிடமும் இல்லை. அவனுடைய தந்தையார் அவனிடம் இரகசியமாகக் கூறியிருந்த போர் முறைத் திட்டங்களில் அது சுழன்று கொண்டிருந்தது. மிகப் பொறுப்பான பணியை அவனுக்கு விழுப்பரையர் கொடுத் திருந்தார். அதை எண்ணி எண்ணிப் பெருமைப் பட்டான் அவன். மதவெறியைப் போன்றதொரு மயக்க நிலை அவன் உள்ளத்தில் புகழ்வெறியால் நிறைந்திருந்தது. இளவரசன் சுந்தர பாண்டியனுக்கு ஆபத்து உதவியாக மட்டிலும் அவன் போர்க்களத்துக்குச் செல்லப் போவதில்லை. சுந்தரபாண்டிய னாகவே உருமாறி, உடைமாறி, இளவரசுக் கோலத்தில் அவன் போர்க்களம் செல்லப் போகிறான்!

''நம்பி! உன்னுடைய பயிற்சியிலும் சாகசத்திலும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. பகைவர்களைத் திசை திருப்பித் திணறச் செய்வதற்காக இந்த ஏற்பாடு செய்திருக் கிறேன். முழுமூச்சோடு எத்தனை யானைகளை நீ வீழ்த்த முடியுமோ அத்தனை யானைகளை நீ வீழ்த்த வேண்டும்! எத்தனை பகைவர்களை சாய்க்க முடியுமோ அத்தனை பேர்களை நீ சாய்க்க வேண்டும்!'' என்று அவனிடம் கூறியிருந்தார் விழுப்பரையர்.

''இளவரசருக்கு இந்த ஏற்பாடு தெரியுமா ஐயா? அவர் ஏதும் தவறாக நினைக்க மாட்டாரே?'' என்று கேட்டான் ஆலவாய் நம்பி.

''அவரிடம் நான் தக்கபடி கூறி இதற்கு இசையச் செய்திருக்கிறேன். அவரும் உனக்கு அருகில்தான் போர்க் களத்தில் இருப்பார். திடீரென்று ஒரு சமயத்தில் அவரும் தாம் யார் என்பதைக் கூறிக்கொண்டு வெளிப்படுவார். அப்போது பகைவரிடம் ஏற்படும் குழப்பத்தை நீங்கள் இருவருமே பயன்படுத்திக் கொள்வீர்கள்.''

''அவருக்கு ஏதும் ஆபத்து வந்தால் ஆபத்து உதவிகளின் படைத்தலைவனாகிய நான் அவருக்கு அருகிலிருந்து அவரைக் காப்பாற்ற முடியாதே!''

''நீ இல்லாவிட்டால் என்ன? உன் வீரர்கள் எல்லோரையும் அவரைச் சூழ்ந்திருக்கச் சொல்லிவிடு. இதை அவர் விரும்பமாட்டார் என்பதால் அவருக்குத் தெரியாமலே இந்த ஏற்பாடுகளைச் செய்துவிடு. அவரைக் காப்பாற்று வதற்காகத்தான் நீ அவரைப்போல் உருமாறிச் செல்கிறாய்! புரிந்ததா உனக்கு!''

ஆலவாய் நம்பிக்கு சரியாக ஏதும் விளங்காவிட்டாலும் பெருமை மிக்க கடமை ஒன்றில் அவனைத் தந்தையார் ஈடுபடுத்தியிருப்பது மட்டிலும் விளங்கியது. எத்தனையோ வீரர்கள் இந்தப் பணிக்குக் காத்திருக்கும்போது தன்னைத் தேர்ந்தெடுத்த தந்தைக்கு அவன் தனக்குள் வணக்கம் செலுத்திக் கொண்டான்.

காலையில் உய்யவந்தாளைக் கைப்பிடித்தது முதல் அப்போது வரையில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் யாவுமே ஆலவாய் நம்பிக்குக் கனவுலகக் காட்சிகளாகத் தோற்ற மளித்தன. தினந்தோறும் மாலை நேரங்களில் காத்திருந்து கூடிப்பிரிந்த அந்த உய்யவந்தாளை அவன் மறந்தே போய் விட்டான். இப்போது அவன் போர் வெறியன்; கடமைக்காக அவள் கரம் பற்றியவன்.

இரவு வந்தது; நிலவு வந்தது; தனிமை வந்தது. அவளும் வந்துவிட்டாள்.

மலர்கள் பரப்பிய மஞ்சத்தில், மலர்க் கொத்துக்கள் ஊசலாடிய மஞ்சத்தில், சுற்றிலும் நறுமணம் கமழ்ந்த மஞ்சத்தில் அவன் தாமரை இலைத் தண்ணீர் போல் ஒட்டியும் ஒட்டாமலும் அமர்ந்திருந்தான். உச்சிமுதல் உள்ளங்கால் வரையில் தன்னை அலங்கரித்துக் கொண்டு அடிமேல் அடி வைத்து அன்னநடை பயின்று வந்தாள் நங்கை. நாணச் சிவப் பேறிய அவள் முகம் கீழே கவிழ்ந்திருந்தது. மெல்ல

அவனைத் தலைதூக்கிப் பார்த்துவிட்டு மீண்டும் தலை கவிழ்ந் தவாறே அவனருகில் வந்து அமர்ந்தாள் உய்யவந்தாள்.

வயதில் சிறியவளாக இருந்தாலும் எப்படியோ அவனுடைய மனமாற்றம் அவளுடைய நுண்ணுணர்வுக்குப் புலப்பட்டு விட்டது. அதற்காக அவள் கலங்கவில்லை; கவலை கொள்ளவில்லை.

பகல் முழுவதுமே சிந்தனை செய்து வைத்துக்கொண்டு அவனிடம் எப்படிப் பழகவேண்டும் என்ற தீர்மானத்துக்கு வந்திருந்தாள் அவள். ஆலவாய்நம்பி அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தானே தவிர அவளிடம் ஏதும் பேசவில்லை. அவளுடைய உள்ளத்தின் உறுதியை அவன் வேடிக்கை பார்ப்பதுபோல் இருந்தது அந்தக் காட்சி.

அவன் பேசாவிட்டாலும் அவன் பேசாத பேச்சை யெல்லாம் அவன் கண்கள் பேசியதால், தானே முதலில் பேசத் தொடங்கினாள் உய்யவந்தாள்.

''காதலை நீங்கள் பலி கொடுக்கலாம்; அதில் தவறு ஒன்றும் இல்லை. ஆனால் நான் என் கடமையைப் பலி கொடுக்க முடியாதல்லவா? தங்களுக்கு வீரத்திலகமிட்டு அனுப்பி வைப்பதற்காகவே நான் தங்களை மணந்து கொண்டிருக்கிறேன்!''

தேகமெங்கும் புல்லரித்தது ஆலவாய்நம்பிக்கு. அவனை யறியாது ஒரு புன்னகைக் கீற்று அவன் இதழில் மின்னியது.

''தாங்கள் வெற்றியோடு திரும்பி வரவேண்டுமென்று தவம் கிடப்பதற்கு எனக்கு உரிமை வேண்டுமல்லவா?'' என்று கேட்டு அவனுடைய கரத்தைப் பற்றித் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள் அவள்.

''திரும்ப வராமல் வீர மரணம் அடைந்து விட்டால்?'' என்று முதன்முறையாக அவன் வாய் திறந்து பேசினான். அவளால் இந்த முதல் பேச்சைத் தாங்கவே முடியவில்லை. என்றாலும் தனது அதிர்ச்சியைக் காட்டிக் கொள்ளாமல் புன்னகை பூத்தாள்.

''வீர மரணம் அடைந்தால் நானும் உடன் வருகிறேன்! அங்கு மாத்திரம் தங்களைத் தனியாக விட்டுவிடுவேன் என்று நினைத்தீர்களா?''

இப்போது அவன் அதிர்ச்சியடைந்து அவளுடைய மிருதுவான இதழ்களைத் தனது விரல்களால் பொத்தினான்.

''கூடாது; கூடவே கூடாது!'' என்றான். ''என் தாயார் அன்புக்காக ஏங்குவார்கள். என் தந்தையாருக்கோ நாட்டின் கடமைகளைக் கவனிப்பதற்கே பொழுது போதாது. நீதான் அவர்களைக் கவனித்துக் கொள்ள வேண்டும்.''

''அதுமட்டிலும் என்னால் இயலாது'' எனச் சிரித்துக் கொண்டே சிணுங்கினாள் மணப்பெண்.

''இதோ பார்! நான் உன் கணவன். என் விருப்பப்படி தான் நீ இந்தக் கடமையை நிறைவேற்ற வேண்டும்.''

''அப்படி ஒரு நிலை நமக்கு வரவேண்டாம்; திருமணத்தன்று முதலில் சந்திக்கும் நாம் மகிழ்ச்சிகரமாக இந்தப் பொழுதைக் கழிப்போம்.''

''எனக்குப் பின் நீ உயிரோடிருப்பதாக வாக்களித்தால் தான் நான் உன்னிடம் பேசுவேன்!'' சிறு குழந்தையைப்போல் பிடிவாதத்துடன் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

உய்யவந்தாள் அவனை தன் வழிக்குக் கொண்டு வருவதற்காக அவனிடம் கொஞ்சினாள்; குழைந்தாள்; கிள்ளை மொழியில் கெஞ்சினாள். அவன் மடியில் வீழ்ந்து சிணுங்கினாள். அவனோ தன் பிடிவாதத்தைத் தளரவிடவில்லை.

''சரி, தங்களது சித்தம்! நீங்கள் ஒரு வேளை வீர மரணம் எய்தினாலும் நான் தங்களுக்காகவும் தங்கள் அன்னையாருக்காகவும் உயிர் வாழ்கிறேன்.''

ஆலவாய் நம்பியின் ஆனந்தத்துக்கோர் எல்லையில்லை. மடியில் கிடந்தவளை அப்படியே வாரி அணைத்துக் கொண்டு அவளது முகமலரைத் தன் விழிகளால் விழுங்கினான். அவனுடைய லட்சியத்தின் வெற்றித் திருவாகவே அவனுக்கு அவள் காட்சியளித்தாள்.

காதலைப் பலி கொடுத்துவிட்ட இளைஞன்தான் அவன். ஆனால் இப்போது அவன் கணவனாகி விட்டவன். 'கணவனுக்கும் கடமை உண்டு; அதை நீங்கள் பலி கொடுக்க வில்லை' என்று கூறுவது போல் அவளது விழிகள் துடித்தது.

காலம் காலத்துக்குக் கணவனும் மனைவியுமாக வாழ்ந்தால்தான் அது இல்லற வாழ்க்கையா? கணப் பொழுதில்கூட அதன் சிரஞ்சீவித் தன்மையான அனுபவத்தைப் பெற்று விட முடியுமே! அந்த இரவை ஆலவாய் நம்பி பொழுது புலர்ந்தவுடனேயே மறந்துவிடக் கூடும். ஆனால் உய்யவந்தாளுக்கோ அவள் உயிருள்ள வரையில் மறக்க முடியாத சிரஞ்சீவித் தன்மையுள்ள இரவு அது! பொழுது புலர்ந்தது.

வீரன் விடைபெற்றுக் கொண்டு களத்துக்குப் புறப்பட்ட போது உய்ய வந்தாள் வீரத் திலகத்துடன் அவன் எதிரில் வந்தாள். அதற்குள் எத்தகைய தீவிரமான மாற்றம் அவளுடைய உருவத்தில்! வீரத் திலகமிட்ட அவளை அவன் பக்தி நிறைந்த கண்களோடு காணத் தொடங்கினான். அவள் அவனுக்குக் கொற்றவைத் தேவியாகத் தோற்றமளித்தாள்!

## 16. வேங்கையின் பாய்ச்சல்

[redacted]

**சோ**ழப் பெரும்படை வந்து புகுந்து விட்டது பாண்டிய நாட்டின் எல்லைக்குள்!

பொங்கி எழும் பிரளயக் காலத்துக் கடல் அலை என்று அதன் காலாட் படையைச் சொல்வதா? வீறுகொண்டு வீசியடிக்கும் கொடும் புயல் என்று அதன் குதிரைப் படையைச் சொல்வதா?– சேரநாட்டு மலைகள் அனைத்தும் ஒன்றாய்த் திரண்டு வெள்ளத்தில் புரண்டு வந்தது'

என்று அதன் யானைப் படையைச் சொல்வதா?... பைந்தமிழ் வளர்த்த பாண்டிய மண்டலத்தைக் கடல்கோள் கொள்ள வந்த காலனே போல் மூன்றாம் குலோத்துங்க சோழர் முளைத்தெழுந்து விட்டார்.

எங்கும் இதுவே பேச்சு; 'சோழப் பெரும்படை சூறாவளிபோல் வந்து விட்டதாமே?'

எங்கும் இதுவே மூச்சு; 'வழியில் ஒன்றையும் விட்டு வைக்காமல் அது நிர்மூலமாக்கிக் கொண்டு வருகிறதாமே!'

பாண்டிய நாட்டின் வடகிழக்கு எல்லையிலிருந்த மட்டியூரிலும் கழிக்கோட்டையிலும் சோழப் பெரும் படைக்குக் கடுமையான எதிர்ப்பு இருந்தது. பரம்பரை வீரர் களான மறவப் படையினரும் ஏழகப் படையினரும் கடைசி மூச்சு உள்ள வரையிலும் போராடத் துணிந்தனர். குலசேகர பாண்டியர் மதுரை மாநகரத்தின் பாதுகாப்பைச் சுந்தர பாண்டியனிடம் விட்டுவிட்டுத் தாமே வடக்கு எல்லைக்கு வந்திருந்தார்.

குன்றின் உச்சியிலிருந்து அவர் பகைப் படையைக் கண்ணோட்டம் விட்டபோதுதான் அவருக்குக் குலோத் துங்கரின் நோக்கம் புரிந்தது. அவர் பாண்டியநாட்டை வெற்றி பெற வரவில்லை; வேருடன் பற்றிக் களைய வந்திருக்கிறார். அடி வானத்தை நெடுந்தரை தொடும் வரையிலும் ஒரே வீரர்கள்! வீரர்கள்! வீரர்கள்!

ஏழகப் படையினரும் மறவப் படையினரும் ஏறுகளெனவே பகைவர்கள் மீது தாவினார்கள். புதிதாகப் படையில் சேர்ந்த லட்சக்கணக்கான வீரர்களும் தங்கள் வாள்வீச்சையும் வேல் வீச்சையும் நிறுத்தினார்களில்லை. ஆனால் காற்றைக் கிழித்துக் கடுமழையெனப் பொழிந்தன, சோழ நாட்டு வீரர்களின் கூரம்புகள். யானைக் கூட்டமோ, வானத்தில் திரண்டு வந்த கார்மேகத்திரள் மண்ணுக்கு இறங்கி வந்தது போல் அவர்கள் மீது பாய்ந்து அழித்தது. முதல் நாள் போரிலேயே முக்கால் பகுதிப் பாண்டிய வீரர்கள்

வீரசுவர்க்கம் புகுந்துவிட்டனர். அதற்குள் இரவு வந்ததால் போர் நிறுத்தப்பட்டது.

மறுநாள் பொழுது புலர்ந்தவுடனேயே எல்லைப்போர் முடிந்துவிடும் போல் தோன்றியது. குலசேகரப் பாண்டியர் படுகளத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டுப் பாசறைக்குள் புகுந்தார். 'மதுராந்தகம் நடக்கப் போகிறது! மதுராந்தகம் நடக்கப் போகிறது' என்று அவர் மனம் அடித்துக் கொண்டது. எஞ்சியிருக்கும் வீரர்களின் எண்ணிக்கை அவருக்கு நம்பிக்கை தருவதாக இல்லை. படைத்தலைவர்களை அழைத்து வைத்துக் கொண்டு மறுநாள் போர் பற்றிப் பேசினார். தம்முடைய முடிவை அவர் நிச்சயப்படுத்திக் கொண்டதால், கூடுமானால் சுந்தரபாண்டியனை மதுரையில் வீழ்ந்து விடாமல் பார்த்துக் கொள்ளச் சொன்னார்.

''அவனிடம் சொல்லுங்கள்; போரில் வீர சுவர்க்கம் அடைவது மட்டும் வீரனுக்கு அழகில்லை! மறு போர் நடத்தி வெற்றி பெறுவதற்காகத் தன்னைக் காத்துக் கொள்வதும் வீரந்தான் என்று சொல்லுங்கள்!''

நள்ளிரவில் திடீரென்று குலசேகர பாண்டியரின் பாசறை சோழ நாட்டு வீரர்களால் முற்றுகையிடப்பட்டது போல் தோன்றியது. போர் நெறியோ வழக்கமோ இல்லாத இந்த வஞ்சகத்தை நினைத்துப் பார்க்கக்கூட அவருக்கு நேரமில்லை; மளமளவென்று என்னென்னவோ நடந்து விட்டன. வீரர்கள் விழித்துக் கொண்டு போர் தொடுப்பதற்குள் அவருடைய பாசறையிலிருந்து அவர் கொல்லப்பட்டு விட்டாரா? சிறை பிடிக்கப்பட்டு விட்டாரா? எல்லாமே இருளில் நடந்து முடிந்து விட்டதால் யாருக்கும் ஏதும் விளங்கவில்லை.

கருக்கிருட்டு நேரத்தில் மறவப்படைத் தலைவர் மழவச் சக்கரவர்த்தி தம்முடைய படை வீரர்களுக்குப் பின் கண்டவாறு கட்டளையிட்டார்:

''உடனடியாக நாம் காடுகளுக்குள் புகுந்து குறுக்கு வழியாக மதுரைக்குச் செல்லவேண்டும். அரணுக்குக் காவலாக இருந்து மதுரையைக் காக்க முயற்சி செய்வதுதான் நமக்குள்ள ஒரே வழி. அரண் மீதிருந்தால் நாம் பகைவர் களுக்கு அதிகமான அழிவைக் கொடுக்க முடியும். வாருங்கள், இளவரசர் சுந்தரபாண்டியரோடு சேர்ந்து கொள்வோம்!''

குலசேகர பாண்டியரைப் பற்றி அவர் ஏதும் செய்திகள் கூறக்கூடும் என்று எதிர்பார்த்தார்கள் வீரர்கள். ஆனால் அவரோ ஏதும் கூறவில்லை. தலைவரிடம் குறுக்கிட்டுப் பேசத் துணியாத வீரர்கள் அவரது கட்டளைப்படியே காட்டுக்குள் புகுந்து விரைந்தனர்.

மறுநாள் பகலில் போரை எதிர்பார்த்திருந்த சோழப் பெரும்படை, பாண்டியர்கள் ஓடி ஒளிந்து விட்டார்கள் என்று குதூகலம் கொண்டது. அவர்களுடைய ஆனந்தத்திற்கோர் எல்லை இல்லை.

''நீங்கள் ஆனந்தப்பட வேண்டிய நாள் இன்னும் வரவில்லை!'' என்று உறுமினார் குலோத்துங்கர். ''பாண்டிய நாட்டையே நீங்கள் அழித்து ஒழிப்பதற்காக வந்திருக்கிறீர்கள் என்பதை மறக்கவேண்டாம்! முன்னேறிச் செல்லுங்கள்! தஞ் சைப் படையும் உறையூர்ப் படையும் மதுரையை வளைத்துக் கொள்வதற்கு முன்னால் நாம் அங்கே இருக்க வேண்டும்!''

வீரர்களைப் படுகளத்திலே பலி கொடுத்த பெண் களுக்கு அவர்களுடைய உடல்களைத் தேடி அழுவதற்குக் கூட நேரம் கொடுக்கவில்லை சோழப் படையினர். புயலெனச் சீறிச் சாடும் குதிரைப் படையினர் நாடு நகரமெல்லாம் புகுந்து வீடுகளைத் தீயிட் டுப் பொசுக்கத் தொடங்கினர். திரும்பிய பக்கமெல்லாம் ஒரே தீ!

பயத்தின் பீதியால் தறிகெட்டு நாலா பக்கங்களிலும் சிதறியோடும் பெண்களின் கூக்குரலும் குழந்தைகளின் அழுகுரலும் அவர்களுக்கு எக்களிப்பையே தந்தன. கூரைகள், வைக்கோல் போர்கள், நெற்குவியல்கள், ஓடிச் சிதறும் மனிதர்களின் உடைகள்— எங்குமே தீச்சுடர்கள் துடித்தன.

வீடு வாசல்களைத் துறந்துவிட்டுக் காடுகளை நோக்கி ஓடி ஒளிந்தவர்கள் பலப் பலர்; கன்று காலிகளை விரட்டிக் கொண்டு குன்றுகளின் சரிவுகளில் மறைந்தவர்கள் பலப் பலர்; பயத்தின் பதற்றத்தால் நினைவுச் சக்தியை இழந்துவிட்டுக் குதிரைகளின் குளம்படியிலேயே பட்டு வீழ்ந்தவர்கள் பலப்பலர்.

காலாட் படைப் பெருவெள்ளம் இரத்த ஆற்றைப் பெருக்கெடுத்தோடச் செய்தவாறு பாய்ந்து மதுரையை நோக்கி வந்தது. வழியெங்கும் கொலை, கொள்ளை, சூறை! இரும்பு உலக்கைகளால் எஞ்சி நின்ற வீடுகளைத் தரைமட்டமாக்கிக் கொண்டு வந்தது அது. நீர்நிலைகள் தூர்க்கப்பட்டன. நெற்கழனிகள் துவைக்கப்பட்டன. குளிர் தரும் சாலை மரங்கள் வெட்டி வீழ்த்தப்பட்டன.

யானைப் படை இரத்தச் சேற்றில் மனித உடல்களைப் போட்டுத் துவைத்துக் கொண்டே முன்னேறியது. மேடுகள், பள்ளங்கள், வீடுகள், வாசல்கள் எல்லாவற்றையுமே சம தரையாக்கி இரத்தத்தாலும் நிணத்தாலும் பூசி மெழுகியவாறு நடந்தது அது. ஊர்களெங்கும் துண்டிக்கப்பட்ட சிரங்கள், கைகள், கால்கள், உடலங்கங்கள்!

''ஒரு நாள்கூட எதிர்த்து நிற்க முடியாத பாண்டியப் பதர்களா தன்னுரிமை பெற்றுவிட்டதாக எமக்கு ஓலை அனுப்பத் துணிந்தன!'' என்று வெறுப்போடு கொக்கரித்தார் குலோத்துங்கர். சுந்தர பாண்டியனின் துடுக்குத் தனத்தைப் பற்றி அவர் ஒவ்வொரு படைப் பிரிவின் தலைவரிடமும் கூறியிருந்தார். அவனை உயிருடனோ அல்லது பிணமாகவோ கொண்டு வரும் வீரர்களுக்குத் தனியாகப் பரிசுகள் வழங்கப் படும் என்று அவர் அறிவித்திருந்தார்.

மட்டியூர், கழிக்கோட்டை முதலிய போர்க் களங்களுக்குச் சுந்தரபாண்டியன் வரவில்லையென்பதும், அவன் மதுரையைக் காத்து நிற்பதும் அவருக்குத் தெரிந்து விட்டன. ஆகவே வீரர்களின் ஆர்வமெல்லாம் இப்போது மதுரையின் மீதும் சுந்தர பாண்டியன் மீதுமே இருந்தன.

சக்கரவர்த்தியிடம் பரிசு பெறும் வாய்ப்புக்காக ஒவ்வொருவருமே துடித்துக் கொண்டிருந்தனர்.

"எங்காவது இளவரசன் ஓடி ஒளிந்துவிட்டால் என்ன செய்வது?" என்று சக்கரவர்த்தியிடம் கேட்டார் பல்லவராயர்.

"அவன் அப்படியே ஒளிந்துகொள்ளக்கூடியவன் என்று தோன்றவில்லை. மதுரைப் போரும் நமக்கு அவ்வளவாக எளிதாக இருக்காது" என்றார் சக்கரவர்த்தி. இளமைத் துடிப்பும் வீரமும் உள்ள தலைவனைக் கொண்ட போர்க்களத்தின் தனி ஆற்றலை அவர் நன்கு உணர்ந்தவர். ஆகவே மதுரையைக் கைப்பற்று வதற்கான பலவகை வழிகளை அவர் பல்லவராயரிடம் விளக்கலானார்.

சக்கரவர்த்தியின் படைகள் மதுரையின் எல்லைக்கு வந்தபோது, தஞ்சையிலிருந்தும், உறையூரிலிருந்தும் வந்த சோழப் படைகள் வைகை நதியின் வட கரையில் காத்திருந்தன. மதுரையில் புற மதிலைத் தொலைவிலிருந்து உற்று நோக்கினார் சக்கரவர்த்தி. அதன் உச்சியில் கயல் பொறித்த பாண்டியரின் பட்டுக் கொடி பறந்தது.

# 17. புலவர் நெஞ்சில் வாழ்வோன்



பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்து மதுரை மாநகரத்தின் கட்டுக்காவலையும், அதன் அரண், அகழ், போர்க் கருவிகள், ஆயுதக் கிடங்குகள் முதலியவற்றையும் நமது நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தில் அற்புத ஓவியமாகத் தீட்டியிருக்கிறார் கவிஞர் இளங்கோவடிகள்.

குலசேகர பாண்டியர் காலத்தில் அவருக்குப் பெரும் படை யைத் திரட்டும் உரிமை இல்லாவிட்டாலும் தலை நகரத்தையாவது பாதுகாக்க வேண்டுமென்பதற்காக அவர்

எவ்வளவோ முன் னேற்பாடுகளைச் செய்து வைத்திருந்தார். அமைச்சர் சயங்கொண்ட சோழவல்லபருக்கேகூடத் தெரியாமல் ஏழகப் படைத் தலைவர் அழகிய பெருமாளைக் கொண்டு அவர் இரகசியமாகப் பல ஆயுதங்களைச் சித்தப்படுத்தி வைத்திருந்தார்.

நெடிதுயர்ந்த புற மதில், அதை அடுத்த அகழ், அதை அடுத்த காவற்காடு எங்குமே பகைவர்களுக்கான அபாயங்கள் பதுங்கியிருந்தன. மதிலின் மேல் மறைவாக விற்பொறிகள், கற்களை வேகமாக உந்தி உமிழும் கவண் கருவிகள், கொப்பரைகள், கற்கள் நிறைந்த உடைகள், தீப்பந்தங்கள் கொளுத்திக் கொள்ளும் அடுப்புகள், இரும்புத் தூண்டில்கள், சுருக்குக் கயிறுகள், வேல்கள், கூரம்புகள், இரும்பு உலக்கைகள் இன்னும் எத்தனை எத்தனையோ வகை போர்க் கருவிகள் சோழப் பெரும் படையை வரவேற்கக் காத்திருந்தன. இவ்வளவிலும் பயிற்சி பெற்ற வீரர்கள் விழிப்போடு மதிலைக் காத்து நின்றனர்.

வடக்கு எல்லையிலிருந்து பின் வாங்கிக் காடுகள் வழியே வந்த பாண்டிய வீரர்களும் மதுரையை அடைந்து விட்டனர். படைத்தலைவர்களோடு சேர்ந்து விழுப்பரையர் நாலா பக்கங்களிலும் குதிரையில் பறந்து சென்று காவல் வீரர்களுக்குக் கட்டளைகள் இட்டு வந்தார். போர் தொடங்கியவுடன் இளவரசன் சுந்தரபாண்டியன் தலைமை தாங்கிப் படை நடத்தப் போவதாகப் படைத் தலைவர்கள் வீரர்களிடம் கூறி உற்சாகமூட்டி வந்தனர்.

மதில்கள் மேலிருந்த வீரர்களுக்குத் தொலைவில் தெரிந்த புழுதிப்படலமும், தீப்பற்றி எரியும் வீடுகளும், கடல் போன்ற பேரொலியும் பகைவர்களின் வருகையை அறிவித்துவிட்டன. வைகையின் வெள்ளத்தைத் தாண்டித் தோணிகளிலும் தெப்பங்களிலும் கட்டு மரங்களிலும் சோழர்கள் ஒருபுறம் வரத் தலைப்பட்டார்கள். கிழக்கு, மேற்கு, வடக்கு ஆகிய மூன்று திசைகளிலிருந்தும் படைகள் குழுமிக் கொண்டிருந்தன.

''நாம் எதிர்க்கவிரும்பாதவர்கள் போல் புறமதில்களின் வாயில்களை அடைத்து விடுவோம். முற்றுகையிட்டோ மதிலைத் தகர்த்தோ அவர்கள் நகருக்குள் நுழைய முயற்சிகள் செய்யட்டும்'' என்றார் விழுப்பரையர்.

''நம்மைக் கோழைகள் என்றும் மதிலுக்குள், பதுங்கி வாழப் பார்க்கிறோம் என்றும் எள்ளி நகையாடு வார்களே?'' என்று கவலையோடு கேட்டார் மழவச் சக்கரவர்த்தி.

''எள்ளி நகையாடட்டுமே! அவர்களை நாம் எப்படியும் களைக்கச் செய்யவேண்டும். நம்மால் மதுரையைக் கடைசி வரையில் காப்பாற்ற முடியாவிட்டாலும் அவர்களுக்கு மிகப் பெரிய சேதத்தைக் கொடுத்து விட்டுத்தான் மதுரையைக் கொடுக்கவேண்டும்.''

குலோத்துங்க சோழச் சக்கரவர்த்திக்கு எப்போதுமே முற்றுகை நடத்திக் காத்திருந்து பழக்கமில்லை. கோட்டைக் குள்ளிருப்போரைப் பட்டினி போட்டுச் சிறிதுசிறிதாக வதைப் பதிலும் அதுவரையிலும் செயலற்ற வகையில் வெளிப்புறத்தில் படைகளை வைத்திருப்பதிலும் அவருக்கு நம்பிக்கை கிடையாது.

காவற் காட்டை அழிக்க யானைப் படையை ஏவி விட்டார். காவற்காட்டின் கருவேலம் முள்ளை வெட்டித் தள்ள வீரர்கள் முனைந்தனர். அகழைத் தூர்க்கும் வேலையிலும் ஏணிகள் வைத்து மதிலின்மேல் ஏறுவதிலும் பல்லாயிரக் கணக்கானவர்கள் ஏவப்பட்டனர். கோட்டை வாயிலைத் தகர்ப் பதற்கான மரத் தூண்களோடு யானைகள் முடுக்கப்பட்டன.

மதிலைச் சுற்றிலும் வெளிப்புறத்திலும் வெற்றிக் களிப் போடும் வீர வெறியோடும் ஆயிரமாயிரம் சோழ நாட்டு வீரர்கள் அதைத் தகர்க்க முற்பட்டிருந்த அதே வேளையில்...

மதில்மேல் மறைந்து நின்ற பாண்டியப் படை வீரர்களின் கைக் கொடிகள் அசைந்தன.

விர் விர்ரெனக் காற்றில் பறந்து மழையாகப் பொழிந் தன கவண் கற்கள். விற்பொறிகளிலிருந்து விண் விண் ணென்று நாண் தெறிக்கச் சென்றன கூரம்புகள்.

இரும்புக் கொப்பறைகள் பழுக்கக் காய்ச்சிய எண்ணெயைக் கவிழ்த்து விட்டன.

தீப்பந்தங்கள் யானைக் கூட்டத்தின்மீது தீமாரியாகப் பொழிந்தன.

வைகையாற்று மணற்குவியல் கூடை கூடையாகக் கொட்டப் பெற்றுப் பகைவர்களின் கண்களை அவித்தன.

சோழச் சக்கரவத்தி தம் வாழ்நாளிலேயே கண்டறியாத எதிர்ப்பு! திடீரென்று யானைகள் மிரண்டு அவர்களிடையே பாய்ந்து அழிக்கத் தொடங்கின. வீரர்களிடையே குழப்பமும் கூச்சலும் மிகுந்தன. வாயிற் கதவுகளைத் தகர்க்க வந்த யானைகள் தீச்சூடுபட்டுப் பிளிறிக் கொண்டு திரும்பின; மதில் மீது நின்ற பாண்டியப் படையினர் தங்களது வீரசாகசங்களால் பழிக்குப்பழி வாங்கத் தொடங்கி விட்டார்கள்.

திடீரென்று கோட்டை மதிலுக்குள் வாழ்த்தொலி எழும்பியது. சங்குகள் ஒலித்தன; முரசங்கள் முழங்கின; ஊது கொம்புகள் ஓங்காரம் செய்தன.

''வாழ்க இளவரசர்! வாழ்க சுந்தரபாண்டியர்!''

திமுதிமுவெனப் பாய்ந்து வந்த ஆயிரக்கணக்கான குதிரை வீரர்களுக்கு மத்தியில் சுந்தரபாண்டியனின் உருவம் தென்பட்டது. வெண்புரவியில் வாளும் வேலும் கேடயமு மாக அவன் சூறாவளியெனச் சீறி வந்து கொண்டிருந்தான்.

விழுப்பரையரின் விழிகள் அவனையே முதலில் உற்று நோக்கின. பிறகு சற்றுத் தொலைவில் செம்புள்ளிகள் நிறைந்த மற்றொரு வெண் புரவியில் வந்து கொண்டிருந்த மற்றோர் இளைஞனையும் ஊடுருவின. ஆபத்துதவிகள் கூட்டத்தையும் அவர் அளவெடுத்து விட்டார்.

இளவரசன் சுந்தர பாண்டியனின் பொன் முடியும் உடைகளும் கதிரொளியில் தகதகவென்று பிரகாசித்தன. முகத்தின் கீழ்ப் பாகத்தை மட்டிலுமே அவன் பூந்துகிலால் இலேசாக மறைத்திருந்தான்.

கோட்டை வாயில்கள் படீரென்று திறக்கப்பட்டன. தேக்கப்பட்ட வெள்ளம் அணைக்கால் வழியே குமுறிப் பாய்வது போலக் குபுகுபுவெனப் பாய்ந்தது மதுரைப் பெரும்படை. குதிரைப் படையினரைப் பின்பற்றிக் காலாட் படைகளும் யானைப் படைகளும் கோட்டைக்கு வெளியே வந்து விட்டன.

கடலோடு கடல் பொருதுகிறதா? மேகத் திரளோடு மேகத் திரள் மோதுகிறதா? மலைகளோடு மலைகள் முட்டிச் சிதறுகின்றனவா?

சோழர்களின் குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்ட பாண்டியர்கள் அது தெளிவுபெறுவதற்கு முன்பே எத்தனை தலைகளைத் தரையில் உருளச் செய்ய முடியுமோ அத்தனை தலைகளை உருளச் செய்தனர். சோழநாட்டு மதக்கரிகளின் மத்தகம் பிளந்தனர். குதிரைகளைக் கொன்று குவித்தனர். பல்லாயிரம் மின்னல்கள் நெளிந்து பல்லாயிரம் இடிகள் ஒரு நாழிகைப் பொழுதுக்குள் வீழ்ந்தால் எப்படியிருக்கும்? அந்தச் செயலை அவர்கள் செய்து தீர்த்து விட்டார்கள்.

தமது யானையின்மீது நின்று கவனித்த குலோத்துங்கரின் விழிகளில் குருதி பொங்கியது. யானைத் தந்தங்கள் தீப்பொறி பறக்கவிட்டு முறிந்துபோவதையும், குதிரைகள் சோழநாட்டு வீரர்களின் சடலங்களோடு திசை தடுமாறி ஓடுவதையும், இரத்த ஆற்றின் இரு கரைகளென வீழ்ந்து பட்ட உடல்கள் குவியத் தொடங்குவதையும் அவரால் தாங்க முடியவில்லை.

இரண்டே இரண்டு இளைஞர்களின் சாகசங்கள் அவரது விழிகளில் கூர்வேலாய்ப் பாய்ந்தன.

சிம்மமெனக் கர்ச்சனை புரிந்து கொண்டு உரத்த குரலில் குமுறினார் சக்கரவர்த்தி. தமது கரத்தால் சுந்தர பாண்டியனைச் சுட்டிக் காட்டினார்.

வீரப் பரிசுக்காகப் போட்டியிட்ட சோழநாட்டு வீரர்கள் பலர் திடீரென்று அவனைச் சூழ்ந்து கொண்டனர். சிங்கம்

ஒன்றை வேட்டையாடிச் சிதைக்க இரண்டாயிரம் வெம்புலிகள் பாய்ந்தது போல் அவர்கள் பாய்ந்தனர்; வெள்ளைப் புரவி வீரனின் மீது ஒரே சமயத்தில் நூறுவேல்கள் பாய்ந்தன; ஆயிரம் அம்புகள் பொழிந்தன. பத்துப் பேர்கள் தங்களது வாட்களை உருவி அவன்மேல் விழுந்து அவனைப் பிளந்தனர்.

பாண்டியப் படை பதறித் தவித்தது.

அடுத்தாற்போல் செம்புள்ளிகள் நிறைந்த புரவியில் இருந்த வீரன் சீறி எழுந்தான். எழுந்து என்ன பயன்? அவனது புரவியின் கழுத்தும் துண்டிக்கப்பட்டது. மார்பெங்கும் கூரம்புகள் குத்திட்டு நின்றன. அவனைக் காக்க முனைந்த ஆபத்துதவிகள் பலரும் தரையில் சரிந்து விழுந்தனர்.

கடைசியில் அவனும் வீழ்ந்தான் இரத்த வெள்ளத்தில்.

வெள்ளைப்புரவியின் மீதிருந்த இளவரசன் சுந்தர பாண்டியனை வீழ்த்திய சோழப் படையினருக்கு அவனுடைய உடல் உறுப்புக்களில் ஒன்றுமே முழுமையாகக் கிடைக்கவில்லை. பரிசில் பெறுவதற்காக அவரவர்கள் அவனைப் பருந்துகளாய்ப் பிய்க்கத் தொடங்கினார்கள்.

விழுப்பரையரின் புரவி எப்படியோ அங்கு வந்தது. அவரது விழிகள் அவரையும் மீறி நீரைச் சொரிந்தன. வீழ்ந்துபட்டவனின் முகமெங்கே, விழியெங்கே, திண்தோளெங்கே, கரமெங்கே, விரலெங்கே, காலெங்கே, முடியெங்கே , அடியெங்கே? அவனை எப்படித் தேடுவது? எங்கு தேடுவது? யாரிடம் வினவுவது?

***அரும் கடன் இறுத்த பெரும் செயலாளனை**
**யாண்டுளனோ என வினவுதி ஆயின்**
**உடம்பும் தோன்றாது உயிர் கெட்டன்றே...**
**நாநவில் புலவர் வாயுளானே**

''அவன் செந்நாப் புலவரின் சிந்தனையிலே இருப்பான்! சிந்தனையிலே இருப்பான்! தெய்வத் தமிழில் அவன் என்று மிருப்பான்! என்றுமிருப்பான்'' என்று சிந்தை

*புறநானூறு, புலவர் பெருங் கடுங்கோ.

தடுமாறித் தமக்குள்ளே கூறிக்கொண்டார். புறநானூற்றில் அவர் படித்த அந்தப் பாடலே அப்போது காரணை விழுப்பரையருக்கு அருமருந்தாக இருந்தது.

திடீரெனச் செம்புள்ளிக் குதிரையினின்றும் வீழ்ந்த இளைஞனின் உடலைச் சுமந்து கொண்டு எங்கோ சிட்டெனப் பறந்தார் அவர். அந்த இளைஞனின் உடலில் உயிர் இருக்கிறதா இல்லையா என்று பார்க்கக்கூட அவருக்குப் பொழுதில்லை.

அதேசமயம் சோழப் பெரும் படை மதுரைக்குள் புகுந்து விட்டது தனது தீப்பந்தங்களுடன்.

சோழ நாட்டு இளவரசன் இராஜராஜன் தனது வீரர்கள் மதுரைமா நகருக்குள் புகுந்து அழிவு வேலைகள் செய்யத் தொடங்கியவுடன், தன்னுடைய அந்தரங்கக் காவலர்களிடம், ''எங்கே இருக்கிறது அந்தச் செருக்கெடுத்த பெண்ணின் மாளிகை?'' என்று கேட்டான்.

கயலைக் கொத்தி விழுங்கக் கழுகு பறந்து விட்டது.

## 1௨. தனயனும் தந்தையும்



**பா**ண்டிய நாட்டின் எல்லையில் மட்டியூரில் போர் நிகழ்ந்த போது இரவோடு இரவாகக் குலசேகர பாண்டியரின் பாசறைக்குள் சோழ நாட்டு வீரர்கள் புகுந்து விட்டார்களல்லவா? அது சம்பந்தமான எல்லா நிகழ்ச்சிகளுமே மளமளவென்று நடந்தேறி விட்டன. பாசறைக்குள் எரிந்து கொண்டிருந்த விடிவிளக்கு திடீரென்று அணையவே, படுக்கையில் சிந்தனையோடு புரண்டு கொண்டிருந்த குலசேகர பாண்டியர் சட்டென்று திரும்பி உடைவாளை உருவ முயன்றார். பத்துப் பதினைந்து பேர்கள் அவர் மேல்

பாய்ந்தனர். அவரை இறுகக் கட்டிப் பிணைத்தனர்; வெளியில் சித்தமாகக் கிடந்த சிவிகைக்குள் கிடத்தினர். பின்னர் எங்கேயோ தூக்கிச் சென்றனர்.

இரவில் போர் செய்வதில்லை என்ற நெறியைக் கூடச் சோழ நாட்டார் மறந்து விட்டார்களோ என்று மன முடைந்து வருந்தினார் பாண்டியர். மறுநாள் போரில் எப்படியும் தாம் உயிர் துறப்பது திண்ணம் என்று அவருக்குத் தோன்றியது; பகைவரிடம் சிறைப் பட்டுச் சரணடையாமல் அதை வீர மரணமாகவே முடித்துவிடத் திட்டமிட்டிருந்தார். போரில் உயிர் நீத்தால் தம் உடலை மட்டும் பகைவர் கைபடாமல் எடுத்து வந்து எரித்துவிடும் படி தமது படைத்தலைவர்களிடம் அவர் தெரிவித்திருந்தார். முடிந்த வரையில் தலை நகரத்தையும் இளவரசன் சுந்தர பாண்டியனையும் காப்பாற்றுவதற்கு முயற்சி செய்யும்படி கூறி அதற்கான ஆலோசனைகள் சொல்லியிருந்தார்.

ஆனால் எதிர்பாராத வகையில் இரவு நேரத்தில் பல செயல்கள் கனவில் நடப்பவைபோல் நடந்துவிட்டன. சோழ வீரர்கள் புகுந்தபோது பாசறைக் காவலர்களுடனும் ஆபத்துதவி களுடனும் கைகலப்பு நேர்ந்திருக்கவேண்டுமே! அத்தகையதொரு குழப்பமோ, கலவரமோ நடந்தது போன்ற சத்தம் ஏதும் அவருக்குக் கேட்கவில்லைஅவர் விழித்துக் கொண்டுதான் இருந்தார்.

சிவிகை ஒரு மலைக்காட்டுக்குள் சென்றது. சிவிகை தூக்கிகள் மிகவும் சிரமப்பட்டு ஒரு குன்றின் மேல் ஏறினார் கள். ஒளியை உமிழும் சூழ்ந்துக் கழிகளும் மிகுதியாக இல்லை. சிவிகை தூக்குவோரைத் தவிர இருபது முப்பது வீரர்கள், கால் நடையாகவே அதன் முன்னும் பின்னும் சென்றனர். அவர்கள் தாங்கிச் சென்ற ஆயுதங்களின் பளபளப்பை மட்டும் பாண்டியரால் காண முடிந்தது. அவர்கள் எங்கு செல்கிறார்கள்? எதற்காகச் செல்கிறார்கள்?

காடுகள் சூழ்ந்த மலையின் மீதுள்ள குகையின் அடிவாரத்துக்குச் சிவிகை வந்தது. அதைக் கீழே வைத்து

விட்டு, தூக்கி வந்தவர்களை விலகி நிற்குமாறு சைகை செய்தான் ஒருவன். பிறகு தன் உடைவாளை உருவிக் கொண்டு சிவிகைக்குள்ளிருந்த பாண்டியரை நோக்கி வந்தான். பாண்டியர் கலங்கவில்லை. மரணத்தை ஏற்பதற்குச் சித்தமாகிவிட்டார். ஆனால் அந்த வீரனுடைய கூர்வாளோ அவர் மார்பில் பாய்வதற்குப் பதிலாக அவருடைய கட்டுகளை அறுத்தெறிந்தன. அந்த வீரன் திடீரென்று அவர் பாதங்க ளிரண்டையும் பற்றிக் கொண்டு கீழே வீழ்ந்தான்.

சிவிகையிலிருந்து வெளியே வந்த பாண்டியர் இருளுக்குப் பழக்கப்பட்டுவிட்ட கண்களால் சுற்றிலும் நோக்கினார். விண்மீன்களின் ஒளியில் அத்தனை வீரர்களும் அவருக்குச் சிரம் தாழ்த்தி வணக்கம் தெரிவிப்பது தெரிந்தது. களத்தில் வீழ்த்தப்பட்ட சோழநாட்டுப் படையினரின் இரத்தம் தோய்ந்த உடைகளை எடுத்து உடைமாற்றம் செய்து கொண்டிருந்தார்கள் அவர்கள்.

''எழுந்திரு அழகிய பெருமாள்!'' என்று மெல்லத் தம் காலடியில் வீழ்ந்து கிடந்த ஏழகப் படைத் தலைவரின் தோளைப் பற்றினார் பாண்டியர். அழகியபெருமாள் ஏழகப் படையின் தலைவர் மட்டிலுமல்ல; பாண்டியரின் மைத்துனரும்கூட.

''தலைவர் இல்லாத நாடு மீகாமன் இல்லாத மரக்கலம் போன்றது. நாளையப் போரில் நாங்கள் தங்களைப் பறிகொடுத்து விட்டால், பிறகு இந்த நாட்டுக்கு வழி காட்டுவதற்கு யார் இருக்கிறார்கள்? ஆகவேதான் இந்தக் குற்றம் புரியத் துணிந்தேன். அரசர் என்னையும் இந்த வீரர்களையும் மன்னித்தருள வேண்டும்'' அழகிய பெருமாளின் குரலில் கண்ணீர் குமுறியது.

மலைச் சரிவில் உயரத்திலிருந்த குகையை நோக்கி அரசரை அழைத்துக்கொண்டு நடந்தார் அழகியபெருமாள். குகைக்கு வலது புறத்தில் சுனை ஒன்று இருந்தது. அதைச் சூழ்ந்துக் கழியின் ஒளியால் சுட்டிக் காட்டிவிட்டுக் குகைக்குள்

நுழைந்தார். மறைந்து வாழ்வதற்கேற்றவாறு அதன் வெளி வாயிலை ஒரு பெரும் பாறை மறைத்துக் கொண்டு நின்றது.

பாண்டியரின் மனம் அதற்குள் மறைந்து வாழ்வதற்கு எளிதில் உடன்படவில்லை. ஆனால் அழகிய பெருமாள் மிகவும் உறுதியோடும் பிடிவாதத்தோடும் அவரிடம் மன்றாடினார்.

''சோழப் பெரும்படை இந்நாட்டை அழிக்க வந்திருக்கிறதே தவிர, ஆளவரவில்லை. அதனால் இனிமேல் நாட்டை ஆட்சி செய்யவும் முடியாது'' என்றார் அழகிய பெருமாள். ''நம்முடைய ஒற்றர்கள் கொண்டு வந்திருந்த செய்தியிலிருந்து ஓர் உண்மை நன்கு புலனாகிறது. எப்படியும் தங்களையும் இளவரசரையும் கொன்றுவிட்டால் இனி நெடுங்காலத்துக்கு நாடு தலைதூக்காது என்று அவர்கள் திட்ட மிட்டிருக்கிறார்கள். பகைவரின் திட்டம் வெற்றி பெறாமல் இருப்பதற்காகவாவது தாங்கள் சிறிது காலம் இங்கு மறைந்து வாழத்தான் வேண்டும்'' என்றார் அழகிய பெருமாள்.

''சுந்தரபாண்டியன்...?'' என்றார் பாண்டியர்.

''இப்போதே நான் எல்லையில் எஞ்சியுள்ளபடைகளை அழைத்துக்கொண்டு மதுரைக்குத் திரும்புகிறேன். வீரர்கள் இங்கேயே தங்களுக்குக் காவல் இருப்பார்கள்; செய்திகள் அனுப்புவதற்கும் ஏற்பாடு செய்கிறேன்.''

அரசியார் அப்போது பொதிகை மலைச் சாரலில் தென்பாண்டி நாட்டிலிருந்தார். போரின் முடிவு பற்றி முன்னமேயே பாண்டியர் ஊகித்திருந்ததால் மதுரை மாநகரத்திலிருந்த பெண்கள் அனைவரையும் வெளியேற்றி விடும்படி அவர் செய்தி அறிவித்திருந்தார். அப்படியிருந்தும் கூடப் பல பெண்கள் வெளியேறவில்லை. மறக்குலப் பெண்டிர் பலர் தங்கள் தலைவர்கள் களம் புகும்போது தாங்களும் தலை நகரத்தில் இருக்கத் துடித்தனர்.

அழகியபெருமாள் விடை பெற்றுக்கொண்டு இருளில் மறைந்தார். சிறிது நேரத்தில் பொழுதும் புலர்ந்தது.

குகைவாயிலுக்கு வந்து பாறையின் மீதேறி நான்கு புறமும் சுற்றிப் பார்த்தார், பாண்டியர். போர்க்களத்தின் அண்மை யிலிருந்த திருமலை நாட்டு மலைகளுக்கிடையில் ஒரு குன்றில் தாம் இருப்பது தெரிந்தது. நேர் வடக்கிலிருந்த கொடுங்குன்றம் என்ற பறம்பு மலையைக் கண்டவுடன் அவருக்கு மெய்சிலிர்த்தது.

'பாரிவேள் ஆட்சி செய்த பறம்புமலையல்லவா அது. தனது கொடைத்தன்மையென்ற பெருங் குணத்தால் இறவாப் புகழ்பெற்ற பெரும் வள்ளல் வாழ்ந்த மலையல்லவா அது? அவனுடைய புகழ் கேட்டுப் பொறாமை கொண்ட மூவேந்தரும் இந்த மலையைத்தானே வளைத்துக்கொண்டு நெடுநாட்கள் முற்றுகை போட்டிருந்தனர்? பிறகு அந்தப் பெருவள்ளலை மாய்த்தொழித்தனர்? அன்று பகையாய் வந்து, கூற்றாய் முடிந்த மூவேந்தரில் ஒருவரான பாண்டியரின் பரம்பரையில் வந்த தமக்கும் இன்று புகலிடமளித்துக் காக்கத் துணிந்து விட்டானா அந்தப் பெருவள்ளல்?'

வள்ளல் பாரியின் அருங்குணத்தையும் தீஞ்சுவைக் கவிச் சித்திரத்தால் தீட்டியிருக்கிறாரல்லவா கபிலர் என்ற பெரும் புலவர்! அந்தப் புறநானூற்றுப் பாடல்களை உருக்கத்தோடு பாடினார் பாண்டியர். பாரியின்பால் ஏற்பட்ட கழிவிரக்கத் தால் அவரது நாத் தழுதழுத்தது. பாரியும் அவனது பறம்பு மலையும் வீழ்ந்த பிறகு, நிர்க்கதியான அவனது புதல்விகளை அழைத்துக்கொண்டு புலவர் கபிலர் புறப்பட்டபோது அவர் உள்ளம் எப்படியெல்லாம் துடித்திருக்கும்? அந்தத் துடிப்பை யெல்லாம்தான் கபிலர் கவிதையாக்கி விட்டாரே!

''உழவர் உழுது பயிர் செய்யாமலே நான்கு வகைப் பயன் கொழிக்கும் மலை இந்த மலை. ஒன்று, எந்தக் காலத்திலும் இங்கு உணவுக்கு மூங்கிலரிசி கிடைக்கும்; இரண்டு, தீஞ்சுவைப் பலாக்கனிகள் வேர்களில் பழுத்துக் கிடக்கும்; மூன்று, வள்ளிக் கிழங்குகள் தாமாகவே தரைக்குள் வேரோடிப் புதையுண்டு கொழுக்கும்; நான்கு, திரும்பிய பக்கமெல்லாம் பாறைகளில் தேனடைகள் நிறைந்து தேன்

சொரியும். மூவேந்தர்களே! நீங்கள் ஒன்றுகூடி முற்றுகை யிட்டுப் பாரி நாட்டைப் பட்டினியால் பணியச் செய்து விடலா மெனக் கனவு காணாதீர்கள். யாழ் எடுத்துப் பாடிவாருங்கள்; பாணராய்ப் பறை கொட்டி வந்து பரிசிலாய்க் கேளுங்கள். அப்படியே நாட்டையும் தன்னையும் நண்பனாகிய என்னையுமே உங்களுக்குக் கொடுத்து விடுவான் பாரி!'' என்று கபிலர் செருக்கோடு பாடிய மண் அல்லவா அது!

அழகியபெருமாள் தமக்கு ஏன் இந்த இடத்தைப் புகலிடமாகத் தேர்ந்தெடுத்துள்ளார் என்பது அப்போதுதான் அவருக்கு விளங்கியது. புலவர் காரணை விழுப்பரையரின் ஆலோசனை அழகிய பெருமாளுக்குக் கிடைத்திருக்கும் என்பதில் அவர் ஐயம் கொள்ளவில்லை. சுனைகள் நீர் கொடுத்தன; மரங்கள் காற்றைக் கொடுத்தன; மலையோ தேனும், தினையும், பலாவும், கிழங்கும் கொடுத்தது.

இரண்டு தினங்கள் சென்று காரணை விழுப்பரையர் அங்கு வந்து சேர்ந்தார். களப்பலி கொடுக்கப்பட்ட அவரது புதல்வனின் உடலிலிருந்து ஒருதுளி சதையைக்கூட அவரால் காண முடியவில்லை. அஞ்சாத நெஞ்சம் கொண்டவர்தாம் அவர். அவர் நெஞ்சில் சலனமில்லை. என்றாலும், ஏனோ அவர் தசை துடித்தது. இரத்தத்தின் இரத்தத்தை, தசையின் தசையை அவர் சுக்குநூறாய்ச் சிதைக்கச் செய்து பார்த்துக் கொண்டிருந்தவர். தமது குமாரனின் உடலையாவது பார்க்க வேண்டுமென்று அவர் மனைவியார் திருவுடைத்தேவி மன்றாடினால்? புதுமணப்பெண் உய்யவந்தாள், தன் கணவனைப் பற்றிய செய்தியை அவரிடம் கேட்டால்?

முன்னேற்பாட்டுடன்தான் அவர் எல்லாவற்றையும் செய்திருந்தார். அவருடைய குடும்பம் அப்போது மதுரையில் இல்லை. ஆனால் குடும்பத்தாரை என்றைக்குக் கண்டாலும் அவர்கள் முதலில் அதைத்தானே கேட்பார்கள்? 'எங்கே உங்கள் குமாரன்? அவன் நலமாக இருக்கிறானா?' என்று கேட்டால்?

விழுப்பரையர் அந்தச் சொந்த நினைவுகளை விரட்டியடிக்க முயன்றவர் போல் குகையின் வாயிலை நோக்கி விரைந்தார். பாண்டியரைக் கண்டு கை கூப்பினார்.

குலசேகர பாண்டியர் ஒருகணம் அவர் விழிகளையே உற்று நோக்கினார். விழுப்பரையரின் முகமே யாவற்றையும் விளக்கி விட்டது. என்றாலும் தமது உள்ளத் தவிப்பைக் கட்டுப்படுத்த முடியாத பாண்டியர், ''தலைநகரத்தின் நிலை எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார்.

''வீழ்ந்து விட்டது!''

''சுந்தரபாண்டியன்?''

பாண்டியர் இப்படிக் கேட்டவுடன் விழுப்பரையரால் தாங்கவே முடியவில்லை. அவருக்குத் தம்முடைய குமாரனின் நினைவும் சேர்ந்துகொண்டது. அவர் தேம்பித் தேம்பி அழுதார். பாண்டிய நாடு, அதன் தலைநகர், அதன் இளவரசன், தமது குமாரன் எல்லாவற்றையும், எல்லோரையும் நினைத்து அவர் கதறினார்.

## 19. தலைவன் எங்கே?



செய்தியைக் கேட்ட குலசேகர பாண்டியரின் துயரம் தனது எல்லையை மீறி அவரைச் செயல் இழந்தவராகச் செய்து விட்டது. அந்தக் குகைக்குள்ளே உருவாக்கிய குடைவரைச் சிலை போல் சலனமின்றி நெடுநேரம் சாய்ந்திருந்தார். 'இடுக்கண் வருங் கால் நகுக' என்ற குறளைக் கூறி, துன்பம் வருங்காலத்தில் நகைக்கச் சொல்லும் விழுப்பரையரே தேம்பி அழுதது அவருக்கு வேதனையைத் தந்தது.

மௌனத்தைக் கலைத்து மெதுவாகப் பேசினார் பாண்டியர்.

''நாட்டின் எதிர்காலத்து நம்பிக்கையின் பேருருவமாக அவன் எனக்குத் தோன்றினான். பாண்டிய மண்டலத்தின் விடுதலையும் வீறு கொண்ட வளர்ச்சியும் தவிர வேறு எந்தச் சிந்தனையும் அவனிடமில்லை. நினைவில், சொல்லில், செயலில் அவன் சிறுமைகளை அழிக்கும் வீரனாக விளங்கினான். நாட்டின் சிறப்பெல்லாம் ஒன்று சேர்ந்து தனக்குக் காவலனாக அவனைத் தேடியிருக்கிறது என்று நான் பெருமை கொண்டிருந்தேன்... அவன் இந்த நாட்டின் இலட்சிய வீரன்... வருங்கால நம்பிக்கை... இனி அவன்...?''

உருக்கம் நிறைந்த பாண்டியரின் குரலைக் கவனமாகக் கேட்டார் விழுப்பரையர். எப்படியாவது பாண்டியரின் மனச்சுமை குறைந்தால் போதும் என்ற எண்ணம் அவருக்கு.

பாண்டியர் தொடர்ந்தார்;

''அரண்மனையின் சுகபோக வாழ்வை அவன் அலட்சியம் செய்து பழகினான். கடுமையான உழைப்பிலும் இடர்கள் நிறைந்த சாதனைகளிலுமே அவன் மனம் ஒன்றி யிருந்தது. நாட்டைச் சுற்றிவிட்டுத் தலைநகருக்குத் திரும்பும் போதெல்லாம் அவன் குடிமக்களின் துன்பங் களையே தனக்குள் சுமந்து வருவான். கோல் உயர்ந்து, குடி உயர்ந்து, செல்வச் செழிப்போடும், மன மகிழ்ச்சியோடும் மக்களை விளங்கச் செய்யவேண்டுமென்ற பெருநோக்கு அவனுக்கு. நாடு உறங்கும் நள்ளிரவு வேளைகளிலும் தான் உறங்காமல் என்னோடிருந்து அரசியல் கடமை களுக்குத் துணை செய்வான்.''

''தீவிரமான அன்புக்கு ஒரு மாபெரும் தீய சக்தி இருக்கிறது. குடிமக்களிடம் அவர் கொண்ட அன்பு தியாக உணர்ச்சி கொண்டது. மக்களில் பலர் அவரை நேரில் பார்த்து அறியாவிட்டாலும் இந்த அன்பை அவர்கள் உணர்ந்து கொண்டுவிட்டார்கள். அவர் வீழந்த செய்தி இப்போது காட்டுத் தீபோல் நாடெங்கும் பரவிவிட்டது. மக்கள் இப்பொழுது மிகவும் கொதிப்படைந்திருக்கிறார்கள்.

சோழர்களின் படை வலிமையால் இனி இந்த நாட்டை ஆண்டுவிட முடியாது'' என்றார் விழுப்பரையர்.

''நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?'' என்று கேட்டார் பாண்டியர்.

''இனி இந்த நாட்டைப் பிறர் ஆளமுடியாது. இப்போரில் நாடு அழியலாம்; ஆனால் மக்களின் உரிமை உணர்ச்சி கொழுந்துவிட்டு எரியத்தான் செய்யும். இன்று இல்லா விட்டாலும், தங்களைத் தேடிப் பிடித்துத் தங்களிடம் விரைவில் ஆட்சியை ஒப்புவிக்கப் போகிறார் குலோத்துங்கர்.''

நாடெங்குமுள்ள வளநாட்டுத் தலைவர்களுக்குப் பாண்டியர் பத்திரமாக இருக்கும் செய்தி அனுப்பப் பட்டுவிட்டதென்றும், இளவரசரைக் கொன்ற சோழர்களின் ஆட்சி ஒருநாள்கூட அந்த மண்ணில் நடைபெறாதபடி அவர்கள் பார்த்துக் கொள்வார்கள் என்றும் உறுதியோடு கூறினார் விழுப்பரையர். ''உயிர் வாழ்ந்த சுந்தர பாண்டியருக்கு இருக்கும் சக்தியைவிட மக்களுக்காக உயிர் நீத்த இளவரசருக்குச் சக்தி அதிகம்'' என்றார். ''மதுரையில் இப்போது என்ன நடைபெறுகிற தென்று கூறவில்லையே?'' என்று குறுக்கிட்டார் பாண்டியர்.

விழுப்பரையர் இதைக் கேட்டுத் துணுக்குற்றார். அங்கு நடைபெற்றுக் கொண்டிருந்த பழிவாங்கும் வெறிச் செயல்கள் கட்டுக்கடங்காதவை. குலோத்துங்கரின் வெஞ்சினம் எந்த எல்லைக்குச் செல்ல முடியுமோ அதையும் அப்போது கடந்துவிட்டது. மதுரை மதுரையாக இல்லை; பாண்டிய நாடு பாண்டிய நாடாக இல்லை.

''மதுரை மாநகரத்தை இடுகாடாக மாற்றி அங்கேயே வெற்றி விழாக் கொண்டாட ஏற்பாடுகள் செய்து வருகிறார் குலோத்துங்கர்'' என்றார் விழுப்பரையர். ''மதுரை நகரத்தின் பெயரையே மாற்றி, 'முடித்தலை கொண்ட சோழபுரம்' என்றும், பாண்டிய மண்டலத்தைச் 'சோழ பாண்டிய

மண்டலம்' என்றும் புதுப் பெயர்களால் அழைக்கப் போகிறார்களாம். நம்முடைய அரண்மனை மண்டபத்துக்குச் 'சேர பாண்டியர் தம்பிரான்' என்று பெயரெழுதி, அதில் இருந்து 'திரிபுவன வீரர்' என்றும் 'சோழ பாண்டியர்' என்றும் வீரமுடி சூட்டிக்கொள்ளப் போகிறாராம் சக்கரவர்த்தி.''

நீண்ட பெருமூச்சு விட்டார் குலசேகர பாண்டியர்.

***சோழ பாண்டியன் என்று**
**போர்வீரர் கண்களிப்ப**
**வீரமா முடிபுனைந்து**
**திரிபுவன வீரரென்று**
**வண்டரைதார்!*வழுதியரைக்**
**கொண்டபாண்டி மண்டலத்தைச்**
**சோழபாண்டியன் மண்டலமென்று**
**ஏழுபாருஞ் சொலநிறுத்தி**
**மல்லல்வையை மதுரையையும்**
**மதுரையென்ற பெரொழித்துத்**
**தொல்லைமுடித் தலைகொண்ட**
**சோழபுர மென்றருளித்**
**தார்வழுதி மண்டபத்தில்**
**சேரபாண்டியர் தம்பிரானென்றெழுதிப்**
**பாணனைப் பாண்டியனென்று**
**பருமணிப் பட்டஞ்சூட்டி....**

மூன்றாம் குலோத்துங்கர் மெய்க்கீர்த்தி

''அதோடு நிற்காமல் அவருடைய தோள் வலிமையைப் பாடிய பாணன் ஒருவனுக்கு அவர் பாண்டியர் என்று பட்டம் சூட்டி நம்மைச் சிறுமைப்படுத்தப் போகிறாராம். செய்வது எதுவுமே நிலைத்து நிற்கப்போவதில்லை; நாடு விழித்துக் கொண்டுவிட்டது.''

விழுப்பரையரிடம் அவருடைய குடும்பத்தைப்பற்றி விசாரித்துவிட்டு, ''தங்கள் குமாரன் ஆலவாய் நம்பி நலமாக இருக்கிறானா?'' என்று கேட்டார் பாண்டியர்.

* வழுதியார்- பாண்டியர்

''அவன் வீர சுவர்க்கம் புகுந்துவிட்டான்'' என்று எவ்விதக் கலக்கமுமின்றிக் கூறினார் விழுப்பரையர். ''இளவரசர் மீது குலோத்துங்கர் குறி வைத்திருந்தார் என்பதால் முதலில் அவனை இளவரசர் உடையில் அனுப்பி வைத்திருந்தேன். சோழநாட்டு வீரர்கள், தங்கள் சக்கரவர்த்தி யிடம் பரிசில் பெறுவதற்காக அவனைச் சின்னாபின்னப் படுத்தி விட்டார்கள்.''

''விழுப்பரையரே!'' என்று உணர்ச்சி பொங்கக் கூறி அவரது கரங்களைப் பற்றிக் கொண்டார் பாண்டியர். ''இதைத் தாங்கள் முன்பே கூறவில்லையே! சுந்தர பாண்டியனைக் காக்கும் முயற்சியில் அடுத்தவனையும் பலி கொடுத்து விட்டீர்களே!''

''நாழிகையாகிறது; நான் சென்று வருகிறேன்'' என்று விடைபெற்றுக் கொண்டு எழுந்தார் விழுப்பரையர். பின்னர் வேகமாக இறங்கி மலையடிவாரத்துக்கு வந்தார். காவலர்களிடம் விழிப்போடிருக்கும்படி கூறிவிட்டு, ஒரு மரத்தடியில் நின்ற தமது புரவியின்மீது ஏறிக்கொண்டார்.

ஆலவாய்நம்பியைப் பலிகொடுத்த பிறகும் இளவரசர் சுந்தர பாண்டியனைக் காப்பாற்ற முடியுமா என்ற ஐயம் அவருக்குள் வலுத்து வந்தது. போர்க்களத்தில் உருக்குலைந்து போன புதல்வனைப் பொருட்படுத்தாமல் குற்றுயிரும் குலை உயிருமாகக் கிடந்த சுந்தர பாண்டியனை அவர் எப்படியோ அன்றைக்கே தூக்கி வந்துவிட்டார். அங்கிருந்து அழகர் மலைக் காட்டுக்கோ வேறு எங்கோ அவனைத் தூக்கிச் சென்று மறைவிடத்தில் வைக்கலாமென்று அவருக்குத் தோன்றியது. ஆனால் நினைவிழந்து பேச்சற்றுக் கிடந்த அவனது உடல்நிலை அந்தச் சிறு பிரயாணத்தைக் கூடத் தாங்கக் கூடியதாக இல்லை.

மதுரையின் புற மதிலுக்கு நெடுந்தூரத்தில் வைகைக் கரையோரமாகப் புதர் சூழ்ந்த குடிசை வீடுதான்

அப்போதைக்குக் கிடைத்தது. நம்பிக்கையான மருத்துவரின் பொறுப்பில் அவனை விட்டுவிட்டு வந்திருந்தார். மருத்துவராலும் திட்டமாக ஏதும் கூற முடியவில்லை. மார்பெங்கும் அம்புகள் துளைத்து வேல்கள் கிழித்திருந்ததால் அவன் பிழைத்து எழுந்தால் அது மறுபிறவிதான்.

அந்த மறுபிறவியைக் கொடுத்து, அவனைக் காப்பாற்றும்படி ஆலவாய் அண்ணலையும், அங்கயற் கண்ணி அம்மையையும் வழுத்திக் கொண்டே மதுரையை நோக்கிப் பறந்தார் விழுப்பரையர். நல்லோரைக் காப்பதற்காகத்தானே நஞ்சை உண்ட தியாகச் செம்மல் ஆலவாய் அண்ணல்; அவனையே காத்தவள் அருளம்மை. அவர்களை நினைத்துக் கண்ணீர் பெருக்குவதைத் தவிர அவருக்கு வேறெதுவும் தோன்றவில்லை.

பொழுது சாய்ந்த வேளையில் விழுப்பரையரின் குதிரை வைகைக் கரையை அடைந்தது. குடிசைக்குள் நுழையப் போன விழுப்பரையர் அதன் வெளியே கண்ட கலவரக் காட்சியால் திடுக்கிட்டு நின்றார்; காவலுக்காகப் புதர்களில் மறைந்திருந்த வீரர்கள் விழுப்பரையரைக் கண்டவுடன் நடுநடுங்கினர். மருத்துவர் ஓடோடியும் வந்து அவர் பாதங்களில் விழுந்து பற்றிக் கொண்டு அழுதார்.

சுந்தர பாண்டியனை அங்கு காணவில்லை. அவனைக் கிடத்தியிருந்த இடம் வெற்றிடமாக இருந்தது.

மருத்துவர் பச்சிலை பறித்து வரச்சென்று அப்போதுதான் திரும்பி வந்தாராம். புதர்களில் மறைந்திருந்த ஆபத்து உதவிகளும் வெளியிலிருந்து யாரும் வந்ததைத் தாங்கள் காணவில்லை என்கிறார்கள். ''அவருக்குச் சுயநினைவு வந்துவிட்டது; ஆனால் அசையக்கூட முடியாத நிலையில் கிடந்தார்'' என்றார் மருத்துவர். கைகளைப் பிசைந்தவாறு வகை தெரியாமல் விழித்தனர் காவலர். விழுப்பரையரின் நெஞ்சு பதறியது.

# 20. கண்ணகி வந்தாள்



நான்மாடக் கூடல் என்ற பெயர் விளங்க நான்கு புறங்களிலும் புறமதிலில் நான்கு பெரும் கோபுர வாயில்களைக் கொண்டிருந்த அந்த அழகான மதுரைத் திருநகரம் எங்கே போய்விட்டது? அதற்கு முன்பு எத்தனை எத்தனையோ படையெடுப்புக்களையும் போர்களையும் கண்ட நகரம் தான் அது. ஆனாலும் இம்முறைபோல் என்றுமே அது அவ்வளவு கொடுமைக்கு உட்பட்டதில்லை.

ஆலவாய் அண்ணலின் கோயிலும் கோபுரங்களுமே எஞ்சியிருந்தன. வைகை நதிகூட தன் திசைமாறி நிறம் மாறி நகருக்குள் இரத்த ஆறாகப் பெருக்கெடுத்து விட்டது. அந்த ஆற்றுப் பெருக்கிடையே அங்கங்கே திட்டுத் திட்டாகப் பாறைகள் முளைத்திருந்தன. அவை பாறைகளா, அல்லது மத்தமதக் களிறுகளின் சடலங்களா?

குன்றுகளெனச் சரிந்த யானைகள், உடைந்து ஒதுங்கிய தோணிகள் போன்ற குதிரைகள்; திரும்பிய திசைகளிலெல்லாம் வீர சுவர்க்கம் புகுந்த வீரர்கள்! செஞ்சோற்றுக் கடன் தீர்க்கப் போராடியவர்கள் செஞ்சோற்றுப் புழுதியில் புன்முறுவலோடு புரண்டு கிடந்தார்கள்.

வீரர்களைப் பெற்றெடுத்த அன்னையர், அவர் தம் கரம் பற்றிய கற்பரசியர், இவர்கள் யாவரும் அவர்களைச் சார்ந்த வீரர்களைக் களத்தில் தேடி அலைந்த அலைச்சலையும்; நாடிக் கூவிய கூக்குரலையும் எங்ஙனம் கூறுவது? தம் கணவரது உடல்களைக் காண முடிந்த சிலர் அவர் தம் பரந்த மார்பில் துடித்து வீழ்ந்தவாறே மீளா உலகுக்குச் சென்றனர்—அவர்களைத் தேடி, சிலர் முட்டி மோதிக் கொண்டு வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டவாறே மயங்கிச்

சாய்ந்தனர்... இன்னும் சிலரோ அவர் சிதைவுண்டு கிடக்கும் கோரக் காட்சியைக் கண்டவுடன் சித்தப்பிரமை கொண்டு விட்டனர்.

செந்தமிழ் வளர்த்த மதுரையோ செந்தழல் பற்றிக் கொண்டுவிட்டது. வானத்திலே புகைமூட்டமும் பருந்துக் கூட்டமும் சூழ்ந்துகொண்டன. பாண்டியரின் அரண்மனை இருந்த இடத்தில் ஒரே ஒரு பெரிய மண்டபம் மட்டிலும் தனித்து நின்றது—சக்கரவர்த்தியின் வெற்றி விழா மண்டபம் அது; அதற்குத்தான் 'சேர பாண்டியர் தம்பிரான்' என்ற தம்முடைய விருதுப் பெயர்களில் ஒன்றைச் சூடியிருந்தார் குலோத்துங்கர்.

கோயிலையும் அதைச் சூழ்ந்திருந்த இரண்டு தெருக்களை மட்டிலும் அழிவுக்குள்ளாக்காமல் விட்டிருந் தனர் சோழர் படையினர். தங்களது சொந்தக் குடியிருப்பு வசதிக்காக அவர்கள் செய்து கொண்ட ஏற்பாடு அது. கொள்ளை கொண்ட பொருட்குவியல்கள், கைப்பற்றப்பட்ட தானியக் களஞ்சியங்கள், கவர்ந்து வந்த கன்று காலிகள் இவை சில மாளிகைக்குள்ளும் வெளியிலும் நிரம்பியிருந்தன. போரில் வீழ்ந்த பாண்டிய வீரர்களின் படைக்கலன்களும் குதிரைகளும் யானைகளும் அங்கங்கே தென் பட்டன. வெற்றிச் செருக்குற்ற வீரர்கள் சக்கரவர்த்திகளின் ஆணை யால் நடைபெற்ற உண்டாட்டு விழாக்களில் கலந்து கொண்டு உண்டும் குடித்தும் களி வெறிகொண்டு திளைத்தனர். சிறு சோற்று விழாக்களும் பெருஞ்சோற்று விழாக்களும் சோழப் படையினருக்கு மாறி மாறி நடைபெற்றன.

இளவரசன் சுந்தரபாண்டியனை உயிருடனோ சடலமாகவோ கொண்டு வருபவர்களுக்குப் பரிசில்கள் வழங்குவதாகக் கூறியிருந்தாரல்லவா சக்கரவர்த்தி? நூறு பேர்களுக்கு மேல் அதற்கு உரிமை கொண்டாடிப் போட்டி யிட்டனர். அனைவருக்குமே தாராளமாக வழங்கினார் சக்கரவர்த்தி. இளவரசனின் மணி முடியைக் கொண்டு வந்தவனுக்கும் உடைவாளைக் கொண்டு வந்தவனுக்கும்

தனித்தனியே பதின் மடங்கு பரிசில்கள் கிடைத்தன. அந்த மணி முடியையும் உடைவாளையும் பார்த்துப் பார்த்து ஒருவாறு தமது வெஞ்சினம் தணியப் பெற்றார் அவர்.

மாலைக் கதிரவன் மதுரை நகரத்தில் நடைபெற்று வந்த அந்தத் துயரக் காட்சிகளை காணச் சகியாதவன் போல் தனது கிரணங்களைச் சுருக்கிக் கொண்டு மேற்குப்புற மலைச் சரிவுகளின் பின்னால் நழுவத் தொடங்கினான். அப்போது வைகையாற்றுக் கரையோரம் வளர்ந்து நின்ற ஒரு வேப்பமரத்தின் உச்சியில் ஒரு கிளை சிறிது அசைந்தது. இலைகள் அடர்ந்திருந்ததால் அதற்குள்ளிருந்த உருவம் சரியாகத் தெரியவில்லை.

நெற்றிப் புருவத்துக்கு மேல் தனது கையை வைத்துக் கதிரொளியை மறைத்துக்கொண்டு அந்த உருவம் தொலை தூரத்துக்கு உற்றுப் பார்த்தது. புகைமூட்டத்துக் கிடையிலும் பருந்துக் கூட்டத்துக்கிடையிலும் அவன் விழிகள் ஊடுருவி நோக்கின. மதுரைப் பெருநகரமாக விளங்கிய அந்த ஊருக் குள் இன்னும் வீரர்களின் நடமாட்டம் இருந்தது. பெண்களின் கூக்குரல்கள் திடீர் திடீரென்று எழுந்தன. குதிரைகள் மீது வெறியோடு பாய்ந்து வரும் சில வீரர்களைக் கண்டு பெண்கள் தறிகெட்டு அங்குமிங்கும் ஓடுவதும் தெரிந்தது.

பின்னர் பாண்டியரின் அரண்மனை இருந்த திசையை நோக்கியது அந்த உருவம். ஒரே ஒரு மண்டபத்தைத் தவிர மற்ற இடங்களிலெல்லாம் நூற்றுக்கணக்கான கழுதை களுக்கு ஏர்பூட்டி உழுது கொண்டிருந்தார்கள், வென்றவர்கள். உழுவதற்கு தண்ணீர் அவர்களுக்குத் தேவையில்லை. செந்நீரால் முன்னமேயே அது சேறாகிக்கிடந்தது. அவர்கள் உழுதுவிட்டு அதே இடத்தில் வரகுத் தானியத்தையோ கொள்ளையோ தூவி விதைக்கப் போகிறார்கள் என்பதும் விளங்கிவிட்டது—வெற்றியின் புகழ்க்கதிர் அது!

வைகை நதி வெள்ளத்தில் புரண்டுவந்த பல்வேறு வகைச் சடலங்களைக் கண்டபோதும் வேப்பமரத்தின் கிளையிலிருந்த உருவம் அதிர்ச்சி அடையவில்லை.

யானைகள், குதிரைகள், வீரர்கள் அடித்து வரப் பெற்ற போதெல்லாம் அது பதறவில்லை. இடையிடையே பெண்களின் உடல்கள் காணப்பட்டபோதுதான் அந்தக் கிளையே நடுங்கியது.

கரையின் மீது பின்புறம் யாரோ ஓடி வருவதுபோல் சத்தம் கேட்கவே சட்டென்று திரும்பிப் பார்த்தது அது. தொலைவில் தலைவிரிகோலமாக ஒரு பெண்பிள்ளை ஓடி வந்து கொண்டிருந்தாள். பின்னால் யாரேனும் துரத்தி வருகிறார்களோ என்று ஒருகணம் தயங்கியது அவ்வுருவம். அப்படி யாரும் வரவில்லை. அப்பெண்பிள்ளை ஏன் அவ் வளவு துடிப்போடு ஓடி வருகிறாள் என்பது அதற்கு விளங்கி விட்டது. புரண்டு ஓடும் வைகை வெள்ளத்தில் தஞ்சம்புக வந்தவள்தான். அவளுடைய நெஞ்சே அவளைத் துரத்திவிட அதனிடமிருந்து தப்புவதற்காக அவள் ஓடி வருகிறாள்.

கிளையைப் பற்றித் தொங்கியவாறே தரையில் குதித்தான் அந்த இளைஞன். ஒரு போர்வை அவனுடைய உடலை நன்றாக மறைத்திருந்தது. சரேலென்று குறுக்கே வந்து நின்று அவள் வழியைத் தடுத்தான்.

''இதோ பார், நில்! நீ எங்கே போகிறாய்?''

அவள் அவனைச் சிறிதுகூடப் பொருட்படுத்த வில்லை. அவன் மரத்திலிருந்து குதித்ததையோ, வழியில் வந்து நின்றதையோ, தன்னிடம் பேசியதையோ உணராதவள் போல் அவள் எங்கோ நினைவாக இருந்தாள். ஓட்டத்தின் வேகம் மட்டிலும் அவனுடைய குறுக்கீட்டால் சிறிது குறைந்தது. அவனைத்தாண்டிப் போக முடியாதபடி கரை குறுகலாக இருந்ததால் சட்டென்று நின்றாள்.

''இதோ பார், நீ எங்கே போகிறாய்?'' என்று திரும்பவும் கேட்டான் இளைஞன்.

''நானா?'' அவள் பயங்கரமாகச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு அவனை நடுங்கச் செய்தது. ''சீ! வழியை விடு; நான் எங்கே போனால் உனக்கென்ன?'' என்றாள் அவள்.

இத்தகைய அவமானத்தை அந்த இளைஞன் தன் வாழ்நாளில் கண்டதில்லை. ஆனால் அவளோ தாங்க முடியாத துயரத்தால் ஏற்பட்ட சித்தப்பிரமையால் பேசுகிறாள் என்பது தெரிந்தது. அவள்மீது அனுதாபம் கொண்டு ஓரளவு பொறுமையைக் கடைப்பிடித்தான்.

அவள் நெற்றி எங்கும் சுருள்சுருளாகக் கேசம் புரண்டு காற்றில் அலைந்தது. கண்கள் எங்கோ எதையோ நோக்கிக் கொண்டிருந்தன. சட்டென்று அந்த இளைஞனுக்கு ஒரு பழைய காட்சி நினைவில் பளிச்சிட்டது. மதுரை மாநகரத்தை எரித்த பத்தினித் தெய்வம் கண்ணகியாக முன்பு அவளை ஏதோ ஓர் அரங்கத்தில் கண்ட நினைவு அவனுக்கு.

முன்பு அவள் அரங்கத்தில் நடித்தாள். இப்போதோ மதுரையை எரித்துவிட்டு வரும் மாபத்தினியாகவே எதிரில் நின்றாள்.

''நீ வந்து...நீ...உன்னை'' என்று தடுமாறினான் அந்த இளைஞன். பிறகு, ''யார் நீ?'' என்று அதட்டிக் கேட்டான்.

''யார் நீ?'' என்று திருப்பி அதட்டினாள் அவள். 'என்னைப் பற்றிக் கேட்க நீ யார்? என்னைத் தடுத்து நிறுத்த நீ யார்? என் வழியில் குறுக்கிட நீ யார்?' என்று அவளுடைய விழிகள் அவனைக் கேட்கத் தொடங்கின.

''நான் ஒரு புலவன், இந்த நாட்டுப் புலவன்'' என்றான் இளைஞன்.

''புலவனாம், புலவன்! பேடிகள், பேடிகள், ஒரே பேடிகளின் கூட்டம்! இந்த நாட்டில் ஆண்கள் கூடவா இருக்கிறார்கள்?...''

''பெண்ணே, அளவுக்கு மீறிய துயரத்தால் நீ குழம்பியிருக்கிறாய். இந்த நிலையில் நீ என்ன முடிவு செய்தாலும் அது சரியான முடிவாக இருக்காது. அதை மட்டும் நான் இப்போது கூற விரும்புகிறேன்'' என்றான் அவன்.

''ஐயா புலவரே! படுகளம் பற்றி எரிகிற வேளையில் நீர் இப்படி வீணாக ஓர் அபலையிடம் வாதம் செய்து கொண்டு நிற்கிறீர். இதைவிட நீர் போய் அந்த சக்கரவர்த்தியைப்

புகழ்ந்து பாடி ஏதாவது பரிசு பெற்று வரலாம். தன்னைப் பாடிய பாணன் ஒருவனுக்கு அவன் பாண்டியன் என்று பட்டம் சூட்டிப் பெருமை தந்திருக்கிறானாம். நீரும் அங்கே போகலாம்; அல்லது உம்முடைய எழுத்தாணியை எறிந்து விட்டுக் களம் புகுந்தா வது உயிர் துறந்திருக்கலாம்! இது பேடித்தனம்; வழியை விடுங்கள்!''

''கயல்விழி!'' என்று அதட்டினான் இளைஞன்.

''அவள் செத்துப் போய்விட்டாள்; அவள் செத்துப் போய்விட்டாள்'' என்று நாதழுதழுக்கக் கூறிவிட்டு, ''தயை செய்து எனக்கு ஓர் உதவி நீங்கள் செய்கிறீர்களா?'' என்று மன்றாடினாள் கயல்விழி.

''என்ன?''

''வழியை விடுங்கள்; என்னை வைகைத் தாய் அழைக்கிறாள்!''

சரேலென்று பாய்ந்தோடி நதியில் குதிக்கப் போனாள் அவள். இளைஞன் சற்றுத் திரும்பி மெல்லத் தன் கரத்தால் அவளைப் பற்றினான். அந்தப் பிடியே அவளுக்கு இரும்புப் பிடியாக இருந்தது. அவள் திமிறிக்கொண்டு பாயத் துணிந்தாள். அப்போது அவன் மார்பை மறைத்திருந்த மேலாடை நழுவியது. உடலெங்கும் நிறைந்திருந்த விழுப்புண்களைக் கண்டு திடுக்கிட்டாள் அவள்.

## 21. ஒளிகொடுத்த உயிர்



புயலெனப் பொங்கிய கருங்கூந்தல் காற்றில் அலைய, புண்பட்ட நாகமெனப் பூந்துகில் படமெடுத்துச் சீற, தொலைவில் அந்தப் பெண் ஓடி வருவதை மரத்திலிருந்து பார்த்த இளைஞன் அவள் பெண்தானா, பேய்க்

குலத்தைச் சேர்ந்தவளா, வனதேவதையா என்று முதலில் அஞ்சினான்.

இப்போது அதேபோன்ற அச்சம் கயல்விழியின் நெஞ்சைப் பற்றிக் கொண்டுவிட்டது. இத்தனை விழுப் புண்களையும் தாங்கிக் கொண்டு ஒரு மனிதன் உயிரோடிருக்க முடியுமென்றே அவள் நம்பவில்லை; அவன் திடீரென்று மரத்திலிருந்து குதித்ததையும் வழிமறித்ததையும் நினைத்துக் கொண்டாள். உயிருள்ள மனிதனாக இருந்திருந்தால் அவனால் இந்த நிலையில் தரையில் நிற்கக்கூட முடியாது. மரத்தில் ஏறுவதோ மரத்திலிருந்து குதிப்பதோ நடக்கவே முடியாத காரியங்கள். அடிபட்டு வீழ்ந்த வீரர்கள் பேய்க் கணங்களாக மாறி அலைந்து திரிவார்கள் என்று அவள் கேள்வி யுற்றிருக்கிறாள். 'இது மனித உருவமல்ல; மனிதனின் ஆவி உருவம்; பேய்!' என்றே நினைத்தாள்.

கயல்விழியின் மெல்லுடல் நடுங்கியது. இளைஞன் புன் முறுவல் பூத்தான். 'சாகத் துணிந்தவளுக்குக்கூட அச்சம் ஏற்படு வதுண்டா?' என்ற எண்ணத்தால் எழுந்த நகைப்பு அது.

''தயவுசெய்து என்னைவிட்டு விடுங்கள். நானும் உயிர் நீத்துவிட்டால் பிறகு உங்களைப்போல் இந்த ஆற்றங் கரையில் பேயாக உலாவலாம். இந்த உயிரை இந்த நிலையில் இனிமேல் கணப்பொழுதுகூட என்னால் சுமக்க முடியாது போலிருக்கிறது.'' அவளுடைய விழிகளில் வைகை பெருக்கெடுத்துக் குமுறியது.

அவளுடைய பெருந்துயரத்துக்கான காரணத்தைத் தனக்குத் தானே நினைத்துப் பார்த்தான் இளைஞன். 'போர் என்றவுடன் அலட்சியமான துணிவுடன் நகரத்திலேயே இவள் தங்கியிருக்கக் கூடும். இவளுடைய வீட்டைத் தீக்கிரையாக்கி, வீட்டுச் செல்வங்களைக் கொள்ளை கொண்டு, உற்றார் உறவினர்களையும் சோழப் படையினர் கொன்று குவித்திருப்பார்கள். தன்னையும் சிறைப் பிடித்துப்

போய் எங்கே வேள மகளிரின் கூட்டத்தோடு சேர்த்துச் சோழ நாட்டுக்குக் கொண்டு செல்வார்களோ என்ற அச்சம் வந்து விட்டது இவளுக்கு. அதனால்தான் சாகத் துணிந்திருக்கிறாள்.'

''கயல்விழி! நீ இறந்துபோய் பேயாக மாறினால் உன்னால் என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டான் அவன்.

என்ன செய்ய வேண்டுமென்றோ, என்ன செய்ய முடியுமென்றோ அவள் அதுவரை சிந்தித்துப் பார்க்கவே இல்லை. திடீரென்று அவள் சிந்தனையை அந்தத் திசையில் தூண்டி விட்டுவிட்டான் அவன். அவள் ஆவேசத்தோடு சிந்தித்துவிட்டுக் கூறினாள்:

''நான் இறந்து போய்ப் பேயாக மாறியவுடன் திடீரென்று ஒரு பாண்டிய நாட்டு வீரன் மனத்தில் புகுந்து கொண்டு அவனை ஆட்டி வைப்பேன். என்னுடைய வஞ்சத்தை அவன் மூலமாகத் தீர்த்துக்கொள்வதற்கு அவனுக்குத் துணை செய்வேன். இந்த மதுரை மாநகரமும் பாண்டிய நாடும் எப்படி யெல்லாம் அழிக்கப்பட்டதோ அப்படியெல்லாம் இதை அழித்தவர்களின் நாட்டை அழிக்கச் செய்வேன். போர் என்ற பெயரில் இங்கே அவர்கள் எத்தனை எத்தனை கொடுமைகளைச் செய்தார்களோ அவ்வளவையும் அவர்களுக்கே திருப்பிச் செய்வேன். செய்து விட்டு என் பழி பாவங்களைத் தீர்த்துக் கொள்வதற்காக இந்த வைகை நதியில் நீராடி விட்டு அங்கயற் கண்ணி அம்மையின் திருப்பாத கமலங்களில் தஞ்சம் புகுந்து கொள்வேன்...''

கயல்விழியின் கண்களில் அப்போது வீசிய ஒளியும், அவளது குரலில் கனிந்த நெருப்பும், சொற்களில் பொங்கிய உணர்ச்சியும் அந்த இளைஞனை ஆவேசம் கொள்ளச் செய்தன. அவனுக்கு அவள் மானிடப் பிறவியான கயல்விழியாகத் தோன்றவில்லை; கொற்றவைத் தேவியே அவளுடைய உருவத்தில் வந்து பேசுவதாக நம்பினான்.

பேச முயன்ற அவனது தொண்டை கரகரத்தது. ''கயல்விழி! நான் செத்துப்போன மனிதனின் பேயல்ல;

உயிருடன் நிற்கும் பேய்! முதலில் நீ இதைப் புரிந்துகொள்ள வேண்டும்'' என்றான். பிறகு தொடர்ந்து பேசினான்:

''ஏதோ ஒரு வீரனின் மனத்தில் ஆவியாகப் புகுந்து கொண்டு ஆட்டி வைக்கப் போவதாகச் சொல்கிறாய் அல்லவா? உன்னுடைய ஆவி நீ சொல்லிக் கொண்டிருக்கும் போதே என்னுள்ளே புகுந்து விட்டது. இந்தப் புண்களின் வழியே என் இரத்தத்தில் கலந்து விட்டது; என்னுடைய மூச்சிலும் பேச்சிலும் செயலிலும் நீ இந்தக் கணத்திலேயே ஒன்றிவிட்டாய். உன் சொற்கள் எனக்குக் கொற்றவைத் தேவியின் சொற்களாக ஒலிக்கின்றன. நீ எனக்குக் கொற்றவையாக இருந்து என் கடமையைச் சுட்டிக்காட்டிக் கட்டளையிட்டு விட்டாய். எல்லாவற்றையும் நீ கூறியபடியே செய்துமுடிக்கிறேன். இந்த வைகைத் தாயின் மேல் ஆணையாக! எரியும் இந்த நகரத்தின் ஆணையாக! இவ்வள வையும் பார்த்து நிற்கும் ஆலவாய் அண்ணலின் ஆணையாக நான் செய்து முடிக்கிறேன். நீ உன் உயிரை என்னுடைய உயிரில் மூழ்கச் செய்து மாய்த்துக் கொண்டதால், இனி நீ அமைதியாகத் திரும்பிச் செல்லலாம்.''

அவள் செயலிழந்து அந்த வேப்ப மரத்தின் மீது சாய்ந்தாள். அவனுடைய மறுமொழி அவளுக்குப் பேராறுதலைத் தரமுயன்றாலும் இந்த உலகத்தில் யாராலுமே ஆறுதலளிக்க முடியாத ஒரு கொடுமை அவளைச் சூழ்ந்து வதைப்பதுபோல் அவளுக்குத் தோன்றியது.

''கொற்றவைத் தாயோடு தயைசெய்து என்னை ஒப்பிட்டுப் பேசாதீர்கள். நான் செயலிழந்தவள்! பாவியிலும் பாவி; பேதையிலும் பேதை! என்னால் இந்த உயிர் வாதனையைச் சிறிதுகூடப் பொறுக்க முடியவில்லை.'' சக்தியற்ற மெலிந்த குரலில் அவள் மன்றாடினாள்.

இளைஞன் அன்பும் கருணையும் பரிவும் பொங்க அவளை இரக்கத்தோடு உற்றுப் பார்த்தான். தனக்கு வரம்கொடுத்த தெய்வத்திடமுள்ள நன்றி உணர்ச்சியும் அவனுடைய விழிகளில் கலந்திருந்தது.

''உயிர் வாதனையின் பொருள் என்னவென்று உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான் அவன். ''ஒவ்வொரு மயிர்க் காலிலும் ஒவ்வொரு கணமும் எனக்கு நூறு அம்புகள் பாய்வதுபோல் வேதனையிருக்கிறது. ஆனால் இதைவிடப் பெரிய வேதனையால் நான் துடித்துக் கொண்டிருக்கிறேன். இறந்து போன இவ்வளவு வீரர்களின் உயிர்களுக்கும் அழிந்து போன செல்வங்களுக்கும் சிறுமையுற்ற பெருமைகளுக்கும் நான் ஈடு செய்யவேண்டும். அந்த வேதனைகளை நாம் இருவரும் இப்போது பகிர்ந்து கொண்டிருக்கிறோம். அவற்றைத் தீர்ப்பதற்காகவே நாம் இந்த உயிர்வாதனையைப் பொறுத்துக்கொள்வோம். துன்பத்துக்கு அஞ்சி தற்கொலை செய்து கொள்வது அழகல்ல; கோழைத்தனம். ஒவ்வொரு நாளும் வாழ்ந்து கொண்டே சாகத் துணியவேண்டும். உனக்குப் புரிகிறதா?''

''நான் பெண் பிள்ளை; என் துயரத்தை நீங்கள் அறிய மாட்டீர்கள்'' என்றாள் அவள். பிறகு தனக்குள்ளாகவே 'வேண்டாம்; என் துயரத்தை யாருமே அறிந்து கொள்ள வேண்டாம்' என்று சொல்லிக்கொண்டாள்.

''தன்னையே நொந்து கொள்பவர்களையும் கழிவிரக்கம் கொள்பவர்களையும் கண்டால் எனக்குப் பிடிக்காது'' என்றான் அவன்.

''முன்பு ஒரு நாள் சிலம்புக்கூத்தில் நான் உனது நடனத்தில் குறுக்கிட்டபோது, நீ என்ன கூறினாயென்று நினைவிருக்கிறதா? 'நாடு அடிமைப்பட்டுக் கிடப்பதைவிட அழிந்து விட்டால் என்ன' என்று கேட்டாய். 'ஆண்களாகிய உங்களுடைய வீரத்தையும் வெற்றியையும் உங்களுக்கு நினைவூட்டத்தான் பத்தினித் தாயின் இந்தக் கூத்து நடத்துகிறேன்!' என்றாய். உன்னுடைய அந்தக் கூத்தையும் கூற்றையும் நான் மறக்கவில்லை.''

திடுக்கிட்டாள் கயல்விழி. கூத்தினிடையே ஒரு நாள் இரவில் மின்னலைப்போல் தோன்றி மறைந்த அந்த முகத்தை இப்போதுதான் அவளால் இனம் கண்டு கொள்ள முடிந்தது. 'நீங்கள்தாமா அவர்?' என்று கேட்பவள் போல ஒருகணம் அவனது விழிகளைச் சந்தித்துவிட்டுக் கண்ணீர் பெருக்கினாள்.

---

''பத்தினித் தெய்வத்துக்குக் கல்லால் சிலை செதுக்கித் தான் இந்த மதுரையில் வைத்திருந்தார்கள். அதுவும் சிலையாக மாறிவிட்டதால்தான் இவ்வளவையும் பொறுத் துக் கொண்டிருக்கிறது. அரசு அன்றே கேட்கும் என்பார்கள். அரசும் வீழ்ந்துவிட்டது. இளவரசரையும் கொன்று விட்டார்கள். தெய்வமும் தன் சக்தியை இழந்துவிட்டது. இனி நம்புவதற்கு எதுவுமே இல்லை.''

இளவரசரைக் கொன்றுவிட்டார்கள் என்று அவள் கூறியதைக் கேட்டவுடன் அவனுக்கு மூச்சை அடைத்தது.

''தெய்வம் நின்று கேட்கும்'' என்றான் அவன். ''அதை நீ நம்பவேண்டும். நம்பினால் அது உன் உள்ளத்திலும், என் உள்ளத்திலும் நிலைத்து நின்று கேட்கத்தான் செய்யும்!''

''தெய்வம் இனி என் உள்ளத்தில் நிற்காது!'' என்று கத்தினாள் அவள். அவன் சட்டென்று அருகில் சென்று அவள் வாயைப் பொத்தினான்.

''அவச் சொல் கூறாதே! உன்னிடம் நிற்கும் தெய்வம் உன் கண்களுக்குத் தெரியாவிட்டாலும் அது எனக்குத் தெரிகிறது. என்னுள்ளே உருவில்லாமல் குழம்பிக் கொண் டிருந்த எண்ணங்களுக்கு அதுதான் இப்போது உருவமும் உயிரும் ஒளியும் கொடுத்திருக்கிறது. இந்த நாட்டை விடுதலை செய்தே தீருவேன். இது சத்தியம்! நீ நம்பு, நம்பு, நம்பு...!''

ஆவேசம் கொண்ட ஒருவன் அந்த ஆவேசம் தீர்ந்த வுடன், தன் பேச்சு மூச்சிழந்து நினைவிழந்து சரிந்து விடுவதைப் போல், அங்கேயே அந்த ஆற்றின் கரைமேட்டில் அவன் சுருண்டு விழுந்தான். கயல்விழிக்கு எதுவுமே விளங்கவில்லை. அவளுடைய உயிரைக் காப்பாற்றத் துடித்த அந்த வீரனின் உயிரைக் காக்கும் பொறுப்பு இப்பொழுது அவளுடையதாகி விட்டது.

மெல்ல அவன் தலையை எடுத்துத் திருப்பினாள். அவனை விட்டு எழுந்து சென்று தண்ணீர் எடுத்து வந்து அவன்

முகத்தில் தெளிக்க அவளுக்குத் தோன்றவில்லை. வற்றாப் பொய்கையாக அவள் கண்ணீர் பொங்கி அவன் முகத்தை நனைத்தது.

யாரோ அவளுக்கு வலதுபுறம் விரைந்து வரும் சத்தம் கேட்டது. உருவிய வாளும் கையுமாக நீண்ட தாடியுடன் ஓர் உருவம் வந்தது. சோழ நாட்டு வீரர்களைத் தவிர வேறு யாரையும் உயிருடன் கண்டறியாத கயல்விழி, அந்த இளைஞனைப் பகைவனிடமிருந்து காப்பாற்றத் துடிப்பவள் போல் மெல்ல அணைத்தவாறே அவன் மீது ஒடிந்து விழுந்தாள்.

## 22. மருத்துவர் குடில்



மருத்துவரின் பாதுகாப்பில் விட்டுச் சென்ற சுந்தர பாண்டியனை அங்கு காணாமல் துடிதுடித்த விழுப்பரையர் ஆற்றங்கரையோரமாக ஓடிவந்தபோது அங்கு அவனை ஒரு பெண்பிள்ளையின் மடியில் கண்டவுடன் திகைத்துப் போனார். 'யார் இவள்? சுந்தர பாண்டியரை இவளுக்கு எப்படித் தெரியும்? அவர் நினைவிழந்து கிடக்கிறாரா, அல்லது உயிரிழந்து கிடக்கிறாரா?' உடைவாளை இறுகப்பற்றிக் கொண்டு அந்தப் பெண்ணின் அருகில் நெருங்கினார் அவர்.

கயல்விழிக்கு விழுப்பரையரின் தோற்றம் அந்த இளைஞனின் உயிரை அவளிடமிருந்து பறித்துக் கொண்டு போக வந்த காலனின் தோற்றம்போல் இருந்தது. அவர் அருகில் வந்தவுடன் அவள் தலை நிமிர்ந்தாள். விழுப்பரையரின் விழிகளோ அவள் மடியில் கிடந்தவனை விழுங்கி விடுவது போல் பார்த்துக் கொண்டிருந்தன. வாளும் கையுமாக நின்ற அவரிடம், ''முதலில் என்னைக் கொன்று விட்டுப் பிறகு இவரைக் கொல்லுங்கள்'' என்றாள்.

இன்னும் அவனுக்கு உயிர் இருந்தது என்பதைத் தெரிந்து கொண்டார் அவர். ''பெண்ணே! யார் நீ- எங்கிருந்து இவரை நீ கவர்ந்து கொண்டு வந்தாய்?'' என்று கேட்டார்.

''நான் எங்கிருந்தும் இவரைக் கவர்ந்து கொண்டு வர வில்லை; என்னிடமிருந்து நீங்களும் இவரைக் கவர்ந்து செல்ல முடியாது.''

''யார் இவர்? உனக்கும் இவருக்கும் என்ன உறவு?''

''இவர் யாரோ, நான் யாரோ? ஏதோ புலவர் என்று கூறினார். எங்கள் இரண்டு பேருக்கும் உள்ள ஒரே உறவு நாங்கள் இருவரும் சாகத் துணிந்தவர்கள் என்பதுதான். சாவின் பிடியிலிருந்து நொந்து போய்க் கொண்டிருக்கும் இவர், சாகப் போன என்னைத் தடுத்து நிறுத்தினார். இப்போது அவருக்கே சுயநினைவில்லை.''

விழுப்பரையர் சற்றே தயங்கினார். பைந்தமிழ்க் குமரன் என்ற பெயரில் புலவனாக உலவிவந்த இளவரசர் அவளிடமும் புலவன் என்றே கூறியிருக்கிறார் போலும். அவர் குனிந்து சென்று அந்த இளைஞனைப் பற்றித்தூக்க நினைத்தார். அவள் விடவில்லை. அவரிடம் அவளுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை.

''பெண்ணே! அச்சத்தால் உன்னுடைய சித்தம் குழம்பி யிருக்கிறது. இல்லாவிட்டால் பாண்டிய நாட்டு மனிதனான என்னைக் கண்டு நீ ஏன் குழம்ப வேண்டும்? இந்த இளைஞன் என்னுடைய நெருங்கிய நண்பரின் குமாரர்; சொந்தப் பழக்கத்தோடு நிறுத்திக் கொள்ளாமல் போர்ப் பழக்கமும் பெற்று விட்டார். இவரைத் தேடிக் கொண்டு தான் நான் வந்திருக்கிறேன்.''

''சிறிது நேரம் பொறுத்திருங்கள்; இவருக்கு மயக்கம் தெளிந்து இவர் உங்களை இனம் கண்டு கொண்டாரானால் நீங்கள் இவரை அழைத்துச் செல்லலாம். இல்லாவிட்டால் முடியாது.''

விழுப்பரையருக்கு அவளுடைய மறுமொழி கோபத்தைத் தரவில்லை. அவனைக் காப்பாற்ற வேண்டும் என்பதில் அவளுக்கிருந்த உறுதியை அவர் வியந்தார். அருகிலிருந்து அவளைப் பார்த்தபோதுதான் அவளை முன்பு எங்கேயோ பார்த்த நினைவு வந்தது. அவள் பெயரைக் கேட்டார்.

"கயல்விழி; பாணர் குலப் பெண்."

சிலம்புக் கூத்துக் காட்சி மின்னலெனப் பளிச்சிட்டது அவருக்கு. துடுக்குப் பேச்சும் மிடுக்கு நடிப்புமாக அவள் அன்றைக்கு வீராவேசத்தோடு அரங்கத்தில் கண்ணகியாக உலவிய காட்சி, அவர் மனக் கண்ணில் விரிந்தது. அதை அவளுக்கு நினைவூட்டி அப்போது அந்த இளைஞன் குறுக்கிட்டதையும், தாம் அவனைத் தடுத்ததையும் எடுத்துக் கூறினார்.

"பெண்ணே! அருகில் உள்ள மருத்துவரின் குடிலுக்குத்தான் அவரை எடுத்துச் செல்லவேண்டும். இந்த அபாயகரமான நிலையில் நாம் வாதிட்டுக் கொண்டிருந்தால் இவருக்கு நாம் உதவி செய்தவர்களாக மாட்டோம்."

நொடிப் பொழுதில் ஓடிச் சென்று ஒரு கட்டிலோடு, இரண்டு வீரர்களை அழைத்து வந்தார் விழுப்பரையர். கட்டிலில் அவனை மெல்லக் கிடத்தி அவர்கள் தூக்கிக் கொண்டு சென்றார்கள். விழுப்பரையர் கயல்விழியை அழைத்துக் கொண்டு அவர்களைப் பின்பற்றினார்.

"மதுரையில் உன்னுடைய வீடு எங்கேயிருக்கிறது?" என்று அவளிடம் கேட்டார் விழுப்பரையர்.

"எங்கே இருந்தது என்று கேளுங்கள்" என்று மறுமொழி கூறினாள் கயல்விழி. "இப்போது எல்லாமே தீக்கிரையாகித் தரைமட்டமாகி விட்டன. எங்கே இருந்தது என்று கூடக் கண்டுபிடிக்க முடியாது. என்னுடைய தந்தை யார், உற்றார், உறவினர், பணியாட்கள் யாவரும் என்ன ஆனார்களோ தெரியாது. வைகை ஆற்றைத்தான் என் வீடாக நம்பி வந்தேன்; அதற்கும் குறுக்கே நின்று தடுத்தார் இந்தப் புலவர்."

சிந்தனையில் ஆழ்ந்தபடியே நடந்த விழுப்பரையர், "போருக்கு முன்பாக மதுரையைவிட்டு வெளியேறி யிருக்கலாமே?" என்றார்.

"போரை நான் நேரில்காண விரும்பினேன்; போருக்கு மத்தியில் நான் இருக்க நினைத்தேன்."

சட்டென்று அவள் முகத்தைத் திரும்பிப் பார்த்தார் விழுப்பரையர். ஆடல் பாடல்கள் முதலிய கலைகளில் நாட்டங்கொண்ட பலர் நளினமான வாழ்க்கையை மட்டும் விரும்புவது உண்டு. துணிச்சலுடன் எதையும் செய்ய மாட்டார்கள். ஆனால், இந்தப் பெண்ணோ ஒரு தனித்தன்மை பெற்றவளாக இருந்தாள்.

தென்னோலைத் தட்டியால் சுற்றிலும் வேலிபோல் கட்டப்பட்டிருந்த ஒரு குடிசைக்குள் அவர்கள் நுழைந்தார்கள். இளைஞனைக் கொண்டுபோய் உள்ளே வைத்த இளைஞர்கள் வெளியில் வந்தவுடன், அவர்களும் தட்டியைச் சுற்றிலும் காவலுக்கு நின்றவர்களோடு சேர்ந்து கொண்டார்கள். கயல் விழியை அந்த இளைஞனின் அருகில் விட்டு விட்டு, உள்ளே சென்று மருத்துவரிடம் ஏதோ இரகசியமாகப் பேசிவிட்டு வந்தார் விழுப்பரையர்.

மருத்துவர் புண்களுக்கு மருந்து போடுவதும், உள்ளுக்கு மருந்து கொடுப்பதுமாகத் தமது கடமைகளைக் கவனித்தார். அவருக்கே இளைஞனின் உடல்நிலை பற்றி ஏதும் உறுதிகூற முடியவில்லை.

"இவ்வளவு புண்களையும் தாங்கிக் கொள்ளக்கூடிய உடல் வலிமையும் இவரிடம் இருக்கிறது; ஆனால் உடல் வலிமையைவிட இவருடைய மனவலிமை இருக்கிறதே, அதனுடைய சக்திதான் இவரை இப்படியெல்லாம் ஆட்டி வைக்கிறது. ஓரளவு விழிப்போடு இருந்து கவனித்துக் கொள்ளவேண்டும்" என்று விழுப்பரையர் கூறியது கயல்விழியைப் பார்த்துக் கூறுவதுபோல் தோன்றியது.

நெருப்பாக எரிச்சல் தரக்கூடிய பச்சிலைச் சாற்றையே மருத்துவர் அவனுடைய புண்களுக்குப் போட்டார். அப்போது சற்றே கண்விழித்துப் பார்த்த இளைஞன், தனது பற்களைக் கடித்தவாறே அந்த எரிச்சலைப் பொறுத்துக் கொண்டானே தவிர, சிறிதுகூடக் கூச்சலிட்டுத் தனது வேதனையை வெளிப்படுத்திக் கொள்ளவில்லை.

''எப்படியும் இவர் பிழைத்துக் கொள்வார்; ஏனென்றால் பிழைத்துக் கொள்ளவேண்டும் என்ற எண்ணம் இவரிடம் இருக்கிறது'' என்றாள் கயல்விழி. விழுப்பரையர் திடுக்கிட்டார். கயல்விழி உணர்ச்சி வயப்பட்டுக் கண்ணீர் வடிக்காமல் எண்ணத்தில் நம்பிக்கை வைக்கத் துணிந்திருந்தாள்.

விடிவிளக்கு சிறிதாக எரிந்து கொண்டிருந்தது. மயில் தோகை விசிறியால் மெல்ல வீசியவாறே ஒரு மூங்கில் தூணில் சாய்ந்து கொண்டாள் அவள். மருத்துவர் களைப்பால் படுத்துறங்கி விட்டார். விழுப்பரையருக்கு உறக்கம் வரவில்லை.

''கயல்விழி?''

அவரைத் திரும்பிப் பார்த்தாள் கயல்விழி.

''உன்னுடைய நிலையைப் போலவேதான் இவருடைய நிலையும் இருக்கிறது. இவருடைய உற்றம் சுற்றம் பெற்றோர் யாரையும் இப்போது தேடிக் கண்டுபிடிக்க முடியாது. நீ விரும்பினால் எனக்கு ஓர் உதவி செய்யலாம்'' என்றார் விழுப்பரையர்.

''செய்கிறேன்'' என்றாள், அது என்ன உதவி என்றுகூடக் கேட்காமல்.

''இவருக்கு உடல் நலம் தேற இன்னும் சில வாரங்களோ மாதங்களோகூட ஆகலாம். மருத்துவர் எப்போதும் உடனிருப்பார். ஆனால் அது போதாது. நீயும் அவருக்குத் துணையாக இருந்து இவருக்குப் பணி செய்ய முடிந்தால் அந்த நன்றியை நான் என்றும் மறக்க மாட்டேன்.''

கயல்விழி யோசனை செய்தாள். விதி எப்படியோ அவளைக் கொண்டு வந்து அந்த இடத்தில் தள்ளியிருப்பது போல் அவளுக் குத் தோன்றியது. ''அவ்விதமே இருக்கிறேன்; இதன் மூலம் தாங்களும் எனக்குப் புகலிடம் தந்து உதவுகிறீர்கள்'' என்றாள்.

''இந்த இடத்தில் இனிப் பாதுகாப்போடு இருக்க முடியாது. நம்முடைய பைந்தமிழ்க் குமரனை இந்த நிலையில் வேற்றூருக்கு எடுத்துச் சென்றால் எப்படி ஆகுமோ என்பதால் இங்கு வைத்திருக்கிறேன்; ஓரிரு தினங்கள் சென்ற பின்பு பிரயாணத்தைத் தாங்கும் சக்தி அவருக்கு வந்து விட்டால் நாம் வேற்றூருக்குச் செல்லலாம்; எந்த வினாடியிலும் இங்கே அபாயம் நம்மை சூழக்கூடும்.''

''தாங்கள் எங்கு அழைத்தாலும் வருகிறேன். இவரைக் காக்க எதையும் செய்கிறேன்'' என்றாள் அவள்.

இரவு நேரக் கண் விழிப்பு, அலைச்சல், களைப்பு, நடந்த நிகழ்ச்சிகள் இவற்றால் அவர் மனம் சோர்ந்து போயிருந்தது. தம்மைவிட அவள் வயதில் மிகவும் இளையவள் என்பதையும் மறந்துவிட்டுத் துயரத்தோடு அவளிடம் பேசத் தொடங்கினார்!

''கயல்விழி! என்னுடைய ஒரே குமாரனையும் நான் இந்தப் போரில் இழந்துவிட்டேன். அவனுக்குத் திருமணமாகிய மறுநாளே அவன் போர்க்களத்துக்கு வந்தான். அவையெல்லாம் என்னால் தாங்கிக்கொள்ள முடியும். ஆனால்... இவர்... இவரை என்னால் இழக்கவே முடியாது.''

கயல்விழி அவருக்கு ஆறுதல் கூறினாள். அவசியம் நேர்ந்தால் தன் உயிரைக் கொடுத்தும் அவனைக் காக்க முயல்வதாக வாக்களித்தாள். போரினால் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் துன்பப்பட்டவர்கள் என்ற வகையில் அவள் மனம் மற்ற இருவருக்காகவும் பாகாய் உருகியது.

வாசலில் ஏதோ சத்தம் கேட்கவே, சட்டென்று எழுந்து ஓடினார் விழுப்பரையர். ''பகைவர் பகைவர்!'' என்று காவலர்

கூச்சலிடும் சத்தம் கேட்டது. பிறகு நோயாளியின் கட்டிலிடம் விரைந்தோடினாள். விழுப்பரையரும் விழிகளில் பீதியோடு ஓடி வந்தார்.

தீப்பந்தம் ஒன்று பாய்ந்து வந்து அந்தக் குடிசையின் மீது விழுந்தது. குபீரென்று பற்றிக்கொண்டு கொழுந்து விட்டது தீ. பகை வீரர்களுடன் காவல் வீரர்கள் வாள் வீசும் ஒலிகளும் எழுந்தன.

## 23. இரவும் பகலும்

மருந்துவர் குடிலின் கூரையின் உச்சியில் பற்றிய தீ மறுகணத் திலேயே அதன் எல்லாப் பக்கங் களிலும் சூழ்ந்து கொண்டது. இளை ஞன் படுத்துக் கிடந்த கட்டிலை ஆளுக்கொரு புறமாகத் தூக்கிக் கொண்ட விழுப்பரையரும், கயல் விழியும் அதன் பின்புறமாக வெளி யேறி வந்தனர். பிறகு அடர்ந்து கிடந்த இருளில் புகுந்து கல்லையும் முள்ளையும் பாராமல் விரைந்து நடந்தார்கள். சற்றுத் தொலைவில், நீண்ட நெடுஞ்சுவர்போல் தாழம் புதர் மண்டிக் கிடந்தது. அதற்குள் புகுந்து விரைந்தனர்.

மருத்துவரோ தம் கைகளில் அகப்பட்ட மூலிகைகளைச் சுருட்டிக்கொண்டு சூழ்ந்து கழியையும் ஒரு கூர் வேலையும் எடுத்துக்கொண்டு அவர்களைப் பின்பற்றினார். தாழம் புதர் களினூடே நெடுந்தூரம் நடந்த பின்னர், மையத்தில் சிறிய தோர் இடைவெளிப் பொட்டல், சுற்றிலும் இயற்கையின் மறைவோடு தென்பட்டது. அங்கே கட்டிலை வைத்து விட்டு அவர்கள் காத்துக் கொண்டிருந்தார்கள்.

விழுப்பரையர் புதரினூடே நின்று குடிசையை எட்டிப் பார்த்தார். கொழுந்து விட்டெரிந்த பின்பு அது சிறிதுசிறிதாக

வெந்து தணிந்து சாம்பலாகிக் கொண்டிருந்தது. பகை வீரர்களின் எண்ணிக்கை அதிகமாக இருந்தும் இருளான தாலும், பழக்கமில்லாத புது இடமாக இருந்ததாலும் ஒரு சிலர் பாண்டிய வீரர்களின் வாட்களுக்கு இரையானார்கள். ஒரு சிலர் வந்த வழியே ஓடத் தொடங்கினார்கள்.

ஒரு நோக்கமில்லாமல் அதை ஏதோ ஒரு வீடென்று நினைத்துக் கொண்டு தீயிட்டுச் சூரையாட முனைந்தவர்கள் அவர்கள் என்பது தெரிந்தது; எதிர்ப்பை அவர்கள் எதிர்பார்க்க வில்லை போலும். திரும்பி ஓடியிருப்பவர்கள் அதை அதோடு விட்டு விட மாட்டார்கள். இன்னும் பலரை அழைத்துக் கொண்டு அங்கு வந்தாலும் வரக்கூடும்.

விழுப்பரையர் மெல்லப் புதரை விட்டு வெளியேறிச் சென்று அந்த இடத்தைக் கண்ணுற்றார். பகைவீரர்களில் ஐவரும், பாண்டிய வீரர்களில் இருவரும் வீழ்ந்துபட்டுக் கிடந்தனர். காவல் தலைவனை அழைந்து அவனுடைய செவிகளில் ஏதோ இரகசியமாய்க் கூறினார். பின்பு புதருக்குள் திரும்பி வந்தார்.

வேளை நடுச்சாம வேளை, போர்க் காலமாதலால் கூகை, கோட்டான், ஆந்தை முதலிய பல்வேறு பறவைகள் அங்கே கூடிப் பல்வகையான ஒலிகளை எழுப்பிக் கொண் டிருந்தன. கயல்விழி அதைப் போன்ற ஒரு நள்ளிரவில் காட்டுக்குள் அதற்கு முன்பு இருந்து பழகாதவள். அருகில் ஆண்மக்கள் இருவர் விழிப்புடன் இருந்தார்களென்றாலும் கட்டிலில் கிடந்த இளைஞனின் நிலை அவளைப் பதறச் செய்தது.

திடீரென்று எங்கோ ஒரு மூலையில் சில நரிகள் ஒன்று கூடி ஊளையிடத் தொடங்கின. அதைத் தொடர்ந்து, அதற்கு எதிரொலி கிளம்புவதுபோல் நாலா திசைகளிலிருந்தும் நரிகளின் ஊளைச் சத்தம் நாராசமாய்க் கேட்டது. கயல்விழி நடுங்கினாள். குரல்கள் குதூகலத்தோடும் எக்களிப்போடும் அருகில் நெருங்கிக் கொண்டிருந்தன. விழுப்பரையர்

மருந்துவரிடமிருந்து வேலை வாங்கிக் கொண்டு கயல்விழியின் அருகில் வந்தார்.

சலசலப்புச் சத்தம் கேட்டது தாழம்பூ புதர்களுக்குள். குபீரென்று நூற்றுக்கணக்கான தீச்சுடர்கள் பற்றி எரிவது போல் பளிச்சிட்டு மின்னின, நரிக் கூட்டத்தின் கண்கள். நெருப்புத் துண்டுகளின் கூட்டம் போன்ற அந்தக் காட்சியைக் கண்டவுடனேயே கட்டிலின் மீது கவிழ்ந்துகொண்டு கண்களை மூடிக்கொண்டாள் கயல்விழி.

மருந்துவரின் சூழ்ந்து கழியில் நெருப்புக் கனிந்து கொண்டுதானிருந்தது. அதை நன்றாக வீசிச் சுழற்றினார். அது தீப்பந்தமாக மாறியது. விழுப்பரையர் ஒரே ஒரு நரியை நோக்கிக் குறிவைத்து வேல் பாய்ச்சினார். அவ்வளவுதான்! எல்லா நரிகளுமே பறந்தன.

அருகில் வெந்து தணிந்த குடிசையைச் சுற்றிலும் அவைகளுக்கு விருந்து காத்துக் கிடந்ததால் எல்லா நரிகளுமே அங்கு போய்ச் சூழ்ந்து கொண்டன. வீரர்களின் சடலங்களைத் தங்களது கூரிய பற்களால் கடித்து இழுப்பதும் பிறகு ஆனந்தப் பெருக்கால் வானை நோக்கித் தலையை உயர்த்திக் கொண்டு கூவுவதும், தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்வதுமாக அவை பொழுதைக் கழித்தன.

'பொழுது புலராதா? இரவு கழியாதா?' என்று துடி யாய்த் துடித்தாள் கயல்விழி. இருளுக்கு மத்தியிலிருந்து ஒரு தனிச் சங்கு மெதுவாக ஒலிப்பதுபோல் கேட்டது. விழுப்பரை யர் அதை உற்றுக் கேட்டார். தாமும் அதற்குத் தம் குரல் ஒலியால் மறுமொழி கொடுத்தார்.

''கயல்விழி! வண்டிகள் சித்தமாகி விட்டன. இனி நாம் புறப்படலாம்'' என்றார்.

வீரர்கள் இருவர் வந்து கட்டிலைத் தூக்கியபடி முன்னே நடந்தனர். கயல்விழியின் கரத்தைப் பற்றிக்கொண்டு விழுப்பரையர் பின்பற்றினார். மருத்துவரின் கைச்சுமையை ஒரு வீரன் வாங்கிக் கொண்டான்.

தேய்பிறை நிலவு நெடுநேரம் சென்று தலைநீட்டி மங்கலான ஒளியைச் சிந்தியது. சாலையிலே இரட்டைக் காளைகள் பூட்டிய கூட்டுவண்டி ஒன்று நின்று கொண்டிருந் தது; அதற்குள் மிருதுவான பஞ்சணையை விரித்திருந்தார்கள். மெதுவாக இளைஞனைத் தூக்கி உள்ளே கிடத்தினார்கள். அவனுடைய தலைப்புறம் மருந்துவர் உட்கார்ந்து கொண்டார். கால்மாட்டில் கயல்விழி அமர்ந்து கொண்டாள்; விழுப்பரையர் வண்டிக்கு முன்னால் அமர்ந்து மாடுகளை அதட்டி ஓட்டத் தொடங்கினார். சிறிது தூரத்தில் அந்த வண்டியைப் பின்பற்றி ஒரு வண்டியும், அதற்கு முன்னால் மற்றொரு வண்டியும் ஆக மூன்று வண்டிகள் அந்தச் சாலை வழியே தங்கள் பயணத்தைத் தொடர்ந்தன.

மருந்துவர் ஒரு சுரைக் குடுக்கையைச் சுட்டிக்காட்டி ஒருவேளை அவன் இடையில் விழித்துக்கொண்டால் அதிலிருந்த கஷாயத்தில் ஒரு வாய் அவனுக்குக் கொடுக்கும் படி கயல்விழிக்குக் கூறினார். வண்டியின் ஓட்டத்தில் அவருக்கு உறக்கம் வந்துவிட்டது. அப்படியே சுருண்டு படுத்துக் கொண்டார்.

விழுப்பரையர் எதுவுமே பேசவில்லை. நிதானமாக வண்டியை ஓட்டியபடியே சுற்றிலும் தமது விழிகளைச் சுழல விட்டுக் கொண்டிருந்தார். முன்னாலும் பின்னாலும் வந்த வண்டிகளில் வீரர்கள் ஆயுதங்களுடன் நிறைந்திருந்தார்கள் என்றாலும் இந்தப் பிரயாணத்தை அவனுடைய உடல் நிலை தாங்கவேண்டுமே என்ற கவலை அவரை வெகுவாகப் பற்றிக் கொண்டிருந்தது.

இளம் புலவனின் உடல் நெருப்பாகச் சுடுவதை உணர்ந் தாள் கயல்விழி. அவனுடைய கால்கள் இரண்டும் அந்தச் சூட்டை அவள் கரங்களுக்கு அனுப்பிக் கொண்டிருந்தன. அங்கயற்கண்ணி அம்மையின் பாதங்களுக்குத் தன் உள்ளத்தை அனுப்பி வைத்து அவன் பிழைத்துக் கொள்ள வேண்டுமென்பதற்காக மாலைமாலையாகக் கண்ணீர் வடித்தாள் அவள்.

நேற்று மாலைப்பொழுது வரையில் அவன் யாரோ அவள் யாரோ; ஆனால் இப்பொழுது அவளுடைய ஒவ்வோர் உயிர் அணுவுமே அவனுக்காகத் துடித்தது. 'எப்படியாவது எப்படியாவது, எப்படியாவது இவரைக் காப்பாற்றிவிடு!' என்று தனக்குள் பலமுறை சொல்லிச் சொல்லித் தேம்பினாள் அவள்.

நேரம் ஊர்ந்து கொண்டிருந்தது. காற்று இலேசாக வீசியது. வழியில் தென்பட்ட மரங்களையும், மரங்களில் கூடுகட்டிச் சிறகடித்த பறவைகளையும், கிரீச்சிட்ட அணில்களின் சத்தத்தையும் அவள் கவனிக்கவில்லை. இருளுக்குப் பழகிவிட்ட கண்களால் அவனுடைய முகத்தையே நோக்கிக் கொண்டிருந்தாள். களைப்பும் சோர்வும் சேர்ந்துகொண்டு அவளுடைய விழிகளை அழுத்தப் பார்த்தன. அவள் தன் உறக்கத்தோடு போராடியவாறே அவனைப் பார்த்திருந்தாள். ஒருவேளை தான் உறங்கும் வேளையில் அவன் விழித்துக் கொண்டால் அவனுக்கு மருந்து கொடுப்பது யார்?

பைந்தமிழ்க் குமரன் என்ற பெயரைத் தனக்குள் பல முறை உச்சரித்துப் பார்த்தாள். குமரன் என்ற பெயருக்குள்ள அழகு, இளமை, வீரம், சக்தி யாவுமே அவனிடம் குடிகொண்டிருப்பதாக அவளுக்குத் தோன்றியது. அவனைக் காப்பாற்றுவதற்காக விழுப்பரையர் செய்த முயற்சி களிலிருந்து அவருக்கு இருந்த பற்றுதலையும் உணர்ந்து கொண்டாள்.

தன்னை மறந்து அவன் ஏதோ முனகினான். அருகில் சென்று அதைக் காதுகொடுத்துக் கேட்டாள். சொற்கள் ஒன்றும் தெளிவாக விளங்கவில்லை. அவன் கண்களை மெல்ல விழித்தான். நினைவுகளைத் திரும்பவும் ஒருமுகப் படுத்த முயல்வதுபோல் வண்டிக்குள் விழிகளைச் சுழல விட்டான். பின்னர் ஆர்வத்தோடு தன் முகத்தையே பார்த்திருக்கும் இரு விழிகளைச் சந்தித்தான்.

முதலில் விழிகள் மட்டும் தெரிந்தன. பிறகு விழி மலர்களில் பிறந்த கண்ணீர் மணிகள் தெரிந்தன; பிறகு பிறை நுதல்கள், துடிக்கும் உதடுகள், மதிமுகம், கருங்கூந்தல் யாவுமே தெரிந்தன. அவனால் அவளை யாரென்று இனம் கண்டு கொள்ளமுடிந்தது போலும்! அவன் புன்னகைசெய்ய முயல்வதை அவள் கண்டு கொண்டாள். ஆனந்தப் பெருக்கால் அவள் நெஞ்சு விம்மி வந்தது.

மெல்ல அருகிலிருந்த மருந்தைக் கிண்ணத்தில் வடித்து அவன் தலையைச் சற்று மேலே தூக்கிய வண்ணம் அவனுக் குக் கொடுத்தாள் கயல்விழி. அவன் முகம் சுளிக்காமல் அதைப் பருகினான். பிறகு தலையணையை நகர்த்தி அவன் தலையை மெதுவாக அதன் மேலே கிடத்தினாள்.

நெடுநேரம் அவன் விழிகள் அவள் முகத்தைவிட்டு அகலவில்லை. அவளும் பரிவோடு அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு அவனுக்கு உறக்கமோ களைப்போ மேலிட்டிருக்க வேண்டும். கண்களை மூடிக்கொண்டான்.

கயல்விழிக்கு எப்படியோ ஒரு நம்பிக்கை பிறந்தது. மெதுவாக அவனது காலடியிலேயே தன் தலையை வைத்து முடங்கிக் கொண்டாள். விடிவெள்ளி புறப்படும் நேரத்தில் எழுந்த காலைக் காற்று அவளுடைய இமைகளையும் வருடத் தொடங்கியது. தன்னை மறந்து உறங்கத் தொடங்கினாள்.

காலைக் கதிரொன்று சுள்ளென்று அவள் முகத்தில் வீசிய போதுதான் அவளுடைய உறக்கம் கலைந்தது. வண்டி நெடுஞ்சாலையை விட்டுக் காட்டுப் புதர்களினூடே தென்பட்ட குறுகலான பாதை வழியே சென்று ஒரு குன்றின் அடிவாரத்தில் நின்றது.

கீழே குதித்து அம் மலைக் காட்சியைக் கண்ணுற்றாள் கயல்விழி. குன்றின் மேலே மஞ்சுப்பொதி போன்று மேகக் கூட்டம் தவழ்ந்து கொண்டிருந்தது. கண்கள் திரும்பிய பக்கமெல்லாம் ஒரே பசுமை மண்டிக் கிடந்தது. அங்கு வீசிய காற்றில் சாரல் கலந்து குளுமையைப் பரப்பியது.

மற்ற வண்டிகளிலிருந்து இறங்கியவர்களுக்குக் கட்டளைகள் பிறப்பித்துக் கொண்டிருந்தார் விழுப்பரையர். குன்றின் சரிவில் கட்டப்பட்டிருந்த ஒரு மண்டபத்துக்குள் அவனைக் கொண்டு போய்க் கிடத்தினார்கள். கயல் விழிக்கு முதல்நாள் இரவில் அனுபவித்த துன்பங்கள் யாவுமே இந்த இடத்தைக் கண்டவுடன் மறந்து போய்விட்டன.

பாடிப் பறக்கும் பறவைகளோடு அவள் மனம் சிறகடிக்கத் தொடங்கிவிட்டது.

திரும்பவும் அவன் கண் விழித்தான். திரும்பவும் அவள் கஷாயத்தை வார்த்துக் கொடுத்தாள். இப்பொழுது இருவருடைய முகங்களிலும் ஒன்றாகவே புன்னகை மலர்கள் பூத்தன.

## 24. தியாக விநோதர்



குலோத்துங்க சோழச் சக்கரவர்த்தி தம்மால் பெயர் மாற்றி வைக்கப் பெற்ற 'சேர பாண்டியர் தம்பிரான்' என்ற பாண்டிய மாளிகையின் மேல்மாடத்தில் நின்றவாறு கண்ணுக்கெட்டிய தூரம் வரையிலும் எல்லாத் திசைகளிலும் திரும்பிப் பார்த்தார். திரும்பிய திசைகளிலெல்லாம் அவருடைய வெஞ்சினத்தின் விளைவுகள் திட்டுத் திட்டாகத் தெரிந்தன! இடிபாடுகள் நிறைந்த தெருக்கள், கூரையில்லாத சுவர்கள், சாம்பர்க் குவியல்களான வீடுகள், யானைகளால் துவைத்து அழிக்கப் பெற்ற பூங்காக்கள்! வீசும் காற்றுக்கூட பிணவாடை சுமந்த காற்றாக இருந்தது.

வெற்றிப் பெருமிதத்தில் விழாக்கள் நடத்திப் பூரித்த சக்கரவர்த்திக்கு இப்போது ஏனோ எல்லாவற்றிலுமே வெறுப்பு ஏற்பட்டு விட்டது. நினைத்த செயல்களை நினைத்த

வாறே முடித்து விட்டவர் அவர். மதுராந்தகம் செய்து விட்டார்! இளவரசன் சுந்தரபாண்டியனைக் கொன்று பழியும் தீர்த்துக் கொண்டார்; விழாக்கள் நடத்தி விருதுப் பெயர்களும் சூட்டிக்கொண்டார். ஆனால் யாவற்றையுமே திட்டப்படி முடித்த பிறகு, ஏனோ எல்லாவற்றிலுமே அவருக்கு வெறுப்பு மிகுந்துவிட்டது.

அந்த ஒரு செய்தியை அவர் கேள்வியுற்றதிலிருந்து அவருடைய மன அமைதி பறிபோய் விட்டது. அவருடைய குமாரனைப் பற்றிய செய்தி அது. அதைப் பற்றி அவனிடம் தனித்துப் பேசுவதற்காக அவனை அங்கு அழைத்திருந்தார். அவன் வந்து அரை நாழிகைப் பொழுதாக அவருக்காகக் காத்துக் கொண்டிருந்தான். ஆனால் அவருக்கோ அவனைத் திரும்பிப் பார்ப்பதற்கே மனமில்லை.

அவ்ருக்கே பொறுக்க முடியாதபடி அவருடைய சினம் இப்போது வெடித்துவிட்டது. சட்டென்று திரும்பி அவன் முன்னே வந்து நின்று கொண்டார்.

''என் வாழ்நாளில் நான் எத்தனையோ போர்களை நடத்தியிருக்கிறேன். ஆனால் இவ்வளவு வேகத்தோடு என் சக்திகளையெல்லாம் திரட்டிக்கொண்டு நான் யாரையுமே தாக்கி அழித்ததில்லை. இந்தப் போரை எதற்காக நடத்தினேன்? யாருக்காக நடத்தினேன்? –தெரியுமா உனக்கு?''

குனிந்த தலை தூக்காமல் மௌனமாக நின்றான் இளவரசன்.

''உனக்காக, உன் ஒருவனுடைய நன்மைக்காக, உன்னை அழிவிலிருந்து காப்பதற்காக, உன் எதிர்காலப் பகைவனை அழிப்பதற்காக, இதை நடத்தினேன்! ஆனால் நீயோ?... உன்னிடம் நான் எப்படி அதைப்பற்றிப் பேசுவது?'' அவர் அங்கம் பதறியது.

அவனும் நடுங்கினான்.

''வெறியூட்டப்பட்ட படையாட்களை வைத்துக் கொண்டுதான் நாம் போர் நடத்துகிறோம். ஆனால், அந்த

வெறிச் செயல்களும் ஒரு நெறிக்குள் கட்டுப்பட்டு நிற்க வேண்டும். சோழ நாட்டில் பெண்கள் இல்லை என்பதற்காகவா நான் இந்த பாண்டிய நாட்டுக்குப் படை யெடுத்து வந்திருக்கிறேன்? சுத்த வீரனைப் போல் நீ போருக்கு வருவதாக முந்திக்கொண்டு நின்றாயே, இதற்குத் தான் அப்படி நின்றாயா?''

இளவரசன் இராஜராஜனுக்கு இந்த விஷயத்தைப் பற்றித் தந்தையார் எதற்காக இவ்வளவு தூரம் கோபம் கொள்ளவேண்டும் என்று விளங்கவில்லை. போர் என்றால் இதையெல்லாம் இவர் பொருட்படுத்தலாமா?

''போர் வீரர்களின் கட்டுப்பாடு குலைந்து, அவர்களும் உன்னைப்போல் அலையும் அளவுக்கு அவர்களுக்கு நீ வழி காட்டியிருக்கிறாய்! தலைவனே தவறு இழைத்தால், படைக் கூட்டத்தை எப்படிக் கட்டுப்படுத்தி நடத்த முடியும்? இராஜராஜா! மதுரை மாநகரத்தைத்தான் நான் அழிக்க நினைத்தேனே தவிர, அந்த நகரத்துப் பெண்களின் மானத்தை அழிக்க நினைக்கும் துணிவு எனக்கு இன்னும் ஏற்பட வில்லை. நம்முடைய வீரர்களில் பலருக்கு நானே கொலைத் தண்டனை விதித்து அதை உடனே நிறைவேற்றச் செய்திருப்பேன்; ஆனால் முதலில் உன்னையே என் வாளுக்கு இரையாக்க வேண்டுமே என்பதற்காக நான் அதைச் செய்யவில்லை.''

ஒரு பசுக் கன்றைத் தேர்க்காலில் கொன்றதற்காகத் தமது குமாரனையே அப்படிக் கொன்ற சோழர்களின் வழியில் வந்த குலோத்துங்கர்தாம் இப்படிப் பேசினார்.

''இராஜராஜா! கூத்தியரின் இல்லத்திலிருந்து உன்னைக் கொண்டு வந்து மாளிகையில் தள்ளவேண்டிய அளவுக்கு, நீ நம் பணியாட்களுக்கு முன்னிலையில் தாழ்ந்து போனாய். உன்னுடைய இந்த வீழ்ச்சி உன்னை எங்கே கொண்டு போய்விடும் என்பதை நீ இன்னும் அறியவில்லை. இதனால் ஏற்பட்டுள்ள பழி பாவத்தை, இனி ஏற்படப்போகும் வஞ்சத்தை, எப்படி நீ துடைத்துக் கொள்ளப் போகிறாய்?''

குலோத்துங்கரின் செவிகளில் படை வீரர்களில் சிலர் வரம்புக்கு மீறி நடந்து கொள்வதாகச் செய்தி எட்டியது. அதை உடனடியாக விசாரித்தறிந்து நடவடிக்கை எடுக்கும் படி பல்லவராயருக்குக் கட்டளையிட்டிருந்தார். பிறகு தான் அவருக்கே அதற்கான 'மூலகாரணம்' விளங்கியது. நெறி கெட்டலைந்தவர்களுக்கு ஊக்கம் கொடுத்தவன் இராஜராஜன்!

''இதோ பார்! ஒரு தந்தை தன் மைந்தனிடம் பேசுகின்ற செய்தி அல்ல இது. சோழ சாம்ராஜ்யத்தின் எதிர்காலச் சக்கரவர்த்தியிடம் பேசுகிறேன். அரசாள்பவனைத் தெய்வம் என்று போற்றி மதிக்கும் நாடு இது. அரசியல் தலைமை என்பது உரிமையால் உனக்குக் கிடைத்து விட்டால் மட்டும் போதாது. தலைவன் கோழையாகவோ, திறமையற்றவனாகவோ இருந்தால், அது அவனிடம் நிலைக்கவே நிலைக்காது. அரசுரிமையும் ஆட்சிபீடமும் எதிர்பார்க்கும் நீ, என்னிடமிருந்து எந்த அளவுக்கு அரசு நீதியைக் கற்றுக் கொண்டிருக்கிறாய்? எந்த அளவுக்கு உன் தகுதிகளை வளர்த்துக் கொண்டிருக்கிறாய்? என் நிழலில் என் பெயரைச் சொல்லி, எவ்வளவு நாட்களுக்கு உன்னால் இந்நாட்டைக் கட்டி ஆள முடியும்?''

குலோத்துங்கர் வேகமாக அந்த இடத்தை விட்டுத் திரும்பினார். இராஜராஜனும் அவரைப் பின்பற்றினான். மாளிகையின் மேல் மாடத்திலிருந்து கீழே இறங்கிய அவர், நேரே கட்டுக்காவல் நிறைந்த ஒரு கூடத்துக்குள் நுழைந்தார்.

அந்தப் போரில் கிடைத்த விலை மதிப்பற்ற பொன்னும் மணியும் அங்கே குவியல் குவியலாய்க் கிடந்தன. இராஜராஜன்கூட இவ்வளவு செல்வத் திரளை ஒரே இடத்தில் அதற்கு முன்பு தன் கண்களால் கண்டதில்லை. அவ்வளவுக்கும் அவை வெற்றி விழாவின்போது சோழநாட்டு வீரர்களுக்கும் பாணர்களுக்கும் பரிசில்கள் அளித்தது போக மிஞ்சியிருந்தவை. கங்காபுரித் தலைநகரத்தில் தனபண்டாரத்

திலே சேர்ப்பதற்கென்று சக்கரவர்த்தி அவற்றை ஒதுக்கி வைத்திருந்தார்.

திருமந்திர ஓலை நாயகரையும் தனபண்டாரத் தலைமை அதிகாரியையும் அழைத்து வரும்படி கட்டளை பிறந்தது. ஓடோடி வந்து வணங்கினர் அவர்கள்.

''கட்டளைகளை எழுதிக் கொள்ளுங்கள்!'' என்று சக்கரவர்த்தியின் ஆணை பிறக்கவே ஏட்டில் எழுத்தாணி பதித்துக் காத்திருந்தார் ஓலைநாயகர்.

''இந்தப் பொருட் குவை எல்லாவற்றையுமே நான்காகப் பிரித்துப் பின்கண்ட தெய்வப் பணிகளுக்காக உரிமையாக்கிவிட வேண்டும்; ஒன்று, தென்மதுரைத் திருவாலவாயன் கோயில் திருவிழாக்களுக்கும் அவன் கோவில் கோபுரங்களில் பொன் வேய்வதற்கும்; இரண்டு, தில்லையில் ஆடும் அம்பல வாணருக்கும் அவர்தம் திருநடனம் கண்டு அருளும் பாடகப் பைங்கிளிக்கும்; மூன்று, பொன்மதில் திருவாரூர் தியாகராஜப் பெருமானுக்கு; நான்கு, திருபுவன விரீச்சுர தேவருக்கு. பாண்டிய நாட்டிலிருந்து பெற்ற இந்தப் பொருள்களை அந்தப் போரில் அறிந்தும் அறியாமலும் நடைபெற்றிருக்கக்கூடிய பழிபாவங்களுக்குப் பிராயச்சித்தமாக இறைவனுக்கு மேற்கண்டவாறு காணிக்கையாக்குகிறோம்.''

சக்கரவர்த்தி கடைசியாகக் கூறிய சொற்கள் கூர்மையான ஈட்டி முனைபோல் இராஜராஜனின் நெஞ்சில் பாய்ந்தன. அதைவிட மிகுதியாக, அவன் அந்தப் பொருட் குவை போய்விட்டதற்காக வருந்தினான்.

அன்றைக்கு ஆலவாயன் கோயிலுக்குச் சென்று நெடுநேரம் சிலையாகச் சமைந்து நின்று அவன் திருவடிகளைத் தொழுதார் குலோத்துங்கர். தம் குமாரனையும் வணங்கச் செய்தார். தன் தந்தையின் செய்கை ஒவ்வொன்றுமே அவன் விருப்பத்துக்கு விரோதமாயிருந்தது. ஆனாலும் அச்சத்தால் பணிந்து நடந்தான்.

'ஆலவாய் அண்ணலே! விஜயாலய சோழர் கனவு கண்டு இந்த சாம்ராஜ்யத்துக்கு அடித்தளமிட்டார். இராஜேந்திர சோழர் இதை மாபெரும் சாம்ராஜ்யமாக்கி உலகப் புகழோடு சிறந்தோங்கச் செய்தார். நானும் எனது முன்னோர்களின் அடிச் சுவட்டை மறவாது இன்றுவரை இதைக் கட்டிக் காத்து விட்டேன். எனக்குப் பின்பு?...' தமக்குத்தாமே கூறிக் கொள்பவர் போல், தழுதழுத்த குரலில் மன்றாடினார் அவர்.

வியப்பும் வெறுப்பும் அடைந்தான் இராஜராஜன். எத்தனையோ கோடி மக்கள் அடிபணியக் காத்து நிற்கும் ஒருவர், பல லட்சம் படை வீரர்களைச் சாவை நோக்கி ஏவிவிடும் அதிகாரம் படைத்த ஒருவர், ஆயிரமாயிரம் அதிகாரிகளை ஆட்டிப் படைத்து நாட்டில் ஆட்சி நடத்தும் ஒருவர், இப்படியா கோயிலில் கண்ணீர் வடித்து நிற்பது?

அன்றைக்கு இரவில் சக்கரவர்த்தி உணவு கொள்ள வில்லை. உறக்கம் வராமல் போகவே, மீண்டும் இராஜ ராஜனை அருகில் அழைத்து வைத்துக் கொண்டார். அவனுக்கு இது வேதனையைத் தான் கொடுத்தது.

''நான் சாம்ராஜ்யத்துக்கே தலைவன். ஆனால் இந்த ஈரேழு உலகங்களுக்குமே தலைவனான ஒருவனுக்கு அஞ்சிக் கட்டுப்பட்டு, அன்பு செலுத்தி வாழ்பவன்! அவனைத்தான் நாம் இன்று கோவிலில் கண்டு வந்தோம். அந்தத் தலைவன் தன்னைப் பின்பற்றுகிறவர்களுக்காக என்ன தியாகம் செய்தான் என்று உனக்குத் தெரியுமா?''

வயது மிகுந்தவரின் பொருளற்ற பேச்சு என்று எண்ணிப் போசாதிருந்தான் இளைஞன்.

''தன்னை நம்பியவர்களை வாழவைப்பதற்காக ஆலகால விஷத்தையே உண்டவன் இந்தத் தலைவன். தலைவனுக்குரிய முதல் தகுதி தியாகசித்தம். அதனால்தான் எத்தனையோ விருதுப் பெயர்கள் எனக்கு இருந்தாலும்,

என்னைத் தியாக விநோதன் என்று குடிமக்கள் அழைக்கும்போது நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.''

இதுவரை விளங்காதிருந்த அடுத்த புதிர் இப்போது விளங்குவதுபோல் தோன்றியது அடுத்த தலைமுறையாளனுக்கு.

''இதோ பார்! குடிமக்களும் 'தலைவன் எப்படி யிருந்தாலும் தலைவன்தான்' என்று ஏற்றுக் கொள்ளுகிறவர் களாக இல்லை. காலப்போக்கில் அவர்களும் விழிப்படைந்து வருகிறார்கள். அவர்களுக்காகத் தியாகம் செய்யத் துணியாதவர் களிடம் இனி அவர்கள் கட்டுப்பட்டுப் பணியமாட்டார்கள். நீ என்ன செய்கிறாய், எப்படி வாழ்கிறாய் என்பதை உனக்குக் கீழே உள்ள ஒவ்வொருவனும் காணத் துடிப்பான். உன்னுடைய தலைவனாகிய இறைவனும் 'இமைப்பொழுதும் நெஞ்சத்தில் நீங்காது நின்று' உன்னைக் கண்காணித்து வருவான்; ஆகவே, நீ அரசியல் வாழ்வு நடத்த வேண்டுமானால், நீ தலைவனாக வேண்டுமென்றால், உனக்குத் தியாக சிந்தையே முதல் துணை!''

''இனி நான் விழிப்போடிருக்க முயல்கிறேன்'' என்றான் இராஜராஜன்.

''சென்று வா! விதியுடன் போராடி வெற்றி பெறத் துடிக்கிறேன் நான். என் காலத்தில் என்னுடனேயே நீ வாழ்ந்தும், என் பாதையில் நடக்க நீ பழகிக் கொள்ளவில்லை. உன்னை நான் உருவாக்கி விட்டால், உன் தலைமுறையில் மட்டுமல்ல, உனக்குப் பின்பு வரக்கூடிய பல தலைமுறை களுக்கும் இந்த சாம்ராஜ்யம் சிறப்போடு விளங்கும். இல்லையேல் உன் தலையில் நீயே தீயிட்டுக் கொண்டவனாவாய்!''

அவன் எழுந்து சென்றான். சக்கரவர்த்தியின் உடலெங்கும் தீப்பற்றி எரிவதுபோல் ஒரு வேதனை பரவியது.

# 25. வெற்றியின் தோல்வி



சக்கரவர்த்திக்கு உடல் நலம் கெட்டுவிட்ட செய்தி வெளியில் எங்கும் பரவிவிடாதபடி பாதுகாக்கப் பட்டது. முக்கியமான அதிகாரிகளுக்கும் அந்த மாளிகையில் இருந்தவர்களுக்குமே அந்தச் செய்தி தெரியும். மருத்துவம் இரவு பகலாய் நடந்து கொண்டிருந்தது. கங்காபுரித் தலைநகரத்திலிருந்து இராஜராஜனின் தாயாரான புவன முழுதுடையார் மட்டிலும் சக்கரவர்த்திக்கு அருகிலிருந்து பணிவிடைகள் செய்ய வந்திருந்தார்.

மருத்துவர்களின் உழைப்பைவிட, அரசியாரின் ஆறுதல் மொழிகளாலும் பணிவிடைகளாலுமே அவர் சிறிது சிறிதாகத் தேறி வந்தார். உடல் நோய் என்று நம்பிப் பலவகை மருத்துவங்களையும் செய்து வந்தார்கள் மருத்துவர்கள். அரசியாருக்கு மட்டிலும் அந்த நோயும் அதன் காரணமும் விளங்கிவிட்டன. மருந்தாகவே மாறிப் போய்க் குலோத்துங்க சக்கரவர்த்தியின் உள்ளத்துக்குள் உறையத் தொடங்கினார் அவர்.

''தேவி! அந்தப் புவன முழுதுக்கும் நான் சக்கரவர்த்தியாய் இருப்பதில் மகிழ்ச்சி கொள்வதைவிட, இந்த புவன முழுதுடையாளுக்குத் தலைவனாக இருப்பதில் தான் மிகுதியாக மகிழ்ச்சி அடைகிறேன்!'' என்று நன்றிப் பெருக் கோடு கூறினார் அவர். அவருடைய உள்ளம் நன்றிப் பெருக் கால் அப்போது பொங்கி வழிந்து கொண்டிருந்தது. சாம்ராஜ்யத்தின் சுமைகள் யாவையும் அவர் மட்டுமே சுமப்பதாகத்தான் உலகம் நினைத்தது. ஆனால் அரசியாரின் மனமொத்ததியாக வாழ்வால்தான் அவர் தியாக விநோதராகவே விளங்க முடிந்தது.

''இராஜராஜனைப் பற்றிய கவலை தங்களை வீணாக வாட்டிக்கொண்டிருக்கிறது'' என்று கூறினார் அரசியார்.

''வீணாக என்று சொல்கிறாயா?''

''ஆமாம், தங்களுடைய உயரத்திலிருந்து கொண்டு அவனைத் தாங்கள் காணுகிறீர்கள். இந்த இளம் பருவத் திலேயே அவன் தங்கள் உயரத்துக்கு வளர்ந்து விட முடியுமா?''

''என்னைப்போலவே எனக்குப் பின்னாலும் அவன் கையில் நாடு பத்திரமாக இருக்குமென்று நீ நம்புகிறாயா?''

''தங்களுக்குப் பின்னால் என்ற சொல்லை இனிமேல் என்னிடம் கூறாதீர்கள்'' என்று தழுதழுக்கக் கூறினார் அவர். ''ஆனால் அவனுக்கென்று பொறுப்புகளும் கடமைகளும் பெருகும் காலத்தில் அவன் ஒன்றும் கோழையாகிவிட மாட் டான். நமக்குப் பிறந்தவனல்லவா அவன்?'' எனறார் அரசி.

குலோத்துங்கர் மெல்ல சிரித்தார்; ''உனக்கே நம் குமாரனிடம் நம்பிக்கையில்லை என்று எனக்குத் தெரியும். தெரிந்தும் எனக்கு ஆறுதல் வேண்டுமே என்பதற்காக இப்படிச் சொல்கிறாய். இதையே நீ நூறுமுறை என்னிடம் திருப்பிச் சொல்! உன்னுடைய இந்த அன்புச் சக்தியை நீ எப்போதும் எனக்குக் கொடுத்துக்கொண்டேயிருக்கிறாய். என்னை உன்னுடைய சின்னஞ்சிறு குழந்தையாக மாற்றி விடக்கூடிய வசீகரம் ஒன்று உன்னிடம் இருக்கிறது. அதற்காகத்தான் உன்னை இங்கு வரவழைத்தேன்.''

எழுபது வயதைக் கடந்தவர் குழந்தையானார். அறுபது வயதைக் கடந்தவர் அந்தக் குழந்தையிடம் கொஞ்சினார். 'இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை' என்ற வாக்கை மெய்ப்பிக்கப் பிறந்த உத்தமி அவர். நினைவெல்லாம், சொல்லெல்லாம், செயலெல்லாம் குலோத்துங்கருக்காகவே காணிக்கை யாக்கியவர். அவரது அன்புதான் தம் மூலமாகச் சாம்ராஜ்ஜியத்தையே கட்டிக் காத்தது என்று சக்கரவர்த்தி முழுமனத்தோடு நம்பினார்.

பாண்டிய நாட்டில் அப்போது நடந்து கொண்டிருந்த அரசியல் விஷயங்களை அவர்கள் இருவரும் அந்தரங்க மாகப் பரிமாறிக் கொண்டார்கள்.

இளவரசன் சுந்தரபாண்டியனைக் கொன்றுவிட்டதால் நாடு எங்கும் மக்கள் அஞ்சி ஒடுங்குவார்கள் என்று நினைத்தது போக, எங்குமே குமுறி எழுந்து கொண்டிருக் கிறார்களாம். இன்னும் குலசேகர பாண்டியர் எங்கு மறைந்திருக்கிறார் என்று யாருக்கும் தெரியவில்லை. அவரைக் கண்டு பிடிக்கச் செய்த முயற்சிகள் யாவும் வீணாகிவிட்டன.

''மந்திரச் சொற்களில் உனக்கு நம்பிக்கை இருக்கிற தல்லவா!'' என்று கேட்டுவிட்டு, ''எனக்கு நம்பிக்கை உண்டு!'' என்றார் அவர்.

''எனக்கு ஒரே ஒரு மந்திரந்தான் தெரியும். ஆனால் அதை வாய்விட்டு நான் உச்சரிக்க முடியாது'' என்றார் தேவியார். குலோத்துங்கரின் பெயரை அவர் எப்படி வாய் விட்டுச் சொல்வார்?

''சுந்தர பாண்டியன் என்ற சிறுவன் இரண்டே இரண்டு வாக்கியங்களை இந்தப் பாண்டியநாடு முழுவதும் பரப்பி விட்டுப் போயிருக்கிறான். நம்மால் அவனை அழிக்க முடிந்ததே தவிர அவன் சொற்களை அழிக்க முடியவில்லை. தெற்கே நம் படைகளை அனுப்பி வைத்தேன். நாட்டில் நம் ஆட்சியை நிலை நாட்டலாமென்று. ஆனால் குடிமக்களும் வளநாட்டுத் தலைவர் களும் நம் படைகளைத் திடீர் திடீரென்று வளைத்துக் கொள்கிறார் களாம். மதுரையில் பெண்களுக்குத் தீங்கிழைக்கப்பட்ட செய்தி வேறு ஒன்றுக்கு நூறாக உள்நாட்டில் பரவியிருக்கிறது. வழக்கமாக அஞ்சி ஒதுங்கும் பெண்டிர் நம்முடைய படைகளுக்குப் பேய்களாக மாறிவிட்டார்களாம்.''

நிலைமையை ஓரளவு விளங்கிக் கொண்ட அரசியார், ''சுந்தரபாண்டியன் கூறிய செய்தி என்னவென்று தாங்கள் கூறவில்லையே?'' என்றார்.

''நாங்கள் அழிந்துபடுவோம்; ஆனால் அடிமைகளாக மாட்டோம்!''

''சொல்லுக்கு மட்டும் தனியே வலிமை இருக்காது; அதைச் சொல்லியவனும் வல்லவனாகவே இருந்திருக்க வேண்டும்'' என்றார் அரசி.

''ஆமாம், அவனும் வல்லவன்தான்'' என்றார் சக்கரவர்த்தி. ''சொல்லியபடியே அவன் அழிந்துபட்டான்; ஆனால் அவன் சொல்லை மக்கள் அழியவிடமாட்டார்கள் என்று தோன்றுகிறது. இந்தச் சூழ்நிலையில் இந்த நாட்டை நேரடியாக நம்மால் ஆளமுடியாது.''

அரசியார் மௌனம் சாதித்தார். பாண்டிய நாட்டை வென்றபிறகு அதற்கு இராஜராஜனை தலைவனாக்கச் செய்யலாம் என்று சக்கரவர்த்தி எதிர்பார்க்கக் கூடும். ஆனால் அவனோ தன் பெயரைக் கேட்ட அளவிலேயே மக்கள் தன்னை வெறுக்கும்படி செய்து கொண்டு விட்டான். பாண்டிய நாடும் அழிவதற்குத்தான் துணிந்து நின்றது. சோழர்களின் ஆட்சியை அது பொறுத்துக் கொள்ளப் போவதில்லை.

''தாங்கள் படைத்தலைவர்களுடன் ஆலோசனை நடத்தியிருப்பீர்களே!''

''நம்முடைய எல்லாப் படைகளும் சில மாதங்கள் பாண்டிய நாட்டில் தங்கியிருந்தால், சிறிதுசிறிதாக ஆட்சியை உருவாக்கலாம் என்கிறார். சயங்கொண்ட சோழ வல்லபர் மூலமாகச் சில துரோகிகளைப் பிடித்து நம் கையாட்களாக மாற்றிக் கொள்ளலாம்.''

''தாங்கள்தாம் எப்போதுமே இதுபோன்ற சிறு பொறுப்புகளில் சக்தியை விரயம் செய்வதில்லையே!'' என்று மிகச் சாதுரியமாகப் பேசினார் அரசியார். அந்தப் பேச்சு அவருக்குப் பிடித்திருந்தது என்றாலும் அரசியாரின் நோக்கம் குலோத்துங்கருக்கு விளங்கவில்லை.

''நீ என்ன சொல்கிறாய்?''

''தங்களுக்கு ஆலோசனை கூறும் தகுதி எனக்கு எங்கே இருக்கிறது?'' என்று கேட்டுவிட்டு ''சாமராஜ்யத்துப் படைகள் எல்லாமே இங்கு இருந்தால், அதன் பாதுகாப்பைப் பற்றிச் சிந்திக்கவேண்டும்; மேலும் நாமோ இங்கு வெற்றி பெற்று விட்டோம்; ஆட்சிப் பொறுப்பையும் சுமந்து அல்லல்படுவதற் குரிய பலனும் நமக்குக் கிடைக்காது'' என்று முடித்தார்.

பாண்டிய நாட்டில் குலோத்துங்கர் பெற்ற வெற்றி இப்போது உடும்புப் பிடியாக அவரைப் பற்றிக்கொண்டு விட்டது. 'உடும்பு வேண்டாம்; அது கையை விட்டால் போதும்' என்று உதறும் அளவுக்கு அவருடைய செருக்கு இடம் கொடுக்கவில்லை.

''நீங்கள் தாம் தியாகம் செய்வதையே ஒரு வீர விளையாட்டாகக் கருதும் சீலராயிற்றே?'' என்றார் அரசியார்.

''தியாகம் செய்வதற்கும் இப்போது ஒன்றும் வழி தெரியவில்லையே?'' என்று தடுமாறினார், தம்முடைய வெற்றி என்ற கூண்டுக்குள் தாமே அகப்பட்டுக் கொண்ட வெம்புலியான குலோத்துங்கர்.

''நான் பேதை! ஏதாவது கூறி வைத்தால் தங்களுடைய வெஞ்சினத்துக்கு ஆளாக வேண்டிய நிலை ஏற்படக்கூடும். தங்களுடைய வெஞ்சினத்தின் பெரும் பகுதியை முதலில் என்னிடம் தானே திருப்புவீர்கள்?''

குலோத்துங்கர் தமக்குள் நகைத்துக் கொண்டார். உரையாடும் பழக்கத்தை ஒரு கலையாகவே எப்படி அரசியாரால் கற்க முடிந்தது என்ற வியப்பு அவருக்கு. வயது மிகுதியாகச் சாகசமும் மிகுந்து கொண்டு தான் வருகிறது என்று அவர் பெருமைப்பட்டுக்கொண்டார்.

''என்னுடைய வெஞ்சினத்தையெல்லாம் குளிர் தென்ற லாக மாற்றக் கூடிய வித்தகி நீ. தாராளமாக இப்போது உனக்கு சோழ சாம்ராஜ்யத்தின் அமைச்சர் பதவியை அளிக்கிறேன். நீ உன் ஆலோசனைகளைக் கூறலாம். இன்னும் அரைநாழிகைப் பொழுதுக்கு நீதான் அமைச்சர்!'' குலோத்துங்கரின் மனம்

மிகவும் இலேசாக மாறி உற்சாகத்துடன் அப்போது மிதந்து கொண்டிருந்தது.

அரசியார் மெல்ல அவரை நெருங்கிச் சென்றார். அவருடைய செவிகளில் மட்டும் கேட்கும்படியாக எதையோ கூறினார். பிறகு அவர் முக மாறுதல்களைப் புன்னகை பூத்தவாறே உற்று நோக்கினார்.

''வெற்றியையே தியாகம் செய்வது என்பது தங்களுக்கு விநோதமாகத் தோன்றலாம். தியாக விநோதர் என்பதால் நானும் கூறத் துணிந்தேன்.''

''வெற்றியின் தியாகமல்ல இது; வெற்றியின் தோல்வி!''

''தங்களுக்கு அப்படித் தோன்றினால் தயவுசெய்து என்னை மன்னித்தருளுங்கள். பெரிய பெரிய விஷயங்களை நினைத்துப் பார்ப்பதற்கே எனக்குத் தகுதி போதாது.''

அரசியாரை அருகில் அழைத்து நெஞ்சாரத் தழுவிக் கொள்ள வேண்டுமென்று துடித்தது குலோத்துங்க சக்கரவர்த்தியின் மனம்.

''வெற்றியின் தோல்வியைத்தான் நீ இப்படி என்னிடம் தியாகமென்று மாற்றிச் சொல்லியிருக்கிறாய். நான் அதை அந்த உருவத்தில் வெளியுலகத்துக்குச் சொல்ல வேண்டுமென்பது உன் விருப்பம். ஆகட்டும்! அவ்வாறே செய்வோம். வெற்றி எனக்குக் களைப்பையே தருகிறது. இந்தத் தோல்வி எனக்கு மகிழ்ச்சி தரக்கூடியதுதான்.''

அன்று இரவு அமைதியோடு உறங்கினார் குலோத்துங்கர். நோய் பெரும் பகுதி குறைந்துவிட்டது.

மறுநாள் படுக்கையில் கிடந்தவாறே அவர் படைத் தலைவர்கள் கூட்டத்தில் இதைக் கூறினார்.

''இந்த வெற்றியையே தியாகம் செய்துவிட்டு நாம் சோழ நாட்டுக்குத் திரும்ப வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. கண்டவர் நடுங்கும் காலன் என்றுதான் என்னை இதுவரையில் பாண்டியர்கள் நினைத்திருப்பார்கள்.

நான் தியாகவிநோதன் என்பதையும் அவர்கள் இதன் வாயிலாக அறிந்து கொள்ளட்டும்.''

பரபரப்போடு சக்கரவர்த்திகளின் கருத்தறியக் காத்திருந்தார்கள் படைத் தலைவர்கள்.

''குலசேகர பாண்டியர் எங்கிருந்தாலும் அவரை அழைத்து வந்து நாமே நம் கரத்தால் மூடிசூட்டி விட்டுச் செல்ல விரும்புகிறோம் என்று முரசுச் செய்தி பரப்புங்கள். நம்முடைய தியாகவிநோதம் இந்தப் பாண்டிய நாடு முழுவதுக்கும் தெரிந்திருக்க வேண்டும். இதைக் கேட்ட வுடன் அவர்கள் தங்களது இளவரசனின் பிரிவை மறந்து விடுவார்கள். நம்முடைய நோக்கத்தையும் நிறைவேற்றி விட்டதால் மிகுதியை நாம் தியாகம் செய்துவிடுவோம்!''

விடைபெற்றுக் கொண்டு சென்ற படைத்தலைவர்கள் ''நம்முடைய சக்கரவர்த்திகளின் தியாகத்தைப்போல் நாம் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை!'' என்று பெருமை யோடு கூறிக் கொண்டார்கள். சக்கரவர்த்தியோ தம்மை அரசியார் ஏமாற்றியதையும் தாம் உலகை ஏமாற்றியதையும் எண்ணி நகைத்துக் கொண்டார்.

அவருடைய தியாக விநோதச் செயல் பாண்டிய நாடு எங்கும் பறந்து சென்றது.

## 26. குளிர்சோலைக் கொடுங்குன்றம்



**வா**னத்தில் வண்ணத்திறள் மேகம் செறிந்து வைகைப் புனலின் மேற்பரப்பிலேயே சில காலங்கள் குளிர்ச் சாரலைப் பொழிவதுண்டு. அப்போதெல்லாம், வைகையில் வாழும் கயல் மீன்களின் கூட்டத் துக்கு எல்லையற்ற குதூகலம் பொங்கி எழுவதைக் காணலாம்.

நீரின் மேற்பரப்புக்கு வந்து அவை கூட்டம் கூட்டமாய் மேலே துள்ளி விளையாடித் திரியும் காட்சி இருக்கிறதே, அது கண்கொள்ளாக் காட்சி. கயல்விழியும் இப்போது அத்தகைய தொரு கயல்மீனாகத் தான் மாறியிருந்தாள்.

கண்ணெதிரில் தோன்றி அவளது உள்ளத்தையெல்லாம் கொள்ளை கொண்டு நின்றது அந்தக் குளிர் சோலைக் கொடுங்குன்றம். அதன் பேரெழில் வெள்ளத்திலே அவள் சின்னஞ்சிறு பொன் மீனாக உருவெடுத்து நீந்தித் திளைக்கத் தொடங்கி விட்டாள்.

திரும்பிய திசைகளிலெல்லாம் சரக்கொன்றை பூத்துப் பொன்னருவி போல் பொழிந்து கொண்டிருந்தது. தேன் வண்டுகளின் ரீங்காரத்துக் கிடையில் குழலோசையின் மோகன ராகம் மயக்கத்தை எழுப்பிச் சுழன்றது. தொலை தூரம் குன்றின் உச்சியில் ஒருபுறம் கோயில் கோபுரம் நிமிர்ந்து நிற்பதைக் கண்ணுற்றாள். இறைவனும் அழகு நிறைந்த சூழ்நிலையை தேடிப்பிடித்துத்தான், இயற்கை எழில் பொங்கும் இடமாகப் பார்த்துத்தான், தனது மங்கை நல்லாளுடன் அங்கு வந்து தனித்திருக்கிறான் போலும்...

'திருஞானசம்பந்தர்கூட இந்தக் கொடுங் குன்றத்தையும், இதையடுத்த திருநகரையும், இதில் உறையும் நல்ல மங்கை பாகனையும் பாடியிருக்கிறாரே!' என்று அவள் நினைத்தபோது, அவளையறியாமல் அவள் இதழ்கள் அசைந் தன, தேவாரம் தேன் பெருக்காய்த் தென்றலில் கலந்தது.

**வானின் பொலி வெய்தும் மழை**
**மேகம் கிழித் தோடிக்**
**கூனல் பிறை சேரும் குளிர்**
**சாரல் கொடுங் குன்றம்...**
**மயில் புல்குதண் பெடையோடுடன்**
**ஆடும் வளர் சாரல்**
**குயில் இன்னிசை பாடும் குளிர்**
**சோலைக் கொடுங் குன்றம்!**

வெண்பனிச் சாரலுக்குப் பின்னே அந்தப் பொன் மயமான மாலைவேளையில் கீழ்த்திசையில் வானவில் தோன்றியிருந்தது. அதைக் கண்டு பொறுக்காத ஆண் மயிலொன்று தன் தோகையை விரித்தபடி மெய்சிலிர்க்கத் தன் பேடையின் முன்னால் ஆடத் தொடங்கிவிட்டது. ஆடற்கலைச் செல்வியின் உள்ளமும் தன் தோகையை விரித்து நடனம் புரிந்தது.

வைகையாற்று வெள்ளத்தில் தான் குதித்து இறந்து போயிருந்தால் இந்தப் பேறு தனக்குக் கிடைத்திருக்குமா என்று அவள் எண்ணிப் பார்த்தாள். பைந்தமிழ்க் குமரன் பிழைத்து எழுந்துவிடுவான் என்ற நம்பிக்கையை அவளுக்கு அந்தச் சூழ்நிலை ஒவ்வொரு கணமும் கொடுத்துக் கொண்டு இருந்ததால் தான் அவளுக்கு உயிர் வாழ்வதில் ஒரு பிடிப்பும் அக்கறையும் கொள்ள முடிந்தது. மருத்துவருக்கு வேண்டிய மூலிகைகள் யாவும் அங்கு கிடைத்தன. காற்று, கதிரொளி, தேன், தினைமா, தீஞ்சுவைத் தண்ணீர் எதற்குமே தட்டில்லை.

விழுப்பரையரும் அவர்களுக்கு வேண்டிய உணவு உடை முதலிய பொருட்களை எங்கிருந்தோ கொண்டு வரச் செய்து அங்கு குவித்திருந்தார். அவருடைய செயல்களில் பொதிந்து கிடந்த அன்பை மட்டிலும் அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர் எங்கெங்கோ சென்றார்; ஏதேதோ செய்தார். அவர் எங்கு சென்றாலும் எதைச் செய்தாலும் யாவும் பைந்தமிழ்க் குமரனுக்காக இருந்தன.

கண்ணின் கருமணியாக, உயிருக்கு உயிராக உயிரினும் சிறந்த ஏதோ ஒன்றாக, அந்த இளைஞனை அவர் எதற்காகப் பாதுகாக்க வேண்டும்? கயல்விழிக்கு இது வியப்பாகவே இருந்தது. அவருடைய அன்பினால் தானும் அவரைப் போலவே மாறிவிட்டதை உணர்ந்தாள். அல்லது அந்த இளைஞனிடம் ஏதோ மாயசக்தி இருக்கக்கூடும் என்றும் அவளுக்கு நினைக்கத் தோன்றியது.

''அம்மா கயல்விழி'' என்று உள்ளிருந்தவாறே குரல் கொடுத்தார் மருத்துவர். துள்ளல் நடையுடன் அவரிடம்

சென்றாள். மருந்துகள் சித்தமாக இருந்தன. உள்ளே குடிப் பதற்குக் கொடுக்க வேண்டிய கஷாயத்தையும் விழுப் புண்களுக்குப் போடவேண்டிய பச்சிலைக் கூழையும் எடுத்துக் கொண்டாள் கயல்விழி.

''இந்தப் பச்சிலைக் கூழ் உடம்பில் பட்டால் எரியுமோ ஐயா?'' என்று வெகுளியாய்க் கேட்டாள் கயல்விழி. குளிர்ச்சியாக இருக்கவேண்டும் என்பது அவள் ஆவல்.

மருத்துவர் புன்முறுவல் பூத்துவிட்டு, ''வேண்டு மானால் ஒரு துளியை எடுத்து உன் கரத்தின்மேல் தடவிப் பார்!'' என்றார் விளையாட்டாக.

கயல்விழி ஒரே ஒரு துளியை எடுத்துத் தன்னுடைய புறக் கையில் மெல்லப் பூசினாள். செந்தணலைக் கொண்டு வந்து வைத்ததுபோல் அந்த இடம் பற்றி எரிந்தது. தேளால் கொட்டப் பெற்றவள் போல் கரத்தை உதறிக் கொண்டு 'ஆ!' வெனக் கூவினாள். அவள் துடித்த துடிப்பைக் கண்டு விட்டு மருத்துவரே பதறிப் போனார்.

எங்கோ நினைவாக மண்டபத்துக் கூரையைப் பார்த்த படி படுத்திருந்தான் பைந்தமிழ்க் குமரன். அவனால் எழுந்து நடமாட முடியவில்லையே தவிர, அவன் சுய உணர்வைப் பெற்றுவிட்டான். பொழுதில் ஒரு பகுதி உறக்கத்திலும் மறு பகுதி விழிப்பிலும் கழிந்து கொண்டிருந்தது. அவன் விருப்பப்படி ஓலைச் சுவடிகள் சிலவற்றை அவனருகில் கொண்டு வந்து வைத்திருந்தார் விழுப்பரையர். அவன் அவற்றை எடுத்துப் படிக்க முயன்றான்! அவனால் படிக்கவும் முடியவில்லை, மருத்துவரும் அவனைத் தடுத்து விட்டார்.

வைத்தியம் தொடங்கியது. மருந்துகளை வைத்து விட்டு மயில்தோகை விசிறியை எடுத்து மெல்ல விசிறத் தொடங்கினாள் கயல்விழி. இதுபோல் பணிவிடைகள் செய்யும் பழக்கமெல்லாம் அவளுக்கு முற்றிலும் புதுமை யானவை. ஏவலுக்குப் பணிப் பெண்களும் தோழிகளும் இருந்ததால் அவள் தன் மாளிகையில் இளவரசி போலவே

வளர்ந்தவள். இப்போதோ ஒவ்வொன்றை யும் அவள் செய்து பழகிக் கொள்ள வேண்டியிருந்தது. இந்த மாற்றத்தை அவள் விரும்பி மேற்கொண்டு விட்டாள்.

வேப்பிலைத் தண்ணீரால் காயங்களைச் சுத்தமாகக் கழுவி அவற்றின் மேலிருந்த பற்றுத் துணிகளை இழுத்தார் மருத்துவர். அவனுடைய விரிந்து பரந்த மார்பகமெங்கும் ஒரே மலர்க்காடுபோல் காட்சியளித்தது. அவ்வளவும் செக்கச் சிவந்த செம்பரத்தம் பூக்கள், செவ்விரத்த மலர்கள்.

அந்த மலர்களை மொய்க்கும் இரு கருவண்டுகள் எனக் கயல்விழியின் கண்கள் அந்த வீரனின் மார்பகத்தைச் சுற்றி வந்தன. பைந்தமிழ்க் குமரனும் கவனித்து விட்டான். 'வீரா வேசமான பேச்சும் நடிப்பும் அரங்கத்தில் மட்டிலும் தான் வெளிப்படும் போலிருக்கிறது!' என்று அவன் நினைத்தபோது, ஏளனச் சிரிப்பொன்று அவன் இதழகளில் மிதந்து நின்றது.

''எதற்காக இப்படி நகைக்கிறீர்கள்? எப்படி உங்களால் நகைக்க முடிகிறது?''

''நகைப்பது குற்றமா? நான் வேறு என்ன செய்ய வேண்டும் என்று நீ சொல்கிறாய்?''

மருத்துவர் நிதானமாக ஒவ்வொரு புண்ணின் மீதும் பச்சிலைக் கூழை வைத்து அதற்குமேல் புதிய துண்டுத் துணி களைப் போடத் தொடங்கினார். அவன் துடிதுடித்ச' ஷலறப் போவதை எதிர்பார்த்து நடுநடுங்கினாள் கயல்விழு. அவன் வலி தாங்காது கூவப்போகும் காட்சியைக் காணப் பொறுக் காது தன் கண்களைப் பொத்திக் கொண்டாள். ஒவ்வொரு முறையும் மருத்துவர் புண்ணின்மீது மருந்து தடவும் போதும் ஒவ்வொரு கூர் வேலை அவள் நெஞ்சில் பாய்ச்சுவது போலிருந்தது.

விசிறியை மெல்லக் கீழே வைத்துவிட்டு, அங்கிருந்து எழுந்து ஓட முயன்றாள் அவள்.

''கயல்விழி!'' அன்பு பொங்கும் குரலில் அவன் மிகவும் கனிவோடு அவளை அழைத்தான்; அவள் திரும்பிப் பார்த்தாள்.

''தயை செய்து இப்படி அமர்ந்து சிறிது வீசுகிறாயா?''

அணுவளவும் வலியோ வேதனையோ அநுபவிக்காதவன் போல் அவன் புன்முறுவல் செய்து கொண்டிருந்தான். ஏனோ அவன் மீது அவளுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. இவ்வளவு பயங்கரமாகக்கூட ஓர் இளைஞன் இருக்கக் கூடும் என்று அவள் கற்பனையும் செய்யவில்லை.

மருத்துவர் தமது பணியை முடித்துக் கொண்டு உள்ளே எழுந்து சென்றார்.

''ஏன் இப்படி வாய்விட்டுத் துன்பத்தை வெளியிடாமல் மறைக்கப் பார்க்கிறீர்கள்?'' என்றாள் அவள்.

''துன்பமா! அது இருந்தாலல்லவோ வெளியிடுவதற்கு?''

''என்னை ஒன்றும் ஏமாற்ற வேண்டாம். வெறுங் கையில் பட்டபோதே இந்த மருந்து பற்றி எரிகிறது...''

''எனக்கோ அது சந்தனக் குழம்புபோல் குளிர்ச்சியாக இருக்கிறது. என்னிடம் அன்பு கொண்ட யாரோ அதன் வெம்மை யையெல்லாம் தனக்கென்று எடுத்துக்கொண்டு விட்டார்கள் போலிருக்கிறது!''

உற்று அவனையே வியப்போடு பார்த்தாள் கயல்விழி. அவனும் அந்தக் கண்களின் குளுமையால் தனது உடல் வேதனையைக் குளிர்விக்க முயன்று கொண்டிருந்தான்.

கயல்விழிக்கு ஏனோ இவன் வெறும் புலவனில்லை என்ற ஐயம் உதயமாகிவிட்டது. மென்மையான உணர்ச்சிகளும் கலை உள்ளமும் கொண்ட புலவனாக இருந்தால், இவனால் எப்படி அளவுக்கு மீறிய உறுதியுடன் விளங்க முடியும்?

கயல்விழிக்குப் பொறுக்க முடியவில்லை.

''உண்மையைக் கூறுங்கள்; நீங்கள் புலவரா? அல்லது மறவரா?'' என்று கேட்டாள். திடுக்கிட்டான் பைந்தமிழ்க் குமரன்.

# 27. இளைஞனின் கனவு



இரகசியங்களைக் காப்பாற்றுவதைக் கடமையாகக் கொண்டிருந்த பைந்தமிழ்க் குமரன் கயல்விழி தன்னிடம் நேரடியாகக் கேட்ட கேள்வியால் சிறிது அதிர்ச்சியடைந்தான். '' நீங்கள் புலவரா? அல்லது போர் வீரரா?'' என்று மீண்டும் கேட்டாள் அவள். கேட்டுவிட்டு அவனுடைய முகத்தையே உற்றுப் பார்த்தாள்.

''புலவர்களுக்கும் போர் வீரர்களுக்கும் ஏதும் வேறுபாடு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை'' என்றான் பைந்தமிழ்க் குமரன். ''சொற்கள் என்ற ஆயுதம்கொண்டு தீமையை அழித்து நன்மை நிலைநாட்டப் போராடுவோர் புலவர்கள், அதையே போர்க் கருவிகளைக் கொண்டு செய்பவர்கள் போர் வீரர்கள்.''

''இவர்களில் நீங்கள் யார் என்றுதான் நான் கேட்கிறேன்.''

''தொழிலால் நான் புலவன்; அவசியம் நேரும்போது ஆயதமும் ஏந்துவேன். போர் வந்துவிட்டதால் களம் புகுந்தேன். அவ்வளவுதான்.''

''உடலெல்லாம் நெருப்பாய்ப் பற்றி எரியுமே, இந்த வேதனையை எப்படி நீங்கள் தாங்கிக் கொள்கிறீர்கள்?'' என்று கண்ணீர் கலந்த குரலில் கேட்டாள் கயல்விழி.

''புலவர்களுக்கெல்லாம் தலைவர் ஒருவர் இருக்கிறார். படைத்தலைவருடைய கட்டளைக்கு வீரன் எப்படிப் பணிய வேண்டுமோ, அப்படி எங்கள் தலைவரின் கட்டளைக்கு நான் பணியக் கடமைப்பட்டிருக்கிறேன். 'இடுக்கண் வருங்கால் நகுக' என்று கூறித் துன்பம் வரும் காலத்தில் நகைக்கச்

சொல்லியிருக்கிறார் அவர். நான் நகைக்கிறேன்; துன்பம் பறக்கிறது. நான் அழுதுகொண்டிருந்தால் துன்பம் பெருகத் தானே செய்யும்? குறையப் போகிறதா?''

''எவ்வளவு கொடிய துன்பம் வந்தாலும் இதுதான் மருந்தா?'' என்று கேட்டுவிட்டு தன்னுடைய மலைபோன்ற துன்பங்களை நினைத்துக்கொண்டு அவள் தேம்பித் தேம்பி அழுதாள். அவளால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை.

பெண்களுடன் நெருங்கிப் பழகி அறியாதவன் அவன். துன்பங்களை அந்த மெல்லியலார் எவ்வளவு மிகுதியாகப் பெருக்கிக் கொள்ளுகிறார்கள் என்பதை அவள் வாயிலாகக் கண்டான். அவளோ அதன் தொல்லை தாங்காது மீண்டும் ஓடிச் சென்று மலைமுகட்டிலிருந்து கீழே விழுந்து விடுவாள் போலிருந்தது.

''கயல்விழி! உன் துன்பத்தை நான் அறியக்கூடாதா?'' என்று கயல்விழியை நோக்கிக் கனிவோடு கேட்டான் பைந்தமிழ்க் குமரன்.

அவனுடைய குரலின் ஏக்கம் அவளுக்குச் சிறிது ஆறுதலளிக்க முயன்றது. ''இந்தப் போர்தான் என்னுடைய துன்பம்'' என்றாள் அவள். ''என்னுடைய அருமைத் தந்தையார் எங்கு சென்றாரோ, என்ன ஆனாரோ தெரிய வில்லை. பணி யாட்களும் காவலர்களும் என் முன்னாலேயே கொல்லப்பட்டார்கள். என்னுடைய அத்தையார் இந்தக் கொடுமை தாங்க முடியாமல் மூர்ச்சித்து விழுந்து இறந்தார். இன்னும்..இன்னும்...'' விக்கி விக்கி அவளால் அழத்தான் முடிந்தது. மேலே பேச முடியவில்லை.

''உன்னுடைய கண்ணீரைத் துடைக்கக்கூடச் சக்தியற்றவனாகக் கிடக்கிறேன் நான்'' என்று கூறிய அவனது விழிகளில் இரண்டு நீர்மணிகள் திரண்டுவிட்டன.

''வீரனையும் கோழையாக்கி விட்டோமே!'' என்று பதறிய கயல்விழி, ''அதற்குள் உங்கள் தலைவரின்

ஆணையை மறந்து விட்டீர்களே?'' என்று கூறி அவன் கண்ணீரைத் துடைத்து விட்டாள். ''எனக்காக நீங்கள் வள்ளுவரை மறந்துவிடக் கூடாது!'' என்றாள்.

''நம் இருவருக்குமே இப்போது அவர்தான் துணை செய்யவேண்டும்'' என்றான் பைந்தமிழ்க் குமரன். பிறகு அவளிடம் கூறி அருகிலிருந்த சுவடியை எடுக்கச் செய்தான்.

'' 'இடுக்கண் அழியாமை' என்ற தலைப்பில் உள்ள பத்துக்குறளையும் தயவு செய்து எனக்காகப் படிக்கிறாயா?''

''நான் படிக்கிறேன்; நீங்கள் பொருள் கூறுங்கள்'' என்று சொல்லிக் கயல்விழி மகிழ்ச்சியோடு குறட்பாக்களைப் படிக்கத் தொடங்கினாள். பைந்தமிழ்க் குமரன் விளக்கம் கூறினான். அவன் கூறிய விளக்கங்களைக் கேட்ட போது அவளுடைய மனத்துயர் அவளை அறியாமலே விலகத் தொடங்கியது. அவனும் அதில் தன்னை மறந்து உற்சாகமாகவே ஒன்றிவிட்டான்.

சாளரத்தின் வழியே குளிர்க் காற்று இதமாக வீசியது. குன்றின்மீது அடர்ந்து கிடந்த மரங்களில், பசுமை இனிய காட்சி நல்கியது.

''வைகையாற்றங்கரையில் என்னிடம் வீர சபதம் செய்து கொடுத்தீர்களே, அது நினைவு இருக்கிறதா?''

''அது ஒன்றுதான் என்னுடைய முதல் நினைவு; முக்கியமான கனவு.''

''அதை எப்படி நிறைவேற்றப் போகிறீர்கள்? புலவராகிய உங்களால் அது எவ்வாறு சாத்தியமாகும்?''

''வள்ளுவர் இருக்கிறார்; அவர் எனக்கு வழி காட்டுவார்; வெற்றியும் தேடித் தருவார்'' என்றான் பைந்தமிழ்க் குமரன்.

கயல்விழியால் தனது நகைப்பை அடக்க முடிய வில்லை. அவளையும் மீறிய ஏளனச் சிரிப்பு அது, இளைஞனுக்கு அது சுருக்கென்று தைத்துவிட்டது.

''கயல்விழி! நீ பாரதக் கதையைக் கேள்விப் பட்டிருக்கிறாயா? மிகப் பெரிய போர் ஒன்று அதில் பதினெட்டு நாட்கள் தொடர்ந்து நடந்ததே தெரியுமா, உனக்கு?''

''தந்தையார் கதை சொல்லியிருக்கிறார்கள்.''

''போர் தொடங்குவதற்கு முன்னால் துவாரகையின் அரசனான கண்ணனைத் தங்கள் பக்கத்தில் சேர்ந்து கொள்ளும் படி கேட்பதற்காகப் பாண்டவர்களுக்காக அர்ச்சுனனும் கௌரவர்களுக்காகத் துரியோதனனும் சென்றார்கள், கண்ணனோ இருவருக்குமே உறவினராதலால் இருவருக்குமே உதவுவதாகச் சொன்னார்.''

புலவனிடம் அகப்பட்டுக்கொண்டால் கதை கேட்காமல் இருக்க முடியாது என்று உற்றுக் கேட்டாள் கயல்விழி. அவன் அதைக் கூறிய முறையிலும் அவளுக்கு ஒரு தனி அழகு புலப்பட்டது.

''உம்; பிறகு?''

''கண்ணன் அவ்விருவரிடமும் கூறினார்; 'என்னுடைய லட்சக்கணக்கான போர் வீரர்களையும் அவர்களுக்கான ஆயுதங்களையும் ஒருவருக்குக் கொடுக்கிறேன். என்னை மட்டும் மற்றொருவருக்குக் கொடுக்கிறேன். ஆனால் நான் என்னைக் கொடுத்தாலும் ஆயுதம் ஏந்திப் போர் புரியமாட்டேன். போர் புரியாத இந்தக் கண்ணன் யாருக்கு வேண்டும்? லட்சக்கணக்கான என் வீரர்களும், ஆயுதங்களும் யாருக்கு வேண்டும்?''

''எனக்குத் தெரியும்! எனக்குத் தெரியும்!'' என்று குதூகலத்தோடு கூறினாள் கயல்விழி. ''கண்ணனை மட்டும் தன்னுடைய சாரதியாக ஏற்றுக் கொண்டான் அர்ச்சுனன். சேனை வீரர்களையும் போர்க் கருவிகளையும் கேட்டான் துரியோதனன்.''

''வெற்றி பெற்றது யார்?'' என்று கேட்டான் பைந்தமிழ்க் குமரன்.

''அர்ச்சுனன்!''

''எப்படி?''

கயல்விழி மருண்டு விழித்தாள்.

''கண்ணன் புலவனாக மாறி அர்ச்சுனனுக்குக் கீதையை உபதேசம் செய்தான். லட்சக்கணக்கான போர் வீரர்களை விடக் கண்ணனின் கீதைக்கு எவ்வளவு வலிமை என்பது தெரிகிறதல்லவா?''

வியப்புடன் அவன் விழிகளை நோக்கினாள் கயல்விழி. அன்று அர்ச்சுனனுக்குக் கீதை ஓர் ஆயுதமாக இருந்ததென்றால், இன்று எனக்கு வள்ளுவரின் குறள் ஏன் ஆயுதமாக இருக்க முடியாது? செந்தமிழ் மதுரையில் பிறந்த நான் இந்தப் பொய்யாமொழியின் வழியில் செல்ல வில்லையென்றால் நான் தமிழனாய்ப் பிறந்து பயன் என்ன?''

இளைஞனின் கண்களில் புத்தொளி சுடர்விட்டது. எல்லையற்ற நம்பிக்கையும் ஆண்மையும் அவனை ஆட்கொண்டு விட்டன என்பதைக் கண்டாள் கயல்விழி.

''முதற் கடமையாக நான் இந்த நாட்டின் இருட் சிறையில் வாடும் வள்ளுவரையும் மற்ற புலவர்களையும் அவர்களுடைய சிறையிலிருந்து விடுவிக்கப் போகிறேன். வள்ளுவர் தலைமையில் ஒரு புலவர் படை திரட்டி இந்த நாடு முழுவதும் அனுப்பப் போகிறேன். என் கடமையில் பெரும் பகுதியை அவர்களே முடித்து விடுவார்கள்.''

வள்ளுவரைச் சிறை மீட்பதா! புலவர்கள் படை திரட்டுவதா! 'ஐயோ பாவம்! சித்தப்பிரமை கொண்டவர் போல் பேசத் தொடங்கிவிட்டாரே!' என்று கவலைப்பட்டாள் கயல்விழி.

''மன்னரும் மக்களும் ஒன்று கூடிச் சங்கம் அமைத்துப் புலவர்களையும் இலக்கியங்களையும் போற்றி வளர்த்த செந்தமிழ் மண் இது. அப்போதெல்லாம் இந்த நாடு சீரும் சிறப்பும் பெற்றுத் தலைநிமிர்ந்து நின்றது. இப்போதோ நமக்கு வழிகாட்டும் அந்தப் பண்பாளர்கள் ஏட்டுச் சுவடிகளுள் சிறைப்பட்டு இருட்டு மூலைகளில்

பதுக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் வடிக்கும் கண்ணீரில் தான் இந்த நாட்டின் துன்பங்களே முளைத்திருக்கின்றன.''

கயல்விழிக்கு அந்த இளம் புலவனின் தலைக்குள்ளே பெரிய பெரிய விஷயங்கள் நிறைந்திருப்பதுபோல் தோன்றியது. அவனோ எட்டமுடியாத கனவுலகத்தில் சஞ்சரித்துக் கொண்டே அவளிடம் ஏதேதோ பேசினான். சில செய்திகளை மட்டுமே அவளால் விளங்கிக் கொள்ள முடிந்தது. ஆனால் ஒன்றே ஒன்றை மட்டும் அவள் உறுதியாகக் கண்டு கொண்டாள். அவன் இதயம் அன்புப் பெருக்கால் பொங்கி வழியும் இதயம். பாண்டியநாட்டு மக்களின் துயரைக் களைவதற்காக அவன் இன்னும் எத்தனையோ துன்பங்களை ஏற்றுக்கொள்வதற்குச் சித்தமாக இருந்தான். அவனுடைய அன்புக்குப் பாத்திரமான அந்த நாட்டு மண்ணில் பிறந்ததற்காகக் கயல்விழி இப்போது பெருமைகொண்டாள்.

## ௨௯. தீயில் பிறந்த கண்ணீர்



குலசேகர பாண்டியரிடமே பாண்டிய மண்டலத்தின் ஆட்சிப் பொறுப்பை ஒப்புவிக்கப் போவதாகக் குலோத்துங்கர் விடுத்த அறிவிப்பு நாட்டின் எல்லாத் திசைகளுக்கும் பரப்பப்பட்டது. சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி செய்யும் மகத்தான தியாகம் இது என்று முரசுகள் முழங்கத் தொடங்கின. 'தியாக விநோதரின் இந்தத் தியாகத்தை'ப் பாண்டிய மக்களுக்கு எடுத்துச் சொல்லி அவர்களுடைய வெறுப்பைத் தணிப்பதற்காக அரும் பாடுபட்டார் குலோத்துங்கர்.

ஆனால் குலசேகர பாண்டியர் இன்னும் இந்த அழைப்பை ஏற்றுக் கொள்ளவில்லை.

இதனால் கலவரமடைந்த சக்கரவர்த்தி, குலசேகர பாண்டியர்மீது தமக்கொன்றும் கோபமில்லை என்றும், இளைஞன் சுந்தர பாண்டியனின் அடக்கமின்மையே போருக்குக் காரணமென்றும் அறிவிப்புகள் விடுத்தார். அந்தச் சிறியோன் செய்த சிறு பிழையைப் பெரியோராகிய நாம் மன்னித்து விட்டதாகவும் பாண்டியருக்கு எல்லாவித அரச மரியாதைகளோடும் நாட்டை வழங்கப் போவதாகவும் கூறினார்.

மறைந்து வாழ்ந்த குலசேகரப் பாண்டியரை விழுப்பரையர் சந்தித்து விவரங்களைக் கூறியபோது, அவர் இதனால் சிறிதும் உற்சாகம் கொள்ளவில்லை. சுந்தர பாண்டியன் கொல்லப் பட்டான் என்ற செய்தி அவரை உருக்குலைத்து விரக்தியடையச் செய்து விட்டது.

''சக்கரவர்த்தியின் பரிவினால் மீண்டும் அவரது மேலாட்சிக்கு அடங்கி நாம் அரசு செய்வதானால், நாம் இந்தப் போரையே நடத்தியிருக்க வேண்டாமே!'' என்றார் குலசேகர பாண்டியர். சுந்தர பாண்டியரின் பிரிவுக்குப் பின்பு அவர் அரண்மனையில் வாழ்வதைவிட ஆரண்யத்தில் வாழ்வதே தமக்கு அமைதி தரும் என்றார்.

''நாம் தீமைக்கு அடிபணிய மாட்டோம் என்பதை நிலை நாட்டுவதற்காகவே இந்தப் போரை நாம் ஏற்றுக் கொண்டோம். இதில் நமக்கு வெற்றி கிட்டுமென்று நாம் நினைக்கவுமில்லை; இது கடைசிப் போராட்டமுமல்ல'' என்று வாதாடினார் விழுப்பரையர்.

''கடைசிப் போரை எவன் நடத்துவான் என்று நம்பியிருந்தேனோ அவனை முதற் போரிலேயே பறிகொடுத்து விட்டேனே!''

சுந்தரபாண்டியன் உயிரோடிருக்கிறான் என்பதையும் அதுவும் அடுத்தாற்போல் உள்ள கொடுங்குன்றத்தின் சரிவிலேயே இருக்கிறான் என்பதையும் கூறிவிடத் துடிதுடித்தது விழுப்பரையர் மனம். ஆனால் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டார். விரைவில் வந்து மீண்டும் சந்திப்பதாகக் கூறி விடைபெற்றார்.

பைந்தமிழ்க் குமரனாக இருந்த சுந்தர பாண்டியனின் உடல் நிலையில் இப்போது தேற்றம் கண்டிருந்தது. எழுந்து நடமாடத் தொடங்கிவிட்டான் அவன்.

கயல்விழியைக் கொடுங்குன்றம் நகரத்துக்கு அழைத்து வந்து அங்கு குடியேறியிருந்த குடும்பத்தாருடன் வசிக்கச் செய்திருந்தார் விழுப்பரையர். பகல் பொழுதுகளை அவனுக்குப் பணிவிடைகள் செய்வதிலும் அவனோடிருந்து குறள் படிப்பதுமாகக் கழித்துவிட்டு மாலை நேரங்களில் வீட்டுக்குத் திரும்பி விடுவாள் கயல்விழி. திருவுடைத் தேவியாரின் தாயன்பும் உய்யவந்தாளின் உற்ற பருவத்துத் தோழமையும் அவளுக்கு ஏற்றவையாக இருந்தன. உய்யவந்தாளின் தாங்க முடியாத துயரம் கயல்விழிக்கு அவளிடம் உள்ளம் கனிந்த பரிவைப் பொங்கச் செய்தது.

விழுப்பரையர் சுந்தர பாண்டியனுக்கு அரண்மனையில் மெய்க்காவலனாக இருந்த அம்பலக் கூத்தனையும் அழைத்துக் கொண்டு அவனைக் காணச் சென்றிருந்தார். அம்பலக் கூத்தன் நெடும் பனை போல் உயர்ந்து வளர்ந்தவன். அவருடைய தோற்றமும் விழிகளுமே கண்டோரைக் கதிகலங்கச் செய்யக் கூடியது. ஆனால் வயதில் இளைஞன்.

இந்தப் போரினால் அடையாளம் கண்டுகொள்ள முடியாதபடி உருமாறிப் போயிருந்தான் அவன். முகத்தில் பாய்ந்த பகைவரின் கொடுவாள் அவனது இடது பக்கத்து நெற்றியையும் புருவத்தையும் இருகூறாகப் பிளந்திருந்தது. இடது கண் செங்கோளாக மாறிப் போய்விட்டது. அந்தப் பக்கத்துக் கன்னத்தில் சதை சிறிது சரிந்து தொங்கியது. மருத்துவத்தால் காயங்களை ஆற்ற முடிந்ததே தவிர அவற்றால் ஏற்பட்ட கொடிய சுவடுகளை மாற்ற முடியவில்லை.

சுந்தர பாண்டியனை அந்த நிலையில் உயிரோடு கண்டவுடன் அவனது ஆனந்தத்துக்கும் துக்கத்திற்கும் ஓர் எல்லை இல்லை. ''பிரபு!பிரபு!'' என்று கதறிக் கொண்டே அவன் கால்களில் விழுந்தான்.

''யாரது, அம்பலக்கூத்தனா?''

மெல்ல அவனைப் பற்றித் தூக்கி அவனது பயங்கரமான முகத்தைப் பார்த்தான் சுந்தரபாண்டியன். அன்புப் பெருக்கோடு அவனைத் தழுவிக்கொண்டு தனது விரல்களால் மெல்ல அவனது முகத்தைத் தடவிக் கொடுத்தான். சிவந்து போயிருந்த அம்பலக்கூத்தனின் இடது கண்களிலிருந்து இரத்தம் போல் கண்ணீர் கசிந்து அவன் விரல்களை நனைத்தது.

''கூத்தா!''

''இளவரசே! தங்களை உயிரோடு கண்டவுடன் என் கவலையெல்லாம் தீர்ந்து விட்டது.''

''இளவரசனில்லை'' என்று அவன் காதருகில் மெதுவாய்க் கூறி, ''புலவர் பைந்தமிழ்க் குமரன்'' என்ற புதுப் பெயரை நினைவூட்டினான். கனவிலும் அவன் அதை மறந்துவிடக் கூடாதென்றான்.

விழுப்பரையரும் இளவரசனும் தனித்துப் பேசத் தொடங்கினார்கள். அம்பலக்கூத்தன் மண்டபத்து வெளியில் வந்து நின்று கொண்டான். விழுப்பரையர் குலோத்துங்க சோழரின் அறிவிப்பையும் அதற்குக் குலசேகர பாண்டியர் இணங்க மறுப்பதையும் தெரிவித்தார்.

''தாங்கள் பிரிந்துவிட்டதாக எண்ணி மிகவும் அதிர்ச்சி அடைந்திருக்கிறார் அரசர். அதனால்தான் ஆட்சியை ஏற்க அவரால் இணங்க முடியவில்லை; தங்களுடைய ஆலோசனையைக் கேட்டுப் போக வந்திருக்கிறேன்.''

சுந்தரபாண்டியன் தன்னை அப்போது வெளிப்படுத்திக் கொள்ள விரும்பவில்லை. ''தாங்கள் இப்போது இதை வெளியிடுவது உசிதம் என்று கருதுகிறீர்களா?'' என்றான்.

''கூடாது; தலைநகரத்திலும் அரண்மனைக்குள்ளும் ஒற்றர் கூட்டத்தை நிரப்பிவைத்திருப்பார் குலோத்துங்கர். பெரிய பாண்டியர் எவ்வளவுதான் எச்சரிக்கையோடு இருந்தாலும் சில சமயங்களில் தவறுகள் நிகழ்ந்துவிடக் கூடும்.

தங்களைச் சந்திப்பதற்கும் தங்களுக்கு உதவி செய்வதற்கும் அவர்கள் முயற்சி செய்வார்கள். அன்புக்கும் பாசத்துக்கும் நாம் தளையிட்டு வைக்க முடியாது.''

''ஆமாம், நம் குடிமக்களுக்கு அவர் செய்ய வேண்டிய அவசரக் கடமைகளைப் பாண்டியருக்கு நினைவூட்டுங்கள். நான் மறைந்திருந்தே என் கடமைகளைக் கவனிக்கிறேன், தாங்கள்தாம் அங்கும் இங்கும் எங்கும் இருக்கப் போகிறீர்கள்.''

அடுத்தாற்போல் பாண்டியர் நிறைவேற்ற வேண்டிய கடமைகளை இளவரசன் குறிப்பிட்டபோது பெரு வியப்பில் ஆழ்ந்து போனார் விழுப்பரையர்.

அவன் கூறினான்:

''போரில் ஏற்பட்ட அழிவுகள் இரண்டு வகையானவை. உயிர்ச் சேதத்தை நம்மால் ஈடுகட்ட முடியாது. ஆனால் உயிர்ச் சேதத்தால் வீரர்களின் குடும்பத்தாருக்கு ஏற்பட்டுள்ள புறச் சேதங்களையும் மக்களுக்கு ஏற்பட்டுள்ள பொருட் சேதங்களை யும் நாம் உடனடியாக ஈடு செய்ய வேண்டும். எரிக்கப்பட்ட ஒவ்வொரு வீட்டிற்கும் ஒன்பது புது மனைகள் எழுப்பலாம். எங்கெல்லாம் அழிவு வேலைகள் நடைபெற்றிருக்கின்றனவோ அங்கெல்லாம் மும்மடங்கு புதுப் பொலிவோடு விளங்கும் படியாக ஆக்கப் பணிகள் செய்யலாம். நான்மாடக் கூடலான மதுரையை நாற்பது மாடக்கூடங்கள் நிறைந்தவாறு புதுப்பிக்க முடியாதா என்ன?''

திகைத்தார் விழுப்பரையர். சாவுக்கும் வாழ்வுக்கும் இடையில் அவன் ஊசலாடிக் கொண்டிருந்த போதும், அவன் எண்ணமெல்லாம் அவனிடம் இல்லை போலும்! தன்னுயிரைப் போல் அவன் மக்கள் உயிரை மதிக்கவில்லை. அதற்குமேலே ஒரு படி மிஞ்சிப் போய்விட்டான்.

''இளவரசே! நாடு இருக்கும் நிலையில் இதையெல்லாம் செய்வதென்பது...''

''ஏன் முடியாது?'' என்று கேட்டான் சுந்தரபாண்டியன்.

''துன்பத்தை வெல்லுவதற்கு அந்தத் துன்பத்தையே ஆயுதமாகக் கொண்டு போராடுவதைவிடச் சிறந்த வழி வேறு இல்லை. மக்கள் கூட்டம்தான் நினைப்பதை விட அதிகமான துன்பத்தையும் பொறுப்பையும் தாங்கக் கூடியது. அதை ஒன்றுபடுத்தி நாம் ஆக்கப் போராட்டத்தில் திருப்பிவிட வேண்டும். தென்பாண்டிய நாடு போரினால் பாதிக்கப்பட வில்லையல்லவா? தனக்காகப் போராடிய வடபாண்டிய மண்டலத்துக்கு அது நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக் கிறது. அங்கிருந்து உணவு, பொருள், ஆட்கள் யாவும் திரட்டப்பட்டு இங்கு வந்து சேரவேண்டும். மக்கள் மடிந்தார்களே தவிர, இந்த நாட்டின் அன்பும் அறமும் அழிந்துவிடவில்லையே!''

விழுப்பரையர் அன்பின் உருவமாகத் திகழ்ந்த அந்த இளைஞனுக்குத் தமக்குள் ஆசி கூறிக்கொண்டு, அவனிட மிருந்து விடைபெற்றார். குலசேகர பாண்டியரை இசையச் செய்வதற்கு அவருக்கு ஓர் இலட்சியமும் கிடைத்து விட்டது.

பின்னர் அம்பலக்கூத்தனை அழைத்து வைத்துக் கொண்டு நாட்டு நடப்புக்களைக் கேட்டான் சுந்தரபாண்டி யன். போரினால் ஏற்பட்ட நிகழ்ச்சிகள், போர் நெறிக்கு உட்பட்ட நிகழ்ச்சிகளாகத் தோன்றவில்லை. குலோத்துங்க சோழரே முன்னால் நின்று நடத்திய போரில் இந்த அளவுக்கு நெறி கெட்ட செயல் மிகுந்திருக்கும் என அவன் கற்பனை செய்யவே இல்லை.

அது அதர்ம யுத்தமாக மாறிவிட்டது. அதில் பாண்டிய நாட்டுப் பெண்களுக்கு நேர்ந்த இன்னல்களைக் கூத்தன் கூடியவரையில் மறைத்துக் கூற முயன்றான். அதிலிருந்தே அதன் கொடுமை நன்கு புலப்பட்டுவிட்டது இளவரசனுக்கு.

பேச்சின் இடையில் கூத்தனைப் பற்றியும் கேட்க நினைத்தவன், ''ஆமாம், நீ திருமணம் செய்துகொள்ள

விரும்பினாயே ஒரு பெண் அவள் நலமாக இருக்கிறாளா?'' என்று கேட்டான்.

கேட்ட பிறகுதான் கேட்டது தவறு என்று தோன்றியது அவனுக்கு.

அம்பலக்கூத்தனின் அங்கமெல்லாம் பதறித் துடித்தது இந்தக் கேள்வியால். அவன் பதில் கூற முயன்றான்; ஆனால் முடியவில்லை. பற்களைக் கடித்தான். முன்பே பயங்கரமாகத் தோற்றமளித்த அவன் முகம் இன்னும் பயங்கரமாக மாறியது.

''வேண்டாம் அம்பலக் கூத்தா! நீ எதுவுமே கூற வேண்டாம். உனக்குத் துன்பம் நேரும் என்று தெரியாமல் கேட்டு விட்டேன்.''

''பிரபு! பிரபு!'' என்று குலுங்கி அழுதான் கூத்தன். ''என் தெய்வத்திடம் கூறாமல் நான் வேறு யாரிடம் கூறுவேன்? என் தெய்வத்திடம் முறையிடாமல் நான் வேறு யாரிடம் சொல்லி முறையிடுவேன்!... அவள்... அவள்... கறைபட்டு விட்ட களங்கத்தால், நான் எவ்வளவு மன்றாடியும் கேளாமல், என்னைத் தீண்டாமலே தீக்குளித்து விட்டாள் பிரபு!''

அவள் அன்று மூட்டிய தீ இன்று சுந்தர பாண்டியனின் நெஞ்சுக்குள்ளே பற்றிக் கொண்டது. அவன் தன் காயங்கள் நெருப்பாய்ப் பற்றிய பொழுதெல்லாம் அழுது அறியாதவன். எத்தனையோ துன்பங்களிலும் புடம்போட்ட பொன்னாய்த் திகழ்ந்தவன்.

''இடுக்கண் வரும்போது நகைத்துவிடு என்று கூறியுள் ளாயே, தலைவா, நான் இதையும் தாங்கிக்கொண்டு உயிர் வாழ வேண்டுமா?'' என்று தனக்குள்ளாகவே ஓலமிட்டுக் கதறினான்.

அன்று இரவில் அவன் அழுத அழுகையில் பாண்டிய நாட்டுப் பெண் குலமனைத்தும் அந்தப் போரில் அடைந்த துயரம் கலந்திருந்தது. கண்கள் வீங்கிச் சிவக்கும் மட்டும் அவன் அழுதான். நித்திரைத் தேவியும் அவனோடு சேர்ந்து புலம்பினாள்.

# 29. இளைஞனின் விழிப்பு



திருக்கொடுங்குன்றத்து மலைச்சாரலின் காலைப் பொழுது அன்றைக்கு அற்புதமானதொரு பேரழகுடன் விளங்கியது. வெண் பனிப்படலம் போன்ற மேகத் திரளை ஊடுருவிக் கொண்டு பாய்ந்த காலைக் கதிரொளி அந்தக் கானகத்துப் பசுமையில் பொன்னைத் தூவிக் கொண்டிருந்தது. பறவை இனங்கள் கூட்டம் கூட்டமாகச் சிறகடித்துப் பறந்து திரிந்தன. தேன் வண்டுகளும் பூஞ்சிட்டுகளும் இயற்கையன்னைக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடிக் கொண்டிருந்தன.

குளித்து முழுகிப் புத்தாடை புனைந்துகொண்டு பைந்தமிழ்க் குமரனுக்காகத் திருவுடைத்தேவியார் கொடுத்த சிற்றுண்டியை எடுத்துக் கொண்டு மலைச்சாரல் மண்டபத்துக்கு விரைந்தாள் கயல்விழி. மருத்துவரின் பணி முடிந்து விட்டதால் அவர் அங்கிருந்து முன்பே கிளம்பிவிட்டார். அம்பலக்கூத்தன் மட்டிலும் இப்போது அங்கு தனித்திருந்தான். பைந்தமிழ்க் குமரனைக் காணவில்லை.

வழக்கமாக அவள் வந்து செய்யும் துப்புரவு வேலைகள் அவள் வருவதற்கு முன்பே செய்யப்பட்டிருந்தன.

கூத்தனைக் கயல்விழியிடமும் அவளைப் பற்றிக் கூத்தனிடமும் விழுப்பரையர் முன்பே குறிப்பிட்டிருந்ததால் அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் கண்டபோது வியப்படையவில்லை. பைந்தமிழ்க் குமரனின் வீட்டிலிருந்த நம்பிக்கை மிகுந்த பணியாளன் என்ற அளவுக்கு அவனைப் பற்றி அறிந்து கொண்டிருந்தாள்.

''எங்கே புலவரைக் காணோம்?'' என்று கேட்டாள் கயல்விழி.

''அருவிக்குச் சென்று குளித்து வருவதாய்க் கூறினார்கள். தாங்கள் வந்தால் தேடப் போகிறீர்களே என்பதற்காக என்னை இங்கு இருக்கப் பணித்தார்கள்.''

சிறிது நேரம் காத்திருந்தாள் கயல்விழி. பின்பு மண்டபத்துக்கு வெளியே சென்று அருவிக்கரை இருந்த திசையில் நோக்கினாள். நேரம் செல்லச் செல்ல அவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. அவள் வந்த பிறகு கிளம்பி யிருந்தாலும் அதற்குள் திரும்பியிருக்கக்கூடும். அவளைப் போலவே அம்பலக் கூத்தனும் கலவரமடைந்தான்.

''நாழிகையாகிறது; போய்ப் பார்த்துவிட்டு வருவோம்!'' என்று கூறி ஓட்டமும் நடையுமாக மலைப் பாதையில் விரைந்தாள் கயல்விழி. அம்பலக் கூத்தனும் பின் பற்றி நடந்தான். அருவிக் கரையில் அவனைக் காணவில்லை.

பதறித் தவிக்கும் நெஞ்சத்தோடு அங்குமிங்கும் ஓடி அலைந்தாள். அம்பலக் கூத்தனுக்கும் பரபரப்பு மிகுந்து விட்டது. 'இளவரசே!' என்று அவசரத்தில் கூவி அழைக்க நினைத்தவன், விழுப்பரையரின் எச்சரிக்கையை நினைவில் கொண்டு தன்னைக் கட்டுபடுத்திக் கொண்டான். பின்பு, 'பிரபு!' என்று அவன் அழைக்க முயன்றபோது கயல்விழி அவனுக்குச் சைகை செய்து தடுத்து ஒரு திசையைச் சுட்டிக் காட்டினாள்.

அந்தத் திசையில் கயல்விழி கண்ட காட்சி அவள் வாழ்விலேயே என்றென்றும் மறக்கமுடியாத அற்புதக் காட்சி. தெய்வத் திருக்கோலத்தை ஒருத்தி இந்த மண்ணுலகத் திலேயே தனது புறக் கண்களால் காண முடிந்திருந்தால், எத்தகைய ஆனந்தப் பரவச நிலையை அடைந்திருப்பாள்? கண்கள் இமைப்பை மறந்தன; இதயம் துடிப்பை மறந்தது; ஐம்புலன்களும் கூர்மை பெற்று அந்தக் காட்சியில் ஒடுங்கி நின்றன.

சரக்கொன்றை பூத்துக் குலுங்கிக் காலை இளம் காற்றில் தன் பொன் மலர்களைத் தூவி நிற்க கதிரவன் தன் ஒளி

வெள்ளத்தால் அபிஷேகம் செய்திருக்க, இயற்கையின் பீடமாக அமைந்த சிறு பாறையின் மீது அவன் சிலையாக மாறிக் கண்மூடித் தியானத்தில் ஆழ்ந்திருந்தான். கைலயங் கிரியில் மோனத் தவமிருக்கும் சிவபெருமானின் தோற்றம் இப்படித்தான் இருக்குமா? 'குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும், பனித்த சடையும், பவளம் போல் மேனியும்' கொண்டு அவன் இவ்வாறுதான் ஒளி வீசித் திகழ்வானா? அல்லது அரச குமாரனாகப் பிறந்து தனது போகங்களையெல்லாம் துறந்து போதி மரத்தடியில் வீற்றிருந்தானே புத்தன், அவனுடைய தோற்றமா இது?

கயல்விழியின் உள்ளத்திலிருந்து பொங்கிப் பொசிந்த உணர்வுகளைச் சொற்களால் வெளியிட முடியாது. வானத்திலே மிதந்த பறவைகள் அவ்வாறே நிலைத்து நின்று விட்டது போலவும், அந்த மலையும் காடும் நீரும் காற்றும் அப்படியே ஸ்தம்பித்து ஒடுங்கியது போலவும், உலகமே தனது எல்லாச் சலனங்களையும் எல்லா அசைவுகளையும் இழந்து ஓவியனின் திரைச்சீலைச் சித்திரமாக மாறிவிட்டது போலவும் அவளுக்குத் தோன்றியது.

'மலர்மிசை மேவினான் மாணடி சேர்ந்து' நின்ற அந்த இளைஞன், 'தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்த' அந்தப் புலவன், அவளுடைய கண்களுக்கு இறைவனின் திருக் குமாரனாகவே காட்சியளித்தான்.

ஆசை, பாசம், காதல், பக்தி இதில் எதுவென்றே பிரித் தறிய முடியாத, இவை எல்லாமே ஒன்றாய்ச் சேர்ந்த ஓர் உணர்ச்சி வெள்ளத்தில் உந்தப்பட்டாள் கயல்விழி. ஓடிச் சென்று அருகில் செடிகளில் மலர்ந்து குலுங்கிய மலர்களையும் தளிர்களையும் கைநிறையப் பறித்தாள். பத்மாசனத்தில் வீற்றிருந்த அவனுடைய பாதங்களில் மெல்லத் தூவி விட்டுக் கரங்கூப்பி நின்றாள். அம்பலக் கூத்தனும் அவ்வாறே வணங்கி நின்றான்.

எவ்வளவு நேரம் ஆயிற்றோ, தெரியவில்லை. இளைஞனின் தியானம் கலைந்தபோது, அவனுக்கு எதிரில்

இரண்டு உயிர்ச் சிலைகள் கூப்பிய கரங்களோடும் மூடிய விழிகளோடும் நின்று கொண்டிருந்தன.

ஏதும் பேசவில்லை அவன். மெல்ல எழுந்து நடந்தான். சலனம் கேட்டுச் சுய உணர்வு பெற்ற இருவரும் அவனை அமைதியோடு பின்பற்றினார்கள். அவனோ வேறு ஓர் உலகத்தில் பழகிவிட்டு வந்த சிந்தனை இன்னும் தெளியப் பெறாமலே மண்டபத்துக்குள் நுழைந்தான். அதே உணர்வோடு சிற்றுண்டியையும் ஏற்றுக் கொண்டான்.

அவனிடம் ஏதாவது பேசி, அவனையும் பேச வைக்க வேண்டும் என்பதற்காகக் கயல்விழி அவனிடம் சிரித்துக் கொண்டே பேசத் தொடங்கினாள்.

"இறைவனின் அடிதொழுது அவனிடம் சரணடைய வேண்டும் என்று தாங்கள் என்னிடம் கூறியபோதெல்லாம் கூட என்னால் அதை இந்த அளவுக்கு உணர முடியவில்லை. ஆனால் இன்றைக்கு எனக்கு மெய்சிலிர்க்கும் ஓர் உண்மை புலப்பட்டது.

"நேற்று அம்பலக் கூத்தன் வாயிலாகச் சில செய்திகளைக் கேள்வியுற்றேன். கேட்டதிலிருந்து என் மனத்தில் அமைதி யில்லை. மனக்கவலையை மாற்றும், தனக்கு உவமையில்லாத வனிடம், அவைகளை முறையிட்டேன்."

"தங்களுக்குக்கூட மனக் கவலையா?" என்று வியப்போடு கேட்ட கயல்விழி, பிறகு அந்தக் கவலைக்கான காரணங்களை அறிந்து கொண்டாள். அம்பலக் கூத்தனின் காதலி தான் களங்க முற்றவள் என்பதால் தீக்குளித்துவிட்ட நிகழ்ச்சி கயல்விழியையும் செயல் இழந்தவளாக மாற்றிவிட்டது. அதன் பிறகு அவள் பிரமை பிடித்தவள் போல் ஒரு மூலைக்குச் சென்று அமர்ந்து கொண்டு விட்டாள்.

பைந்தமிழ்க் குமரன் அவளருகில் சென்று அமர்ந்தான்.

"கயல்விழி! கவலைப்படுவதால் பயனில்லை: சிந்தித்துப் பார்க்க வேண்டும்."

திரும்பிப் பார்த்தாள் கயல்விழி.

''சீதைக்கு இழைக்கப்பட்ட கொடுமையை நினைத்து இராமன் வீண் கவலைப்பட்டுக் கொண்டிருக்கவில்லை. சிந்தித்துச் செயலாற்றினான். சீதைக்கு ஏற்பட்ட அநீதியைப் போக்க ஒரு பெரும் போரே நடந்தது. அதனால் தென்னிலங்கை வீழ்ந்தது.''

'பெண் குலத்துக்கு நேர்ந்த துன்பத்தைத் தமக்குத் நேர்ந்ததாக இவர் எடுத்துக் கொண்டிருக்கிறார்' என்று நினைத்தபோது அவளுக்கு அவனிடம் எல்லையற்ற பரிவு ஏற்பட்டது.

அவன் மேலும் பேசினான். ''பாரதப் போர் நடப்பதற்கு அடிப்படைக் காரணமும் திரௌபதிக்கு இழைக்கப் பட்ட தீங்குதான். பாஞ்சாலியைத் துரியோதனன் மானபங்கம் செய்யத் துணிந்தபோதுதானே அர்ச்சுனனும் பீமனும் கொதித்தெழுந்து வீர சபதம் செய்தார்கள்?''

''கயல்விழி!'' என்று துடிப்புடன் அழைத்தான் பைந்தமிழ்க் குமரன். ''நாடு என்பது வெறும் மண்ணும் மலையும் நதியும் மட்டுமில்லை. இதில் பிறந்து வளர்ந்து மடியும் ஒவ்வோர் ஆண்,பெண், குழந்தையையும் நான் என் உயிருக்குயிராகவே மதிக்கிறேன். இங்கு ஒருவனுக்கோ ஒருத்திக்கோ ஒரு துன்பம் வந்ததென்றால் அது என் துன்பம்!''

''பைந்தமிழ்ப் புலவரே! தாங்கள் ஏடாளும் கவிஞராக இருந்துகொண்டு நாடாளும் மன்னர் காண வேண்டிய கனவெல்லாம் காணுகிறீர்கள். தங்களால் இவ்வளவு வலிமை பொருந்திய சோழ சாம்ராஜ்யத்தை என்ன செய்ய முடியும்!''

''என்ன செய்ய முடியுமா? செய்து முடிக்கிறேன் பார். இவ்வளவு நீசத்தனங்களுக்குக் காரணமாக இருந்த அந்த இளவரசன் இராஜராஜனை உன் கண் முன்னாலேயே ஓர் பாண்டிய நாட்டுப் பெண்மணியின் காலில் விழுந்து கதறச் சொல்லவில்லையென்றால்... நா... நான்... நான் ஒரு ஆண் மகனில்லை. இன்னும் அவனுடைய நாட்டை அழித்து,

அரண்மனையைத் தகர்த்து, அவனுடைய உரிமை மகளிரைச் சிறைப்பிடித்து...''

''வேண்டாம்! வேண்டாம்!'' என்று குறுக்கிட்டுக் கத்தினாள் கயல்விழி. ''மகளிரைச் சிறைப்பிடிக்கும் கொடும் பாவத்தை மட்டும் நீங்கள் ஒரு போதும் செய்யவேண்டாம். அவர்கள் ஒரு பிழையும் செய்யாதவர்கள்.''

மலையின் உச்சியிலிருந்து தலைக்குப்புற விழுவதற்கு இருந்த தன்னை அவள் தடுத்து நிறுத்தியதுபோல் தோன்றியது பைந்தமிழ்க் குமரனுக்கு. நன்றிப் பெருக்குடன் அவள் கரங்களைப் பற்றிக் கொண்டு அவளது கயல்விழிகளைப் பார்த்தான். ''ஆம்! நான் அவ்வாறு எண்ணியது தவறுதான்'' என்று தனக்குத் தானே பேசிக் கொள்வதுபோல் மெல்லிய குரலில் கூறினான்.

## 30. ஏன் மறுத்தாள்? ஏன் இசைந்தாள்?

**பை**ந்தமிழ்க் குமரன் வசதியாக உட்கார்ந்து கொண்டு பேசுவதற்காக ஓர் இடத்தைப் பார்த்தான். கயல்விழியும் அருகில் அமர்ந்தாள். அவர்கள் குன்றின் மேல் இருந்ததால், மாலை நேரத்துக் காற்று சற்று வேகமாக வீசியது.

''கயல்விழி!'' என்று அவளைக் கனிவுடன் அழைத்தான் அவன்.

''என்ன?'' என்றாள் ஆவலுடன் கயல்விழி.

''உன்னிடம் நான் ஓர் உதவியைக் கேட்கலாமா?''

கயல்விழி தன்னிடம் அவன் எந்த உதவியை நாடப் போகிறானோ என்று ஆவலும் பரபரப்புமாகத் தனது நாணத்தையும் மறந்து அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

''வேறொன்றுமில்லை; உன்னுடைய ஆட்டக் கலையைப் பற்றி உன்னிடமிருந்து சில விஷயங்களை நான் தெரிந்து கொள்ளவேண்டும். நீ சொல்லுகிறாயா?''

''ஏன், நீங்களும் அந்தக் கலையைக் கற்றுக்கொண்டு என்னோடு ஆட விரும்புகிறீர்களா?'' முத்துப் பல் வரிசை மின்ன அவள் சிரித்தாள்.

''அவசியம் நேர்ந்தால், நீ விரும்பினால், ஆடவும் செய்கிறேன்; ஆனால் நான் கேட்டது ஆடுவதற்காக மட்டு மல்ல, உன்னை நான் விரும்புகிறபடி ஆட்டி வைப்பதற்தாக!''

''நீங்கள் விரும்புகிறபடி என்றால்?''

''நான் புலவனல்லவா? ஆட்டக் கலையின் நுணுக்கங்களை அறிந்துகொண்டு சில புதிய கதைகளை ஆட்டத்துக் கேற்றாற் போல் பாட விரும்புகிறேன். சிலம்புக் கூத்து, கொற்றவைக் கூத்து முதலியவைகளைப் போல் வேறுகதைகளையும் பாட்டில் புனைந்தால் எப்படியிருக்கும்?''

''நீங்கள் புனைந்து நான் ஆடுவதென்றால் அது என் பாக்கியம்!'' என்று பெருமிதத்தோடு கூறினாள் கயல்விழி.

''ஆண்கள் என்றால் அவர்கள் பிறவியிலேயே வீரமும் துணிச்சலும் உள்ளவர்களாகத்தான் இருக்கவேண்டும். நாட்டைக் காப்பதற்காக மட்டும் நான் இதைக் கூறவில்லை. வீட்டைக் காக்கும் கடமைக்காகவும் அவர்கள் செயல் வீரர்களாக இருந்து தீரவேண்டும். பெண்கள், குழந்தைகள், முதியோரைக் காக்கும் பொறுப்பு ஆண்களுடையதல்லவா?''

''பெண்களுக்கும் அதில் பெரும் பங்கு உண்டு'' என்றாள் கயல்விழி. ''இராமனின் அன்பிலும் வீரத்திலும் அசையாத நம்பிக்கை வைத்து அவனுடைய வெற்றிக்காகத் தவம் கிடந்தவள் சீதை. தவம் என்பது என்ன? நினைவை யெல்லாம் ஒருமுகப்படுத்தித் தன் தலைவனின் வெற்றியை வேண்டுவதுதானே? தான் இராமனை அடைய வேண்டும் என்று மட்டும் சீதை எண்ணவில்லை; இராமனின்

வெற்றியில்தான் அவள் தனக்கு விடுதலையை வேண்டி நின்றாள்.''

கயல்விழியின் கூர்மையான அறிவைக் கண்டு வியப்படைந்தான் பைந்தமிழ்க் குமரன். அவள் மேலும் கூறினாள்:

''அநுமன் வந்து சீதையை இராமனிடம் சேர்ப்பித்து விடுவதாகக் கூறியபோது ஏன் அவள் மனமொப்பவில்லை? அவளுடைய முதல் நோக்கம் இராமனின் இலட்சிய வெற்றி. அந்த எண்ணத்தின் வலிமையும் இராமனுக்குத் துணை இருந்ததால்தான், அவனால் அவ்வளவு துணைகளையும் பெற்றுக் கொண்டு இராவணனை அழித்து அவளை மீட்க முடிந்தது.''

''கயல்விழி!''என்று உணர்ச்சி பொங்க அழைத்தான் பைந்தமிழ்க் குமரன். ''நான் புனையவிருக்கும் பாடல்களுக் கெல்லாம் கருப்பொருள் கொடுத்துவிட்டாய் நீ! தலைவனும் தலைவியும் ஒருமனப்பட்டவர்களாக இருந்தால், அதை விடச் சிறந்த பேறு வேறில்லை என்ற வள்ளுவரின் சொல்லுக்கு நீ விளக்கம் தந்திருக்கிறாய்.''

'நான் விளக்கம் சொல்லவில்லை; நானே விளக்கமாக இருந்துவிடத் துடிக்கிறேன்; இது உங்களுக்கு விளங்க வில்லையே, புலவரே!' என்று ஏங்குவதுபோல் நெடுமூச் செறிந்தாள் கயல்விழி. அவன் தன்னுடைய இலட்சியக் கனவுகளில் இருந்தான். அவள் அதை ஒட்டிய வாழ்க்கையில் இருந்தாள்.

''எல்லாவற்றுக்கும் முதலாக, நம்முடைய நோக்கத் துக்கு வழிகாட்டும்படியான ஒரு புதுப்பாடல் புனைய வேண்டும் என்ற பேராவல் எனக்கு எழுந்திருக்கிறது. நேற்று அம்பலக்கூத்தன் கூறிய செய்தி என்னை வெகுவாகப் பாதித்து விட்டது. அந்தச் செய்தியைக் கொண்டு புனைந்தால் அது என் சிறந்த பாடலாகவும் உன் சிறந்த ஆடலாகவும் இருக்கும்.''

திடுக்கிட்டு விழித்தாள் கயல்விழி.

''பயங்கரமான உண்மையை மக்களிடம் எப்படிக் கூறுவது என்று திகைக்கிறாய் போலும்!'' என்று நகைத்தான்

பைந்தமிழ்க் குமரன்: ''கூறிதான் ஆகவேண்டும்; வேறு வழியில்லை.''

கயல்விழிக்குச் சட்டென்று அங்கிருந்து எழுந்துபோய் விடவேண்டும் என்று தோன்றியது. ஆனால் அவனோ தீவிரமான உற்சாகத்தில் இருந்தான்.

''நான் புனையப்போகும் பாட்டின் கதையைக் கூறுகிறேன், கேள்; கேட்டுக்கொண்டால் உனக்கும் அது பயனாக இருக்கும்'' என்று கூறத் தொடங்கிவிட்டான். கேட்பவளின் மறுமொழிக்கோ, இசைவுக்கோ அவன் காத்துக் கொண்டிருக்கவில்லை.

''நம்முடைய பாண்டிய மண்டலத்தையே ஓர் அழகான இளம் பெண்ணாக உருவகப்படுத்தி, அவளையே கதையின் தலைவியாக்கப் போகிறேன். அந்தக் கன்னி இந்த நாட்டுப் பெண்களின் எல்லாச் சிறந்த பண்புகளும் ஒன்றாய்த் திரண்டவள். அவளைக் கண்டு அவளோடு பழகுகிறான் ஓர் இளம் வீரன். பின்னர் இருவருமே திருமணம் செய்து கொண்டு இல்லறம் நடத்த விரும்புகிறார்கள். பெற்றோர்களும் இசைந்ததால் திருமண நாளும் குறித்தாயிற்று. நடைபெற விருக்கும் திருமணத்தை எதிர்நோக்கி இருவருமே எல்லையற்ற இன்பத்தில் திளைத்திருக்கிறார்கள்..... அப்போது திடீரென்று நாட்டில் போர் வந்துவிடுகிறது...''

''இது விழுப்பரையரின் குமாரனுடைய கதைபோல் இருக்கிறதே!'' என்று குறுக்கிட்டாள் கயல்விழி. ''பாவம் உய்யவந்தாளின் துயரத்தை என்னாலும் ஆற்ற முடியவில்லை.''

''முதலில் அப்படித்தான் தோன்றும்; கடைசி வரையிலும் கேட்டுவிட்டுச் சொல்'' என்று அவன் தொடர்ந்தான்: ''போர் வந்துவிட்டதா? இளைஞன் தான் போர்க்களத்துக்குச் செல்லவேண்டும் என்ற செய்தியை அவளிடம் வந்து கூறுகிறான். அவள் மறுக்காது அவனுக்கு விடை கொடுக்கிறாள். வெற்றியுடன் திரும்பிய பிறகு திருமணம் செய்து

கொள்ளலாம் என்கிறாள். 'ஒருவேளை திரும்பாவிட்டால்?' என்று இளைஞன் கேட்க, 'தங்களை நினைத்துக்கொண்டு காலமெல்லாம் கன்னியாக விரதம் காப்பேன், மறுபிறப்பில் தங்களை அடைந்தே தீருவேன்' என்கிறாள் அந்த வீரப் பெண்மணி. இதற்குப் பின்னர்தான் அவளுக்குப் பயங்கரமான சோதனை...''

கயல்விழி கண் கலங்கினாள். அவளுக்குமே அதற்குமேல் அவன் கூறுவதைக் கேட்பது தாங்கமுடியாத சோதனையாகத்தான் இருந்தது.

''பகைவர்கள் போர் நெறிகளை அறவே மறந்து விட்டார்கள். பகை நாட்டு வெறியன் ஒருவனால் அந்த உத்தமி சீரழிக்கப்பட்டு விட்டாள்!''

''போதும்! போதும்!'' என்று தன் செவிகளை மூடிக் கொண்டு கெஞ்சினாள் கயல்விழி.

''கயல்விழி! இந்த நாட்டில் தனி ஒரு பெண்ணுக்கு நடந்த கொடுமையல்ல அது. இந்த நாட்டுப் பெண் குலத்துக்கே இழைக்கப்பட்ட அநீதி! போர் முடிந்து அந்த வீரன் திரும்பி வருகிறான். அவனுடைய கரத்தைத் தீண்டும் தகுதி தனக்கு இல்லை என்று கூறிவிட்டு, அவள் தீக்குளித்து மடிந்து விடுகிறாள். அதனால் ஏற்பட்ட துயரத்துடன் அவன் சபதம் செய்கிறான்: 'பகைவரிடமிருந்து நாட்டை மீட்ப தோடு, இனி எந்தப் பகைவராலுமே நாடு இந்த நிலையை அடையாத அளவுக்கு அதை வலிமையாக்குவேன்' என் கிறான். அவன் எந்தப் பெண்ணையுமே அதன் பிறகு மணக்கவில்லை.''

கயல்விழி தன் கண்களையும் இப்போது மூடிக் கொண்டாள். அந்த மூடிய கண்களின் வழியே வெள்ளப் பெருக்காய் நீர் குமுறிக் கொண்டிருந்தது.

''கயல்விழி; நீதான் அந்தப் பெண்ணின் பாத்திரத்தை ஏற்று நடிக்க வேண்டும். இந்த நாட்டு மக்களின் நெஞ்சங்களிலெல்லாம் உன்னால்தான் வீரத் தீயைக் கொழுந்து விட்டெரிக்கச் செய்யமுடியும்.''

சரேலென்று எழுந்து எங்கோ ஓடத் தொடங்கினாள் கயல்விழி. கல்லையும் முள்ளையும் செடியையும் புதரையும் பார்க்காமல் அவள் ஓடினாள். பைந்தமிழ்க் குமரனை அச்சம் பற்றிக் கொண்டு விட்டது. ஏதுமே புரியவில்லை அவனுக்கு. 'இப்போது நான் ஒன்றும் இவளுடைய மனம் புண்படும் படியாகச் சொல்லவில்லையே! ஏதோ ஒரு பெண்ணின் கதையைத்தானே கூறினேன்!'

''கயல்விழி! கயல்விழி!''

அவள் திரும்பிப் பார்க்கவில்லை.அவளைப் பின்பற்றி ஓடினான் பைந்தமிழ்க் குமரன். எங்கே அவள் கால் தடுக்கிக் கீழே விழுந்துவிடப் போகிறாளோ என்று, அவள் கரத்தை இறுகப் பற்றினான்.

''புலவரே, நீங்கள் பெண்களோடு பழகியிருந்தால் இப்படியெல்லாம் கதை சொல்லமாட்டீர்கள்!''

''மெய்தான்? நான் பழகியதில்லை'' என்று ஒப்புக் கொண்டான் இளைஞன். ''ஆனால், அவர்களுக்கு இந்தக் கதையினால் நான் சிறிதும் தீங்கு செய்யவில்லையே? அவர்களுடைய நன்மைக்காகவும்தானே சொல்கிறேன்!''

''நீங்கள் எதை வேண்டுமானாலும் ஏட்டில் பாட்டாக எழுதி வைத்துக் கொள்ளுங்கள். இதைப் போய் அரங்கத்தில் கூத்தாடி நடித்துக் காட்டுவதற்கு என்னால் முடியாது. நீங்கள் வற்புறுத்தினால் முதற்கூத்தின் முடிவில் நானும் மெய் யாகவே தீக்குளித்து விடுகிறேன்!''

பைந்தமிழ்க் குமரனின் தலையில் கொடுங் குன்றம் பெயர்ந்து விழுந்தது போலிருந்தது. அவளுடைய கரத்தை விட்டு விட்டு, அப்படியே இடிந்துபோய் அருகில் நின்ற மரத்தின் மீது சாய்ந்தான். வெகுநேரம் அவன் எதுவுமே பேசவில்லை.

ஓரிரண்டு நாழிகைகளுக்கு முன்பு வரையிலும் அவன் உள்ளத்தில் பீறிட்டுப் பொங்கிக் கொண்டிருந்த நம்பிக்கை யூற்று, அவள் செய்கையால் சட்டென்று அடை பட்டு விட்டாற்போல் தோன்றியது.

அவனையே அவள் பார்த்துக் கொண்டிருந்தாள் மௌனமாக. அவன் அனுபவித்துக் கொண்டிருந்த வேதனைகள் அவளையும் பற்றிக் கொண்டுவிட்டன.

''நான்... நான் உன்னை எதற்குமே வற்புறுத்த மாட்டேன்'' என்று தட்டுத் தடுமாறிக் கூறினான் பைந்தமிழ்க் குமரன். ''முன்பு உனக்கு ஆற்றங்கரையில் சபதம் செய்து கொடுத்தேனல்லவா? அதை நிறைவேற்றுவதற்கு இந்தக் கூத்தையே முதல் ஆயுதமாகப் பயன்படுத்தலாம் என்று நினைத்தேன். வேண்டாம்! உனக்குத் துன்பமென்றால் வேண்டாம்!''

''நான் மறுத்ததற்கு என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்; உங்கள் விருப்பப்படியே கூத்தை நடத்துவோம்.''

''வேண்டாம் கயல்விழி!''

''இல்லை; முதன்முதலாக இதையே நாம் அரங்கேற்றுவோம்! அதோ, அந்தக் குன்றின்மீது குடவரைக்குள் குடியிருக்கும் நல்ல மங்கைபாகர் முன்பாகவே அரங்கேற்றுவோம்!'' என்று குன்றின் மீதிருந்த கோவிலைச் சுட்டிக் காட்டினாள் கயல்விழி.

## 31. பொல்லாத வள்ளுவர்!



ஏடும் எழுத்தாணியும் எடுத்துக்கொண்டு குமரன் கூத்துப் புனைவதற்கு உட்கார்ந்த போது தான், அவனுக்கு அது அவ்வளவு எளிமையான பணியல்ல என்பது தெரிந்தது. அவன் முறையாகத் தமிழ் பயின்றவன். இலக்கிய இலக்கணங்களை விழுப்பரையரிடம் கற்றுக் கொண்டவன். தானாகவே சில பாடல்களும் புனைந்திருக்கிறான். என்றாலும் கூத்து மட்டிலும் அவனை எடுத்த எடுப்பிலேயே திகைக்கச் செய்துவிட்டது.

கூத்துக்கான கருப்பொருளின் பிற்பகுதி முழுவதும் அவனுடைய உள்ளத்தில் ஆவேசக் கனலாகக் கொழுந்து விட்டுக் கொண்டிருந்தது. பாட்டுடைத் தலைவன் தலைவியிடம் விடைபெற்றுக் கொண்டு போருக்குப் புறப்படுவதிலிருந்து அவனால் ஒரே சிந்தனையோடு எழுதிக் குவிக்க முடியும். புண்பட்ட அவனுடைய வீர உணர்ச்சி அவனிடம் கொந்தளித்துக் கொண்டிருந்தது. அதை எழுத்தில் அப்போதே கொட்டிப் பதிக்க அவன் துடிதுடித்தான்.

ஆனால் கூத்தைப் பாதியிலிருந்து தொடங்க முடியுமா? தலைவன் தலைவியைத் தனிமையில் சந்திக்க வேண்டும்; இருவரும் ஒருவர் மீது ஒருவர் அன்பு கொள்ள வேண்டும்; அவர்களுடைய அன்பு முதிர்ந்து, அவர்களிடம் திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்ற ஆவலை எழுப்ப வேண்டும்; தங்கள் இல்லற வாழ்வு பற்றி அவர்கள் இனிய கனவுகள் காண வேண்டும். இவ்வளவையும் கூத்தாகப் பாட வேண்டும் என்றால், கூத்தை எழுதுபவனுக்குச் சொந்த அனுபவம் வேண்டுமே!

'பைந்தமிழ்ப் பயிற்சியும் இலக்கண அறிவும் மட்டுமிருந்தால் எழுத முடியாது போலும்!' என்று தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான் இளைஞன். தலைவன் வாளும் வேலும் எடுத்துக்கொண்டு போர்க் களத்தில் வீர சாகசங்கள் செய்வதை எழுதிவிடலாம். அவன் சூளுரைக்கும் பகுதியில் அவனை அனல்கக்கச் செய்து விடலாம். ஆனால் அவன் தலைவியிடம் எப்படிக் காதல் மொழி பேசுவான்? தலைவி எவ்வாறு அவனிடம் நடந்து கொள்வாள்?

திடீரென்று அவனுக்குத் திருவள்ளுவரின் நினைவு வந்தது. எல்லாவகையான இடங்களிலுமே அவர் வழி காட்டக்கூடியவர் என்று அவனுக்கு விழுப்பரையர் கூறியிருந்தார். ஆனால் அவர் பாடம் நடத்தும்போது அறத்துப்பால் பொருட்பால் இரண்டை மட்டிலுமே அவனுக்குக் கற்றுக் கொடுத்தார். இன்பத்துப் பாலை அவர்

பொருட்படுத்தாததால், பைந்தமிழ்க் குமரனும் அந்த ஏடுகளை மட்டும் எட்டிப் பார்க்கவில்லை.

''அறத்துப்பால் அனைவருக்குமே பொதுவானது. பொருட்பால் குறிப்பாக அரச குலத்தோருக்கும் அமைச்சுத் துறையோருக்கும் துணை செய்யக்கூடியது. இன்பத்துப் பால் திருமணம் செய்துகொள்ள வேண்டிய பருவத்தினரும், திருமணம் செய்து கொண்டவர்களும் கற்க வேண்டியது'' என்று விழுப்பரையர் அவனிடம் கூறியிருந்தார். ஆகவே அவன் இன்பத்துப்பால் ஏடுகளைத் தனியே கட்டி ஒரு மூலையில் போட்டிருந்தான்.

கொடுங்குன்றத்து மண்டபத்துக்குக் கொண்டு வரப் பட்ட சுவடிகளில் அதுவும் இருக்கிறதா என்று தேடிப்பார்த்தான் பைந்தமிழ்க் குமரன். நெடுநாட்களாகவே பிரிக்கப் படாததால், செல்லரித்துப்போன நிலையில் அது அவனுக்குக் கிடைத்தது. எடுத்துப் பிரித்தான்; படிக்கத் தொடங்கினான்.

முதற் பாடலைப் படிக்கும்போதே அவனுடைய கரங்கள் நடுங்கின; இதயம் நடுங்கியது. களவியல் என்ற பகுதியைத் தொடங்கியவுடன் தானே ஒரு கள்வனாக மாறி வருவது போன்ற உணர்வு அவனுள் பொங்கி வந்தது. மனதுக்குள் தனது ஆசிரியரான விழுப்பரையரிடம் மன்னிப்புக் கோரி, 'நான் கூத்து எழுதுவதற்காகத் தான் இதைப் படிக்கிறேன்; தவறாக நினைக்கவேண்டாம்' என்று வேண்டிக் கொண்டான். அதைப் படிக்கப்படிக்க அவன் இதுவரையில் கண்டிராத ஒரு கந்தர்வ உலகமே அவன் கண்முன் விரிந்து கொண்டுவந்தது.

அறம் புகட்டும் பற்றற்ற பெரும் துறவியாக வள்ளுவரை அறத்துப்பாலில் அவன் கண்டு வணங்கியிருக்கிறான். அவரையே அரசருக்கெல்லாம் அரசராக, அமைச்சருக் கெல்லாம் அமைச்சராக, அறிவிற் சிறந்த பேராசிரியராகப் பொருட்பாலில் கண்டு போற்றியிருக்கிறான். ஆனால்

இன்பத்துப் பாலிலோ அவர் அவனுடைய ஒத்த இளம் வயதுத் தோழனாக மாறி, அவனிடம் வாழ்க்கையின் பல நுணுக்கமான இரகசியங்களைக் கூறத் துணிந்து விட்டார்! தலைவன் தலைவி ஆகிய இரண்டே இரண்டு பாத்திரங்களை வைத்துக் கொண்டு, கற்பனைக்கு எட்டாத அற்புத உலகத்துக் குள் பைந்தமிழ்க் குமரனை அழைத்துச் சென்றுவிட்டார்.

இனிமேலும் அந்தப் பாடல்களை அவனால் அந்த மண்டபத்துக்குள்ளிருந்து படிக்க முடியாதெனத் தோன்றியது. ஒத்த வயது இளைஞர் இருவர் கூடித் தங்களது சொந்த வாழ்வின் இனிய நிகழ்ச்சிகள் பற்றிப் பேச விரும்பினால் தனிமையை நாடுவார்களல்லவா, அதுபோன்ற தனிமையை நாடுவதற்கு அவனைத் தூண்டிக் கொண்டிருந்தார் வள்ளுவர்.

அம்பலக் கூத்தனிடம் கூறிவிட்டு ஏட்டுச் சுவடியுடன் அவன் மலைச்சாரல் அருவியை நோக்கி நடந்தான். அருவியின் இன்னிசை ஒலிக்கும் தொலைவில், செழிப்பாக மண்டிக் கிடந்த மலைப்புல்லின்மீது உட்கார்ந்து, பின்புறம் பாசறைமீது சாய்ந்து கொண்டான். சுற்றிலும் தென்பட்ட காட்சிகளில் இன்றைக்குப் புதுமை துடித்தது. மலர்ந்திருந்த மலர்கள் அவனுக்கு வெறும் மலர்களாகத் தோன்றவில்லை. இயற்கைக் கன்னிஅவனைக் கண்ணிமைக்காது உற்றுப் பார்த்து இளநகை புரிந்தாள். மாலைத் தென்றலை அவன் மனம் கொண்ட மட்டும் நிரப்பிக் கொண்டான்.நேற்றுக்கூட இந்த இடம் இவ்வளவு அழகாகத் தோன்றவில்லை!

தான் புனையும் கூத்தில் தலைவனையும் தலைவியை யும் முதன்முதலில் சந்திக்கச் செய்ய வேண்டும் என்பதற்காக, திருக்குறளின் ஏட்டைப் புரட்டி, ஏற்ற வரிகளைப் படிக்கத் தொடங்கினான். வள்ளுவரே தம் சொற்களால் ஒரு கூத்தரங் கம் அமைத்திருந்தார். அதிலிருந்து இளம் தலைவன் தொலை தூரத்தில் வரும் ஒரு பேரழகியைக் கண்டு விடுகிறான்.

**அணங்கு கொல்? ஆய்மயில் கொல்லோ?**
**கனங்குழை மாதர் கொல்?**

**மாலும் என் நெஞ்சு!**

அவள் அருகில் நெருங்கி விட்டாள்.

**கூற்றமோ! கண்ணோ பிணையோ? மடவரல் நோக்கம்!**

வினாக்களைப் பைந்தமிழ்க் குமரனின் உள்ளத்தில் எழுப்பி, அவற்றை அங்கே ஆனந்த நடமாடச் செய்து விட்டார் குறளாசிரியர். கூத்துடைத் தலைவனைப் பாட்டில் படைக்க வேண்டுமானால், முதலில் படைப்பவனே தலைவனாக மாறித் தீரவேண்டும்! அவன் பெறும் இன்ப துன்பங்கள் அனைத்தையும் புலவன் பெற்றால்தான் அவனை நன்கு படைக்க முடியும்.

பைந்தமிழ்க் குமரன் தன் கண்களை மூடிக்கொண்டு, தனது இதய அரங்கத்தில் தான் படைக்க விருந்த காட்சியைத் தீட்டலானான். 'அதோ தொலைவில் தலைவி ஆடும் மயிலென வந்து கொண்டிருக்கிறாள். தலைவன் அந்தக் காட்சியிலேயே தனது நெஞ்சைப் பறிகொடுத்து விடுகிறான். அவள் அருகில் நெருங்கி வருகிறாள். அவளுடைய விழிகள் அவனுக்குக் கொடுங் கூற்றுவனாக, பெண்மானின் மருண்ட விழிகளாகத் தோன்றுகின்றன!''

கண்களைத் திறந்தான் அவன். அவனால் அந்தக் கண்களையே நம்ப முடியவில்லை. கண் சென்ற வழியில் அவன் இருந்த இடம் தேடி மெய்யாகவே ஒரு பெண் வந்து கொண்டிருந்தாள். மெல்லிய மேலாடைப் பூந்துகில் அவள் முதுகின் பின்புறம் தோகை விரித்தாடும் மயிலெனக் காற்றில் பறந்து துடித்தது. உற்றுப் பார்த்தான் பைந்தமிழ்க் குமரன். அருகில் வந்துவிட்ட அவளுடைய விழிகளை அவனால் இப்போது நன்கு கண்ணுற முடிந்தது. அவள் மருண்டு மானென விழித்தாள். அதுவே கூற்றாக இருந்தது பைந்தமிழ்க் குமரனுக்கு, வந்தவள் கயல்விழி!

கற்பனையிலும் கனவிலும் நனவிலுமாகச் சுழன்று கொண்டிருந்த அவன் திடீரென்று சுய உணர்வு பெற்றான். எதிரில் கிடந்த ஏட்டுச் சுவடியை எடுத்து வேகமாக நூலைச்

சுற்றினான். பரபரப்புடன் அதைத் தனக்குப் பின்னால் மறைத்து வைத்தான்.

''கூத்தனிடம் கேட்டேன். சுவடியும் கையுமாகப் புறப்பட்டிருப்பதாய்க் கூறினான்ஆமாம், என்னை விட்டு விட்டு நீங்கள் மட்டிலும் என்றிலிருந்து தனியே குறள் படித்து வருகிறீர்கள்?''

இதற்கு எப்படி மறுமொழி கூறுவதென்று அவனுக்கு விளங்கவில்லை. 'இது வரையில் நான் பொருட்பாலை மட்டுந்தான் உன்னோடு சேர்ந்து படித்திருக்கிறேன். உனக்குப் பாடமும் சொல்லியிருக்கிறேன்; இதைத் தனியேதான் படிக்கவேண்டும்' என்று எப்படி அவளிடம் கூறுவது!

''குறள் படிக்க வரவில்லை; கூத்துப் புனையலாம் என்பதற்காகத் தனிமையை நாடினேன்.''

''ஓ! அதனால்தான் நீங்கள் எழுதிவந்த ஓலையை என்னைக் கண்டவுடன் பின்னால் மறைத்துவிட்டீர்கள் போலிருக்கிறது!''

அவன் தடுப்பதற்குள் சட்டென்று தாவி அவனுக்குப் பின்னாலிருந்த சுவடிக் கட்டை எடுத்தாள். ''கயல்விழி! கயல்விழி!'' என்று அவன் பதறினான். அவளிடமிருந்து அதைப் பற்றுவதற்கு முயற்சி செய்தான். அவளோ கலகலவென்று நகைத்துக்கொண்டே நெடுதூரத்துக்குச் சென்று மறைந்து விட்டாள்.

பைந்தமிழ்க் குமரனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. நாணமும் பரபரப்பும் இனம் விளங்காத தவிப்பும் அவனைப் பற்றிக் கொண்டு விட்டன. ஓடிச்சென்று அவள் கரத்திலிருந்த சுவடியைப் பிடுங்கி வரலாமா என்றுகூட நினைத்தான். ஆனால் அந்த மெல்லியலாளின் உள்ளத்தை அவன் புண்படுத்த விரும்பவில்லை.

இன்பத்துப்பாலை எழுதி வைத்த வள்ளுவரையும் தன்னையும் சேர்த்து நொந்து கொண்டு, அவன் எதையோ பறிகொடுத்து விட்டவன்போல் தன்னுடைய பழைய

இடத்திலேயே சென்று அமர்ந்தான். வீராதி வீரனான அவனை இப்போது அச்சமும் நாணமும் பற்றிக்கொண்டன.

நாழிகை சென்றது.

''என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்'' என்ற மென் மொழி கேட்டுத் தன் தலையைத் தூக்கினான் அவன். நாணமே பெண்ணுருக்கொண்டதுபோல் கயல்விழி அவனிடம் அந்தச் சுவடியை நீட்டினாள். அப்போது அவனை அவள் நோக்கிய நோக்கு அவன் இதயத்தில் மின்னலாய்ப் பாய்ந்தது.

## 32. எண்ணத்தில் இடம் கேட்டாள்



அடுத்த நாள் கயல்விழி மலைச்சாரல் மண்டபத்துக்கு வரவில்லை. விழுப்பரையரின் வீட்டிலிருந்து உணவு கொண்டு வந்த பணிப் பெண் கயல்விழிக்கு உடல் நலமில்லை என்ற செய்தியைப் பைந்தமிழ்க் குமரனிடம் கூறினாள். மறுநாளும் அதற்கடுத்த நாளும் கூட அவள் வரவில்லை. ஆனால் அவளுக்கு உடல்நலம் தேறி வருகிறது என்ற செய்தி ஆறுதல் அளிப்பதாக இருந்தது.

கூத்துப் புனைவதற்காக ஏடும் எழுத்தாணியுமாக அமர்ந்த பைந்தமிழ்க் குமரன் அதை எப்படி எழுதி முடித்தான் என்பது அவனுக்கே புதிராக இருந்தது. இதயத்திலிருந்து பொங்கிய பாடலை வாயால் இசைத்துக்கொண்டே அவன் ஏடுகளில் பதிப்பித்தான். ஒரே ஒரு நாளில் மாலைப் பொழுதில் அவன் பெற்ற உணர்வு அவனது நெஞ்சத்தில் வானவில்லின் விசித்திரங்களைத் தோற்றுவித்துவிட்டது. மெய்மறந்து அவன் பாடினான். ஏட்டின்மீது எழுத்தாணி நடனம் புரிந்தது. உணவு, உறக்கம், உலகத்து நினைவு

முதலிய எல்லாவற்றையுமே மறந்து அதில் ஒன்றிவிட்டான். கூத்தும் பிறந்தது.

கயல்விழியை விழுப்பரையரின் வீட்டிற்குச் சென்று காணவேண்டும் என்ற ஆவல் அவனுக்கு இருந்தாலும் மண்டபத்தை விட்டு வீட்டுக்குச் செல்ல விழுப்பரையர் அவனுக்கு அனுமதியளிக்கவில்லை. அடுத்த வாரத்தில் அவளே அங்கு வந்து சேர்ந்தாள். அவள் தோற்றத்தில் மிகவும் மெலிவு தென்பட்டது. திகைப்படைந்தான் புலவன்.

''என்ன காரணம் கயல்விழி?''

அவள் புன்னகை பூத்தாள், ''அன்றைக்கு மாலையில் தங்களைச் சந்தித்த பிறகு வீட்டுக்குச் சென்றேனல்லவா? பிறகு எனக்கு என்ன நடந்தென்றே தெரியாது. என் உடல் நெருப்பாய்ச் சுட்டதென்று உய்யவந்தாள் கூறினாள். அவள் என்னைவிட்டுச் சிறிதுகூட அகலவில்லை. அன்னையார் தான் மருந்து கொடுத்துத் தேற்றினார்கள்.''

வாழ்க்கையிலேயே மறக்க முடியாத நாள் என்று அவன் நம்பியிருந்த அந்தநாள் அவளுக்கு மட்டிலும் ஏன் அத்தகைய துன்பத்தைக் கொடுக்க வேண்டும்? எந்த இரவு முழுவதும் அவன் இன்பக் கனவுகளில் மூழ்கியிருந்தானோ அந்த இரவில் அவள் நோய்வாய்ப்பட்டுத் துடித்திருக்கிறாள்.

''கூத்தைப் பாடி முடித்துவிட்டீர்களா?'' என்று கேட்டாள்.

''இதோ!'' என்று அவளிடம் ஒரு புதிய ஓலைச் சுவடியை எடுத்துக் கொடுத்தான். அதை வாங்கி அவள் பயபக்தியுடன் கண்களில் ஒற்றிக் கொண்டாள். பிரித்துப் பார்த்தாள்.

''நீங்கள் பாடிக் காட்டுகிறீர்களா? நான் கேட்கிறேன்.''

மண்டபத்துக் கூடத்தில் அவர்கள் இருவரைத் தவிர வேறு யாருமில்லை. பைந்தமிழ்க்குமரன் மெல்லிய குரலில் அவளுக்கு மட்டிலும் கேட்கும்படியாக பாடத் தொடங்கினான். முதற்பகுதிக் காட்சிகளை அவன் பாடியபோது

கயல்விழியின் கண்களில் ஆனந்தம் பெருகியது. இடைப் பகுதியில் தலைவன் போருக்குச் செல்வதற்காக விடை கேட்கும்போது அவள் வேதனை அடைந்தாள். கடைசிக் கட்டத்தில் அவளுக்கு ஆவேசம் வந்துவிட்டது. அவள் கொற்றவைத் தேவியாகவே மாறிக் குரூரமாக விழித்தாள். பாடல் முடிந்து வெகு நேரமாயிற்று. சிறிது சிறிதாகச் சுய உணர்வு பெற்ற கயல்விழி தனது கன்னங்களில் வழிந்தோடிய துன்பக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

அவளுடைய முகமாறுதல்களையே கவனித்துக் கொண்டிருந்த பைந்தமிழ்க் குமரன், ''எனக்கு இந்தத் துறையில் பயிற்சி இல்லை; நான் புனைந்த முதற்கூத்து இதுதான்'' என்றான்.

''இதைக் கேட்ட பிறகு எனக்கு எதையும் வாய்விட்டுப் பேசுவதற்கே முடியவில்லை. மெய்சிலிர்த்து விட்டது எனக்கு.''

''கயல்விழி! என்னுடைய நோக்கத்தின் முதல் வெற்றி இப்போதே கிடைத்துவிட்டது. இந்த நாட்டு மக்களின் உள்ளத்தில் உணர்ச்சித் தீயை அணையவிடாமல் நாம் பார்த்துக் கொள்ள வேண்டும். இதில் உன்னுடைய கடமை, மிகப் பெரிய கடமை.''

''நீங்கள் எதைக் கூறினாலும் இனி நான் விரும்பிச் செய்கிறேன். உங்களுக்கு இதனால் மகிழ்ச்சி உண்டாகும் என்றால், அதைவிட வேறு எதையும் நான் பெரிதாகக் கருத மாட்டேன்.''

முதன்முதலாக இந்த ஆலோசனையை அடியோடு வெறுத்த அதே கயல்விழி, இப்போது இதற்குத் தன் மனம் கனிந்த ஆதரவைக் கொடுத்தது அவனுக்குப் பெருமை தந்தது. அவள் இந்தச் சில தினங்களில் அடியோடு மாறிப் போயிருந்தாள்.

''பாண்டிய நாட்டின் ஒப்பற்ற கலைச் செல்வியாக விளங்கும் நீ முன்பெல்லாம் பெருந்திரளான செல்வத்தை

பெற்றுக் கொண்டு நடனமாடியிருப்பாய். நாடுகளிலும் நகரங்களிலும் வாழும் செல்வர்கள், உனது நடனத்துக்காக வாரி வாரி வழங்கியிருப்பார்கள். ஆனால் இனிமேல் நீ ஆடவிருக்கும் நடனம் வேறு வகையானதாக இருக்கும்.

''கிராமம் கிராமமாக, ஊர் ஊராகச் சென்று நாம் இதை நடத்தவேண்டும். கொடுக்க முடிந்ததைக் குடிமக்கள் நமக்குக் கொடுப்பார்கள். பசியிலும் கொடுமையிலும் நாம் வாடும் நிலைக்கு அவர்கள் நம்மை விட்டுவிட மாட்டார்கள். ஆனாலும் இளவரசியைப் போன்று உயர் வாழ்வு வாழ்ந்து வந்த நீ எளிமையும் இன்னலும் நிறைந்த வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டிய நிலை வரக்கூடும்.''

''எந்த நிலை வந்தாலும் அதை நான் விருப்பத்தோடு ஏற்றுக்கொள்வேன். ஏனென்றால் தாங்கள் சுட்டிக்காட்டும் வழியைப் பின்பற்றுவதால் எனக்குக் கிடைக்கும் இன்பத்துக்கு எதுவுமே ஈடாகாது.''

''கயல்விழி!'' என்று நாத்தழுதழுக்க அழைத்தான் பைந்தமிழ்க் குமரன். ''எவ்வாறு நீ இப்படி மாறுதல் பெற்றாய்?''

''எனக்குத் தெரியாது.'' அவளுடைய விழிகளின் ஏக்கம் அவளுக்கே புலப்படாதிருந்த உண்மையை அவனுக்குக் கூற முயன்றது.

கயல்விழி அவனிடம் கேட்டாள்: ''நீங்கள் எப்போதும் என்னுடன் இருப்பீர்களல்லவா? இந்தக் கூத்திலே நீங்கள் தானே தலைவராக அரங்கத்தில் என்னோடு நடிக்கப் போகிறீர்கள்?''

''கயல்விழி! கூடிய விரைவில் உன்னுடைய குழு வினரில் இப்போது யார் யார் எஞ்சியிருக்கிறார்களோ அவர்கள் அனைவரையும் இங்கே திரட்டிவிடுகிறேன். கூத்துக் களை நீ நடத்துவதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் நான் கவனித்துக் கொள்ளுகிறேன். இறைவனருளால் உன் தந்தையார் உயிருடன் இருப்பாரானால் அவரையும் அழைத்து

வரச் செய்கிறேன். புலவர்களைத் திரட்டி நாடெங்கும் அனுப்ப வேண்டும். வேறு சில பணிகளும் காத்திருக்கின்றன.''

''இப்படி ஒரு கூத்தில் வேறு எந்த ஆண்மகனோடும் என்னால் இணைந்து நடிக்க முடியுமென்று நீங்கள் நம்புகிறீர்களா? நீங்களும் அதை விரும்புகிறீர்களா? இதற்கு முன்பு இத்தகைய கூத்துக்களாக இருந்தால் என்னுடைய தோழிகள் தாம் இந்த வேடங்களைப் புனைந்து கொள்வார்கள். கூத்தரங்கில் கூட நான் பிற ஆண்களை என்னிடம் அன்பு மொழி பேச அனுமதிப்பதில்லை.''

கயல்விழி இப்போது பைந்தமிழ்க் குமரனின் உள்ளத்தில் விசுவரூபம் எடுத்து வளர்ந்து கொண்டிருந்தாள்.

''எப்போதாவது ஒரு சில நாட்களில் நானே கூத்தரங்கில் உன்னோடு தலைவனாகத் தோன்றுவதற்கு அவசியம் நேரிடலாம். அப்போது அதை நான் பாக்கியமாகக் கருதுவேன். மற்ற நாட்களில் உன் தோழிகள் உன்னோடு நடிக்கட்டும்.''

நெடுமூச்செறிந்தாள் கயல்விழி.

''கயல்விழி, ஒன்றை மட்டும் உன்னிடம் என் உளம் திறந்து கூறுகிறேன். என்னுடைய கனவுகளை நனவாக்க நான் எத்தனையோ சாதனைகளை மேற்கொள்ள வேண்டியவனாக இருக்கிறேன். இடையில் குறுக்கிடும் பல சோதனைகளிலும் நான் வெற்றி பெற்று நம்முடைய சபதத்தை நிறைவேற்ற வேண்டும். நீ என்னுடைய உயிரின் உயிரில், உள்ளத் துடிப்பில், இரத்தத் துளியின் செந்நிறத்தில் எப்படியோ இரண்டறக் கலந்து விட்டாய். உடலால் நான் உன்னிட மிருந்து பிரிந்து வாழும் காலம் வரும் போதும் உள்ளத்தால் நான் உன்னோடு வாழ்வேன் இதை உன்னால் நம்ப முடியுமா?''

ஆனந்தக் கண்ணீர் பெருக்கினாள் கயல்விழி. அவளுடைய செவ்விதழ்கள் துடித்தன. சொற்கள் தடுமாறின.

''இந்த அளவுக்குத் தகுதி உடையவளாகத் தயவுசெய்து என்னை உயர்த்தி விடாதீர்கள். தங்களுடைய அன்புப் பெருக்கைத் தாங்கிக் கொள்வதற்கும் நான் பாக்கியம் செய்திருக்கவேண்டும். என்னை அப்படி நினைத்துக் கொள்ளவே என் நெஞ்சு நடுங்குகிறது. இந்த நடுக்கத்தால் தான் நான் இத்தனை நாட்டகளாக நோய்ப்படுக்கையில் வீழ்ந்துவிட்டேன். நீங்கள் எனக்கு மிகவும் அருகில் இருந்தாலும் ஏனோ என்னால் எட்ட முடியாத தொலைவில் இருப்பதுபோல் எனக்கு பிரமை ஏற்படுகிறது.

''ஒரே ஒரு வேண்டுகோள். எனக்காக நீங்கள் அதை மறுக்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டும். நம்முடைய கூத்தின் அரங்கேற்றம் இந்தக் கொடுங் குன்றத்தில் மங்கையொரு பாகனாகத் திருக்கல்யாணக் கோலத்தில் வீற்றிருக்கும் இறைவனின் சந்நிதானத்தில் நடைபெற வேண்டும். அப்போது, அன்றைக்கு மட்டிலுமாவது நீங்கள் என்னோடு கூத்துடைத் தலைவராக நடிக்க வேண்டும். பிறகு எங்கு யாருடன் எப்போது நடித்தாலும் நான் தங்களுடன் வாழ்வதாகவும், நடிப்பதாகவும் நினைத்துக் கொள்வேன்.''

''அவ்விதமே செய்வோம்.''

பைந்தமிழ்க் குமரன் எழுந்து நின்றான். அவன் முன்பு தரையில் வீழ்ந்து அவன் பாதங்களை இறுகப் பற்றிக் கொண்டாள் கயல்விழி. தன்னுடைய கண்ணீர்ப் பெருக்கால் அவற்றைக் கழுவினாள். ''ஒருபோதும் இந்த ஏழைக்குத் தங்களது இதயத்தின் மூலையில் கொடுத்திருக்கும் இந்த அணு அளவு இடத்திலிருந்து என்னை அகற்றி விடாதீர்கள்! அது ஒன்றே போதும் எனக்கு! வேறு எதுவுமே வேண்டாம்!''

இளைஞன் சிலையானான்.

# 1. திருக்கோலம் கொண்டனர்

*திருமலை நாட்டுத் திருங்கொடுங் குன்றத்துக்கு எங்கிருந்துதான் இவ்வளவு ஆனந்தம் பொங்கியதோ தெரியவில்லை. அதனுடைய ஆனந்தத்தில் அதைச் சுற்றியிருந்த சிற்றூர்களும் கிராமங்களும் கூடப் பங்கு கொள்ளத் துடித்தன. அண்மையில் நடந்து முடிந்த பெரும் போரில் படுகளமாகிப் பதறிய மட்டியூரும் தன் துன்பத்தை மறந்து திருக்கொடுங்குன்றத்துத் திருவிழாவில் கலந்து கொள்ள முன்வந்தது. 'எத்தனை கொடுமைகளுக்கு நாங்கள் ஆளாக்கப் பட்டாலும் இறைவனுக்கு விழா எடுத்துக் களிப்பதை நாங்கள் புறக்கணிக்க மாட்டோம்' என்று மக்கள் எக்காளமிட்டார்கள்.

கொடுங்குன்றம் விழாக் கோலம் பூண்டு விளங்கியது. கட்டிளம் காளையர் கூட்டம் மலைக் காடுகளுக்குச் சென்று காட்டு மலர்களையும் மூங்கில் இலை கொப்புகளையும் கட்டிக் கொண்டு வந்து நகர்ப் புறத்தை அலங்கரிப்பதில் முனைந்து நின்றது. தெருவுக்குத் தெரு தென்னங் குருத்து, ஈச்சு, மாவிலை, செவ்வலரி இவற்றாலான தோரணங்கள் காற்றில் அசைந்தாடின. மங்கலப் பெண்டிர்கள் வீடுகளைக் கழுவி மெழுகிக் கோலமிட்டனர். தூண்களுக்கும், நிலை

---

*ராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள திருப்பத்தூரை அடுத்துள்ள பிரான்மலையே திருக்கோடுங்குன்றமாகும். சோழர்களுக்கும் பாண்டியர்களுக்கும் போர் நடைபெற்ற மட்டியூர் இப்போது சிறு கிராமமாக இருக்கிறது. அந்த கிராமத்திலிருந்து ஐந்துமைல் தொலைவில் உள்ளது பிரான்மலை. அது இப்பொழுது குன்றக்குடி ஆதீனத்தின் திருப்பணியில் உள்ள ஐந்து கோவில்களில் ஒன்றாக விளங்குகிறது. கபிலர் பாடிய சங்கப் பாடல்களிலும் திருஞானசம்பந்தர் பாடிய தேவாரத்திலுமுள்ள இயற்கை வளத்தின் செழிப்பினை இப்போது அங்கு காண முடியவில்லையென்றாலும் நல்ல மங்கை பாகரின் திருக்கல்யாணக் காட்சி மெய்சிலிர்க்கச் செய்யும் சிறப்புக் காட்சி.

களுக்கும் கதவுகளுக்கும் மஞ்சளும் செஞ்சாந்தும் சந்தனமும் பூசி அழகு படுத்தினர். தெருக்களில் மாக்கோலமிட்டு, செம்மண் கரை கட்டி, மலர்களை வாரித் தூவியிருந்தனர். நகர்ப்புறத்தே குன்றின் அடிவாரத்தில் அமைந்திருந்த கோவிலின் முகப்பு வாயிலும் கண்கொள்ளாக் காட்சியளித்துக் கொண்டிருந்தது. மண்டபத்துத் தூண்கள்தோறும் குலை தள்ளிய நெடுவாழைகள் கட்டப்பட்டிருந்தன.

ரிஷபக்கொடிகளும் சேவற் கொடிகளும் பட்டொளி வீசிப் பறந்தன.

அந்த முகப்பு வாயிலை அடுத்துப் பெரியதோர் அரங்கம் அமைக்கப் பெற்றிருந்தது. அதில் வேப்பம்பூ மாலைகள் சரம் சரமாகத் தொங்கவிடப்பட்டிருந்தன. கயல்மீன் சின்னங்கள் பொறிக்கப்பட்ட கொடிகளும் தோரணங்களும் திரைச் சீலைகளும் அதில் நிறைந்தன. அரங்கத்தின் மையத்தில் ஓர் ஆள் உயரத்துக்கும் மேல் உயரமான ஒரு மட்குடம் காட்சியளித்தது. அதில் வண்ணங்கள் பூசிக்கொண்டிருந்தனர் நகரத்துக் கலைஞர்கள். அரங்கத்தின் அருகே நீண்டு வளைந்த தந்தங்களோடும் மலைப்பாம்பை ஒத்த துதிக்கையோடும் ஒரு யானை ஆடி அசைந்தவாறு நின்றது.

மக்கள் கூட்டம் அந்த அரங்கத்தையும் அதில் தென்பட்ட மட்குடத்தையும் சுட்டிக்காட்டி தங்களுக்குள் ஏதேதோ பேசிக் கொண்டது. திருவிழாவன்று அந்த அரங்கத்தில் புலவர் சபை கூடுமாம்; அதில் பாட்டும் கூத்தும் நடைபெறுமாம்; ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர் மக்கள்.

ஆமாம், திடீரென்று எப்படி இவ்வளவும் அங்கே நடந்தன?

திடீரென்று எதுவுமே நிகழவில்லை; கொடுங் குன்றத்துக் குகைக்குள் நெடுநாள் ஆராய்ச்சி நடத்திய புலவர் ஒருவர் அண்மையில் வெளியில் வந்திருப்பதாகச் செய்தி பரவியது. சுற்று வட்டாரங்களிலிருந்து கற்றவர்கள் ஓரிருவர்

வரத் தலைப்பட்டார்கள். பின்பு கூட்டம் கூட்டமாக இளைஞர்களும் முதியவர்களுமாக அங்கு புலவர்கள் குழுமினார்கள். அவர்கள் திரும்பும்போது புதிய நம்பிக்கையோடும் வலிமையோடும் திரும்பினார்கள்.

கவிபாடும் சக்தி பெற்ற இளைஞனைப் பற்றிய செய்தி ஊர்ப்புறத்தே இறகு கட்டிப் பறந்தது; அவன் சக்தி வாய்ந்தவன் என்றும் பேசிக்கொண்டனர். கயல்விழி என்ற பாணர் குலமங்கையும் மதுரையைவிட்டு அங்கு வந்து விட்டாளாம். போரில் அவளைவிட்டுப் பிரிந்திருந்த அவள் தந்தையும் குழுவினரும் அவளிடம் வந்து சேர்ந்து விட்டார்களாம். கற்றவர் கூட்டம் புலவனைப் பற்றிப் பேசியது; மற்றையோர் கூட்டம் கயல்விழியின் ஆட்டத்தைக் காணக் காத்திருந்தது.

அன்று வெள்ளிக்கிழமை, விழா அடுத்த வாரம் தொடங்கி நடப்பதாக இருந்தது. அதிகாலையில் நீராடிப் புத்துடை உடுத்து, புதுமலர் சூடி, கையில் ஓர் ஓலைப் பெட்டியில் மலர்க் குவியலோடு பைந்தமிழ்க் குமரனைக் காண வந்திருந்தாள் கயல்விழி.

''கோவிலுக்குச் செல்வோமா?''

அவனும் சித்தமாகக் காத்திருந்தான். இருவரும் புறப்பட்டார்கள். அவளுடைய காதுகளில் புதுப்பொலிவோடு தொங்கிய கயற்குழையை அடிக்கடி திரும்பிப் பார்த்தான் அவன். அவளுடைய தோற்றத்துக்கே ஒரு புதுமையான கம்பீரத்தைக் கொடுத்தது அது.

''இதைப் பார்த்தீர்களா?'' குழையைச் சுட்டிக் காட்டினாள்.

''அழகாக இருக்கிறது.''

''புலவருடைய உள்ளத்தில் கயல்மீன் துடிப்பதால், அதையே விழுப்பரையரிடம் கூறிச் செய்துதரச் செய்தேன்!''

''என்னுடைய உள்ளத்தில் மட்டுந்தானா கயல்கள் துள்ளுகின்றன? நீயும் பாண்டிய நாட்டுப் பெண்தானே?''

''என்னுடைய உள்ளம் என்றே ஒன்று இருக்கக்கூடாது என்று பார்க்கிறேன். அணுவளவுகூட அது என்னிடம் எஞ்சியிருக்காதபடி அதைத் தங்களுக்குக் காணிக்கையாக்கி விடவேண்டுமென்றுதான் ஏங்குகிறேன். அதற்காகவே நாம் இப்போது நல்ல மங்கைபாகரிடம் போகிறோம்... ஆனால்?''

ஆனந்தப் பெருக்கில் திளைத்துக் கொண்டிருந்த இளம் புலவன், அந்த 'ஆனால்' என்ற சொல்லைக் கேட்டவுடன் சட்டென்று திரும்பிப் பார்த்தான்.

''ஏனோ நான் அதற்குத் தகுதி உள்ளவளா என்ற ஏக்கம் என்னுள் அடிக்கடி ஏற்படுகிறது. இந்த இரவு முழுவதும் என்னால் உறங்க முடியவில்லை!''

'வாய்விட்டுச் சொல்ல முடியாத, சொல்லத் தெரியாத கலக்கம் என்னவாக இருக்கும்?' பைந்தமிழ்க்குமரன் ஊகித்துப் பார்த்தான். 'அப்படியும் இருக்குமோ?' என்று ஓர் ஐயம் எழுந்தது. அதை வாய்விட்டே கேட்டுவிட்டான்.

''ஒருவேளை நீ இதற்கு முன்பு எந்த இளைஞனை யாவது திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்று விரும்பியிருந்தாயா? அவன் இந்தப் போரில் இறந்து விட்டானா? அதற்காகத்தான் நீ வைகை வெள்ளத்தில் வீழ்ந்து உயிர் துறக்கத் துணிந்தாயா?''

''அப்படி எதுவுமே நிகழவில்லை'' என்றாள் கயல்விழி. ''கலைத்துறைக்கே ஆளாகியிருந்த எனக்கு இதற்கு முன்பு யாரைப் பற்றியுமே நினைக்க நேரமில்லை. என்னுடைய நினைவில் நீங்கள் மட்டுமே இருக்கிறீர்கள்; நினைவென்று ஒன்று என்னிடம் இருக்கும்வரையில் நீங்களே இருப்பீர்கள்.''

பெருமிதத்தால் ஏறுநடை போட்ட இளைஞன், ''அப்படியென்றால் சென்ற காலத்தைப் பற்றிய கவலையில் துன்பப்படாமல், எதிர்காலத்தைப் பற்றி உன் சிந்தனையைத் திருப்பு!'' என்றான். ''இந்த மலையின் உச்சியில் உள்ள இறைவனுக்கொப்பானது நாம் அடைய வேண்டிய இலட்சியம்.

நமது பாதை கடுமையானது; சோதனை மிகுந்தது. ஆனால் உயரமானது. திரும்பிப் பாராமல் என்னோடு ஒன்றிவா; உயரே செல்வோம்.''

வியப்போடு அவனைப் பார்த்துக்கொண்டே நடந்தாள் கயல்விழி. இந்தச் சில மாதங்களில் அவன் எவ்வளவு தூரம் மாறிவிட்டான்! இப்போது அவன் காடுகளில் வாழும் துறவியைப்போல் சிகையை உயரே சுற்றிக் கட்டியிருந்தான். முகத்திலே இளம் தாடி கருகருவென்று மண்டிக் கிடந்தது. விழுப்புண்களை மறைப்பதற்கென்றே நீண்ட அங்கியணிந் திருந்தான். ஏற்கனவே நெடிய தோற்றம் உள்ளவன் அவன்; இப்போது அது இன்னும் உயர்ந்திருந்தது. வலிமையான உடற் கட்டு அவனுடைய ஆடைகளில் ஒளிந்து கொண்டிருந்தது.

''கயல்விழி! நாம் நமது எண்ணத்திலே ஒன்றாகி விட்டோம். எண்ணங்களின் உறுதியில்தான் செயல்கள் பிறக் கின்றன. நாம் கட்டாயம் இந்த நாட்டை மீட்டு விடுவோம். அதுவரையில் நாம் தவம்செய்து விரதம் காப்போம். உள்ளத்தால் ஒன்றாகிய நாம், நமது இலட்சியம் நிறைவேறிய பிறகு, இதே இடத்துக்கு மீண்டும் வந்து திருமணம் செய்து கொள்வோம். நீ என்ன சொல்கிறாய்?''

அவளுக்கு எதுவுமே பேசத் தோன்றவில்லை. குபீரென்று அவள் மேலே எழும்பி வானத்தில் சிறகடித்துப் பறப்பதாக நினைத்துக் கொண்டாள். நல்ல மங்கை பாகரை வணங்கச் செல்லும்போது, தேனமுதான சொற்களை அவள் செவிகளில் அவன் பொழிந்துவிட்டான்.

''நான் என்ன சொல்வது? முற்பிறவியில் நான் செய்த பாக்கியத்தால் இந்தச் சொற்களைத் தங்களிடமிருந்து என்னால் கேட்க முடிகிறது. தங்கள் எண்ணம் எதுவோ அதுவே என் விருப்பம். மீண்டும் நாம் இங்கு வரும் அந்தச் சுபதினத்துக்காக நான் எதையும் செய்யச் சித்தமாக இருக்கிறேன். என்ன சோதனைகள் இடையில் நேர்ந்தாலும் நான் கலங்கமாட்டேன். ஏனென்றால்...இப்போதே தங்களை நான் வரித்துக்கொண்டு விட்டேன்.''

மெய்மறந்து அவள் சொல்லிக் கொண்டே நடந்தபோது, 'சுரீர்' என்று ஒரு நெருஞ்சிமுள் அவளது வலது பாதத்தில் குத்தியது. அந்தமுள் பாதத்தில் குத்தியதாக மட்டிலும் அவள் நினைக்கவில்லை. நெஞ்சிலும் பாய்ந்து விட்டது. அவள் அதை அவனிடம் காட்டிக் கொள்ளவில்லை. அதற்காக முகம் சுளிக்கவோ கூச்சலிடவோ இல்லை. அவனுக்குத் தெரியாதபடி அதைப் பிடுங்கி எறியப் பார்த்தாள். அதுவோ முனைமுறிந்து காலுக்குள் சென்றுவிட்டது. கடுக்கும் தன் கால்வலியை மறைப்பதற்காக அவள் முன்னிலும் கலகலப்பாகச் சிரித்துக்கொண்டே அவனுடன் சென்றாள்.

இருவரும் இடையில் தென்பட்ட ஒரு குடைவரைப் படிக்கட்டுகளில் இறங்கி, வளைந்து சென்ற பிறகு மேலே ஏறினார்கள். குன்றின் உச்சியில் தெரிந்தது ஒரு சுற்று மண்டபம். அதற்குள் நுழைந்து கருவறைக்கு முன்னே வந்து நின்றார்கள்.

உள்ளே கருவறைக்குள் ஒரே கும்மிருட்டாக இருந்தது. அருகில் இருந்த ஒற்றைச்சுடர் அந்த இருளை மிகைப் படுத்துவதாகவே பைந்தமிழ்க் குமரனுக்குத் தோன்றியது. உற்றுப்பார்த்தான். எங்கே இறைவன் திரு உருவம்? 'ஒன்றே தெய்வம்!' என்று சுட்டுவதுபோல் நிமிர்ந்து நிற்கும் சிவலிங்கச் செல்வம் எங்கே?

ஏதும் புலனாகவில்லை. காரணம் கேட்பதுபோல் கயல்விழியைத் திரும்பிப் பார்த்தான். அவனுடைய நெற்றிச் சுருக்கம் 'எங்கே இறைவன்?' என்று கேட்டது. முதன் முறையாக அங்கே வந்தவன் அவன்.

தன் கூடைக்குள்ளிருந்து எடுத்த பெரிய அகல்விளக்கு நிறையத் தான் கொண்டுவந்திருந்த பசு நெய்யை வார்த்தாள் கயல்விழி. வெண்பஞ்சைத் திரட்டித் திரி சமைத்தாள். அதை அங்கிருந்த சுடரில் பற்றவைத்து அகல் விளக்கிலிட்டுக் கருவறைப் படியின் மையத்தில் வைத்தாள்.

சிறிது சிறிதாக ஒளி உயர்ந்துகொண்டே வந்தது. தீப் பந்தத்தின் அளவுக்கு அது கொழுந்துவிட்டெரிந்தது. அந்த ஒளிக்குப் பின்னால் சிறிது சிறிதாக ஒரு புதிய உலகம் உதயமாவதைக் கண்ணுற்றான் பைந்தமிழ்க் குமரன். அவன் மெய்ம்மறந்தான். அந்த அற்புதக் காட்சியை காண்பதற்கு இரண்டு கண்கள் போதா. ஆயிரம் கண்களாலும் காணமுடியாத காட்சி. கோடிக் கண்களால் கண்டு மகிழக் கூடிய திருமணக் காட்சி அது!

இயற்கையின் எழில் அனைத்தும் ஒன்றாய்த் திரண்டிருந்த கொடுங்குன்றத்தின் உச்சியில் குடைவரையின் தனிமையில் இறைவன் தம் துணைவியோடு ஒன்றாக அமர்ந்திருந்தார். அணிமணிகள் பூண்டு, அழகாடை புனைந்து, இளமையும் எழிலுமாய், ஆண்மையும் பெண்மையுமாய் சிவமும் சக்தியுமாய் அங்கே அவர்கள் இணைந்திருந்தார்கள். கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்புத் தவழ இருந்த இறைவன் தம் தேவிக்கு மலர் சூட்ட முனைவது போன்று தமது இடது கரத்தில் அன்று மலர்ந்த மலரொன்றை வைத்திருந்தார். அதைக் கண்டு நாணமும் மகிழ்ச்சியும் பொங்கிக் கொண்டிருந்தன தேவியின் திரு முகத்தில். அவரும் அவ்வாறே தமது வலது கரத்தில் மல ரொன்றைத் தாங்கி இறைவனின் முன்பு நாணத்துடன் ஏந்தி யிருந்தார். ''தங்களை எனக்களித்து, என்னை ஈர்த்து ஆட் கொண்டு விடுங்கள்!'' என்று கூறிக் கொண்டிருக்கிறாரா, தேவி?

'திருஞானசம்பந்தர் இங்கெல்லாம் வந்திருக்கிறார்; இந்தத் திருக்கோலத்தைக் கண்டிருக்கிறார்; கவிதை பொங்கிப் பெருக்கெடுத்து அருவியாகக் கொட்டியிருக் கிறது!' என்று பைந்தமிழ்க் குமரன் நினைத்தவுடனேயே ஞான சம்பந்தரின் பாமாலை அவன் இதழ்களில் கமழ்ந்தது. கன்னியும் சேர்ந்து பாடினாள்.

**வானில் பொலி வெய்தும்-மழை**
**மேகம் கிழித் தோடிக்**

**கூனல் பிறை சேரும்-குளிர்**
**சாரல் கொடுங் குன்றம்;**
**ஆனில் பொலி வைந்தும்-அமர்ந்(து)**
**ஆடி உல கேத்தத்**
**தேனில் பொலி மொழியாளொடு**
**மேயான் திரு நகரே!**
**மயில் புல்குதண் பெடையோடுடன்**
**ஆடும் வளர் சாரல்**
**குயில் இன்னிசை பாடும்-குளிர்**
**சோலைக் கொடுங் குன்றம்!**
**மயில் வேன்மலி நெடுவம்-சுடர்**
**அனல் ஏந்தி நின்றாடி**
**எயின் முன்பட வெய்தான்-அவன்**
**மேயவ் வெழில் நகரே!**

ஐம்புலன்களிலும் அழகு பூண்ட தேவி ஒருத்தி அருகில் அமர்ந்திருப்பதாலன்றோ இறைவனால் இந்த உலகத்தையே ஆட்டி வைத்து இயக்குவிக்க முடிகின்றது! தேனினும் இனிய இதயத்தோடு, தேனினும் இனிய மொழியோடு, தேனினும் இனிய செயலோடு கூடிய ஒருத்தியின் துணையால் அல்லவோ இறைவன் தீமைகளனைத்தையும் அழிக்கும் ஆற்றல் பெற்றிருக்கிறார்!

''நான் புதிய பாண்டிய நாட்டைப் படைக்க வேண்டும், அதைக் காக்க வேண்டும்; அதற்கு வரும் தீமைகளை அழிக்க வேண்டும்!'' என்று வேண்டிக் கரம் கூப்பினான் அவன்.

''என்னை இப்போதே அவருக்கு அளித்து விட்டேன்; என்னுடைய குறைகள் நிறைகளோடு என்னை அவருக்கு அர்ப்பணித்து விட்டேன்; உங்களுடைய சாட்சியாக நான் அவருடையவள்'' என்றாள் கயல்விழி.

ஐம்புலன்களிலும் அழகு பொங்கும் அந்தப் பெண்ணணங்கைப் பைந்தமிழ்க் குமரன் அன்போடு நோக்கி, அவளிடம் ஒரு மலரை எடுத்து நீட்டினான். நாணமும் மகிழ்ச்சியும் பொங்க அவள் அதை பயபக்தியோடு ஏற்றுத் தன் கூந்தலில் அணிந்து கொண்டாள்.

# 2. புலவர் படைமுரசு!



**கொ**டுங்குன்றத்துத் திருவிழாவுக்காகக் கூடியிருந்த மக்கள் அந்தத் திருவிழாவில் நடந்த ஒரு புதுமையை வியப்போடு வேடிக்கை பார்த்தார்கள். நல்ல மங்கை பாகரின் ஊர்வலத்துக்கு முன்னால் சென்ற யானையின் மீது பெரியதொரு மட்குடம் வைத்துக் கயிற்றால் கட்டப்பெற்றிருந்தது. அதற்குமேல் ஏட்டுச் சுவடியொன்று எல்லாருக்கும் தெரிவது போல் வைக்கப் பெற்றிருந்தது. குடத்துக்கு முன்னும் பின்னு மாக யானையின் மத்தகத்திலும் புறமுதுகிலும் இருந்தவாறு இருவர் முரசங்களை அதிரச் செய்து கொண்டிருந்தார்கள்.

அந்த மட்குடத்தில் மூன்றே மூன்று சொற்கள் பொன் னிறத்தால் கண்ணையும் கருத்தையும் கவரும்படி பொறிக்கப் பட்டிருந்தன; 'அறம்! பொருள்! இன்பம்!'

''அரங்கத்தில் வைத்து அழகு செய்து கொண்டிருந்தார்களே, அந்த மட்குடம் இது!'' என்று அருகில் இருந்தோரிடம் கூறினார்கள் சிலர்.

''அதோ, அந்தச் சுவடிக்குமேல் எழுத்தாணி வைத்திருக் கிறார்களே- அதை நீ கவனித்தாயா?'' என்று சுட்டிக் காட்டினார் ஒருவர்.

''ஆமாம் அது என்ன சுவடி?'' என்று ஆவலோடு கேட்டார் மற்றொருவர்.

''புதுமையாக இருக்கிறது, எங்கள் காலத்திலெல்லாம் திருவிழாவில் இப்படிச் செய்யமாட்டார்கள்'' என்றார்கள் சில முதியவர்கள்.

என்ன இது? எதற்கு இது? பானைக்குள் என்ன இருக் கிறது? சுவடிக்குள் என்ன இருக்கிறது? இதையெல்லாம்

வைத்துக்கொண்டு என்ன செய்யப் போகிறார்கள்? எங்கும் இதே பேச்சாக இருந்தது.

வேங்குழல் ஊதுவோர், மகரயாழ் மீட்டுவோர், தாளமிசைப்போர், முழவு கொட்டுவோர், கொம்பு ஊதுவோர் இவ்வாறு பலவகைக் கருவிகளைக் கொண்டு இசை முழக்குவோரும் ஊர்வலத்துக்கு முன்பாகச் சாரி சாரியாகச் சென்றனர். அடுத்தாற்போல் புலவர்கூட்டம், ''அகரமுதல எழுத்தெல்லாம்'' என்று தொடங்கி, ''பிறவிப் பெருங்கடல் நீந்துவோர்'' வரையிலும் உள்ள பத்துக் குறட்பாக்களையும் திரும்பத் திரும்ப இனியகுரலில் பாடிக்கொண்டே சென்றனர். அவர்களையடுத்துத் தேவாரம் திருவாசகம் ஓதுவோரும் வேதபாராயணம் செய்வோரும் அணி அணியாக நடந்தனர்.

கட்டிளம் காளையர் கூட்டம் காளை வாகனத்தின் மீது அம்மையப்பனின் உற்சவத் திருவுருவங்களை வைத்து உற்சாகத்துடன் சுமந்து வந்தது. பைந்தமிழ்க் குமரன் ஊர்வலத்துக்குள்ளும் மக்கட் கூட்டத்துக்குள்ளும் புகுந்து சென்று அவர்களுடைய மன நிலையைக் கண்டறிந்தான். இறைவனிடம் நம்பிக்கை, இசைப்பெருக்கால் களிப்பு, பானை மீது வந்த குடவோலைச் சின்னத்தால் வியப்பு இவ்வளவும் கொண்டிருந்தார்கள் மக்கள்.

★போர் என்ற போது, பொங்கி எழுந்து தலைகளைச் சீவும் ஆற்றல் பெற்றிருந்த வீரர்களில் பலரே, இப்போது சிரம் தாழ்த்தித் தோள் கொடுத்துக் காளை மீது அமர்ந்தவனைக் களிப்போடு தாங்கி வந்தார்கள். இது அவர்களுடைய பரம்பரை பரம்பரையாக வந்த வழக்கம்; உரிமையுங்கூட.

ஆயிற்று; ஊர்வலம் முடிந்தது. நகரமே அரங்கத்தைச் சூழ்ந்து கொண்டு விட்டது. யானை மீதிருந்த பானையை இறக்கி அரங்கத்தின் முன்னே வைக்கச் செய்தான் பைந்தமிழ்க் குமரன் கூட்டம் அமைதியோடும் கட்டுப்பாட்டோடும்

*போர்க்காலம் தவிர, அமைதி நிறைந்த நாட்களில் போர்ப் படையினரே தமிழகத்தில் திருவிழாக் காலங்களில் தேர் இழுப்பது, இறைவனைச் சுமந்து ஊர்வலம் வருவது போன்ற பணிகளைக் கடமையாய்க் கொண்டிருந்தார்கள்.

தரையில் அமர்ந்தது. இளைஞன் தன் விழிகளின் அசைவால், விரல்களின் சுட்டுதலால், குழுமியிருந்த அனைவரையும் அமைதியாக இருக்கும்படி செய்தான். அவனிடம் ஏதோ ஒரு தனிச்சக்தி இருப்பதாகத் தோன்றியது கயல்விழிக்கு. அவள் பெண்கள் அமர்ந்திருந்த பகுதியில் முன் வரிசையில் உட்கார்ந்திருந்தாள்.

''பெருமக்களே! நம்முடைய வீடு வாசல், உற்றார் உறவினர், கன்று காலிகள், விளைபொருள் இவ்வளவையும் இழந்த நிலையில் நாம் இங்கு கூடியிருக்கிறோம். ஆனால் நம்முடைய துன்பங்களை ஒரு சில நாட்களுக்கு மறந்திருப்பதற்காக மட்டும் நாம் கூடவில்லை. அந்தத் துன்பங்களை அடியோடு வேரறுப்பதற்காகவே நாம் இங்கு திரண்டிருக்கிறோம்!''

தலை நிமிர்ந்து உட்கார்ந்து அவனுடைய சொற்களைப் பருகத் தொடங்கினார்கள் மக்கள். அவர்களுடைய உள்ளத்தில் ஊக்கமும் வலிமையும் ஊற்றெடுத்துச் சுரந்தன.

''நம்முடைய வாழ்வை இழந்துவிட்டோமே என்ற கவலை இனிச் சிறிதுகூட நமக்கு இருக்கக்கூடாது. உள்ளத்தின் உறுதியையும் ஊக்கத்தையும் ஒரு போதும் கைவிட்டு விடாதீர்கள். நம்முடைய நாட்டின் பகையை நாம் திண்ணமாக முறியடிப்போம். இந்த நாட்டில் இனி என்றுமே பசியும் பிணியும் பகையும் சேராதவாறு இதை வலிமையுள்ளதாக அமைத்துவிடுவோம்...!''

''எவ்வளவு தன்னம்பிக்கை இவருக்கு!'' என்று வியப்படைந்த கயல்விழி, 'எவ்வாறு இவர் வெல்லப் போகிறாராம்?' என்று தனக்குள் கேட்டுக்கொண்டாள்.

''இதோ நம்முடைய வழிகாட்டி!'' என்று மட்குடத்தின் மேலிருந்த ஓலைச் சுவடியைச் சுட்டிக் காட்டினான் பைந்தமிழ்க்குமரன். ''இவர் காட்டும் வழியை மக்களுக்குச் சுட்டிக் காட்டுவதற்கு இனி நாடு முழுவதும் கற்றவர்கள் சுற்றி

வருவார்கள். அவர்களை ஆதரித்து அவர்கள் குரல் கேட்டு, அதன்படி நடப்பதென்று நாம் உறுதி கொள்ள இப்போதைக்கு உங்களுக்கு மூன்றே மூன்று குறள் மட்டும் கூறப் போகிறேன்!''

மக்களில் கற்றவர்கள் பலர் இருந்தார்கள்; கற்றவர்கள் சொல்லக் கேட்டுச் செவி வழியே கல்வி அறிவு பெற்றவர்கள் பலர் இருந்தார்கள். கல்லாதவர்களும் இருந்தனர். எல்லாருடைய கண்ணும் கருத்தும் பைந்தமிழ்க் குமரன் மீதிருந்தன.

''வள்ளுவர் ஒரு குறளில் கூறுகிறார்: தக்க மனிதர்களும், நிறைந்த விளைபொருளும், அதைப் பகிர்ந்தளிக்கும் தாழ்விலாச் செல்வர்களும் சேர்ந்திருக்கும் நாடே நாடென்கிறார். அதேபோல் மற்றொரு குறளில் பசி, பிணி, பகை இம்மூன்றும்சேராத நாடே நாடு என்கிறார். இந்த இரண்டு குறட்பாக்களை மட்டும் நாம் மனத்தில் வைத்துக் கொண்டு இந்தப் பாண்டிய நாட்டை அப்படிச் செய்து விடுவோம் என்று நம்பினால் போதும்.''

கூட்டத்திலிருந்து ஒரு முதியவர் எழுந்து, ''அரசர் அல்லவோ அதைச் செய்யவேண்டும்? நம்மால் முடியக் கூடியதா அது?'' என்று கேட்டார்.

''பாண்டியருடைய குடிமக்களாகிய நாமும் அரசர்கள் தாம்!'' என்று கூறிக் கூட்டத்தினர் முகங்களைக் கூர்ந்து நோக்கினான் இளைஞன். சிலருடைய விழிகளில் புத்தொளி மின்னியது; சிலர் அஞ்சி விழித்தார்கள்.

''இதோ, இந்த மட்குடம் இருக்கிறதே,இது என்ன தெரியுமா? 'குடவோலை' என்று ஆண்டுதோறும் குடத்துக் குள்ளே ஓலைபோட்டு, உங்களுடைய ஊர்ச் சபைக்காக நீங்கள்தாமே ஆளுங்கணத்தாரைத் தேர்ந்தெடுக்கிறீர்கள்? அரசர் பணியை உங்கள் ஊருக்குச் செய்ய நீங்கள்தாமே உங்களுக்கு வேண்டிய பெருமக்களைப் பொறுக்கி எடுக் கிறீர்கள்? ஆகவே, ஆளுங்கணத்தாரும் ஒரு வகையில்

அரசர்கள் தாம். அவர்களையெல்லாம் தெரிந்தெடுக்கும் அதிகாரம் நமக்கு இருப்பதால், நாமும் அரசர்களே!''

''ஓ! குடவோலைப் பாண்டமா இது?'' என்று அதிசயத்தோடு அதைப் பார்த்தார்கள் அவர்கள். குலசேகர பாண்டியர் ஒருவர் மட்டிலும் கன்னியாகுமரியிலிருந்து வெள்ளாற்றங்கரை வரையிலும் உள்ள எல்லா நாடுகளையும் நகரங்கள் கிராமங்களையும் நேரடியாகப் பார்க்க முடியாது என்பதை அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். ஆகவே ஊர் தோறுமுள்ள அதிகாரிகளும், மக்களால் தெரிந்தெடுக்கப்படும் ஆளுங்கணத்தாரும் ஒரு வகையில் அரசருக்குரிய தகுதி பெற்றவர்களாக இருக்க வேண்டுமென்பதை அவர்களால் உணர முடிந்தது.

''ஒவ்வோர் ஊரிலும் தக்கவர்கள் பத்துப் பேர்களாவது இருப்பார்களானால், இங்கே விளைபொருள் செழித்துக் கொழிக்கும்; பசியும் பிணியும் பதுங்கி ஒடுங்கும்; பகைவர்கள் நம்மைக் கண்டு அஞ்சி நடுங்குவார்கள். ஆகவே, முதன் முதலாகத் தக்க மனிதர்களைத் திரட்டுவதற்காகவே இங்கு புலவர் படை இன்று கூடியிருக்கிறது!

''தகுதி உள்ள மனிதர்கள் யார் என்று கேட்கிறீர்களா? ஐந்தே ஐந்து முக்கியமானப் பண்புகள் அவர்களுக்கு வேண்டும் என்று வள்ளுவர் கூறுகிறார்.''

குடிமக்களின் நலனைக் கருதி அரசர் தம் கடமைகளை செய்யக்கூடிய ஆளுங்கணத்தார் சான்றோராக இருந்தால் தான், நாட்டுமக்கள் நலமுற்று வாழ முடியும் என்பதை வள்ளுவரைக் கொண்டு மக்கள் மனத்தில் பதியும்படி விளக்கிக் கூறினான் இளம் புலவன்.

''பெருமக்கள் யார், அவர்களுடைய ஐந்து குணங்கள் எவை? அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற ஐந்து பண்புகளைப் பெற்றவர்களுக்குத் தான் நீங்கள் இந்தக் குடவோலைக்குள் இடமளிக்கவேண்டும். அன்பு உள்ளவர்களையும் இல்லாதவர்களையும் கண்டுபிடிப்பது

மிக மிக எளிது. எல்லாம் தமக்கே வேண்டும் என்று தன்னலம் பேணுபவர்கள் அன்பில்லாதவர்கள். பிறருக்காகத் தம்முடைய உழைப்பையும் பொருளையும் உயிரையும் கொடுக்கக்கூடியவர்கள் அன்புள்ளவர்கள். அன்பில்லாதவர்களை வெறும் எலும்பும் தோலும் போர்த்த பிணங்கள் என்று வள்ளுவர் கூறுவதால் ஒருபோதும் பிணங்களுக்கு ஒப்பான தன்னலக்காரர்களை நீங்கள் குடத்தில் ஓலையிட்டுத் தெரிந்தெடுத்து விடக் கூடாது.''

மக்கள் கூட்டம் தங்கள் தங்கள் பகுதியிலுள்ள ஆளுங்கணத்தாரைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியது. இவர்களில் மனிதர்கள் யார்? பிணங்கள் யார்? புதிய உண்மை ஒன்றைக் கண்டு விட்டவர்கள்போல் அவர்கள் தங்களுக்குள் பரபரப்புடன் பேசத் தொடங்கினார்கள்.

அவர்களைக் கையமர்த்திவிட்டு, மற்ற நான்கு தகுதிகளைப் பற்றியும் கூறினான் பைந்தமிழ்க் குமரன். ''ஊர்ப்பழிக்கு அஞ்சி இழிசெயலைச் செய்யாதவர்களே நாணமுள்ளவர்கள். காலத்துக்கேற்ற கடமைகளை மக்களுக்குச் செய்யும் குணம்தான் ஒப்புரவு என்பது. மக்கள் துயரங்களைக் கண்ணால் கண்டவுடன் அவற்றைப் போக்கி அவர்களுக்கு இன்பவாழ்வு தரக்கூடிய பண்புக்குத்தான் கண்ணோட்டம் என்று பெயர். கண்ணோட்டம் இல்லாதவர்கள் கண்களில் இரண்டு புண்ணுடைய குருபிக் குருடர்கள் என்பதால் அவர்களையும் அறவே விலக்க வேண்டும். உள்ளத்தில் கள்ளமில்லாமல் நன்மை பேசும் வாய்மையுடையவர்களாகவும் அவர்கள் இருக்கவேண்டும். இந்த ஐந்து தகுதி உடையவர்களின் ஆட்சியில்தான் நாடு செழித்து விளைபொருள் மிகுதியாகும். வாணிகஞ் செய்யும் செல்வர்களும் அரசநீதிக்கு அஞ்சி எல்லோருக்கும் பொருள்களைப் பகிர்ந்து கொடுப்பார்கள். செல்வர்கள் என்றால் பொருள் தேடிப் புதைத்து வைக்கும் பூதங்கள் அல்லர். அதைப் பகிர்ந்து கொடுத்துப் புகழுக்குமேல் புகழ்

சேர்ப்பவர்களையே 'தாழ்விலாச் செல்வர்கள்' என்றார் வள்ளுவர்.''

ஊர்ச் சபையினரைத் தேர்ந்தெடுக்கும் வழக்கம் நெடு நாட்களாகவே பாண்டிய நாட்டில் இருந்தது. அவர்களையே மக்கள் தங்களுடைய 'பெருமக்கள்' என்றும், 'ஆளுங் கணத்தார்' என்றும் அழைத்து வந்தார்கள். ஆனால் இன்று தான் அவர்களுக்கு ஓர் உண்மை பளிச்சென்று புலப்பட்டது. குலசேகர பாண்டியரின் செங்கோலின் ஒரு பகுதியே ஆளுங்கணத்தார் ஆவார்கள். அவர்கள் சான்றோர்களுக்குரிய ஐந்து தகுதிகளும் படைத்தவர்களாக இருக்க வேண்டும்!

அடுத்தாற்போல் 'வெற்றித் திருமகள்' என்ற கூத்து நடைபெறுவதாக இருந்ததால், அதற்கு வேடம் புனைந்து கொள்வதற்காகக் கயல்விழியும் இளைஞனும் அரங்குக்குப் பின்னே சென்றார்கள். கூடியிருந்த புலவர்களில் ஐந்துபேர்கள் எழுந்து, ஒவ்வொருவரும் சான்றோருக்கு இருக்க வேண்டிய ஒவ்வொரு பண்பினையும் விளக்கிக் கூறினார்கள்.

மக்களில் சிலர் தங்களுடைய ஐந்து விரல்களையும் மடக்கி, ''அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை'' என்று தங்களுக்குள் நினைவூட்டிக் கொண்டார் கள். இதை மறைவிடத் திலிருந்து கண்ட பைந்தமிழ்க் குமரன் கயல்விழிக்குச் சுட்டிக் காட்டினான்.

''சான்றோர்களை வளர்க்காத நாடு சுடுகாடு! இப்போது இங்கே வள்ளுவர் தமது இலக்கியப் புரட்சிக்கு விதை ஊன்றிவிட்டார். புலவர் படை என்றவுடன் எள்ளி நகை யாடினாயே,-கூட்டத்தைப் பார்!'' என்றான்.

''வீரத்தைப் பற்றியும் வெற்றியைப் பற்றியும் நீங்கள் ஏதும் சொல்லவில்லையே?''

''அதை உன்னுடைய ஆட்டக்கலையே சொல்லிவிடும். நீ இத்தனை உள்ளங்களிலும் சத்தியம் என்ற தீயை மூட்டப் போகிறாய்!''

# 3. உள்ளத்தில் மூண்ட தீ

**தீ**ப்பந்தங்களின் ஒளி வெள்ளப் பெருக்கிடையில் அரங்கத்தில் ஆடும் மயிலெனத் தோன்றினாள் அழகு நங்கை. செந்தாழை நிறம், செங்கமல முகம், காதளவோடிய கயல், அன்ன நடை, மின்னலிடை, மென் தளிர்க்கொடி யென அவள் குலுங்கி வந்தாள். மக்களின் உள்ளமும் குலுங்கியது.

கண்கள் கூர்மை பெற்று இமைப்பை மறக்க, தங்களது ஐம்புலன்களையும் குவிய விட்டு, மக்கள் அவள் உருவில் ஒன்றியிருந்தார்கள்.

தலைவனாக வேடம் புனைந்து கொண்டிருந்த பைந் தமிழ்க்குமரன் மாறுவேடம் புனைந்து கொள்வதில் மிகவும் வல்லவன் என்று தோன்றியது. போர் வீரனுக்குரிய தலையலங் காரத்துக்குள், செவிகளை ஒட்டினாற் போல் தன்னுடைய இளம் தாடியைப் பூந்துகிலால் மறைத்துக் கட்டியிருந்தான். முதல் வரிசையில் இருந்தவர்களுக்கே அவன் சற்று முன்பு இலக்கியம் பேசிய புலவன்தானா என்பது புதிராக இருந்தது.

பைந்தமிழ்க் குமரன் நடிப்புத் தலைவனாகத்தான் அரங்கத்தில் தோன்றுவதாக இருந்தான். ஆனால் அந்த இரவில் அவளுடைய நடனத்தை அருகிலிருந்து கண்ணுற்ற போது அவனால் நடிகனாக மட்டும் அங்கு உலவ முடியவில்லை. அவன் புனைந்த கதைப் பாடலை அவளது இதழ்கள் பாடின; பாதங்கள் ஆடின. அவனுடைய ஆவியிலிருந்து பிறந்த சொற்களை அவள் தன்னுடைய ஆவியில் இரண்டறக் கலக்கச் செய்து, தனது அங்கத்தின் ஒவ்வோர் அணுவின் வாயிலாகவும் இசைத்துக்

கொண்டிருந்தாள். நடிப்புத் தலைவனாகத் தோன்ற நினைத்தவனை மெய்த்தலைவனாகவே மாற்றிவிட்டாள் அவள்.

தலைவனும், தலைவியும் இன்மொழி பேசிக் களித்தது கண்டு, மது மயக்கம் கொண்டு விட்டது கூட்டம். 'உலகில் உண்மையாகவே இவ்வளவு இன்பங்களா நிறைந்திருக்கின்றன! அல்லது உலகம் தனது இன்பங்களை மட்டும் தனியே திரட்டி வந்து இளம் உள்ளங்களுக்குக் காணிக்கையாக்குகிறதா?'

ஆயிற்று; காதல் கனிந்தது; தலைவனும் தலைவியும் இல்லற வாழ்வை விழைந்தார்கள்; பாண்டித் திருமகள் என்ற தோற்றத்திலிருந்த கயல்விழி தனது எதிர்கால இல்லறம் பற்றி எத்தனை எத்தனை இன்பக் கனவுகள் காணுகிறாள்; அவள் அவனுக்கோர் ஆண்மகனைப் பெற்றுத் தருவாளாம்! அவன் ஐந்து குணங்களையும் பெற்ற சான்றோனாகத் திகழ்வானாம்! அறிவில் அவனைச் சிறந்தவனாக்குவானம் தந்தை; ஆற்றலில் சிறந்தவனாக்குவாளாம் தாய்!

போர் முரசு அதிர்ந்தது. இல்லறக் கனவை நனவாக்காமலே போர்க்களம் செல்கிறான் வீர மறவன். ஒருவேளை அவன் திரும்பி வராவிட்டால், காலமெல்லாம் அவனுக்காகக் காத்திருந்து மறுபிறவியில் அவனை அடைவதாகச் சொல்லி அனுப்புகிறாள் கன்னி.

அவன் திரும்புகிறான். ஆனால் அவன் திரும்புவதற்குள்...?

சோழ நாட்டு வெறியர் சிலர் அவள் வீட்டைச் சூழ்ந்து கொள்ள, உள்ளே நுழைகிறான் ஒரு விலங்கு மனத்தினன். பதறித் துடிக்கிறாள் பேதை. தப்பியோடப் பார்க்கிறாள்; தற்கொலை செய்துகொள்ள முயல்கிறாள்; பொங்கிச் சீறுகிறாள்; விம்மிக் கதறுகிறாள்; அவனிடம் கெஞ்சு கிறாள். அவனுக்குத் தாயில்லையா? அவன் பெண்ணோடு பிறக்க வில்லையா? அவனுக்கும் ஒரு தாரமில்லையா?

ஐயோ! அவள் தவித்த தவிப்பு, துடித்த துடிப்பு, நடுங்கிய நடுக்கம்! ''திரௌபதிக்கு ஆடை தந்து மானம் காத்த கண்ணனே, நீ எங்கு சென்றாய்? சீதையை அழிக்கத் துணிந்தவனின் இதயத்தில் ஆயிரம் அம்புகளைப் பாய்ச்சிய இராமனே, உன் செவிகளுக்கு உன் ஆவியின் குரல் எட்ட வில்லையா? கண்ணகித் தெய்வமே என்னையும் எரித்து விடு! அங்கயற்கண்ணியே, என் ஆவியை அணைத்துவிடு!

''பாண்டிய நாடே, நான் உன்னைச் சபிக்கிறேன். வீட்டுக்கொருவன் வீரம் காப்பவனாக இருந்திருந்தால், இப்படி உன்னை அழிக்கத் துணிவானா அன்னியன்? பெண்டுபிள்ளையைக் காப்பாற்றவாவது, வீட்டுக்கொருவன் இருந்திருந்தால் உனக்கு இந்தக் கேடு ஆகுமா? எங்கே உன் வீரம்? எங்கே உன் மானம்? எங்கே உன் வாழ்வு?''

செயலிழந்து, உணர்விழந்து, வீழந்து விட்டாள் அவள். கூண்டுக்குள் பாய்ந்து சிறகொடிந்த கிளியைப் பற்றி உயிர் குடிக்கும் பூனையானான் வெறியன். அந்தக் கணத்தில் திரை மட்டிலும் விழுந்திருக்காவிட்டால், அந்த வெறியனாக நடித்தவனையே ஆயிரம் சுக்கலாய்க் கிழித்துப் போட்டிருப் பார்கள் மக்கள். தங்களை மறந்து கூட்டத்திலிருந்து குமுறி எழுந்தவர்களை மற்றவர்கள் கையமர்த்தி அது கூத்து என்பதை விளக்கினார்கள்.

போருக்குச் சென்ற தலைவன் உடலெங்கும் விழுப்புண்கள் சுமந்து வந்து சேர்ந்தான். அரங்கத்தின் ஒரு மூலைக்குள்ளிருந்து புகைமண்டி வந்து வெளியில் சுழன்றது. அவன் இறந்து விட்டால் அவனுக்காகக் கன்னியாகக் காத்திருந்து மறுபிறவியில் அவனை அடைவேன் என்று கூறியவள், தனக்காகத் தீமூட்டிக் கொண்டிருந்தாள்.

''வீர மரணம் அடைய முடியவில்லை என்னால்; வெட்டுண்டு கிடந்தவனை எப்படியோ எடுத்துவந்து உயிர் பிழைக்க வைத்து விட்டார்கள்'' என்று கூறிக்கொண்டே தன் தலைவியைத் தேடி வந்தான் அவன். ஆவலுடன் அவள் கரத்தைப் பற்றச் சென்றான்.

படமெடுத்த கருநாகக் கூட்டமென அவளது கருங்கூந்தல் காற்றில் அலைய அவள் கொற்றவைக் கொடுந் தேவியாகவே மாறிவிட்டாள்.

''தீண்டாதீர்கள், என்னை! உடலால் மட்டுமல்ல, உள்ளத்தாலும் தீண்டாதீர்கள்! நான் நிறையழிந்தவள்; பழி சுமந்தவள்; பாவியிலும் பாவி!''

உள்ளங்கால் முதல் உச்சி வரையிலும் நடுங்க அவள் அவனை நோக்கிக் கரம் கூப்பினாள். அவள் விழிகள் இரண்டும் வெளியே சிதறுபவைபோல் சுழன்றன. தலைவனின் வேடத்திலிருந்த பைந்தமிழ்க் குமரன் மெய்யாகவே அவள் தோற்றத்தைக் கண்டு அஞ்சினான்.

கூத்துடைத் தலைவனுக்கு உண்மை விளங்கி விட்டது. அவன் அடியற்ற மரம்போல் அரங்கத்தில் சாய்ந்தான். அவனது பாத தூளியைத் தனது விழிகளில் ஒற்றிக் கொண்டு, ''நான் தீக்குளித்துவிட்டு உங்கள் ஆவியில் வந்து கலந்து கொள்ளுகிறேன்; பிறகு நாம் இருவருமே நமது வெஞ்சினத் தால் வஞ்சம் தீர்ப்போம்! அந்தக் கயவனின் சாம்ராஜ் யத்தையே சரிந்து விழச் செய்வோம்!'' என்று மின்னலெனப் பாய்ந்து புகை வந்த திசையில் ஓடினாள் தலைவி.

தலைவன் நினைவு பெற்றெழுந்து அவளைத் தடுத்து நிறுத்துவதற்குள் அவள் தாவிவிட்டாள் நெருப்பில். கயல்விழியின் ஆடையில் பெரும்பகுதி தீப்பற்றிக் கொண்டது.

பாட்டுடைத் தலைவி தீக்குளித்து விட்டாள் என்பதைக் கூத்துப் பார்ப்பவர்களுக்கு உணர்த்துவதற்காக மேடையின் ஒருபக்கத்தில் திரை மறைவில் தீமூட்டிப் புகையைக் கிளப்பிக் கொண்டிருந்தார்கள். உண்மை யாகவே கயல்விழி அதன் மீது விழுந்ததோ அவள் ஆடை தீப்பற்றிக் கொண்டதோ பைந்தமிழ்க்குமரனுக்குத் தெரியாது. அவன் மேடையில் அவளுக்காகப் புலம்பிக் கதறினான்; வீரத்துடன் சூளுரைத்தான்.

"பாண்டித் திருமகளே, நீ நிறையழிந்தவளல்ல! நீ பழி சுமந்தவளல்ல!பத்தரை மாற்றுப் பசும் பொன் நீ! பத்தினித் தெய்வமாம் கண்ணகி நீ! அங்கயற் கண்ணியின் அருமைச் செல்வி நீ! மறு இல்லாக் கற்பினளே, என்னுடைய சான்றாண் மைத் தவற்றுக்கு நீ இன்று பலியானாய்! இந்த நாட்டு ஆண் மகனாகிய என்னுடைய பழி பாவத்தை நீ சுமந்திருக்கிறாய்! சான்றாண்மை கொண்ட ஆண் மக்கள் நிறைந்திருந்தால், பெண்மைக்கு இந்தப் பெருங்கேடு நேர்ந்திருக்குமா? காக்கப் பிறந்தவன் காக்கத் தவறிவிட்டேன்! வீட்டையும் காக்க வில்லை; நாட்டையும் காக்கவில்லை!"- அவன் குமுறினான்.

அவளை நீராயுருக்கி விட்ட அந்த நெருப்பின் மீதும் அவனைப் பெற்றெடுத்த தாய் தந்தையர் மீதும் அவனுக்கா கவே வாழத் துடித்த அந்தக் கற்புக்கரசி மீதும் ஆணை யிட்டான் அவன்.

"என் எண்ணத்தில் நிறைந்தவளே, உன்மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்; உன்னைச் சூழ்ந்த தீ, அதை உனக்கு இட்டவனின் சாம்ராஜ்யத்தையே பொசுக்கிச் சாம்பலாக்கும் வரை நான் இனி ஓயப் போவதில்லை. கண்ணகியாம் கற்புக்கரசி எப்படி மதுரையை அழித்தாளோ அப்படியே உன்னுடைய கற்புத் தீ கங்காபுரியைக் கொளுத்தப் போகிறது, பெண் தெய்வம்! நீ எனக்குச் சான்றாண்மை மிக்க வீர மகன் ஒருவனைப் பெற்றுத் தருவதாகக் கூறினாயல்லவா? ஒருவன் போதாது. இந்த நாட்டிலுள்ள ஆண் மக்கள் அனைவரையுமே நீ வீரர்களாக மாற்றவேண்டும். தம்பியை இழந்து தவிக்கும் குலசேகர பாண்டியருக்கு, 'இங்கே ஆயிரமாயிரம் தம்பிகள் இருக்கிறோம்' என்று இளைஞர்கள் கூறுமளவுக்கு நீ அவர்களின் உள்ளத்தில் சக்தியாகச் சுடர்விட வேண்டும். உன் ஆணை நிறைவேறும் வரையில் இந்தத் தீ பரவிக்கொண்டேயிருக்கட்டும்."

கூத்து முடிந்த பின்னும் கூடியிருந்த மக்கள் ஆடாமல் அசையாமல் அமர்ந்திருந்தார்கள். கண்ணீர் பெருகி வழிந்த நிலையில் அதைத் துடைக்கக் கூட அவர்களுக்குச் சிந்தை

யில்லை. பெண்களில் சிலர் மூர்ச்சித்து விழுந்துவிட்டார்கள். ஆண்களின் கண்கள் சிவந்து மீசைகள் துடித்தன.

பின்னர்தான் அவர்களுக்குக் கூத்தின் தொடக்கத்தில் கட்டியக்காரர் கூறிய செய்தி நினைவில் வந்தது. பெருமக்கள் கூத்துக்காக ஏதும் பொன்னோ, பொருளோ கொடுப்பதாக இருந்தால் அதை அங்கிருந்த மட்குடத்தில் போட்டும்படி கேட்டுக் கொண்டிருந்தார் அந்தக் கட்டியக்காரர்.

''நமக்காகப் போரிட்டு அழிந்த மட்டியூர் நம்மை அடுத்திருக்கிறது. அதை நாம் முதலில் புதுப்பிக்க வேண்டும். அல்லூர் மக்களுக்கு உணவு, உடை, இடம் கொடுத்துக் காக்க வேண்டியது நமது தலையாய கடமை. அதற்காகவே இந்தக் கூட்டத்தில் கிடைக்கும் பொருளை நாங்கள் மட்டியூருக்கு வழங்கப் போகிறோம். கையில் பொருளில்லாதவர்கள் அந்த ஊரைப் புதுப்பிக்கும் பணியில் தங்கள் உழைப்பைத் தர வேண்டும். நாளைக்குப் புலவர்கள் பலர் இந்த நகரத்துக்குள் சுற்றி வருவார்கள். தனம், தானியம் எதைக் கொடுக்க முடியுமோ அதைக் கொடுத்து உதவலாம். அடுத்தவர் பசித்திருக்க, நாம் புசித்து மகிழ்வது பெரும் பாவமாகும்...!''

கூத்து முடிந்த மறுகணமே பெண்ணொருத்தி அந்த மட்குடத்தருகே எழுந்து சென்று, தனது அணிகளனைத்தையும் கழற்றி அதற்குள் போட்டாள். அவளைத் தொடர்ந்து சென்ற பெண்கள் கூட்டம் தங்களது கனங்குழை, மேகலை, நூபுரம், பொன்னாரம், மணியாரம் முதலியவற்றைக் கழற்றி உள்ளே வீசியது. கழஞ்சுகளையும் காசுகளையும் அள்ளிப் போட்டார்கள் ஆடவர்கள். அந்த மட்குடத்தருகே பெருங் கூட்டம் சூழ்ந்துகொண்டு தங்களால் முடிந்த அனைத்தையும் மனமாரக் கொடுத்து விட்டுச் சென்றது.

இவ்வளவுக்கும் காரணமாக இருந்த பைந்தமிழ்க் குமரன் அப்போது அங்கு இல்லை. அவன் இந்தக் காட்சியைக் கண்டிருந்தால் ஆனந்தக் கண்ணீர் வடித்திருப்பான். அவனுக்குப் பதிலாக அங்கே விழுப்பரையர் நின்று

கொண்டிருந்தார். மேலும் மேலும் வந்து குவிந்து கொண்டிருந்த பொன்னையும் மணியையும் கண்டு அவர் வியப்படைய வில்லை. குடிமக்களின் உள்ளத்தின் ஆழத்தில் அமிழ்ந்திருக்கும் அன்பும் தியாக உணர்வும் அவரை மெய்ம் மறக்கச் செய்துவிட்டன. அந்தப் பண்புகளை அவருக்குச் சுட்டிக்காட்டிய அரும் தலைவனை அவர் நினைத்துக் கொண்டார்.

''இளவரசே! நீங்கள் சான்றாண்மைக்குள்ள மெய்ப் பொருளை இன்றுதான் என்னையே உணர வைத்தீர்கள்; அது நமது மக்களிடமே மறைந்திருக்கிறது என்பதை வெளிப்படுத்தி விட்டீர்கள்'' என்று தமக்குள்ளாகவே தழு தழுத்த குரலில் கூறிக்கொண்டார்.

அப்போது பைந்தமிழ்க் குமரனும், ''கயல்விழி! கயல்விழி!'' என்று தழுதழுத்த குரலில்தான் அவளை அழைத்துக் கொண்டிருந்தான். தரையில் நினைவற்றுக் கிடந்தாள் அவள்.

அரங்கத்தின் மூலையில் புகைமூட்டத்துக்காகப் போட்டிருந்த சிறு தீயில் அவள் வேண்டுமென்றே வந்து விழுந்து விட்டாளாம். கடைசிக் காட்சியில் நடித்துக் கொண்டிருந்த புலவன் இதைக் கண்ணுறவில்லை. நல்ல வேளையாக அருகில் இருந்த தோழிகள் அவளைப் பற்றி இழுத்துத் தீயை அணைத்திருக்காவிட்டால், மெய்யாகவே அவள் உயிர் நீத்திருப்பாள்!

''கயல்விழி!'' என்று மீண்டும் அழைத்தான் அவன்.

''எனக்குள்ளே பற்றிக் கொண்ட தீயை என்னால் தாங்க முடியவில்லை'' என்றாள் அவள். அவள் விழிகளில் நீர் நிறைந்து துளும்பியது.

# 4. போராட்டம்



**க**யல்விழியின் ஆட்டமும் புலவர்களின் கூட்டமும் பைந் தமிழ்க்குமரன் எதிர்பார்த்ததற்கும் மேலாகக் குடிமக்களிடம் புத் தெழுச்சியைத் தோற்றுவித்து விட்டன. விழுப்பரையரின் ஆனந் தத்துக்கோர் எல்லை இல்லை. ஆனால், இந்த நிகழ்ச்சிகளால் எவன் ஒருவன் பூரித்துப் பெருமித மடைய வேண்டுமோ அவன் மட்டிலும் தனிமையில் புழுங்கிக்கொண்டிருந்தான். எவளிடம் அவன் தன் பெருமகிழ்ச்சியைப் பங்கிட்டுக் கொள்ளவேண்டும் என்று கற்பனை செய்துகொண்டிருந்தானோ, அவள் அவனுக்குப் பேரதிர்ச்சியைத் தந்து விட்டாள்.

கயல்விழிக்கு அப்படியொன்றும் மிகுதியான தீப் புண்கள் ஏற்பட்டுவிடவில்லை. ஆனால் தக்க சமயத்தில் அவள் தோழிகள் அவளைத் தடுத்திருக்காவிட்டால் அவளுக்கு என்ன நேர்ந்திருக்கும்? பைந்தமிழ்க் குமரனின் நெஞ்சு நெருப்பால் இப்போது வெந்து கருகியது. ஒவ்வொரு கணமும் இப்படி யாரும் அவளைக் கண்காணித்துக் கொண்டிருக்க முடியுமா? எந்த விநாடியில் எப்படி நடந்து கொள்வாளோ என்ற ஓர் அச்சத்தையல்லவா எழுப்பி விட்டிருக்கிறாள்!

அவளை விழுப்பரையரின் இல்லத்துக்கு அனுப்பி விட்டு, மண்டபத்தில் வந்து படுத்தவனுக்கு இரவில் உறக்கம் வரவில்லை. முதன் முதலாகக் கூத்தின் கதையை அவளிடம் கூறி, அதில் நடிக்க வேண்டுமென்று கேட்டபோது பிடிவாத மாக அவள் மறுத்ததை அவன் நினைத்துக் கொண்டான்.

'நீங்கள் வற்புறுத்தினால் முதற்கூத்தின் முடிவில் நானும் மெய்யாகவே தீக்குளித்துவிடுவேன்' என்று அவள்

சீற்றத்துடன் கூறினாள். ஆனால் பின்னர் அவன் வற்புறுத்தாமலே இசைந்துவிட்டாள். இசைந்து என்ன பயன்? முதலில் கூறியதையே நிறைவேற்றுவதற்காகத்தான் இசைந்தாளா?

ஆனால் அவளிடம் இருந்த மற்றொரு கயல்விழியையும் அவன் மறந்துவிடத் துணியவில்லை. அவனிடம் முழு மனத்தோடு அடைக்கலம் புகுந்தவள் அவள்; சரணாகதி அடைந்தவள் அவள். 'நீங்கள் எதைக் கூறினாலும் அதை நான் விரும்பிச் செய்கிறேன்; தங்களுடைய மகிழ்ச்சியைவிட நான் வேறு எதையும் பெரிதாகக் கருதமாட்டேன்' என்று கூறியவளும் அவளே. ஒரே கயல்விழிக்குள் இருவகைப் பெண்கள் குடிகொண்டிருக்கிறார்களோ என்ற கலக்கம் தோன்றியது அவனுக்கு.

கண்ணுறங்காமல் புரண்டு அவன் களைத்துப்போய் ஒரு முடிவுக்கு வந்தான். அவளுக்கு விருப்பமில்லையென்றால் இந்தக் கூத்தில் அவளை நடிக்கும்படி வற்புறுத்தலாகாது. நடைபெற்றது முதற் கூத்தாகவும் கடைசிக் கூத்தாகவுமே இருந்துவிட்டுப் போகட்டும்.

மறுநாள் முற்பகலில் பைந்தமிழ்க் குமரனைச் சுற்றிக் கூட்டம் கூடத் தொடங்கிவிட்டது. அவனைக் கண்டு பேசுவதற்காகப் பலர் வந்து கூடங்களிலும் வெளியிலும் காத்திருந்தார்கள். பெரிய பெரிய வண்டிகளில் நெல், தினை, வரகு முதலிய உணவுத் தானிய மூட்டைகளை ஏற்றிக் கொண்டு வந்து வெளியில் நிறுத்தியிருந்தார்கள் கொடுங் குன்றத்துப் பெருமக்கள். முதல்நாள் இரவில் சேகரிக்கப் பெற்ற அணி மணிகள் அந்த மட்குடத்தில் நிறைந்திருந்தன. அது ஓரமாக வைக்கப் பெற்றிருந்தது.

கொடுங்குன்றம் நகரத்துப் பெருமக்கள் மட்டியூர் மக்களுக்காகத் திரட்டிய உணவுப் பொருளை அவனிடம் கொடுப்பதற்காக வந்திருந்தனர். அவனுடைய தெளிவான சொற்கள் தங்களுக்கு வழிகாட்டியிருப்பதாகத் தெரிவித்தார்கள். அதுவரையிலும் ஏதும் குற்றங்குறைகள்

இருந்தாலும், இனி நகரத்தை முன்னிலும் சிறப்பாகக் கவனிப்பதாய் வாக்களித்தனர்.

''புகழுக்கு ஆசைப்பட்டு மக்களுக்குப் பணி யாற்றுங்கள். உடுப்பது நான்கு முழம், உண்பது நாழி அரிசி, உறங்குவதற்குத் தனிக் கூரை போதுமே நமக்கு! பொருட் செல்வத்துக்குப் பேராசைப் படுகிறவர்களின் மீது சிறிது எச்சரிக்கையாக இருங்கள். அன்பில்லாதவர்கள் அவர்கள். மக்களிடம் அன்போடு நடந்து கொள்ளுங்கள்.''

''பாண்டிய நாட்டில் மீண்டும் படை திரட்டக் கூடாதென்று சக்கரவர்த்தி கட்டளையிட்டிருக்கிறாராம். நம்முடைய குலசேகர பாண்டியரின் படையில் இளைஞர்கள் சேர முடியாது. இந்த நிலையில் நாம் பகையை எப்படி வெல்வது?'' என்று கேட்டார் ஒருவர்.

''படையில் சேர்ந்தால்தானா பயிற்சி பெற முடியும்? ஒவ்வொரு வீட்டிலுள்ள ஆண் மக்களுக்கும் அவர்களுடைய பெண்களையும் குழந்தைகளையும் காக்கும் பொறுப்பு இருக்கிறதல்லவா? ஊருக்குள் கள்வர்களோ காட்டு மிருகங் களோ வராமல் காப்பதற்கு நீங்கள் ஊர்க்காவல் வைத்திருக் கிறீர்களா? அங்கங்கே ஒவ்வோர் ஊரிலும், படையில் சேராமலே இளைஞர்கள் பயிற்சியை மேற் கொள்ளலாம்.''

அவனுடைய சொற்களின் கருத்தை ஊடுருவிக் கண்டு கொண்ட ஒருவர், ''அவசியம் நேர்ந்தால் திடீரென்று பெரும் படை திரட்டி விடலாம் என்று கருதுகிறீர்கள்'' என்றார்.

''நானோ புலவன். குறிப்பால் உணர்த்துவதை ஊருக்குத் தக்கவாறு செயலாற்றப் பாருங்கள்.''

அவர்கள் விடைபெற்றுக் கொண்டு எழுந்தார்கள். ''மட்டியூர்ச் சபையோருக்குச் சொல்லியனுப்புங்கள். நாளைக்கே இவற்றை அவர்களிடம் கொடுத்து, ஊரைப் புதுப்பிக்கும்படி கூறலாம். உடனடியாக அந்த ஊர் எழும்பியாக வேண்டும்'' என்றான். அவ்வாறே வாக்களித்துச் சென்றனர் ஆளுங்கணத்தார்.

வந்தவர்களிடமெல்லாம் உரையாடி அனுப்பிவிட்டுத் தன்னுடைய கூடத்துக்குள் நுழைந்தான் பைந்தமிழ்க் குமரன். அங்கே கயல்விழி அவனுக்காவே வெகுநேரம் காத்துக் கொண்டிருந்தாள். அவள் எப்போது வந்தாள் என்பதை அவன் கவனிக்கவில்லை. அவளைக் கண்டவுடன் சிறிது அதிர்ச்சியடைந்தான்.

மௌனமாகவே விழிகளால் ஒருவரிடம் ஒருவர் பேச முயன்றனர். கயல்விழி புன்னகை பூத்தாள். ''கூண்டுப் பறவையாக நீங்கள் இங்கு இருந்தபோது எப்போதும் உங்களைக் காண முடிந்தது. இப்போது சிறகடித்துப் பறக்கத் துணிந்து விட்டீர்கள்.''

''எங்கு பறந்தாலும் கூண்டுக்குத்தானே திரும்ப வேண்டும்? அங்குதானே அமைதி கிடைக்கிறது?'' என்றான் புலவன்.

பின்னர் அவளை அழைத்துக் கொண்டு அணிகலன்கள் நிறைந்த அந்த மட்பாண்டத்தின் அருகில் வந்தான். அதற்குள்ளே எட்டிப் பார்த்த கயல்விழியின் கண்கள் வியப்பால் விரிந்தன. தன் இரு கரங்களால் அவற்றை வாரி எடுத்து அவளிடம் நீட்டினான். அவளும் கரங்களை ஏந்தினாள். பொன்னாலும் வெள்ளியாலும் செய்யப் பெற்ற பல்வகை ஆபரணங்களும் கழஞ்சுகளும் காசும் அதில் இருந்தன.

அதனிடையே தென்பட்ட ஒரே ஒரு காதோலைச் சுருளை எடுத்து உற்றுப் பார்த்தான். அவன் கண்கள் கலங்கின. ஒரே ஒரு வெள்ளிக் கம்பியால் சுற்றப் பெற்ற தென்னை ஓலைச் சுருள் அது. பொன்னாலும் வெள்ளியாலும் அணி கலன் பூண முடியாத ஓர் ஏழைப் பெண், அதில் சுற்றியிருந்த வெள்ளிக் கம்பியை வழங்கவேண்டும் என்ற துடிப்பால் தன் காதோலைகளைக் கழற்றிப் போட்டிருக்கிறாள்.

''கயல்விழி, நமக்குக் கிடைத்த இவ்வளவு பொருள் களிலும் இந்த ஓலைச் சுருளே மிகவும் விலைமதிக்க முடியாத

பரிசாக எனக்குத் தோன்றுகிறது. இதில் ஒட்டியிருக்கும் வெள்ளியைக் கொடுக்க முன்வந்திருக்கிறாள் ஓர் ஏழைப் பெண்.''

வெளியில் உணவு மூட்டைகளுடன் காத்திருந்த வண்டிகளைச் சுட்டிக் காட்டினான்.

''பாண்டியன் உபரியாகத் திறை செலுத்த வேண்டுமென்று கட்டளை பிறப்பித்திருந்தால்கூட, இவ்வளவு ஆவலோடு குடிமக்கள் முன் வந்து கொட்டியிருப்பார்கள் என்று நம்புகிறாயா? உன்னுடைய கலைப் பணிக்கு அன்பைத் தூண்டிவிடும் சக்தி இருக்கிறது; மக்கள் மனத்தை அழகு படுத்தும் ஆற்றல் இருக்கிறது; புதிதாக எழும்பும் மட்டியூர் உன்னுடைய அன்புக்கும் அழகுக்கும் சான்று கூறும்.''

''என் பணி என்று கூறாதீர்கள்'' என்றாள் கயல்விழி. ''நீங்களும் உங்கள் உயிர்ப் பாடலும் இன்றி நானுமில்லை, என் நடனமுமில்லை.''

பைந்தமிழ்க்குமரன் திகைப்படைந்தான். இப்படிக் கூறும் இந்தக் கயல்விழி மெய்யானவளா? அல்லது கூத்து முடிந்தவுடன் தீயில் விழப் போனாளே, அவள் மெய்யானவளா?

''நேற்று நடந்த நிகழ்ச்சியை என்னால் மறக்க முடியவில்லை. உனக்குள்ளே மற்றோர் ஆவேசம் கொண்ட கயல்விழி இருந்து கொண்டு திடீரென்று எதையாவது செய்யத் துடிக்கிறாள். அன்றொருநாள் அவள் வைகையில் குதிக்கப் போனாள். நேற்று அவள் நெருப்புக்குத் தாவி விட்டாள். என்னைத் திடீரென்று ஒருநாள் தனிமையில் தவிக்க விடவேண்டும் என்ற எண்ணம் போலும் அவளுக்கு.''

அவள் அதிர்ச்சியடைந்தாள்.

''சொல்! உனக்கு விருப்பமில்லையென்றால், விருப்பமற்ற ஒரு செயலை எனக்காக நீ ஏன் மேற்கொள்ள வேண்டும்?''

''நீங்கள் விரும்புகிறீர்கள்.''

''என் விருப்பம் இந்த நாட்டின் எதிர்கால நல்வாழ்வு தான். நான் ஆண் மகன்; கடமைப் பற்றுக் கொண்டவன். அதற்காக நான் உன்னைத் துன்புறுத்தவும் விரும்ப வில்லை.''

''உங்கள் நோக்கமே என் நோக்கமாகவும் விருப்பமாகவும் இருந்தால்?''

''நீ இப்படித் தீயில் குளிக்கத் துணிந்திருக்க மாட்டாய்!''

கயல்விழியால் அதற்கு மேல் அவனிடம் தொடர்ந்து பேச முடியவில்லை.

''கயல்விழி! உன்னை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. புரிந்து கொள்ள முடியவில்லை'' என்று நாத் தழுதழுக்கக் கூறினான் அவன். ''பாணர்குலப் பெண்ணாக இருந்து மிகவும் மேன்மையான உணர்ச்சிகளைப் பெற்றிருக்கிறாய். நாம் ஒரு தீமையை எதிர்த்துப் போராடும் நிலையில் உந்தித் தள்ளப் பட்டிருக்கிறோம். நம்முடைய போராட்டத்தின் தொடக்கமே வெற்றிக்கு அடிகோலி விட்டது. இந்த நிலையில் நீ தளர்ந்து விட்டாய். உன்னை இழந்துவிடும் துணிவும் எனக்கில்லை.''

''கட்டாயம் இனி நான் நேற்று நடந்ததுபோல் நடந்து கொள்ளமாட்டேன்; நேற்று நான் என்னுடைய சுய உணர்வில் இல்லை.''

''மீண்டும் இப்படி நிகழ்ந்தால்...?''

''ஒருக்காலும் நிகழாது. அப்படி நிகழ்ந்தால் அது உங்களுக்குத் துன்பம் தரும் என்பதால் இனி நிகழாது. உங்களை முதலில் வைத்தே நான் எதையும் நினைக்கப் பழகிக்கொள்கிறேன்.''

வருத்தத்துடன் சிரித்துவிட்டுக் கூறினான் இளைஞன்: ''நீ யாரோ? நான் யாரோ? முதன்முதலில் சிலம்புக் கூத்தின் போது நாம் ஒருவரை ஒருவர் விரும்பியா சந்தித்தோம்? கூத்துப் பார்க்கும் நினைவே இல்லாதவன் அங்கு வந்தேன். பிறகு, வைகையாற்றங்கரையில் நான் சந்தித்த போது, நாம்

விரும்பியா சந்தித்தோம்? அடுத்தாற்போல் இங்கு வந்து நாம் எப்படி ஒன்றாக வாழ முடிந்தது? நம் வாழ்க்கையில் ஏதோ ஓர் உட்பொருள் இல்லாவிட்டால், நாமே அறியாத ஒரு பந்தம் இல்லாவிட்டால் இப்படியெல்லாம் நேர்ந்திருக்காது. நீ இதையெல்லாம் மறந்துவிடக்கூடாது.''

அவன் கூறிய ஒவ்வொரு சொல்லையும் தனக்குள்ளே ஆழ்ந்து சிந்திப்பவள்போல் உற்றுக் கேட்டாள் கயல்விழி. பிறகு, அவனிடம் விளக்கம் கோருவதுபோல் ஓர் ஐயப்பாட்டை வெளியிட்டாள்.

''கூத்தில் வரும் பாண்டித் திருமகளைப் பற்றி நீங்கள் கடைசிக் காட்சியில் மிகவும் உயர்வாகவும் உருக்கமாகவும் பேசுகிறீர்கள். அவளைப் பத்தினித் தெய்வம் என்றும் உத்தமிச் செல்வம் என்றும் போற்றுகிறீர்கள். தங்களுடைய அவ்வளவு போற்றுதல்களுக்கும் உரியவள்தானா அவள்?''

பைந்தமிழ்க் குமரனின் விழிகள் கோபத்தால் சிவந்தன. ''நானா பத்தினி என்று கூறினேன்! என் தெய்வமே எழுத்தில் வந்து அப்படி என்னைக் கூற வைத்தது. இயற்கைப் புலவன் எவனும் சுயநினைவில் எல்லாவற்றையும் பாடி விடுவதில்லை. கவிதையின் ஆவேசம் வந்து அவனிடம் சொற்களாய்க் கொட்டுகிறது...?''

''அப்படியானால்...?''

''ஆயிரம் முறை கூறுவேன்? திரும்பத் திரும்பக் கூறுவேன். பத்தினித் தெய்வம் அவள். தீமையால் அவளை அழிக்க முடியாது. தீமையை அழிக்கப் பிறந்தவள் அவள்.''

நீண்ட பெருமூச்சு விட்டாள் கயல்விழி. பிறகு எங்கோ நினைவாகத் தன் இரு கரங்களையும் கூப்பினாள். ''இனி என்றுமே உங்களுக்குத் துன்பம் தரமாட்டேன்'' என்று தனக்குள்ளாகவே கூறிக் கொண்டாள்.

# 5. நடுவழியில்



கொடுங்குன்றத்தை விட்டு அவர்கள் புறப்பட்டுத் தென் பாண்டிப் பகுதியில் சுற்றிவரத் திட்டமிட்டார்கள். பிரயாணத்துக்கு வேண்டிய முன்னேற்பாடுகள் சுறு சுறுப்பாக நடந்தன. கயல்விழியின் தந்தை ஆதிச்சதேவர் கலைக் குழுவைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ஏற்கனவே அதில் பழுத்த அநுபவம் பெற்றவர் அவர்.

பைந்தமிழ்க் குமரனுக்குப் புலவர்களிடம் வேலை இருந்தது. தவிரவும் தனிமையில் அடிக்கடி அவன் விழுப்பரையருடன் ஆலோசனைகள் செய்து வந்தான். அவனுடன் அவர் இனிமேல் உடன் இருக்க முடியா தென்பதால் அவனுக்கு இரகசியமாகச் சில செய்திகளைக் கூறினார்.

''இளவரசே! தாங்கள் பாண்டிய மண்டலத்தைச் சுற்றி வரும்போது மிகவும் விழிப்போடு இருக்க வேண்டும். போருக்கு முன்பாகவே பொதுமக்களில் பலருக்குத் தங்களை நேரில் தெரியாது என்பதால் இப்போதும் அவர்களால் தங்களை இனம் கண்டு கொள்ள முடியாது. அது நமக்கு ஒரு பாதுகாப்பு. ஆனால், முன்பு தங்களோடு நெருங்கிப் பழகியவர்கள் யாரும் இப்போது நெருங்கிப் பழகினால் எப்படியும் கண்டு பிடித்துவிடுவர்.''

''கூடியவரையில் விழிப்போடுதான் இருக்கிறேன்.''

''அரங்கத்தில் தோன்றித் தாங்கள் அடிக்கடி பலர் கண்களில் படாமல் இருந்தால்கூட நல்லதுதான். கூத்திலும் தாங்கள் நடிக்க வேண்டும் என்பதில்லை. செய்வதைப் பிறர் அறியாதவாறு செய்ய முயலுங்கள்.''

''கூத்தில் இனி நான் இப்போதைக்குத் தோன்றப் போவதில்லை. ஆனால் புலவர் கூட்டங்களில் மறைந்திருந்து எதையும் செய்ய முடியாது. என்றாலும் எச்சரிக்கையாக இருக்கிறேன்.''

''திருவிழாவின் போதுகூடச் சந்தேகத்துக் கிடமான வகையில் யாரோ இருவர் கூட்டத்துக்கிடையில் நடமாடியதைக் கண்ணுற்றேன். அதுபோன்ற சமயங்களில் திருடர்களும் நடமாடக்கூடும். ஆனால் அந்த இருவரும் திருட வந்தவர்களாகத் தோன்றவில்லை. கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு அரங்கத்துக்கு அருகில் நெருக்கமாக அவர்கள் வரப் பார்த்தார்கள். நான் அவர்களைத் தடுத்துத் தொலைவுக்குச் செல்ல ஏற்பாடு செய்தேன்.''

''ஒற்றர்களாக இருக்குமோ?''

''இருக்கலாம்'' என்று சொல்லிவிட்டுச் சிறிது நேரம் மௌனமாக இருந்தார் விழுப்பரையர். பிறகு மேலே பேசினார். ''இப்போதைக்கு நம்முடைய பெரிய பாண்டியரிடம் ஆட்சிப் பொறுப்பைக் கொடுத்துவிட்டுக் -லோத்துங்கர் போயிருக்கிறார். ஆனால் பழையபடி ங்கொண்ட சோழ வல்லபரே இங்கு அமைச்சராக இருக்க வண்டுமென்ற பிடியை மட்டும் அவர் விட்டுவிட வில்லை. சயங்கொண்ட சோழ வல்லபருடைய பழைய பொறுப்பான ஒற்றர்களையெல்லாம் நாம் இந்தப் போரில் ஒழித்துக் கட்டிவிட்டோம். இதனால் இப்போது சயங்கொண்ட சோழவல்லபர் முன்னிலும் பன்மடங்கு வஞ்சம் கொண்டிருப்பர். ஆனால் எதையும் வெளியில் காட்டிக் கொள்ளாமல் மறைவாகச் செய்யக் கூடியவர் அவர். அவருடைய புதிய ஒற்றர்களால் தங்களை எளிதில் கண்டுபிடிக்க முடியாது என்றாலும், அவருக்கு இது போன்ற நிகழ்ச்சிகள் இங்கு நடைபெறுவதைக்கூடப் பொறுக்க முடியாது.''

''நம்முடைய அரசருக்குமே தெரியாமல் நான் வாழ வேண்டிய நிலை வந்திருக்கிறது. தாங்கள்தாம் பாண்டியரை

அருகிலிருந்து பார்த்துக் கொள்ள வேண்டும். அவருடைய மனவேதனை எவ்வாறு இருக்கும் என்று நினைக்கும் போதுதான் என்னால் தாங்க முடியவில்லை'' என்று கலங்கிய குரலில் கூறினான் இளவரசன்.

''அவருடைய கவலையை நான் மாற்ற முயல்கிறேன். செய்திகள் அனுப்ப வேண்டுமென்றால் அம்பலக் கூத்தன் இருக்கிறான். நானும் அவ்வப்போது வந்து தங்களைச் சந்திக்கிறேன்.''

விழுப்பரையர் தம்முடைய உயிரைவிட்டுப் பிரிவது போல் அவனிடம் விடைபெற்றுக் கொண்டார். கொடுங்குன்றம் நகரத்தைவிட்டுப் புலவர் படையும் கலைஞர் படையும் புறப்பட்டு விட்டன. நகரத்துப் பெருமக்கள் அவர்களுக்கு வண்டிகளையும் மாடுகளையும் குதிரைகளையும் வழங்கியிருந்தார்கள். குதிரைகளில் செல்பவர்கள் முன்னதாக விரைந்து சென்று, தொடர்ந்து வருவோருக்கு வேண்டிய வசதிகளைக் கவனிக்க வேண்டும் என்று ஏற்பாடாகியிருந்தது.

நான்கு பெரிய கூண்டு வண்டிகள் ஒன்றாகப் புறப்பட்டன. முதல் வண்டியில் கயல்விழியின் கலைத் துறைத் தோழிகள் இருந்தார்கள். அடுத்த வண்டியில் கயல்விழி, ஆதிச்சதேவர், உய்யவந்தாள் ஆகியோர் இருந்தனர். கயல்விழி விழுப்பரையரிடமும் திருவுடைத் தேவியாரிடமும் அனுமதி பெற்று உய்யவந்தாளைத் தன்னோடு அழைத்துக் கொண்டாள். மூன்றாவது வண்டியில் இசைக் கருவிகளைக் கொண்டு பல்லியம் முழங்குவோரும், கடைசி வண்டியில் புலவர்களும் இருந்தார்கள்.

புலவர்களின் வண்டிக்குள் ஏதோ பூகம்பம் நடப்பது போல் சத்தம் கேட்டது. அவர்கள் ஒருவருக்கொருவர் தமது குரல்களை உயர்த்திச் சொற்போர் புரிந்துகொண்டு வந்தார்கள். நக்கீரர் பரம்பரையல்லவா! சிறிதும் விட்டுக் கொடுக்காமல் முன்னேறிச் சொற்களால் தாக்குதல் புரிந்தார்கள்.

பைந்தமிழ்க் குமரன் போரில் கலந்து கொள்ளாமல், வாயை மூடிக்கொண்டு செவிகளைத் திறந்துகொண்டு கூர்ந்து கவனித்து வந்தான். கருத்துக்களில் தெளிந்தவற்றைத் தனக்குள்ளே மௌனமாகப் பத்திரப்படுத்திக் கொண்டான்.

அவர்களுக்கு உணவோ, உடையோ, உறைவிடமோ ஒரு பொருட்டல்ல. ஆனால் அவர்களால் சொற்போர் நடத்தாமல் மட்டிலும் இருக்க முடியாது!

கயல்விழியின் வண்டியில் வந்த ஆதிச்சதேவருக்கு அங்கே இருப்புக் கொள்ளவில்லை. புலவர்களுக்கு மத்தியில் குதித்துத் தம்முடைய கைவரிசைகளைக் காட்டத் துடித்தார் அவர். பேசும்போது அவர் சிரிக்கமாட்டார். ஆனால் மற்றவர்களைச் சிரிக்க வைப்பார்.

''பார், பார்! ஏட்டுச் சுவடிகளைக் கரைத்துக் குடித்து விட்டு எப்படி மோதிக் கொள்ளுகிறார்கள், பார்! ஒவ்வொருவருக்கும் தாமே அதிகம் கற்றவர் என்று எண்ணம்; அதை நிலை நாட்டாவிட்டால் அவர்களுக்குத் தலை வெடித்துவிடும். வள்ளல்களையும் அரசர்களையும் இப்படித் தங்கள் கல்வியால் பயமுறுத்தியே இவர்கள் பரிசில்கள் பெறுவது வழக்கம்.''

கயல்விழியும் உய்யவந்தாளும் தங்களுக்குள் நகைத்துக் கொண்டார்கள்.

''ஆனால் இந்த இளம் புலவரோ பொல்லாத பிள்ளையாக இருக்கிறார்? 'கற்றவர்கள் கற்றதோடு நிறுத்திக் கொள்ளக்கூடாது; கற்றபடி நடந்து காட்டவேண்டும்; மற்றவர்களை நடக்கத் தூண்டவேண்டும்' என்கிறார். இது தான் ஆபத்தான வேலை!''

''இதில் ஒன்றும் ஆபத்து இல்லையே?'' என்றாள் உய்ய வந்தாள்.

''ஆபத்து இனிமேல்தான் வரப்போகிறது!'' என்ற கூறினார் ஆதிச்சதேவர். ''பொருள் தேடிக் குவிக்கிறவர்களிடம் போய் நீங்கள் பொன் காக்கும் பூதங்கள் என்றால் அவர்கள் பொறுத்துக் கொள்வார்களா? எல்லாமே தங்களுக்கு வேண்டும்

என்று பேராசைப்படுகிறவர்களிடம் போய் உங்களை வள்ளுவர் உயிரில்லாப் பிணங்களென்று சொல்கிறார் என்றால் அவர்கள் என்ன செய்வார்கள்? அப்படிச் சொல்கிற புலவர்களையே பிணங்களாகப் புரட்டி எடுத்து விடமாட்டார்களோ? செல்வர்களிடம்போய் 'இந்திரன், சந்திரன்' என்று புகழவேண்டும். 'அழகில் மன்மதன், வீரத்தில் வீமன்' என்று பாடவேண்டும். அவர்கள் கொடுக்கும் பரிசில்களை வைத்துக்கொண்டு வயிற்றைக் கழுவ வேண்டும். புலமைக்கு அழகு இதுதான்!''

பெண்கள் இருவரும் சிரித்தார்கள், வண்டிகள் மட்டியூர் எல்லைக்குள் வந்தபோது மெய்யாகவே அவர்களுக்கு ஆபத்து வந்துவிட்டது. செவிகளைத் துளைக்கும் வாழ்த்தொலிகளை மக்கள் முழங்கினார்கள்.

ஊர் பெருமக்களின் அன்பை அவர்களால் மறுக்க முடியவில்லை. கீழே இறங்கி, புதிதாக எழும்பிக் கொண்டிருந்த சிற்றூரின் தோற்றத்தை அவர்கள் கவனித்தார்கள். சில மாதங்களுக்கு முன்பு போர் நடந்து தரை மட்டமாகப் போயிருந்த அதே ஊர்தானா இது!

வரிசை வரிசையாகச் சின்னஞ் சிறு கூரை வீடுகள் எழும்பிக் கொண்டிருந்தன. கொடுங்குன்றத்து மலைச் சாரல்களின் மூங்கில்கள் அங்கே கட்டுக்கட்டாகக் கிடந்தன. மக்களின் முகங்களில் அந்த ஊரின் புதுமை வளம் துள்ளி விளையாடியது. நன்றிப் பெருக்கை எப்படி வெளியிட்டுக் கொள்வது என்று தெரியாமல் ஆனந்தக் கண்ணீர் பொங்க மக்கள் கூட்டம் தடுமாறியது.

''இது தாங்கள் அளித்த வாழ்வு!'' என்ற ஊர்த்தலைவர் பைந்தமிழ்க் குமரனிடம் நாத் தழுதழுக்கக் கூறினார்.

''இல்லை; கொடுங்குன்றத்து மக்கள் உங்களுக்குக் கை கொடுத்திருக்கிறார்கள். அவர்களுக்காக நீங்கள் செய்த தியாகத்தை அவர்கள் மறக்கவில்லை; அவ்வளவுதான்'' என்றான்.

''தாயே, தாயே, எங்கள் செல்வமே'' என்று கூறிக் கொண்டு பெண்கள் கூட்டம் கயல்விழியைத் திணறச்

செய்தது. ஆதிச்சதேவர் தமது நெடுநாள் வாழ்வில் இப்படி ஓர் அன்புக் குமுறலைக் கண்டதில்லை.

மட்டியூரில் உண்டு களைப்பாறிவிட்டு மாலையில் வண்டியைக் கட்டிக்கொண்டு தெற்கே கிளம்பினார்கள் அவர்கள். உண்ட களைப்பு இன்னும் தீரவில்லையாதலால் புலவர்களால் தங்களுடைய அடுத்த சொற்போரை இன்னும் தொடங்க முடியவில்லை. பனை நுங ்கு, இளநீர், தேன், அறுசுவை உண்டி இவ்வளவும் கொடுத்து அவர்களை அயரச் செய்து வீழ்த்தி விட்டார்கள் மட்டியூர்ப் பெருமக்கள்.

''தமிழ்ப் பெருமக்களிடம் ஒரு பொல்லாத குணமிருப்பதை இப்போதுதான் கண்டுபிடித்தேன்'' என்றார் ஆதிச்ச தேவர். ''நாமும்தான் மாளிகையில் வாழ்ந்தோம்; ரதங்களில் ஊர்ந்தோம்; பணியாட்கள் பலரை வைத்துக் கொண்டு அரச போகத்தில் வாழ்ந்தோம்; அப்போது மக்கள் நம்மை மதிக்கவில்லை; புகழவில்லை; இப்போது தலைக்குமேல் தூக்கி வைத்துக்கொண்டு கூத்தாடுகிறார்கள்.''

போகுமிடங்களிலெல்லாம் கூட்டம் கூடியதைத் தந்தையார் மறந்துவிட்டுப் பேசுகிறாரோ என்று நினைத்தாள் கயல்விழி.

''கூட்டம் கூடிப் பலன் என்ன? ரதத்தில் நாம் போய் இறங்கினாலும் 'அதோ பார் கயல்விழி வருகிறாள், இதோ பார் கூத்தன் போகிறான்!' என்றுதானே ஒருமையில் நம்மை இகழ்ந்து பேசினார்கள்? அவர்கள் கொடுப்பதை வாங்கிக் குவித்துக்கொண்டு ஆடுகிறவர்கள்தானே இவர்கள் என்ற எண்ணம் அவர்களுக்கு. ஆனால் இப்போதோ, 'தாயே!' என்கிறார்கள்; 'தெய்வமே!' என்று கும்பிடுகிறார்கள். பொல்லாதவர்கள் நம்முடைய மக்கள்!''

கயல்விழிக்குத் தன் தந்தையின் மனமாற்றம் பெருத்த ஆறுதலைத் தந்தது. குதிரைகள் பூட்டிய ரதங்களில் போவதையே தான் பழக்கமாகக் கொண்டிருந்தவர் அவர். பெரும் பொருளைக் கொண்டுவந்து அவர் முன் கொட்டினாலல்லாது அவர் கூத்து நடத்த இசைய மாட்டார். செல்வச் செருக்கால் சித்தம் வீங்கியிருந்தவர் அவர்.

''ஆமாம், பிறக்கும்போது கழஞ்சுப் பொன் கொண்டு வருவதில்லை; சாகும்போது சாம்பல்தான் எஞ்சியிருக்கிறது! முடிந்த மட்டும் புகழ் சேர்க்க ஆசைப்படுவோம். எவ்வளவுக் கெவ்வளவு புகழ் சேர்க்கிறோமோ அவ்வளவுக்கும் நமக்குப் பின்னால் நாலு பேர் பேசுவார்கள். என்னால் ஆசைப்படாமல் மட்டும் இருக்கமுடியாது. போனால் போகிறது. உன் புலவருக்காக பொருள் ஆசையை விட்டு விட்டு புகழ் ஆசையாய் மாற்றிக் கொள்கிறேன்!''

''பொருளும் கிடைத்ததே ஐயா?'' என்றாள் கயல்விழி. ''இப்போது கிடைத்த அறுசுவை உண்டி பொருள் இல்லையா?''

''அறுசுவை உண்டியா? இந்தப் புலவர்களை நம்பினால் ஆறுநாள் பட்டினிக் கிடக்கும்படியாகவும் செய்து விடுவார்கள். அவர்களுக்கென்ன? சொற்களைக் குடித்தே பசியாறி விடுவார்கள். நம்மால் அது முடியாது. நீ அந்தப் பைந்தமிழ்க் குமரனிடம் இதை மட்டும் சொல்லிவிடு; சுவையான உணவு கிடைத்தாலே ஆட்டமும் சுவையாக இருக்கும் என்று!''

உய்யவந்தாள்கூட இதைக் கேட்டுச் சிரித்தாள்.

மாலை மயங்கி இருட்டிக்கொண்டு வந்தது. பெண்களை வண்டியில் வைத்துக்கொண்டு இரவில் பிரயாணம் செய்ய வேண்டாம் என்று யோசனை கூறினார் ஆதிச்ச தேவர். நள்ளிரவுக்குள் அடுத்த ஊரை அடைந்து விடலாம் என்பதால், வண்டிகளை விரைந்துபோகச் செய்தான் பைந்தமிழ்க்குமரன். முதல் வண்டியில் தீப்பந்தம் ஒன்றைச் செருகி வைத்திருந்தார்கள்.

தேய்பிறைக் காலமாதலால் காட்டு வழிப்பாதை இருண்டு கிடந்தது. வழக்கமாகவே அங்கு கள்வர் பயமில்லை என்பதை முன்னதாகவே கேட்டுவைத்திருந்தான் இளைஞன். தனி வண்டியாகச் சென்றாலும் அச்சத்துக்கு இடமுண்டு. நான்கு வண்டிகள் ஒன்றாகச் சென்றதால் யாரும் கவலைப்படவில்லை. குதிரைகளில் முன்பு சென்றவர்கள்

அடுத்த ஊரில் காத்திருந்தார்கள். தங்குவதற்கான இடத்தையும் அவர்கள் சித்தப்படுத்தியிருந்தார்கள்.

தொலை தூரத்தில் ஏதோ விறகு வெட்டுகிற சத்தம் போல் கேட்டது. அந்த இரவு நேரத்தில் அப்படி யார் அங்கு வந்து விறகு வெட்டப் போகிறார்கள்? சத்தம் நெருக்கத்தில் வந்தது. வண்டிகள் மெதுவாகச் சென்றன. பாதையின் ஓரத்தில் கன்னங்கரேலென்ற தோற்றத்துடன் நின்ற ஒரு மரம் அசைவதைக் கூர்ந்து கவனித்தான் முதல் வண்டிப் பணியாள். அசைந்த அந்த நெடுமரம் தன் கிளைகளோடும் தழை களோடும் பயங்கரமான சத்தத்துடன் குறுக்கே விழுந்தது.

முதல் வண்டியிலிருந்த பெண்கள் அனைவரும் 'ஓ' வென்று கூக்குரலிட்டுக் கதறினார்கள். உய்யவந்தாள் நடுக்கத்துடன் கயல்விழியைக் கட்டிப் பிடித்துக்கொண்டாள். ஆதிச்ச தேவருக்கு அபயக்குரல் எழுப்பக்கூட உள்ளத்தில் வலுவில்லை.

இருட் புதர்களிலிருந்து வாளும் வேலும் தாங்கிய சில நெடிய உருவங்கள் அந்த வண்டிகளை நோக்கிப் பாய்ந்து வந்தன.

## 6. ஒன்றருக்கு ஒன்றன்



**தொ**லை தூரத்தில் மரம் வெட்டுவதுபோல் சத்தம் கேட்டவுடனேயே விழிப்படைந்து விட்டான் பைந்தமிழ்க் குமரன். வண்டிக்குள்ளிருந்த புலவர்களிடம் ஏதோ கூறிவிட்டு, கயல்விழியின் வண்டிக்கு வந்தான். சத்தம் கேட்டுக் குழம்பியிருந்த ஆதிச்ச தேவர் இருளில் வந்த பைந்தமிழ்க் குமரனை இனம் கண்டு கொள்ளாமல் அலறிப் புடைத்துக் கொண்டு அவன் மீது பாயப் போனார். கயல்விழி கலீரென்று சிரித்து விட்டாள்.

''கயல்விழி! ஒருவேளை கள்வர்கள் நம்மை வழி மறித்தால், அவர்கள் எண்ணிக்கை நமக்குத் தெரிய வேண்டும். தீப்பந்தங்களைச் சித்தமாக எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். நீயும் உன் தோழிகளும் இதைச் செய்தால் போதும்'' என்று அவளிடம் மெல்லக் கூறினான். பிறகு இரகசியமாகவும் அவளுக்கொரு கட்டளையிட்டான்.

மரம் வீழ்ந்த மறுகணத்தில் பேரிரைச்சலுடன் சிலர் ஓடி வந்து வழிமறித்தார்கள். அவர்கள் கைகளில் தென்பட்ட ஆயுதங்கள் அந்த மங்கலான இருளிலும் பளபளவென்று ஒளிவீசின. அவர்களை அடுத்து மேலும் சிலர் ஆர்ப்பரித்துக் கொண்டே வந்து சேர்ந்தார்கள்.

'ஐயகோ கள்வர்களா!' என்று உரக்கக் கூவிப் பதறினார்கள் சில புலவர்கள். ''அடப் பாவிகளா!'' என்றார்கள் சிலர். அவர்கள் பயத்தினால் நடுங்கி உளறும் குரல்கள் வந்தவர்களை நகைக்கச் செய்தன.

வண்டியிலிருந்து குதித்த ஒரு புலவர், ''ஐயன்மீர்! கள்வர் பெருமக்களே! யாம் கூறுவதைச் சற்றே செவிமடுத்து விட்டு நீவிர் யாது வேண்டுமானாலும் செய்க!'' என்று கூவிக் கொண்டே அவர்களை நாடி ஓடினார்.

''புலவர்களாகிய எம்மிடம் எதைக் கவர்ந்து போகலா மென்று வந்தீர்? தமிழ்ச் செல்வம் வேண்டிய மட்டும் எம்மிடம் இருக்கிறது. வாரிவாரி வழங்குகிறோம். உங்களுக்கு எந்தச் சுவடிகள் வேண்டும்? நீங்கள் இப்படி ஆயுதங்களை வைத்துக் கொண்டு எங்களை அச்சுறுத்துவதை மட்டும் நிறுத்தி விடுங்கள்!''

''பாவிப் பாண்டியா! புலவர்களை வழிமறித்துப் பிடுங்கும் அளவுக்கு உன்னுடைய நாட்டில் பஞ்சம் வந்து விட்டதே!'' என்று பெரும் குரலில் ஓலமிட்டார் பின்னால் ஒரு புலவர்.

வளைத்துக் கொண்டு நின்றவர்களுக்கு என்ன செய்வதென்று ஒருகணம் விளங்கவில்லை. அதற்குள் இரண்டு பெண்கள் தீப்பந்தங்களுடன் அச்சமின்றி அவர்களை நெருங்கினர்.

கள்வர்களின் தலைவன்போல் தோற்றமளித்தவன், ''உங்களுடைய மட்குடத்தில் நீங்கள் சேகரித்த பெரும் செல்வத்தை எங்கே வைத்திருக்கிறீர்கள்?'' என்றான்.

''பொன் காக்கும் பூதமென்றா புலவர்களை மதிக்கிறீர். மட்டியூரைப் போய் நீவிர் காணவில்லையா?''

''புலவரே!'' என்று அதட்டினான் கள்வர் தலைவன்! ''வள்ளுவர் பெயரைச் சொல்லியே பெரும் பொன் கவர்ந்த அந்த ஒரே ஓர் இளைஞனை மட்டும் எங்களிடம் விட்டு விடுங்கள். மறுத்தீர்களோ, எல்லோருமே எங்கள் வாளுக்கு இரையாகி விடுவீர்கள்.''

''பிறகு எங்கள் நாட்டிய மங்கையையும் சேர்த்துக் கேட்பீர்கள் போலிருக்கிறதே!''

''அவள் எங்களுக்கு வேண்டாம்.''

தீப்பந்தங்களின் ஒளியில் வந்தவர்களின் எண்ணிக்கை ஒன்பது அல்லது பத்துப்பேர் என்பது தெரிந்தது. அதுவரை பெருங் குரலெடுத்துப் பயந்து நடுங்கிய புலவர்கள் யாவரும் பாய்ந்து வந்தனர் வெம்புலிகளாய். வேல்கள் குறி தவறாது பாய்ந்தன. வாட்கள் மின்னல் காட்டி, இடி இடித்து, செங்குருதி மழை கொட்டின.

ஆதிச்சதேவர் தம் கண்களைக் கசக்கிவிட்டுக் கொண்டு பார்த்தார். பெண்கள் கூட்டம் காட்டிய தீப்பந்தங்களின் ஒளியில் புலவர்கள் போர் புரிந்து கொண்டிருந்தார்கள்! சொற்போர் வீரர் மற்போர் புரிகிறார்களே! நாவைச் சுழற்றுபவர்கள் வாளைச் சுழற்றுகிறார்களே! - துணிந்து அவரும் குதித்துவிட்டார்.

வந்தவர்கள் பைந்தமிழ்க் குமரனைக் கவர்ந்து செல்லும் நோக்கத்துடன் வந்ததால், யாரும் அவர்களிடம் இரக்கம் காட்டவில்லை. அஞ்சி ஓடிய இருவரைத் தவிர அறுவரைத் தரையில் சாய்த்தார்கள். ஒருவனைப் பிடித்துக் கைகளையும் கால்களையும் கட்டி வண்டியில் போட்டார்கள். தப்பிச் சென்றவர்களை அம்பலக் கூத்தன் துரத்திப் பிடிக்க

முயன்றபோது, பைந்தமிழ்க் குமரன் அவனைத் தடுத்து நிறுத்தினான். ''வீழ்ந்து கிடப்பவர்களை நீ கவனித்துப் பார்; நாங்கள் மரத்தை அப்புறப்படுத்துகிறோம்.''

ஒரு முரடன் ஏதோ தனக்குள் முனகிக் கொண்டிருந்தான். அதை உற்றுக் கேட்டான் அம்பலக் கூத்தன்.

''எங்களுக்கு ஏதும் தெரியாது... அவங்கதான் கூப்பிட்டாங்க... வண்டியிலே குடம் குடமாப் பொன் வருதுன்னு சொன்னாங்க... ஒரு ஆள் மட்டும் அவுங்களுக்கு, பொன் எங்களுக்குன்னு பேச்சு... நாங்களா வரல்லே...''

கூத்தனின் நெற்றி சுருங்கியது. அடுத்தாற்போல் மற்றொருவன் உயிருக்கு மன்றாடித் துடித்துக் கொண்டிருப்பது தெரியவே, அவனை நெருங்கினான். அம்பலக் கூத்தனைக் கண்டவுடன் அவனுடைய துடிப்பு சிறிது சிறிதாக நின்றது.

''யார் நீ? உண்மையைச் சொல்லிவிடு!''

காதில் விழாதவன்போல் அவன் கூத்தனை உற்றுப் பார்த்தான்.

''சொல்கிறாயா இல்லையா?''

அவன் வாயைத் திறக்கவில்லை.

''சயங்கொண்ட சோழ வல்லபரின் ஒற்றன்தானே நீ?''

இதைக் கேட்டவுடன் அவன் முகத்தில் படர்ந்த பீதி அவனைக் காட்டிக் கொடுத்துவிட்டது.

அம்பலக் கூத்தனின் முகத்தை விகாரமாக்கிய தழும்புகூட, அவனுக்கு இப்போது மறந்துவிட்டது. ஆறாத புண்ணாகிய அவன் உள்ளக் கொதிப்பு அவனை இப்போது ஆட்டி வைத்தது. தீப்பந்தத்தை அவன் முகத்தருகில் கொண்டு போய், ''உண்மையைக் கூறிவிடு! இல்லையேல்?...'' என்று தன் கண்களை உருட்டி விழித்தான்.

''ஆமாம், ஆமாம்'' என்று கிணற்றுக்குள்ளிருந்து பேசுவதுபோல் பேசினான் அவன். ''சக்கரவர்த்திக்கு

எதிராக... உங்கள் புலவர் பாண்டியர்களைத் தூண்டுவதால்... அவரை... அவரை...''

சொற்களை முடிக்கும் முன்பே அவன் தலை சாய்ந்து விட்டது.

அம்பலக் கூத்தனின் மனத்திலிருந்த ஒரு பெருஞ்சுமை நீங்கியது. 'உங்கள் புலவர்' என்று அவன் கூறியதிலிருந்து 'யாரோ ஒரு புலவர்' என்ற வரையிலும் தான் சோழ வல்லபர் தெரிந்துகொண்டிருக்கிறார். பாண்டிய நாட்டில் புதிதாகத் தோன்றியுள்ள புலவரால் மக்கள் விழிப்படைந்து விடுவார்கள் என்ற அச்சம் அவருக்கு. அந்தப் புலவர் யாரென்று இன்னும் தெரிந்து கொள்ளவில்லை அவர்!

வண்டிக்குக் கீழே வைக்கோல் அடைத்திருந்த பகுதியில் அந்தப் பகைவனைப் படுக்க வைத்தார்கள். வண்டிகள் விரைவாகச் சென்றன.

''கயல்விழி! எனக்கொரு சந்தேகம்'' என்றார் ஆதிச்சதேவர். ''நம்மை வழிமறித்தார்களே, அவர்கள் கள்வர்களா? அல்லது நம் கூட்டந்தான் கள்வர் கூட்டமா?''

உய்யவந்தாள் கலீரென்று சிரித்தாள்.

''அவர்களுடன் போய்ச் சொற்போர் நடத்தலாம் என்றுதான் நானும் இதுவரை நினைத்தேன். இனி அதுவும் ஆபத்தென்று தெரிகிறது. வாய்ப் போருடன் நிறுத்தாமல் கைப்போரும் நடத்துகிறார்கள்.''

''பெண்கள் கூட்டத்தை வைத்துக்கொண்டு பல ஊர்களுக்குப் போவதென்றால் பாதுகாப்பு வேண்டாமா?''

''அப்படியானால் இனி நானும் பழக வேண்டியது தான்.''

கடைசி வண்டியில் வந்து பைந்தமிழ்க் குமரனிடம் அம்பலக்கூத்தன் செய்திகளைக் கூறினான். பைந்தமிழ்க் குமரனின் மனம் சிந்தனையில் ஆழ்ந்தது. ''சயங்கொண்ட சோழ வல்லபர் திட்டமிட்டுத்தான் இதைச் செய்திருக்கிறார்.

அமைச்சர் என்ற முறையில் பாண்டிய நாட்டு நீதி முறைப்படி ஒரு புலவனைத் தண்டிக்க முடியாது. பாண்டியரிடமும் முறையிட்டு இந்தச் செயலைத் தடுக்க இயலாது, ஆகவே இரகசியமான வழிகளில் இறங்கிவிட்டார்.

''அவருடைய ஒற்றர்கள் சிலர் நம்முடைய நாட்டுக் கள்வர்களோடு தொடர்புகொண்டு இங்கு வந்திருக்கிறார்கள். கள்வர்களுக்குப் பொருளாசை காட்டியிருக்கிறார்கள்'' என்று அவன் காதுகளில் கூறினான் கூத்தன்.

''நம்மிடம் அகப்பட்டிருப்பவன்?''

''ஒற்றன்.''

அதன் பின்னர் வண்டிக்குள் மௌனம் நிலவியது.

விரைந்து சென்று கொண்டிருந்தன மாட்டு வண்டிகள். மௌனமாக அமர்ந்திருந்த பைந்தமிழ்க் குமரனின் சிந்தனை வேகமாகச் செயல்பட்டது. தங்களிடம் பிடிபட்டவன் ஓர் ஒற்றன் என்ற உண்மையைத் தற்போதைக்கு வெளியிடுவது உசிதமல்ல என்ற முடிவுக்கு வந்தான் அவன். அடுத்த ஊரின் எல்லையில் பொதுமக்களும் ஊர்ச் சபையாரும் அவர்களை வரவேற்கக் காத்திருந்தனர். வழியில் தங்களைக் கள்வர்கள் வழி மறித்ததாகவும் அவர்களில் சிலரைத் தற்காப்புகாகக் கொல்ல நேர்ந்ததையும் ஊர்ச் சபையாரிடம் கூறினான் பைந்தமிழ்க் குமரன். சிறைப் பிடிக்கப் பட்டிருந்தவனை அவர்களிடம் ஒப்படைத்தான்.

ஊர்ச் சபையார் திடுக்கிட்டார்கள்; ''இந்தப் பகுதியில் வழக்கமாகக் கள்வர் நடமாட்டம் இருப்பதில்லையே!''

''போர் நடந்து முடிந்தாலே இப்படியெல்லாம் நடைபெறுவதுண்டு. மேலும் எங்களிடம் பெருஞ்செல்வம் இருப்பதாகவும் செய்திகள் பரவியிருக்கின்றன. அதைக் கேட்டு வந்திருப்பார்கள்.''

அவர்களுடைய பகுதிகளில் இப்படிப்பட்ட தீமைகள் நடப்பதென்றால் அதனால் அவர்கள் எவ்வளவு துன்புறுவார்கள் என்பது பைந்தமிழ்க் குமரனுக்குத் தெரியும்.

மக்களை எவ்வித அச்சமும் சூழாமல் காக்கும் கடமை அவர்களுக்கு உண்டு. ஆகவே அதை அவர்கள் தங்களுடைய குறைபாடு என்றே கருதினார்கள்.

காயம் பட்டிருந்த புலவர்களுக்கு இரவோடு இரவாகச் சிகிச்சைகள் நடைபெற்றன. எல்லாம் விரைவில் ஆறிவிடக் கூடிய சிறு காயங்கள்.

''ஐயா! இனி ஓர் ஊரிலிருந்து அடுத்த ஊருக்கு எங்களைக் கொண்டு போய்ச் சேர்க்கும் பொறுப்பு, எங்களை அனுப்பி வைப்பவர்களைச் சேர்ந்ததாக இருக்க வேண்டும்'' என்றார் ஆதிச்சதேவர்.

''அவ்வாறே செய்கிறோம்.''

மறுநாள் அந்த ஒற்றனுக்குக் கள்வனுக்குரிய தண்டனையளித்துச் சிறையில் தள்ளினார்கள்.

''பிரபு! தாங்கள் அவனைக் கள்வனாகவே மாற்றி விட்டீர்கள். அவனும் தன்னைக் கள்வனென்று ஒப்புக் கொண்டிருக்கிறான்!''

அம்பலக்கூத்தன் தனிமையில் பைந்தமிழ்க் குமரனிடம் பேசினான்.

''வேறு என்ன செய்வது?'' என்றான் பைந்தமிழ்க் குமரன். ''அமைச்சர் சோழ வல்லபரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒற்றன் என்று அவன் தன்னைக் கூறிக்கொள்ள முடியுமா? பாண்டிய நாட்டின் ஒற்றனல்ல இவன். அவருடைய சொந்த ஒற்றன். அரசருக்குத் தெரியாமல் அவர் வைத்திருக்கும் பணியாளன்.''

''அமைச்சருக்கு இந்தச் செய்தி எட்டினால்?''

''செய்தி எட்டினால்? எட்டினால்?'' என்று தன்னையே கேட்டுக் கொள்வதுபோல் ஒருகணம் தடுமாறினான் பைந்தமிழ்க் குமரன். ''கட்டாயம் இது அவருக்கு எட்டி விடும். வந்தவர்களில் ஒருவன் தப்பி ஓடிவிட்டானல்லவா?''

''என்ன நடக்கும்?''

''வெளிப்படையாக ஏதும் செய்யமாட்டார். இந்த ஒற்றனைச் சிறையிலிருந்து விடுவிக்க முயன்றால் அவர் செய்கை வெளிப்பட்டுவிடும். ஆகவே, அடுத்த நடவடிக்கை களைப் பற்றி ஆலோசனை செய்வார்.''

''நாம் என்ன செய்வது?''

''வருவதெல்லாம் வரட்டும், நம்முடைய பாதை எளிமையான பாதையில்லை!''

அரண்மனையில் அரச போகத்தைவிட்டு, அங்கே தன் னோடு ஒருவனாக உறவாடித் துன்பங்களை மேற்கொண்டு வாழும் சுந்தர பாண்டியனின் பேச்சு, அம்பலக் கூத்தனின் உள்ளத்தை நெகிழ்ந்து உருகச் செய்தது.

# 7. புலவன் அளித்த பரிசு!



சயங்கொண்ட சோழ வல்ல பரின் ஒற்றர் தலைவனான மாவலி ராயன் சிறகொடிந்த பறவையாக அந்தப் பகுதிகளில் சில தினங்கள் தலைமறைவாகத் திரிந்தான். வந்த காரியத்தை முடிக்காமல் திரும்பு வதற்கு அவனுக்கு மனம் இல்லை; எப்படியாவது பைந்தமிழ்க் குமரனைப் பிடித்து அமைச்சரிடம் கொண்டு போய் நிறுத்திவிட வேண்டும் என்பது அவன் திட்டம்.

எஞ்சியிருந்த ஒரே துணைவனும் சிறையில் அடைக்கப் பட்டு விட்டான். மாவலிராயனிடம் கையில் பொருள் இருந்தது. ஆனால் துணைக்கு ஆட்கள் கிடைக்கவில்லை. பைந்தமிழ்க் குமரனைச் சுற்றிலும் எப்போதுமே கூட்டம் இருந்தது. மேலும் பொருளாசை காட்டி மாவலிராயனால் சில ஆட்களைக் கூடத் தன் பக்கம் சேர்க்க முடியவில்லை. பாண்

டிய நாட்டு மக்களோ தங்களிடமிருந்த எல்லாவற்றையும், அப்புலவனின் காலடியில் கொட்டிக் கொண்டிருந்தார்கள்.

அமைச்சரைச் சந்திப்பதற்குத் துணிவில்லாமல் உழன்று கொண்டிருந்தவன் கடைசியில் வேறு வழியின்றி மதுரைக்கு வந்தான். ''தங்கள் முகத்தில் விழிப்பதற்கே எனக்கு நாணமாக இருக்கிறது'' என்று தொடங்கி, நடந்தவற்றைக் கூறி முடித்தான்.

அவன் கூறியதை அவர் அமைதியாகக் கேட்டுவிட்டு, ''உன் சக்திக்கு மீறிய விஷயம் என்று தோன்றுகிறது; உடனே நீ திரும்பியிருக்கலாம்'' என்று கூறினார். ஒற்றர்களில் ஒருவன் சிறைப்பட்டது பற்றி அவர் சிறிதும் கவலைப்படவில்லை. சிறைப்பட்டவன் தன்னைக் கள்வனென்று சொல்லிக் கொண்டானா என்பதை மட்டிலும் அறிந்து கொண்டார்.

''ஆமாம், அந்தப் புலவன் யார் என்பதை தீவிரமாக விசாரித்து அறிந்தாயா?''

''ஊருக்குள் பலர் பல கதைகளைச் சொல்லுகிறார்கள். கொடுங்குன்றத்து மலைக் குகைக்குள் யாரோ ஒரு சித்தர் வாழ்ந்து வந்தாராம். அவருடைய சீடன் இவன். நன்றாகத் தமிழ் பயின்றிருக்கிறான். சித்தர் எங்கேயோ வடக்கே போய்விட்டார். இப்போது இவனை எல்லோரும் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடுகிறார்கள். அவனிடம் தெய்வசக்தி இருப்பதாகவும் நம்புகிறார்கள்.''

''நீ என்ன நினைக்கிறாய்?'' என்று கேட்டார் அமைச்சர்.

''ஏதோ ஒரு சக்தி இல்லாவிட்டால் அவனைச் சுற்றிலும் மக்கள் இப்படிக் கூட்டம் கூட்டமாய்த் திரளமாட்டார்கள்'' என்றான் மாவலிராயன். ''வள்ளுவருக்கு அவன் விளக்கம் சொல்லுவதை ஒரு தனிக் கலையாகக் கற்றிருக்கிறான். ஊர்ச் சபையாருக்கும் ஆளுங்கணத்தாருக்குமே அவன் ஒழுக்க விதிகளைத் துணிந்து சொல்லுகிறான். அவனிடம் தெய்வசக்தி இருக்குமென்றே நானும் நினைக்கிறேன்.''

சயங்கொண்ட சோழவல்லபர் தமக்குள் அவனைப் பற்றி ஒரு முடிவுக்கு வர முயன்றார். நாடு ஒரு பெரிய அதிர்ச்சியிலிருந்து மீண்டிருப்பதால், மக்களுக்கு ஏதாவது ஒரு நம்பிக்கை தேவையாக இருக்கிறது. வள்ளுவரின் பெயரால் அவன் நம்பிக்கையைப் பரப்புகிறான் போலும். மேலும் அவனுடைய இருப்பிடத்துக்கு அருகில் எல்லைப் போர் நடந்திருப்பதால் அவன் அதை நேரில் கண்டிருப்பான். அந்த உணர்ச்சியால் உந்தப்பட்டு, குகைக் குள்ளிருந்து மக்களிடையே வந்திருக்கிறான்.

''படையைப் பெருக்கிச் சோழர்கள் மீது போர் தொடுக்க வேண்டுமென்று அவன் மக்களைத் தூண்டி விடுகிறானா?'' என்று கேட்டார்.

''இல்லை; போர் வேண்டுமென்று அவன் பேசுவதேயில்லை'' என்றான் ஒற்றன். ''அடிக்கடி 'புலவர் படை' என்ற சொற்களைத்தான் கூறுகிறான். அரசரின் செங்கோல் ஆளுங்கணத்தாரிடமும் ஊர்ச் சபையாரிடமும் இருக்கிறதாம். அவர்கள் சான்றோர்களாக இருந்தால் குடி மக்களுக்குத் துன்பமே கிடையாதாம்.''

''கற்பனைப் புலவனின் அற்புதமான கற்பனை!'' என்று கூறி நகைத்தார் வல்லபர். ''போகட்டும்! அவன் வள்ளுவரைப் படித்ததால் சித்தப் பிரமை கொண்டிருக்கிறான் என்று தெரிகிறது. வள்ளுவருக்கு முன்பே கயமைத் தனமும் உண்டு; தன்னலமும் உண்டு. எதற்கும் உனக்குத் துணையாக ஓர் ஆளை அனுப்புகிறேன். அவனைக் கண்காணித்து அவ்வப்போது எனக்குச் செய்திகள் அனுப்பிக் கொண்டிரு.''

கயல்விழியின் கூத்தைப் பற்றிக் கூறி, ''அவள் கூத்தைப் பார்த்தவுடன் பாண்டி மக்களுக்கு ஆவேசமே வந்து விடுகிறது!'' என்றான்.

''பெண்களைப் பொருட்படுத்த வேண்டாம். அவர்களுக்கு எவ்வகையிலும் தீங்கிழைக்கக் கூடாது என்பது சக்கரவர்த்தியின் கடுமையான கட்டளை. போரால் ஏற்பட்ட

ஆத்திரம் பாண்டியர்களிடம் இருக்கத்தான் செய்யும்! கூத்து நடத்தி அதை அவர்கள் தீர்த்துக் கொள்ளட்டுமே!''

மாவலிராயனை அனுப்பி விட்டுச் சிறிது நேரம் சிந்தனை செய்தார் அமைச்சர். ஆளுங்கணத்தாரிடமும் குடி மக்களிடமும் ஒருவன் இப்படிச் செல்வாக்குப் பெற்று வருவதை அவரால் பொறுக்க முடியவில்லை. ஆயுத வளர்ச்சியைவிட அறிவு வளர்ச்சி ஆபத்து நிறைந்தது. உடனடியாக அவனால் ஏதும் ஆபத்து விளையாதென்றாலும், திடீரென்று சோழ சாம்ராஜ்யத்துக்கு எதிராக அவன் குடிமக்களைத் திரட்டத் துணிந்தால்...?

பொறுத்திருந்தார் சயங்கொண்ட சோழ வல்லபர். மாவலிராயனிடமிருந்து ரகசிய ஓலைகள் அவருக்கு வரத்தொடங்கின. ஊருக்கு ஊர் பெரும் பொருள் திரட்டுவதில் கண்ணும் கருத்துமாக இருந்தானாம் அந்தப் புலவன். மக்களாகவே அவனிடம் கொண்டு குவித்தார்களாம்.

பாண்டியரிடமே சொல்லி அவன்மீது நடவடிக்கை எடுக்க வேண்டிய காலம் வந்து விட்டதைக் கண்டார் அமைச்சர். அவனுடைய புகழ் மதுரை மாநகருக்கே எட்டத் தொடங்கி விட்டது. அரசரும் இதற்குள்ளாக அவனைப் பற்றிக் கேள்வியுற்றிருப்பார்.

குலசேகர பாண்டியர் இன்னும் தமது அரண்மனை மாளிகைகளையோ அதன் மதில்களையோ புதுப்பித்துக் கொள்ளவில்லை. இடிபாடுகளுக்கிடையில் எஞ்சியிருந்த அந்த ஒற்றை மண்டபத்தையே தமது அரண்மனையாக்கிக் கொண்டிருந்தார். அரசியல் அலுவல்கள் நடைபெறுவதற்காக அங்கங்கே சிறுசிறு பணிமனைகள் மட்டிலும் புதியனவாகக் கட்டப்பெற்றிருந்தன. மதுரை மாநகரில் உள்ள குடிமக்களுக்கு அவர் வீடுகள் கட்டச் செய்தாரே தவிர, தம்முடைய வசதியை அவர் பெருக்கிக் கொள்ளவில்லை.

பாண்டியரைச் சந்தித்த அமைச்சர் வழக்கம்போலவே அன்றும் அரசரிடம் அரண்மனை எழுப்புவது பற்றி

வற்புறுத்தினார். அமைச்சருக்கு அதில் ஆர்வமில்லை; மன்னரை மகிழ்விப்பதற்காக அவர் பேசிய பேச்சு.

''அரசே! அரண்மனையும் கோயிலும் பெரிதாக இருந்தால்தான் மக்களுடைய பயபக்தியை நாம் பெற முடியும். கடவுளின் கோயிலையும் அரசரின் திரு மாளிகையையும் ஒன்றாக மதிப்பவர்கள் நம்முடைய மக்கள். குடிமக்களின் மனத்தில் தாங்கள் உயர்ந்து விளங்க வேண்டும் என்பதற்காகவே நான் இதைக் கூறுகிறேன். முதலில் நாம் அரண்மனையைத் துரிதமாகக் கட்டி முடிக்க வேண்டும்''

''குடிமக்களின் மனத்தில் நம்முடைய அரண்மனை உயர்ந்து விளங்க வேண்டும் என்பதில்லை! நாம் உயர்ந்து விளங்கினாலும் போதும்!'' என்றார் பாண்டியர். 'போருக்குப் பின் வீடு இழந்தவர்களில் இன்னும் ஆயிரம் குடும்பங்களுக்கு மேல் மழையிலும் வெயிலிலும் அவதியுற்றுக் கொண்டிருக்கின்றனர். மட்டியூரை முதலில் புதுப்பிக்க நினைத்தேன். இறைவனருளால் எவனோ ஒரு புலவன் அதைச் சாதித்திருக்கிறான். நம்முடைய தனபண்டாரத்தின் நிலைமையையும் தாங்கள் அறிந்திருக்கிறீர்கள்.''

மட்டியூர்ப் பேச்சு வந்தவுடனேயே, அதுவே ஏற்ற சமயம் என்று தோன்றியது அமைச்சருக்கு.

''தனபண்டாரத்தை நிரப்புவதற்கு நாம் மக்களிடம் இரட்டிப்பாக திறைசெலுத்தும்படி கட்டளையிட வேண் டியதுதான். போர் நடக்காத பகுதி மக்கள் திறைசெலுத்தக் கடமைப்பட்டவர்கள்.''

வருத்தத்துடன் சிரித்தார் பாண்டியர். ''போர் என்ற காரணத்தால் அவர்கள் ஏற்கனவே நமக்குப் பெரும்பொருள் கொடுத்தவர்கள். இனியும் அவர்களைத் துன்புறுத்தினால் வெறுப்புத் தான் மிஞ்சும். மக்களின் வெறுப்பின்மேல் எந்த அரசுமே புது மாளிகைகள் எழுப்பிக் கொண்டு வாழ முடியாது.''

''மக்களிடம் பொருள் இல்லாமலா இன்று மட்டியூர் முளைத்திருக்கிறது?'' என்று கேட்டார் அமைச்சர்.

''நம்முடைய அரசின் சட்டங்களைத் துச்சமாக மதிக்கும் அதிகாரத்தை எவனோ நாடோடிப் புலவன் கைப்பற்றியிருக்கிறான். நம்முடைய அரசுக்கு இதைவிட இழிவு வேறொன்றுமில்லை!''

துணுக்குற்றார் பாண்டியர், ''அமைச்சரே!'' என்று பதறினார்.

''ஆம், அவனுடைய அதிகாரம் நாடெங்கும் பரவி விடும் போல் தெரிகிறது. குடிமக்கள் அவனைப் பற்றிப் பேசத் தொடங்கி விட்டார்கள்.''

''அத்தகைய ஒரு சான்றோனை நாமல்லவோ அழைத்து வந்து நம் சபையில் வைத்துக் கௌரவிக்க வேண்டும்? நாமல்லவோ அவனுக்குப் பெருமைகள் செய்ய வேண்டும்? நமது பாண்டிய மண்டலத்தின் பெருமையை நமக்கே சுட்டிக் காட்டியிருப்பவன் அவனல்லவா...?''

பாண்டியர் உற்சாகத்தோடு அந்தப் புலவனைப் பாராட்டத் தொடங்கி விட்டார். சயங்கொண்ட சோழ வல்லபருக்கு மன்னரின் புகழுரைகளை பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

''பரிசில்கள் பெறுவதற்காகப் பாடிப் பிழைக்கும் ஒருவன்...''

''அமைச்சரே!'' என்று குறுக்கிட்டுவிட்டு, விழுந்து விழுந்து சிரித்தார் பாண்டியர். இதைப் போய் ஒரு மன வேற்றுமைக்குக் காரணமாக்க விரும்பாதவர்போல் அவர் சிரித்தார். ''பரிசில்கள் பெறுவதற்காகப் பாடுகிறார்கள் புலவர்கள்! நம்மால் வள்ளுவருக்கு எந்தப் பரிசைக் கொடுக்க முடியும்? இந்த உலகம் முழுதும் கொடுத்தாலும் ஒரு குறளுக்கு ஈடாகுமா? இராம காதை பாடிய கம்பருக்குச் சோழ சாம்ராஜ்யத்தையே கொடுத்தாலும் அவர் பாடலுக்கு முன்பு அது நிற்குமா? நீங்கள் சோழ நாட்டைச் சார்ந்தவராக இருந்தும், குலோத்துங்கரின் வள்ளல் தன்மையை உணர்ந்தவராக இருந்தும் இப்படி நினைக்கிறீர்களே! தங்களை மறந்து

பணியாற்றும் அந்தப் புலவர்களது பூத உடலைக் காக்க வேண்டியது நம் கடமை என்பதால், நம் நன்றி உணர்ச்சியை வெளிப்படுத்துவதற்காக அவர்களுக்குக் காணிக்கை அளிக்கிறோம்!'

அப்போது வெளியில் படை திரண்டு வருவதுபோல் பேரொலி எழுந்தது. கடல் அலைகளின் பேரிரைச்சல் சிறிது சிறிதாக நெருங்கி வருவதுபோல் கேட்டது. முரசுகள், வாத்தியங்கள், குதிரைக் குளம்பொலிகள் எல்லாமே சேர்ந்து கேட்டன.

மேன்மாடத்தில் அமர்ந்திருந்த இருவரும் திடுக்கிட்டு எழுந்தார்கள். மாடத்தின் முகப்பிற்குப் போய்த் தெற்கே திரும்பினார்கள். இது என்ன ஜனசமுத்திரம்! எங்கிருந்து இது இப்படிப் பெருக்கெடுத்து வருகிறது? மதுரை மாநகரத்து மக்களும் வேடிக்கை பார்க்கத் திரண்டு விட்டார்கள்.

குதிரைகள், யானைகள், காளைகள், வண்டிகள், மனிதர்கள், மனிதர்கள், மனிதர்கள்! சயங்கொண்ட சோழவல்லபருக்கு எல்லாம் விளங்கிவிட்டது. அவருக்கு வந்த ஓலைச் செய்தியைக் கண்டபோது அது இத்தனை சக்தியைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருந்தது என்பதை அவர் அறியவில்லை. கோயில் யானைகள் மீதும், காளை மாடுகள் மீதும் அந்தப் புலவன் குவியல் குவியலாய்ப் பொருள்களை மூட்டை கட்டி அனுப்பியிருந்தான். உணவு தானியங்கள் நிறைந்த மாடுகள், இருபுறங்களிலும் குதிரைகள் மீது காவல் வீரர்கள், உழைப்பை நல்கி ஊரை வளப்படுத்துவதற்கு உழைப்பாளர் பெரும்படையும் உடன் வந்திருந்தது.

மண்டபத்தின் வாயிலில் யாரோ ஒருவர் ஓலையுடன் வந்திருப்பதாக அறிவித்தான் காவலன். அவர் தம்மைப் புலவர் படையைச் சேர்ந்தவர் என்று கூறினாராம்.

''உடனே அழைத்து வா?'' என்று கட்டளையிட்டார் அரசர்.

வயது முதிர்ந்த ஒரு புலவர் அங்கு வந்து, பாண்டியரை வாழ்த்திவிட்டு, ஒரு திருமுகத்தை அவரிடம் பணிவோடு நீட்டினார்.

''எங்கள் புலவர் பெருமகன் பைந்தமிழ்க் குமரன் பாண்டியப் பேரரசுக்குத் தம்முடைய அன்பு நிறைந்த வணக்கத்தைத் தெரிவிக்கும்படி கூறினார். எங்களுடைய காணிக்கையாக இதைப் போரினால் பாதிக்கப் பெற்ற மதுரை மாநகரப் பெருமக்களுக்கு அளிக்கிறோம். அரசர் திருவுளம் கொண்டு ஏற்றருள வேண்டும்!''

வரும் பொருள்களின் அளவு பற்றிய கணக்குகள் நிறைந்த ஒரு பெரிய ஓலைச் சுவடிக்கட்டை அடுத்தாற்போல் அரசரிடம் வழங்கினார் புலவர். பாண்டியருக்குப் பேச நா எழ வில்லை. வெற்றிடமாய்க் கிடந்த தனபண்டாரத்தை நினைத்து அவர் இதுவரை வருந்தாத நாளில்லை. இப்போதோ அந்த மண்டபம் முழுவதும் நிறைந்தாலும் இடம் போதாது.

''பாண்டிய நாட்டின் நிலப்பரப்பைவிட விசாலமான மனம் கொண்ட புலவர் பெருமக்களே! புலவர்களாகிய நீங்களே வள்ளல்களாகவும் மாறி, அன்பின் ஆட்சி எவ்வளவு உயர்ந்தது என்பதைச் சுட்டிக்காட்டி விட்டீர்கள். இந்த நாடுள்ள அளவும் உங்களை அது மறக்காது!'' பாண்டியரின் நாத்தழுதழுத்தது.

சயங்கொண்ட சோழ வல்லபரின் கண்கள் இரத்தச் சிவப்பாக மாறின.

''புலவரே! உங்கள் தலைவன் வயதில் இளையோன் என்று கேள்வியுற்றோம். வயதில் முதிர்ந்த நீங்கள் எப்படி அவனைத் தலைவனாகக் கொள்ளலாம்?''

அரசர் முகம் இந்தக் குறுக்கீட்டால் சுருங்கியது. புலவரோ அமைச்சருக்கு உடனடியாக மறுமொழி கூறினார்.

''பாண்டியன் நெடுஞ்செழியனின் புறப்பாடல் ஒன்று ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நமக்கு வழிகாட்டியிருக் கிறது. அதையே இதற்கு மறுமொழியாகக் கூறுகிறேன்'' என்றார் புலவர்.

உடனே பாடலும் எழுந்தது;

**"ஒரு குடிப் பிறந்த பல்லோருள்ளும்**
**மூத்தோன் வருக வெனாது-அவருள்**
**அறிவுடையோன் ஆறு அரசுஞ் செல்லும்!"**

பாண்டியரின் கண்களில் அடக்க முடியாத அளவுக்கு நீர் பொங்கியது. "இளைய பாண்டியன் இருந்தால் அரசை அவனுக்கே வழங்கியிருப்பேனே?" என்று மனம் புழுங்கினார் அவர்.

# 8. புலவனுக்கு அழைப்பு



**ம**யன் என்ற மாயச் சிற்பியின் கைவண்ணத்தால் பல அற்புதமான நகரங்கள் நிர்மாணிக்கப் பெற்றன வென்று பழங் கதைகள் சொல்லு கின்றன. மதுரை மாநகரத்தைப் புதுப்பிக்கும் பணிகளில் ஈடுபட் டிருந்த பற்பல சிற்பிகளையும் எங்ஙனம் அந்த மயனின் மாயசக்தி ஆட்கொண்டு விட்டதோ தெரிய வில்லை - நாளுக்கு நாள் புதுக்களை, நாளுக்கு நாள் புதுக் கலை, நாளுக்கு நாள் புதுப் பொலிவு, நாளுக்குநாள் புத்தெழில் கூடின அந்தப் பழம் பெரும் நகரத்துக்கு.

உழைத்தவர்கள் ஊதியத்துக்கென்றா உழைத்தார்கள்! மகத்தான பெரும்பணி ஒன்றில் தாங்களும் பங்கு கொள்ளும் வாய்ப்புக் கிடைத்ததே என்ற பெருமை அவர்களுக்கு. ஊக்கமும் உற்சாகமும் கரை புரண்டு ஓட அவர்கள் தங்களுக்கு நேர்ந்த அழிவை அழிக்கத் துணிந்துவிட்டார்கள். ஆக்கப் போர் புரிந்தார்கள்.

உழைப்பவர்களுக்கெல்லாம் உணவுக்கும் உறை விடத்துக்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பைந்தமிழ்க்

குமரனால் அனுப்பி வைக்கப் பெற்ற ஆட்கள் நகரத்துக்கே புதிய நம்பிக்கையையும் அழகையும் தந்து கொண்டிருந் தார்கள். உழைப்பு நேரத்தில் உழைப்பு, ஓய்வு நேரத்தில் ஓய்வு, களிப்பு நேரத்தில் களிப்பு. நகரத்தில் நான்கு திசைகளிலும் முன்னிரவு நேரங்களில் ஆடல்களுக்கும் பாடல்களுக்கும் பஞ்சமில்லை. மாலை வேளைகளில் சொற்போர்களுக்கும் மற்போர்களுக்கும் பஞ்சமில்லை.

குலசேகர பாண்டியரின் தேர் அடிக்கடி நகரத்தைச் சுற்றி வரத் தொடங்கியது. உழைத்தவருக்கு அவரைக் கண்டு விட் டால் ஒரே ஆனந்தம். நகரத்தின் வாணிபமும் மறுமலர்ச்சி பெற்றுச் சுறுசுறுப்பாக நடைபெற்று வருவதைக் கவனித்தார் பாண்டியர். தெருக்களில் முன்போல் ரதங்கள், குதிரைகள், சிவிகைகள், வண்டிகளின் போக்குவரத்து மிகுந்தது.

மன்னர் எவ்வளவுக்கெவ்வளவு மகிழ்ச்சியடைந்தாரோ அவ்வளவுக்கவ்வளவு அதிர்ச்சியுறத் தொடங்கிவிட்டார் அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபர். மக்கள் கூட்டம் பைந்தமிழ்க் குமரனைப் பற்றிப் பேசிய பேச்சுக்கள் அவர் செவிகளில் நாராசமாய் ஒலித்தன. தென்பாண்டி நாட்டிலிருந்து வந்தவர்கள் அவனுடைய பெயரை ஒவ்வொருவரும் உச்சரித்து வாழ்த்தும்படி செய்து விட்டார்கள். இந்த நிலைமையைத்தான் அமைச்சரால் சிறிதும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

அரசரின் மண்டபத்தில் அமைச்சரும் விழுப்பரையரும் அருகில் இருந்தபோது, பாண்டியர் தம்முடைய கருத்தை வெளியிடலானார்.

''குடிமக்களுக்கு இப்போது அந்தப் புலவரை நேரில் காணவேண்டும் என்ற பேராவல் மிகுந்திருக்கிறது. அதே ஆவல் என்னையும் பற்றிக் கொண்டிருக்கிறது. அவரை நம்முடைய தலைநகரத்துக்கு அழைத்து வந்து நாம் பாராட்டினால், அதனால் மக்களுடைய உற்சாகமும் பெருகும்.''

இப்படிக் கூறிவிட்டு அருகில் இருந்த இருவரையும் உற்றுப் பார்த்தார் அரசர். விழுப்பரையர் இதனால் மகிழ்ச்சியடைவார் என்று எதிர்பார்த்தார். ஆனால் பலனோ நேருக்கு மாறாக இருந்தது.

''சிறந்த யோசனை! அவனை உடனடியாக அழைத்து வர ஏற்பாடு செய்யலாம்'' என்று ஆவலோடு கூறினார் சயங்கொண்ட சோழ வல்லபர். அந்த ஆர்வத்தில், ''இப்போது திருநெல்வேலியில் தாமிரவருணிக் கரையில் அந்தப் புலவர் வாழ்ந்து வருவதாகத் தெரிகிறது; வரவழைத்து விடலாம்'' என்றார்.

விழுப்பரையருக்குத் தூக்கி வாரிப்போட்டது. 'அமைச்சருக்கு அவர்மீது இவ்வளவு அன்பு எப்போது ஏற்பட்டது? ஏன் ஏற்பட்டது? அது சரி, தென்பாண்டியில் நெல்லைப் பகுதியில் அவர் இருப்பதை இவர் எங்ஙனம் அறிந்தார்?'

''விழுப்பரையர் ஏதும் கூறவில்லையே?'' என்றார் பாண்டியர்.

''காற்றைப்போல் கட்டின்றித் திரியும் புலவர் வகையைச் சேர்ந்த ஒருவர் அவர் என்று எனக்குத் தோன்றுகிறது. கானகத்திலும் பூங்காவிலும் கூவித் திரியும் குயிலை நாம் பொற் கூண்டில் அடைக்க விரும்பினாலும் அது மகிழ்ச்சியுறாது. ஆகவே அவராக விரும்பினால் வரும் போது, நாம் அவரை வரவேற்போம்.''

''புலவருக்குப் புலவர் வஞ்சம் கொள்வது இயற்கை தான்!'' என்று கூறி நகைத்தார் அமைச்சர். ''அவன் இங்கு வந்தாலும் நாம் அவனை அரசவைப் புலவர்களின் தலைவனாகவா அமர்த்தப் போகிறோம்? அப்படியே அமர்த்தினாலும் தங்களுக்கு அடுத்தாற்போல் அவன் இருந்துவிட்டுப் போகட்டும்.''

''அமைச்சர் அவர்கள் என்னை மன்னித்தருள வேண்டும்'' என்று குறுக்கிட்டார் விழுப்பரையர். ''அரசவைக்

கவியாவதற்கு ஏங்குபவர்கள் சிலர் இருக்கலாம். 'நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்!' என்று சொல்பவர்களும் இருக்கலாம். நம்முடைய அழைப்பை ஒருவேளை அந்தக் கவி ஏற்றுக்கொண்டு இங்கு வர மறுத்தாரானால் நமக்கு அது இழுக்காகத் தோன்றும். புலவர்களுக்குச் செருக்கு உண்டு; அதிலும் இவரோ, இளைஞர் என்று கூறுகிறார்கள்.''

''காவலரின் கட்டளைக்கும் பணிய மறுக்கும் ஒருவன் இந்த நாட்டில் உலவ முடியுமா?'' என்று சினத்தோடு கேட்டார் அமைச்சர். சிரித்தார் அரசர்.

''சோழ நாட்டிலேயே அப்படி நடைபெற்றிருக்கிறது; அதுவும் இந்தக் குலோத்துங்கர் ஆட்சியிலேயே நடைபெற்றிருக்கிறது.''

துணுக்குற்றார் சயங்கொண்ட சோழ வல்லபர். சோழநாட்டை விழுப்பரையர் இழிவுபடுத்துவதாக எண்ணி, ''அங்கு நடந்ததா?'' என்று கேட்டார்.

''வள்ளல் சடையப்பருடன் வாழ்ந்த கவிஞர் கம்பரைக் குலோத்துங்கர் தமது அரசவைப் பெருங் கவியாக்கினார். இராமனின் கதையைப் பாடச் செய்தார். ஆனால் அந்தக் கதையினூடே வள்ளல் சடையப்பருக்குக் கவிஞர் எவ்வளவு பெருமையளித்தாரோ, அந்த அளவுக்குப் புவிச் சக்கர வர்த்தியாம் குலோத்துங்கரைப் போற்ற முடியவில்லை. சடையப்பரின் பெயர் சொல்லி அவரை வாழ்த்தியவர், குலோத்துங்கரை, 'வீரன்', 'தியாகமா விநோதன்', 'அகளங்கன்', 'அமலன்' என்று ஒரு சில இடங்களில் மட்டும் குறிப்பால்தான் உணர்த்தியுள்ளார். கடைசியில் கவிச் சக்கரவர்த்தியின் செருக்கும் புவிச்சக்கரவரத்தியின் செருக்கும் போரிடத் தொடங்கிவிட்டன. பிறகு நடந்தது நமக்கெல்லாம் தெரியும்.''

ஆம்! கவிச் சக்கரவர்த்தி தமக்காகப் புவிச்சக்கரவர்த்தி கட்டி வைத்த பொற் கூண்டிலிருந்து பறந்துபோய் விட்டார். 'மன்னவனும் நீயோ, வளநாடும் உன்னதோ?' என்று

கேட்டுவிட்டு 'குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு உண்டோ?' என்று இடித்துரைத்துவிட்டு, கற்றவருக்குச் சென்றவிட மெல்லாம் சிறப்பு என்பதை நிலைநாட்டி விட்டார். எந்தச் சோழ வளநாட்டின் எழில் அனைத்தும் தம்முடைய அற்புதக் காவியத்தில் இறவாத சொற் சித்திரமாகத் தீட்டினாரோ அந்த வளநாட்டையே துறந்தார். வடக்கே சென்றுவிட்டார். காகதீய நாட்டின் பேரரசனின் அன்பில் அவர் இப்போது திளைத்துக் கொண்டிருப்பதாக செய்தி வந்தது.

''கம்பர் நாட்டைவிட்டுச் சென்றதால் சக்கரவர்த்திகளின் புகழுக்கே இழுக்கு நேர்ந்து விட்டதே! குடிமக்கள் பேசத் தொடங்கிவிட்டார்களே!'' என்றார் விழுப்பரையர்.

சயங்கொண்ட சோழ வல்லபரின் முகம் சிறுத்தது. பற்களை நறநறவென்று கடித்த அவர், ''சக்கரவர்த்திகள் தியாக விநோதராக இருந்ததால் அந்தக் கம்பர் உயிரோடு நாட்டைவிட்டு வெளியேறினார்!'' என்றார். ''நானாக இருந்திருந்தால் அந்தப் புலவரின் செருக்கை அரைக் கணத்தில் அடக்கி அவர் நாவைத் துண்டித்திருப்பேன்.''

விழுப்பரையரின் விழிகள் மின்னலெனப் பாய்ந்து குலசேகர பாண்டியரின் விழிகளைச் சந்தித்தன. 'கம்பரைப் போன்ற ஒரு மகாகவியையே சிறுமைப்படுத்தத் துணிந்த இவர் இருக்குமிடத்துக்கா பைந்தமிழ்க் குமரனை அழைக்க விரும்புகிறீர்கள்?' என்று அந்த விழிகள் அரசரைக் கேட்டன. பாண்டியர் அதைப் புரிந்துகொண்டு விட்டார்.

''அமைச்சர் அவர்களே!'' என்றார் அரசர்; ''கவிஞர்களின் படைப்புச் செருக்குத்தான் அவர்களுடைய கற்பனை ஊற்று. ஆயிரமாயிரம் அரசர்களும் சக்கரவர்த்திகளும் இந்த மண்ணில் தோன்றுவார்கள், மறைவார்கள். அரசர்களும் பேரரசுகளும் எழும்பி வளர்வதுண்டு; மறைந்து தேய்வதுமுண்டு. புவிச் சக்கரவர்த்திகளின் வாழ்வில் புல் பூண்டு முளைத்து விடுவது இயற்கை. ஆனால் கவிச் சக்கரவர்த்திகளின் கற்பனைச் செருக்கைக் காலனாலும் அழிக்க முடியாது.''

- - - -

அமைச்சர் சயங்கொண்ட வல்லபருக்கு அதற்கு மேலும் அங்கு அமர்ந்திருக்கப் பிடிக்கவில்லை. தமது ஆசனத்திலிருந்து எழுந்தவாறே, ''கவிஞனை இங்கு அழைப்பது பற்றி அரசர் அவர்களின் முடிவான கருத்தை நான் அறியலாமோ?'' என்று கேட்டார்.

''இப்போது நாம் அழைக்க வேண்டாம். கவிஞர்களுடைய செருக்கோடு பொழுதுபோக்க நமக்கு நேரமில்லை. இளம் கவிஞராக இருப்பதால் உணர்ச்சி வயப்பட்டவராகவும் இருக்கலாம்'' என்றார் பாண்டியர்.

புயல்காற்றென அங்கிருந்து விரைந்தார் அமைச்சர். நேரில் அவனை வரவழைத்து அவன் செருக்கை அடக்க அவர் நினைத்த நினைவு ஈடேறவில்லை. மேலும் நாடாளும் வல்லமை பெற்ற பாண்டியரே ஏடாளும் புலவர்களிடம் இவ்வளவு பரிவு கொண்டிருந்தது அவருக்கு ஆத்திர மூட்டியது.

அமைச்சர் செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்த பாண்டியர் பிறகு விழுப்பரையரிடம் திரும்பினார். ''தாங்கள் எதற்காகத் தடுத்தீர்கள் என்று முதலில் புரியவில்லை. இப்போது நன்றாகப் புரிகிறது.''

'அரசே! தங்களுக்கே புரியாத மற்றோர் இரகசியமும் அதில் இருக்கிறது. அமைச்சர் மட்டுமென்ன? தாங்களும் இப்போது அவரைக் காணமுடியாது; காணக் கூடாது!' என்று நினைத்துக் கொண்டார் விழுப்பரையர்.

திடீரென்று பாண்டியர் மற்றொரு சிக்கலை எழுப்பினார். ''ஏன், நாம் இருவருமே விரைவில் தென்பாண்டிய நாட்டுக்குச் சென்று அந்தப் புலவரைக் கண்டுவிடுவோமே! எனக்கு ஏனோ சில தினங்களாகவே இப்படி ஓர் ஆவல் எழுந்து கொண்டிருக்கிறது.''

விழுப்பரையர் சற்றே தடுமாறினார்; ''காலம் வரும்போது அவரே இங்கு வருவார். அந்த நற்காலம்

விரைவில் வரவேண்டுமென்று நாம் இறைவனை இறைஞ்சுவோம். தாங்கள் பணித்தால் முதலில் நான் தங்களது அன்பைச் சுமந்து கொண்டு அவரிடம் சென்று வருகிறேன்.''

இதனால் பாண்டியர் மனநிறைவு கொள்ளவில்லை. அவருக்கே விளங்காத பாசம் ஒன்று அவரைப் பற்றிக் கொள்ளத் தொடங்கிவிட்டது.

''போரில் நாடும் சுந்தரபாண்டியனும் வீழ்ந்த பிறகு எனக்கு மீண்டும் நம்மால் தலைதூக்கி எழுந்திருக்க முடியும் என்ற நம்பிக்கை ஏற்படவில்லை. முதலில் மட்டியூரிலிருந்து வந்த செய்தியைக் கேட்டேன்; பிறகு மதுரைமாநகரத்தில் நடந்த அற்புதத்தைக் கண்டேன். விழுப்பரையரே! அந்தப் புலவர் வெறும் புலவரல்ல, தலைவர்!''

மெய்சிலிர்த்தது விழுப்பரையருக்கு.

பாண்டியர் தம்முடைய கழுத்தில் அணிந்திருந்த முத்தாரத்தை மெல்லக் கழற்றினார். கொற்கைச் சலாபத்தில் விளைந்த நன் முத்துக்கள் செறிந்த மாலை அது. சிறிது நேரம் அதையே உற்றுப் பார்த்துவிட்டு விழுப்பரையரிடம் கொடுத்தார்.

''இந்த மாலைக்கு என்னுடைய இதயத் துடிப்பின் இரகசியம் தெரியும். குடிமக்களுக்காக அது துடிக்கும் துடிப்பை இது உற்றுக் கேட்டிருக்கிறது. அதைப்போல் என் மனவேதனையையும் இது உணர்ந்திருக்கிறது. என்னைப் போல் துடித்து என் வேதனையில் பங்குகொள்ள வந்த அந்த உத்தமனிடம் இதைக் கொண்டுபோய்க் கொடுங்கள்!'' பாண்டியரின் குரல் தழுதழுத்தது.

''அரசே! இறைவனின் கருணை எல்லையற்றது. அந்த ஊற்றுப் பெருக்கு எங்காவது ஒரு புறம் அடைபட்டுப் போனால், வேறொரு புறம் வேறோர் உருவில் அது பொங்கி எழுந்து விடுகிறது. ஆகவே தயவுசெய்து எதற்கும் கவலையுறாதீர்கள்.''

''தாங்கள் சில தினங்கள் நெல்லைக்குப் புறப்பட்டுச் சென்று இதை அந்தப் புலவருக்கு அளித்து வாருங்கள். புதுப் பொலிவோடு வளர்ந்துவரும் தலைநகரத்தைப்பற்றி அவரிடம் சொல்லுங்கள். அவர்கள் எப்போது வந்தாலும் அரண்மனைக் கதவுகள் திறக்கப்பட்டேயிருக்கும் என்பதைக் கூறுங்கள்.''

விழுப்பரையர் அந்த முத்தாரத்தைத் தம் கண்களில் ஒற்றிக்கொண்டார். அவரது விழிகளில் பிறந்த நன்முத்துக் களிரண்டு அதில் உதிர்ந்தன.

## 9. வந்தனள் ஒரு செந்திரு



வெறிகொண்ட வேகத்தில் காற்றைக் கிழித்துக் கொண்டு கடுகிப் பறந்தன இரண்டு குதிரைகள். அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபர் மதுரையைவிட்டுப் புறப்பட்டு நான்கு தினங்களாகி விட்டன. அவர் இப்போது சோழ சாம்ராஜ்யத்தின் தலைநகரமான கங்கைகொண்ட **சோழபுரத்தை** நெருங்கிக் கொண்டிருந்தார்.

ஒற்றர் தலைவன் மாவலிராயனிடம் விரிவான ஓலை கொடுத்து அனுப்பியிருக்கலாம். அவர் அதை விரும்பவில்லை. சக்கரவர்த்திகளின் மனத்தில் ஆழப் பதியுமாறு நடப்பதை எடுத்துக்கூற வேண்டும். வரப்போகும் ஆபத்தை அவருக்கு உணர்த்தி, அதற்கு உடனடியாக மாற்றுத் தேடுவதற்கு வழிவகை செய்யவேண்டும். இனியும் அந்தப் புலவனைப் பாண்டிய நாட்டுக்குள் நடமாட விட்டுக் கொண்டிருந்தால், பிறகு அவன் **தன்னுடைய** ஆற்றலால் மக்களை எந்தப் பக்கம் திருப்பிவிடுவான் என்று சொல்ல முடியாது.

தலைக்குமேல் வெள்ளம் கரை புரண்டுவிட்டால் பிறகு சக்கரவர்த்திகளின் முகத்தில் விழிப்பதே இயலாத காரியம்.

முதன்முதலில் அவனைப் பற்றிய தகவல் கிடைத்தபோது, 'திருவிழாக் கூட்டத்தில் தன் புலமையை விலை கூற வந்திருப்பான்' என்றுதான் அலட்சியமாக நினைத்தார். அவனைப் பிடித்துவரச் செய்த முயற்சி தோற்றபோதுகூட அவருக்குக் கவலையில்லை. ஆனால் அவனுக்காகவே திருவிழாக் கூட்டம் கூடுவதையும், அவன் சொல் கேட்டுத் தன் உடைமைகள் அனைத்தையும் மக்கள் வழங்குவதையும் கேட்டபோதுதான் அவரை அச்சம் பற்றிக்கொண்டது. பாண்டியருக்கு அவன் அனுப்பி வைத்த பொருட்குவியலைப் பார்த்தபோது, அவனையல்லவோ நாடாளும் மன்னனென்று மதிக்க வேண்டியிருக்கிறது!

கங்கைகொண்ட சோழபுரம் எப்போதுமே விழாக் கோலம் பூண்டதுபோல் காட்சியளிக்கக் கூடிய ஒரு பெரும் நகரந்தான். ஏனோ இப்போது அது உண்மையிலேயே விழாக்கோலம் பூண்டு விளங்கியது. பணியாளர் பலர் கூட்டம் கூட்டமாகக் கூடி நகரத்தை மும்முரமாக அலங்கரித்துக் கொண்டிருந்தனர். சோழசாம் ராஜ்யத்தின் புலிக்கொடிகளோடு சேர்த்து (ஹொய்சால) கோசல சாம்ராஜ்யத்தின் புலித்தலை பொறித்த கொடிகளும் ஒன்றாக இணைந்து பறந்தன.

ரதத்தை நிறுத்தி, வழியில் தென்பட்ட மனிதர்களிடம் காரணத்தைக் கேட்டார் அமைச்சர்.

''கோசல சாம்ராஜ்யத்திலிருந்து சக்கரவர்த்திகள் வல்லாள தேவருடைய திருக்குமாரர் இங்கு வருகை தரப்போகிறார்'' என்று பதில் வந்தது.

''என்ன! வீர நரசிம்மர் துவார சமுத்திரத்திலிருந்து இங்கு வரப் போகிறாரா?''

''ஆமாம்.''

''ரதம் மெதுவாகச் செல்லட்டும்'' என்று சாரதியிடம் கட்டளையிட்டுவிட்டு, இருக்கையில் மெல்லச் சாய்ந்து கொண்டார் சோழ வல்லபர். குலோத்துங்க சோழரின் கவனமெல்லாம் இப்போது தமது நெருங்கிய உறவினரும் உற்ற துணைவருமான வீரநரசிம்மரை வரவேற்பதில் திரும்பியிருக்கும். அவர் செய்திருக்கும் பிரமாண்டமான வரவேற்பு ஏற்பாடுகளிலேயே அவருடைய உள்ளத்தின் பூரிப்பு வெளிப்பட்டிருந்தது. உறவின் பூரிப்பா? அல்லது இராஜ தந்திரமா? குலோத்துங்கரைப் பொறுத்தவரை இராஜ தந்திரமில்லாத செய்கை எதுவுமே இருக்க முடியாது.

வடக்கில் சளுக்க நாட்டையே விழுங்கி விட்டு உருவாகியிருந்த கோசல சாம்ராஜ்யத்தை அவர் எவ்வளவு லாவகமாக வளைத்துத் தம் கைக்குள் போட்டுக் கொண்டு விட்டார்.

வரப்போகும் விருந்தினரின் தந்தையான வல்லாள தேவர் போரில் மாத்திரம் வல்லாள தேவரல்லர். செயலிலும் வல்லாள கண்டர். வடக்கில் சளுக்க சாம்ராஜ்யத்துக்குக் கடைசி அடி கொடுத்து நொறுக்கிவிட்டு, தெற்கில் குலோத்துங்கரின் கழுத்தைப் பிடிக்கக் காத்திருந்தார் அவர். சிறிதளவு குலோத்துங்கர் அயர்ந்திருந்தாலும், வல்லாளருடைய புலித் தலைக் கொடி விழுங்கி விட்டிருக்கும்.

வல்லாளர் முந்திக் கொள்வதற்கு முன்பு, குலோத்துங்கர் தாமே அவருடைய சிற்றரசான அதிகைமான் மீது படையெடுத்து அவனைத் தகடூரில் முறியடித்தார். அவனுக்காகப் பரிந்துகொண்டு வல்லாளர் பாய்ந்து வந்தபோது, வெற்றி பெற்றவர் என்ற செருக்கை விடாமல் அவரிடம் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டார். தம்முடைய தங்கையாகிய சோழமாதேவியை அவருக்கு மணம் முடித்துக் கொடுத்து, வலிமை வாய்ந்த ஒரு பகைவரைத் தமக்கு மைத்துனராக்கிக் கொண்டார்!

அந்தக் காலத்தில் சோழநாட்டு அதிகாரிகள் தங்களுக்குள் பேசி நகைத்துக் கொள்ளும் பேச்சு இப்போது சோழ வல்லபரின் நினைவுக்கு வந்தது.

''கோசல நாட்டு வல்லாள தேவரோ லட்சம் பேர் களுக்கு மேல் பலி கொடுத்துச் சளுக்கர்களை முறியடித்தார். அடுத்தாற்போல் நம்மையும் முறியடித்திருப்பார். ஆனால் நம்முடைய சக்கரவர்த்தியோ இளவரசியாரை ஆயுதமாக வைத்துக் கொண்டு அவரை ஒரே வீழ்த்தாக வீழத்திவிட்டார். இளவரசி யாரின் கண் வலைக்குள் அவரைத் தள்ளி விட்டுத் தனக்கு அடிமையாகவே செய்து விட்டார்! நம் சாம்ராஜ்யத்தைப் பகைவர்களிடமிருந்து காக்கும் பொறுப்பும் இப்போது வல்லாள தேவருக்கு ஏற்பட்டு விட்டது!''

ஆமாம், பெண்ணைக் கொடுத்ததோடு நிற்காமல், அவருக்குச் 'சோழ சாம்ராஜ்யப் பாதுகாப்பாளர்' என்ற ஒரு விருதுப் பட்டத்தையும் சூட்டிவிட்டு, அவரை நன்றாகவே வளைத்துக்கொண்டு விட்டார் குலோத்துங்கர். அந்த உறவு முதிர்ந்து அடுத்த தலைமுறையிலும் கனிந்து குலுங்கத் தொடங்கிவிட்டது.

அமைச்சரின் கடைவாயில் ஒரு செருக்குப் புன்னகை நெளிந்தது: ''குலோத்துங்கருக்குப் பிறகும் எங்கள் சாம்ராஜ்யத்தை யாராலுமே அசைக்க முடியாது. இராஜ இராஜர் காலத்திலும் அவருக்குத் துணையாக வீரநரசிம்மர் தோள் கொடுத்து நிற்கப் போகிறார். கேவலம் பாடிப் பிழைக்கும் புலவனையும் படையில்லாப் பாண்டியரையும் பெரிதாக மதித்து நான் இங்கு வந்திருக்கிறேன்!''

வீரநரசிம்மருக்குப் புதல்வியார் இருப்பதையும் ஒரு பெண்ணைத் தமது குமாரன் இராஜ இராஜனுக்கு மணம் முடிக்கக் குலோத்துங்கர் முயற்சி செய்ததையும் நினைத்துக் கொண்டார் அமைச்சர். முயற்சி வெற்றி பெறாததால் சோழ நாட்டு உறவுப் பெண்ணையே மணம் முடிக்க வேண்டிய அவசியம் வந்து விட்டது. என்றாலும் அந்த ஆவல் இன்னும்

குலோத்துங்கருக்குத் தீல்லை. இராஜீய உறவுகளுக்காகப் பல பெண்களை அரசர்கள் மணந்து கொண்ட காலம் அது. ஆகவே, இப்போதும் குலோத்துங்கர் அந்த எண்ணத்தைக் கைவிட்டிருக்க மாட்டார்.

கங்காபுரி அரண்மனையை நோக்கி அமைச்சரின் ரதம் சென்ற போது, எல்லாருமே நகரத்தில் வடக்குப்புற வாயிலுக்குச் சென்றிருப்பதாகத் தகவல் கிடைத்தது. ரதத்தில் சிறிது தூரம் கூட வடக்கே அவரால் செல்ல முடியவில்லை. காஞ்சீபுரத்து ராஜ பாட்டையை இருபுறமும் அடைத்துக் கொண்டு குழுமியிருந்தது மக்கள் கூட்டம். வடக்குப்புற மதிலுக்கப்பால் விருந்தினர்களை வரவேற்கச் சக்கரவர்த்தி தன் குடும்பத்தாரோடும் பரிவாரத்தோடும் காத்திருந்தார்.

யானைகள் மலர் தூவி ஒலி எழுப்பப் பழகியிருந்தன. பல்வகை வாத்தியங்களோடும் இசைவாணர்கள் சித்தமாக இருந்தார்கள். சக்கரவர்த்திகளே நேரில் இருந்து கடைசி நேரக் கட்டளைகளைப் பிறப்பித்துக் கொண்டிருந்தார். இளவரசன் இராஜ இராஜன் கண்ணிமைக்க மறந்து போய் நெடுஞ்சாலையில் தன் பார்வையைச் செலுத்தியிருந்தான்! வீர நரசிம்மர் தனியாக வரவில்லையாம்; 'தம்முடைய குமாரத்தி பாமினியையும் அழைத்துக் கொண்டு வருகிறாராம்?'

அவ்வளவு சுறுசுறுப்புக்கிடையிலும் குலோத்துங்கர் சயங்கொண்ட சோழ வல்லபரைக் கண்டுவிட்டார். அருகில் சைகை செய்து அழைத்து, ''நல்ல நேரத்தில்தான் நீரும் வந்திருக்கிறீர்! மற்ற விஷயங்களை மெதுவாகப் பேசுவோம், முதலில் வரவேற்பைக் கவனித்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

தொலை தூரத்தில் குதிரைகளின் குளம்பொலி கேட்டது. வேல் பிடித்த குதிரை வீரர்கள், வேல் முனைகளில் புலித்தலைக் கொடிகள் பறக்க விரைந்து வந்து சேர்ந்தனர். அவர்களை அடுத்துச் சோழநாட்டு வீரர்கள் வந்தனர். அவர்களையும் அடுத்து நான்கு வெண்புரவிகள் பூட்டிய அற்புதமான பெரிய ரதம் ஒன்று வந்தது. பட்டு மணிகளும்

கொடிகளும் நிறைந்த கண்கவரும் வனப்புள்ள ரதம் அது. காற்றில் மிதந்துவரும் தோற்றத்தில் அது வெண்புரவிச் சிறகடித்துக் கங்காபுரியின் புறவாயிலை நெருங்கிக் கொண்டிருந்தது.

வாழ்த்தொலிகள் விண்ணதிர எழுந்தன.

அருகில் வந்து நின்ற ரதத்தின் பூந்துகில் மெல்ல ஒதுங்கியது. பக்கத்திலிருக்கும் யாழை விட்டுப் பிரிய மனமில்லாதவள் போல் மெல்ல அதனை ஒரு முறை தடவிக் கொடுத்து விட்டுக் கீழே இறங்கினாள் ஓர் இளநங்கை. வெண்தாமரையில் வீற்றிருந்த கலைமகள் களிதுலங்கும் புன்னகையோடு எழுந்து வருவதுபோல், செஞ்சாந்து பூசிய பாதங்கள் இரண்டையும் தரையில் ஊன்றி மெல்லச் சரிந்து நின்றாள். மென்மையும் நளினமும் பூத்துச் சொரிந்த அவளது வண்ண உடலைச் சுமப்பதே அவளுக்கு ஒரு பாரமாகத் தோன்றியது போலும். கனவு காணும் கடல் போன்ற கருநீல விழிகள், மாதுளைமலர் போன்ற இதழ்கள், கனகத்தால் உருக்கி வார்த்து அதனிடை குழைவையும் கனிவையும் சேர்த்தது போன்ற பொன் மேனி அவளுக்கு. திடீரென்று ஏதோ ஒரு புதிய உலகத்துக்குப்பறந்து வந்திருக்கும் அன்னப் பறவை போல் அவள் மெய்மறந்து ஒருகணம் அங்கு நின்றாள்.

மறுகணமே ரதத்தின் மறுபுறத்திலிருந்து இறங்கினார் அவளுடைய தந்தையான வீரநரசிம்மர். அவளுக்குப் பதினேழு அல்லது பதினெட்டு வயதிருக்கலாம். அவருக்கும் நாற்பதுக்கு மேல் இருக்காது.

இராஜ இராஜன் அவளைக் கண்டவுடனேயே கிறங்கி விழுந்து விடுகிறவனைப் போல் தடுமாறினான். குலோத்துங்கர் வீரநரசிம்மனைத் தனது பரந்த மார்பில் அணைத்துக் கொள்ள அவரது தேவியார் பாமினியை அன்போடு தழுவிக் கொண்டார்.

மலர் மாரி பெய்த வண்ணமாகவே இருந்தது.

# 10. சதி ஆலோசனை



**பொ**ன்னி வளநாட்டு மக்கள் இயல்பாகவே குதூகலமான வாழ்க்கை முறைகளில் ஊறித் திளைத்தவர்கள். தேர்கள், திரு விழாக்கள், ஆடல்கள், பாடல்கள், கும்மி கோலாட்டம், கூத்து இப்படி ஏதாவது ஒன்று அவர்களுக்குத் தொடர்ந்தாற்போல் இருந்து வரவேண்டும். குலோத்துங்கர் இப்போது அவர்களுடைய குதூகலத்துக்கு வீர நரசிம்ம ரையும் அவரது புதல்வி பாமினியையும் கொடுத்து விட்டார். தலைநகரமெங்கும் பாமினியைப் பற்றிய பேச்சுத்தான். வண்ணக்கிளி என்றார்கள், மான் என்றார்கள்– யாழும் கையுமாக அவள் வந்தக் கோலத்தைக் கண்டவர்கள் இசை யிலும் கலைகளிலும் வல்ல கந்தர்வ மங்கை என்று சொல்லி வாய் ஊறிப் போனார்கள்.

நகரத்தின் விழாக் குதூகலம் அன்றைக்கு ஒருவாறு முடிந்தது. இரவில் அரண்மனையில் விருந்தினர்களுக்குச் சாப்பாடு நடைபெற்றது. பாமினி இதற்கு முன்பு சின்னஞ்சிறு வயதில் விவரமாறியாப் பருவத்தில் வந்திருக்கிறாள். இப்போது அவளுடைய வாழ்வில் வசந்தம் குலுங்கும் பிராயத்தில், அவள் கண்ட சோழ நாட்டின் இயற்கை வளம் அவளை மதுவுண்ட பொன் வண்டாக மாற்றியிருந்தது.

'பாமினிக்கு இரண்டு கண்கள் போதவில்லை இந்த நாட்டின் அழகைப் பருகுவதற்கு!'' என்று பெருமையாகத் தொடங்கினார் அவளுடைய தந்தை. ''வழியெங்கும் 'இதோ பாருங்கள்! இதோ பாருங்கள்?' என்று என்னைப் படாதபாடு படுத்தி விட்டாள். இயற்கையின் பேரழகைப் பருகுவதில் அவ்வளவு மயக்கம் இவளுக்கு? கம்பரின் கவிதைகளை வேறு எனக்குப் பாடிக் காட்டத் தொடங்கிவிட்டாள். இந்த

நாட்டு மண்வளந்தான் அவரை அவ்வளவு கம்பீரமாகப் பாட வைத்திருக்கிறதாம்!''

''இளவரசியார் விரும்பினால் இந்தப் பொன்னி வள நாட்டையே அவர் எடுத்துக் கொள்ளலாம். அவருடைய நாடு தானே இது?'' என்று உட்பொருளோடு பேசினார் சக்கரவர்த்தி.

கன்னடத்தைத் தாய்மொழியாகக் கொண்டிருந்தாலும் பாமினி பைந்தமிழையும் ஆர்வத்துடன் படித்து வைத்திருந்தாள். கவிச் சக்கரவர்த்தி கம்பர் அவர்களுடைய அரண்மனைக்கு வந்திருந்தபோது அவரை விட்டு அவள் அகலவேயில்லை. அதையெல்லாம் வீரநரசிம்மர் சக்கரவர்த்தியிடம் கூறினார். ஆடல், பாடல், ஓவியம், கவிதை முதலிய கலைகளுக்கென்றே பிறந்தவளாம் அவள்.

அவள் தமிழ் பேசுவது குழந்தையின் மழலைபோல் இருந்தது, குரலோ அவள் மீட்டும் யாழின் இனிமையை ஒத்திருந்தது. இராஜராஜன் உணவை மறந்தான். பிறர் ஏதும் நினைப்பார்களோ என்பதையும் மறந்து அவளையே நோக்கிய வண்ணம் இருந்தான்.

''திரும்பிய திசைகளில் எல்லாம் தாமரை பூத்த தடாகங்கள், கூட்டங் கூட்டமாய்க் கண் விழிந்து நோக்கும் குவளை மலர்கள், இன்னிசை மகரயாழ் மீட்டும் தேன் வண்டுகள், அலை பாய்ந்து குளிர் தென்றல் வீசும் ஆறுகள்... அடடா? கம்பரிடம் இன்னும் சில நாள் நான் பாடம் கேட்காமல் போய்விட்டேனே!'' என்று குயிலின் குரலில் குதூகலம் பொங்கக் கூறினாள் பாமினி.

''கேட்டிருந்தால் இவளும் கவி பாடத் தொடங்கி யிருப்பாள்!'' என்று கூறிச் சிரித்தார் வீரநரசிம்மர்.*

**தண்டலை மயில்கள் ஆட,**
**தாமரை விளக்கம் தாங்க,**
**கொண்டல்கள் முழவின் ஏங்க,**

---

*பாமினியின் பாத்திரத்துக்கு ஆதாரம்: "The Hoysala Vamsa', by William Coelho Indian Historical Research Institute, Bombay.

**குவளை கண்விழித்து நோக்க,**
**தென்திரை எழினி காட்ட,**
**தேன்பிழி மகர யாழின்**
**வண்டுகள் இனிது பாட**
**மருதம் வீற்றிருக்கு மாதோ!**

பாமினி மெல்லிய குரலில் கம்பரின் கவி இன்பத்தை உருக்கமாக முணுமுணுத்துக் கொண்டே புன்னகை பூத்தாள். குலோத்துங்க சோழருக்குப் புல்லரித்தது. கம்பரின் வாயாலேயே அந்தப் பாடலைக் கேட்டு இன்புறும் பாக்கியத்தைப் பெற்றவர் அவர். இப்போது அதை ஒரு கன்னடத்துப் பெண்ணழகி தன் இன்பம் தோய்ந்த இதயத்திலிருந்து இசைக்கிறாள்.

''ஆஹா! ஆஹா!'' என்று மெய்மறந்து கூறினார் குலோத்துங்கர். ''கம்பர் தம் கவிச் சித்திரத்தில் தீட்டிய அரச சபையை அப்படியே கண்முன் கொண்டு வந்துவிட்டீர்களே, இளவரசி! மாறாது நிலத்தரசன் கொலு வீற்றிருக்கும் வளம் நிறைந்த மண்டபமாம் இந்தத் திருநாடு, தாமரைகள் விளக்கேந்தி ஒளி சிந்துகின்றனவாம்; மயில்களாகிய அரம்பையர் ஆடுகின்றனராம்; கார்மேகங்கள் முழவதிரச் செய்கின்றனவாம்; ஆறுகளின் மெல்லிய அலைகள் திரைச் சீலைகளாகத் தொங்குகின்றனவாம்; தேனுண்ட வண்டுகள் மகர யாழ் மீட்ட கோடானுகோடி குவளை மலர்கள் சபையோர்களின் கண்களாக மலர்ந்து அந்த அற்புதக் காட்சியை விழித்து நோக்குகின்றனவாம்! என்ன கற்பனை! என்ன சொல் நயம்! அடடா!''

இளவரசன் இராஜ இராஜன் தன்னையே விழித்து நோக்கிக் கொண்டிருந்தது, சிறிது எரிச்சலூட்டியது பாமினிக்கு. அவனுடைய விழிகளில் குளுமையில்லை; கற்பனையில்லை; கனிவில்லை. ஒரே வெப்பம் வீசத் தொடங்கியது அவனிடமிருந்து.

''இளவரசரும் கம்பரின் கவிதைகளை ஆழ்ந்து படித்திருப்பாரோ?'' என்று கேட்டு, நேருக்கு நேர் அவன்

முகத்தை ஊடுருவிப் பார்த்தாள் பாமினி. சட்டென்று தன் தலையைக் குனிந்து கொண்டான் இராஜ இராஜன். அதே இடத்தில் அவ்னை வாளால் இரு துண்டுகளாக வெட்டிப் போட்டுவிட வேண்டும்போல் தோன்றியது குலோத்துங் கருக்கு! பைந்தமிழில் பயிற்சியில்லாமல், அது கூறும் அறநெறியில் சிந்திக்கத் தெரியாதவனுக்கு அரசியல் வாழ்வாம், அரசியல்வாழ்வு!

''குலோத்துங்கனுக்குப் பிறந்தவன் கம்பரைப் பயிலாமல் இருப்பானா?'' என்று மேலெழுந்தவாறு மழுப்பி விட்டு, ''இளவரசியாருக்கு முன் நாணம் வந்துவிட்டது அவனுக்கு?'' என்றார் சக்கரவர்த்தி.

'கண்களில் மருந்துக்குக்கூட நாணத்தைக் காணோமே' என்று நினைத்துக் கொண்டாள் பாமினி. வீர நரசிம்மர் அவளைச் சோழ நாட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்ததன் நோக்கமே நாடு பார்ப்பதற்காகத்தான் என்றாலும், அதற்குள் மற்றொரு நோக்கமும் கலந்தேயிருந்தது. குலோத்துங்கரின் வற்புறுத்தலை வீரநரசிம்மரின் தந்தையான வல்லாள தேவராலும் அடியோடு புறக்கணிக்க முடியவில்லை. அவருடைய அண்டை அயல் நாடுகளும் பகைநாடுகளாக இருந்தன. ஆகவே, ஒருவேளை பாமினிக்கு விருப்பம் ஏற்படுமானால், இராஜராஜனுக்கே மணமுடிக்கலாம் என்ற யோசனையும் ஒரு மூலையில் அவர்களுக்கு இருந்தது. நாட்டின் இயற்கை வளத்தில் அவளுக்கு ஏற்பட்ட பற்றுதலை நரசிம்மர்கூட வேறுவிதமாக நினைக்கத் தொடங்கினார்.

பிரயாணக் களைப்பு, வரவேற்புக் களைப்பு, உண்ட களைப்புத்தீர விருந்தினர்கள் உறங்கத் தொடங்கினார்கள். குலோத்துங்கருக்கு இராஜராஜனிடம் ஏற்பட்ட சிறு கோபம் இன்னும் அடங்கவில்லை. எப்படியாவது இன்னும் சிறிது காலத்துக்குள் அவன் விருந்தினருடைய அன்புக்குப் பாத்திரமாகி விட்டால் அதனால் பலன் உண்டு, இல்லையேல் அது அவனுடைய தலைவிதி; நாட்டின் தலைவிதி.

அந்தரங்க மண்டபத்தில் அமைச்சர் சயங்கொண்ட சோழவல்லபரைக் காத்திருக்கச் சொல்லியிருந்தார் குலோத்துங்கர். நடுச்சாமமாகிவிட்டது. மற்ற அலுவல்களை முடித்துக் கொண்டு அங்கு வந்து சேர்ந்தார்.

''எப்படி இருக்கிறது பாண்டியநாடு?'' என்று கேட்டார் சக்கரவர்த்தி.

''நாம் மதுராந்தகம் செய்துவிட்டு வந்தோம். ஆனால் மதுரையோ ஆதியிலிருந்ததைவிட இப்போது அதிகமாக வலிமையோடு தலைதூக்கிவிட்டது. நாம் அஞ்சத் தக்க வகையில் அது வளர்ந்து கொண்டிருக்கிறது!''

''என்ன?'' என்று திடுக்கிட்டார் குலோத்துங்கர்!

சயங்கொண்ட சோழவல்லபர் திருக்கொடுங்குன்றத்துப் புலவனின் செயல்களை வரிசைக் கிரமமாக அவரிடம் சொல்லத் தொடங்கினார். எல்லாவற்றையும் விவரமாய்க் கூறி, அவன்மீது பாண்டியர் பரிவு கொண்டிருக்கும் நிலையையும் விளக்கினார்.

''சக்கரவர்த்திகளே! அந்தப் புலவன் பாண்டியருக்குப் பொருட்குவைகளை அனுப்பி வைத்தானே, அதுபோன்ற ஒரு காட்சியை நான் என் வாழ்நாளில் கண்டதில்லை. சக்கர வர்த்திகளுக்கும் எவ்வளவோ சிற்றரசர்கள் நிறையப் பொருள் அனுப்புவதுண்டு. போர்களில் நாம் வெற்றி பெற்றுப் பிற நாட்டுப் பொருட்களை நம் நாட்டுக்குக் குவியல் குவியலாகக் கொண்டு வருவதும் உண்டு. ஆனால் அவைகளெல்லாம் அந்தப் புலவன் அனுப்பிவைத்த பொருள்களுக்கு முன் அற்பம்தான்!''

நம்ப முடியாத கூற்று இது குலோத்துங்கருக்கு, 'ஒரு புலவன் இவ்வளவு செல்வாக்குப் பெற்றுவிட்டானா? செல்வம் திரட்டி மன்னனுக்கே வழங்கும் அளவுக்குச் செல்வாக்கு!'

''அடிமைகளைச் சில நாட்டரசர்கள் தங்கள் சக்கர வர்த்திகளுக்குத் திரட்டி அனுப்பி வைப்பது வழக்கமல்லவா? இவனோ, தாங்களே விரும்பி உழைக்கக்கூடிய ஆயிரக்

கணக்கான இளைஞர்களை மதுரைக்கு அனுப்பி வைத்திருக்கிறான். அவர்கள் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் மதுரையைப் புதுப்பித்துக் கட்டுகிறார்கள்!''

''ஆட்களை வேறு திரட்டி அனுப்புகிறானா?'' என்று தம்முடைய மீசை துடிக்கக் கேட்டார் குலோத்துங்கர்.

''ஆமாம்.''

நெடுநேரம் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டார் சக்கரவர்த்தி. சுந்தரபாண்டியனை ஒழித்துக் கட்டியதோடு, பாண்டியப் பூண்டின் ஆணி வேரையே அறுத்துவிட்டதாக நம்பிக் கொண்டிருந்தவர் அவர். ஆனால் குடிமக்களின் இயக்கம் ஒன்று எங்கிருந்தோ ஒரு புலவனின் தலைமையில் முளைத்து விட்டது.

''என்ன செய்வது?'' என்று ஒற்றர் தலைவரிடமே கேட்டார் சக்கரவர்த்தி.

''மேலும் சில நம்பிக்கையான ஆட்கள் எனக்கு வேண்டும். அவனை யாரும் அறியாமலே கொன்று தீர்த்து விடுகிறேன். அல்லது, அவனைப் பாண்டிய நாட்டின் எல்லையை விட்டாவது உடனே அப்புறப்படுத்த வேண்டும்.''

''எப்படியாவது ஒழிக்கத்தான் வேண்டும்!'' என்று உறுதியோடு கூறினார் சக்கரவர்த்தி. ''ஆனால் புலவனைக் கொல்வதுபோல் கொடிய பாவம் உலகத்தில் வேறெதுவும் இல்லை. கல்லில் கடவுளை வழிபடுகிறோம் நாம்; அவனுடைய சொல்லில் அவர் குடியிருக்கிறார். இதை நாம் மறந்துவிடக் கூடாது.''

புலவர்களிடம் பரிவு காட்டும் இந்தப் பண்பு ஒன்றுதான் அமைச்சருக்கு வேம்பாக இருந்தது. அவர்கள் அறம் பாடினால் அது பலித்துவிடும் என்ற நம்பிக்கை குலோத்துங்கருக்கு உண்டு.

''வல்லபரே! புலவனுடைய உயிரைக் கொல்வது தான் பாவமென்கிறேன். அவனுடைய புலமையைக் கொல்ல வேண்டும்; கற்பனையைக் கொல்ல வேண்டும்!

அவனுடைய உணர்ச்சிகளை நம்முடைய அன்பால் கொன்று தீர்க்க வேண்டும்!''

இரவோடு இரவாகத் தம்முடைய திருமந்திர ஓலை நாயகரைக் கூப்பிட்டு வைத்துக்கொண்டு, பாண்டியருக்கு ஒரு பெரிய ஓலை எழுதலானார் சக்கரவர்த்தி. பாண்டிய நாட்டு இளம் புலவரின் பெரும் புகழ் சோழ நாட்டுக்கு எட்டி விட்டதாம்! வடக்கே கோசல நாட்டிலிருந்து வந்திருக்கும் வீரநரசிம்மரும் அவருடைய புதல்வியும் தமிழ்க் கவிகேட்டு இன்புறத் துடிக்கிறார்களாம்! புலவரைத் தக்க மரியாதை களுடன் உடனடியாகத் தம்முடைய சபைக்கு அனுப்பி வைக்க வேண்டுமாம்!

சயங்கொண்ட சோழ வல்லபர் வெற்றிப் புன்னகை யுடன் தம்முடைய ரதத்தில் ஏறினார்.

# 11. காயல் பட்டினத்தில்



**கா**லம் காலமாகக் கடல் வாணிபத்தில் தலைசிறந்து நின்ற பாண்டிய நாட்டுக்கு அதன் இரு கண்களைப் போல் விளங்கி வந்த துறைமுகங்கள் தொண்டியும் கொற் கையும் ஆகும். கீழ்க் கடற்கரையின் வடபகுதியில் தொண்டிப் பட்டினம் முத்துக் கொழித்தது; தெற்கில் கொற்கையில் விளைந்த நன்முத்துக் கள் மேற்கத்திய நாடுகளிலிருந்தெல்லாம் செல்வங்களைக் கொண்டு வந்து பாண்டிய நாட்டில் குவித்தன.

காலம் மாறிவிட்டது. சோழ சாம்ராஜ்யத்துக்குப் பாண்டிய நாடு அடிமைப்பட்ட பிறகு, தொண்டிப் பட்டணத் தின் வாணிபத்தை முறியடித்து அதை நொண்டியாக முடக்கி விட்டார்கள் சோழர்கள். கொற்கைச் சலாபத்தில் விளைந்த நன்முத்துக்களோ மேற்கே அரபு நாடுகளிலிருந்து

ஆயிரக்கணக்கான குதிரைகளை இறக்குமதி செய்வதற்குப் பதிலாக, நேரே கங்காபுரிக்குத் திறைப் பொருளாகப் போகத் தொடங்கின. கொற்கையும் தனது செருக்கழிந்து தடுமாறியது.

இந்த நிலையில்தான் கொற்கையை அடுத்த காயல் பட்டினத்தை, ஒரு முக்கியமான துறைமுகமாக்குவதில் கவனம் செலுத்தினார் குலசேகர பாண்டியர். போர் முடிந்த பிறகு மறவப்படைத் தலைவரான மழவச் சக்கரவர்த்தியிடம் காயல் பட்டினத்தின் பொறுப்பைக் கொடுத்தார். ''நம்முடைய நாட்டின் கடல் வாணிபத்தை எந்த அளவுக்குப் பெருக்க முடியுமோ பெருக்குங்கள்! தெற்குக் கோடியில் இருப்பதால் சோழர்களின் பொறாமைக்கு இலக்காகாமல் தப்பி, சிறிது சிறிதாக வளர்த்து வாருங்கள். கொற்கையில் அவர்கள் கவனத்தைத் திருப்பிவிட்டு, காயல் பட்டினத்து வாணிபத்தை முழு மூச்சோடு கவனியுங்கள்.''

காட்டு அரணும் கோட்டை மதில்களும் நிறைந்த 'கானப் பேரெயில்' என்ற பெயருடைய காளையார் கோவிலைச் சேர்ந்தவர் மழவச்சக்கரவர்த்தி. குலசேகர பாண்டியர் பட்டத்துக்கு வந்த காலத்தில் அவர் தாம் அந்தப் பகுதியிலிருந்து மறவர்குடி மக்களை ஒன்று திரட்டி மிகப் பெரிய மறவர் படையை உருவாக்கியவர். அந்தப் படையின் வீரமும் எண்ணிக்கையும் அந்தக் காலத்தில் குலோத்துங்கர் என்ற யானைக்குச் சிம்ம சொப்பனமாகி விட்டது. ஆகவேதான் உடனடியாகப் பாண்டியருக்குப் படைக் கலைப்பு உத்திரவு அனுப்பினார் சோழர். மீண்டும் படை திரட்டுவதற்குத் தடை விதித்தார்.

மழவச்சக்கரவர்த்தி இப்போது நாட்டுக்காகப் பொருள் திரட்டும் பணியில் ஈடுபடலானார். காயல்பட்டினத்தை அடுத்துப் புதிய புதிய முத்துச் சலாபங்கள் தோன்றின. புதிய கலங்கரை விளக்கமொன்று எழும்பி அதன் கரைக்குப் பல நாட்டு மரக்கலங்களையும் ஈர்த்தது. பல நாட்டு வணிகர்களும் மாலுமிகளும் பொருள்களும் வந்து குவிய நகரம் புதுக்களை பெற்றுத் துலங்கியது.

சில தினங்களாகவே காயல்பட்டினத்தில் புலவர் படையும் தனது முரசுகளை அதிரச் செய்து கொண்டிருந்தது. கயல்விழியின் கூத்தைக் கண்டு அரபு நாட்டு வணிகர் கூட்டமும் வியப்பில் ஆழ்ந்தது. வணிகர்களின் தலைவன் தான் கொண்டு வந்திருந்த குதிரைகளில் தலைசிறந்த ஒன்றைப் பொறுக்கி எடுத்து கயல்விழிக்குப் பரிசளித்தான். செல்வம் கொழித்த நகரமாதலால் அங்கே அவர்களுக்குக் கிடைத்த பரிசுகள் ஆதிச்ச தேவரையே திகைக்க வைத்தன. கயல்விழியும் கலைக் குழுவினரும் நெல்லைக்குத் திரும்பினர்; புலவனின் வேலை இன்னும் முடியவில்லை.

மழவச் சக்கரவர்த்திக்குப் புலவனைப் பற்றிய செய்தி எட்டியது. தம்முடைய மாளிகைக்கு வரும்படி அவனுக்கு அழைப்பு அனுப்பியிருந்தார். இரவு நேரத்தில் தனியாக வந்து சேர்ந்தான் பைந்தமிழ்க்குமரன். நெடுநேரம் அவர் களிருவரும் தனிமையில் அளவளாவியும் அவரால் அவனை இனம் கண்டுகொள்ள முடியவில்லை.

''மறவப் படைத் தலைவரே, இன்னுமா என்னை உங்களால் அடைய்ாளம் காணமுடியவில்லை?'' என்று சரேலென்று கேட்டுவிட்டு அவர் அருகில் சென்று நின்றான். திடுக்கிட்டு அவன் முகத்தை உற்றுப் பார்த்தார் அவர்.

தாடியும் மீசையுமாக இருந்த கோலத்தைத் தன் கரத்தால் மறைத்துக் கொண்டு சிரித்தான். அப்படியும் அவருக்கு விளங்கவில்லை. சரேலென்று தனது இடது கரத்தால் அவரது உடைவாளை உருவி, வலது கரத்தால் ஓங்கி அவருடைய வயிற்றில் குத்தினான்.

அவ்வளவுதான் அவருடைய உருண்டு திரண்ட சரீரம் ஆனந்த மிகுதியால் இரு மடங்கு பெரிதாகப் பூரித்தது. இரு கரங்களா லும் அவனை உயரே தூக்கிப் பிடித்துக் கொண்டு ஆனந்தக் கூத்தாடத் தொடங்கி விட்டார். ''இளவரசே!... இளவரசே!''

சொற்கள் தடுமாறின. கண்களில் நீர் வெடித்தது. அப்படியே சிறு குழந்தையை அணைத்து முத்தமிடுவது

போல் அவனை நெஞ்சாரத் தழுவி அவனுடைய நெற்றியில் முத்தமிட்டார். மாண்டுபோன அவருடைய மைந்தன் ஒருவன் மீண்டு வந்து விட்டால் அவர் எவ்வளவு களிப்படை வாரோ அதுபோல் நூறு மடங்கு களிப்பு அவருக்கு.

பயிற்சிக் களத்தில் முன்பெல்லாம் அவன் அவருடைய வயிற்றில் ஓங்கிக் குத்தி விளையாடுவான். அவருடைய வாளைப்பற்றி இழுத்து அவரைப் போருக்கு அழைப்பான். அந்த விளையாட்டுத்தான் இப்போது அவனை அவருக்குக் காட்டி கொடுத்தது.

''பெரிய பாண்டியருக்குத் தெரியுமா?'' என மெல்லக் கேட்டார்.

''இப்போது தெரியவேண்டாம்!''

இரவு முழுவதும் அவர்கள் ஒன்றாக இருந்தார்கள். தம்முடைய கரத்தாலேயே அவனுக்கு உணவு எடுத்துக் கொடுத்து அவன் சாப்பிடுவதை வேடிக்கை பார்த்தார் மழவச்சக்கரவர்த்தி. அவனுடைய மார்பகத்தில் பரவி இருந்த தழும்புகளை விளையாட்டாக எண்ணிப் பார்த்து மகிழ்ந்தார். ''இனி என் கவலை பறந்துவிட்டது. இந்த உயிர் உடலில் இருக்கும் காலத்திலேயே பாண்டிய சாம்ராஜ்யம் தலைநிமிர்ந்து நிற்பதைப் பார்த்து விடுகிறேன்?'' என்று பூரிப்படைந்தார்.

மளமளவென்று தன் திட்டங்களையும், அதில் அவர் நிறைவேற்ற வேண்டிய பங்கையும் விவரித்தான் சுந்தர பாண்டியன். அதுவரையிலும் விழுப்பரையரின் உதவியோடு தான் செய்திருப்பதையும், இனி செய்யப் போவதையும் கூறினான். மழவச் சக்கரவர்த்தி அயர்ந்து போனார். சின்னஞ்சிறு பிள்ளை என்று நாம் எண்ணிக் கொண்டிருந்த பிள்ளைதானா இது?

''எப்படி இவ்வளவு காரியங்களை முடித்தீர்கள்! எப்படித் திட்டம் போட முடிகிறது உங்களால்?''

''ஒரே சொல்லில் சொல்லி விடட்டுமா? துன்பமும் தோல்வியும்தான்! நம்முடைய தோல்வியைத் தொடர்ந்தாற் போல் வந்த துன்பங்களே எனக்கு வழிகாட்டிகள்!'' என்றான் இளைஞன்.

''சுட்ட சங்கு வெண்மை ஒளி வீசுகிறது. புடம் போட்ட பொன் மேலும் மின்னுகிறது. தோல்வியையே வெற்றியின் ஆயுதமாக்கும் கலையைக் கற்றுக் கொண்டு விட்டீர்கள், நீங்கள். தெய்வம் உங்களுக்குத் துணை நிற்கும்.''

மறுநாட் காலையில் அரபு நாட்டு வணிகர்களின் தலைவனான அப்துல்லுக்கு ஆள் அனுப்பி வரவழைத்தார் மழவச் சக்கரவர்த்தி. அவன் வந்தபோது அவருடைய மாளிகைக் கூடத்தில் புலவன் மட்டுமே உடன் இருந்தான். வணிகனின் நெடிய உருவமும் அவனது விசித்திரமான உடையலங்காரமும் அவனைப் பார்ப்பதற்கே வேடிக்கையாக இருந்தது. குனிந்து தனக்குரிய வகையில் வணக்கம் செலுத்தி விட்டு, மழவச் சக்கரவர்த்தி சுட்டிக் காட்டிய இருக்கையில் அமர்ந்தான்.

அரபு நாட்டு வணிகர் தலைவன் அப்துல்லைப் பார்த்து ''எப்படி இருக்கிறது உங்கள் வாணிபம்?'' என்று கேட்டார் மழவச் சக்கரவர்த்தி.

''ஏதோ இருக்கிறது'' என்று உற்சாகமிழந்த குரலில் கூறினான் வணிகன். ''எங்களுடைய குதிரைகளுக்கும் முன்போல் இங்கு வரவேற்பு இல்லை. முத்துக்களில் நன்றாக விளைந்த பெரிய முத்துக்களையும் நீங்கள் நாட்டை விட்டுக் கொண்டு போகக்கூடாதென்று தடை விதித்திருக்கிறீர்கள். ஏதோ நடந்து கொண்டிருக்கிறது.''

அப்துல்லின் முகத்தில் கூர்மையான விழிகளைப் பதித்தவாறே புன்முறுவல் பூத்தார் மழவச் சக்கரவர்த்தி. ''எப்படித்தான் நாங்கள் தடை விதித்தாலும் உங்கள் அரபுநாட்டு அங்காடிகளில் எங்களுடைய விளைந்த முத்து உயர்ந்த விலைக்குக் கிடைக்கத்தான் செய்கிறது. எப்படியோ முத்துக்களுக்கு இறக்கை முளைத்து விடுகிறது இல்லையா?''

வேர்த்து விறுவிறுத்து விட்டது அப்துல்லுக்கு. மிகவும் சிரமங்களை மேற்கொண்டு, கள்ளத்தனமாகச் சில பெரிய முத்துக்களைக் கடத்திச் செல்வதற்குள், பாண்டிய நாட்டுச் சுங்க அதிகாரிகளிடம் அவர்கள் படாதபாடு படவேண்டி யிருக்கிறது. இந்த மழவச் சக்கரவர்த்தி தன்னை என்ன செய்யப் போகிறாரோ என்ற அச்சம் அவனுக்கு.

''இனி இங்கிருந்து பெரிய முத்துக்களையும் ஏற்றுமதி செய்வதென்று தீர்மானித்திருக்கின்றோம்!'' என்றார் அவர்.

ஆனந்தம் தாங்கவில்லை அப்துல்லுக்கு.

''அப்படியே. அரபு நாட்டுக் குதிரைகளையும் இறக்குமதி செய்யலாமா என்று ஒரு யோசனை இருக்கிறது.''

''அச்சா! அச்சா!'' துள்ளிக் குதித்தான் அப்துல்.

''அப்துல்!'' என்று மெல்லிய குரலில் அவனை அருகில் அழைத்து வைத்துக்கொண்டு கூறலானார் மழவச் சக்கரவர்த்தி: ''ஆயிரக்கணக்கான வலிமையுள்ள குதிரைகள் எங்களுக்கு வேண்டும். கூடிய விரைவில் சற்று ஒதுக்குப் புறமாக ஒரு துறைமுகம் அகழ்ந்துவிடச் செய்கிறேன். இரவு நேரங்களில் கரைக்கு வந்து சேர்வது போல் மரக்கலங்களை கொண்டு வந்து சேர்க்க வேண்டும். தெரிந்ததா?'' என்று கேட்டார்.

''ஓ!'' என்று தலையாட்டினான் அப்துல். ஓரளவுக்கு அவனுக்கும் இந்த இரகசியம் புரிந்ததுபோல் இருக்கிறது. அவன் வணிகன். பயங்கரமான கடல் அலைகளோடு மாதக்கணக்கில் போரிட்டு, கடற்கொள்ளைக்காரர்களுக்குத் தப்பி, வீர சாகசங்களுடன் வாணிபத்தில் இறங்கியவன். புத்துயிர் வந்துவிட்டது அவனுக்கு.

''கூடுமானவரையில் ரகசியங்களை நீ காப்பாற்ற வேண்டும். ஈழநாட்டுக்கோ, சோழ நாட்டுக்கோ குதிரைகள் வாங்கி வருவதுபோல் வாங்கி வரவேண்டும். முத்துக்களை அனுமதிக்கும் விதியும் உனக்கு மட்டுமே தளர்த்தப்படும்!''

இரு கரங்களாலும் சலாம் வைத்தவாறே விடைபெற்றுக் கொண்டு, வெளியேறினான் அப்துல். அவனுடைய குதிரை பறந்து சென்ற வேகத்தில் அவன் ஆனந்தம் தெரிந்தது.

''இனி, திருமலை நாட்டுப் பக்கத்தில் உள்ள மறவர்குடி மக்களில் பலரை இங்கு குடியேற்ற வேண்டும். அது வரையில்...'' என்றான் அமைதியாக சுந்தரபாண்டியன். ''அங்கும் விளைச்சல் இல்லை. போரும் இல்லை. இங்கே புதிய முத்துச் சலாபங்களில் வேலை கொடுக்கலாம். மலைநாட்டுக் காடுகளில் குடியேற்றி, வாசனைத் திரவியங்களைப் பயிரிடச் செய்யலாம். குதிரைகளைப் பிரித்துப் பொதிகை மலைச்சாரலுக்கும் குற்றால மலைச் சாரல்களுக்கும் அனுப்பி விட்டால் பயிற்சிக்கும் வசதியாக இருக்கும்.''

வியப்பின்மேல் வியப்பு மழவச் சக்கரவர்த்திக்கு. எவ்வளவு விஷயங்களை முன்னமே எண்ணி வைத்திருக் கிறார் இளவரசர்!

''இளவரசே! புயல்போல் பொங்கிச் சீறும் மறவர் பெரும்படைக் காட்சியை இப்போதே என் மனக்கண் முன் காட்டிவிட்டீர்கள். தங்களைச் சந்தித்த பின் இருபது வயது இளமை வந்துவிட்டது!''

சிவிகையில் புலவனைத் திருநெல்வேலிக்கு அவனுடைய இருப்பிடத்துக்கு அனுப்பி வைத்தார் மழவச் சக்கரவர்த்தி. அவனைச் சேர்ந்தவர்கள் முன்பே ஊரை விட்டுத் திரும்பி விட்டனர். நெல்லைக்கு அவன் திரும்பி வந்தபோது அவனை எங்கேயோ அழைத்துச் செல்வதற்கு மற்றொரு ரதம் காத்திருந்தது. கயல்விழியின் முகத்தில் களையில்லை; உயிரில் உணர்வில்லை.

# 12. விடை கொடுத்தாள்



மறுக்க முடியாத குலோத்துங்கச் சோழரின் அழைப்பு பைந்தமிழ்க் குமரனுக்கு விழுப்பரையர் மூலமாகவே கிடைத்தது. குலசேகர பாண்டியருக்கு அமைச்சர் சயங்கொண்ட வல்லபரின் வாயிலாக வந்து சேர்ந்தது. அதைப் பற்றி அவர் விழுப்பரையரிடம் ஆலோசனை செய்தார். மறுப்பதற்கு வழியில்லை. மறுத்தால் அது சக்கரவர்த்தியை அவமதித்த குற்றமாகும். ஆகவே விழுப்பரையர் அவனை அனுப்பி வைக்கும் பொறுப்பைத் தாமே மேற்கொண்டு நெல்லைக்கு வந்து சேர்ந்தார்.

பாண்டியர் கொடுத்தனுப்பியிருந்த முத்தாரத்தை வாங்கிக் கண்களில் ஒற்றிக்கொண்டு கழுத்தில் அணிந்து கொண்டான் பைந்தமிழ்க் குமரன். இருவரும் தனிமையில் நெடுநேரம் உரையாடினார்கள். குலோத்துங்கரின் சபையில் அவன் மிகவும் விழிப்போடு நடந்து கொள்ளவேண்டும் என்பது பற்றிப் பன்முறை எச்சரிக்கை செய்தார் விழுப்பரையர். இங்கே கயல்விழியைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பைத் தாம் ஏற்றுக் கொள்வதாக வாக்களித்தார். பைந்தமிழ்க் குமரனைப்பற்றிய கவலைதான் அவருக்கு.

''ரதசாரதி முதற்கொண்டு தங்களுடன் துணைக்கு வரும் பலருமே தங்களை நேரில் அறிந்திராதவர்கள். கவனமாகத் தான் ஆட்களைப் பொறுக்கியெடுத்து வந்திருக்கிறேன். இனிமேல் அம்பலக் கூத்தனுக்குத்தான் அதிகமான வேலையிருக்கும். இப்போது அவன் தங்களுடன் வரவேண்டாம். சமயம் வரும்போது தாங்கள் எங்கிருந்தாலும் அவன் தங்களைச் சந்திப்பான்.''

கயல்விழியிடமும் ஆறுதல் கூறிவிட்டு விழுப்பரையர் முன்னதாகவே அங்கிருந்து விடைபெற்றுக்கொண்டார். மறுநாள் அவன் அங்கிருந்து புறப்படுவதாக ஏற்பாடு.

நகரத்தை அடுத்தாற்போல் தாமிரவருணியாற்றங் கரையை அடுத்திருந்த மனைகளில் அவர்கள் அப்போது தங்கியிருந்தார்கள். அருகில் இருந்து ஒன்றாகவே சுற்றுப் புறத்துக் கிராமங்களுக்குச் சென்று வந்தாலும் கயல்விழியும் பைந்தமிழ்க்குமரனும் அடிக்கடி தனித்துப் பேசுவதற்கோ பழகுவதற்கோ நேரம் கிடைப்பதில்லை. இருவருமே ஒருவகைக் கட்டுப்பாட்டைத் தங்களுக்குள் விதித்துக் கொண்டது போல் நடந்து கொண்டார்கள். எப்போதாவது அவர்கள் சந்தித்துப் பேசினாலும் அது அவர்களுடைய கடமைகளைப் பற்றிய பேச்சாகவேயிருந்தது.

ஆற்றங்கரையில் மாலை நேரம் மயங்கிக் கொண்டு வந்தது. பைந்தமிழ்க்குமரன் பல்வேறு சிந்தனைகளுடன் மெல்ல மணலில் நடந்து சென்றான். ஆற்றுக்குள் தெரிந்த ஒரு கல் மண்டபத்துக்குச் சென்று அதன் தூணோடு தூணாகச் சாய்ந்துவிட்டான். ஆற்று நீர் அமைதியாக ஒருபுறம் சலசலத்து ஓடிக் கொண்டிருந்தது.

இப்படி ஓர் அழைப்பை அவன் எதிர்பார்க்கவே இல்லை... இனி எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது பற்றியும் அவன் முடிவு செய்ய இயலாதவனாக இருந்தான். புலியின் குகைக்கே போய் அதை நேருக்கு நேர் சந்திக்க வேண்டிய அவசியம் வந்துவிட்டது. கிழட்டுப் புலியானாலும் ஆற்றலிலோ, வலிமையிலோ, நகங்களின் கூர்மையிலோ இளமையின் முறுக்கேறிய புலி அது.

கயல்விழியைப் பிரிந்து செல்லவேண்டுமே என்ற ஏக்கம் ஒருபுறம் நெருப்பென அவன் உள்ளத்திலே கனிந்து அவனை வாட்டத்தொடங்கியது. அவனையறியாமலே அவள் அவனுடைய உயிரின் ஒரு பாதியாகிவிட்டாள். ஒவ்வொரு மூச்சையும் அவனது எண்ணங்களைச்

செயலாக்குவதற்கென்று ஆர்வத்தோடு தியாகம் செய்து வந்தாள். இவ்வளவும் அவன்தான் இளவரசன் என்பதைத் தெரிந்து கொள்ளாமலே அவள் செய்து வந்தாள். அதை நினைத்துநினைத்து அவன் உள்ளம் நன்றிப் பெருக்கால் நிரம்பியது. யாரோ ஒரு நாடோடிப் புலவன் மீது அவள் கொண்ட பற்றுதல் அவளை எப்படியெல்லாமோ மாற்றிவிட்டது. கயல்விழியைப் பிரிந்து செல்வது எப்படி?

மங்கலான இரவு மயக்கம் கலந்த நிலவொளியில் கலந்து உறைந்தது. தூணில் சாய்ந்தவன் சாய்ந்தபடியே இருந்தான். நாளைக்கோ மறுநாளோ பூர்ணிமை. வளர்பிறை நிலவு வட்டப் பொன் தகடுபோல் வானத்தில் மிதந்து தாமிரவருணியைப் பொன் வருணியாக உருகியோடச் செய்து கொண்டிருந்தது.

கயல்விழி அந்த மண்டபத்தை நோக்கி விரைந்து வந்து கொண்டிருந்தாள். நடையில் வழக்கத்துக்கு மாறான பரபரப்புக் காணப்பட்டது. வீட்டில் அவனைத் தேடி விட்டு அங்கு காணாததால் மண்டபத்துக்கு வந்து கொண்டிருந்தாள் அவள்.

அருகில் நெருங்கியவுடன், ''கயல்விழி!'' என்று குரல் கொடுத்தான் பைந்தமிழ்க் குமரன். அவள் பதிலளிக்க வில்லை. மளமளவென்று ஓடிவந்து அவன் கால்களைக் கட்டிக்கொண்டாள். தாமிரவருணி அவள் விழிகளிலிருந்து பெருக்கெடுத்தோடியது. மென்மையான தேகம் அவளுடைய துயரம் தாங்காமல் குலுங்கியது. அன்போடு அவளது கேசத்தை வருடியவாறே பேச்சு மூச்சற்றுப் போனான் பைந்தமிழ்க்குமரன். என்ன பேசுவதென்றே தோன்றவில்லை அவனுக்கு.

''நீங்கள் அங்கு போகத்தான் வேண்டுமா?'' என்று விம்மல்களுக்கிடையே கேட்டாள் கயல்விழி. ''போகாமல் இருப்பதற்கு ஏதாவது காரணம் சொல்லி அனுப்ப முடியாதா?''

''போகாமல் இருந்தால் அது நம்முடைய குலசேகர பாண்டியருக்கு இழுக்காகும். அதனால் சக்கரவர்த்தியின்

கோபத்துக்கு நம்முடைய அரசர் இலக்காக வேண்டிய நிலை ஏற்படும். போய்விட்டு விரைவில் திரும்பிவிடலாம் என்றே நினைக்கிறேன். எனக்கு ஒரு துன்பமும் ஏற்பட்டு விடாது, கயல்விழி!''என்று சமாதானப்படுத்தினான்.

கயல்விழியின் தோற்றம் பார்ப்பதற்கே பரிதாபமாக இருந்தது.

''செய்தியைக் கேட்டதிலிருந்தே, என்னால் தாங்க முடியவில்லை. காரணம் ஏதுமில்லாவிட்டால் நான் இவ்வளவு தூரம் அச்சம் கொள்ள மாட்டேன்; என்னால் வாய்விட்டுச் சொல்ல முடியவில்லை. ஏதோ ஒன்று... ஏதோ ஒன்று...தங்களை என்னைவிட்டுப் பிரித்து இழுத்துச் செல்ல வந்திருப்பது போல் உணர்கிறேன். திடீரென்று இந்த ஆற்றில் வெள்ளம் வந்து நம் இருவரையுமே தனித்தனியாக வெவ்வேறு இடங்களுக்கு அழைத்துச் சென்று ஒதுக்கினால் எப்படியிருக்கும்? அதுபோன்ற ஓர் அச்சம் என்னை வாட்டி வதைக்கிறது.''

சிரித்தான் புலவன். ''ஆற்று வெள்ளம் அடித்துச் சென்றால் என்ன? திரும்பவும் ஒருவரையொருவர் தேடிக் கண்டுபிடித்து விட்டால் போகிறது! நீ எங்கிருந்தாலும் நான் உன்னை விட்டுவிட மாட்டேன்.''

''நீங்கள் ஆண்பிள்ளை. எதையும் துச்சமாக மதிக்கிறீர் கள், அந்த அளவுக்கு என்னிடம் துணிவில்லையே!''

''கயல்விழி! நம்மை யாராலுமே பிரிக்க முடியும் என்று நான் நம்பவில்லை! நம்பவே இல்லை'' என்று குரல் தழு தழுக்கக் கூறினான் பைந்தமிழ்க் குமரன். ஆனால் அவனுக்கே இந்த அழைப்பு ஏதோ ஒருவகைத் திகைப்பைக் கொடுத்தது.

''தங்களோடு பழகி நான் தங்களைப் புரிந்து கொண்டிருக்கிறேன். தங்களால் குலோத்துங்க சோழரின் சபையில் ஒருநாள் கூட அமைதியாக இருக்க முடியாது. அவருடைய வீரத்தையும் வெற்றியையும் தாங்கள் புகழ்ந்து பாட மாட்டீர்கள். அதன் விளைவுகளை எண்ணிப் பார்த்துப்

பதறிக் கொண்டிருக்கிறேன் நான். வலிமை நிறைந்த பகைவர் களின் கூட்டத்திற்குள் நீங்கள் தனியே செல்கிறீர்கள்.''

''குலோத்துங்க சோழரிடம் எனக்கு நம்பிக்கை யிருக்கிறது!'' என்றான் புலவன். ''அவருக்குக் கவிஞர்களின் செருக்கை மதிக்கத் தெரியும். கம்பரே அவர்மீது உலாப் பாட வில்லை. அப்படியும் அவரைத் தண்டிக்கவில்லை சக்கரவர்த்தி. என்னை ஒரு போதும் அவர் வற்புறுத்த மாட்டார்.''

''பிறகு எதைப் பாடுவீர்கள்?''

''நான் கற்றவனே தவிரக் கற்பனைப் புலவனல்ல என்பதை அவரிடம் கூறுவேன். வள்ளுவருக்கு விளக்கம் கேட்டால் சொல்லுவேன். கம்பர் எழுதிய ராம காதையின் ஏட்டுப்படி ஒன்று கிடைத்தால் அதையும் கற்றுக் கொள்ள வேண்டுமென்னும் ஆவலிருக்கிறது.''

''நீங்கள் பாடியுள்ள கூத்துப் பாடலைப் பாடும்படி கேட்டால்?''- அவனுடைய உள்ளத்துக்குள் எந்த வினா சுழன்று கொண்டிருந்ததோ அதையே நேரடியாகக் கேட்டு விட்டு, அவனுடைய விழிகளில் தன் விழிகளைப் பதிய வைத்தாள் கயல்விழி. பைந்தமிழ்க் குமரன் அவள் விழிகளில் தேங்கிக் கிடந்த அச்சத்தின் அளவைக் கண்ணுற்றான். அவன் கூறும் மறுமொழியில் அவள் உயிர் துடித்துக் கொண்டிருந்தது.

''பாண்டியத் திருமகள் கூத்தைப் பாடும்படி கேட்டால்?''

''கேட்க மாட்டார்கள்; கூடுமானவரை நானும் விழிப்பாக இருப்பேன்.''

''வற்புறுத்தினால் பாடி விடுகிறேன். பாடினால் என் தலையைக் கொய்து விடுவார்களா என்ன? நான் பாண்டிய நாட்டின் சார்பில், பாண்டிய மன்னரின் சார்பில் அனுப்பப்படும் புலவன். எனக்கு ஏதும் நேர்ந்துவிடாது.''

அவனுடைய கரங்கள் இரண்டையும் பற்றிக் கொண்டு கெஞ்சினாள் கயல்விழி. கரங்களைக் கண்ணீரால் நிறைத்தாள். ''அந்த ஒரு பிழையை மட்டும் ஒருகாலும் செய்து விடாதீர்கள். அதிலும் அந்த இளவரசன் இருக்கிறானே, அவன் இதைக் கேட்டுவிட்டால் மறுகணமே உங்கள் உயிரைப் பறித்து விடுவான். புலியின் குகைக்குப் போய் அதன் வாலைப்பற்றி இழுப்பது எவ்வளவு அபாயமோ அவ்வளவு அபாயம் இது. நாகத்தின் புற்றுக்குள் சென்று அதன் தலையில் தட்டி எழுப்பி விடாதீர்கள்! உங்களைக் கெஞ்சுகிறேன்; மன்றாடுகிறேன்; இந்த ஒரே ஒரு வாக்கு எனக்குக் கொடுங்கள். இதை மட்டும் அங்கு பாடப்போவதில்லை என்று எனக்கு வாக்குத் தாருங்கள்.''

உணர்ச்சிக் குவியலாய் மாறிவிட்டாள் கயல்விழி. ஆனால் அவள் சிந்தனை செய்யாமலும் இல்லை. இளவரசன் இராஜ இராஜனுக்கு முன்னால் பாடவேண்டாமென்று எவ்வளவு தெளிவாக வற்புறுத்துகிறாள்! அவனுடைய தலைமையில் நடந்த தீமைகள்தான் அவை என்பதைக் கயல்விழியும் தெரிந்துகொண்டிருக்கிறாளா?

வாக்குக் கொடுக்க அவன் விரும்பவில்லை. அங்கு எது வந்தாலும் ஏற்றுக்கொள்ளவே அவன் சித்தமாக இருந்தான். ஆனால் கயல்விழிக்கு ஆறுதல் சொல்லவேண்டுமே?

''இதோ பார், இப்போதே நாம் ஒரு முடிவு செய்து கொண்டு போவது நல்லதல்ல. அங்குள்ள நிலைமையை அறிந்துகொள்ள வேண்டும். திறந்த மனத்துடன் போய் வருகிறேன். ஒரு வேளை நான் பாட மறுப்பதே எனக்கு ஆபத்தாக இருக்கக் கூடுமல்லவா?''

கயல்விழி ஏதும் சொல்வதறியாது தடுமாறினாள்.

''கயல்விழி, இந்த நாட்டை விடுவிப்பதற்காகவும் உன்கரம் பற்றுவதற்காகவும் நான் என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வது என்று உறுதி பூண்டிருக்கிறேன். லட்சியத்துக்கு இருக்கும் சக்தி மிகவும் வலிமையானது. அது தன்னை நிறைவேற்றிக் கொள்ளும் வரையில் நம்மைக் காப்பாற்றியே

தீரும். ஆகவே வீணாக இங்கு தனிமையில் கலங்கிக் கொண்டிருக்காதே! புன்முறுவலுடன் எனக்கு விடை கொடுத்து அனுப்பு!''

அவள் தேம்பித் தேம்பி அழுதாள். கைத் தாங்கலில் மெல்ல அவளை வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தான் பைந்தமிழ்க் குமரன். எந்த ஆறுதல் மொழிகளும் அவள் செவியில் புகவில்லை.

மறுநாள் அவன் ரதத்தில் ஏறி அமர்ந்து கொண்டு விடை பெற்றபோது, கயல்விழி தன் கண்ணீரைத் துடைக்கவும் மறந்து சிலையாகி நின்றாள். ரதத்தின் சக்கரங்கள் அவளது மலையொத்த இருதயத்தின் மேல் உருண்டு சென்றன.

## 13. பாண்டிய கண்டனன்



**பை**ந்தமிழ்க்குமரன் பாண்டிய நாட்டை விட்டுக் கிளம்பியவுடனேயே, அந்தச் செய்தியைத் தம்முடைய ஒற்றர் தலைவன் மாவலிராயன் வாயிலாகச் சக்கரவர்த்திக்கு அனுப்பிவிட்டார் சயங்கொண்ட சோழ வல்லபர். குலோத்துங்க சோழர் புலவன் அங்கு வந்து சேரக் கூடிய நாளைக் கணக்கிட்டு அதற்கு ஏற்பத் தம்முடைய நிகழ்ச்சிகளில் சில மாறுதல்கள் செய்து வைத்திருந்தார்.

கங்காபுரியை அடைந்த தமிழ்க் குமரனுக்கு அதன் எல்லையிலேயே சக்கரவர்த்தியின் வரவேற்புக்கள் காத்திருந்தன. அரண்மனைச் சிவிகை அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. அதிகாரிகளும் பணியாட்களும் அவனை முகமலர்ச்சியோடு வரவேற்று அழைத்துச் சென்றார்கள். அரண்மனைக்குள்ளாகவே இருந்த விருந்தினர்

மாளிகைகளில் ஒன்று அவனுக்காக ஒதுக்கப்பட்டிருந்தது. பிரமித்துப் போனான் பைந்தமிழ்க்குமரன். நாட்டின் செல்வச் செழிப்பைக் கண்டும், சக்கரவர்த்தியின் ஆணைகள் செயலாற்றப்படுகிற வேகத்தைக் கண்டும் அவன் பிரமித்தான். 'மாபெரும் விலிமையும் கட்டுக்கோப்பும் நிறைந்த இந்த சாம்ராஜ்யத்தை வெல்ல வேண்டுமென்றா நான் சபதம் செய்திருக்கிறேன்?'

உடனே தனக்குள் சிரித்துக் கொண்டே வள்ளுவரின் குறளை ஒருமுறை சொல்லிப் பார்த்துக் கொண்டான். 'எண்ணிய எண்ணியாங்கு எய்துப, எண்ணியார் திண்ணிய ராகப்பெறின்!' அவனுடைய திண்தோள் விம்மிப் புடைத் தெழுந்தது.

பாண்டியரின் அரண்மனையில் இருந்ததைவிட மிகுதியான வசதிகள் அந்தச் சின்னஞ்சிறு விருந்தினர் மாளிகையில் நிறைந்திருந்தன. அகிற்புகை சூழ்ந்து அருமை யான மணம் பரப்பிக் கொண்டிருந்தது. முதிர்ந்த யானைத் தந்தங்களைக் கால்களாகக் கொண்ட பஞ்சணைக் கட்டில்; மிருதுவான ஆசனங்கள்; குறிப்பறிந்து ஏவல் முடிக்கும் பணியாட்கள்.

நறுமணம் கமழ்ந்த நன்னீரில் குளித்து முழுகிவிட்டு, அறுசுவை உணவை முடித்துக்கொண்டு ஆசனம் ஒன்றில் ஓய்வுக்காக அமர்ந்திருந்தான் பைந்தமிழ்க்குமரன். சக்கரவர்த்திகள் அனுப்பி வைத்த அதிகாரி ஒருவர் வந்து அவனுடைய நலன்களை விசாரித்தார். "இன்று மாலையில் அரண்மனைப் பொதுச்சபையில் ஒரு முக்கியமான பெருவிழா இருக்கிறது. கோசல நாட்டு வீர நரசிம்மருக்கு விருதுப் பெயர் சூட்டிச் சக்கரவர்த்திகள் பாராட்ட விருப் பதால், அந்தக் கடமைகளில் அவர்கள் இப்போது முனைந் திருக்கிறார்கள். பொதுச் சபையில் தங்களுக்கென்று ஆசனம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நான் வந்து தங்களை அழைத்துச் செல்கிறேன். விழா முடிந்த பின்னர் அவர் களுடைய ஓய்வை அறிந்து தாங்கள் அவர்களைச் சந்திக்கலாம்."

''சக்கரவர்த்திகளுக்கு என் வணக்கத்தையும் வாழ்த்துக் களையும் கூறுங்கள். சோழ நாட்டுப் பெருமக்களின் அன்புக்கு என் நன்றி'' என்றான் பைந்தமிழ்க்குமரன்.

விருதுப் பெயர்கள், பரிசில்கள், பட்டங்கள் யாவும் ஒவ்வொரு துறையிலும் சிறந்து விளங்குகிறவர்களுக்கு வழங்கி அவர்களது உழைப்பைப் போற்றும் பண்பு காலம் காலமாகத் தமிழகத்தில் இருந்து வருகிறது. மென்மேலும் அவர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் தந்து அவர்களது ஆற்றலை வளர்ப்பதற்காகவும், மக்கள் அவர்களது அருமையை உணர்ந்து அவர்களது உழைப்பால் பயனடைய வேண்டுமென்பதற்காகவும் மூவேந்தர்களுமே இந்தப் பழக்கத்தை ஆதரித்து வந்தார்கள். அதிகாரிகள், வணிகர்கள், புலவர்கள், வீரர்கள் முதலியோரைப் போற்றிப் புகழ்ந்து வளர்த்த நாடு இது. ஆனால் வேற்று நாட்டு இளவரசன் வீரநரசிம்மருக்கு எதனால் குலோத்துங்கர் விருதுப் பெயர் சூட்டப்போகிறார் என்று புலவனுக்கு விளங்கவில்லை. என்ன பெயர் சூட்டப் போகிறார்?

அதிகாரி அவனை அழைத்துச் செல்ல வந்துவிட்டார். அவரோடு புறப்பட்டான் பைந்தமிழ்குமரன். ஏற்கனவே அந்த பெரிய மண்டபம் முழுவதும் சபையோரால் நிரம்பி வழிந்தது. சக்கரவர்த்தி, இளவரசன், விருந்தினர் முதலியோரும் வந்துவிட்டனர்.

''பாண்டிய நாட்டுக் கவிஞர் பைந்தமிழ்க் குமரன்!'' என்று உரத்த குரலில் கூவினான் முகப்பில் நின்று கொண் டிருந்த அறிவிப்பாளன். சபையிலிருந்த அனைவரது விழி களும் அவன் பக்கம் திரும்பின. வியப்போடும் அச்சத்தோடும் திரும்பின. குலோத்துங்கரும் உற்றுக் கவனித்தார். இளவரசன் இராஜராஜனின் முகம் இறுகியது, கோசலநாட்டு இளவரசி புன்னகை தவழும் கண்களால் ஆவலோடு கவனித்தாள்; எவ்வளவு பெருந்தன்மை குலோத்துங்கருக்கு! பகை நாட் டைச் சார்ந்தவனாக இருந்தாலும் அவன் கவிஞன் என்பதால்

எவ்வளவு ஏற்றம் தருகிறார்? முக்கியமானவர்களின் பெயர்களை மட்டிலுமே அறிவிப்பாளன் கூறி அறிமுகப்படுத்துவான்.

பைந்தமிழ்க் குமரனுடைய ஆசனம் எங்கோ ஒரு மூலையில் இருக்கவில்லை. அமைச்சர்களுக்கும் படைத் தலைவர்களுக்கும் அடுத்தாற்போல் குலோத்துங்கரின் பார்வையில் படுகிற இடத்தில், மிகவும் அருகில் போடப் பெற்றிருந்தது.

ஏறு நடை, நிமிர்ந்த குளிர்ந்த நோக்கு, புன்னகை தவழும் வதனம் இவற்றோடு வனவாசம் புரியும் ரிஷி குமரனைப்போல் எளிமை கமழ அவன் சபைக்குள் வந்து கொண்டிருந்தான். அலை பாய்ந்த கருங்கூந்தல் அவனுடைய தோளில் சுருண்டு விழுந்திருந்தது. இளம் தாடி ஒரு தனிப் பொலிவோடு மின்னிக் கொண்டிருந்தது. மடித்துக் குறுக்கே முடிந்த உத்தரீயத்துடன் வந்து அவன் அமைதியாகச் சக்கரவர்த்திக்கும் ஏனையோருக்கும் வணக்கம் தெரிவித்து விட்டுத் தன் ஆசனத்தில் அமர்ந்தான். ஏட்டுச் சுவடியும் கையுமாக, அவன் சபைக்குள் நடந்து வந்த தோற்றம் செங்கோலும் கையுமாக ஒரு புவியரசன் வருவது போலிருந்தது. விழிகளில், நடையில், கைவீச்சில் எதிலுமே அவனிடம் செருக்குத் தென்படவில்லை. ஆனால் அவனுடைய பணிவோ கம்பீரம் கனிந்த கவர்ச்சி கொண்டிருந்தது.

மண்டபத்தின் மத்தியில் அரியாசனங்களில் வீர நரசிம்மனும் குலோத்துங்கரும் வீற்றிருந்தார்கள். நரசிம்மனை அடுத்து அவரது குமாரத்தி பாமினி அமர்ந்திருந்தாள்; சக்கரவர்த்தியை அடுத்து இராஜராஜன் செருக்கோடு சாய்ந்திருந்தான். மற்றவர்களுடைய விழிகளைப் போலவே இளவரசியின் விழிகளும் தன் முகத்தில் சுழல்வதைக் கண்ட இளம்புலவன் அவற்றைக் கவனித்தும் கவனியாதவனைப் போல், வீரநரசிம்மனை நோக்கத் தொடங்கினான். வயது நாற்பதுக்குமேல் இருக்குமென்றாலும் கோசலநாட்டு வீரனின் உடலில் இளமை பொங்கிக் கொண்டிருந்தது. முகபாவத்தில் பண்பு சுடர் விடுவதைப் புலவனால் அறிந்து கொள்ள முடிந்தது.

விழா ஆரம்பமாயிற்று. குலோத்துங்கர் எழுந்து முக்கிய விருந்தினர்களுக்கும் சபையோருக்கும் வரவேற்புக் கூறி விட்டு அன்றைய விழாவின் நோக்கத்தை விளக்கலானார்:

''விருதுப் பெயர்களுக்கும் பட்டங்களுக்கும் அப்பாற் பட்ட ஒரு பெரிய வீரரைக் கௌரவிப்பதற்காக நாம் இங்கு கூடியுள்ளோம். விருதுப்பெயர்களுக்கு ஆழமான பொருள் உண்டு; தனிமையான வலிமையுண்டு. எனது நீண்டகால வாழ்வில் நான் இதை உணர்ந்தவன். நமது விருந்தினருடைய இயற்பெயர் நரசிம்மன்தான். ஆனால் சோழநாட்டு மக்களும் இவரை வீரநரசிம்மன் என்றே பெருமையோடு அழைத்து வருகிறார்கள். அதனால் இவரது வீரம் பன்மடங்கு வளர்ந்திருக்கிறது; இனியும் வளரப் போகிறது. பெயருக்கு முன்னால் உள்ள அந்த இரு எழுத்துக்களுக்கு எவ்வளவு மந்திரசக்தி வந்து விடுகிறது, பார்த்தீர்களா? ''

சபை அதிரக் கரகோஷம் செய்தார்கள் சபையினர். பாண்டிய நாட்டுப் புலவனின் கரங்களை அவ்வப்போது சக்கரவர்த்தியும் நோக்கினார். பாமினியும் நோக்கினாள். அவனும் கைதட்டி ஒலி எழுப்ப மறக்கவில்லை.

''நமது இரு நாடுகளுக்கும் ஏற்பட்டுள்ள உறவு பன்னெடுங் காலத்துக்கும் பிரிக்க முடியாத உறவு, இரத்த சம்பந்தமாக இரண்டறக் கலந்த உறவு அது. எனது அருமைத் தங்கை சோழமா தேவியை மணந்திருப்பவர், இவருடைய தந்தையாகிய வல்லாள தேவர். என்னுடைய மைத்துனரு டைய திருக்குமார் இவர். வல்லாள தேவருக்கு இதே மண்டபத்தில் நாம் 'சோழ குலக் காப்பாளர்' என்ற பட்டத்தை வழங்கியிருக்கிறோம். வெறும் பட்டமா அது? இது வரையில் நமது இரு சாம்ராஜ்ஜியங்களுமே ஒன்றை ஒன்று காப்பாற்றி வளர்ப்பது என்று கங்கணம் கட்டிக் கொண்டு விட்டன. கோசல நாட்டுக்காக நாம் படைகளை அனுப்புகிறோம். அவர்களும் எப்போதுமே நமக்குத் துணை செய்யத் தவறிய தில்லை. இந்த உறவை மேலும் வளர்ப்பதற்காகவே இந்த விழா நடைபெறுகிறது.''

பைந்தமிழ்க் குமரன் தெளிவாகப் புரிந்து கொண்டு விட்டான். 'புலவனே! நீ வெறும் பாட்டுப் பாடி ஒரு துரும்பையும் அசைக்க முடியாது! இரண்டு சாம்ராஜ்யத் தூண்களின் இணைந்துவிட்ட வலிமை எங்களுடையது!' என்று அவர் குறிப்பால் அவனுக்கு உணர்த்தினார்.

சக்கரவர்த்தியின் குரல் இப்போது முன்னிலும் கணீரென்று ஒலித்தது,

''எனக்கும் சரி, வல்லாள தேவருக்கும் சரி, வயதாகி விட்டது. ஆனால் எங்களுக்குப் பின்னால் இந்த உறவு வளரவேண்டும். இளவரசன் இராஜராஜனையும் நமது மாபெரும் சோழ சாம்ராஜ்யத்தையும் எனக்குப் பின்னால் வீரநரசிம்மன் கவனித்துக் கொள்வார்.''

மீண்டும் கையொலியும் வாழ்த்தொலியும் எழுந்தன.

''விருதுப் பெயர் ஏற்றதாக இருக்கவேண்டுமே என்று பல தினங்கள் ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். ஒரு நாட்டைக் காக்கவேண்டுமென்றால் பகையை அழிக்க வேண்டும். வல்லாள தேவர் காப்பாளராகி விட்டார். ஆகவே அவர் குமாரரே நம்முடைய பகையை அழிப்பவராக வேண்டும். நமக்கு உள்ள ஒரே பகை நாடு பாண்டிய நாடு. தலைமுறை தலைமுறையாகவே அது நம்மைப் பகைத்துக்கொண்டு வந்திருக்கிறது. பாண்டிய நாட்டு மக்களிடமோ, கலைஞர்களிடமோ, புலவர்களிடமோ நமக்குச் சிறிதும் பகையில்லை. மன்னர்கள் சமயங்களில் மதங்கொண்ட யானைகளாகி விடுகிறார்கள். அப்படிப்பட்ட பாண்டி யானையை அடக்க ஒரு சிங்கம் வேண்டும். அந்தச் சிங்கம் இந்த வீரச்சிங்கமே! இந்தச் சிங்கத்துக்கு இப்போது நாம், 'பாண்டிய கண்டனன்' என்ற விருதுப்பெயர் சூட்டிப் பெருமையுறுவோம்!''

சபையினக்கருகில் மலர்த் தட்டுக்களையும் மஞ்சள் கலந்த அரிசிக் குவியலையும் ஏந்திக்கொண்டு பணிப் பெண்கள் பலர் சுற்றி வந்தனர். மலர்களையும் அரிசியையும்

கைகொண்ட மட்டும் அள்ளி வீரநரசிம்மன் மீது பொழிந்தனர் சபையோர். மழையாகப் பெய்துகொண்டேயிருந்தனர். பைந்தமிழ்க்குமரன் மட்டிலும் ஆடாது அசையாது சிலையாக அமர்ந்திருப்பதைக் குலோத்துங்கர் கண்ணுற்றார். வீரநரசிம்மரின் புதல்விக்கு அந்தப் புலவரின் செய்கை கோப மூட்டவில்லை. அவனுடைய துணிவுதான் அவளை வியக்க வைத்தது.

''வாழ்க பாண்டிய கண்டனன்!' என்று முழுங்கினார் சக்கரவர்த்தி. எல்லாக் குரல்களுமே அந்தச் சொற்களை உற்சாகத்துடன் எதிரொலி செய்தன. பைந்தமிழ்க்குமரன் அதிலும் கலந்து கொள்ளவில்லை. சக்கரவர்த்தி அவனை மட்டும் கூர்ந்து நோக்குவதைப் பாமினி கண்டுவிட்டாள். அவளுக்கு ஏனோ இது அச்சத்தை விளைவித்தது. 'இத்தனை பேர்கள் நிறைந்த கூட்டத்தில் இவனுக்கு மட்டிலும் ஏன் இந்த மிடுக்கு. அதன் பலாபலனைத் துச்சமாக மதிப்பவன் போலிருக்கிறதே!'

கூட்டம் முடிந்து சபை கலைந்ததும் முதன் முதலில் எழுந்து நடந்தவன் அவன்தான். கண்ணுக்கு மறையும் வரையில் அவன் செம்பொன் மேனியையே பார்த்துக் கொண்டிருந்தாள் பாமினி.

மாளிகைக்குள் தீபங்கள் ஏற்றப்பட்டன. அகிற் புகை மீண்டும் மண்டபத்தில் நிறைந்தது. பைந்தமிழ்க் குமரனை அழைத்துச் செல்ல ஆளும் வந்துவிட்டான்.

''சக்கரவர்த்திகள் தங்களைச் சந்திக்க விரும்புகிறார்கள்.''

''தனிமையில் இருக்கிறார்களா?'' என்று கேட்டான் புலவன்.

''வீர நரசிம்மரும் கோசல நாட்டு இளவரசியாரும் சக்கரவர்த்திகளுடன் இருக்கிறார்கள்.''

பல்வேறு உணர்ச்சிகள் அலைமோத அதை முகத்தில் காட்டிக் கொள்ள விரும்பாதவன் போல், ஏடும் கையுமாக எழுந்து நடந்தான். அங்கு தனக்கு என்ன காத்திருக்குமோ

என்ற தவிப்பு ஒரு புறமும், எதுவாக இருந்தாலும் சரி என்ற முனைப்பு மறு புறமும் போராட அவன் அந்தப் பிரும்மாண் டமான அரண்மனையின் வசந்த மண்டபத்துக்குள் புகுந்தான்.

# 14. சொல் முனையும் வாள் முனையும்



அரண்மனைப் பூங்காவுக் குள்ளிருந்த வசந்தமண்டபத்தை நோக்கிப் பைந்தமிழ்க் குமரன் வந்து கொண்டிருந்த போது அங்கிருந்து எழுந்த மெல்லிய யாழிசை குளிர் தென்றலில் மிதந்து வந்து அவனை வரவேற்றது. நறுமண மலர்களின் சுகந்தமும் யாழின் இன்னிசையும் அவனது உள்ளத்தின் பரபரப்புக்கு அருமருந்தாக இருந்தன. தூண்டா மணி விளக்குகளின் ஒளி வெள்ளம் அந்த மண்டபத்தை அடுத்திருந்த செய்குளத்தில் பிரதிபலித்தது. அதை ஒரு மிதக்கும் தெப்பமோ என்று எண்ணி மதிமயங்கச் செய்தது.

நுழைந்தவுடன் பைந்தமிழ்க் குமரனுக்கு ஒரு கலைவாணியின் உருவம் தென்பட்டது. அதன் கரங்களில் மகரயாழைக் கண்டவுடன் அவன் தன்னையே ஒரு கணம் மறந்தான். மகர யாழ், மகரக் குழை, மகரக்கொடி முதலிய வற்றை மற்றவர்கள் எப்படி நோக்கினாலும் அவனுக்கு மட்டிலும் அவற்றில் தனியானதோர் உட்பொருள் தெரிந்தது. மீனாட்சியின் மைந்தனான மீனக்கொடியோனல்லவா? மீனின் உருவமோ, பெயரோ, சின்னமோ, கொண்ட எந்தப் பொருளும் அவனைத் தன்னிடம் ஈர்த்தது.

குலோத்துங்கர், வீரநரசிம்மன், இராஜராஜன், பாமினி ஆகிய நால்வருக்குமே கரங்கூப்பி வணங்கிவிட்டு அவனுக் காகப் போடப்பட்டிருந்த திண்டில் சாய்ந்தான் பைந்தமிழ்க் குமரன். எல்லோருமே மெத்தை விரிப்பின் மேல் திண்டுகள்

போட்டுச் சாய்ந்து கொண்டிருந்தார்கள். அமைதியும் இன்பமும் கலந்த சூழ்நிலைதான்.

யாழ் மீட்டிக்கொண்டிருந்த பாமினி அப்படியே தலையை வளைத்து அவனுக்கு அலட்சியமாகப் பதில் வணக்கம் செய்யவில்லை. ஒரு கணம் அதிலிருந்து எடுத்துக் கூப்பிய தாமரை மொட்டைப் போன்று தன் விரல்களைக் கூட்டி வைத்துக் கொண்டு இளநகை புரிந்தவாறே அவனை வணங்கினாள். பின்னர் தொடர்ந்து சிறிது நேரம் இசைத்து விட்டு யாழை எடுத்து ஒரு புறம் நகர்த்தி வைத்தாள்.

''அதற்குள் நிறுத்திவிட்டீர்களே!'' என்றார் குலோத்துங்கர்.

''கவிஞர் வந்திருக்கிறார். நெடுந் தொலைவிலிருந்து அவரை அழைத்து வந்திருக்கிறீர்கள், அவரைக் கேட்க வேண்டுமென்றல்லவா நாம் இங்கு கூடியிருக்கிறோம்?'' என்றாள் பாமினி.

குலோத்துங்கர் உடனே விருந்தினர்களைப் பற்றிய புகழுரைகளில் இறங்கி விட்டார். கோசல சாம்ராஜ்யத்தில் அவர்கள் பல கன்னடப் புலவர்களை வைத்து ஆதரிப்பதையும் கம்பரை வரவேற்று உபசரிப்பதையும் கூறினார். மேலும் இன்னிசை, ஆடல், பாடல் முதலிய கலைகளில் அவர்கள் கொண்டுள்ள ஈடுபாட்டை விவரித்தார்.

''இளவரசியின் அன்னையாரே ஆடல் பாடல்களில் வல்லவர். வீர நரசிம்மருடைய ரசிகத் தன்மைக்கு ஓர் எல்லை யில்லை. முக்கியமான விழாக்களின்போது சபையினர், புலவர்கள், கலைஞர்கள் முன்னிலையில் அரசியாரே வந்து இன்னிசை கூட்டி மகிழ்விப்பார்கள். நரசிம்மருடைய ரசிகத் தன்மைதான் இளவரசியாரையும் கலையார்வம் கொள்ளச் செய்திருக்கிறது. கம்பரின் கவிதையில்கூடச் சில பாடல்கள் இவருக்கு மனப்பாடம்.''

பைந்தமிழ்க் குமரன் மெய்யாகவே இப்போது நாணமுற்றான். கன்னட நாட்டுப் பெண்மணி கம்பரையும் கற்றிருக்கிறாள்!

''நீங்கள் புனைந்த கவிதைகளைப் பாடலாமே?'' என்றார் குலோத்துங்கர்.

தயக்கத்தோடு பைந்தமிழ்க் குமரன் பதிலளித்தான். ''கவிச்சக்கரவர்த்தி கம்பரிடமே கவி கேட்கும் பாக்கியம் பெற்ற புவிச் சக்கரவர்த்திகளின் முன்னால் எனக்கு எதுவுமே பேச நா எழவில்லை. திருவள்ளுவரிலும் சங்கப் பாடல் களிலும் ஓரளவுக்கு எனக்குப் பழக்கமுண்டு. நான் தமிழ்க் கற்று வருபவன். சுயமாகக் கவி புனைந்துபாடும் அளவுக்கு எனக்கு ஆற்றல் இல்லை.''

''இது அற்புதமான கற்பனை!'' என்று கூறிச் சிரித்தார் குலோத்துங்கர். ''வீரநரசிம்மரே! புலவர் இளைஞராக இருக்கிறாரே என்று எண்ணவேண்டாம். பாண்டிய நாட்டி லேயே இப்போது இவரைப்போல் சிறப்புமிக்க புலவர் வேறு யாரும் இல்லை. போகுமிடமெல்லாம் மக்கள் கூடுகிறார்கள். இவர் கேளாமலே இவரிடம் செல்வங்கள் வந்து குவிகின்றன. அரசர்கள் புலவர்களுக்குப் பரிசில் வழங்குவதுதான் உலக வழக்கம். இந்த இளைஞரோ பாண்டியருக்கே பரிசில்கள் வழங்கியிருக்கிறார்!''

இராஜராஜனுக்குச் சினம் பொங்கிக்கொண்டு வந்தது. குலோத்துங்கரின் சொற்களைக் கேட்டபோது பாமினியின் கண்ணிமைகள் வியப்பால் விரிந்ததை அவன் கண்ணுற்றான். கேவலம், ஒரு புலவனைப் புவியாளும் சக்கரவர்த்தி இப்படியா பாராட்டுவது?

''வள்ளுவருக்கு நான் கூறும் உரையில் மக்களுக்கு ஏதோ புதுமை தென்பட்டிருக்கிறது. அதனால் கூடுகிறார்கள்'' என்றான் புலவன்.

''அதையும் தவிர ஏதோ கூத்துப் பாடல் ஒன்று புனைந்திருக்கிறீர்களாம்! அதன் புகழ் பாண்டிய நாட்டின் எல்லையைக் கடந்து கங்காபுரி வரையிலும் பரவிவிட்டது. அதனாலேயே உங்களை அழைத்திருக்கிறேன்.''

நேருக்கு நேராக நெருக்கடியான கட்டம் வந்துவிட்டது புலவனுக்கு. பெரிய மலையொன்று இடம் பெயர்ந்து அவனை நோக்கி உருண்டு வருவதாகத் தோன்றியது. தப்பித்துக் கொள்ள வழியே தென்படவில்லை.

''அந்தக் கூத்துப் பாட்டு என் உணர்ச்சிக் கொந்தளிப்பில் பிறந்த ஒன்று. கவி நயமோ, சொல்லழகோ, மற்ற உயர்ந்த கவிதைகளுக்குரிய தன்மையோ அதில் இருக்காதென்று அஞ்சுகிறேன். போர் வீரன் ஒருவன் தன் வாழ்வில் நிகழ்ந்த பெருந் துன்பத்தை என்னிடம் கூறினான். அந்தத் துன்பத்தின் உறுத்தல் தாங்காது பாடினேன். மேலும் கூத்தாக நடிப்பதற்கென்றே பாடியது அது.''

''தனியாகவும் அதைப் பாடலாமல்லவா?'' என்று கேட்டாள் பாமினி.

''இந்த அமைதி நிறைந்த இனிமையான சூழலுக்கு அந்தத் துன்பியல் பாடல் அவ்வளவு ஏற்றதாக இராதோ எனத் தயங்குகிறேன்.''

''வாழ்க்கையின் துன்பம் கவிதையாக மாறும்போது அது கற்போருக்கு இன்பந்தானே?'' என்று கேட்டாள் பாமினி. ''இராம காதையிலும் துன்பியல் கட்டங்கள் நிறைந்திருக்கின்றனவே! இராவணன் சீதையைத் தூக்கிச் செல்லும்போது சீதை கதறும் மொழிகளைக் கேட்டால் கல்லும் கரைந்து உருகி விடுமே!''

புலவன் மேலும் தயங்கினான். ஒருவேளை கேட்போரின் மனமே அதனால் புண்படக் கூடுமென்றும், அந்த இடத்தில் பாடக்கூடிய பாடலாக அதைத் தான் கருதவில்லையென்றும் மருகினான். அவன் மறுக்க மறுக்க மற்றவர்களின் பிடிவாதம் அதிகரித்தது. வீரநரசிம்மரே குறுக்கிட்டு, ''உங்கள் பாடலுக்கு யாரையும் புண்படுத்தும் ஆற்றல் இருக்குமானால் அதுவே ஒரு வெற்றி!'' என்று கூறிப் பாடத் தூண்டினார்.

பைந்தமிழ்க் குமரனுக்கு மனப்பாடமாகிவிட்ட கூத்து அது. அங்கயற்கண்ணி அம்மையை நினைத்துக்கொண்டு

கணீரென்று குரலில் தொடங்கினான். வெண்கலத்தின் கிண்கிணிநாதம் போன்ற அவனுடைய குரல் ஒலி சொல்லுக்கும் பொருளுக்கும் உணர்ச்சிக்கும் ஏற்பப் பலவகை இந்திரஜாலங்களைப் புரியத் தொடங்கிவிட்டது.

முதலில் பாண்டிய நாட்டின் குறிஞ்சி நிலத்து இளவேனிற் காட்சி அழகு கேட்போரின் கண்முன்னே விரிந்தது. மலைமுகட்டில் மேகங்கள் தவழ்ந்து ஊசி முனை களைப் போல் குளிர்ச்சாரலை உதிர்க்கும் மாலைப்பொழுதில் தலைவன் தலைவியைச் சந்திக்கிறான். தொலை தூரத்தில் வரும் தலைவியின் அழகு, அவள் நெருங்கியவுடன் அவளது விழிகளின் தோற்றம், ஒருவரிடம் ஒருவரது உள்ளம் நழுவிவிழும் இயல்பு- இவ்வளவையும் அவன் பாடிக்கொண்டு வந்தான். கயல்விழியாகிய கூத்துடைத் தலைவி அவன் பாடப்பாட அவன் இதய அரங்கிலே சொல்லுக்குச் சொல் அபிநயம் பிடித்துவந்தாள். பைந்தமிழ்க் குமரன் தன்னையே மறந்து விட்டான். கண்கள் எங்கோ நிலைத்திருக்க தலைவியாம் கயல்விழியின் உணர்ச்சி பாவங்களை ரசித்தவண்ணம் பாடுவது போல் அவன் அநுபவித்துப் பாடினான்.

''ஆஹா! ஆஹா!'' என்று உற்சாகமாய்க் கூவினார் குலோத்துங்கர். வீரநரசிம்மனுக்கோ குலோத்துங்கர் இந்த வயதிலும் சிருங்கார ரசக் கவிதைகளை இவ்வளவு குதூகலத்தோடு அநுபவிக்கிறாரே என்று வியப்பு! இராஜராஜன் பாடலால் உந்தப் பெற்று அடிக்கடி பாமினியை ஏக்கத்தோடு நோக்கினான். பாமினியின் விழிகள் கிறங்கியிருந்தன. கவிதை மதுவுண்ட தேன் வண்டு தன்னை மறந்து ரீங்காரம் செய்வது போல், மகர யாழை எடுத்து வைத்துக்கொண்டு, கவிஞனின் குரலுக்கும் சந்தத்துக்கும் ஏற்ப மீட்டத் தொடங்கி விட்டாள்.

பாட்டுடைத் தலைவனுக்குத் திருமண நாள் நிச்சயமாகி விடுகிறது. அவர்கள் தங்களது இன்பம் நிறைந்த எதிர்

காலத்தைக் கனவு காணுகிறார்கள். திடீரென்று போர் முரசம் அதிர்கிறது. காலமெல்லாம் அவனுக்காகக் காத்திருப்பதாகவும் காலன் அவனைக் கொண்டு சென்றாலும் கன்னி விரதம் பூண்டு அவனை நெஞ்சில் வளர்ப்பதாகவும் கூறுகிறாள் தலைவி. போர் வெறியர்களான இரு பெரும் அரசர்களுமே இது கேட்டு உருகிவிட்டனர்.

கடைசியில் பயங்கரமான அந்தத் துன்பியல் கட்டம் வந்தது. பகை நாட்டு வெறியனிடமிருந்து தனது நெறியைக் காத்துக் கொள்ளத் தலைவி படாதபாடுபடுகிறாள். கண்ணனை, ராமனை, தன் தலைவனைக் கூவி அழைத்துப் புலம்புகிறாள். - பலன்?

குலோத்துங்கரின் இரத்தம் கொதித்தது. சோழ வெறியன் ஒருவனுடைய செய்கையென்பதால் அந்தக் கொதிப்பா? அல்லது அதையே ஒருவன் தமக்கு எதிரிலேயே பாடத் துணிந்துவிட்டானே என்ற கொதிப்பா? வீரநரசிம்மனுக்கும் அவருடைய புதல்விக்கும் முன்னால் இப்படியோர் எரிமலை வெடிக்கும் என்றே அவர் எதிர்பார்க்கவில்லை போலும்!

பாமினியின் கண் முத்துக்கள் சிதறின. அவளது உடல், உள்ளம், உயிர் மூன்றிலும் தீப்பற்றிக் கொண்டு விட்டது. தான் மூர்ச்சித்து விழுந்தால் கவிஞனுக்கு ஏதும் நேர்ந்து விடுமே என்பதற்காக அவள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முயன்றாள்.

அவளுடைய நிலையைக் கண்டவுடன் திடீரென்று பாட்டை நிறுத்தினான் கவிஞன். தலைவி, தலைவனின் முறையீட்டைக் கேளாது நெருப்பில் தாவி வீழ்ந்ததுடன் நிறுத்திக் கொண்டான். போர் வீரன் செய்யும் வீர சபதத்தைப் பாடினால், பாடி முடிப்பதற்குள் தனது தலை கழுத்தில் தங்காது என்பது அவனுக்குத் தெரியும்.

வசந்த மண்டபமே நெருப்பு மண்டபமாக மாறியது. ஒவ்வொரு தூண்டாமணி விளக்குமே ஒவ்வொரு தீப்பந்த மாக மாறிப் பொங்கியது. ஆவேசம் வந்து இறங்கியவன் போல் புலவன் செயலிழந்து போனான்.

''இது கூத்தாக வேறு நடக்கிறதோ?'' என்று தம்மை அடக்கிக் கொண்டு கேட்டார் சக்கரவர்த்தி. ''யாருடைய கூத்துக்குழு அது?''

''கயல்விழி என்ற பாணர் குல மங்கை!'' என்றான் புலவன்.

சரேலென்று வாளை உருவிக்கொண்டு அவன் முன்னே பாய்ந்து வந்தான் இராஜராஜன். ''கயல்விழி கதை சொல்லித்தான் நீ இதைப் பாடினாயா?''

''இல்லை. ஒரு வீரன் கூறினான்; நான் பாடினேன்; அவள் நடிக்கிறாள்.''

தந்தையும் விருந்தினர்களும் அருகிலிருக்கிறார்களே என்பதையும் மறந்து அவன் வாளை வெறியோடு ஓங்கினான். குலோத்துங்கர் அவமானத்தால் வெலவெலத்துப் போனார். பாமினி ஓடிவந்து இராஜராஜனின் கரத்தை இறுகப் பற்றினாள். வாள் கீழே நழுவி விழும் வரையில் அவள் தன் பிடியைத் தளரவிடவில்லை.

''சோழ சாம்ராஜ்யத்தின் கவிதா ரசனை மிக அற்புதமாக இருக்கிறதே! இப்படியும் புலவருக்கு இங்கு பரிசளிக்கும் வழக்கம் உண்டு போலும்!''

அவளுடைய சொற்களாகிய கூர்வாள் இப்போது சக்கரவர்த்தியின் இதயத்தில் பாய்ந்தது. புலவனோ அணுவளவும் அதிர்ச்சியுறாது புன்னகை செய்தான். வாள் முனை தனது நெஞ்சுக்கே வந்த போதும் அஞ்சாமல் நகைத்த அந்தப் புலவனின் போக்கு அவளைத் திகைப்புறச் செய்தது.

# 15. புலவனின் கதி?



**பை**ந்தமிழ்க் குமரனுடைய பாடல்கள் சக்கரவர்த்திக்குக் கொடுத்த வேதனையைவிட இளவரசனின் குறுக்கீடுதான் குலோத்துங்கருக்குத் தலை இறக்கம் தந்துவிட்டது. தலை இருக்கும் போது வாலாடலாமா? தந்தை அமைதியாக இருக்கும் போது மைந்தனுக்கு ஏன் இந்த ஆவேசம்? விருந்தினர்களுக்கு முன்னிலையில் இப்படிப் பண்பும் கட்டுப்பாடுமின்றி நடந்துகொண்டால் அவர்கள் என்ன நினைப்பார்கள்?

''தந்தையின் சொல்லைக் காப்பாற்றத் தனயன் முடி துறந்து பதினான்கு ஆண்டுகள் கானகம் சென்ற கதையைக் கம்பர் இந்த நாட்டிலிருந்து கொண்டு எப்படித்தான் எழுதினாரோ!'' என வியப்படைந்தாள் பாமினி. வீரநரசிம்மனுக்கு அப்போதே இராஜராஜனின் தலைமையில் நடக்கப் போகும் எதிர்காலத்து ஆட்சியில் சந்தேகம் வந்து விட்டது. தந்தைக்கோ, தவைருக்கோ கட்டுப்படாதவன், தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தப் பழகாதவன்,-எங்ஙனம் இந்த மாபெரும் சாம்ராஜ்யத்தைக் கட்டியாளப் போகிறான்?

இராஜராஜனின் இந்தக் குறுக்கீடு நாளுக்கு நாள் ஆட்சிப் பொறுப்பு நடவடிக்கைகளிலும் மிகுந்து கொண்டே வந்தது. பொறுப்பு முழுவதையுமே சக்கரவர்த்தி அவனிடம் கொடுத்துவிடச் சித்தமாக இருந்தார். கடமைகளை உணராதவனிடம், அவற்றுக்காகத் தன்னைப் பழக்கிக் கொள்ள விரும்பாதவனிடம், முயற்சிகள் செய்யாதவனிடம், உழைத்துத் தேறாதவனிடம் எப்படிப் பொறுப்பைக் கொடுப்பது? நாடாள்வது என்பது தன்னடக்கமற்றவர்கள் செய்யக் கூடிய வேடிக்கை விளையாட்டல்லவே!

குலோத்துங்கருக்கு இப்போது தம் கௌரவத்தையும் தம் வாரிசின் மதிப்பையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் வந்துவிட்டது.

''இராஜராஜா!'' என்று மெல்லிய குரலில் அவனை அன்போடு அழைத்தார். கண்களால் அவனுக்கு, 'நான் சொல்வதைக் கேட்டுக் கொள்; எதிர்த்துப் பேசாதே?' என்பது போல் கட்டளையிட்டார். பிறகு கூறினார்: ''சோழ சாம்ராஜ் யத்தின் மீது உனக்குள்ள ஆழ்ந்த பற்றுதல் ஆவேசமாக மாறி வருகிறது. சாம்ராஜ்யத்து வீரர்களில் யாருமே இப்படி நடந்து கொண்டிருக்க மாட்டார்கள் என்று மெய்யாகவே நீ நம்புகிறாய். யாரோ கூறிய புனைந்துரையைக் கேட்டு கவிஞர் உணர்ச்சி வயப்பட்டுப் பாடியிருக்கலாம். அது கவிஞரின் தவறல்லவே? அதற்காக நமது அழைப்பில் வந்திருக்கும் அவர் மீது சினங்கொள்ளலாமா?''

சாதுரியமான மொழிகளைக் கூறி நிலைமையைச் சீர் செய்ய முயன்றார் சக்கரவர்த்தி.

''தயைசெய்து சக்கரவர்த்திகள் என்னை மன்னித்தருள வேண்டும்'' என்றான் பைந்தமிழ்க்குமரன். ''இது புனைந்துரை யல்ல. பல நிகழ்ச்சிகள் இப்படி நடந்திருக்கின்றன. அதில் ஒன்றுதான் இந்தக் கற்பனைக்கு வித்து. மேலும், பொய்மைக்கு உள்ளொளி பாய்ச்சும் தன்மை கிடையாது. சத்தியத்தின் கையில் நான் ஒரு கருவியாக இருந்து இதைப் பாடியுள்ளேன்.''

''நிகழ்ச்சி மெய்யாகவே இருந்து விட்டால்தான் என்ன?'' என்று கேட்ட குலோத்துங்கர், ''போர்க்காலங்களில் இப்படியெல்லாம் தவறுகள் நடைபெறுவது இயல்புதான்'' என்றார்.

''முற்காலத்திலேயே பாரதப் போரிலும் பல அதர்ம மான போர்முறைகள் கையாளப் பெற்றிருக்கின்றன. அவை யெல்லாம் போரின் வெற்றிக்காக நடைபெற்ற அதர்மங்கள். ஆனால் பாண்டிய நாட்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகளுக்கும்

போருக்கும் சிறிது கூடத் தொடர்பில்லை. இராவணன் கூடச் சீதையைப் பின் தொடர்ந்து சென்றானே தவிர, அழிக்கத் துணியவில்லை'' என்றான் பைந்தமிழ்க்குமரன்.

'பாண்டிய கண்டனன்' என்று விருதுப் பெயர் சூடிக் கொண்டிருக்கும் வீரநரசிம்மனுக்கும் இந்த உண்மைகள் தெரிந்திருக்க வேண்டும் என்பதற்காகவே, தனக்கு அதனால் வரக்கூடிய இன்னல்களையும் பொருட்படுத்தாது, அவன் மெய்கூறி வாதிட்டான். போர்களும் சரி, அதன் வெற்றி தோல்விகளும் சரி, முதலில் மனிதர்களின் சிந்தனைகளில் உருவாகின்றன என்பதை அவனும் உணர்ந்தவன்.

''புலவர்கள் குறுகிய நாட்டுப் பற்றுக் கொண்டவர் களாக இருப்பதைவிட, உலகத்துக்கே உரிய பரந்த பண்பு கொண்டவர்களாக இருப்பதே மேல். பாண்டிய நாட்டுப் புலவராகிய உங்களை அழைத்துக் கோசல சாம்ராஜ்யத்து வருங்காலச் சக்கரவர்த்திகள் முன்பு சோழ சாம்ராஜ்யம் இப்போது பாடச் செய்திருக்கிறது'' என்றார் குலோத்துங்கர்.

''இந்தப் பரந்த பண்புக்காக நான் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். ஆனால் என் கவிதையும் குறுகிய நோக்கம் கொண்டதல்ல. உலகில் எங்குமே இதுபோன்ற தீமை நிகழக்கூடாது என்ற பொதுவான பண்பு நிலைக்கவே பாடினேன்.''

''இளம் புலவர் வாதத் திறமையிலும் வல்லவராக இருக்கிறார்'' என்று கூறி நகைத்தார் சக்கரவர்த்தி. ''கவிஞரே! உங்களைச் சோழ நாட்டிலேயே தங்கச் செய்து கௌரவிக்க வேண்டுமென்ற ஆவலால்தான் இங்கு வரவழைத்திருக் கிறேன். என் காலத்துப் புலவர்கள் என்போல் வயதிலும் முதிர்ந்தவர்கள். வருங்காலத்தில் இராஜராஜனுடைய சபையை அலங்கரிக்கும் வகையில் உங்கள் நட்பு வளர வேண் டும். இளவரசனோடு நீங்கள் வள்ளுவரின் பொருளதிகாரத் தையும் கம்பர் கவி இன்பத்தையும் அளவளாவி மகிழலாம். கம்பரை நீங்கள் இருவருமே கற்றுச் சுவைக்கலாமே?''

குலோத்துங்கர் ஓர் அம்பெய்தி இரு பறவைகளை வீழ்த்தலாம் என்று முன்பே திட்டமிட்டிருந்தார். புலவனைப் பாண்டிய நாட்டிலிருந்து வெளியேற்றுவதோடு அவனைத் தம்முடைய குமாரனுடன் பழகவிட்டு அவனை ஆட்சிப் பொறுப்புக்காகப் பழக்க வேண்டும் என்பதும் அவர் எண்ணம். வள்ளுவரின் பொருளதிகாரம் பயின்று அதன்படி நடந்தால் எந்த நாட்டையும் கட்டிக்காத்து ஆட்சி செய்து விடலாமே!

''எனக்கு அது மிகப் பெரிய வாய்ப்பு. ஆனால் புலவர்களின் எண்ணங்கள் நிறைவேறுவது அவர்களைப் பாராட்டும் தன்மையையும் பொறுத்திருக்கிறது. எந்தக் கணத்தில் நான் என் உயிரை இழக்க நேரிடுமோ என்ற அச்சத்தோடுதான் இளவரசரோடு அளவளாவ வேண்டும்.''

தன்னுடைய சிரிப்பை அடக்கிக் கொண்டாள் பாமினி. அச்சமென்பது அணுவளவாவது இருந்தால் இப்படித் துணிவுடன் கவிஞன் பேசியிருக்க மாட்டான் என்பது அவளுக்குத் தெரியும். 'கவிப் பழக்கமோ கற்பனைகளைப் படித்து இன்புறும் தகுதியோ இல்லாத நெடுமரம் இந்த இளவரசன் என்பதை எவ்வளவு அழகாகக் கூறுகிறார்!'

சக்கரவர்த்திக்குமே அது சுருக்கென்று தைத்தது. சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு, ''சரி, நாம் மீண்டும் சந்திப்போம்!'' என்று அவனுக்கு விடை கொடுத்து அனுப்பினார். புலவன் வெளியேறுவதற்குக் காத்துக் கொண் டிருந்தவனைப் போல் அதை அடுத்து இராஜராஜனும் அங்கிருந்து கிளம்பினான். இராஜராஜன் ஏதாவது தன்னிச்சையாகச் செய்துவிடக் கூடும் என்ற உறுத்தலும் அவருக்கு எழுந்தது. ஆனாலும் அவரால் தடுக்க முடியாது; அவன் அவரை மீறிப் போய்க் கொண்டிருந்தான்.

''இந்த இளைஞன் ஒரு பயங்கரமான புரட்சிக்காரன்'' என்று வீரநரசிம்மனிடம் தொடங்கினார் சக்கரவர்த்தி. பாண்டிய நாட்டில் அவன் செய்து வந்த செயல்களை மிகைப்படுத்திக் கூறிவிட்டு, ''பாண்டிய நாட்டு மக்களையே நம் மீது திருப்பிவிடக் கூடிய ஆற்றல் பெற்றவன்; தங்

களுடைய விருதுப் பெயரைக் கேட்ட பிறகுதான் அவனுக்கு நம்முடைய உறவும் ஆற்றலும் விளங்கியிருக்கும்'' என்றார்.

வீரநரசிம்மனால் இப்போது குலோத்துங்கரைப் புரிந்து கொள்ள முடிந்தது.

அன்றைக்கு இரவில் பாமினிக்கு தன் தந்தையுடன் தனித்துப் பேசுவதற்குச் சிறிது பொழுது கிடைத்தது. ''இங்கு வந்ததிலிருந்து சக்கரவர்த்திகளின் பெருந்தேவியாரும் மற்ற அரண்மனைப் பெண்டிரும் பேசுவதைப் பார்த்தால் எனக்கொரு சந்தேகம் எழுகிறது'' என்றாள்.

*''என்ன!''*

*''இந்த நாட்டுச் சிம்மாசனத்தில் நான்தான் வருங் காலத்தில் இளவரசரோடு உட்காரப் போகிறவள் போல் பேசிக் கொள்கிறார்கள். அரண்மனையில் மற்றப் பெண்டிர்கள் பேசுவதோடு நிற்கவில்லை. இளவரசரை மணந்து கொண்டவரே என்னைத் தமக்குத் தங்கையாக வந்து விடும்படி வற்புறுத்துகிறார்!''*

குலோத்துங்கர் தம்முடைய இராஜதந்திர வலையை அந்தப்புரத்துக்குள்ளும் அழகாகத்தான் வீசி வைத்திருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டார் வீரநரசிம்மர்.

*''அதனாலென்ன? நம்முடைய உறவும் சாம்ராஜ்ய உறவும் ஒன்றாக வளர்வது நல்லதுதானே! நடக்கப்போவது எதுவோ, அதைக் கூறிப் பரிகாசம் செய்கிறார்கள் பெண்கள்.''*

*''நடக்கப் போவதா?''* விழிகளை உருட்டி விழித்தாள் பாமினி. *''உண்மையாகவே நம்புகிறீர்களா?''*

அவர் நம்பவில்லை. யோசனையில் தீவிரமாக ஆழ்ந்து விட்டார். பிறகு வேறு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவர் போல், ''அவர்களிடம் மறுத்துப் பேசி அவர்கள் மனத்தை இப்போது நீ புண்படுத்த வேண்டாம்; நானும் உன் விருப்பத்துக்கெதிராக உன்னை வற்புறுத்தவில்லை. இது இரகசியமாக இருக்கட்டும்'' என்றார்.

அன்று இரவெல்லாம் ஒரே இன்பக் கனவுகளில் திளைத்துக் கொண்டிருந்தாள் பாமினி. இராஜ ராஜனைப் பற்றி அவள் தந்தை ஒரு முடிவுக்கு வந்துவிட்டதில் அவளுக்கு அளவற்ற ஆனந்தம். சோழ சாம்ராஜ்யத்துக்கு வந்து ஒரு சில தினங்களுக்குள்ளாகவே அவள் அவனைப் புரிந்து கொண்டு விட்டாள். நாற்பது வயதாகிய அவள் தந்தை அவருடைய தந்தையாகிய வல்லாள தேவரிடம் இன்னும் எவ்வளவு அன்போடு பயபக்தியோடு நடந்து கொள்கிறார். இராஜராஜனோ...?...

வீரநரசிம்மருக்கே அவனைப்பற்றி உயர்வான எண்ணம் ஏற்படவில்லை என்பதை நன்கு கண்டு கொண்டாள் கோசல நாட்டு இளவரசி. கூண்டுக்குள்ளிருந்து விடுபட்ட வண்ணக்கிளியின் பரவச உணர்ச்சி அவளுக்கு.

முதல் நாள் இரவே புலவன் தங்கியிருந்த மாளிகையை பார்த்து வைத்திருந்தாள் பாமினி. மேல் மாடத்திலிருந்து பார்த்தால் அது நன்கு தெரிந்தது. பொழுது புலர்ந்தவுடன் காலைக் கதிரொளியில் உலவ விரும்பியவள் போல் அவள் மாடத்தின் சுவர் ஓரமாக நடைபயின்று கொண்டிருந்தாள். விழிகள் புலவனின் மாளிகைப் பக்கம் அடிக்கடி திரும்பின.

அப்போது புலவனின் மாளிகையில் ஒரு திடுக்கிடத் தக்க நிகழ்ச்சி நடந்தது. அதைக் கண்டு பதறினாள் பாமினி.

மாளிகையின் வாயிற் கதவோரமாக வேல் தாங்கி நின்ற இரு வீரர்கள் புலவன் வெளியில் வந்தபோது தங்கள் வேல் களைக் குறுக்கே நீட்டி அவனை வழி மறித்து நிறுத்தினார்கள். புலவன் அவர்களிடம் ஏதோ வாதிட்டுப் பார்த்தான். பலனில்லை. அவர்கள் அவனை வெளியில்விட மறுத்து விட்டனர்.

புலவனுக்கு இனி அது மாளிகையில்லை; சிறைச் சாலை. பாமினிக்கு எல்லாமே விளங்கிவிட்டது. ஆயிர மாயிரம் எண்ணங்கள் அவளிடம் அந்த ஒரு வினாடியில் அலைமோதின. எந்த எண்ணத்தின் படியும் அவளால்

அவனுக்கு உதவ முடியாது போல் தோன்றியது. அவள் விருந்தினராக வந்தவள். அவள் தந்தையோ பிறர் நாட்டு நடப்புக்களில் தலையிட மாட்டார். அவள் தலையிட்டாலும் அவர் வருந்துவார் - புலவனின் கதி?

# 16. கூண்டில் நுழைந்த கிளி



**பா**மினிக்குப் பைந்தமிழ்க் குமரனின் நிலை விளங்கி விட்டது. கவிபாடும் குயிலை கூண்டுக்குள் அடைத்து விட்டார்கள். அது தன்னிச்சையாக வெளியில் பறந்து செல்ல முடியாதபடி கட்டுக் காவலும் ஏற்படுத்தி விட்டார்கள். அரச குலத்தில் பிறந்து வளர்ந்த பாமினிக்கு, வீணாக உணர்ச்சி வயப்பட்டுப் புலவனிடம் அனுதாபம் கொள்வதால் ஏற்படும் அபாயங்கள் நன்கு தெரிந்திருந்தன. ஆகவே அவள் அவசரத்தில் எதையும் செய்ய முற்படவில்லை.

பிறர் அறியாதவாறு அந்த மாளிகையைக் கண் காணித்து வந்தாள். ஒவ்வொரு நாள் இரவுப் பொழுதும் கழிவதுதான் வேதனையைத் தந்தது. இரவில் ஏதேனும் புலவனுக்குத் தீங்கு நேர்ந்துவிட்டால்? பொழுது விடிந்த பின்னர் அவனுடைய தோற்றத்தைச் சாளரத்தின் அருகில் கண்டபோதுதான் அவளுடைய உயிர் அவளிடம் திரும்பி வந்தது.

புலவன் சிறைப்பட்டிருக்கும் செய்தி வெளியில் தெரியாதபடி காரியங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. பணியாட்கள், உணவுகொண்டு செல்வோர், காவலர்கள் முதலியோர் காலம் தவறாது அங்கு சென்றனர். உபசாரங்கள் குறைவில்லாமல் அவனுக்கு அங்கு நடைபெற்று வந்தன. அவனை மட்டிலும் வெளியில் காணமுடியவில்லை.

சாளரங்களைத் தவிர எல்லாக் கதவுகளும் பெரும் பொழுது மூடிக் கிடந்தன.

வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்த பாமினி ஒரு நாள் மாலையில் தனித்து வெளிப்புறத்தில் உலவ முற்பட்டாள். எதேச்சையாக அங்கு வந்தவள் போல் மாளிகையின் படிகளில் ஏறி உள்ளே வந்தாள். காவலர்கள் ஏது செய்வதென்று தெரியாது தவித்தார்கள். அவளுக்காகக் கதவைத் திறந்துவிடவும் அவர்களுக்குத் துணிவில்லை; அவளுக்கு மறுப்புச் சொல்லவும் நா எழவில்லை.

''புலவர் தனிமையில் இருந்து கம்பரின் கவியை ஆராய்ந்து வருகிறார். அதனால்தான்...''

''அதனால்தான் நான் அவரைக் காண விரும்புகிறேன். அவரை நான் வெளியில் செல்ல அனுமதித்து விட மாட்டேன்!'' என்று நகைத்தவாறே கூறிக்கொண்டு வாயிற் கதவைத் தள்ளித் திறந்தாள் பாமினி. காவலர்கள் அவளைத் தடுக்கவில்லை. அவர்களில் ஒருவன் அடுத்தவனை எச்சரித்து விட்டு எங்கோ விரைந்து சென்றான்

உள்ளே ஆசனத்தில் அமர்ந்தவாறே கம்பரின் கவிச் சுவையில் மூழ்கி வாய்விட்டுப் பாடிக் கொண்டிருந்த பைந்தமிழ்க் குமரனுக்கு வேறெந்த நினைவுமில்லை. கதவைத் திறந்த சத்தமோ உள்ளே இளவரசி நுழைந்ததோ அவனுக்குத் தெரியாது. புலவனைக் கவனித்தாள் பாமினி. அவன் உடலில் இளைப்போ முகத்தில் சோர்வோ தென்படவில்லை. தான் சிறைப்பட்டவன் என்ற உணர்வே இல்லாதவன்போல் அவன் அநுபவித்துப் பாடிக் கொண்டிருந்தான். மாளிகைக்குள் குபீரென்று எழுந்த முல்லைமணமும், சண்பக மணமும் அவனது இதயத்தில் புகுந்ததென்றாலும் எங்கிருந்து மணம் வருகிறது என்று அவன் நினைத்துப் பார்க்கவில்லை.

மெல்லிய குரலில் தனக்குத்தானே பாடி இன்புற்றுக் கொண்டிருந்தான்.

**கானில் உயர் கற்பகம்**
**உயிர்த்த கதிர்வல்லி**
**மேனி நனிபெற்று**
**நிளைகாமம் நிறைவாசத்**
**தேனின் மொழிஉற**
**யினிய செவ்வீ நனிபெற்றோர்**
**மானின் விழிபெற்று**
**மயில் வந்ததென வந்தாள்!**

'கலீர்' என்ற ஒரு சிரிப்பொலி எழவே தலைதூக்கிப் பார்த்தான் செந்தமிழ்க் குமரன்.

''நான் வருவது என்ன, பஞ்சவடியில் வஞ்சமகள் வருவதுபோலவா இருக்கிறது? சூர்ப்பனகையின் வரவைப் பாடுகிறீர்களே...!''

''மன்னிக்க வேண்டும் இளவரசி!'' என்று உண்மையாகவே பதற்றமடைந்து கூறினான் இளைஞன். ''தயவுசெய்து மன்னித்துக் கொள்ளுங்கள். தங்கள் வரவை நான் கவனியாது இருந்து விட்டேன்.''

தான் செய்யாத ஒரு தவறுதலுக்கு அவன் மெய்யாகவே வருந்தினான். அவனுடைய மனப்பண்பு அவளுக்கு மகிழ்ச்சியூட்டியது. புலவனுக்கோ கன்னட நாட்டுப் பெண்மணிக்குக் கம்பரிடம் இவ்வளவு ஈடுபாடு இருந்தது அதிசயமாகத் தோன்றியது.

''கம்பரால் வஞ்ச மகளைக்கூட அழகுணர்ச்சியோடு தான் வர்ணிக்க முடிகிறது, இல்லையா? வஞ்சமகளை அறிமுகப் படுத்தும்போதுகூட அவர் கரத்தில் தமிழ் கொஞ்சி விளையாடுகிறது. தேனருவியாய்ப் பொங்குகிறது.''

புலவனுக்கு அந்த இளம் நங்கையின் ஆர்வம் குதூகலத்தைக் கொடுத்தது. கம்பரின் கவியின்பமே பெண்ணுருக் கொண்டு அங்கு வந்திருப்பது போன்ற பிரமை அவனுக்கு. தான் படித்துக்கொண்டிருந்த சுவடியைக் கட்டி ஒரு புறம் வைத்தான். அடுத்தாற்போல் இருந்த ஆசனத்தில் துவண்டு விழும் முல்லைக் கொடியெனச் சரிந்தவாறே அமர்ந்திருந்தாள் அவள்.

பொதுவாக அவனிடம் பேசிவிட்டு, ''ஆமாம், மாளிகையைச் சுற்றிலும் கட்டுக் காவல் மிகுந்திருக்கிறதே, என்ன விஷயம்?'' என்று திடீரென்று கேட்டாள்.

''அப்படியா? எனக்குத் தெரியாதே!'' என்று அவளைப் போலவே ஏதுமறியாதவன் போல் பதில் அளித்தான். ''ஒருவேளை நான் பாண்டிய நாட்டுக் கவிஞன் என்பதால் என்னை மிகவும் பத்திரமாகப் பாதுகாத்து வருகிறார்கள் போலிருக்கிறது!''

கவலையோ கலக்கமோ இல்லாமல் எப்படி இவரால் கலகலப்பாகப் பேச முடிகிறது! அவள் மேலும் அவனுடைய செருக்குடன் விளையாட நினைத்தாள்.

''ஓ! தங்களைக் கண்ணேபோல் காக்கும் கண்ணிமைகளாக அவர்கள் நடந்துகொள்கிறார்கள் போலிருக்கிறது. அதனால்தான் கண்ணிமைகளைப் போன்ற இந்த மாளிகைக் கதவுகள் தாங்கள் உள்ளேயிருக்கும்போதே மூடிக் கொண்டிருக்கின்றன.''

''புலவனின் தனிமைக்கு இடையூறு விளைவிக்கக் கூடாதல்லவா? கம்பரின் ஏட்டுப் பிரதி ஒன்று கேட்டேன். அனுப்பி உதவியிருக்கிறார்கள். கவிஞருக்கும் எனக்கும் இடையே யாரும் குறுக்கிடக் கூடாதென்ற கவலை அவர்களுக்கு.''

''நான் குறுக்கிட்டுவிட்டேன் போலும்.''

''அது என் பாக்கியம்'' என்றான் கவிஞன். ''ஆனால் தங்களுக்கு எப்படி அனுமதி கிடைத்ததென்றுதான் எனக்கு விளங்கவில்லை.''

''கேட்கவில்லை; எடுத்துக்கொண்டு விட்டேன்.'' முத்துப்பல் வரிசை பளிச்சிட இளநகை புரிந்தாள் பாமினி. பின்னர் சற்றே தயங்கிவிட்டு, ''தங்களிடம் என் பாராட்டைத் தெரிவித்துத் தங்களிடம் ஒரு வேண்டுகோள் விடுத்துச் செல்லலாமென்றுதான் இங்கே வந்தேன்'' என்றாள்.

''வேண்டுகோள் எதற்கு? கட்டளையிடலாம்'' என்றான் புலவன்.

''தாங்கள் பாடிய கூத்துப் பாடல் என் உள்ளத்தை உருக்கிவிட்டது. உலகத்துப் பெண் குலத்தின் துயரம் முழுவதையுமே அதில் பிழிந்து கொடுத்துக் கேட்போரின் உள்ளத்தைப் பிழிந்து துயரம் பெருகச் செய்து விட்டீர்கள். அரண்மனைப் பெண்டிருக்கே கூட இந்தத் துன்பம் நேராது என்பது என்ன நிச்சயம்?''

''போர் என்றாலும் அதில் ஒரு நெறி வேண்டும்.''

''தங்களுடைய பாடலைக் கூத்தாகவும் நடிப்பதாகக் கூறினீர்களே, அந்தக் கூத்து எப்போதாவது எங்கள் தலை நகரத்தில் நடக்கச் செய்தால் நலமாக இருக்கும். அதோடு தாங்களும் ஒருமுறை துவார சமுத்திரத்துக்கு வந்தால் நானும் தந்தையாரும் பெருமகிழ்ச்சியடைவோம்.''

''தங்கள் அன்புக்கும் அழைப்புக்கும் மிகுந்த நன்றி'' என்று உளம் கனிந்த நன்றிப் பெருக்கோடு கூறினான் பைந்தமிழ்க் குமரன். ''இன் சுவையும் நளினமும் நிறைந்த நடனங்களைத்தான் தாங்கள் பெரும்பாலும் கண்டு களித்திருப்பீர்கள். இந்த வகைக் கூத்துக்கள் தமிழகத்தின் பழைமையைச் சார்ந்தவை. கொற்றவைத் தெய்வத்துக் கேற்ற ஆவேச நடனங்கள். இவற்றைப் பிறநாட்டு மக்கள் எந்த அளவுக்கு ரசிப்பார்களென்று கூற முடியாது.''

''தங்கள் பாடலிலும்தான் இன்சுவைக்கும் நளினத் துக்கும் குறைவில்லையே!'' என்று கூறியவாறு அவனுடைய விழிகளை நாணத்தோடு நோக்கினாள் பாமினி. அவள் முகம் சிவந்தது. ''கட்டாயம் இந்த அழைப்பைத் தாங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். எங்கள் நாட்டில் இதைப் போன்ற உபசாரங்கள் தங்களுக்குக் கிடைக்காதென்று தாங்கள் உறுதியாக நம்பலாம். கண்ணே போல் போற்றிக் கதவுகளைத் தாழிட்டுச் சிறையிட மாட்டோம்!''

கலீரென்று சிரித்துவிட்டான் பைந்தமிழ்க்குமரன்.

''தங்கள் அழைப்பை ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் தாங்கள் இந்த அழைப்பை நான் சிறைப்பட்டிருக்கும்போது தருகிறீர்கள்.''

பாமினியின் கண்கள் கலக்கமுற்றன.

''தங்களை இனி என்ன செய்வார்கள்?'' என்று கெஞ்சுவதுபோல் அவனிடம் கேட்டாள் பாமினி.

''ஏதும் எனக்குத் தெரியவில்லை. விருந்தினர் களாகிய தங்கள் தந்தையாரும் தாங்களும் இங்கு இருக்கும் வரையிலும் எனக்கு இந்த மாளிகை வாசம் உண்டு. உபசாரங்களும் நடைபெறும். பிறகு என்ன நேருமென்று கூற இயலாது. அது இளவரசரின் சித்தத்தைப் பொறுத்தது. பாதாளச் சிறைக்குள் காற்றும் கதிரொளியுமே புகுவதற்கு அஞ்சுமென நினைக்கிறேன்.''

''பாதாளச் சிறையா?'' -உள்ளங்கால் முதல் உச்சி வரை யிலும் ஒரு மின்னல் ஊடுருவியது போலிருந்தது பாமினிக்கு.

''இன்னொரு வேண்டுகோள்...''

''என்ன?'' என்றான்.

''தங்களைச் சிறைமீட்க என்னால் ஏதும் முடியும் என்று தாங்கள் கருதினால் அதைப் போன்ற மகிழ்ச்சி எனக்கு வேறெதுவுமில்லை.''

நன்றிப் பெருக்கால் இதயம் நிறைந்தது புலவனுக்கு. ''வேண்டாம், இளவரசி! தங்கள் அன்பே எனக்குப் பெருந் துணை. அதுவே போதும்'' என்று நெகிழ்ந்து கூறினான் புலவன்.

அப்போது வெளியே அதிர்ச்சி ஒலி கேட்டது. பெரிய சத்தத்துடன் வெளிக் கதவு திறந்தது. அடக்க முடியாத கோபத் துடன் வாயிலில் நின்று கொண்டிருந்தான் இராஜராஜன்.

''இளவரசி! தாங்கள் விரும்பியிருந்தால் புலவனைத் தங்களின் இருப்பிடத்துக்கே அனுப்பி வைத்திருப்பேனே!'' என்றான்.

"எதேச்சையாக நான் உலவிக்கொண்டிருந்தபோது சாளரத்தின் அருகில் இவர் கம்பரைப் படித்துக் கொண்டிருப் பதைக் கண்டேன். எட்டிப் பார்த்தேன். வேறொன்றுமில்லை."

கவிஞனிடம் விடைபெற்றுக்கொண்டாள் பாமினி. கதவுகள் மூடப்பெற்றன. சாளரத்தின் கதவுகளும் வாயிற் கதவுகள் பெற்ற அதே பேற்றைப் பெற்றன.

# 17. கூண்டைச் சிதைத்த குயில்



விழுப்பரையர் இந்த வாழ்வில் பெற்ற அனுபவங்கள் அவருடைய ஐம்புலன்களைக் கட்டிக் காக்கவும், ஏற்ற வழியில் அவற்றைப் பயன்படுத்தவும் அவருக்குக் கற்றுக் கொடுத்திருந் தன. மலையே பெயர்ந்து வந்தாலும் மனம் பெயராதவர்; எவ்வளவு துயரம் வந்தபோதும், சினமூட்டும் செயல்கள் நடந்தபோதும், தமது உணர்ச்சிகளை அவர் சிதற விடமாட்டார். குரலில் இனிமையும் சொல்லில் சுருக்கமும் அவருடன் பிறந்த பண்புகள். நல்ல சொற்களையே பேசிப் பழகியவர் அவர்.

அவரே இன்று உணர்ச்சி வசப்பட்டு விட்டார். குல சேகர பாண்டியரிடம் அவர் புலவனுக்கு நேர்ந்த இன்னலைக் கூறியபோது அவர் விழிகளில் அருவி பெருக்கெடுத்தது. குலோத்துங்கரைக் கடுசொற்களால் ஏசினார்.

"புலவர் பின்னால் நான் அனுப்பி வைத்த ஒற்றர்கள் வந்து கூறினார்கள். செய்திகளைக் கேட்ட பின்னர் என் உயிர் என்னிடம் இல்லை" விழுப்பரையரின் குரல் தழுதழுத்தது.

தம்முடைய மைந்தனைப் போரில் பறிகொடுத்தபோது கூட இந்த அளவுக்குக் கலங்கவில்லையே இவர்?

"அரசே! என் மைந்தனுக்கும் மேலாக நான் அவரை என் உள்ளத்தில் வைத்துப் போற்றி வருகிறேன். எவ்வாறாயினும் அவர் சிறை மீள வேண்டும். அவர் சிறை மீண்டாலே என்னுடைய உயிர் மீளும்."

குலசேகர பாண்டியர் தாமே ஓலைகளை எடுத்துத் தம் கரத்தாலேயே எழுதலானார். விழுப்பரையரின் துயரத்தை அவரால் தாங்க முடியவில்லை. குலோத்துங்கருக்கு உருக்கமான வேண்டுகோள் அந்த ஓலையில் இருந்தது.

முடிவாக அவர் குறிப்பிட்டிருந்தார்;

"சக்ரவர்த்திகளிடம் நான் தோல்வியுற்றபோது கூட இந்த நாட்டின் ஆட்சிப் பொறுப்பை வேண்டிப் பெற வில்லை. தியாகவிநோதராகிய தாங்கள் இதை எனக்கு அளித்துப் பெருமை தந்தீர்கள். இப்போது என் நாட்டையே கேட்டுப் பெறாத நான் தங்களிடம் அந்த இளம் புலவரைத் திருப்பிக் கேட்கிறேன். தாங்கள் வள்ளல்களுக்கெல்லாம் பெருவள்ளல். புலவர்களை ஆதரித்துக் காக்கும் புரவலர் களுக்குத் தாங்களே வழிகாட்டி. கடவுளையும் கவிஞனையும் ஒன்றாக மதிக்கும் நாட்டைச் சேர்ந்தவர்கள் நாம். தெய்வத்தின் சீற்றத்துக்குப் பாண்டிய நாடு இதனால் ஆளாகிவிடுமோ என்று அஞ்சுகிறேன். ஏனெனில் நான்தான் அவரை அங்கு அனுப்பி வைத்தேன்.

"புலவர்களின் செருக்கு நம்மால் ஏற்றுக் கொள்ள முடியாததாக இருக்கலாம். அதிலும் இவர் இளைஞர். தவறுகள் நேர்ந்திருக்காவிட்டால், தாங்கள் இந்தத் தண்டனை அளித்திருக்கமாட்டீர்கள். ஆனால் என் பொருட்டும், பாண்டிய நாட்டின் பொருட்டும் தாங்கள் அவரைத் திருப்பி அனுப்ப வேண்டுமென்று மன்றாடுகிறேன். குடிமக்களுக்கு இன்னும் செய்தி தெரியாது. தெரிந்தால் கூட்டமாகத் திரண்டெழுந்து தங்களிடம் விண்ணப்பிக்க வந்து விடுவார்கள். தங்களுடைய தியாகங்களிலெல்லாம் தலைசிறந்த தியாகமாக இது விளங்கட்டும்."

விழுப்பரையரே அந்த ஓலையுடன் நேரில் சென்று குலோத்துங்கரைச் சந்திப்பதாக ஒப்புக்கொண்டார். அம்பலக்கூத்தன் அப்போது மதுரையில் இருந்ததால் அவன் வாயிலாகக் கயல்விழிக்குச் செய்தி அனுப்பினார். ''எப்படியும் அவர் விடுதலை பெற்றுவிடுவார் என்ற நம்பிக்கையிருக்கிறது. கயல்விழியிடம் கவலைப்படாதிருக்கும்படி நான் கூறினேனென்று சொல். இந்தச் செய்தி வேறு யாருக்குமே தெரிய வேண்டாம். பத்துத் தினங்களுக்குள் மதுரைக்குத் திரும்பி விடுவேன். வந்தவுடன் செய்தி அனுப்புகிறேன்.''

அம்பலக்கூத்தனை அனுப்பிய பின்னர்தான் விழுப்பரையருக்கே தம் தவறு புலப்பட்டது. கயல்விழியிடம் இதைத் தெரிவிக்காமலே இருந்திருக்கலாம். அவருடைய மனநிலை அளவுக்கு மீறிப் பாதிக்கப்பட்டிருப்பதை அப்போதுதான் அவர் அறிந்தார். மதுரையிலிருந்து கங்காபுரிக்குச் சென்றடையும் ,வரையிலும் அவர் மனம் அவரிடமில்லை. 'இளவரசே!' என்று ஏங்கித் தவித்தது அவர் இதயம்.

குலோத்துங்கரைத் தனிமையில் கண்டு பேச வேண்டிய பணி விழுப்பரையருடையது. ஆகவே சபையில் அவரைச் சந்திக்காமல், அவர் பொழுதை அறிந்து அந்தரங்க மண்டபத்துக்குச் சென்றார். வெளிக் கூடத்தில் சிலர் காத்திருந்தனர். கண்டு பேசியவர்கள் ஒவ்வொருவராகத் திரும்பிக் கொண்டிருந்தனர்.

விழுப்பரையர் வந்திருக்கும் செய்தி எட்டியதும் அவசரமாக அவரை அழைத்துவரச் செய்தார் சக்கரவர்த்தி. சக்கரவர்த்திக்குச் சற்றுத் தொலைவில் சிறிதாக ஓர் ஆசனம் போடப்பட்டிருந்தது. ஓலையைப் பணிவுடன் குலோத்துங்கரிடம் கொடுத்துவிட்டு, அந்த ஆசனத்தில் அமர்ந்தார் விழுப்பரையர். சக்கரவர்த்தியின் முகம் வியப்புக் குறிகாட்டியது. அப்படி ஒரு நிகழ்ச்சி அங்கு நடைபெற்றதே தமக்குத் தெரியாதது போலவும், பாண்டியரின் ஓலையைக் கண்டு அவர் திகைப்படைவது போலவும் நடந்து கொண்டார்.

''உண்மையாகவே அந்தப் புலவன் இப்போது சிறையிலிருக்கிறானா? நான் ஒன்றும் அப்படிக் கட்டளையிட வில்லையே! எப்படிப் பாண்டியருக்கு இந்தத் தவறான செய்தி எட்டியது?''

''புலவரின் மாணவன் ஒருவன் அவரைக் கண்டு பேச முயன்றிருக்கிறான். காவலர்கள் அவனைத் தடுத்துவிட்டார் களாம். இளவரசர் அவரைச் சிறையிட்டிருப்பதாகவும் யாரும் அவரைக் காண முடியாதென்றும் திருப்பி விட்டார்களாம்.''

விழுப்பரையரும் வேண்டுமென்றேதான் இப்படிக் கூறிவைத்தார். சக்கரவர்த்தியின் நெற்றி சுருங்கியது. இளவரசனிடம் காவலர்கள் கூடக் கட்டுப்படவில்லை. இரகசியங்களை அலட்சியமாக வெளியிடும் அளவுக்கு அவர்கள் அவனிடம் நடந்து கொள்கிறார்கள்.

''புலவனின் போக்கு எனக்கே சினமூட்டியது. என்றாலும் அவனுடைய அறியாமையை நான் அவ்வள வாகப் பொருட்படுத்த வில்லை. ஆனால் அவன் இராஜ ராஜனின் மனத்தைப் பலர் முன்னிலையில் புண்படுத்தி விட்டான். அதற்காக இளவரசன் ஏதும் செய்திருக்கக் கூடுமென்று நினைக்கிறேன். எதற்கும் நான் தீர விசாரித்துப் பார்க்க வேண்டும்.''

''பாண்டியர் தங்களிடம் மிகவும் வேண்டிக்கொள்ள வேண்டுமென்று என்னைப் பணித்திருக்கிறார். குடி மக்களிடம் இன்னும் செய்தி பரவவில்லை.''

''அதிகாரிகள் விடுதியில் தங்கியிருங்கள். மீண்டும் நாளைக்குக் காலையில் என்னை வந்து சந்தித்தால் முடிவு சொல்கிறேன்'' என்று அவருக்கு விடை கொடுத்தார் சக்கரவர்த்தி.

சக்கரவர்த்தியின் அந்தரங்க விசாரணைகள் முடிந்தன. இரவில் உணவு முடிந்த பின்னர் இராஜராஜனைத் தம்மிடம் அழைத்தார் குலோத்துங்கர்.

''இன்று முடிக்கவேண்டிய செயலை நாளைக்கு முடிப்பது எப்படித் தவறாகுமோ அதேபோல் நாளைக்கு முடிக்க வேண்டிய செயலுக்கு இன்றே அவசரம் காட்டுவதும் தவறென்று உனக்குப் பன்முறை கூறியிருக்கிறேன். பொறுத்துச் செய்யவேண்டியதைப் பொறுத்துச் செய்வதே நல்லது. அந்தப் புலவன் நம்மைவிட்டு எங்கே ஓடிவிடப் போகிறான்?'' என்றார்.

''தங்களிடம் கூறிவிட்டுதான்...''

''கூறிவிட்டுச் செய்யவில்லை; செய்துவிட்டுக் கூறினாய்!'' என்று சீறினார் குலோத்துங்கர்.

''ஆனால் உன்னுடைய காவலர்கள் எந்த அளவுக்கு இரகசியம் காப்பாற்றுகிறார்கள், தெரியுமா? விருந்தினர்கள் இங்கு இருக்கும் வரையில் பொறுத்திருக்கும்படி கூறினேனே, கேட்டாயா? பாண்டிய நாட்டுக்கு உன்னுடைய இரகசியம் பறந்துபோய், அங்கிருந்து எனக்கு ஓலை வந்து விட்டது.''

அவன் பதிலளிக்கவில்லை.

''பொழுது புலர்ந்தவுடன் அவனைச் சிறைமீட்க வேண்டும்!'' என்று உறுதியோடு கர்ஜித்தார் சக்கரவர்த்தி.

''சக்கரவர்த்திகளே!'' எனப் பதறினான் இளவரசன்.

''உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தினால் அதுவே சிந்தனை தரும். கட்டுப்படுத்தாத உணர்ச்சிகள் நிந்தனை தரும். உன் செயலால் இப்போது நிந்தனை வந்துவிட்டது. பாண்டிய நாட்டிலிருந்து ஒரு கூட்டம் திரண்டு வந்து, அவனை விடுவிக்கும்படி குழப்பம் விளைவித்தால் எப்படியிருக்கும்? வீரநரசிம்மர் தான் நம்மையும் நம் ஆட்சியையும் பற்றி என்ன நினைப்பார்?''

''குற்றவாளி தண்டனை அடைந்திருக்கிறான்'' என்றான் இளவரசன்.

''அவனுடைய குற்றம் பெரிய குற்றம். அதற்கேற்ற தண்டனை இதுவல்ல. அதை எப்போது எப்படிச் செய்ய

வேண்டுமென்று பிறகு முடிவுசெய்வோம். காலையில் முதற் வேலையாக அவனை விடுவித்து என்னிடம் அனுப்பிவை. எனக்கு ஏதுமே தெரிந்ததாக இருக்கக்கூடாது!''

தனக்குள் முணுமுணுத்துக்கொண்டே வெளியேறி னான் இராஜராஜன். அவனுடைய அந்தப் பணிவற்றப் போக்குத்தான் குலோத்துங்கரை மிகவும் வருத்தியது. எண்ணம், சொல், செயல் எதிலுமே அவனுக்குப் பணிந்து பழகத் தெரியவில்லை.

மறுநாள் பொழுது புலர்வதற்கு முன்பே அந்த விருந்தினர் மாளிகையைச் சுற்றிலும் காவலர் கூட்டம் நிறைந்திருந்தது. பரபரப்பாக இருவர் இராஜராஜனை நோக்கி ஓடி வந்தார்கள். நடந்த நிகழ்ச்சியைச் சொல்வதற்கு அவர்களிடம் துணிவில்லை. காலைக் கதிரொளிக்காக மேல் மாடத்துக்கு வந்திருந்த பாமினியும் ஓட்டமும் நடையுமாக அந்த மாளிகையை நோக்கிச் சென்றாள்.

மாளிகைக் கதவு காவலர்களால் திறக்கப்பட்டிருந்தது. உள்ளே புலவனைக் காணவில்லை. மேல் சுவரின் அருகி லிருந்த பலகணியை ஒருவன் சுட்டிக் காட்டினான். அதன் வலிமை நிறைந்த இரும்புக் கம்பிகள் வளைக்கப் பட்டிருந்தன.

வீரர்கள் நால்வர் சேர்ந்து அடுத்த கம்பி ஒன்றை அசைத்துப் பார்த்தார்கள். அணுவளவும் அது அசைந்து கொடுக்கவில்லை. நால்வர் சேர்ந்து அசைக்கவும் முடியாத கம்பிகளை வளைத்துப் பாதை செய்து கொண்டு அவன் வெளித் தாழ்வாரத்தில் இறங்கியிருக்கிறான்! வியப்பும் திகைப்பும் ஒன்றையொன்று மிஞ்சும் உணர்வில் பாமினி வெளித் தாழ்வாரத்துக்கு வந்தாள். அங்கே அப்போதுதான் மயங்கிய நிலையிருந்து சுயஉணர்வு பெற்றுக் கொண் டிருந்தான் ஒரு வீரன். அவனுடைய இடையில் புலவனின் உத்தரீயம் சுற்றப் பெற்றிருந்தது. அவனுடைய உடைகள் அவனிடமில்லை. வாயைச் சுற்றிக் கட்டப் பெற்றிருந்த

துணியை முன்னதாகவே மற்றொரு வீரன் அவிழ்த்து விட்டிருந்தான்.

'எழுத்தாணி பிடித்த கை இரும்பையும் வளைத்திருக்கிறது! ஓர் இரும்பு மனிதனையும் வீழ்த்தியிருக்கிறது!' என்று தனக்குள் எண்ணிப் பூரிப்படைந்தாள் பாமினி.

உள்ளே ஓர் ஓலைத் துண்டு கிடந்தது. அதை எடுத்துப் படித்தாள் பாமினி. அதில் அந்தப் புலவன் எழுதியிருந்தான்; ''இளவரசே! கம்பரின் கவிச் செல்வமான ஓலைச் சுவடி தங்களிடம் செல்லரித்துப் போகும் நிலையில் இருப்பதைவிட என்னிடமிருந்தால் பயன் உண்டு. படிகள் எடுத்துக்கொண்டு எப்படியும் ஒருநாள் அதைத் தங்களிடம் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். மிகவும் நன்றி.''

தனது நகைப்பை அடக்கிக் கொண்டே அந்த ஓலையை இராஜராஜனிடம் நீட்டினாள் பாமினி.

## 18. புலி வெகுண்டது!



குலோத்துங்க சோழரிடம் இராஜராஜன் வந்து பைந்தமிழ்க் குமரன் தப்பி ஓடிவிட்ட செய்தியைக் கூறியபோது தமது விழிகள் இரண்டும் தெறித்து விழத்தக்க முறையில் அவர் அவனைத் தம் விழிகளால் தாக்கினார். தாங்க முடியாத அவமானம் அவருக்கு. பொறுக்க முடியாத வேதனை.

''அரண்மனைக்குள்ளேயே உன் ஆணை இவ்வளவு அழகாக நிறைவேற்றப்படுமானால், நாளைக்கு இந்த சாம்ராஜ்யத்தை வைத்துக்கொண்டு நீ என்ன செய்யப் போகிறாய்? நீயும் ஒரு தலைவன்தானா? எனக்குக் குமாரனாகப் பிறந்துவிட்ட ஒரே தகுதியைத் தவிர தலைவன் என்று

கூறிக்கொள்ள உன்னிடம் என்ன லட்சணம் இருக்கிறது? உன் ஆசைப்படி ஒருவனுக்குத் தண்டனை அளித்தாய். அதையாவது முழுவதும் நிறைவேற்ற உன்னிடம் வலிமை இருந்ததா?''

குலோத்துங்கர் 'சாம, பேத, தான, தண்டம்' என்று சொல்லப்படுகிற நான்கு வழிகளிலும் தம்முடைய குமாரனை உருவாக்குவதற்கு முயற்சிகள் பல செய்துவிட்டார்; ஆனால் பாலை நிலத்தில் செந்நெல் தூவிப் பயன்? அவன் சாம்ராஜ்யத்தை நிர்வாகம் செய்யத் தெரியாமலே அதன் அதிகாரங்களில் ஆசை கொண்டான்; அதன் கடமைகளைக் கவனிக்காமலே அதன் சுகபோகங்களைப் பற்றி மட்டிலும் மனப்பால் குடித்துக் கொண்டிருந்தான். விதியை நம்பும் நிலைமைக்கு வந்துவிட்டார் தந்தை; மிஞ்சியது வெஞ்சினம் ஒன்றுதான்.

அப்போது அவருக்கு விழுப்பரையர் வந்து காத்துக் கொண்டிருக்கும் செய்தி எட்டியது. பற்றி எரியும் தீயில் நெடுந்தூண் வெடித்துக் குமுறுவதுபோல் குமுறினார் அவர். காத்திருக்கும் விழுப்பரையரின் செவிகளுக்கும் தம்முடைய கட்டளைகள் எட்டவேண்டும் என்று நினைத்தவரைப் போல் சோழ மண்டலாதிபதியான குலோத்துங்கர் கர்ஜனை செய்தார்.

''இராஜராஜா! அந்தப் புலவன் எங்கு சென்றிருந்தாலும் அவனைப் பிடித்து வருவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் உடனடியாகச் செய்துவிடு. பாண்டிய நாட்டுக்குச் செல்லும் வழிகளிலெல்லாம் நம் வீரர்களின் கண்காணிப்பு மிகுந்திருக்க வேண்டும். இதற்குள் அவன் நம்முடைய நகரத்தை விட்டு நெடுந் தொலைவுக்குச் சென்றிருக்க முடியாது. அவனை விலங்கிட்டு என் முன் கொண்டு வந்து சேர்க்க வேண்டியது உன் பொறுப்பு. ஆம், எந்த இடத்தில் கண்டாலும் கண்ட இடத்தில் அவனை விலங்கிட்டு இங்கு கொண்டு வரவேண்டும்!''

இளவரசன் செருக்கு நடையோடு வெளியில் வந்தான். கைகளிலும் கால்களிலும் அந்தப் புலவனுக்கு விலங்கிட்டு அழைத்துவரும் காட்சி அவன் மனத்தைக் குளிர வைத்தது.

விழுப்பரையரின் இதயத் துடிப்பு நின்றுவிட்டது. மீண்டும் அதற்கு உயிர்ப்பூட்ட முயற்சி செய்து கொண்டே சக்கரவர்த்தியின் கூடாரத்துக்குள் நுழைந்து அவருக்கு வணக்கம் செலுத்தினார். சக்கரவர்த்தி அவரை ஏறிட்டுப் பார்க்கவுமில்லை; ஆசனத்தை அவருக்குச் சுட்டிக் காட்டவும் இல்லை.

''தியாக விநோதன் என்னும் பெயரை என் உபசாரங் களைப் பெற்றுக்கொண்டு எனக்கு அபசாரம் செய்கிறவர் களுக்காக நான் ஏற்றுக் கொள்ளவில்லை. அவர்களிடம் என்னால் கடுகளவும் கருணை காட்டமுடியாது.''

நடப்புத் தெரியாமல் குழம்பினார் விழுப்பரையர். சக்கரவர்த்திகளிடம் கேட்கவும் துணிவில்லை.

''விசாரித்தேன்'' என்று தொடங்கினார் குலோத்துங்கர். ''அந்த இளைஞன் ராஜோபசாரங்களுடன் தான் எங்களது விருந்தினர் மாளிகையில் தங்கியிருக்கிறான். அவனது நடவடிக்கைகளில் ஐயம் ஏற்பட்டதால், அவனைக் கண்காணிப் பதற்காகச் சில காவலர்களை மட்டும் அனுப்பியிருக்கிறான் இளவரசன்; மாற்றப்படி எந்தவித அசௌகரியங்களும் அவனுக்கு இங்கு ஏற்படவில்லை. இந்த நிலையில் எமது தாராள சிந்தையையும் வள்ளல் தன்மையையும் பயன்படுத்திக் கொண்டு இந்த ஆட்சிக்கே இழுக்குத் தேடிவிட்டான் அவன். பலகணியை உடைத்துக்கொண்டு காவலன் ஒருவனைக் கட்டிப் போட்டுவிட்டு எங்கேயோ ஓடி ஒளிந்து கொண்டிருக்கிறான்.''

வெண்ணெய் திரளும் சமயம் பார்த்துத் தாழி உடைந்து விட்டதே என்று மனம் உடைந்தார் விழுப்பரையர்.

''இன்று காலையில் அவனை உம்மிடம் சில நிபந்தனை களுடன் ஒப்புவிக்கலாம் என்றுதான் எண்ணியிருந்தேன். இப்போதோ நீர் அவனை எம்மிடம் ஒப்புவித்துச் செல்ல வேண்டிய நிலையில் இருக்கிறீர்!'' என்றார் சக்கரவர்த்தி. இளைஞனுக்குப் பதிலாக அந்த முதியவருக்கே தண்டனை கிடைத்துவிடும் போலிருந்தது.

''அந்தப் புலவனின் முகத்தைக்கூடப் பாண்டியர் கண்டதில்லை. தங்களது அழைப்பைக் கண்டவுடன் என்னைத்தான் புலவரிடம் அனுப்பி வைத்தார்கள். அந்த இளைஞரிடம் சிறுபொழுது பேசியபோதே, சக்கரவர்த்திகளின் அன்புக்கும் அழைப்புக்கும் இவர் ஏற்றவர்தானா என்ற ஐயம் எனக்கு எழுந்தது. இப்படி ஏதும் நேர்ந்தால் அது புலவரை மட்டும் பாதிக்காதே? சக்கரவர்த்திகளின் அன்பு பாண்டிய நாட்டுக்குத் தேவையல்லவா?''

குலோத்துங்கரின் சினம் சிறிது தணிந்தது. அதைக் கவனித்த விழுப்பரையர் மேலும் கூறினார்: ''புலவரை இங்கு அனுப்புவது உசிதமல்ல என்றுதான் எனக்குத் தோன்றியது. ஆனால் சக்கரவர்த்திகளின் கட்டளையை நிறைவேற்ற வேண்டுமே என்ற ஆர்வத்தால் அந்தத் தவறைச் செய்துவிட்டோம். அந்த இளைஞரோ உறவை வளர்ப்பதற்கு மாறாக, அதைக் குறைப்பதற்கு வழி கோலி விட்டார்; சக்கரவர்த்திகள் மன்னித்தருள வேண்டும்'' என்று இறைஞ்சினார் அவர். தூதுவருக்கு இருக்கவேண்டிய இராஜதந்திரங்களில் ஊன்றிப் பழுத்த பழம் விழுப்பரையர்.

''அவனுக்கு இனி மன்னிப்பே கிடையாது!'' என்றார் சக்கரவர்த்தி. ''அவன் புலவனாக நடந்து கொண்டிருந்தால் நாம் புலவனாகவோ வள்ளலாகவோ அவனை நடத்தலாம். இப்போது அவன் அரசின் ஆணையை மீறிய குற்றவாளி. பாண்டிய நாட்டிற்குள் அவன் நுழைந்தால் அவனை உடனே சிறை செய்து நீங்கள் இங்கு அனுப்பி வைக்கவேண்டும்;-இது குலோத்துங்கச் சக்கரவர்த்தி தமது சிற்றரசர் குலசேகர பாண்டியருக்கு இடும் கட்டளை.''

நடுக்கம் ஏற்பட்டது விழுப்பரையருக்கு. ''சக்கரவர்த்தி களின் ஆணையை அரசருக்கு அறிவிக்கிறேன்.''

''ஆமாம், மதுரையைப் புதுப்பிக்க அவன் பொருள் திரட்டித் தந்தால் அவன்மீது பரிவு ஏதும் காட்டுவீர்களானால், அந்த நகரம் இனி புதுப்பிக்கவே முடியாத நிலையை

அடைந்துவிடும். இது உங்கள் பாண்டியரின் நினைவில் இருக்கட்டும்.''

''சித்தம் சக்கரவர்த்திகளே!''

''மற்றொன்று'' என்று கூறித் தயங்கிவிட்டு ''இந்தப் புலவனைக் கைப்பற்றுவது சம்பந்தமாக அமைச்சர் சயங்கொண்ட வல்லபருக்கு நான் தனி அதிகாரம் வழங்குகிறேன்; இது பற்றிய திருமந்திர ஓலைகள் விரைவில் தங்களிடம் கிடைக்கும்; பெற்றுக்கொண்டு நீங்கள் மதுரைக்குத் திரும்பலாம்'' என்று முடித்தார் குலோத்துங்கர். தம் கரத்தை அசைத்து அலட்சியமாக விடை கொடுத்தார்.

திருமந்திர ஓலைகளைப் பெற்றுக்கொண்டு மௌனமாக அரண்மனையிலிருந்து வெளி நடந்தார். அவரைப் பின்பற்றி ஓர் ஒற்றன் நிழல்போல் தொடர்வதை அவரால் அறிய முடிந்தது. ஆகவே இனி அவர் கங்காபுரியில் தங்க முடியாது. பைந்தமிழ்க் குமரனைத் தேடிப் பார்க்க முடியாது. ஒருவேளை தேடிக்காண முடிந்தாலும் அது அவனைக் காட்டிக் கொடுத்ததற்கு ஒப்பாகும். காவலர்கள் அவனை விலங்கிட்டு அழைத்துச் செல்வதற்கு அவர் துணை செய்ய விரும்பவில்லை. ரதத்தைப் பூட்டச் சொல்லி ஏறி அமர்ந்தார். சாரதி முன்புறமும், அவரது பணியாள் பின் புறமும் உட்கார்ந்தார்கள். நெடுஞ்சாலையில் ரதம் விரைந்தது.

நகர எல்லைக்கு வெளிப்புறம் வந்தவுடன் ரதத்தை நிறுத்தச் செய்தார் விழுப்பரையர். ஒற்றனுக்குப் போக்குக் காட்டிவிட்டதால் இனி ஐயம் ஏற்பட வழியில்லை. பணியாளனைத் தனியே அழைத்தார்.

''முருகா! நவரத்தின அங்காடித் தெருவில் நம்முடைய பாண்டிய நாட்டு முத்து வணிகர் தில்லைநாதர் இருக்கிறார். அவரிடம் நீ இந்த ஓலையைக் கொடுத்துவிட்டு, அவர் இல்லத்திலோ அங்காடியிலோ பணியாற்று. நம்முடைய புலவரைப் பற்றிய தகவல்களை அறிந்து கொள்வதற்காகவே நீ இங்கு தங்குகிறாய். தில்லைநாதரும் இயன்றவரையில்

உனக்குத் துணை செய்வார். ஏதும் தகவல் கிடைத்தால் அவரிடம் குதிரையைப் பெற்றுக் கொண்டு நீ மதுரைக்கு வந்துவிடு.''

முருகன் திரும்பிச் சென்றான். ரதம் மெதுவாக பாண்டிய நாட்டுச் சாலையில் ஊர்ந்தது.

நம்பிக்கை நிறைந்த ஓலையைச் சுமந்து கொண்டு அவர் சோழ நாட்டுக்குச் சென்றபோது அவர் தம்மைத் தேற்றிக் கொள்ள இயலாது தவித்தார். இப்போது அவரிடம் இருந்த ஓலைகளோ அவனைக் கண்டவிடத்தில் சிறைப்படுத்தக் கூடிய கட்டளைகள். பாண்டியரிடமே நம்பிக்கை இல்லாது அந்த அதிகாரத்தை அமைச்சருக்கு வழங்கி விட்டார் குலோத்துங்கர்.

மதுரைக்குள் நுழைந்தவுடன் நேரே அரண்மனைக்குச் சென்று பாண்டியரிடம் ஓலைகளைக் கொடுத்தார். நடந்தவற்றைக் கூறினார். தேம்பித் தேம்பி அழுதார். தம் துயரம் தீர மன்னரிடம் கண்ணீரைக் கொட்டிவிட்டுத் தம் இல்லத்துக்குத் திரும்பினார்.

மாளிகைக்குள் நுழைந்ததும் நுழையாததுமாகக் கயல்விழி உள்ளேயிருந்து ஓடிவந்தாள். விழுப்பரையரோடு இளைஞன் வருகிறானா என்ற ஆவலுடன் பார்த்தாள்.

''புலவர் நலமாக இருக்கிறாரா?-அழைத்து வந்து விட்டீர்களா?''

விழுப்பரையரின் உதடுகள் நடுங்கின. அவருக்குத் தொண்டையை அடைத்துக் கொண்டது. கயல்விழி நின்றவள் நின்றவாறே மூர்ச்சித்துத் தரையில் விழுந்தாள். உய்யவந்தாள் ஓடிவந்து அவள் தலையைத் தன் மடிமீது கிடத்திக் கொண்டு முகத்தில் நீர் தெளித்தாள். ''இன்னும் அவர் வரவில்லையா'' என்று மீண்டும் கேட்ட கயல்விழியின் கருவிழிகள் அவளுடைய இமைகளில் செருகிக் கொண்டன.

# 19. நட்பு நாடி நடந்தனன்



**கூடை நிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர் நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்**

வெண் கொற்றக் குடையின் நிழலில் இருந்து இளவரசருக்குரிய பட்டத்து யானையின் மீது பவனி வந்து பழகியவன்தான் சுந்தர பாண்டியன். இப்போதும் அவனுடைய தலைநகரத்தில் அவனுடைய குடையும் குஞ்சரமும் அவனுக்காக ஏங்கிக் கொண்டு தான் இருந்தன. அவனுக்கு ஏற்றம் தந்து பெருமை பெறுவதற்கு எப்போதுமே அவை சித்தமாகக் காத்திருந்தன.

ஆனால் அவனோ குடை நிழலின்றி மர நிழல் போல் அலைந்து கொண்டிருந்தான். குஞ்சரமின்றி நடை மெலிந்து ஒவ்வோர் ஊராக நண்ணிக் கொண்டிருந்தான். கங்கா புரியிலிருந்து புறப்பட்டவன் வடக்கே அதன் சிற்றரசான திருமுனைப்பாடி நாட்டை நோக்கி நடந்தான். இப்போது அவன் இளமை முறுக்கும் நிமிர்ந்த நடையும் கொண்ட புலவன் பைந்தமிழ்க்குமரன் அல்லன். சோழ நாட்டில் அவனால் அந்த உருவில் நடமாட முடியாது. அவன் கிழவன்; வளைந்த முதுகும், நரை படர்ந்த கேசமுமாக அவன் தடியூன்றித் தடுமாறினான்.

தாடியும் மீசையும் வெண்பஞ்சாக மாறிவிட்டன. நெற்றியிலும் முகத்திலும் சுருக்கங்கள். ஒரு துணியை முடிந்து தோளிலே போட்டுக் கொண்டு அதற்குள் ஒரு பெரிய திருவோட்டுக் கப்பரையை வைத்திருந்தான். தேகமெல்லாம் நெற்றியெல்லாம் திருநீறு நீக்கமற நிறைந்திருந்தது. கந்தல் உடை; கந்தல் மூட்டை; கையில் ஒரு கழி வேறு இருந்தது.

காவலர்கள் அவனைத் தாண்டிக் கொண்டு பல முறை குதிரைகளில் சென்றார்கள். எதிரிலும் வந்தார்கள். அவனுடைய கொப்பரைக்குள்ளிருந்த கம்பரின் சுவடியை அவர்கள் கண்டிருந்தால் என்ன நடந்திருக்குமோ, தெரியாது. பாண்டியரின் முத்தாரம் அதற்கடியில் பதுங்கியிருப்பது பற்றியும் அவர்கள் அறியவில்லை. ஊர்களுக்குள் நடக்கும் போது மட்டிலும் முதுகை வளைத்துக்கொண்டு நடக்க வேண்டியிருந்தது.

சத்திரம் சாவடிகளில் கண்காணிப்பு இருக்கக் கூடுமென் பதற்காகச் சில நாட்கள் உணவுக்கும் கூரைக்குமே அவன் தவிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. வழியில் ஏதாவது வீடுகள் தென்பட்டால் திண்ணையில் சற்றுத் தங்குவான். அவர்களாக விரும்பிக் கொடுத்தால் உண்டு களைப்பாறு வான். பிறகு மீண்டும் நடப்பான். குமரிக்கடல் முனையி லிருந்து புறப்பட்டு அவன் காஞ்சி வழியாகக் காசிக்குப் போவதாய்க் கேட்போரிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

''அவ்வளவு தொலை தாங்காது; வழியிலேயே உங் களுக்கு மோட்சம் கிடைத்துவிடும்!'' என்று கூறி நகைத் தார்கள் சிலர். அவனும் சேர்ந்து நகைத்தான் அவர்களோடு.

'கங்காபுரிக்கும் காஞ்சிக்கும் இடையில்தான் நான் செல்ல வேண்டிய காசி இருக்கிறது. அதை அடுத்து ஓடும் தென் பெண்ணைதான் என்னுடைய கங்கை. மோட்சம் கிடைப்பதும் அங்கு போன பிறகுதான் தெரியும்' என்று தனக்குள் நினைத்துக் கொண்டான் அவன்.

ஆம்; பல்லவர் வழி வந்த கோப்பெருஞ்சிங்கன் என்ற மாவீரனைத் தேடி அவருடைய திருமுனைப்பாடி நாட்டுக்குத் தான் சுந்தரபாண்டியன் சென்று கொண் டிருந்தான். கோப்பெருஞ்சிங்கன் கூடலூரைச் சார்ந்த சேந்தமங்கலத் தைத் தலைநகராகக் கொண்டு அப்போது ஆட்சி செய்து கொண்டிருந்தார். சிங்கம் வலிமை மிகுந்த சிங்கம்தான். ஆனால் அது தனித்திருந்தது. வடக்கே கோசல

நாட்டு வல்லாள தேவர் என்ற வேங்கை ஒருபுறமும் தெற்கில் குலோத்துங்கச் சோழராகிய வேங்கை மறுபுறமும், அந்தச் சிங்கத்தை இடையில் நிறுத்தி நெருங்கிக் கொண்டிருந்தன. கோப்பெருஞ் சிங்கம் சோழநாட்டு வேங்கைக்குப் பணிவு காட்டி அதன் சிற்றரசாக நடந்து கொண்டது. ஆனால் அந்தப் பணிவு நம்பக்கூடாத பணிவென்பது குலோத்துங்கருக்குத் தெரியும். ஆகவேதான் வடக்கே காஞ்சிபுரத்தில் கோசல சாம்ராஜ்யத் தின் படைகளைக் கொண்டு வந்து நிறுத்தச் செய்திருந்தார் குலோத்துங்கர்.

தெற்கே கங்காபுரியில் சோழப்படை, வடக்கே காஞ்சியில் கோசலப் பெரும்படை. கோப்பெருஞ்சிங்கம் இந்த இரு படைகளுக்கிடையில் அகப்பட்டுக் கூண்டிலடைக் கப்பட்ட சிங்கமாகிவிட்டது. அதன் கர்ஜனை கூட வெளியில் கேட்பதில்லை. பணிவும் விசுவாசமுமுள்ள சிற்றரசாகவே அது சோழ சாம்ராஜ்யத்துக்குத் திறைசெலுத்தி வந்தது. போர்க் காலங்களில் தன் படைகளையும் அனுப்பி வீரர்களைச் சோழரின் வெற்றிக்காகப் பலி கொடுத்தது.

கோலூன்றித் தடுமாறிச் சென்ற கிழவனுக்குக் கோப் பெருஞ்சிங்கரிடம் கிடைக்கப்போகும் வரவேற்புப்பற்றியும் தடுமாற்றமாகத்தான் இருந்தது. குலோத்துங்க சோழரின் நேரடிக் கண்பார்வையில் இருப்பவர் கோப்பெருஞ்சிங்கன். பேரரசைப் பகைத்துக் கொண்டால் அவரால் தம்முடைய நாட்டை ஒரு மாதம்கூடக் காப்பாற்றிக் கொள்ளமுடியாது. அந்த நிலையில் உள்ளவரிடம் தஞ்சம் புகச்சென்றால் என்ன நேரும்?

என்ன நேர்ந்தாலும் சரி; வேறு வழியில்லை; வேறு துணை இல்லை; வேறு நட்பில்லை...நடையில் வேகம் பிறந் தது அவனுக்கு. தான் கிழவன் என்பதையும் மறந்து விட்டான்!

காட்டு வழி செல்லும்போது கம்பரை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டான். அப்போது அவன் சென்று கொண்டிருந்த வழி அவனுக்கு மாளிகைச் சிறையில் கம்பர் காட்டிய வழி. இராமன் ஒருவனால், தனிமனிதனால்

இலங்காபுரி ராஜ்யத்தை ஆட்சி செய்தவனின் கொடுமையை எவ்வாறு அழிக்க முடிந்தது? நட்பை வளர்க்கும் பண்பில் இராமன் கொண்டிருந்த அசையாத நம்பிக்கையை எப்படியோ பெற்றுவிட்டான் இளைஞன். குகன், அநுமன், சுக்ரீவன், விபீடணன் முதலியோரின் நட்பை இராமன் பெற முடியு மானால் நாமும் ஏன் கோப்பெருஞ் சிங்கனின் நட்பைப்பெற முடியாது?

அதே சமயம் வலிமைவாய்ந்த சேந்தமங்கலம் கோட்டைச் சிறையைப் பற்றியும் அவன் கேள்வியுற்றிருந் தான். சோழநாட்டு மாளிகைச் சிறையிலிருந்து தப்பியதற்குப் பலன் சேந்தமங்கலம் கோட்டைச் சிறையாகவும் இருக்கலாம். எளிதில் தப்பமுடியாத சிறை அது.

சேந்தமங்கலத்தில் கோப்பெருஞ்சிங்கனைச் சந்திக்கும் வாய்ப்புக்காக இரு தினங்கள் நகருக்குள் அதே கோலத்தில் அலைந்தான். சிவபக்தியில் ஊறித் திளைக்கும் உள்ளம் கொண்டவர் கோப்பெருஞ்சிங்கன் என்பது தெரிந்தது. சிவபக்தி என்றால் அளவுகடந்த சிவபக்தி. பக்தர்களின் பக்தராம் அவர். சேந்தமங்கலத்தில் அவனுடைய தோற்றத்துக்கு நடந்த உபசாரங்களைக் கொண்டே, ஓரளவு அதன் அரசரை அறிந்தான் பைந்தமிழ்க்குமரன்.

சபை முடிந்து கோப்பெருஞ்சிங்கன் தம்முடைய ஓய்வுக்காகத் திரும்பிக் கொண்டிருந்தார். தோற்றம் சிங்கத்தின் தோற்றம்தான்; உடற்கட்டிலும் அவர் சிங்கமே; நாற்பத்தைந்துக்கு மேல் ஐம்பது வயதுக்குள்ளிருக்கலாம்.

அரண்மனையின் வெளி வாயிலில் காவலர்கள் காசியாத்திரை செல்லும் இந்த முதியோனைத் தடுக்க வில்லை. விரைந்து சென்று அரசனின் அருகில் நின்றான் முதியவன். ஆசி வழங்குவதுபோல் தன் கரம் உயர்த்தினான். தன் காசியாத்திரைக் கதையையும் வழியில் ஆலயங்களையும், பக்தர்களையும் தரிசித்துச் செல்லும் கதையையும் நம்பும் விதமாகக் கூறினான்.

''வாருங்கள்; வாருங்கள்!'' என்று மலர்ந்த முகத்தோடு அவனைத் தம்முடைய மாளிகைக்கு அழைத்துச் சென்றார் கோப்பெருஞ்சிங்கன். அவன் ஆசனத்தில் அமர்வதற்கு முன்பாக நெடுஞ்சாண்கிடையாக அவன் பாதங்களில் விழப்போனார் அரசர்.

பதறினான் பைந்தமிழ்க் குமரன். அவர் கீழே விழுவதற்கு முன்பாக மின்னலைப்போல் தான் கீழே விழுந்து அவர் பாதங்களிரண்டையும் இறுகப் பற்றிக்கொண்டான்.

''அரசே! நான் சிவபக்தனல்லன்! என்னை மன்னித்தருள வேண்டும். நான் வேடதாரி! வேடதாரி!'' என்று நாத் தழுதழுக்கக் கூறினான்.

மலைத்து நின்றார் கோப்பெருஞ்சிங்கன். கண்கள் சிவந்தன.

''நான் வயதில், அநுபவத்தில், தகுதியில் எல்லா வற்றிலுமே தங்களைவிட இளையவன். தங்களுடைய பாதங்களில் விழவேண்டியவன் நான். தங்களிடம் தஞ்சம் புக வந்திருக்கிறேன்.''

ஒன்றும் புரியவில்லை அரசருக்கு. ஏமாற்றப்பட்டு விட்டதால் கோபம் ஒருபுறமும், உண்மையைக் கூறியதால் அனுதாபம் மறுபுறமும் அவரிடம் பொங்கின. கடைசியில் அனுதாபமே வென்றது.

''அமருங்கள்!'' என்று கர்ஜித்தார். ''யார் நீங்கள்? உங்களுக்கு என்னிடம் என்ன வேலை? ஏன் இந்த வேடம்?''

''நான் பாண்டிய நாட்டுப் புலவன். என் பெயர் பைந்தமிழ்க்குமரன். சோழநாட்டிலிருந்து தப்பியவுடன் புனைந்துகொண்ட வேடமிது. தாங்கள் அனுமதித்தால் தனித்துச் சில செய்திகள் கூறவேண்டும்.''

நெடுநேரம் அவர் கற்சிலையாக அமர்ந்திருந்தார். அவனையே உற்று நோக்கினார். பின்னர், ''வேடத்தைக் கலையுங்கள்!'' என்று கட்டளையிட்டார்.

அருகிலேயே தண்ணீர் இருந்தது. வெண்தாடி கறுப்பாக மாறியது, பஞ்சான கூந்தல் கார்மேக நிறம் பெற்றது. முகத்தின் சுருக்கங்கள் நொடிப்பொழுதில் மறைந்தன; பரந்து விரிந்த மார்பெங்கும் விழுப்புண்களின் தழும்புகள்.

அவனையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தவர், அவன் வேடத்தைக் கலைத்தபின்னர். ''சக்கரவர்த்திகள் உங்களுக்கு விலங்கிட்டு உடனடியாகக் கங்காபுரிக்கு அனுப்பி வைக்கும்படி எனக்குக் கட்டளை அனுப்பியிருக்கிறார்கள்'' என்றார்.

பைந்தமிழ்க்குமரன் இதைத் சிறிதும் எதிர்பார்க்க வில்லை. அவன் அங்கு வருவதற்கு முன்பே அவனைக் கைப்பற்றுவதற்குக் கட்டளை காத்திருக்கிறது. தானாகத் தேடிவந்து குலோத்துங்கர் விரித்து வைத்திருந்த வலைக்குள் கண்களைத் திறந்து கொண்டே விழுந்துவிட்ட உணர்ச்சி அவனுக்கு.

நட்பை நாடி நடந்தவனது கால்கள் இப்போதுதான் வலிக்கத் தொடங்கின. புலிக் குகையிலிருந்து கிளம்பி வந்தவன் நேராகச் சிங்கத்தின் வாயைப் பிளந்துகொண்டு அதற்குள் தலையை விட்டுவிட்டான்.

''தங்கள் சித்தம்!'' என்று கலங்காது கூறினான் புலவன்.

# 20. கோப்பெருஞ்சிங்கன்



**சி**ங்கம் சிறு மீனின் துணிவைக் கண்டு திகைத்து விட்டது. சக்கரவர்த்தியின் கட்டளையாகத் தூண்டிலைப் போட்டவுடன் பாண்டிய நாட்டு மீன் குஞ்சு துடி துடிக்கும் காட்சியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் கோப்பெருஞ் சிங்கன். இளைஞனோ, ''தங்கள்

சித்தம் அதுவானால் என்னை விலங்கிட்டுச் சோழ நாட்டுக்கே அனுப்பி வைக்கலாம்!'' என்றான். இதை அவர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

''இதில் என் சித்தம் என்ன இருக்கிறது? இது சக்கரவர்த்திகளின் கட்டளை. *திருமுனைப்பாடி நாடு சோழ சாம்ராஜ்யத்தோடு இணைந்திருக்கும் அரசு. சக்கரவர்த்திகளின் கட்டளையை நிறைவேற்ற வேண்டியது என் கடமை.''

''கடமை என்றால் அடைக்கலம் புகுந்தோருக்குப் புகலிடம் அளிப்பதும் ஒரு கடமைதான். அந்த இரு கடமைகளில் எது ஏற்றது என்று முடிவு செய்வது தங்களது சித்தத்தைப் பொறுத்திருக்கிறது.''

தமது திகைப்பை வெளிக்காட்டாமல், ''அமர்ந்து பேசுங்கள்'' என்று ஆசனத்தைச் சுட்டிக் காட்டினார்.

''அரசே! அமர்ந்து பேசும் உரிமையைத் தாங்கள் இன்னும் எனக்கு அளிக்கவில்லை. பல துன்பங்களை மேற்கொண்டு தங்களைச் சந்திக்க வேண்டுமென்பதற்காகவே சிறை தப்பி நான் இங்கு வந்தேன். மறைந்து வாழ்ந்து என்னை மட்டும் காத்துக்கொள்ள விரும்பியிருந்தால் எனக்குத் தங்கள் துணை அவசியமற்றது. தாங்களோ என்னை விலங்கிட்டு அனுப்பக் காத்திருக்கிறீர்கள். குற்றவாளிக்கு ஆசனம் எதற்கு?''

புலவனின் முகத்தில் அச்சமில்லை, வேதனை புலப்பட்டது. அதைக் கவனித்தார் கோப்பெருஞ்சிங்கன்.

''என்னைக் காண முயன்ற காரணம்?''

''திருமுனைப்பாடி நாடு, தென்பாண்டி நாடு இந்த இரு நாடுகளின் தலைவிதியை முடிவு செய்யவேண்டிய நாள் இந்த

---

*திருமுனைப்பாடி நாடு அப்போது மயூரத்திலிருந்து காஞ்சிமாநகர் வரையிலுள்ள நிலப்பரப்பைத் தன்னிடம் கொண்டிருந்தது. கடலூர், சேந்தமங்கலம், விருத்தாசலம், திருவெண்ணெய் நல்லூர் முதலிய நகரங்களையும் அவற்றைச் சுற்றியுள்ள பகுதிகளையும் ஆட்சி செய்து வந்தவர் கோப்பெருஞ்சிங்கன்.

நாள். இதை மிகவும் புனிதமான நாள் என்று நான் நம்பியிருக்கிறேன். தங்கள் சித்தம் எதுவோ அதுவே இறைவனின் சித்தமுமாகும்.''

''நாட்டின் தலைவிதிக்கும் புலவருக்கும் என்ன தொடர்பு?''

''தொடர்பு இருக்கிறது. புறத்தால் சோழரிடம் கட்டுப்பட்டு ஓர் சிற்றரசாகியுள்ள தங்களிடம் நான் வரவில்லை. அகத்தால் யாருக்கும் கட்டுப்படாது விடுதலை வீறு கொண்ட கோப்பெருஞ்சிங்கத்தையே நான் சந்திக்க விரும்பினேன். அகத்தில் அழகு இருந்தால் அதை உணரும் ஆற்றல் புலவனுக்கு உண்டு.''

''என் அகத்தில் என்ன இருக்கிறது?'' என்று விளையாட்டாகக் கேட்டார் அரசர்.

முகத்தை உற்று நோக்கிவிட்டுக் கூறினான்:

''கோசல சாம்ராஜ்யமும் சோழ சாம்ராஜ்யமும் இணைந்து நின்று சில சிற்றரசுகளை விழுங்க முடியமானால், நாமும் ஏன் விடுதலை உணர்ச்சி கொண்டு மற்றொரு நாட்டோடு தோளோடு தோள் நின்று நமது சக்தியை வளர்த்துக் கொள்ளக்கூடாது என்று இந்தச் சிங்கம் நினைப்பதுண்டு. அந்தத் துணை நாடு பாண்டிய நாடாக இருக்கக் கூடாதா என்ற எண்ணமும் இதற்கு உண்டு! -குலோத்துங்கருக்குப் பிறகு இந்த ஆண்மையற்ற இராஜராஜனின் ஆட்சியிலிருப்பதை இது அறவே வெறுக்கிறது.''

சிங்கம் திடீரென்று பாய்ந்து பைந்தமிழ்க்குமரனை அன்போடு தழுவிக் கொண்டது. அவர் பிடியில் அகப்பட்டு மூச்சுத் திணறினான் இளைஞன். அவர் அவனைத் தூக்கிக் கொண்டு போய் ஆசனத்தில் அமர்த்தி வைத்தார். அப்போது கோவில் மணி ஓசை தொடர்ந்தாற் போல் முழங்கத் தொடங்கியது. மெய்சிலிர்த்தது பைந்தமிழ்க்குமரனுக்கு.

''புலவரே! உம்முடைய அகத்திலிருப்பதும் தெரிந்து விட்டது!'' என்று உற்சாகமாகக் கூறினார் கோப்பெருஞ் சிங்கன். ''போருக்குப் பிறகு பாண்டிய நாட்டுக்கு நீர் எழுச்சியூட்டி வருவதும் என் செவிகளுக்கு எட்டாமலில்லை. ஆனால் குலசேகர பாண்டியர் எதை யெல்லாம் சிந்திப்பதற்கு அஞ்சுகிறாரோ, அதையெல்லாம் நீர் சிந்தித்திருக்கிறீர்.''

''பாண்டியர் சிந்திப்பதற்கு அஞ்சியவரில்லை. தங் களைப் போலவே செயலாற்றுவதற்கு ஏற்ற காலம் பார்த் திருக்கிறார்.'' கோப்பெருஞ்சிங்கனின் நெற்றி சுருங்கியது.

பைந்தமிழ்க்குமரன் தன்னுடைய கந்தல் துணி மூட்டைக்குள்ளிருந்து ஒரு முத்தாரத்தைக் கையிலெடுத்தான். அதை அவரிடம் கொடுத்து, ''தாங்கள் அணிந்திருக்கும் ஆரமும் இதுவும் ஒன்றுபோலத்தானே இருக்கின்றன?'' என்றான். அவர் ஒப்பிட்டுப் பார்த்தார்.

''குலசேகர பாண்டியரின் முத்தாரம் இது. இதைப் போல் ஒன்றை அவர் தங்களிடம் பல ஆண்டுகளுக்கு முன்பு அன்பின் நினைவாகக் கொடுத்தார். போர் நடப்பதற்கு நாலைந்து ஆண்டுகளுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சி இது; தங்களுக்கும் நினைவிருக்கும்.''

''ஆமாம், அப்போது இளவரசன் சுந்தர பாண்டியன் உயிரோடிருந்தான்'' என்று பெருமூச்சு விட்டார் கோப் பெருஞ்சிங்கன். ''அவனுடைய கரங்களால் அவனே எனக்கு மாலை அணிவித்தான்.''

''தாங்கள் அவனை மடிமீது வைத்துக்கொண்டு தங்கள் அன்பைப் பொழிந்தீர்கள். தங்கள் குமாரத்திக்கு அவனை விட அதிகமான வயதாகி விட்டதே என்று வருந்தினீர்கள். இல்லாவிடில் தங்களது மருமகனாக அவனை ஆக்கிக் கொண்டிருக்கலாம் என்று கூறினீர்கள். மண உறவு இல்லா விட்டாலும் மன உறவு வளரும் என்றார் பாண்டியர்.''

அவனுடைய ஒவ்வொரு சொல்லும் வியப்புக்குமேல் வியப்பாக இருந்தது அவருக்கு.

''அப்போது பாண்டியரையும் சுந்தர பாண்டியனையும் தவிர வேறு யாரும் இல்லையே! உங்களுக்கு எப்படித் தெரிந்தது?''

''சுந்தரபாண்டியனும் உடன் இருந்தானல்லவா?''

''அவனைத்தான் வீணாகப் போரில் பலி கொடுத்து விட்டாரே பாண்டியர்! அவர் போர் தொடங்கியதும் அதில் தன் தம்பியை இழந்ததும் நான் விரும்பாத நிகழ்ச்சிகள். அவசரப்பட்டு விட்டார்.''

''மக்களுக்குப் போராட்ட உணர்ச்சி தேவையாக இருந்தது. அதனால் நடந்த போர் அது. ஆனால் சுந்தர பாண்டியனை அவர் பலி கொடுக்கவில்லை.''

''என்ன?''

''சுந்தரபாண்டியன் இறந்து விட்டதாகத்தான் பாண்டியரும் நம்பிக்கொண்டிருக்கிறார். ஆனால் அவன் இறக்கவில்லை. உயிரோடு இருக்கிறான். அதிலும் தங்களுக்கு அருகிலேயே இருக்கிறான். அவனுக்குத் தாங்கள் ஆசனம் அளித்தீர்களே, அதை அவன் வெறும் ஆசனமாகக் கருதவில்லை. தன்னுரிமை பெற்றுவிட்ட கோப்பெருஞ் சிங்கம் அதேபோல் உரிமை பெற்ற பாண்டிய நாட்டின் சிம்மாசனத்தை அவனுக்கு அளிப்பதாகவே கருதி மகிழ்கிறான்.''

''அப்போது ஆலயமணியும் அடித்ததே!'' என்று பூரிப்போடு கூறிக்கொண்டு அவனருகில் வந்து அமர்ந்தார் கோப்பெருஞ்சிங்கன்.

''இறைவனும் நம்முடைய முயற்சிக்குத் துணை நிற்பதாகக் கூறுகிறார்'' என்றான் சுந்தரபாண்டியன்.

அவனே சுந்தரபாண்டியன் என்பதை அறிந்ததும், கோப்பெருஞ்சிங்கனுக்கு, அந்த இளைஞனின் வயதளவு இளமை திரும்பிவிட்டது போலிருந்தது. தம் வாழ்நாளில் என்றுமே அவர் இவ்வளவு குதூகலம் அடைந்ததில்லை.

''சரி, இளவரசே! உடனடியாக உங்களுடைய வேஷத்தைப் போட்டுக் கொள்ளுங்கள்'' என்றார் அரசர். ''இங்கே எப்போதும் குலோத்துங்கருடைய ஒற்றர்களின் நடமாட்டம் இருக்கும். நாடும் அருகில் இருக்கிறது. நீங்கள் புலவராக இங்கே உலவ முடியாது. முதியவராகவே மாறிவிடுங்கள்!'' என்று கூறிச் சிரித்தார்.

தாமே எழுந்து சென்று அவனுடைய மாறு வேடத்திற்குத் துணைபுரிந்தார். பின்னர் உணவை வர வழைத்துவிட்டுப் பணியாட்களை வெளியே அனுப்பினார். அவனை உபசரித்துக் கொண்டே பேசலானார்.

''சோழ சாம்ராஜ்யத்தோடு மட்டும் நாம் போராடிப் பயனில்லை. கோசல சாம்ராஜ்யத்தின் படைபலம் இதைவிட இரு மடங்கு அதிகமானது. அவர்களோ தங்கள் படைகளில் ஒரு பகுதியைக் காஞ்சீபுரத்திலும், மற்றொரு பகுதியை உறையூருக்கு அருகிலுள்ள கண்ணபுரத்திலும் நிறுத்தியிருக் கிறார்கள். இவ்வளவுக்கும் காரணத்தோடுதான் குலோத் துங்கர் இடம் கொடுத்திருக்கிறார். குலோத்துங்கருக்குப் பிறகு இராஜராஜனுக்குத் துணை நிற்கப்போகிறவன் வீரநரசிம்மன். இராஜதந்திரத்திலும் வீரத்திலும் அவன் தந்தை வல்லாளத் தேவரும் நம் குலோத்துங்கரும் ஒன்றாகச் சேர்ந்தால் எப்படியோ, அப்படிப்பட்டவன்.''

சுந்தரபாண்டியன் சிரித்தான். ''பகைவர்களின் வலிமையை மட்டும்தானே கூறுகிறீர்கள்? நம்முடைய வலிமை இன்மையைக் கூறவில்லையே?'' என்றான். ''தங்களிடமாவது சில ஆயிரம் பேர்கள் உள்ள சிறுபடை உண்டு. அந்த வீரர்களும் தங்களிடம் ஊதியம் பெற்றுக் கொண்டு சோழ சாம்ராஜ்யத்துக்காகப் போராடும் வழக்கம் உள்ளவர்கள்! ஆனால் எங்களிடமோ இந்தச் சிறு படையும் இல்லை; படையில்லாப் பாண்டியர்கள் நாங்கள்!''

இருவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். ஆனால் அவர்களுடைய சிரிப்பு வெறும் பகற்கனவு காணுகிறவர் களின் சிரிப்பாக இல்லை.

''என்றாலும் நாம் வெற்றி பெறுவோம்!'' என்று முழங்கினான் சுந்தர பாண்டியன். ''எனக்கு என் மனத் திண்மையில் நம்பிக்கை இருக்கிறது. தங்களுடைய மனத் திண்மையிலும் நம்பிக்கை இருக்கிறது. நம் இருவருக்குமே இறைவனிடம் நம்பிக்கை இருக்கிறது. எவ்வளவு துன்பங்கள் எதிர்ப்பட்டாலும் நாம் தகர்த்துவிட்டு வெற்றி பெற முடியும்.''

''இளவரசே! இனி இந்த உயிர் உடலில் உள்ளவரையில் என் துணை உங்களுக்கு உண்டு. வாழ்விலும் தாழ்விலும் என்னை நீங்கள் நம்பலாம்.''

அவரது பெரும் கரங்களைப்பற்றித் தன் கண்களில் ஒற்றிக்கொண்டான் சுந்தர பாண்டியன்.

## 21. எது காதல்?



மதுரையில் விழுப்பரையரின் வீட்டில் வந்து தங்கியிருந்த கயல்விழி, பைந்தமிழ்க் குமரனைக் காண முடியவில்லை என்ற செய்தியைக் கேட்டவுடன், அந்த அதிர்ச்சி தாங்காது படுத்த படுக்கையாகி விட்டாள். உணவை மறந்தாள்; உறக்கம் துறந்தாள்; பேச்சையும் இழந்தாள். எந்த நேரமும் விழிகள் ஏதோ ஒரு சூனியத்தில் நிலைகுத்தி நின்றன. 'அவர் எங்கு சென்றாரோ? எப்படி இருக்கிறாரோ? உயிருடன் மீண்டும் அவரைக் காண முடியுமோ, முடியாதோ? பாண்டிய நாட்டுக்கும் அவர் திரும்பி வரமுடியாது. அப்படி அவர் வந்தால் சிறை செய்து சோழ நாட்டுக்கு உடனே அனுப்பிவிட வேண்டும். சோழ நாட்டிலும் அவர் உலவ முடியாது. அவரைப் பிடித்துக் கடுமையான தண்டனைக் கொடுத்து விடுவார்கள். வேட்டுவர்களின் வேட்டைக்கு இலக்காகும் மானின் கதி நேர்ந்துவிட்டதே அவருக்கு!

பயங்கரமான நினைவுகள் அவளைச் சூழ்ந்துகொண்டு விநாடிக்கு விநாடி அவள் சக்தியை உறிஞ்சி வந்தன. விழுப் பரையரின் மனைவியார் திருவுடைத்தேவி எவ்வளவோ ஆறுதல் கூறிப்பார்த்தார். தோழி உய்யவந்தாள் எப்போதும் அவளுடன் இருந்து அவளைத் தேற்றினாள். பலன் இல்லை.

விழுப்பரையரின் மனச்சுமை இரு மடங்காகப் பெருகியது. பைந்தமிழ்க் குமரனுக்காக அவர் அலைந்து கொண்டிருந்ததோடு, கயல்விழியைக் காப்பாற்றும் பொறுப்பும் அவருக்கு வந்து விட்டது. விழுப்பரையரைப் பொறுத்த மட்டில் கயல்விழி இப்போது சாதாரண பாணர் குலப்பெண்மணியல்ல. அவளிடம் மறைந்துகிடந்த ஒரு மகத்தான சக்தியை அவர் முன்னமே உணர்ந்துகொண்டு விட்டார். அந்தச் சக்தியால் பைந்தமிழ்க் குமரனுக்கும் பாண்டிய நாட்டுக்கும் கிடைத்துவந்த பலனை அவர் மறக்கவில்லை. கயல்விழியின் உயிர் இப்போது பைந்தமிழ்க் குமரனுடையது. அதை எப்படியாவது காப்பாற்றித் தீர வேண்டும். அவனுக்காகவும், நாட்டுக்காகவும், கயல்விழி யின் எதிர்கால இன்ப வாழ்வுக்காகவுமே அவளைக் காப்பாற்றித் தீரவேண்டும். சுந்தரபாண்டியனுடன் ஒன்றாக அவள் பாண்டிய நாட்டின் பைம்பொன் சிங்காதனத்தில் அமரும் காட்சியை அவர் தம் கண்களில் ஆனந்தக்கண்ணீர் பெருகக் கண்டுகளிக்க வேண்டும்! பிறப்பால் அவள் அதற்கு உரியவளல்லவென்று யாரேனும் கூறினால், அவளுடைய உள்ளன்பால், உழைப்பால், தியாகத்தால் அவளே உரியவள் என்பதை விழுப்பரையர் உலகத்துக்கு உணர்த்துவார்!

தென் பாண்டியநாட்டில் இருந்து அவள் தந்தையாரை யும் குழுவினரையும் மதுரைக்கு வரவழைத்தார். அவர் களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்துவிட்டு, ''கயல்விழியின் உடல்நிலை தேறிய பிறகு நாட்டின் மேற்குப்பக்கத்தில் சுற்றி வரலாம்'' என்று கூறினார். கயல்விழியின் தந்தை ஆதிச்ச தேவராலும் அவள் உள்ளத்துக்கு உறுதியளிக்க முடியவில்லை.

ஒருநாள் மாலை விழுப்பரையர் மட்டிலும் தனியாகச் சென்று கயல்விழியின் கட்டிலில் அமர்ந்தார். அன்போடு இன்குரலில் சிறிதுநேரம் பேசினார். அவருக்கு அப்போது இருந்த மனநிலையில் பைந்தமிழ்க் குமரன் யார் என்பதை அவளிடம் மட்டிலும் கூறிவிடலாமா என்று தோன்றியது; உடனே அந்த நினைவை மாற்றிக்கொண்டு விட்டார்.

''மகளே! எனக்குப் பெண் குழந்தைகள் இல்லை. நீயும் உய்யவந்தாளுமே இப்போது என் மக்கள். அந்தப் பாசத்தோடு ஒருசில விஷயங்களை உன்னிடம் வெளிப்படையாகவே பேசலாம் என்று நினைக்கிறேன்...''

கயல்விழி அவரைப் பார்த்துக் கண்ணீருடன் புன்னகை செய்தாள். இவ்வளவு ஒன்றி இதுவரையில் அவர் அவளிடம் பழகியதில்லை.

''நீ எதற்காக இப்படி உன்னையே வாட்டிக் கொண் டிருக்கிறாய்? நிதானமாகச் சிந்தனை செய்து பதில் கூறு.''

''கங்காபுரிக்கு அவர் புறப்பட்டபோதே ஏதோ ஒருசக்தி என்னிடமிருந்து அவரைப்பறித்துக்கொண்டுபோவதுபோல் எனக்குத் தோன்றியது. பாதி உயிர் அப்போதே போய்விட்டது. மறு பாதி உயிரும் தாங்கள் கங்காபுரியிலிருந்து கொண்டுவந்த செய்தியால் போய்க் கொண்டிருக்கிறது. என்றாவது அவர் திரும்பி வந்தாரானால், அவரை நினைத்துக்கொண்டே உயிர் நீத்ததாக அவரிடம் சொல்லுங்கள்!''

''நான் சொல்ல மாட்டேன்!'' என்று கூறிவிட்டுச் சிரித்தார் விழுப்பரையர். கயல்விழி திடுக்கிட்டாள். ''நீ அவரை நினைத்துக்கொண்டிருப்பதாக மதிமயக்கம் கொண்டிருக்கிறாய். நினைவில் இருக்க வேண்டிய ஆழம் உன்னிடமில்லை. அதில் அழுத்தமில்லை. ஒரு தலைவி எந்த முறையில் தலைவனை நினைக்க வேண்டுமோ அந்த முறையில் நீ அவரை நினைக்கவில்லை.''

''பேசாதீர்கள்!'' என்று கதறித் தன் செவிகளைப் பொத்திக் கொண்டாள் கயல்விழி.

''கயல்விழி! உன்னுடைய அன்பில் அணுவளவும் நான் மாசு மறு கற்பிக்கவில்லை. உன்னுடைய அன்பையும் ஆற்றலையும் நாளடைவில் நான் தெரிந்து கொண்டேன். அதனால்தான் நீங்கள் ஒன்றிப் பழகுவதை அனுமதித்தேன். இப்படி உங்கள் அன்பு வளர்ச்சியுறுவதில் என்னைப்போல் யாருக்குமே அவ்வளவு மகிழ்ச்சியிருக்காது.''

கயல்விழி வியப்போடு அவர் சொற்களை உற்றுக் கேட்டாள். 'விழுப்பரையருக்கு எல்லாமே தெரிந்து விட்டது போலும்!'

''நீ அவரையே நினைத்துக் கொண்டிருப்பதாகக் கூறு கிறாயல்லவா? அந்த நினைவுக்குப் பெயர்தான், எண்ணத்துக்குப் பெயர்தான், அன்பு என்பது. அந்த அன்பு அவருடைய தோற்றத்தைப் பற்றியதா? உள்ளத்தைப் பற்றியதா? உயிரைப் பற்றியதா? சிந்தனை செய்து சொல்'' என்று நேரடியாக அவளிடம் வினவினார்.

சிந்தனை செய்தாள் அவள். அவளைச் சிந்திக்க வைத்து விட்டார் அவர்.

''அவருடைய தோற்றம், உள்ளம், உயிர், நோக்கம் எல்லாவற்றிலுமே என்னுடைய நினைவு துடிக்கிறது'' என்றாள் கயல்விழி.

புன்னகை பூத்தார் விழுப்பரையர். ''மெய்தான். முக்கியமாக அவருடைய நோக்கமும் உன்னுடைய நோக்கமும் ஒன்றாகி விட்டன. அதற்காகத்தான் அவர் கூத்துப் புனைந்தார். நீ அதைக் குடிமக்களிடம் பரப்பி அவர்களுக்கு விழிப்பூட்டி வருகிறாய். மக்களுக்கு ஏற்பட்டுவரும் விழிப்பிலிருந்து தான் உங்கள் அன்பு மெய்யான அன்பு என்பதை நான் கண்டுகொண்டேன். ஓர் ஆணும் பெண்ணும் முறையாக ஒருவரிடம் மற்றவர் அன்பு செலுத்துவார் களானால், அந்த அன்பு அவர்களுக்கு மட்டும் இன்பம் தராது. சூழந்திருக்கும் பலருக்கும் அதனால் நன்மை உண்டு. அவர்கள் உடல் அழிந்தாலும் அவர்களுக்குப் பின்னால்

நெடுங்காலத்துக்கு அது நிலைத்திருந்து உலகத்துக்கு இன்பம் பெருக்கும். வள்ளுவரது இல்லற வாழ்வின் வெற்றிதான் நமது அழியாச் செல்வமான திருக்குறள்.''

மெய்சிலிர்த்தது கயல்விழிக்கு. ''இடுக்கண் வருங்கால் நகுக!'' என்று பைந்தமிழ்க்குமரன் அவளுக்கு வள்ளுவரைச் சொல்லிக் கொடுத்திருந்தான். துன்பமும் சோதனையும் வருங்காலத்தில் அலட்சியமாகச் சிரிக்க வேண்டுமாம்! வள்ளுவரையே இவரும் குறிப்பிடுகிறார்.

''சோதனை ஒன்று வந்தவுடன் நீ புலவரையும் அவருடைய லட்சியத்தையும் மறந்து விட்டாய். அதன் மூலம் அவரையே உன் உள்ளத்திலிருந்து அகற்றிவிட்டாய்.''

''இல்லை... இல்லவே,இல்லை!'' என்று தேம்பினாள் கயல்விழி.

''மகளே! உலகத்தில் எத்தனையோ பெண்கள் இப்படித்தான் தொல்லையுறுகிறார்கள். அன்பை வளர்த்துக் கொண்டே அதை முறைப்படி செயலாக்கத் தெரியாததால் துன்பப்படுகிறார்கள். மன வளர்ச்சியடையாத குழந்தைத் தனமுள்ள அன்பு வாழ்க்கைக்குப் போதவே போதாது. ஒரு சோதனை வந்தவுடன் நீ சிறு குழந்தையாகி விட்டாய். குழந்தைப் பிராயத்திலுள்ள அன்பு வாழ்க்கைக்குப் போதவே போதாது.''

''அவர் பிரிவை என்னால் த்தாங்க முடியவில்லையே!''

''பிரிவு எப்படி ஏற்படும்? உன் எண்ணத்தில் அவர் எப்போதும் இருந்தால், பிரிவுக்கு உன் உயிருள்ளவரையில் இடமேது? நீ குழந்தையாகி விட்டாய். உன்னுடைய கண்கள் அவரைக் காணத் துடிக்கின்றன. உன் செவி அவர் சொல்லைக் கேட்க ஏங்குகிறது. உன்னுடைய புலன்களுக்கு அவர் அருகில் இருப்பதால் கிடைக்கவேண்டிய மகிழ்ச்சி இப்போது கிடைக்கவில்லை. உனக்கு அவை கிடைக்காததால் நீ துன்பப் படுகிறாய். விரும்பியது கிடைக்காததால் தேம்பி அழும் குழந்தையாகி விட்டாய் நீ. உன் துன்பமே உனக்குப்

பெரிதாகும்போது அவரையும் அவர் லட்சியத்தையும் நீ மறந்து விடுகிறாய். குழந்தைக்குத் தனக்கு வேண்டும் என்று அழத்தான் தெரியுமே தவிர, தன் மீது அன்பு செலுத்துகிற வர்களுடைய கடமையைப் பற்றிய பொறுப்பு இருக்காது. ஆனால் உனக்குப் பொறுப்புக்களும் கடமைகளும் நிறைய இருக்கின்றன.''

கயல்விழியின் உள்ளத்தில் ஒளி பாய்வது போன்ற ஒரு புதுமையான அனுபவம் ஏற்பட்டது. விழுப்பரையரின் சொற்களை அவள் திரும்பத் திரும்ப நினைவுக்குக் கொண்டு வந்தாள். அவள் உள்ளத்தில் புகுந்த அந்த ஒளி இப்போது முகத்திலும் மலர்ந்தது. குழந்தை அன்பு கொண்டிருந்தவள் தலைவிக்குரிய அன்பை உணரத் தொடங்கினாள்.

''கயல்விழி! தலைவன் தலைவிக்குரிய அன்பை அறிய வேண்டுமானால் இராமனையும் சீதையையும் எண்ணிப் பார்க்க வேண்டும். சீதை இராமனை மனப்பூர்வமாக நம்பினாள். அவனுடைய நோக்கத்துக்கு அவளும் பரிபூரண மாகக் கைகொடுத்தாள். இராவணனை வென்று அவளை மீட்பதற்குச் சீதையின் துணையும் மகத்தானது.''

''சீதை துணை செய்தாளா?''

''ஆம்!'' என்றார் விழுப்பரையர், ''அவள் இப்படிக் கிடந்து தன்னை மாய்த்துக் கொள்ளவில்லை. பல ஆண்டுகள் இருவரும் பிரிந்திருந்தார்கள். கடல் கடந்த இருவேறு நாடுகளின் தொலைவு அவர்களைப் பிரித்தது. இருவரைச் சுற்றிலும் எத்தனை எத்தனையோ சோதனைகள். ஆனாலும் சீதை தன் எண்ணத்தால் தன் தலைவனுக்கு ஆற்றல் தந்தாள். கனவிலும்,நனவிலும் இராமனின் வெற்றியையே அவள் நாடினாள். எண்ணத்துக்குக் காலமேது, தூரமேது, மழை ஏது, வெயிலேது? இராமனின் தோள் வலிமைக்கு வெற்றி தந்தது எது தெரியுமா? அசோகவனத்தில் சீதை அவனுக்காகச் செய்த தவம்!''

கயல்விழி ஆனந்தக் கண்ணீர் பெருக்கினாள். ''தந்தையே! நான் குழந்தைதான், எனக்கு ஏதுமே தெரியவில்லை'' என்றாள் நாத் தழுதழுக்க.

''குழந்தையாக இருந்தது போதும், பைந்தமிழ்க் குமரனுக்கு ஓர் ஆபத்தும் வந்து விடாதென்று நம்பு. வருகிற சோதனைகளை அவருடைய வெற்றியின் வழிகாட்டிகள் என்று நம்பு. அவருடைய வெற்றியில்தான் உன்னுடைய வாழ்வு இருக்கிறது என்பதை மறந்துவிடாதே. எண்ணத்தை அவரிடம் நிலைக்கச் செய்து, அவருக்குச் செய்யும் பணிவிடையாக உனது நடனத்தைத் தொடர்ந்து நடத்து. உன்னுடைய கூத்துப் பாடலில் அவர் எப்போதும் உன்னுடன் இருக்கிறார். அவர் எப்படியும் உன்னைத் தேடிக் கொண்டு வந்துவிடுவார்.''

மந்திரச் சொற்களை அவளுக்குத் தந்துவிட்டு, மெல்ல அங்கிருந்து எழுந்து சென்றார் விழுப்பரையர். கயல்விழிக்குப் புதிய உலகம் ஒன்று தென்பட்டது. அப்போதே அவ்விடத்திலேயே எழுந்து அவளுக்குப் பரவசமாக நடனமாட வேண்டும் என்று தோன்றியது. அவனுக்குச் செய்யும் பணிவிடை அது! அவனுடைய பணிகளைத் தொடர்ந்து செய்வதைவிட உயர்வான காதல் எது?

''அவர் என்னை விட்டு என்றுமே பிரியமாட்டார்; அவர் என் எண்ணத்தில் இருக்கிறார். அவர் வெற்றியே என் பேச்சு; அவர் வெற்றியே என் செயல்; அவர் வெற்றியே என் வெற்றி!''

கயல்விழி குதூகலத்துடன் தன் படுக்கையிலிருந்து துள்ளிக் குதித்தாள். அடுத்த வாரமே அவளும் அவள் குழுவினரும் பாண்டிய நாட்டின் மேற்குப் பகுதிக்குப் புறப்பட்டார்கள்.

# 22. இன்ப வேட்டை



குலோத்துங்க சோழ சக்கரவர்த்தியின் வேட்டை தொடங்கி விட்டது. சிறை தப்பிச் செல்லும் குற்றம் அவரால் சிறிதும் மன்னிக்க முடியாத குற்றம். அதற்குத் தண்டனையளிப்பதில் இப்போது அவரைவிட அவருடைய குமாரன் இராஜராஜன் துடிதுடிப்பாக இருந்தான்.

சோழ நாட்டு வீரர்களின் சிறு படையொன்று நேரடியாக அமைச்சர் சயங்கொண்ட சோழவல்லபரிடம் அனுப்பப் பெற்றது. அது அவருடைய ஆணைக்கு அடங்கி நடக்கவேண்டியபடை, அதன்மீது குலசேகரபாண்டியருக்கு எவ்வித அதிகாரமும் கிடையாது. வேண்டிய வசதிகள் செய்து கொடுக்கவேண்டியது அவர் கடமை. அவர்கள் பாண்டிய நாட்டில் பைந்தமிழ்க் குமரன் பிடிபடும் வரையில் இருப்பார்கள்!

ஐம்பது பேர்களைக் கொண்ட அந்தச் சிறுபடை ஐந்தாறு பிரிவுகளாகப் பிரிந்து நாடுமுழுவதும் சுற்றித் திரிந்தது. அதிகார வெறியுடன் தன்னிச்சையாகப் புலவர்களாக **இருந்தவர்களை**யெல்லாம் துன்புறுத்தத் தொடங்கியது. சயங்கொண்ட சோழ வல்லபரின் குரல் மாறியது; பேச்சு மாறியது; நடவடிக்கைகளும் மாற்றமடைந்தன. அதிகார வெறி என்பது மதுவெறி போன்றது. அவருடைய அதிகாரம் இப்போது குலோத்துங்க சோழரின் அதிகாரம். அவரது வேட்டைப் படையினரைப் பாண்டியராலும் கட்டுப்படுத்த முடியாது.

பாண்டியர் பொறுத்துக் கொண்டார். அரசுக் கட்டில் என்பது அழகிய பஞ்சணைப் பீடமல்ல என்பதைப் பிள்ளைப்

பிராயத்திலிருந்தே கண்டவர் அவர். நிரபராதிகளான புலவர்களுக்குக் கொடுமைகளும் நிகழாத வகையில் கவனித்துக் கொண்டார்.

விழுப்பரையரைச் சுற்றிலும் ஒற்றர்கள் சூழ்ந்தார்கள். நிழலாக அவர் எங்கு சென்றாலும் அவரைப் பின் தொடர்ந் தார்கள். மாதங்கள் சென்றன. பைந்தமிழ்க்குமரனை அவர் களால் கண்டுபிடிக்க முடியவில்லை. புலவர்களிடம் தமக்கிருந்த வெறுப்பை எப்படியெல்லாம் தீர்த்துக்கொள்ள முடியுமோ, அப்படியெல்லாம் தீர்த்துக் கொள்ள முனைந்தார் சோழ வல்லபர். அவர்களை அமைச்சரின் கொடுமை களிலிருந்து தப்பச் செய்வதே ஒரு பெரும் கடமையாகப் போய்விட்டது பாண்டியருக்கு.

விழுப்பரையரைப் பற்றிய கவலை வந்துவிட்டது அவருக்கு.

''விழுப்பரையர் அவர்களே! தாங்கள் தாம் சோழ வல்லபருக்கு நேரடியான பகைவர். அவர் அப்படித்தான் கருதுகிறார். ஆகவே எப்போதும் விழிப்போடிருந்து கொள்ளுங்கள்.''

''என்ன இருந்தாலும் அமைச்சர் சோழ நாட்டிலிருந்து வந்தவர். அவருடைய ஒற்றர்களும் அந்த நாட்டைச் சேர்ந்தவர்கள். எனக்கு இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு செடியும் புதரும் குன்றும் மடுவும் தெரியும். அப்படி ஏதேனும் வந்தால், நான் இந்த நாட்டுக்குள் இருந்தாலே அவர்களால் என்னைக் கண்டு பிடிக்க இயலாது.''

''அரசே! ஒரு வேண்டுகோள் -'' என்று தயங்கியவாறே அரசரின் முகத்தை நோக்கினார் விழுப்பரையர்.

''என்ன?''

''தங்களால் எனக்குச் சிறிதளவு அதிகாரம் வழங்கி விட முடியுமா? அந்த அதிகாரத்தைத் தங்களது பெருமைக்கு இழுக்கு நேரும்படியாகவோ, குடிமக்களுக்குத் துன்பம் தரும் வகையிலோ நான் பயன்படுத்த மாட்டேன்.''

பாண்டியர் அதிர்ச்சியுறவில்லை. அவர் முகத்தை உற்று நோக்கினார்.

''தங்களால் ஆட்சிப் பொறுப்பிலிருந்துகொண்டு செய்ய முடியாத சில செயல்களை நான் செய்ய முனைந்திருக்கிறேன். என் முயற்சிக்கு இடையூறுகள் நேர்ந்தால் அது என்னோடு போய்விடும். தங்களையோ நாட்டையோ பாதிக்காது.''

''என்ன வேண்டும்?'' என்று கேட்டார் பாண்டியர்.

''அவ்வப்போது எனக்குத் தேவைப்படும் ஆட்களை என்னுடைய பொறுப்பில் தாங்கள் விட்டுவிட வேண்டும். தங்களுக்கே தெரியாமல் அவர்கள் என்னோடு தொடர்பு கொண்டவர்களைப்போல் நடந்துகொள்ள வேண்டும். என் ஆணைப்படி அவர்கள் நடக்கவேண்டும் என்றும் இரகசியங்களைக் காப்பாற்ற அவர்கள் உயிர் துறக்கவும் சித்தமாக இருக்கவேண்டும் என்றும் தாங்கள் கட்டளையிடவேண்டும். அவர்களுக்கு ஊதியம் கொடுக்க என்னிடம் பொருள் இல்லை. தாங்களே அதையும் கொடுக்க வேண்டும்.''

''காரணத்தை நான் அறியலாமா?''

''காலம் வரும்போது தாங்கள் கட்டாயம் அறிந்து கொள்வீர்கள். இப்போதைக்குத் தாங்கள் அறிந்தால், தங்களையும் சக்கரவர்த்தி தம் ஆணையை மீறிய குற்றத்துக்கு இலக்காக்கிவிடுவார். நான் அதற்குத் துணிந்துவிட்டேன். பொறுப்பில்லாத வெறும் புலவன் நான்.''

''தங்களை நான் நம்புகிறேன்.''

''தங்களுடைய நம்பிக்கை ஒன்றுதான் நான் பெற்ற செல்வங்களிலெல்லாம் தலைசிறந்தது. தங்களது செஞ்சோற்றுக் கடனைத் தீர்ப்பதற்கு இன்னும் நான் ஏழு தலைமுறைகள் பிறவி எடுக்கவேண்டும். தங்களிடமே பணியாற்றும் பேறு பெற வேண்டும்'' என்று தழுதழுத்த குரலில் கூறினார் விழுப்பரையர்.

அவர் பொறுக்கி எடுத்த ஆட்களின் பெயர்களைக் கேட்டபோது அரசருக்கே அதிர்ச்சி தாங்கவில்லை. தம் பதவியையே இந்தப் பெரும் புலவர் பரிசிலாகக் கேட்பது போல் தோன்றியது. பாண்டியர் வழங்கிவிட்டார்.

விழுப்பரையருக்குக் கங்காபுரியிலிருந்து அம்பலக் கூத்தன் அவ்வப்போது தகவல்களை அனுப்பிக் கொண்டிருந் தான். பைந்தமிழ்க் குமரனை மட்டும் அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. மற்றபடி சோழநாட்டு நடப்புக்கள் அவ்வப்போது தவறாமல் அவருக்கு வந்துகொண்டிருந்தன. குலோத்துங்க சோழர் நோய்ப் படுக்கையில் விழுந்து விட்டாராம். ''முதுமைப் பருவம் மட்டிலும் காரணமல்ல; குமாரனின் பொறுப்பற்ற தன்மை அவரைச் சீர்குலைத்து விட்டது'' என்று குறிப்பிட்டிருந்தான் அவன்.

அரசு எவ்வழி அவ்வழி மக்கள்! இராஜராஜனின் பொறுப்பில் ஆட்சிவந்தவுடனேயே பேராசையும் நாட்டில் பரவிவிட்டதாம். களியாட்டம், மண், பெண், பொன் இவையே இராஜராஜனின் தேவைகள். இவற்றை அவனுக்குத் தாராளமாக வழங்குகிறவர்களுக்கு அவனும் உதவிகளைத் தராளமாகச் செய்யத் தொடங்கிவிட்டானாம். ''பொன்னும் பொருளும் இருந்தால் இங்கு பல ஆட்சி ரகசியங்களைத் தெரிந்து கொள்ளலாம். வணிகரின் துணை இருப்பதால் எனக்குப் பொன் கிடைக்கிறது. விரைவில் பல செய்திகளைத் தங்களுக்கு அனுப்புகிறேன்'' என்று ஓலையில் சொல்லியிருந்தான் அம்பலக்கூத்தன்.

கங்காபுரியிலிருந்து அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபரிடம் வந்துகொண்டிருந்த ஒற்றன் ஒருவனைப் பிடித்துக் கொண்டு வந்து விழுப்பரையரிடம் நிறுத்தினார்கள் அவருடைய ஆட்கள். அவர் அவனை அன்போடு உபசரித்து வரவேற்றார். தனிமையில் அவனிடம் பரிவோடுபேசினார். ஒரு சிறு பை நிறையப் பொற்காசுகளை அவனிடம் நீட்டினார். அவருடைய ஓலை கைமாறியது. அதைப் படித்தவுடன்

அவருடைய இதயத் துடிப்பே நின்றுவிடும் போலிருந்தது. **இராஜராஜன்** அனுப்பிய ஓலை அது.

''புலவனுக்கும் கயல்விழி என்ற பாணர்குல மங்கைக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாகத் தெரிகிறது. அவளுக்குக் கட்டாயம் அவனுடைய இருப்பிடம் தெரிந்திருக்க வேண்டும். அல்லது அவளுக்கு ஏதும் துன்பம் நேர்ந்தால் அவன் பொறுத்திருக்க மாட்டான். நமது வீரர்களை **அனுப்பி** அவளைச் சிறைப் பிடித்து அனுப்பவும்.''

''ஓலையை அமைச்சரிடமே சேர்ப்பித்துவிடு!'' என்று கூறிப் பத்திரமாக அவனை அனுப்பி வைத்தார் விழுப்பரையர்.

## 23. மக்கள் எழுச்சி



**சோ**ழ நாட்டு ஒற்றன் கொண்டுவந்து கொடுத்த ஓலையைப் படித்தவுடன் அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபர் திடுக்கிட்டார். அந்த ஓலையை அதே ஒற்றன் கையூட்டுப் (இலஞ்சம்) பெற்றுக் கொண்டு விழுப்பரையரிடம் காட்டிய செய்தியை அவர் அறியவில்லை. அவருடைய அதிர்ச்சிக்குக் காரணம் கயல்விழி என்ற பாணர் குலமங்கையைச் சிறைசெய்து கங்காபுரிக்கு அனுப்பும்படி கட்டளை வந்திருந்ததுதான்.

ஒற்றனை **அனுப்பிவிட்டு**, தம்முடைய ஒற்றர் தலைவன் **மாவலிராயனுடன்** ஆலோசனை நடத்தினார் சோழவல்லபர். ''சோழ சாம்ராஜ்யத்தின் ஆட்சிப் பொறுப்பு முழு வதுமே இப்போது **இளவரசர்** கைக்கு வந்துவிட்டதென்பதற்கு இந்த ஓலையே சான்று. சக்கரவர்த்திகளுடைய

ஆலோசனையைக்கூட இளவரசர் மதிப்பதில்லை என்று தெரிகிறது. சக்கரவர்த்திகள் பெண்களையும் புலவர்களையும் கண்டு அஞ்சினார். இளவரசரோ இப்படி ஒரு கட்டளையை நமக்கு அனுப்பியிருக்கிறார்.''

''சோழ நாட்டு மாற்றத்துக்குத் தக்கபடி நாமும் மாற வேண்டியதுதான்'' என்றான் மாவலிராயன். அவனிடமே அந்த மாற்றம் நன்கு தெரிந்தது. முன்போல் அவன் அதிகாரமில்லாத வெறும் ஒற்றனாக இப்போது உலவவில்லை. சோழ நாட்டிலிருந்து புலவனைத் தேடிப் பிடிப்பதற்காக அனுப்பப் பெற்றிருந்த படைக்கு அவனைத் தலைவனாக்கியிருந்தார் அமைச்சர்.

'ஆம்! தலைவருக்குத் தக்கபடி மாறவேண்டியதுதான்' என்று தமக்குள் சொல்லிக் கொண்டார் சோழ வல்லபர். அவரிடம் இப்போது ஏற்படத் தொடங்கியிருப்பது மூன்றாவது மாற்றம். முதன் முதலில் குலோத்துங்க சோழர் குலசேகர பாண்டியரிடம் அன்பு கொண்டிருந்த காலத்தில், பாண்டிய நாட்டின் ஆட்சியில் பாண்டியருடன் கூடியவரை யில் அவர் ஒத்துழைத்தார். போருக்குப் பிறகு அவருடைய குணம் மாறியது; செருக்கோடும் பொறாமையோடும் நடந்து கொண்டார். இப்போதோ, சோழ நாட்டில் இராஜராஜனின் கை ஓங்குதைக் கண்டவுடன் தம்மை பாண்டியருக்கும் மேலான சக்கரவர்த்தி என்று எண்ணும் மமதை அவருக்கு வந்துவிட்டது. மனிதர்கள் மாறக் கூடியவர்கள்; அதிலும் அரசியல் இராஜதந்திர மனமாற்றங்கள் மின்னல் வேகத்தில் ஏற்படக் கூடியவை. அதிகாரம் மிகப் பொல்லாதது.

''மாவலிராயா! இந்தப் பெண்ணை நாம் எப்படியாவது கங்காபுரிக்குக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். சிறை செய்து கொண்டு போவது அவ்வளவு எளிதல்ல, நாடு நகரங்களில் பரபரப்பு ஏற்பட்டு விடக்கூடாது. பாண்டியருடைய ஆட்சியிலிருக்கும் நாட்டிலிருந்து, நாம்

அவருடைய குடிமக்களில் ஒருத்தியைச் சிறைசெய்து கொண்டு போனால், பல துன்பங்கள் வரக்கூடும்.''

''நம்மிடம் இளைய சக்கரவர்த்திகளின் கட்டளை இருக்கிறது. புலவன் செய்த குற்றத்தைச் சார்ந்த நடவடிக்கை இது. நம்மிடம் அதிகாரமிருக்கிறது.''

அமைச்சர் சிரித்தார். இராஜராஜனுக்கு மெல்லியலாரிடம் உள்ள மனநெகிழ்ச்சியை அவர் அறிந்தவர். மாவலிராயனுக்கும் இது தெரியும், என்றாலும் அவர்கள் அதை வெளியிட்டுக் கொள்ளாமல் இராஜ தந்திரமாகப் பேசிக் கொண்டனர். கயல்விழியைக் கங்காபுரிக்கு அனுப்பி வைப்பதால் அவர்களுடைய அதிகாரம் உயரக்கூடும்.

பத்துப் பன்னிரெண்டு குதிரை வீரர்களுடனும் ஒரு ரதத்துடனும் மாவலிராயன் மதுரைக்கு மேற்கே வைகை நதிக் கரையோரமாகப் புறப்பட்டான். அமைச்சர் சயங்கொண்ட வல்லபரின் கட்டளை அவன் கையில் இருந்தது. வைகையும், சுருளி ஆறும், தேனி ஆறும், சங்கமமாகும் பகுதியிலுள்ள ஒரு நகரத்தில் அப்போது கயல்விழி தங்கியிருந்தாள். சுற்றுப் புறத்துக் கிராமங்களில் அவ்வப்போது கூத்துக்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன.

அதிகாலையில் அவள் தங்கியிருந்த மாளிகைக்கு முன்னால் ரதம் வந்து நின்றது. குதிரை வீரர்கள் வந்து இறங்கினார்கள். மாவலிராயன் மாளிகைக்குள் நுழைந்து ஆதிச்ச தேவரிடமும் கயல்விழியிடமும் தான் வந்த நோக்கத்தைக் கூறலானான்.

''உங்களிடமிருந்து புலவரைப் பற்றிய விவரங்களை நேரில் கேட்டு அறிந்து கொள்ள விரும்புகிறார்கள், எங்கள் சக்கரவர்த்தி. என்னிடம் அமைச்சரின் கட்டளை இருக்கிறது. என்னோடு இப்போதே கங்காபுரிக்குப் புறப்படுங்கள். விரைவில் திரும்பி வந்து விடலாம்'' என்று கயல்விழியிடம் கூறினான் படைத்தலைவன்.

''தனியாகவா!'' என்று கேட்டார் ஆதிச்சதேவர்.

''விரும்பினால் நீங்களும் துணைக்கு வரலாம்.''

''புலவரைப் பற்றி எனக்குத் தெரிந்தது இவ்வளவுதான், அவரை மிகவும் பெருமையோடு இங்கிருந்து அழைத்துக் கொண்டு போனார்கள். இன்னும் திருப்பி அனுப்பவில்லை. ஆகவே அவரைப் பற்றிய விவரங்களை நீங்கள்தான் கூற வேண்டும். நீங்களே அவரை அனுப்பி வைக்க வேண்டும்.''

மாவலிராயனுக்குக் கயல்விழி அவ்வளவு எளிதாகக் கைப்பற்றக் கூடியவள் என்று தோன்றவில்லை. ''ஏதானாலும் சக்கரவர்த்திகளிடம் நீங்கள் நேரில் கேட்டுக் கொள்ளலாம். அவர்கள் சார்பில் அமைச்சர் என்னை அனுப்பியிருக் கிறார்கள். இன்னும் இரண்டு நாழிகைப் பொழுதுக்குள் நீங்கள் இங்கிருந்து புறப்பட வேண்டும். காவலுக்கு வீரர்கள் வந்திருக்கிறார்கள்.''- வீரர்களைப் பற்றி அவன் குறிப்பிட்டது 'நீ தப்ப முடியாது' என்பது போலிருந்தது.

''நான் பாண்டிய நாட்டுக் குடிமகள், உங்கள் கட்டளை எதற்கும் என்னால் கட்டுப்பட முடியாது. இங்கே பாண்டியரின் அரசாட்சி நடக்கிறது. அவருடைய ஆணைப்படி நடக்கும் ஆளுங்கணத்தாரும் அதிகாரிகளும் இங்கு இருக்கிறார்கள். அவர்களிடம் போய் முதலில் உங்கள் அமைச்சரின் கட்டளையைக் காட்டுங்கள்!''

மாவலிராயனுக்கு மீசை துடித்தது. சோழ சாம்ராஜ்யத்தின் அதிகாரியான அவன் அந்த நகரத்திலுள்ள ஆளுங்கணத்தாரின் அனுமதி பெற வேண்டுமாம்! ஒரு பாணர் குலப் பெண் அவனிடமே அரசியல் நீதி பேசத் துணிந்து விட்டாள்!

''சக்கரவர்த்திகளிடம் சிற்றரசாக இருப்பவர் பாண்டியர். பாண்டியரிலும் உயர்ந்தவரிடமிருந்து உங் களுக்கு ஓலை வந்திருக்கிறது'' என்று ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு கூறினான் மாவலிராயன்.

''பாண்டியருக்கு வேண்டுமானால் உங்கள் சக்கரவர்த்தி உயர்ந்தவராக இருக்கலாம், எனக்குப் பாண்டியரை விட

உயர்ந்தவர் வேறு யாருமில்லை. அவருடைய கட்டளைக்குத்தான் என்னால் பணிய முடியும். நீங்கள் இங்கிருந்து போய் வரலாம்.''

உள்ளே அவர்கள் பேசிக் கொண்டிருப்பதற்குள் ஊர் முழுதும் கயல்விழியின் மாளிகைக்கு முன்னால் வந்து கூடிவிட்டது. சரேலென்று கயல்விழி மாளிகையின் முகப்புக்கு ஓடிவந்தாள். கூட்டத்தினரைக் கூர்ந்து கவனித்தாள். அவர்களில் பொது மக்களுக்கிடையில் ஆளுங்கணத்தாரும் ஊர்க்காவல் படையினரும் இருந்தார்கள். சோழ நாட்டுக் குதிரை வீரர்களையும் கவனித்தாள். வேலும் வாளுமாக ரதத்தைச் சூழ்ந்துகொண்டு பத்துப் பேர்கள் நின்று கொண்டிருந்தனர்.

அவளுக்குப் பின்னால் வந்து நின்ற மாவலிராயனுக்குக் கூட்டத்தைக் கண்டவுடன் திகைப்பு ஏற்பட்டது. ஆனால் பத்துக் குதிரை வீரர்களைக் கொண்டு அதைப் போல் பன்மடங்கு கூட்டத்தை அடக்கத் தெரிந்தவன் அவன். மேலும் அவன் சோழ நாட்டு அதிகாரி.

''கேளுங்கள் பெருமக்களே!'' என்று கூறினாள் கயல்விழி.

''இப்படித்தான் ஒரு ரதத்தைக் கொண்டு வந்து நிறுத்தி முன்னொரு நாள் புலவரைக் கங்காபுரிக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே அவரைச் சிறையிட்டு வைத்தார்கள். அவரை உயிருடன் வைத்திருக்கிறார்களோ, கொன்று விட்டார்களோ தெரியவில்லை. இப்போது என்னைச் சிறைப் பிடித்துக்கொண்டு போக வந்திருக்கிறார்கள். இவர்களிடம் பாண்டியரின் கட்டளையும் இல்லை.''

''கயல்விழி! ரதத்தில் ஏறுகிறாயா, இல்லை, உன்னை விலங்கிட்டு அழைத்துச் செல்லவேண்டுமா?'' என்று அதட்டினான் மாவலிராயன்.

பயங்கரமாகச் சிரித்தாள் கயல்விழி. ''உனக்கு அவ்வளவு ஆண்மையிருக்கிறதா? இந்தா, கரங்களை நீட்டுகிறேன், முடிந்தால் விலங்கிட்டு அழைத்துச் செல்!'' கரங்களை நீட்டிக் கொண்டு அவனை நெருங்கினாள்

கயல்விழி. அவனுடைய வீரர்கள் அவன் முகத்தை நோக்கினர். கூட்டத்தினர் உள்ளக் கொதிப்பு நெருப்பாக அங்கே பரவத் தொடங்கியது. மாவலிராயன் அலட்சியமாக நகைத்தான், அவர்களைப் பார்த்து. சோழ நாட்டிடம் அடிமைப்பட்டிருக்கும் கூட்டத்துக்கு ஆத்திரம் கூட வருகிறதே! மதுரை நகரம் அழிக்கப்பட்டதை அதற்குள் இவர்கள் மறந்து விட்டார்களா?

கேவலம், கூத்தாடிப் பிழைக்கும் ஒரு பெண் பிள்ளையிடம் அவன் தோற்றுப் போக விரும்பவில்லை. நீட்டிய அவள் கரத்தைப் பற்றி ரதத்துக்கு அவளை இழுத்தான். அவ்வளவுதான்!...

ஊர்க்காவல் வீரர்கள் அவ்வளவு பேரும் ஏதோ திட்ட மிட்டிருந்தவர்கள் போல் குதிரை வீரர்களை சூழ்ந்து கொண்டார்கள். ஒரு சிலர் ஓடிவந்து மாவலிராயனைப் பிடித்து அவன் கரங்களைக் கட்டினார்கள். அவனை ரதத்துக்கு இழுத்துக் கொண்டு வந்து அதனுள் தள்ளினார்கள். வீரர்களின் ஆயுதங்கள் கைப்பற்றப்பட்டன. அவர்களைக் குதிரைகள்மீது ஏற்றிவிட்டு, ''திரும்பிப் பாராமல் செல்லுங்கள்!'' என்றார் நகரத்தின் தலைவர்.

''உங்கள் சக்கரவர்த்தியிடம் போய் இதைச் சொல் லுங்கள். பாண்டிய நாட்டின் கொற்றவைத் தேவியாக மக்கள் கயல்விழியை மதிக்கிறார்கள். அவர் சென்ற இடமெல்லாம் சோழ சாம்ராஜ்யத்தின் மேலாட்சி அழிந்துவிட்டது. அவருக்குத் தீங்கு செய்யத் துணிந்தவர்களைப் பாண்டிய மக்கள் கொற்றவைக்குப் பலிகொடுக்கத் தயங்க மாட்டார்கள்!''

வயது முதிர்ந்த பெரியவர் ஒருவர் ஆவேசம் வந்தவர் போல் கூறினார்.

''அடுத்த படையெடுப்பு நடந்தால் அதற்கு இவளே காரணமாக இருப்பாள்!'' என்றான் மாவலிராயன்.

''அப்போது உங்கள் சாம்ராஜ்யம் சரிந்து விழும்!'' என்றாள் கயல்விழி.

அவர்களைத் திருப்பி அனுப்பிய பிறகு, நகரத்துப் பெரு மக்களின் தலைவர் கயல்விழியிடம் கூறினார்:

''மதுரையிலிருந்து முன்பே செய்தி கிடைத்ததால் எச்சரிக்கையாக இருந்தோம். இல்லாவிடில் இதற்குள் நாங்கள் தங்களை இழந்திருப்போம்.''

''பெரும்படையுடன் அவர்கள் மீண்டும் வரக்கூடும். அல்லது வேறு எந்த வழிகளிலாவது என்னைச் சிறைப்படுத்த முயல்வார்கள். அதற்குக் காரணம் இருக்கிறது.''

தலைவருக்கும் அந்த நினைவு இல்லாமல் இல்லை. அடுத்த நடவடிக்கையைப் பற்றிய முடிவுக்காக அவர் விழுப்பரையரின் ஆணையை எதிர்பார்த்திருந்தார்.

# 24. ஏலமலைக் காட்டில்

**பா**ண்டிய நாட்டின் மேற்கு எல்லைக்கும் சேரநாட்டின் வடகிழக்கு எல்லைக்கும் இடையிலிருந்த காட்டுமலைப் பகுதி மனித சஞ்சாரமில்லாத பயங்கரமான பிரதேசம். எந்த அரசும் அங்கே ஆட்சி செலுத்தவில்லை. யானைகளும், கரடி, புலி, சிங்கம் முதலிய வனவிலங்குகளுமே அங்கு தலை நிமிர்ந்து உலவி வந்தன. மனிதர்கள் யாரும் துணிந்து அதற்குள் நுழைந்ததுமில்லை; அப்படித் துணிந்தவர்கள் உயிருடன் திரும்பியதும் இல்லை.

காடுகள் மண்டிக் கிடந்தன; செங்குத்தான குன்றுகளும் மலைகளும் மனிதர்களை வெருட்டி நின்றன; காட்டருவிகளும் ஆறுகளும் துள்ளிக்குதித்து விளையாடின. இயற்கைத் தேவி அங்கு அற்புதமான எழிலோடு களிநடனம் புரிந்து கொண்டிருந்தாள்.

வானுற ஓங்கிய மூங்கில்கள், தேக்குகள், இன்னும் எத்தனை எத்தனையோ வகைக் காட்டுமரங்கள். மரங்களினூடே ஏலக்காய்ச் செடிகள், ஆள் உயரத்துக்கு அடர்ந்து நின்ற மலைப் புல் கூட்டம், பல் வண்ணப் பூக் கொண்டைகள் தாங்கிய தாவரக் கன்னிகள், எங்கும் பசுமை, எங்கும் செழுமை, எங்கும் குளுமை!

அந்தக் காட்டை நோக்கி இரண்டு குதிரைகள் வந்து கொண்டிருந்தன. ஒரு குதிரையில் ஆதிச்சதேவர் இருந்தார். மற்றொரு குதிரையில் ஓர் இளைஞன் இருந்தான். இளைஞனின் தோற்றத்தில் மிடுக்கிருந்தது. போர் வீரனுக் குரிய தலைப்பாகை, கவசம், உடைவாள் இவ்வளவும் அவனிடம் இருந்தன.

காடு நெருங்க நெருங்க ஆதிச்ச தேவரின் படபடப்பு அதிகமாகியது. அவருடைய குதிரையின் வேகம் தளர்ந்தது. முன்னால் சென்ற இளைஞனின் விழிகள் அடிக்கடி அவரைத் திரும்பிப் பார்த்துச் சினந்தன. அந்த விழிகளுக்கு அஞ்சி சிறிது நேரம் விரைந்து செல்வதும் பிறகு தளர்ந்து விடுவதுமாகப் பின்பற்றிக் கொண்டிருந்தார் ஆதிச்சதேவர்.

அவருக்குப் பொறுக்கவில்லை.

''நாம் எங்கே அந்தப் புலவனைப்பற்றி நமக்குத் தெரிந்த செய்திகளைச் சோழநாட்டில் சொல்லிவிடுவோமோ என்று அஞ்சுகிறார்கள். அதற்காகவே நம்மை இப்படிக் காட்டுக்கு அனுப்பி வனவிலங்குகளுக்கு இரை கொடுக்கப் பார்க் கிறார்கள். எனக்கென்னவோ நாம் உயிருடன் திரும்புவோம் என்ற நம்பிக்கையில்லை'' என்றார் அவர்.

''நீங்கள் சற்று விரைந்து வந்தால் நலமாக இருக்கும்'' என்றான் இளைஞன். ''இதோ, மலையடிவாரம் வந்து விட்டது. இனிமேல் குதிரையின் மேல் எப்படிப் போவதாம்?''

மலையடிவாரத்துக்குப் போவதற்கு முன்பாகவே எதிரில் நின்ற மரங்கள் அசைந்தன. சரசரவென்று சத்தம்

கேட்டது. வேல் முனைகள் ஒன்றோடொன்று மோதிக் கொள்ள ஐந்தாறு வீரர்கள் மரங்களிலிருந்து இறங்கி ஓடி வந் தார்கள். வந்தவர்கள் யாரென்றுகூடக் கேட்காமலே அவர்கள் மேல் வேல் எறிந்து விடுவார்கள் போல் தோன்றியது.

இளைஞன் குதிரையிலிருந்து இறங்கினான். ஆதிச்ச தேவரும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு குதித்தார்.

வந்தவர்கள் பேசுவதற்கு முன்பே, ''எங்கே உங்கள் வலது கைகளைக் காண்பியுங்கள்!' என்று கட்டளையிடும் குரலில் கூறினான் இளைஞன். அவர்களுடைய கரங்களில் மகரமீனின் சின்னம் பச்சை குத்தப் பெற்றிருந்தது. இளைஞன் தன் கரத்தையும் நீட்டினான். ஆதிச்சதேவரின் கரத்தையும் பற்றி இழுத்துக் காட்டினான். அதே சின்னம் அவர்களிடமும் இருந்தது.

ஓலையை அந்த வீரர்களின் தலைவனிடம் கொடுத்தான் இளைஞன். ''இவர்கள் இருவரும் நம் தலைவரின் பாதுகாப்பில் இருக்க வேண்டியவர்கள். உடனே அழைத்துச் சென்று சேர்ப்பியுங்கள்-புலவர்'' என்று எழுதப் பட்டிருந்தது ஓலையில்.

பணிவோடு அவர்களுடைய துணைக்கு இரு வீரர்களை அனுப்பிவைத்தான் காவல் தலைவன். முன்னும் பின்னுமாக அவர்கள் செல்ல, இடையில் ஆதிச்சதேவரும், அந்த இளைஞனும் ஒன்றி நடந்தார்கள். குதிரைகள் மலையடி வாரத்தில் நிறுத்தப்பட்டுவிட்டன.

கதிரவன் உச்சியில் இருந்தாலும் அங்கே சிறிதும் வெப்பமில்லை. அவர்கள் களைப்பின்றி நடந்தார்கள். நாலாபுறமும் திரும்பி அங்கு மண்டிக்கிடந்த பேரழகை விழிகளால் பருகிக்கொண்டே சென்றான் இளைஞன். வளைந்து வளைந்து மேலே சென்ற பாதையில் அவர்கள் மலையுச்சிக்குச் சென்றார்கள். பிறகு அதன் மறுபுறத்துக்கு இறங்கினார்கள். இளைஞனால் தன் விழிகளை நம்பவே முடியவில்லை.

மரங்கள் அடர்ந்த பகுதியினூடே வரிசை வரிசையாகக் கூரைவேய்ந்த பல குடிசைகள் தென்பட்டன. குடிசை களினுள் ளிருந்து புகைமூட்டம் எழுந்து கொண்டிருந்தது. மூங்கில் பட்டைகளாலான சுவர்கள், மலைப்புல் வேய்ந்த கூரைகள். பர்ணசாலைகள் அமைத்துக் கொண்டு கானகங் களில் முனிவர்கள் வாழ்ந்து வந்ததாக அந்த இளைஞன் கேள்வி யுற்றிருந்தான். இப்போது அவனுக்கு அந்த நினைவு வந்தது.

இலைக் குடில்களில் பெண்கள் யாரையுமே காண முடியவில்லை. எல்லோரும் ஆண்கள். கண்களில் ஐயம் மிதக்க அங்கே நுழைந்த புதியவர்கள் இருவரையும் பார்த்துவிட்டு அவர்கள் தங்கள் தங்கள் வேலைகளில் முனைந்திருந்தார்கள்.

சில இடங்களில் தரை மட்டத்துக்குமேல் பரண்களை அமைத்துக் குடில்களைக் கட்டியிருந்தார்கள். வனவிலங்கு களிடமிருந்து பாதுகாத்துக் கொள்ளக்கூடிய தனிக்குடில்கள் அவை.

திடீரென்று யானைகள் பிளிறும் குரல் பயங்கரமாக இருந்தது. இளைஞனின் கரத்தை இறுக்கமாகப் பற்றிக் கொண்டார் ஆதிச்சதேவர். இளைஞனும் தன்னையறியாது நடுங்கினான். ''யானைக் கூட்டத்துக்கு இடையில் அகப்பட்டுக் கொண்டோமா?''

வீரர்கள் அமைதியாகவே நடந்தார்கள். சத்தம் வந்த திசையில் திரும்பிப் பார்த்தபோது, அங்கே தொலைவில் பெரியதொரு யானைக்கூட்டம் தெரிந்தது. மந்தை மந்தையாக அவை மலைப் புல்லுக்கிடையில் ஓட்டமும் நடையுமாக வந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு யானையின் மீதும் அங்குசம் தாங்கிய ஒரு வீரன் அமர்ந்திருந்தான்!

இளைஞன் மெய்மறந்து நின்றுவிட்டான். குலோத்துங்க சோழச் சக்கரவர்த்தியின் யானைப் படைதான் இங்கு திரண்டு வந்துவிட்டதா! இருக்க முடியாது. நெடு நாட்களாக நாட்டில் இருந்து பழக்கப்பெற்ற யானைகளல்ல

இவை; அடர்ந்த உரோமங்களும், இயற்கையான உடல் வளமும், கதிரொளியில் மின்னும் கூர்மையான தந்தங்களும் கொண்ட காட்டு யானைக் கூட்டமிது.

மேலே நடந்தார்கள், பசியாறிக் கொள்வதற்கு வழியில் குலையில் பழுத்த வாழைகள் நிறைந்திருந்தன. அருவித் தண்ணீர் தேனாகச் சுவைத்தது. நாட்டு வாழைக் கனிகளுக்கு இல்லாத நிறம், மணம், சுவை அந்தக் கனிகளுக்கு.

தொலைவில் கம்பீரமான ஒற்றை மணியோசை கேட்டது. முன்னால் சென்ற காவலன் சட்டென்று பின்னால் வந்தவனைத் திரும்பிப் பார்த்தான். அவர்களுடைய முகத்தில் புத்தொளி பொங்கியது. நடையில் முன்னைக் காட்டிலும் மிடுக்குத் தென்பட்டது.

மணியோசை நெருங்கிக் கொண்டே வந்தது. யானையின் கழுத்து மணி ஓசை அது.

''என்ன?'' என்று கேட்டான் இளைஞன்.

''தலைவர் வருகிறார்''என்று பயபக்தியோடு கூறினான் காவலன்.

யானை வருவதற்கு முன்பே அதன் மணிஓசை வந்ததைப் போன்று, தலைவன் வருவதற்கு முன்பே அவன் வலிமையையும் புகழையும் அந்த வீரர்களின் முகங் களிலிருந்து கண்டு கொண்டான் இளைஞன். 'மனிதர் நெருங்கவும் அஞ்சும் இந்தக் கானகத்துக்குள் ஒரு புதிய நாட்டையே அல்லவோ உருவாக்கியிருக்கிறான்; யானைக் கூட்டத்தை மடக்கிப் பசுக் கூட்டமெனப் பழக்கியிருக்கும் அந்த வித்தகன் எப்படியிருப்பான்?'

தொலைவில் எதிரில் யானை தெரிந்தது. வீரர்கள் இருவரும் முன்னால் ஓடிச் சென்று சிரம் தாழ்த்தி வணங்கி நின்றார்கள். யானையில் இருந்தவனை இளைஞன் நோக்கினான். இளைஞனைத் தலைவனும் நோக்கினான். இருவரும் ஒருவரையொருவர் நோக்கியவாறே அவரவர் இடத்தில் இருந்தனர். தன்னை மறந்திருந்த இளைஞன் சுய

உணர்வு பெற்றவன்போல் ஆனந்தக்கண்ணீர் பொங்கக் கரம் கூப்பினான். ஆதிச்ச தேவர் மகிழ்ச்சிப் பெருக்குத் தாங்காமல் வாய்விட்டுக் கூவி விடுவார் போல் தோன்றியது.

யானை சற்று முன்னே வந்தது. துதிக்கையால் இளைஞனின் இடையை வளைத்து அவனைத் தூக்கித் தலைவனிடம் கொடுத்தது. அப்படியே தலைவனின் பரந்த மார்பகத்தில் சாய்ந்துவிடத் துடித்தான் இளைஞன். அடுத்தாற் போல் ஆதிச்சதேவருக்கும் யானை தன் காலை மடக்கிக் கொடுத்தது. அவரும் ஏறிக்கொண்டு தலைவனின் பின்புறம் அமர்ந்தார். யானை திரும்பி நடந்தது.

தலைவன் மெல்ல இளைஞனின் காதருகில் வந்து, "இளைஞனே! உன் பெயரை நான் அறிந்துகொள்ளலாமா?" என்று கேட்டான்.

"தந்தையார் எனக்குப் பெயர் வைக்க மறந்து விட்டார்!"

"கயல்விழி என்ற பெயர் யார் வைத்த பெயரோ?"

"அதை யாருமே இவ்வளவு அன்போடு அழைத்த தில்லை!" என்று அவனுக்கு மட்டிலும் கேட்கும்படியாகக் கூறினாள் அவள்.

## 25. ஆரண்யத்தில் ஓர் அரண்மனை



கயல்விழி எப்போதாவது கூத்துக்களில் நடிப்பதற்காக ஆண் வேடம் புனைந்துகொள்வதுண்டு. அதற்காக அவள் நாணமுற்ற தில்லை. இப்போது பைந்தமிழ்க் குமரனுக்கு அருகிலேயே இளை ஞனின் தோற்றத்தில் யானையின் மீது அமர்ந்து சென்றது அவளுக்கு

என்னவோபோல் இருந்தது. அவளையும் அவள் தந்தையாரையும் அங்கே அனுப்பி வைத்த விழுப்பரையர், 'ஏலமலைக் காட்டில் உள்ள தலைவர் எனக்கு உற்ற நண்பர், அவரிடம் புகலிடம் பெற்று நீங்கள் பாதுகாப்புடன் இருக்கலாம்' என்றுதான் கூறினாரே தவிர, அந்த உற்ற நண்பர், யாரென்று விவரித்துக் கூறவில்லை.

எல்லையற்ற பூரிப்பும், பெருமையும், செருக்கும் நிறைந்தன கயல்விழியின் உள்ளத்தில். நீண்டு முதிர்ந்த கொம்புகளை உடைய பெருங் களிற்றின்மீது அமர்ந்து செல்லும்போது ஏற்படும் உணர்வு இருக்கிறதே அது விவரிக்க இயலாத ஒன்று. கயல்விழிக்கு அப்போது தன்னைச் சுற்றியிருந்த உலகம் மிகச் சிறியதாகத் தோன்றியது. காடுகள், மலைகள், அருவிகள் யாவுமே விளையாட்டுப் பொம்மை களாகக் காட்சியளித்தன. இந்த மனநிலையை அவளிடம் ஏற்படுத்திய தலைவன் மட்டிலும் மிக உயர்ந்தவனாக, மிகவும் ஆற்றல் நிறைந்தவனாக, எதையும் சாதிக்கவல்ல வித்தகனாக அவள் உள்ளத்தில் வளர்ந்து கொண்டிருந்தான்.

சட்டென்று அவனைத் திரும்பிப் பார்த்தாள் கயல்விழி. முன்பின் பார்த்தே அறியாத ஒரு விந்தை மனிதனை வேடிக்கை பார்ப்பதுபோல் பார்த்தாள்.

''நான் இனிமேல் உங்களைத் தலைவர் என்றுதான் அழைக்கப் போகிறேன்'' என்று பெருமிதத்தோடு மெல்லக் கூறினாள்.

''தலைவியாரின் சித்தம் அதுவானால் எனக்கும் அது பெருமைதான்'' என்றான் பைந்தமிழ்க்குமரன்.

''என்னைத் தலைவியாக்கி விட்டீர்களே...!''

''நான் தலைவனென்றால்?''

தலைவி முகம் சிவக்க நாணித் தலைகவிழ்ந்தாள். அவர்களுக்குப் பின்புறம் அமர்ந்துவந்த ஆதிச்சதேவர் வேறு எதையும் கவனிக்கும் மனநிலையில் அப்போது இல்லை. யானையின் மீதிருந்து கீழே விழுந்துவிடாமல்

இருப்பது எப்படி என்ற கவலைதான் அவருக்கு. ஓட்டமும் நடையுமாக யானை விரைந்து செல்லத் தொடங்கியது. அதன் வயிற்றைச் சுற்றிக் கட்டியிருந்த கயிற்றை முதுகுப்புறம் இறுகப் பற்றிக் கொண்டார்.

எதிரில் கடலைப்போல் பரந்து கிடந்தது ஓர் ஆறு. அதன் இடையில் சின்னஞ்சிறு தீவுகளைப் போன்று சில நிலத் திட்டுக்கள் தெரிந்தன. தொலைவில் தெரிந்த மறுகரையில் அடர்ந்த காடுகள் போர்த்த மலைகள் காணப்பட்டன. மாலை மயங்கும் நேரம் அது.

தோணித்துறை போன்ற ஓர் இடத்தை நோக்கி மேட்டிலிருந்து இறங்கிச் சென்றது யானை.

''நாம் இந்த ஆற்றைக் கடந்து செல்லப் போகிறோமா?'' என்று அச்சத்தோடு கேட்டார் ஆதிச்சதேவர்.

''ஆமாம்.''

''பரிசிலோ தோணியோ இங்கு காணவில்லையே?''

''இதோ இருக்கிறதே, தோணி!'' என்று யானையின் மத்தகத்தை அன்போடு தட்டிக்கொடுத்தான் பைந்தமிழ்க் குமரன். யானை உற்சாகத்தோடு நீருக்குள் இறங்கி நிதானமாகச் சென்றது. ஆழம் மிகுதியாக மிகுதியாகத் தண்ணீர் ஆதிச்சதேவரின் கால்களை நனைக்கத் தொடங்கியது. அவர் அங்கையற்கண்ணி அம்மையைத் தியானம் செய்ய முனைந்து விட்டார். 'தேவி, நீ பத்திரமாகக் கரை சேர்த்து விடு! என்றைக்கு இந்த இளைஞனிடம் கயல்விழி மயக்கம் கொண்டாளோ, அன்றிலிருந்து ஆபத்துக்கள் வந்து கொண்டேயிருக்கின்றன. இல்லை, இல்லை; ஆபத்துக்கள் தாமாக வருவதில்லை. அவைகளை நாடி இவன் எங்களையும் இழுத்துக்கொண்டு போகிறான்; தேவி, நீதான் காப்பாற்றவேண்டும்!'

நடு ஆற்றைக் கடந்து மிகவும் எச்சரிக்கையுடன் அடி எடுத்து வைத்துச் சென்றது களிறு. கயல்விழியின் மெல்லுடல் அச்சத்தால் நடுங்கியதைக் கண்டவுடன் மெல்ல அவள்

கரத்தைப் பற்றினான் பைந்தமிழ்க் குமரன். அந்தக் கரத்துக்குள் என்ன ஆற்றல் மறைந்து கிடந்ததோ தெரியவில்லை. எல்லையற்ற மனத்திண்மை ஊற்றுப் பெருக்கெடுத்தது கயல்விழிக்கு.

ஆதிச்சதேவர் கேட்டார்: ''நட்டாற்றில் போகும் போது திடீரென்று வெள்ளம் வந்துவிட்டால் என்ன செய்வது?''

''வராது!'' என்றான் இளைஞன்.

''வந்துவிட்டால்?'' என்றார் அவர்.

''அப்படியும் வந்தால் வந்துவிட்டுப் போகட்டுமே!''

என்று கூறி நகைத்தான் தலைவன். ''நம்முடைய பிறப்பும் நம்மைக் கேட்டுக்கொண்டு வரவில்லை; இறப்பும் நம்மைக் கேட்டுக்கொண்டு வரப்போவதில்லை. இறக்கத் துணிந்து விட்டால், முதலில் நம்முடைய துன்பங்கள் இறந்து போகும்!''

வெள்ளம் வந்தாலுமே இப்போது கயல்விழிக்கு அச்சமில்லை. அவனுடைய கரத்தின் இரும்புப் பிடியில் அவள் இருந்தாள். மரணம் வந்தபோதும் அவன் அந்தப் பிடியைத் தளர விடமாட்டான்!

ஆற்றுக்கு மையத்திலிருந்த ஒரு சிறு தீவுக்கு அவர்கள் வந்தார்கள். அங்கே கட்டை மரங்களால் செய்யப் பெற்ற ஒரு தோணி கரையில் கிடந்தது. யானை மீதிருந்து அவர்கள் இருவரையும் இறக்கிவிட்டுத் தானும் இறங்கினான் பைந்தமிழ்க் குமரன். யானையை அங்கிருந்த மரத்தில் கட்டினான். பிறகு திட்டின்மீது செல்லப் படிகளில் ஏறி நடந்தான். தரையை வெட்டிச் செதுக்கி மேலே செல்லப் பாதை அமைக்கப்பட்டிருந்தது. பாதை முடிவடையும் இடத்தில் உயரே இருந்த மூங்கில் தட்டியை விலக்கினான் பைந்தமிழ்க்குமரன். கயல்விழிக்கு அங்கே கண்ட காட்சி அவளை மெய்சிலிர்க்கச் செய்தது.

சுற்றிலும் மரங்களும் செடி கொடிகளும் அடர்ந்திருக்க அதன் மத்தியில் ஓர் அழகிய வீடு தென்பட்டது. புல்வேய்ந்த வீடு தான். சாளரங்களும் கதவுகளும் கொண்ட மண் சுவர் வீடு அது.

மூங்கில் தட்டிக்கும் வீட்டுக்கும் இடையில் ஓர் அகழி தென்பட்டது. சிறிய மூங்கில் பாலத்தின் மீது நடந்து அவர்கள் அகழியைத் தாண்டினார்கள். வீட்டுக்குள்ளிருந்து ஓடிவந்த பணியாள் ஒருவன், அவர்கள் பாலத்தைக் கடந்தவுடன் அதை மெல்லத் தூக்கிக் கயிற்றால் கட்டினான்.

'என்ன இது?' என்று வினவுவதுபோல் பைந்தமிழ்க் குமரனைப் பார்த்தாள் கயல்விழி.

''இரவு வேளைகளில் யானைகளோ மற்றக் காட்டு மிருகங்களோ வராமல் இருக்க வேண்டுமல்லவா? அகழியைத் தாண்டி அவைகளால் வர முடியாது; பகலில் பாலத்தை இறக்கி விட்டுக்கொண்டு நாம் வெளியில் சென்று வரலாம். இரவில் அதை இழுத்துக் கட்டிவிடுவோம்!''

''ஆரண்யத்துக்குள் இது ஓர் அரண்மனை என்று சொல்லுங்கள்!'' என்று குதூகலத்துடன் கூறினாள் கயல்விழி. ''சுற்றிலும் காட்டு அரண் இருக்கிறது; மலை அரண் இருக்கிறது; நதி அரண் இருக்கிறது; அகழியும் தோண்டி விட்டீர்கள். இது ஓர் அரண்மனையேதான்!''

''நீ அரசியாகவும் நான் அரசனாகவும் மாறும்போது இதுவே நம் அரண்மனையாக இருக்கும்; வசந்த மாளிகையாக இருக்கும்'' என்று அவள் செவிகளில் கூறினான் அந்த இளவரசன். இரு பொருள்பட அவன் கூறும்போது அவனுக்குள் பேருவகை பொங்கியது.

ஆரண்யத்து அரண்மனையான அந்தக் குடிலுக்குள் விளக்குகள் சுடர்விட்டு ஒளிர்ந்தன. நறுமணப்புகை மெல்லச் சுழன்று கொண்டிருந்தது. குடிலுக்குள் அழைத்துச் சென்று அதைச் சுட்டிக் காட்டினான் தலைவன். ஓலைச் சுவடிகள் நிறைந்த ஓர் அறை மட்டிலும் பூசனை அறை போன்ற தோற்றத்தை அளித்துக் கொண்டிருந்தது. அதில் தெய்வப் புலவர் திருவள்ளுவரும் கற்பனைச் செல்வர் கம்பர் பெருமானும் அருகருகே தங்கள் சுவடிகளில் வீற்றிருந்தார்கள். மணம் கமழும் மலர்கள் அவர்கள் மீது தூவப் பெற்றிருந்தன.

''என்னுடைய தவச்சாலை இதுதான்'' என்றான் பைந்தமிழ்க் குமரன்.

''இங்கும் தவம் செய்கிறீர்களா?'' என்றாள் கயல்விழி. அப்போது அவளுக்குத் திருக்கொடுங்குன்றத்தில் ஒருநாள் காலையில் அவனைச் சரக்கொன்றை மரத்தடியில் தவக் கோலத்தில் கண்ட காட்சி நினைவுக்கு வந்தது. அவள் உள்ளத்தில் பசுமையாகப் பதிந்துவிட்ட அற்புதக் காட்சி அது.

''ஆமாம்; என்னுடைய தலைவர்களோடு நான் இங்கு தான் உரையாடுகிறேன். அவர்கள் தங்களுடைய கருத்துச் செல்வத்தை எனக்கு வழங்குகிறார்கள். நான் அவற்றை ஏற்றுக்கொண்டு, நம்முடைய இலட்சியத்துக்காகச் சிந்தனைத் தவம் செய்கிறேன். அந்தத் தவமே எனக்குச் செயலாற்றல் தருகிறது. இந்தக் கானகத்தில் இப்போது ஓராயிரம் போர்க் களிறுகள் பாண்டிய நாட்டை விடுவிக்கச் சித்தமாக இருக்கின்றன.''

வாயடைத்துப் போனாள் கயல்விழி. 'ஏட்டில் வெறும் பாட்டெழுதுவதோடு நின்றுவிடும் புலவரல்லர் இவர். வள்ளுவரையும் கம்பரையும் தமது புலமைக்காக மட்டும் இவர் கற்கவில்லை. அவர்களைப் பயன்படுத்தத் துணிந்து விட்டார். வெற்றியும் கண்டுவிட்டார்!'

''ஆமாம். உங்களைப் பற்றி ஒன்றும் கூறவில்லையே?'' என்றான் பைந்தமிழ்க்குமரன்.

நடந்த செய்திகளனைத்தையும் கயல்விழி தெரிவித்தாள். ''சோழ நாட்டு ஒற்றர்கள் எப்படியாவது என்னைச் சிறைப்பிடித்துக் கொண்டு போகத் துணிந்து விட்டார்கள். விழுப்பரையர் வந்து நம்முடைய குழுவினரைத் திருமுனைப்பாடி நாட்டுக்கு அனுப்பி வைத்தார். என்னையும் தந்தையாரையும் இங்கு அனுப்பினார். ஆனால் இங்குள்ள தலைவர் யார் என்பதை மட்டும் அவர் கூறவில்லை.''

''சிறை தப்பி வந்து காட்டுக்குள் மறைந்து வாழும் தலைவனுக்குத் துணையாக, சிறைக்கு அஞ்சி நடுங்கும்

தலைவியை அனுப்பியுள்ளார் போலும்!'' என்று கூறி நகைத்தான் பைந்தமிழ்க் குமரன்.

## 26. வசந்தம் வந்தது



ஏலமலைக் காட்டின் தலைவனாக விளங்கிய பைந்தமிழ்க் குமரனின் அன்றாட நடவடிக்கைகளை ஊன்றிக் கவனித்தாள் கயல்விழி. கருக்கிருட்டு நேரத்திலேயே எழுந்து அவன் ஆற்று வெள்ளத்தில் சிறு பொழுது நீந்தித் திளைப்பான். பிறகு தன்னுடைய தவச்சாலையாகிய கூடத்துக்குள் புகுந்து வள்ளுவரையும் கம்பரையும் படித்துவிட்டுத் தியானத்தில் ஆழ்ந்து விடுவான். அதற்குள் அவனுக்குக் காலை உணவு சித்தமாகிவிடும். பழங்கள், கிழங்குகள், தேன் இவையே அவனுடைய முற்பகல் உணவு. பின்னர் ஆதிச்ச தேவரையும் அழைத்துக் கொண்டு வெளியில் கிளம்பி விடுவான்.

மாலையில் களைப்பு மிகுந்து குடிலுக்குத் திரும்புவதற்குள் விளக்கேற்றும் நேரமாகிவிடும். திரும்பவும் ஆற்று வெள்ளத்தில் நீந்துவான். கயல்விழியோடு உரையாடுவான். உணவுக்குப் பின்னர், மறுநாள் அலுவல்களைப் பற்றிச் சிந்தித்துவிட்டு உறங்கச் செல்வான்.

ஒவ்வொரு நாள் இரவிலும் ஆதிச்சதேவர் தம்முடைய குமாரத்தியிடம் அவர் கண்டதையும் கேட்டதையும் பற்றிக் கதை கதையாகச் சொல்வார். கயல்விழி அந்தக் குடிலுக்குள் நுழைந்தவுடனேயே மாறு வேடத்தைக் களைந்துவிட்டுக் கயல்விழியாகி விட்டாள்!

''கயல்விழி! உனக்கு ஒரு இரகசியம் தெரியுமா?'' என்றார் ஆதிச்சதேவர்.

''என்ன?''

''பைந்தமிழ்க்குமரன் ஒரு படைத் தலைவர்; காடுகளுக்குள் இரண்டாயிரம் போர் வீரர்களுக்கு மேல் இருப்பார்கள் என்று தெரிகிறது. ஆயுதங்கள் எங்கிருந்துதான் வருகின்றனவோ தெரியவில்லை. பயிற்சி நடக்கும் பொட்டல்கள் அங்கங்கே மறைவாக இருக்கின்றன. உண்மை யான போரைவிடக் கடுமையாகத் தாக்கிக் கொள்கிறார்கள்'' என்றார் வியப்புடன்.

''யாருக்கும் காயமோ ஆபத்தோ ஏற்படாதோ?''

''மருத்துவச் சாலைகளையும் பார்த்தேன். பைந்தமிழ்க் குமரன் தினம் அங்குபோய் வீரர்களைப் பார்த்து வருகிறார். இவரிடம் எல்லோரும் உயிரையே வைத்திருக்கிறார்கள்.''

எல்லோரும் உயிரையே வைத்திருக்கிறார்கள் என்பதைக் கேள்வியுற்றவுடன் கயல்விழிக்கு ஓர் ஐயம் எழுந்தது.

''எல்லோரும் ஆண்கள்தானா, அல்லது பெண்களும் இருக்கிறார்களா?''

''ஒரே ஒரு பெண்தான் இருக்கிறாள்; அவள்தான் மற்ற எல்லோரையும்விட இவரிடம் மதிமயங்கி இருக்கிறாள்'' என்று கவலையோடு கூறினார்.

''என்ன?'' கயல்விழி ஆத்திரத்துடன் தந்தையாரைப் பற்றிக் குலுக்கினாள். ''பெண் வேறு இருக்கிறாளா? அவளிடம் இவர் பழகுகிறாரா?''

''ஆமாம். அந்தப் பெண்ணுக்குத் தன் தந்தையாரைவிட தலைவரிடம் பற்றுதல் அதிகம்! அவள் இப்போது இங்குதான் இருக்கிறாள்!'' என்று கூறி நகைத்தார் அவர். கயல்விழியின் உயிர் அவளிடம் திரும்பி வந்தது.

''தலைவருக்கோ தம் தலைவியைவிட இந்தக் காட்டில் உள்ள யானைகளிடம் தான் பற்றுதல் அதிகம் என்று தெரிகிறது. வீரர்களிடம்தான் அவர் நேசம் வைத்திருக்கிறார்.

இரகசியமாக நாலைந்து படைத் தலைவர்களோடு அடிக்கடி இவர் ஒரு குடிலுக்குள் புகுந்துகொண்டு பேசுகிறார். எனக்கு வேறு ஏதாவது வேலை கொடுத்துவிட்டு அப்போது நழுவி விடுகிறார்'' என்றார் ஆதிச்சதேவர்.

''ஏதாவது அந்தரங்க ஆலோசனைகள் நடத்துவார்கள். ஏன், நீங்களும் படைத்தலைவராக விரும்பினால் உங்களையும் அழைத்துக் கொள்ளச் சொல்கிறேன்!''

''வேண்டாம், வேண்டவே வேண்டாம்'' என்றார் அவர். ''இந்த இரகசியங்களை அவர் யாரிடமும் கூற வேண்டாமென்றார். நான் உன்னிடம் கூறி விட்டேன்.''

''என்னிடம் கூறியதோடு இருக்கட்டும்'' என்றாள் கயல்விழி.

கயல்விழிக்கு இப்போது அங்கே நாள் முழுவதும் பணிகள் இருந்தன. பைந்தமிழ்க் குமரனுக்கு முன்பாகவே தந்தையாரை எழுப்பிவிட்டு இருவரும் ஆற்றில் நீராடிவிட்டு வந்தார்கள். அவனுக்காக மலர் கொய்து வைப்பது, துப்புரவு செய்வது, உணவைக் கவனிப்பது முதலிய பல கடமைகளை அவளே மேற்கொண்டு விட்டாள். அந்த ஆரண்யத்துச் சிறு குடிலுக்கு அவளுடைய கைவண்ணத்தால் நாளுக்கு நாள் ஒளி மிகுந்து கொண்டே வந்தது. வண்ண வண்ணமாகக் கோலமிட்டாள். செஞ்சாந்து பூசினாள். மலர் கொய்து நிரப்பினாள். 'ஒரு பெண்ணின் துணை கிடைத்தவுடன் இந்தக் குடில் எவ்வளவு அழகாக மாறிவிட்டது!' என்று ஆனந்தம் கொண்டான் பைந்தமிழ்க்குமரன்.

கயல்விழியின் வாழ்வில் இவ்வளவு குதூகலம் நிறைந்த நாட்களை அவள் கண்டதில்லையென்றாலும், அவளுடைய தந்தையார் கூறிய ஒரு செய்தி மட்டிலும் அவள் உள்ளத்தில் வித்தாக விழுந்து முளைத்து வளரத் தொடங்கியது. 'யானைகளிடம் உன் தலைவருக்குப் பற்றுதல் அதிகம்; வீரர்களிடம் தான் அவர் நேசம் வைத்திருக்கிறார்' என்ற சொற்களை மட்டும் அவளால் மறக்க முடியவில்லை.

பைந்தமிழ்க்குமரன் அவளிடம் நடந்து கொண்ட விதமும் அவளுக்கு அப்படித்தான் தோன்றியது. கொடுங்குன்றத்தில் உலவிய குமரனாக அவன் இருக்கவில்லை. பற்றற்ற யோகி ஒருவன் தன் பணிப் பெண்ணிடம் காட்டும் அன்பை ஒத்திருந்தன அவனுடைய சொற்களும் செயல்களும். அன்பில் அணுவளவும் குறைவில்லை. ஆனாலும் ஏதோ ஒரு மென்திரையை அவர்களுக்கிடையில் அவன் தொங்க விட்டிருப்பதாக அவள் நினைத்தாள்.

இளவேனிற் காலம் கயல்விழிக்கு தன் அன்புக் கரத்தை நீட்டியது. மலர்கள் கொள்ளை கொள்ளையாகப் பூத்துச் சொரிந்தன. கதிரொளியில் குளுமை கலந்தது. இளந்தளிர்கள் செம்பொன் மேனி பெற்று மென்காற்றில் துடித்தன. தேன் சிட்டுக்கள் கூட்டம் கூட்டமாக அந்தக் குடிலைச் சுற்றிப் பறந்து திரிந்தன.

அன்றைக்குப் பூர்ணிமை. முழு நிலவே ஆற்று நீராக மாறி அந்த திட்டைச் சூழ்ந்து பெருகுவது போல் தோன்றியது கயல்விழிக்கு. இமயத்திலே தவக்கோலம் பூண்டிருந்த தன் தலைவனை வெற்றி கொள்ளத் துடித்தாள் அல்லவா இமயவரம்பனின் குமாரத்தி? அந்தப் பார்வதியின் மனநிலை கயல்விழியிடம் துளும்பியது. காட்டு மலர்களையும் தளிர்களையும் கொய்து கூந்தல் நிறையச் சூடிக்கொண்டாள். மலர் வளையங்களாலான கங்கணங்கள் அவளுடைய மென்தளிர்க் கரங்களை அலங்கரித்தன. செவிகளில் மகரக் குழையணிந்து கொண்டாள். அவன் வரவு நோக்கி ஆற்றங்கரையின் விளிம்புக்கு வந்து காத்திருந்தாள்.

கயல்விழியின் புதுமைத் தோற்றத்தைக் கண்ட பைந்தமிழ்க் குமரன், மெய்ம்மறந்து அவள் எதிரில் சில விநாடிகள் நின்று விட்டான். கண்களில் அவளுக்கு கனவு மிகுந்தது; செவ்விதழ்கள் புதுப் பொலிவு பெற்றிருந்தன; குறுநகையும் விழிக்கோணத்தின் கூரம்புகளாக அவள் அவன் முன்பு நின்றாள்.

''வசந்தம் நம் அரண்மனைக்கே வந்து விட்டதுபோல் இருக்கிறது!'' என்றான் பைந்தமிழ்க் குமரன்.

''அரண்மனைக்கு மட்டிலும் வரவில்லை. அதற்குள்ளே வாழ்பவர்களையும் தேடிக்கொண்டிருக்கிறது. இன்றைக்குச் சித்திரை மாதத்துப் பௌர்ணமியல்லவா?''

''ஓ! நிலவு அதற்குள் உதயமாகி விட்டதே!'' என்று கூறிக் கலகலவென்று நகைத்தான் பைந்தமிழ்க் குமரன்.

''இந்நிலையில் எனக்குத் தோணியில் நம் அரண்மனையைச் சுற்றி வர வேண்டுமென்ற ஆவல் பிறந்திருக்கிறது.''

''அரசியாரின் சித்தம் அதுவென்றால் இந்த அடிமை தோணிக்குத் துடுப்புத் தள்ளி மகிழ்வேன்!'' என்றான்.

உணவு முடிந்த பின்பு பணியாளன் உறங்கத் தொடங்கினான். ஆதிச்சதேவர் தமது அன்றைய பெருமைகளைக் கூறி விட்டுக் கண்ணிமைகளை மூடினார். கயல்விழி மெல்ல எழுந்து வந்தாள். தலைவனுக்காக அவள் தொடுத்து வைத்திருந்த மலர் மாலையில் தேன் துளிகள் சிதறியிருந்தன. அதை எடுத்துக்கொண்டு அகழிப் பாலத்தின் அருகில் வந்தாள். அவன் அங்கு மதியொளி வெள்ளத்தில் மூழ்கி நின்றான்.

மாலையை நாணத்தோடு அவன் கழுத்தில் அணிவித்து விட்டு தயங்கி நின்றாள் அவள். பைந்தமிழ்க்குமரனுக்கு அப்போது அவனுடைய ஆயிரம் யானைகளின் வலிமையும் ஒன்றாய்த் திரண்டு அவன் தோளுக்கு வந்துவிட்டதுபோல் தோன்றியது. அவள் கரத்தைப் பற்றியவாறே தோணிக்கு அவளை அழைத்துச் சென்றான்.

# 27. சித்திரை நிலவு



அமைதி பொங்கச் சலசலத்தோடும் ஆற்றின் போக்கை ஒட்டி ஒரு வண்ணப்படகு மிதந்து கொண்டிருந்தது. அதைத் தன் போக்கில் போகவிட்டு மெய்மறந்து இயற்கையழகில் ஒன்றியிருந்தான் பைந்தமிழ்க் குமரன். கயல்விழி அவன் கழுத்தில் அணிவித்த மலர் மாலையிலிருந்து சுழன்ற நறுமணம் அந்தப் படகு முழுவதிலும் வட்டமிட்டது. கயல்விழியும் அப்போது கிறங்கித்தான் போயிருந்தாள்.

யோகத்தின் எல்லையிலும் மௌனந்தான்; இன்பத்தின் எல்லையிலும் மௌனந்தான். அங்கும் அப்படியோர் எல்லையற்ற இன்பத்தின் மௌனம் நிலவிக் கொண்டிருந்தது.

அந்த மௌனத்தினூடே இழையோடும் நுண்ணிய மெல் லிசையை ஆற்று நீர் எழுப்பிக் கொண்டிருந்தது. தொலை தூரத்து யாழ் ஒலியின் நாதம் போன்ற ஒரு மோன கீதம்...

புலன் பெற்ற இன்பங்கள் அனைத்தையும் முதன்முறை யாக அன்றுதான் பைந்தமிழ்க் குமரன் உணரத் தொடங் கினான் போலும்! கண்களை அகலத் திறந்து கொண்டு ஆற்றங் கரையின் இருபுறங்களையும் பார்த்தான். சித்திரை நிலவில் அது ஓர் அற்புதமான உலகம் என்பது தெரிந்தது. வானத்திலே வண்ணப்படகாக மிதந்த முழுமதிச் செல்வத்தையும், தன்னுடைய வண்ணப்படகையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, ''கயல்விழி! கயல்விழி! அதோ, அங்கு பார்!'' என்று அவளுக்கு வானத்தைக் காட்டினான்.

கயல்விழி ஆவலோடு விழிகளைத் திருப்பினாள்.

''நம்முடைய வண்ணப் படகின் பிரதிபிம்பந்தான் அந்த முழுநிலவு. கூர்ந்து பார்த்தால் நம்முடைய உருவங்களைக்

கூட நீ அங்கே காணலாம். நான் அமர்ந்திருக்க, நீ அருகில் துவண்டு கிடக்கும் அதே தோற்றம் நிலவிலும் தெரிகிற தல்லவா? நாம் ஆற்றில் மிதக்கிறோம்; அது வானத்தில் மிதக்கிறது; அடடா, எவ்வளவு அழகு!''

கலீரென்று சிரித்து விட்டாள் கயல்விழி. அவளுடைய நகைப்பின் காரணம் தெரியாமல் அவன் விழித்தான்.

''நான் இங்கு வந்து இத்தனை நாட்களுக்குப் பிறகு இன்றுதான் கொடுங்குன்றத்தின் இளங்கவிஞரைக் காணுகின்றேன். இயற்கையின் அழகு கூடத் தங்கள் கண்ணுக்குத் தோன்றுகிறதே!''

பைந்தமிழ்க்குமரனுடைய உள்ளத்தில் இது மலர்க் கணையாகப் பாய்ந்து வருத்தியது. திடீரென்று உறக்கத் திலிருந்து விழித்துக்கொண்ட உணர்வு அவனை ஆட் கொண்டது. 'ஆமாம், கொள்ளை கொள்ளையாக இயற்கை யின் எழிலெல்லாம் ஒன்று திரண்டு கிடந்த இந்த இடத்தின் அருமையை நான் ஏன் இதுவரை உணரவில்லை? வானுயற ஓங்கி வளர்ந்த இத்தனை மரக் கூட்டங்களையும், வண்ண வண்ணமான தோற்றங்களுடன் சிறகடித்துப் பறக்கும் புல்லினங்களையும், பூத்துச் சொரியும் மலர்க் கூட்டத்தையும், பொங்கித் தாவும் அருவிகளையும் நான் ஏன் இதுவரை காண மறந்தேன்? இத்தனை மாதங்களாக எப்படி என்னால் இந்த இன்பங்களையெல்லாம் மறந்திருக்க முடிந்தது?'

''கிடைத்தற்கரிய பெருஞ்செல்வமான இந்த இன்பத்தை யெல்லாம் நான் மறந்தே போய்விட்டேன், கயல்விழி!'' என்றான் அவன்.

''இயற்கை அழகை மட்டுந்தானா தாங்கள் மறந்திருந் தீர்கள்?'' என்று கேட்டுவிட்டு, இப்படிக் கேட்டதற்காக நாணப்படுபவள்போல், தன் முகத்தை மலர்க் கரங்களுக்குள் புதைத்துக் கொண்டாள் அவள்.

அவள் தொடுத்த இந்த இரண்டாவது சொற்கணை அவனுடைய இதயத்தையே ஒரு குலுக்குக்குலுக்கிவிட்டது.

தன் விழிகளால் அந்தப் பேர் எழிற்செல்வியின் பொன்மேனி வண்ணத்தை அன்பின் வேட்கையோடு பருகினான். 'அழகுச் சுடரால்தான் மற்றோர் அழகையும் சுட்டிக்காட்ட முடியும்! கண்களுக்குப் புத்தொளியும், உள்ளுணர்வுக்கு அன்பமுதமும், ஆவிக்கு எல்லையற்ற இன்பத்தையும் இவள் ஒருத்தியால் தான் வாரி வழங்க முடியும்!'

''கயல்விழி! இதுவரையில் என்னுடைய சிந்தனை, பேச்சு, செயல் யாவுமே ஒன்றே ஒன்றின்மீதுதான் குவிந்திருந் தன. விழிகள், செவிகள், உடல், செயல் அனைத்திலுமே என்னுடைய லட்சியத்தைத் தவிர வேறெதுவும் இல்லை. ஒருவகையில் லட்சியப் பித்தனாகி விட்டேன் நான்.''

''தவம்செய்வது என்றால் என்ன என்பதை நான் கண்டு கொண்டேன்'' என்று பெருமிதத்தோடு கூறினாள் கயல்விழி. ''இந்திர பதவி வேண்டும் என்பதற்காக இப்படித் தான் முன்னோர்கள் புலனடக்கிக் கடுந்தவம் புரிந்திருக்கிறார்கள். விசுவாமித்திரர்கூட இப்படித்தான் தவம் புரிந்தாராம். நீங்கள் இந்திரனைவிட இன்னும் உயர்ந்தவராக வந்தாலும் நான் வியப்படைய மாட்டேன். அவ்வளவு மனவலிமை பெற்றவர் தாங்கள்!''

இந்திரனைப் போன்ற பெரும் பேறு கிடைக்கும் என்று அவள் கூறிய சொற்களை அவன் மதுரைத்திருநகரில் கோயில் கொண்டருளிய அங்கயற்கண்ணியின் வாக்காகவே எடுத்துக் கொண்டான். அந்தக் கணத்திலேயே பாண்டிய நாடு அவன் இதயத்துக்குள் தன்னுரிமை பெற்று விளங்கியது!

''கயல்விழி! இந்திரப்பேறு பெறுவதற்காகக் கடுந்தவம் புரிந்தவர்களைப் பற்றி நீ கூறுகிறாய். அந்தப் பேறு பெறுவதைவிட நம்முடைய லட்சியம் மிகவும் கடுமை யானது. சோழ சாம்ராஜ்யத்துடன் நாம் முந்நூறு ஆண்டுகள் அடிமைப்பட்டு வாழ்வது உனக்குத் தெரியும். பல தலைமுறைகளாக அடிமைப்பட்டுக் கிடந்த இந்த நாட்டை விடுவிப்பதாக நான் உன்னிடம் சபதம் செய்து கொடுத்து

விட்டேன். உன்னிடம் வைகைக் கரையில் சபதம் செய்து கொடுத்தபோது நான் எப்படியிருந்தேன் தெரியுமா?''

''குற்றுயிரும் குலை உயிருமாக இருந்தீர்கள். விழுப் புண்கள் பட்டு மரணத்துடன் போராடிக் கொண்டிருந்தீர்கள்'' என்றபோது கயல்விழியின் குரல் தழுதழுத்தது.

''ஆமாம்! அந்த நிலையில் இருந்த நான் ஒரு பித்தனைப் போல் உன்னிடம் சபதமிட்டேன். என்னுடைய முதல் வெற்றி அதே கணத்தில் கிடைத்தது. உன்னை மரணத்திலிருந்து காப்பாற்றி விட்டேன். அப்போதே எனது நாட்டையும் மக்களையும் அழிவிலிருந்து காப்பாற்றிவிட முடியும் என்ற எண்ணம் எனக்கு வந்துவிட்டது. அந்த எண்ணம் எப்படி வந்தது என்று மட்டும் கேட்காதே! ஒரு வேளை, நீயே அந்த நம்பிக்கையை உனக்குத் தெரியாமல் எனக்குக் கொடுத் திருப்பாய். இவற்றையெல்லாம் நீ நினைத்துப் பார்; என்னுடைய லட்சியத்தின் லட்சியம் நீ! நான் உன்னை மறந்து விட்டேனென்றோ, என்னால் உன்னை மறக்க முடியுமென்றோ நீ நினைக்கிறாயா?''

பைந்தமிழ்க்குமரன் மெல்லக் கயல்விழியின் கரங்களைப் பற்றித் தன் அருகில் இழுத்துக் கொண்டான். கயல்விழிக்கு அவனுடைய சாதனைகள் ஒவ்வொன்றையும் நினைக்க நினைக்கப் பிரமிப்புத்தான் மேலிட்டது.

''ஆயிரம் யானைகளைப் பிடித்துப் போர்ப் பயிற்சி அளிக்கும் வித்தகர் தாங்கள் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை. இங்கே இந்தக் காட்டுக்குள் மட்டும் இந்த அதிசயம் நடக்கிறது. இன்னும் வேறிடங்களில் எப்படிப்பட்ட சாதனைகளைச் செய்கிறீர்களோ, யார் கண்டார்கள்!''

''விரைவில் நீ காணப் போகிறாய்! அதிவிரைவில் வெற்றியைக் காணப் போகிறாய்!'' என்றான் பைந்தமிழ்க் குமரன். ''எல்லா ஏற்பாடுகளுமே முடிந்துவிட்டன. காலத்துக் காகக் காத்திருக்காமல், காலத்தை வெற்றியை நோக்கி

விரட்டிக் கொண்டிருக்கிறேன். பிறகுதான் இந்தப் பித்தன் யார் என்பதும் தெரியும்.''

''பித்தர்தாம் தாங்கள்!'' என்று நகைத்தாள் கயல்விழி. ''வெறுங் கற்பனைப் பித்தரல்லர். எதைக் கற்பனை செய்கிறீர்களோ அதைச் செயலாகவும் மாற்றி விடுகிறீர்கள். கூத்துப் பாடல் புனைந்ததோடு நிறுத்திவிடுவீர்களென்று நினைத்தேன்...''

''பாண்டிய நாட்டு மக்களை ஆனந்தக் கூத்தாடச் செய்து நாம் இருவரும் கண்டு மகிழப் போகிறோம்.''

படகு உல்லாசமாக மிதக்கத் தொடங்கியது. குளிர்க் காற்று அப்போதே அவர்கள்மீது ஆனந்தக் கூத்தாடியது. நிலவிலாடிக் களித்த அந்தக் கானாற்று வெளியில் அவர்கள் இருவர் மட்டிலுமே தனித்திருந்தனர். உலகம் தோன்றிய காலத்தில் தோன்றிய தனித் தலைவனும் தனித் தலைவியும் போல் அவர்கள் மெய்ம்மறந்திருந்தனர்.

''கயல்விழி!'' என்று அவளைத் தன் இரு கரங்களாலும் வாரி எடுத்து, அவள் செவிகளில் எதையோ உருக்கமாகக் கூறினான் பைந்தமிழ்க்குமரன்.

''இனி என்னால் ஒரு கணமும் இந்தத் தவமாகிய தீயில் வெந்து கொண்டிருக்க முடியாது. நீ எனக்கு மாலை அணிவித்தாயல்லவா? இதே மாலையை நான் உன் கழுத்திலும் அணிவிக்கப் போகிறேன். நம்முடைய திருமணமும் இப்போதே நடைபெற வேண்டும். இன்று சித்திரா பௌர்ணமி. நெருப்பு நம் உள்ளத்தின் சாட்சியாகக் கொழுந்து விட்டெரிகிறது. நீரும் நிலமும், வானும் காற்றும் நமக்கு வாழ்த்துக்கள் கூறுகின்றன... கயல்விழி! கயல்விழி!''

மெல்லக் கயல்விழி அவன் பிடியிலிருந்து நழுவினாள். ''வேண்டாம்! தயைசெய்து, இப்போது வேண்டாம்!'' என்று அவன் பாதங்களில் வீழ்ந்து பற்றிக் கொண்டாள். ''நம் இலட்சியம் இன்னும் நிறைவேறவில்லை; இப்போது திருமணம் வேண்டாம்'' என்று மன்றாடினாள் அவள்.

# 28. படகின் துடுப்பானாள்



அவர்களுடைய சின்னஞ்சிறு திட்டுப்பகுதியைச் சுற்றி வளைத்துக் கொண்டு சென்றது அந்த வண்ணப் படகு. ஆற்றின் ஓட்டத்துக்கெதிராகப் படகைச் செலுத்த வேண்டியிருந்ததால் துடுப்பு வலிக்கத் தொடங்கினான் பைந்தமிழ்க்குமரன். கயல்விழியும் அவன் அருகில் வந்து துடுப்பைப் பற்றினாள்.

''வேண்டாம்!'' என்று உற்சாகமிழந்த குரலில் கூறினான் அவன். அவனுக்குக் கயல்விழியிடம் கோபம் வந்து விட்டது. பாதங்களைப் பற்றிக்கொண்டு கண்ணீர் வடிப்பவளிடம் எப்படிச் சினந்து கொள்ள முடியும்? என்றாலும் அவனுக்குப் பிணக்கம் தீரவில்லை.

கயல்விழி மெல்ல அவன் விழிகளைப் பார்த்துவிட்டுப் புன்னகை பூத்தாள்; ''தங்களை மிகப் பெரிய புலவர் என்றும் வீர மறவர் என்றும் நினைத்தேன். தாங்கள் சின்னஞ்சிறு குழந்தை; பிடிவாதம் நிறைந்த குழந்தை!''

''சித்திரா பௌர்ணமியைப் பற்றியோ, ஓடத்தில் சுற்றி வரவேண்டும் என்பது பற்றியோ நானாக ஒன்றும் உன்னிடம் கூறவில்லை. இந்த மலர்மாலையைத் தொடுத்து நீ என் கழுத்தில் அணிவித்து விட்டாய். அது கொடுக்கும் துன்பம் உனக்குத் தெரியுமா?''

கயல்விழி அவனிடம் ஆறுதல் கூறினாள். தன்னுடைய தவறுகளையும் வெளியிட்டாள். ''எனக்குக் கொடுங்குன்றத்தின் நினைவு வந்துவிட்டது. நீங்கள் இங்கே எனக்கு அருகிலிருந்தும் தொலை தூரத்துக்கு விலகிச் செல்வது போன்ற ஓர் அச்சம் ஏற்பட்டது. அதனால்தான் சிறுபொழுதை இப்படி மகிழ்ச்சியாகக் கழிக்கலாம் என்று நினைத்தேன்.

மேலும் இது இளவேனிற்காலம், இப்படி ஓடத்தில் நாம் ஒன்றாகச் சுற்றி வருவது எவ்வளவு குதூகலமாக இருக்கிறது!''

துடுப்பை அவனோடு பற்றிப் படகை விரைவாய்ச் செலுத்தினாள் கயல்விழி. நீரைக் கிழித்துக்கொண்டு சென்ற அதன் வேகத்தில் ஒரு வேடிக்கையிருந்தது.

''என் தலைவர் வள்ளுவர் கூறியுள்ள குறள் ஒன்று என் நினைவுக்கு வருகிறது'' என்றான் குமரன்.

'' 'பிணிக்கு மருந்து பிறமன், அணியிழைதன் நோய்க்குத்தானே மருந்து.' வேறு பிணிகளுக்கு மருந்து உண்டு. கயல்விழியினால் உனக்கு நோய் வருமானால், அதை அவளே தீர்க்க வேண்டும் என்கிறார் அவர். திடசித்தத்துடன் இருந்த எனக்கு...''

''வள்ளுவரை இப்போது துணைக்கு அழைக்கிறீர்களா?'' என்று கேட்டுவிட்டு, ''அவரே தாம் மற்றொரு குறளும் பாடியிருக்கிறார்'' என்றாள். '' 'தவம் செய்வார்தம் கருமம் செய்வார்; மற்றல்லார் அவம் செய்வார் ஆசையுட் பட்டு' என்ற குறளைத்தான் இப்போது நீங்கள் உறுதியோடு கடைப்பிடிக்க வேண்டும். லட்சியத்தின் வெற்றிக்காக உழைக்கும்போது இடையில் சலனத்துக்கு இடமளிக்கலாகாது. விசுவாமித்திரரின் தவத்தைக் கலைத்த மோகினியாக நான் இருக்க விரும்பவில்லை. தங்கள் தவத்தின் வெற்றிக்காக நானும் தவக்கோலம் பூணப் போகிறேன்!'' என்றும் கூறினாள்.

பைந்தமிழ்க்குமரனுக்கு அப்போது மெய் சிலிர்த்தது. புலன்களைக் கடந்த ஏதோ ஒரு பேரின்பப் பெருவெள்ளத்தில் அவர்கள் ஒன்றாக மிதப்பது போன்ற ஓர் உணர்வைக் கொடுத்துவிட்டாள் கயல்விழி. மீண்டும் அவர்களிடையே மௌனம் நிலவியது.

''போர் நடத்தி வெற்றி பெற்ற பிறகு நாம் மீண்டும் இங்கு வர முடியுமா?'' என்று கேட்டாள் கயல்விழி!

''முதலில் திருக்கொடுங் குன்றத்துக்குச் சென்று மங்கையொரு பாகரின் முன்பாக இந்த மங்கையின் கரம் பற்ற வேண்டும். அடுத்தாற்போல் பற்றிய கரத்தை விடாமல் நேரே அவளை இந்த ஆரண்யக் குடிலுக்கு அழைத்துக் கொண்டு வரவேண்டும். இதுவரையில் நடத்திய போராட்டங்களின் களைப்புத் தீரக் களிப்போடு நாம் வாழவேண்டும். அப்போது இன்பத்துப் பாலைத் தவிர வேறு எதையும் எனக்கு நினைவூட்டக் கூடாதென்று கயல்விழிக்கு நான் கட்டளையிடுவேன்!''

''பிரிவுத் துன்பத்தைப் பற்றியும் அதில் உங்கள் தலைவர் பாடியிருக்கிறாரே?'' என்று கேட்டாள் கயல்விழி. விளையாட்டாகத்தான் கேட்டாள்.

துணுக்குற்றான் பைந்தமிழ்க்குமரன். ஏனோ அவன் உள்ளம் இந்தச் சிறு சொல் தாங்காமல் நடுங்கியது.

''கயல்விழி! நான் நம்முடைய லட்சிய வெற்றிக்குச் சிகரமாக இங்கு வாழப்போகும் வாழ்வைத்தான் பெரிதும் நம்பியிருக்கிறேன். ஆண்டுக்கு ஒரு முறையாவது இளவேனிற் காலம் தவறாது நாம் இங்கு வந்துவிட வேண்டும். இந்தக் கானகத்தில் நீயும் நானும் ஒன்றாகக் காணவேண்டிய காட்சிகள் எவ்வளவோ இருக்கின்றன. நாம் ஒன்றி வாழும் நாளைப்பற்றி நான் கூறும்போது, நீ பிரிவுத் துன்பத்தைக் குறிப்பிடுகிறாய். இனி பிரிவு என்ற பேச்சே நமக்குள் வேண்டாம்.''

விளையாட்டாகக் குறிப்பிட்ட சிறு சொல்லையும் தாங்காத அவனுடைய அன்பு மனம் அவளுக்கு அந்த ஆரண்யத்துக் குடிலைக் காட்டிலும் இன்பம் நிறைந்ததாகத் தோன்றியது.

''நான் எதைத் தங்களிடம் கேட்க வேண்டும் என்று விரும்பினேனோ, அதுவே தங்கள் விருப்பமாகவும் இருக்கிறது. நம்முடைய இலைக்குடிலையும், அதைச் சூழ்ந்துள்ள சிறு தீவையும், அதைச் சுற்றி ஓடும் ஆற்றையும்,

இந்தக் கானகத்தையும் என்னால் மறக்கவே முடியாது. மறவாது நம் திருமணத்துக்குப் பிறகு தாங்கள் என்னை இங்கு அழைத்து வரவேண்டும்.''

''கட்டாயம் வருவோம்!''

சிறிதுநேரம் மௌனமாக இருந்துவிட்டு, ''ஆமாம், போரின் வெற்றிக்குப் பிறகு பாண்டியர் தங்களைத் தங்கள் போக்கில் விட்டுவிடுவாரா?'' என்று கேட்டாள்.

''வேறு என்ன செய்வார்?''

''ஆற்றல்மிக்க வீரர் என்பதால் தங்களையே படைத்தலைவராக இருக்கும்படி அரசர் கட்டளையிடலாம். பிறகு வேறு நாடுகளின் மீதும் போர்கள் தொடுக்கும்படி கூறலாம். அரசரின் அன்புக்குப் பாத்திரமாகி விட்டால்... பிறகு... பிறகு...''

''பிறகு...?''

''இந்த ஏழைப் பாணர் குலப் பெண்ணை நினைத்துப் பார்க்கவே நேரமில்லாமலும் போகலாம்.''

''பாண்டியரிடம் நான் வேறு எந்த வெகுமதியையும் கோரப் போவதில்லை. அவர் எனக்குப் பெருமையளிக்க விரும்பினாரானால் அவரே முன்னின்று நம் திருமணத்தை நடத்தி வைக்கட்டும். பிறகு இந்த ஏலமலைக் காட்டை ஆட்சி செய்யும் உரிமையை மட்டும் நமக்கு அரசர் அளித்து விடட்டும்!''

''அதுமட்டிலும் போதும் நமக்கு.''

''ஏன் அதைவிடப் பெரிய பொறுப்புக் கிடைத்தால்?''

''ஏற்றுக்கொள்ளாதீர்கள்!''

பைந்தமிழ்க்குமரன் நகைத்தான். கயல்விழியின் அச்சத்தை அவனால் உணர முடிந்தது. போராட்ட வாழ்க்கை ஒன்றைத்தான் இதுவரையில் அவள் அவனோடு கண்டிருக்கிறாள். அமைதியும் இன்பமும் நாடி அவள் இதயம் துடிக்கத் தொடங்கிவிட்டது. 'நாளைக்கு நான்தான் சுந்தரபாண்டியன்

என்பதை அறிந்தால் எவ்வளவு ஆனந்தப்படுவாள் இவள்!' என்று உள்ளம் பூரித்தான் அவன்.

தோணி கரையை நெருங்கிக் கொண்டிருந்தது. இருவரும் அதிலிருந்து குதித்து இறங்கினார்கள். அதைப் பற்றி இழுத்து மூலையில் கட்டினான் அவன்.

''வைகாசி பௌர்ணமிக்கு இப்படி ஒருமுறை சுற்றி வருவோமா?'' என்று ஆவலோடு கேட்டாள் கயல்விழி.

''அடுத்த பௌர்ணமியின்போது நாம் பெரும்பாலும் திருமுனைப்பாடி நாட்டிலோ அல்லது தொண்டை மண்டலத்திலோ அல்லது மதுரையிலோ இருப்போம்!''

வியப்பும் திகைப்பும் அடைந்தாள் கயல்விழி.

''ஆம் எல்லா முன்னேற்பாடுகளும் முடிந்துவிட்டன. இனி நமக்கு இப்போதைக்கு இந்த ஏலமலைக் காட்டில் வேலையில்லை. வெற்றிக்குப் பிறகுதான் நாம் இங்கு திரும்பி வரப்போகிறோம்.''

''இப்போது அடுத்த வேலை?''

''ஓலையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். திருமுனைப்பாடி நாட்டுக்குச் செல்லவேண்டும்; அங்கிருந்து அருகில்தான் காஞ்சிப் பெருநகரம் இருக்கிறது. பிறகு நம் முடைய பணியெல்லாம் மதுரை மாநகரத்தில் தான்.''

கயல்விழி நடுங்கினாள். ''நம் இருவரையுமே சிறைப் பிடிக்கச் சொல்லிக் கட்டளை பிறப்பித்திருக்கிறார்கள். சோழ சாம்ராஜ்யத்தின் கட்டளையைப் பாண்டியராலும் புறக் கணிக்க முடியாது.''

''கட்டளை பிறப்பித்த அந்த ராஜராஜனையே நாம் அப்போது சிறையிடுவோம்'' என்றான் பைந்தமிழ்க் குமரன்.

கயல்விழி அப்படிக் கூறியவனின் திண்தோளில் தன் விழி பதித்துப் பொற்சிலையாக அந்த நிலவொளியில் நின்றாள்.

# 29. அறம் குலைந்த அரசு



**சோ**ழவள நாட்டுக்குள் உறையூரைக் கடந்து கங்காபுரிக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் மெதுவாக ஊர்ந்து சென்று கொண்டிருந்தது ஓர் இரட்டைமாட்டு வண்டி. உறையூரை அடுத்துள்ள கண்ணபுரம் (இப்போதைய சமயபுரம்) கோட்டைக்கு வெளியில் சத்திரவாயிலில் அது நின்றது. வண்டியை ஓட்டிக் கொண்டு வந்தவன் ஒரு பாணன். வண்டிக்குள் அவன் துணைவியாகிய விறலியும் அவள் தந்தையும் இருந்தார்கள்.

சத்திரத்தில் அன்றைக்கு அவர்கள் தங்கினார்கள்.

''கண்ணபுரம் கோட்டைத் தலைவரைக் கண்டு தடாரி முழங்கி, பாட்டுப்பாடிப் பரிசில் பெறலாமென்று வந்தேன். என் மனைவியும் இனிமையாக யாழ் மீட்டுவாள்'' என்று பாணன் சத்திரத்துத் தலைவரிடம் கூறினான்.

''நீ புறப்பட்டு வந்தவேளை நல்ல வேளையில்லை'' என்றார் அவர். ''கோட்டைக்குள்ளிருக்கும் கோசலப்படைகள் எல்லாம் வடக்கே அவசரமாகப் புறப்பட்டுக் கொண்டிருக்கின்றன. வீரநரசிம்மன் படைகளை அனுப்பும்படி துவார சமுத்திரத்திலிருந்து கட்டளை அனுப்பியிருக்கிறாராம். இந்த நெருக்கடியில் உன்னை எப்படிக் கோட்டைத் தலைவர் பார்க்கப் போகிறார்?''

''நான் புறப்பட்ட வேளை பொல்லாத வேளை தான்!'' என்று சொல்லித் தன் தலையில் கையை வைத்துக் கொண்டான் அந்தப் பாணன், ''சோழ நாட்டைக் காப்பதற்கென்றே இங்கு வந்து குடியிருக்கும் தியாக வீரர்களாயிற்றே இந்தக் கன்னடச் சிங்கங்கள்? இவர்களுடைய வீரத்தையும் தியாகத்தையும் பாடலாமென்று வந்தேன்.''

''தியாக வீரர்கள்தான்! இல்லையென்று யார் சொன்னது? ஆனால், அவர்களுடைய சொந்த நாட்டுக்கே ஆபத்து வந்திருக்கிறதே? நெல்லூரிலுள்ள தெலுங்குச் சோழர்களும் வடக்கேயுள்ள காகதீயர்களும் சேர்ந்துகொண்டு கோசல நாட்டின் மீது போர் தொடுக்கப் போகிறார்களாம். அதனால்தான் புறப்படுகிறார்கள்.''

''புறப்படட்டும், புறப்படட்டும்!'' என்றான் பாணன். ''திரும்பி வந்தவுடன் அவர்களுடைய வெற்றியையும் சேர்த்துப் பாடுகிறேன்.''

கண்ணபுரத்திலிருந்து அன்று முழுவதும் படைகள் வடக்கு நோக்கிப் புறப்பட்ட வண்ணமாக இருந்தன. வீரமும் வெற்றியும் ஒவ்வொர் போர் வீரனின் பரந்த மார்பிலும் ஒளி செய்வதுபோல் தோன்றியது. பாணனின் துணைவியான விறலி அந்தக் காட்சியைக் கண்டு நடுநடுங்கினாள். மூர்க்கத்தனம் மிகுந்த படை கோசல நாட்டுப் படை.

மறுநாட் காலையில் பாணனது மாட்டுவண்டி அங்கிருந்து கிளம்பியது. சோழ நாட்டுக்குள் ஒவ்வோர் ஊராக அது ஊர்ந்து சென்றது.

பொன் விளையும் பூமியான சோழ வளநாட்டு மக்களின் முகங்களில் ஏனோ அவர்களுக்கே உரிய அந்தச் செருக்கைக் காணோம். ஊக்கமிழந்து, உற்சாகம் குன்றி, ஏதோ குறை மிகுந்தவர்களைப்போல் அவர்கள் காணப்பட்டார்கள்.

குடமூக்கு நகரத்தின் சத்திரத்தில் அடுத்த இரண்டாவது நாள் இரவுப்பொழுதை அவர்கள் கழித்தார்கள். பாணனைப் போன்று வேறு பல வழிப்போக்கர்களும் அங்கு குழுமி யிருந்ததால் சத்திரம் கலகலப்பாக இருந்தது. சாப்பாட்டுக்குப் பிறகு சத்திரத்துத் திண்ணையில் அமர்ந்து இரண்டு புலவர்கள் பேசத் தொடங்கினார்கள். பேச்சு மும்முரமாக நடந்தது. பாணன் நெருங்கிவந்து ஒரு தூணில் சாய்ந்து கொண்டான். விறலியும் அவள் தந்தையும் படுத்து முடங்கிக் கொண் டார்கள். அவர்களுக்கும் உறக்கம் வரவில்லை.

''புலவரே! கங்காபுரிக்குப் போய்ச் சக்கரவர்த்திகளைப் பார்த்து வருவது தானே?'' என்று கேட்டார் ஒருவர்.

''சக்கரவர்த்திகளை இப்போது புலவர்கள் போய்ப் பார்க்க முடியாது. உமக்கு மருத்துவம் தெரிந்தால் நீர் போய்ப் பார்க்கலாம். அதிலும் ஓர் இரகசியம், உம்முடைய மருந்தினாலோ, எந்த மூலிகைகளாலோ குலோத்துங்கர் மீளப் போவதில்லை.''

''உம்முடைய திருவாயை அடக்கிப் பேசும்! நம் சக்கரவர்த்திகளையா நீர் அவமதிக்கிறீர்?''

''நான் அவமதிக்கவில்லை. உண்மையைச் சொல்லு கிறேன். சக்கரவர்த்திகளுடைய நோய் அவருடைய திருக்குமாரர் இளைய சக்கரவர்த்தியின் உருவத்தில் வந்திருக்கிறது. அதற்கு மருந்து எனக்குத் தெரியவில்லை.''

''யாரை நீர் இப்போது சாகச் சொல்கிறீர்?''

''புலவரே! நாம் இருவருமே இப்போது அரண்மனைச் சோற்றை வயிறு நிறைய உண்டுவிட்டுப் பேசுகிறோம். யாரையும் நான் சபிக்கவில்லை. ஆனால் இளைய சக்கரவர்த்திகள் அதிகாரத்துக்கு வந்த பிறகு இந்த சோழவளநாடே பெரிய சக்கரவர்த்திகளைப் போல் நோய்வாய்ப் பட்டுக் கிடக்கிறது. குலோத்துங்கருக்குப் பிறகு இந்த நாடு என்ன கதிக்கு ஆளாகப் போகிறதோ?''

''நம்மைப் போல் புலவர்களுக்கும், கலைஞர்களுக்கும் அறிவாளிகளுக்கும், இந்த நாட்டில் இனி வேலை இல்லை. ஆண்மையும் வீரமும் உள்ள இளம் பிள்ளைகளுக்கும் இனி இங்கு வேலை இல்லை. வாணிபம் கெட்டுப் போய்விட்டது. உழவு செய்வோர் சோம்பல் முறிக்கத் தொடங்கிவிட்டார்கள். 'அரசு எவ்வழி அவ்வழி மக்கள்' என்பதை நீர் மறக்கக் கூடாது.''

''நாம் புலவர்களாயிற்றே? இடித்துரைத்து மன்னருக்கு நேர்வழி காட்டுவது நம் கடமையாயிற்றே?''

''குலோத்துங்க சோழரின் ஆட்சியென்றால் நீர் கூறுவது போல் செய்யலாம். அப்படிச் செய்வதற்கே இடம் வைக்காமல் அவரும் செங்கோல் செலுத்தி விட்டார். அறவோர், புலவர், வீரர், வணிகர், உழவர் இப்படி ஒவ்வொரு துறையில் உள்ளவர்களோடும் பழகி நாட்டு மக்களின் நிலையை புலவர்களின் மெய்த்துணிவை அவர் பாராட்டினார். ஆனால் இப்போது இளைய சக்கரவர்த்திகளிடம் இடித்துரைக்கப் போனால் அவர் நம்மையே செம்மையாகப் புடைத்து வெளியே தள்ளுவார். அறிவும் புலமையும் எங்கே இருக்கிறதோ, அங்கேதான் அறிவுக்கும் புலமைக்கும் மதிப்பு!''

''நாளைக்கே நான் போய்க் காணப்போகிறேன், இளைய சக்கரவர்த்திகளை'' என்று வீரம் பேசினார் மறு புலவர். ''போய், 'உம்முடைய நாட்டில் சிவத்துரோகம், இராசத் துரோகம், நாட்டுத் துரோகம் மூன்று துரோகங்களும் தலையெடுக்கின்றன. விழிப்போடு இருந்து கொள்ளும்' என்று இடித்துரைக்கப் போகிறேன்.''

''புதிய செய்திகளைக் கூறுகிறீரே!''

''ஆமாம்'' என்று குரலை தணித்துக்கொண்டு மெல்லப் பேசலானார் மற்றவர். ''தஞ்சைக் கோட்டத்துச் சிவபுரம் கோயிலின் தன பண்டாரத்துப் பொருள்களை அங்குள்ளவர்களே களவாடி விட்டனர். அம்மனின் திருமேனியை அழகு படுத்தும் பொன்னாபரணங்களைத் தங்களுடைய பரத்தையர்களுக்கு வழங்கினர். இன்னும்...''

''சிவத்துரோகம்! சிவத்துரோகம்!'' என்று செவிகளைப் பொத்திக் கொண்டார் புலவர்.

''இது மட்டுமா? அரசரின் ஆணைக்குக் கீழ்ப்படியும் வழக்கம் எங்குமே குன்றி வருகிறது. நாட்டு மக்களுக்குத் துரோகம் செய்துவிட்டு, அவரவர்கள் கையூட்டுப் பெற்றுப் பொருள் சேர்க்கிறார்கள். ஆணைகளை நிறைவேற்ற வேண்டியவர்களே ஆணைகளை மீறுகிறார்கள்.''

"தண்டிப்பதற்கு ஆண்மையில்லாதவரா இளைய சக்கரவர்த்தி?"

"யாராவது இந்த நாட்டில் முதலில் தண்டிக்கப்பட வேண்டும் என்றால் அது இராஜராஜன் தான்! கோயிலில் சிவத் துரோகம் ஏன் நடக்கிறது? நாட்டில் அரசுத் துரோகமும் மக்கள் துரோகமும் ஏன் நடக்கின்றன? நம்முடைய இளைய சக்கரவர்த்திகளே இதற்கெல்லாம் வழிகாட்டுகிறார். அவருக்குப் பரத்தையரிடம் மோகம் உண்டு. களியாட்டம், ஆடம்பரம், வீண் விரயம் இவற்றுக்கெல்லாம் தன பண்டாரத்துப் பொருளை அவர் தண்ணீராக வாரி இறைக் கிறார். அவரிடம் போய் இவ்வளவையும் நான் இடித் துரைக்கப் போகிறேன்."

"முதலில் உம்மால் அவரைக் காண முடியாது. புலவர்களிடம் அவருக்கு ஒரே வெறுப்பு. அடுத்தாற் போல் நீர் ஏதும் கூறப் போனால் உம்மை இடித்துப் புடைத்துப் பாதாளச் சிறையில் தள்ளச் செய்வார். பாண்டிய நாட்டுப் புலவனுக்கு நேர்ந்த கதி உமக்கே நேரலாம்."

"சோழவள நாடு என்ன ஆவது?"

விஜயாலய சோழனால் உருவாக்கப்பட்டு, இராஜராஜன், இராஜேந்திரனைப் போன்றவர்களால் மகோன்னத நிலைக்குக் கொண்டு வரப்பட்ட இந்த மாபெரும் சாம்ராஜ்யத்தை நம்முடைய மூன்றாம் குலோத்துங்கர் எப்படியோ அவருக்கு ஆற்றல் இருந்த வரையில் கட்டிக் காத்து விட்டார். இனி என்ன ஆகுமோ சொல்ல முடியாது. தலைவனில்லாத நாடும் தலையில்லாத மனிதனும் ஒன்றுதானே?"

தூணருகில் இருந்த பாணன் மெல்ல அவர்களின் அருகில் நெருங்கி வந்தான். "நான் பாடிப் பிழைக்கும் ஒரு பாணன். கங்காபுரியில் இளைய சக்கரவர்த்திகளைக் காண வேண்டும் என்ற ஆவல். காண முடியுமோ?"

''பாணர்களால் காண முடியாது. ஆனால் விறலிகள் மட்டும் அவரைக் காணமுடியும். விறலிகளின் யாழ் இசையோ, இன்குரலோ அவரை ஈர்க்காது. தோற்றத்தில் கட்டழகிகளாக அவர்கள் இருக்க வேண்டும்!'' என்றார் ஒரு புலவர். பாணனின் விழிகள் சிவந்தன.

# 30. பாணனும் பாமினியும்



**சோ**ழ நாட்டைத் தாண்டி திருமுனைப்பாடி நாட்டுக்குச் சென்றார்கள் அவர்கள். அதன் தலைநகரமான சேந்தமங்கலத்தில் அழகியதொரு விருந்தினர் மாளிகையில் தங்கினார்கள். பாணன் பகல் முழுதும் பல இடங்களில் அலைந்து விட்டுத் திரும்பினான். அடுத்த வாரமே காஞ்சிப் பெருநகரை நோக்கி யாத்திரையைத் தொடர்ந்தனர்.

''இப்படியே நாம் தினந்தோறும் ஊர் ஊராகச் சுற்றி வரலாம் போல் தோன்றுகிறது. சோழவள நாட்டுக் காட்சிகளை என்னால் என்றுமே மறக்க முடியாது'' என்றாள் விறலி.

''அழகான நாடு; வளம் நிறைந்த நாடு; ஆனால் இவ்வளவு செல்வமிருந்தும் இந்நாட்டில் துன்பம் மிகுந்து விட்டதே. நம்முடைய பாண்டிய நாட்டில் இதுபோன்ற துரோகங்கள் தலையெடுக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பெரிய பாண்டியர் விழிப்போடுதான் இருக்கிறார். விழுப்பரையரின் விழிகளும் உறங்குவதில்லை'' என்றான் பாணன்.

''சோழநாடு இந்நிலைக்கு வந்திருப்பது நம் பாண்டியருக்குத் தெரியுமா?''

''தெரிந்து கொள்ள வேண்டியது அவர் கடமை!'' என்றான் பாணன்.

காஞ்சிப் பெருநகரத்துக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். எப்போதும் சுறுசுறுப்பும் கலகலப்புமாக விளங்கக் கூடிய நகரம் அது. சோழ சாம்ராஜ்யத்துப் பெரு மாளிகைகளும் அந்த நகரத்தின் அழகுக்கு அழகு செய்தன. பல நாட்டு மக்கள் குழுமியுள்ள இடம் அது. அறச்சாலைகள், கல்விக் கூடங்கள், கோயில்கள், சமணப் பள்ளிகள், அங்காடிகள் எல்லாமே அங்கு உண்டு.

போர் வீரர்களும் அவர்களது குடும்பத்தினரும் நிறைந்திருக்கும் தெருக்கள் அங்கே இருந்தன. கோசல நாட்டுப் படையினருக்கு அது தெற்கு எல்லை. சோழ சாம்ராஜ்யத்துக்கு வடக்கு எல்லை. இரண்டு சாம்ராஜ்யங்களுமே நெருங்கிய உறவு பூண்டிருந்ததால் அங்கே பொருள் வளமும் கலைவளமும் மிகுந்திருந்தன.

திருமுனைப்பாடி நாட்டுக் கோப்பெருஞ்சிங்கனுக்கும் அங்கே ஒரு தனி மாளிகை இருந்தது. அங்கு போய் இறங்கினார்கள் பாணனும் விறலியும். அங்கு அவர்களுக்கு நடை பெற்ற விருந்தோம்பலைக் கண்டு திகைத்தாள் விறலி.

''நாம் கற்ற வித்தைகளைக் காட்டும் நாள் வந்துவிட்டது. யாழை எடுத்துக்கொள்'' என்றான். அவன் தோலால் இழுத்துக் கட்டப்பெற்ற இசைக் கருவியான தடாரியை எடுத்து கொண்டான். விரல்கள் அதில் விளையாடின. நாதவெள்ளம் பொங்கியது. விறலியும் தனது யாழைக் கரத்திலேந்திக் கொண்டு அதன் நரம்புகளை மீட்டி இசை கூட்டினாள்.

அவர்கள் கோசல நாட்டுப் பெருமாளிகையின் முன்னே போய் நின்றார்கள்; இசையைத் தொடங்கினார்கள்.

சிறிது சிறிதாக அவர்களுடைய விரல்களுக்கு வேகம் பிறந்தது. வீரநரசிம்மனின் பேராண்மையையும் அவனது தந்தையின் பேராற்றலையும் கூறிக் கணீரெனக் கவி பாடினார் பாணன். வாயிற்காவலர்களும் மெய்ம்மறந்தனர்.

வீரநரசிம்மன் அப்போது துவார சமுத்திரத்தில் இருந்தார். காஞ்சியில் அவர் இல்லை. அந்தச் செய்தியைப்

பாணனிடம் கூறுவதற்கு மறந்தவர்களைப்போல் அவர்கள் இசையில் மூழ்கினர்.

மேல் மாடத்தின் சாளரம் திறக்கப்பட்டது. ஒரு மதிமுகம் மாளிகை வாயிலை எட்டிப் பார்த்தது. பாணனின் குரல் சுழன்று சுழன்று சாளரத்தை நோக்கி மேலே எழும்பிச் சென்றது. குரலுக்குரியவனை அங்கிருந்த மதி முகத்தாள் கண்டுவிட்டாள் போலும்!

எப்படி அவள் முகப்பு வாயிலை வந்தடைந்தாள் என்பது அவளுக்கே தெரியாது. படிகளில் தாவித்தான் வந்தாளா? அல்லது பறந்துதான் வந்தாளா! சாளரத்தில் தோன்றிய முகம் நேருக்கு நேர் தோன்றிவிட்டது.

வரவேற்கக்கூட மறந்து அவனுடைய பாடலிலும் அதன் இசையிலும் ஒன்றிப் போய் நின்றாள் அவள். பாணனின் தடாரி முழக்கத்தில் இப்போது ஆனந்தம் துள்ளிக் கொண்டிருந்தது. அவளைக் கண்டு புன்முறுவல் பூத்துக் கொண்டே அவன் பாடினான்.

பாமினி இன்னும் பாணனை மட்டிலுமே பார்த்து நின்றாள். அவனருகில் விறலி ஒருத்தி வியப்பும் திகைப்புமாக நின்று கொண்டிப்பதையோ, அவள் விரல்கள் இந்தக் காட்சியைக் கண்ட பிறகு, யாழில் தடுமாறித் தவிப்பதையோ பாமினி காணவில்லை.

''வாருங்கள் புலவரே!'' என்று தேனினும் இனிய குரலில் அந்தப் பாணனை உள்ளே அழைத்தாள் அவள்.

'புலவரே!' என்று அவள் அழைத்த சொல் விறலிக்குச் சுருக்கென்று தைத்தது. இவர் புலவர் என்பதை அவள் எப்படி அறிந்தாள்?

பாமினி தன் பாடலிலேயே மெய்மறந்து நிற்பதைக் கண்ட பாணன், ''இளவரசியாரின் கட்டளையை இந்த ஏழைப் புலவன் மறந்தேனில்லை. கூத்துப் பாடலை ஆட்ட மாக ஆடும் அணங்கும் என்னோடு இதோ வந்திருக்கிறாள்'' என்று அருகில் ஒருத்தி நிற்பதைப் பாமினிக்கு நினைவூட் டினான். விறலி மிகவும் பணிவோடு கரம் கூப்பினாள்.

பாமினிக்கு அப்போது தான் தன்னுடைய தவறு தெரிந்தது போலும். அதை மறைக்க விரும்பும் திறமையோடு ஓடோடியும் வந்து விறலியைத் தழுவிக் கொண்டாள். இருவரையும் உள்ளே அழைத்துச் சென்றாள்.

''பாணராக வந்திருக்கும் இவரை முதலில் இனம் கண்டு கொள்ள முடியவில்லை. அதனால்தான் சிறிது வியப்படைந்தேன்'' என்று விறலியிடம் கூறினாள் இளவரசி.

''இளவரசி! இன்னும் என்னைச் சிறை செய்ய வேண்டும் என்ற ஆணை அப்படியேதான் இருக்கிறது. சோழ நாட்டுக் காவலர்கள் என்னை எந்தக் கணத்திலும் கைப்பற்ற முயல்வார்கள்'' என்று மெல்ல அவளிடம் கூறினான்.

சுற்று முற்றும் பார்த்தாள் பாமினி. அருகில் விறலியைத் தவிர வேறு யாருமில்லை. காவலர்கள் தொலைவில் நின்றனர்.

''புலவர் தாமாக வந்து சிறைக்குள் அகப்பட்டுக் கொண்டிருக்கிறார். சிறையிலிருந்து இப்போதைக்கு அவரை விடுவிப்பதாக உத்தேசமில்லை. விடுதலை பெற விரும்பினால் அவரை நேரே சோழ நாட்டுக் காவலர்களிடம் சேர்ப்பித்து விடுவேன். கங்காபுரியில் செய்ததுபோல் இங்கு எளிதாகத் தப்ப முடியாது.''

இப்படிக் கூறிவிட்டு பாமினி புன்னகை பூத்தாள். பாணனுடன் வந்த விறலிக்கோ இருதயம் நடுங்கியது. அங்கே அந்த மாளிகையில் மூலைக்கு மூலை காவலர்கள் நின்றார்கள். கண்ணனூரில், அவள் கண்டு அஞ்சி நடுங்கினாளே அத்தகைய பயங்கரமான தோற்றங்கொண்ட காவலர்கள் அவர்கள்.

இளவரசி ஒரு கூடத்தின் கதவை மெல்லத் திறந்தாள்; அவர்களுக்கு அமர்ந்துகொள்வதற்கு இருக்கைகளைச் சுட்டிக் காட்டினாள். பிறகு கதவைத் தாழிட்டுக்கொண்டு எங்கோ சென்றுவிட்டாள்.

# 31. அன்பெனும் பிடிக்குள்...



**கா**ஞ்சி மாநகரத்தின் கோசல நாட்டு மாளிகைக்குள் பைந்தமிழ்க் குமரனையும் கயல்விழியையும் அழைத்துச் சென்ற பாமினி, அவர்களைத் தனித்திருக்கவிட்டு, உள்ளே சென்றாள். சென்றவள் இன்னும் திரும்பவில்லை.

கயல்விழிக்குப் பைந்தமிழ்க் குமரனிடம் எல்லையற்ற கோபம். விழிகளால் அவனைச் சுட்டெரித்து விடுவது போல் பார்த்தாள். அவளுக்கு அந்த மாளிகையைப் பிடிக்கவில்லை. அவன் அவளை அங்கு அழைத்துக்கொண்டு வந்தது பிடிக்கவில்லை.– இவ்வளவும் அவள் முகத்தில் ஒளிவுமறைவின்றித் தெரிந்தது.

பைந்தமிழ்க் குமரன் நகைத்துக் கொண்டே அவளிடம் கேட்டான்: ''கயல்விழி! உனக்கு இந்த இளவரசி பாமினியைச் சிறிதும் பிடிக்கவில்லையல்லயா?''

திடுக்கிட்டாள் கயல்விழி. அவளுடைய நினைவை அவன் கண்டுகொண்டதால் ஏற்பட்ட அதிர்ச்சி அது.

''எனக்குந்தான் அவள் இவ்வளவு பரிவு காட்டுவது பிடிக்கவில்லை.''

''பொய்! என்னிடமே எதற்காக இப்படிப் பேசுகிறீர்கள்?'' கண்கலங்க கேட்டாள் அவள். ''உங்களுக்குப் பிடிக்கவில்லை என்பதுதான் உங்கள் முக மலர்ச்சியால் தெரிகிறதே! அடடா, எவ்வளவு அன்பு, எவ்வளவு பணிவு, எவ்வளவு ஆனந்தம் உங்களுக்கு! இப்படி ஓர் இளவரசியிடம் பழக்கம் உண்டு என்பதை எதற்காக என்னிடம் நீங்கள் மறைத்து வைத்தீர்களோ?''

''மறைக்க விரும்பினால் உன்னை உடன் அழைத்து வந்திருப்பேனா? நீ சற்றுப் பொறுமையாக இருக்க வேண்டிய

சமயம் இது. உன்னிடம் பிறகு நான் விவரமாகச் சொல்கிறேன். இப்போது நீ எனக்கு ஒரே ஒரு உதவியைச் செய்யவேண்டும்.''

அவள் பதிலளிக்கவில்லை. பாமினி அவனிடம் காண்பித்த பரிவு அவளுடைய உள்ளத்துக்கு வேதனையைத் தந்துவிட்டது. இதை அறிந்த பைந்தமிழ்க் குமரன் அவள் அருகில் நெருங்கி வந்தான்.

''கயல்விழி!'' என்று இரகசியக் குரலில் அழைத்தான். ''உன்னிடமில்லாத அன்பையோ, அழகையோ, பண்பையோ நான் இந்த இளவரசியிடம் கண்டு விடமாட்டேன். அப்படி நான் தவறு செய்தாலும் என் தலைக்கே ஆபத்து வந்துவிடும். என் எல்லையை அறிந்து எனக்கு யாரிடமும் பழகத் தெரியும்.''

கயல்விழிக்கு நம்பிக்கை ஏற்பட்டது. ''பிறகு எதற்காக இங்கு வந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

''அதுவா?'' புலவன் சுற்றுமுற்றும் பார்த்தான்; பிறகு அவளுடைய செவிகளுக்கு மட்டிலும் கேட்கும்படி கூறினான். அவளுடைய விழிகள் மகிழ்ச்சியுற்றன. தன் மிக முக்கியமான இரகசியத்தை அவன் அவளிடம் பகிர்ந்து கொண்டதில் ஒரே ஆனந்தம் அவளுக்கு.

''நான் உன்னிடம் கேட்கும் உதவி இதுதான்'' என்றான் புலவன். ''இளவரசியிடம் நீ அன்போடு பழக வேண்டும்; கலகலப்போடு பேசவேண்டும்; எப்படியாவது அவளை உன் தோழியாக்கிக் கொள்ள வேண்டும்.''

கயல்விழிக்கு அவனுடைய யோசனை இப்போது நியாயமென்றே தோன்றியது. கூத்துகளில் நடித்துப் பண்பட்ட அவளுக்கு இந்த இளவரசியிடம் தானா நடிக்கத் தெரியாது? அவள் நடிக்கத் துணிந்து விட்டாள்.

கூடத்துக்கு வெளியே காலடி ஓசை கேட்டது. கதவைத் திறந்து கொண்டு முதலில் உள்ளே நுழைந்தாள் பாமினி. அடுத்தாற்போல் வந்தது யார்? பாமினியின் முகச் சாயல்

அப்படியே அந்தப் பெண்மணியிடம் இருந்தது. பாமினியின் தமக்கையாக இருக்க வேண்டுமென்று நினைத்தான் பைந்தமிழ்க்குமரன்.

''எனது அன்னையார் இவர்கள்'' என்று அறிமுகம் செய்து வைத்தாள் பாமினி. ''இவர்களிடம் முன்பே உங்களைப் பற்றிக் கூறியிருக்கிறேன்!''

''வணக்கம் தாயே!'' என்று முகமும் அகமும் குளிரக் கைகூப்பினான் பைந்தமிழ்க் குமரன். ''ஆடல் பாடல்களில் வல்லவர்கள் என்று குலோத்துங்கச் சக்கரவர்த்திகளே தங்கள் பெருமையைப் பற்றிக் கூறியிருக்கிறார்கள். தங்களைக் காணும் வாய்ப்பும் கிடைத்திருக்கிறது.''

கயல்விழியும் தன் வணக்கத்தைத் தெரிவித்தாள். தாயும் பெண்ணுமாக இருந்தவர்கள் தமக்கையும் தங்கையும் போன்ற தோற்றத்தில் இளமை குலுங்கக் காட்சியளித்தார்கள்; கயல்விழி பாமினியின் அருகில் சென்று, ''தங்கள் அன்னையாருக்குத் தமிழ் தெரியுமா?'' என்று மிகுந்த ஆர்வத்துடன் கேட்டாள்.

கயல்விழியின் குதூகலமும் கலகலப்பும் இப்போது பாமினியைப் பற்றிக் கொண்டன. ''நான் பேசுவதைக் கூடிய வரையில் புரிந்து கொள்வார்கள். அவர்களுக்கு நம்மிடம் பேசுவதற்குச் சரளமாகத் தமிழ் வராது.''

கயல்விழி அவர்களுடைய நாட்டின் நடனக் கலைகளைப் பற்றி விசாரித்தாள். தமிழ் நாட்டின் கூத்து வகைகளைப் பற்றியும் கூறினாள்.

''ஆமாம், தங்கள் தந்தையார் இங்கு வந்திருப்பதாகக் கேள்வியுற்றேன். அவர்களை எப்போது காணமுடியும்?'' என்று ஏதுமறியாதவன் போல் கேட்டான் புலவன்.

''அவர்கள் இங்கு வந்தவுடன் திரும்பி விட்டார்கள்'' என்று கவலையோடு கூறினாள் பாமினி. ''துவார சமுத்திரத்தில் நாங்கள் இருப்பதைவிட இப்போதைக்கு போர் முடியும் வரையில் காஞ்சியில் இருப்பதே நலம் என்று முடிவு

செய்தார்கள். போர் என்று வந்துவிட்டால் ஆண்களுக்குக் குடும்பக் கவலை ஏது? நீங்கள் உங்கள் பாடலில் தான் கூறியிருக்கிறீர்களே!''

''போர் வந்துவிட்டதா?''

''தெலுங்குச் சோழர்களும் காகதீயர்களும் ரகசியமாக ஒப்பந்தம் செய்து கொண்டு விட்டார்களாம். கோசல சாம்ராஜ்யத்தின் வளர்ச்சி அவர்கள் கண்களை உறுத்துகிறது. எந்த வேளையிலும் போர் நடக்கக் கூடும். இப்போது காஞ்சியிலிருந்த எங்கள் படைகளும் சோழப் படைகளும் அங்கே தான் போயிருக்கின்றன.''

''போர் வெறி என்றைக்குத்தான் நம்மைவிட்டு ஒழியுமோ?'' அநுதாபப்பட்டுக் கொண்டான் புலவன். கயல்விழிக்குச் சிரிப்பு வரும் போலிருந்தது. அடக்கிக் கொண்டாள்.

''போரில்லாமலே அரசர்கள் வாழமுடியாதா? '' என்று கேட்டாள் பாமினி.

''வாழ முடியுமென்றுதான் நான் நினைக்கிறேன். அரசர்கள் அரசர்களாக மட்டும் வாழ நினைத்தால் போரில்லாமல் வாழ முடியும். அடுத்த அரசர்களை வென்று அடக்கிச் சக்கரவர்த்திகளாகச் சாம்ராஜ்யத்தைக்கட்டி ஆள வேண்டும் என்றால் போர் செய்துதான் தீரவேண்டும். முதலில் மற்றவர்களை வென்று அடக்குவார்கள். பிறகு வென்று அடக்கப்பட்டவர்கள் தங்களை வென்றவர்களை வெல்லத் துடிப்பார்கள். இப்படியே முடிவில்லாமல் போர்கள் தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கும்.''

''எனக்கு இந்தப் போர் வெறி பிடிக்கவேயில்லை'' என்றாள் பாமினி.

''பெரிய சாம்ராஜ்யத்து இளவரசி தாங்கள். வலிமை கொண்ட லட்சோப லட்சம் போர் வீரர்களை ஆட்டி வைக்கும் மாவீரன் குமாரத்தி தாங்கள். தங்களுக்கே போர் பிடிக்கவில்லையென்றால், கவி பாடும் புலவனாகிய எனக்குப் பிடிக்

குமா? சக்கரவர்த்திகள் சாம்ராஜ்யத்து ஆசைகளை விட்டு விட்டு, எல்லா அரசர்களிடமும் அன்போடு பழகலாமே!''

புலவனும் தனது குமாரத்தியும் அரசியல் பேச்சுக்களில் முனைந்ததை அரசியார் அவ்வளவாக விரும்பவில்லை. பெண்களைப் போலவே புலவர்களுக்கும் கவிஞர்களுக்கும் அவ்வளவாக அரசியல் அறிவு கிடையாது என்பது அவர்களுடைய எண்ணம்.

ஆகவே, அரசியார் பாமினியை அருகில் அழைத்துக் கன்னடத்தில் அவளிடம் ஏதோ விசாரித்தார். கயல்விழியைப் பற்றி அவளிடம் கேட்பதுபோல் தோன்றியது. பாமினியின் முகம் அதைக் கேட்டவுடன் சிவந்தது.

''என்ன கேட்கிறார்கள்?'' என்றாள் கயல்விழி.

''நான் எதைக் கேட்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேனோ, அதைத்தான் அன்னையாரும் அறிந்துகொள்ள ஆவலாயிருக்கிறார்கள். வந்து... வந்து... வந்து... புலவருக்கு நீங்கள் மனைவிதானே?...''என்று தயக்கத்தோடு கேட்டுவிட்டுத் தன் ஓரக்கண்களால் கயல்விழியின் கழுத்தை நோக்கினாள்.

அங்கே மங்கல நாண் தென்படவில்லை.

''இல்லை'' என்று சிரித்துக்கொண்டே பதிலளித்தாள் கயல்விழி. ''இவர் புனைந்த கூத்துப் பாடலை நான் அரங்கேறி நடிக்கிறேன்; என் ஆசிரியர் இவர். என்னோடு துணைக்கு என் தந்தையாரும் வந்திருக்கிறார். நான் அவரிடம் திரும்பிச் செல்லவேண்டும்.''

''கயல்விழி இப்போதைக்கு அவளுடைய கலையைத் தான் மணந்து கொண்டிருக்கிறாள்'' என்றான் புலவன்.

''நீங்கள்?''

''நான்......நான் என்னுடைய கல்விப் புலமையை மணந்து கொண்டிருக்கிறேன். அறிவுப் பசியைப் போக்கிக் கொள்ளும் பிரமச்சரிய ஆசிரமம் இன்னும் தீரவில்லை.''

பாமினிக்கு இதைக் கேட்டதும் தன் மனத்துயரம் நீங்கியதுபோல் இருந்தது. இனம்புரியாத எல்லையற்ற

பேரானந்தம் அவளுக்கு. அதைக் கயல்விழியின் கூர் விழிகளும் கண்டு கொண்டன.

# 32. அகப்பட்ட இருவர்



பாமினியும் அவள் அன்னையும் அவர்களைத் தங்களுடைய மாளிகையிலேயே தங்கும்படி வற்புறுத்தினார்கள். ஆகவே ஆதிச்ச தேவரையும் அங்கு அழைத்து வரும் படியான அவசியம் ஏற்பட்டது. அவரை அழைத்துக் கொண்டு திரும்புவதாகக் கூறிவிட்டு அவர்கள் திருமுனைப்பாடி மாளிகைக்குச் சென்றார்கள். தன்னுடைய ரதத்தில் அவர்களை அனுப்பி வைத்தாள் பாமினி.

ரதம் வெளியே காத்துக் கொண்டு நின்றது. ஆதிச்ச தேவருக்கு ஆனந்தம் தாங்கவில்லை. கொண்டுவந்த பொருள்களைச் சேகரித்துக் கொண்டு புறப்படுவதில் முனைந்திருந்தார். இப்போது உட்புறம் கயல்விழியிடம் தாங்கள் அங்கு வந்த நோக்கம்பற்றி விரிவாகக் கூறினான் பைந்தமிழ்க் குமரன்.

''கயல்விழி! சோழராஜ்யம் என்பது இப்போது வீர நரசிம்மனின் துணைவலிமையால் நின்றுகொண்டிருக்கிறது. பாண்டிய நாட்டு விடுதலைக்கு இப்போது முதல் தடையாக இருப்பது இந்தக் கோசல சாம்ராஜ்யம்தான். பாமினியின் தந்தைக்குக் குலோத்துங்கர் அளித்திருக்கும் விருதுப் பெயர் என்ன தெரியுமா? 'பாண்டிய யானைக்குச் சிங்கம்!' அதாவது, பாண்டிய நாட்டு யானை விடுதலை வேட்கை கொண்டு விட்டால், அதை அறைந்து அதன் மத்தகத்தைப் பிளந்து இரத்தம் குடிக்கக் கூடியது சிங்கம். மெய்யாகவே அத்தனை

வீரமும் ஆண்மையும் கொண்ட சிங்கம்தான் இந்த வீரநரசிங்கம்!''

உச்சி முதல் உள்ளங்கால் வரையில் நடுக்கமெடுத்தது கயல்விழிக்கு. ''அந்தச் சிங்கத்தின் குகைக்குள்ளே நாம் போக வேண்டுமென்கிறீர்களா? அதன் குட்டியோடு விளையாடினால் நமக்கு என்ன கதி நேரும் தெரியுமா?''

''போய்த்தான் ஆகவேண்டும்!'' என்றான் தலைவன். ''வேங்கைப் புலியின் குகைக்குள்ளே போய் அதிலிருந்து மீண்டு வந்தவன்தானே? அப்போது நான் தனி மனிதன், இப்போது நீயும் துணைக்கு இருக்கிறாய். பத்திரமாகத் திரும்பிவிடலாம்.''

கயல்விழிக்கு இப்போது புது வலிமை பிறந்துவிட்டது. ஆயிரம் யானைகளை அடக்கி ஒடுக்கும் அந்த ஆண் மகன் தன்னை ஒரு பெருந்துணை என்று நம்புகிறான்! 'அவ்வளவு ஆற்றலா என்னிடம் இருக்கிறது?' என்று வியப்படைந்தாள் கயல்விழி.

''உன் ஆற்றல் உனக்குத் தெரியாது; எனக்குத் தெரியும்'' என்று கூறி நகைத்தான் பைந்தமிழ்க்குமரன். ''ஒரு கதை சொல்கிறேன் கேட்கிறாயா?'' என்றான்.

கயல்விழி புறப்படுவதற்காகத் தன்னை இன்னும் நன்றாக அலங்கரித்துக் கொண்டிருந்தாள். ''சொல்லுங்கள் கேட்கிறேன்?''என்றாள்.

''இந்தப் பாமினியின் தந்தைக்குத் தந்தை இருக்கிறாரே, அந்த வல்லாள தேவர் இளைஞராக இருந்த போது சோழ சக்கரவர்த்தி குலோத்துங்கரும் இளைஞராக இருந்தார். இருவரும் அப்போது பகைவர்கள். இரண்டு சாம்ராஜ்யங்களும் ஒன்றையொன்று விழுங்குவதற்கு தருணம் பார்த்துக் கொண்டிருந்தன. அப்படிப் போர் நடந்திருந்தால் சோழ சாம்ராஜ்யமே இருந்திருக்காது. பாண்டிய நாடு பாமினியின் தந்தைக்குச் சிற்றரசாகியிருக்கும். அப்படியெல்லாம் நடக்க முடியாதபடி செய்தவள் யார் தெரியுமா?

ஒரு பெண்! ஏதுமறியாப் பேதைப் பெண்! குலோத்துங் கருக்குத் தங்கை முறையுள்ள ஒரு சோழ நாட்டு இளவரசியாக்கும்!''

''என்ன!'' என்று ஆர்வத்தோடு அவன் முகத்தை நோக்கினாள் கயல்விழி. தாமரையைப் போன்று விரிந்த அவள் விழிஅழகைப் பருகிக் கொண்டே மேலே கூறினான் பைந்தமிழ்க்குமரன்.

''ஆமாம், அந்தச் சோழமாதேவியை வல்லாள தேவருக்குத் திருமணம் செய்துவிட்டார் குலோத்துங்கர். இதன் மூலம் ஒரு பயங்கரமான பகைவரை வென்று அவரை நன்றியுள்ள மைத்துனராக்கிக் கொண்டார். அதோடு அந்த உறவை விட்டாரா? தன் தங்கையென்ற மலர் மாலையை அவர் கழுத்தில் போட்டுச் சுற்றிவிட்டு, அதன் நறுமணத்தில் அவரை மயங்கச் செய்து விட்டு, அவர் தலையில் அவருடைய சோழ சாம்ராஜ்யத்தின் பாதிப் பளுவைச் சுமத்தி வைத்து விட்டார். கண்ணனூரிலும் காஞ்சியிலும் அவருடைய படைகளைக்கொண்டு வந்து நிறுத்தி, சோழ சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றும் நன்றியுள்ள நாய்க் குட்டிகளாக அந்தப் படை வீரர்களை மாற்றி விட்டார். இவ்வளவுக்கும் ஒரே ஒரு பேரழகிதான் மூலகாரணம்! பெண்ணின் வலிமை பெண்ணுக்குத் தெரியாது. தெரிந்து கொள்ளக்கூடிய ஆண்மகவ அதைத் தெரிந்து கொள்வான்.''

கயல்விழியின் பரவசத்துக்கோர் எல்லையில்லை. அந்த வினாடியிலேயே ஒரு மலர்மாலையாக மாறித் தன் தலைவனின் கழுத்தைச் சுற்றி வளைத்துக்கொள்ள வேண்டுமென்ற துடிப்பு அவளுக்கு. தன்னுடைய அன்பு மணத்தை அவனுக்கு வாரி வழங்கினால், அவனும் எண்ணுதற்கரிதான வீர தீரச் செயல்கள் செய்து பெருமை பெறுவானல்லவா? இந்தப் பெண் பிறவி எடுத்ததற்கு அதைவிடப் பெரும் பேறு என்ன இருக்கிறது?

நாழிகை ஆயிற்று. அவர்கள் ரதத்தை நோக்கி வந்தார்கள்.

''கயல்விழி! நான் சொல்லிய செய்திகள் நினைவிலிருக்கட்டும். நாம் சிங்கத்தின் குகைக்குப் போகிறோம். விழிப்போடு இருந்து கொள்.''

''விழிப்போடு இருக்க வேண்டியது தாங்கள்தான்!'' என்று கூறி நகைத்தாள் அவள். ''சிங்கம் யானையை வெற்றி கொள்வது ஒருபுறமிருக்கட்டும். சிங்கக்குட்டியான பாமினிப் பெண்ணிடம் இந்த யானை ஏமாற்றமடைந்துவிடப் போகிறது!''

''ஏமாறுவதற்கு வழி ஏது? கண்கள் இரண்டு எப்போதுமே என்னைக் காவல் புரிந்து வரும்போது எப்படி என்னால் ஏமாற முடியும்?''

கயல்விழியின் விழிகள் செருக்குடன் அவனை நோக்கிச் சிரித்தன.

பாமினி அவர்களுடைய வரவை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருந்தாள். அவர்களுக்கென்றே விருந்தினர் விடுதியில் இரண்டு கூடங்கள் சித்தமாகிவிட்டன. கயல் விழிக்கும் அவள் தந்தைக்கும் ஒரு கூடம்; பைந்தமிழ்க் குமரனுக்கு மற்றொரு கூடம்.

மறுநாள் முதல் அங்கே ஆடலும் பாடலுமாக இருந்தது. கயல்விழி ஆடினாள்; பைந்தமிழ்க்குமரன் பாடினான்; ஆதிச்ச தேவர் முழவிசைத்தார். யாவுமே உள் மண்டபத்தில் அரங்கத்துக்குள் நடந்தன. பாமினியின் அன்னையும் கலைநாட்டம் கொண்டவராக இருந்ததால், தமிழகத்தின் கொற்றவைக் கூத்துக்கள் அவருக்குப் புதுமையாக இருந்தன.

பாமினியின் எழில் மிக்க நளினமான நடனங்களைக் காணும் வாய்ப்பு பைந்தமிழ்க்குமரனுக்கு ஏற்பட்டது.

கம்பனின் கவிதைகளைப் பாடச் சொல்லிப் பெண்கள் அவனிடம் இராமனின் கதையைக் கேட்டார்கள். பைந்தமிழ்க் குமரனுக்கும் அது ஒரு வேடிக்கை நிறைந்த பொழுது போக்காகவே இருந்தது. ஓய்வு கிடைக்கும்போது மெல்ல மற்ற காவலர்களிடம் பழகினான். அவர்களுடைய சொந்தக்

கதைகளையும் கேட்டான். தனக்கு வேண்டிய கதைகளையும் அவர்களுக்குத் தெரியாமல் அறிந்து கொண்டான்.

ஒருவாரம் சென்றது. பாமினியிடம் விடை கொடுக்கும் படி கேட்டான் அவன். அவள் மறுத்து விட்டாள். ''உங் களுக்கு இங்கே என்ன குறை இருக்கிறது?'' என்றாள் அவள்.

பைந்தமிழ்க்குமரனின் பிடிவாதம் அதிகமாகியது. 'திடீரென்று கங்காபுரியில் செய்ததுபோல் செய்துவிட்டால் என்ன செய்வது?' என்று நினைத்தாள் பாமினி.

அவனுடைய கூடத்துக்குள் அவன் ஏதோ சிந்தனை செய்தவாறு அமர்ந்திருந்தான். சந்தடி செய்யாமல் அவன் அருகில் சென்று நின்றாள் பாமினி.

''ஆழ்ந்த யோசனை எதற்காகவோ! எப்படி இங்கிருந்து தப்புவது என்று பார்க்கிறீர்களா?''

அவன் சிரித்தான்.

''ஆமாம் கங்காபுரி மாளிகையிலிருந்து நீங்கள் எப்படித் தப்பினீர்கள்? சாளரத்தின் இரும்புக் கம்பிகளை வளைப்பதற் கென்றே ஏதும் ஆயுதங்களை மறைத்து வைத்திருக்கிறீர்களா?''

''இதோ இந்த ஆயுதங்கள்தான் அவை'' என்று தன் கரங்கள் இரண்டையும் நீட்டினான் அவன். பாமினி அவற்றைக் கூர்ந்து நோக்கினாள். எவ்வளவு அழகான, வலிமை நிறைந்த முறுக்கேறிய கரங்கள்!

அவள் பெருமூச்சு விட்டாள்.

''தந்தையார் திரும்பி வரும்வரை நீங்கள் இங்கே தங்கியிருக்கலாமே?''

''இளவரசியின் அன்பை என்னால் உணர முடிகிறது. ஆனால் இப்போதே நான் குற்றம் புரிந்துவிட்டேனோ என்று நினைக்கிறேன். அரசர் இல்லாதபோது இங்கு வந்தது தவறில்லை; ஆனால் தங்கியது தவறு. மீண்டும் ஒருமுறை இங்கு வருகிறேன்!''

''நாங்கள் துவாரசமுத்திரத்துக்கு சென்று விட்டால்?''

''அங்கு வருகிறேன்!''

''இன்னும் சில நாட்களாவது...'' கொஞ்சும் குரலில் கேட்டாள் அவள்.

''இளவரசி, நான் மறைந்து வாழ்பவன், இனியும் நான் இங்கிருப்பதால் தங்கள் பெயருக்கு ஏதும் இழுக்கு நேரக் கூடும். மேலும் சோழ சாம்ராஜ்யத்துக்கும் தங்களுக்கும் உள்ள உறவு என்னால் பாதிக்கப்பட வேண்டாம். சோழ நாட்டுக் காவலர்களுக்கு எப்படியோ நான் இங்கு இருப்பது தெரிந்துவிட்டதென்றே நினைக்கிறேன்.''

அவன் கூறிய கடைசிச் சொல் அவளையுமே கலங்க வைத்தது. தந்தை இல்லாதபோது ஏதும் தவறு நடந்தால்...?

''அவர் வந்தவுடன் நானே அவரிடம் பேசி, குலோத் துங்கரின் கட்டளையை நீக்கிவிடும்படி செய்கிறேன்.''

''நன்றி கூறுவதற்கு அப்போது நான் மீண்டும் வருகிறேன்.''

பைந்தமிழ்க்குமரனும் மற்ற இருவரும் அங்கிருந்து கிளம்பினார்கள். கயல்விழியை அணைத்தவாறு கண்ணீர் வடித்து விடை கொடுத்தாள் பாமினி. அவளுடைய மனத்துயர் கயல்விழியை உருக்கிவிட்டது.

## 33. ஒரு நாள் கூத்து

**கா**ஞ்சியிலிருந்து திருமுனைப்பாடி நாட்டின் தலை நகரமான சேந்தமங்கலத்துக்குக் கயல்விழியும் பைந்தமிழ்குமரனும் ஆதிச்சதேவருடன் திரும்பி வந்தார்கள். அதன் பின்னர் நடந்த நிகழ்ச்சிகள் யாவும் கூத்தரங்கில் வெகுவேகமாக ஒன்றின்பின் ஒன்றாக மாறிவரும் நிகழ்ச்சிகள்

போலவே கயல்விழிக்குத் தோன்றின. அவளைப் பொறுத்த மட்டில் பைந்தமிழ்க்குமரன் பல்வேறு ரகசியங்கள் நிறைந்த ஒரு மாய மனிதன். அவளால் முழுதும் புரிந்துகொள்ள முடியாதவன்.

புரிந்து கொள்ள முடியாதவனாக இருந்தால் என்ன? அவளிடம் அவன் அன்பு கொண்டிருந்தான். அவளுக்குப் பாதுகாப்பு அளித்தான். அவளிடம் உதவிகள் கோரினான். அவளுக்கு உதவிகள் செய்தான். சொல்லக்கூடிய இரகசியங் களை மட்டும் சொல்லி வைத்தான். இவை போதுமே கயல்விழிக்கு!

கோசல நாட்டின் படை பலம், அவர்களது பகைவர்களின் படைபலம், போர் நிகழ்ந்து முடியக்கூடிய கால அளவு இவ்வளவையும் கயல்விழி பைந்தமிழ்க் குமரனிடம் கூறிவிட்டாள். பாமினியிடமிருந்தும் மற்றப் பெண்டிரிடமிருந்தும் கதை கேட்டு அவள் சேகரித்த செய்திகள் அவை. பைந்தமிழ்க் குமரனோ கோசல நாட்டிற்குச் சென்றிருந்த சோழ சாம்ராஜ்யத்துப் படையின ரைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டிருந்தான்.

செய்திகள் யாவும் கயல்விழிக்கும் தெரியாதவாறு திருமுனைப்பாடி நாட்டுக் கோப்பெருஞ்சிங்கத்திடம் சேர்ப்பிக்கப் பெற்றன. சேந்தமங்கலத்து மாளிகையில் தனித்திருந்த கயல்விழி சில தினங்கள் பைந்தமிழ்க் குமரனைக் காணமுடியாமல் தவியாய்த் தவித்தாள். ஆதிச்சதேவரையும் அச்சம் பற்றிக் கொண்டுவிட்டது. மூன்று தினங்களாக அவன் திரும்பி வரவில்லை.

நான்காம் நாள் இரவில் நடுச்சாமத்தில் வந்து மாளிகையின் கதவைத் தட்டினான் பைந்தமிழ்க் குமரன். வெளியில் புரவிகள் பூட்டிய இரு ரதங்கள் நின்று கொண்டிருந்தன. தந்தையையும் மகளையும் ஒரு ரதத்தில் ஏறிக் கொள்ளச் செய்துவிட்டு, தான் மட்டும் தனி ரதமொன்றில் ஏறிக் கொண்டான்.

ரதங்கள் பறந்தன. பறந்து கொண்டே இருந்தன. குறுக்கு வழிகளிலும் சுற்று வழிகளிலும் இரவும் பகலும் அவை பறந்தன. மதுரைத் திருநகரில் ஆலவாய் அண்ணல் நெடுங்கோபுரங்களைக் கண்டவுடன்தான் கயல்விழிக்கு உண்மை புலப்பட்டது. வழியில் பாழ் அடைந்த மண்டபங் களின் ஓரங்களில் ரதங்களை நிறுத்திவிட்டு அவர்கள் உண்டு களைப்பாறிய சமயங்களிலும் கயல்விழியால் பைந்தமிழ்க் குமரனிடம் ஏதும் பேச முடியவில்லை.

அவன் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். அதை அவள் உணர்ந்து கொண்டாள். மிகப் பெரிய புயல் வீசப் போவதற்கு முன்பு அமைதி நிலவுமல்லவா? அத்தகைய பயங்கரமான அமைதியையே அவன் முகத்தில் கண்டாள் கயல்விழி. அதை அவள் கலைக்கத் துணியவில்லை.

மதுரை மாநகரின் எல்லையில் ஒரு மாளிகைக்கு முன்பு அவர்களுடைய ரதங்கள் நிறுத்தப்பட்டன! அதற்குப் பிறகு என்ன நடைபெற்றதென்றே கயல்விழியால் நிதானிக்க முடியவில்லை. அவளுடைய கலைக்குழுவைச் சேர்ந்த பெண்கள் அனைவரும் ஓடிவந்து அவளைக் கட்டித் தழுவிக்கொண்டார்கள். ஆனந்தக் கண்ணீர் பெருக்கினார்கள். பின்னால் திரும்பிப் பார்த்தபோது, புலவர்படை பைந்தமிழ்க்குமரனைத் தூக்கித் தோளின்மீது வைத்துக் கொண்டு ஆனந்தக் கூத்தாடியது. ஒரே அன்பு வெள்ளம்; ஆனந்தப் புயல்; குதூகலக் களியாட்டம்.

மறுநாள் முற்பகலில் மதுரை மாநகரத்தின் தெருக்கள் தோறும் குதிரைகளின் மீது வைத்துக் கட்டிய கலை முரசங்கள் அதிர்ந்தன. கலைக்குழுவைச் சார்ந்தவர்கள் புதுவகையான ஆடைகளையெல்லாம் அணிந்துகொண்டு தெருச் சதுக்கம் தோறும் முரசொலி எழுப்பினார்கள்.

''மதுரைப் பெருமக்களே! நமது நகரத்தையும் நம்மையும் அழிவிலிருந்து காப்பாற்றி, நகரத்தையும் நம்மையும் ஒன்றாக உருவாக்கிய புலவர் பெருமகன் நம்மைக்

காணுவதற்காக மதுரைமாநகருக்கு எழுந்தருளியிருக்கிறார்... நாம் யாரைக் காணவேண்டும், யாருடைய சொல்லைக் கேட்க வேண்டும், யாருடைய சொல்லைச் செயலாக்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தோமோ அவர் இன்று நம்மைத் தேடி வந்திருக்கிறார்...''

''எப்போது வந்தார்? எங்கே இருக்கிறார்?'' என்று கேட்டுக் கொண்டே சந்திக்குச் சந்தி, சதுக்கத்துக்குச் சதுக்கம் திரள் திரளாக மக்கள் கூட்டம் கூடியது.

''அவர் இன்று மாலையிலேயே உங்கள் முன் தோன்றப் போகிறார்! சோழ சாம்ராஜ்யம் அவரைக் கண்ட இடத்தில் விலங்கிட்டுச் சிறை செய்யவேண்டும் என்று கட்டளை யிட்டிருக்கிறதல்லவா? அந்தக் கட்டளையைச் சிதற அடிப்பதற்காக அவர் வந்திருக்கிறார். பாண்டிய நாடும் அடிமைச் சிறையில் அடிமைத் தளையில் கட்டுண்டிருக்கிற தல்லவா! அந்தச் சிறைத் தளையையும் தூள் தூளாக நொறுக்கித் தள்ளுவதற்கு வந்திருக்கிறார். பாண்டிய நாட்டுக்குத் தலைவர் இனி குலசேகர பாண்டியர் ஒருவர் தாம்! அவரே நம் தந்தை என்பதை அவருக்கே எடுத்துரைக்க நம் புலவர் வந்திருக்கிறார்.''

கோயிலை அடுத்த பட்டி மண்டபத்தில் தினந்தோறும் வள்ளுவரின் பொருளதிகாரம் பற்றிப் புலவன் உரை நிகழ்த்துவான் என்பதையும் அதை அடுத்துக் கயல்விழியின் 'வெற்றித் திருமகள்' என்ற கூத்து நடைபெறும் என்பதையும் அறிவித்தார்கள் முரசறைவோர்.

காட்டுத் தீ போல நகரத்துக்குள் செய்தி பரவியது. மக்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும்போதெல்லாம் இதையே பேசினார்கள். கூனிக் குறுகி நடந்தவரெல்லாம் தலை நிமிர்ந்து ஏறுநடை போட்டனர். கண்களுக்குப் புத்தொளி கிடைத்ததுபோல், நெஞ்சுக்குள் புத்துணர்வு பூத்தது போல், இரத்தக் குழாய்களில் புதுரத்தம் பாய்ந்ததுபோல் இருந்தது மதுரை மாநகரத்து மக்களுக்கு. இவ்வளவுக்கும் பலர்

அவனை நேரில் கூடப் பார்த்ததில்லை. அப்படி அவனிடம் என்னதான் சக்தி இருந்தது? மதுரை நகருக்குள் அவன் நுழைவதற்கு முன்பே அவனுடைய உள்ளொலி எங்ஙனம் அந்த நகரம் முழுவதும் பரவியது?–அவன் தலைவன்!

அவனது சக்தி பரவுவதற்குக் காரணமாக இருந்து எல்லா ஏற்பாடுகளையும் மறைமுகமாக இயக்கிய விழுப்பரையர், ஏதுமறியாதவர்போல் தனியே நகரத்தைச் சுற்றி வந்து கொண்டிருந்தார். அவருடைய குதிரை நிதானமாக நடைபோட்டுப் பழகியது. மக்களின் முகங்களே அவருடைய அளவுகோல். முகத்திலிருந்து அகத்தை ஊடுருவி வந்தார் அவர்.

குலசேகர பாண்டியர் அப்போது மதுரையில் இல்லை. பழமுதிர் சோலைக்குச் சென்று சில தினங்கள் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். உடல்நிலை தளர்ச்சி கண்டிருந்தது அவருக்கு. உடல்நிலை தளர்ச்சிக்குக் காரணம் மனநிலை தான். ஏனோ இப்போதெல்லாம் மீண்டும் மீண்டும் அவருக்குச் சுந்தர பாண்டியனின் நினைவு வந்தது. சோழ சாம்ராஜ்யத்தின் தலைமைக்கு இராஜராஜன் வந்தபிறகு அவனுடைய செருக்கான ஆணைகள் அவரை உருக்குலைத்து விட்டன. அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபர் அமைச்சராகவே நடந்து கொள்ளவில்லை. அரசனின் மேலதிகாரி என்ற முறையில் ஒவ்வொன்றையும் தமது போக்கில் செய்துகொண்டு வந்தார். ஆகவே, சிந்திப்பதற்காக ஓய்வு தேடி அழகர் கோயில் மாளிகையில் தங்கியிருந்தார் பெரிய பாண்டியர்.

பிற்பகலில் மதுரை மாநகரம் முழுவதுமே ஒன்றாய்த் திரண்டு பட்டிமண்டபத்தின் முன்பு கூடிவிட்டதுபோல் தோன்றியது. புலவர் படையைச் சேர்ந்தவர்கள் மக்களின் பெருங்கூட்டத்தைக் கண்டு திகைத்துப் போனார்கள். ஒவ்வொரு தினமும் கூட்டம் நடைபெறுமென்றும் ஒவ்வொரு தெருவினராக வந்து கண்டு செல்லலாமென்றும்

கூறினார்கள். புலவனின் குரல் அனைவரின் செவிகளிலும் விழாது; தொலைவில் இருப்பவர்கள் அவனைக் காணவும் முடியாது; கூட்டத்தில் குழந்தைகளுக்கும் பெண்மணி களுக்கும் துன்பம் நேரலாம்–எல்லாவற்றையும் விரிவாக எடுத்துரைத்தார்கள்.

''அவரை ஒரே ஒரு கணம் கண்டுவிட்டால் போதும். இன்றே, இப்போதே காணவேண்டும். கட்டுப்பாட்டுடன் நடந்து கொள்ளுகிறோம்'' என்று உறுதி அளித்தது கூட்டம். தங்களுக்குள் ஒழுங்குமுறைகளைச் சிறுசிறு தலைவர்களின் வாயிலாக அது வகுத்துக்கொண்டு விட்டது.

பைந்தமிழ்க் குமரன் மண்டபத்தில் தோன்றினான். முகத்தில் இளம் தாடி மண்டிக் கிடந்தது. தலை முடியைச் சுற்றிக் கட்டியிருந்தான். அவன் குரல் கணீரென்று எழுந்தது. அவன் குரலைக் கேட்க முடிந்தவர்கள், கேட்க முடியாதவர்கள், அவனைக் காண முடிந்தவர்கள், அவனைக் காணமுடியாதவர்கள் அனைவருமே மந்திரத்தால் கட்டுண்டு விட்டவர்கள்போல் மெய்ம்மறந்து அமர்ந்துவிட்டனர். அமைதியாக அங்கே மக்கட் பெருங்கடல் கரைகடவாமல் அலைமோதியது.

''நான் பெற்ற சிற்றறிவு, என் உடல், பொருள், ஆவி, இவ்வளவும் எனக்கு இந்த நாடு வழங்கியிருக்கிறது. நீங்கள் வழங்கியிருக்கிறீர்கள். அவற்றை இப்போது உங்களுக்கே திருப்பித் தந்து நன்றிக் கடன் கட்ட வந்திருக்கிறேன். என்னை நான் உங்களுக்குத் தருகிறேன். ஒவ்வொருவரும் உங்களது தூய அன்பை எனக்குத் தாருங்கள். இந்த நாட்டுக்காகத் தாருங்கள். நாடு என்பது என்ன? நீங்கள், நீங்கள், நீங்கள் தான் நாடு! குடிமக்கள்தான் நாடு! உங்கள் குடும்பத்தின் தலைவர் குலசேகர பாண்டியர்!''

வள்ளுவர் அவனுக்குக் கொடுத்த குறையாப் பெருஞ் செல்வத்தை அவன் மக்கள் மனத்தில் எளிதில் தைக்கும் படியாக வாரி, வாரி வழங்கினான். தேனில் குழைத்த

சொல்லம்புகளைக் கேட்பார் நெஞ்சில் தைக்கும்படியாகத் தொடுத்துவிட்டான். உண்மையைக் கூறினான்; நன்மையைக் கூறினான்; அஞ்சாமல் கூறினான்.

கூட்டம் திரைச் சீலைச் சித்திரமாக மாறிவிட்டது. அவனுடைய குரலைக் கேட்க முடியாத தொலைவில் இருந்தவர்கள்கூட, தங்கள் உள்ளத்திலிருந்து அவன் குரல் எழும்பி வருவதை உணர்ந்தார்கள். அவன் ஓர் அறநெறியாளன் என்பதையும் அஞ்சாநெஞ்சன் என்பதையும் அவர்களால் கண்டு கொள்ள முடிந்தது.

அடுத்தாற்போல் கயல்விழியின் நடனம் நடைபெற்றது. நடனம்தானா அது? அவள் தீக்கொழுந் தாகவே மாறிச் சுடர் சூழ விட்டு சுழன்றாள். அன்றொரு நாள் மதுரைமாநகரை அழிக்கத்துணிந்தாளே அந்தக் கண்ணகியல்ல இவள். மதுரைநகருக்குப் புதிய ஒளி கொடுப்பதற்கு முன்வந்த கொற்றவைத் தேவி!

'அரசியல் பிழைத்தார்க்கு அறம் கூற்றாகும்!' என்பதை அன்று அந்தக் கண்ணகி மதுரைமாநகரில் நிலை நாட்டினாள். இன்று இவளோ அதையே கூறி, அரசியலில் பிழை செய்து கொண்டிருந்த சோழசாம்ராஜ்யத்தின் கூற்றாகக் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தாள். ஒவ்வொருவர் உள்ளத் திலும் சுடர் ஏற்றினாள்.

நிகழ்ச்சிகள் முடிந்தன. மதுரைமாநகரத்து மக்கள் மூச்சுவிடவும் மறந்து போனார்கள்.

நகரத்தின் எல்லையிலிருந்து மாளிகைக்குப் பைந்தமிழ்க் குமரனும் மற்றவர்களும் திரும்பிச் சென்ற போது, அங்கே கனல் தெறிக்கும் விழிகளோடும் தம்முடைய வீரர்களோடும் காத்திருந்தார், சயங்கொண்ட சோழ வல்லபர். குதிரையிலிருந்து அவன் குதித்து இறங்கியவுடன் தாமே அவன் கரங்களை விலங்கிட்டுப் பிணைத்தார்.

# 34. அநீதியின் ஆணை



விலங்கிட்டுக் கரங்களைப் பிணைப்பதற்கு உதவி செய்வதைப் போல் கரங்களை அமைச்சரிடம் நீட்டியவாறு புன்னகை செய்தான் பைந்தமிழ்க் குமரன். அவனுடைய அந்தச் சிரிப்பு ஏனோ அமைச்சரை நடுங்கச் செய்தது. ''எதிர்பார்த்ததைத் தான் எதிர்பார்த்தபடி செய்திருக் கிறார்கள். வேறொன்றும் செய்ய வில்லை'' என்று அமைதியோடு கூறினான் அவன்.

அவர் துணுக்குற்றார். பைந்தமிழ்க்குமரன் சுற்றிலும் கண்ணோட்டம் விட்டான். கூர்வேல் தாங்கிய குதிரைவீரர்கள் நூறு பேர்களுக்கு மேல் அங்கிருந்தார்கள். அங்கிருந்த அனைவருமே சோழநாட்டு வீரர்கள்.

கயல்விழி அருகில்தான் பிரமை பிடித்துப்போய் நின்றாள். அவனைச் சார்ந்த புலவர்கள் சிலர் துரிதமாக எங்கோ விரைந்து செல்வது தெரிந்தது.

''ஏன், கயல்விழியையும் சிறை செய்யலாமே; அவளும் அருகில்தான் இருக்கிறாள்'' என்றான் புலவன்.

''பெண்களின் குற்றங்களை மன்னித்துவிடும் பெருந்தன்மை சோழநாட்டுக்கு உண்டு. ஆட்டி வைப்பவன் நீ. ஆடுகிறவள் அவள். இனி எல்லாமே ஒடுங்கிவிடும்!'' என்றார் அமைச்சர்.

அவன் உரக்கச் சிரித்தான். சிரித்துக் கொண்டே அவர் சிந்தனையில் இருப்பதை அறிந்து கொள்ளத் துடித்தான். இரவோடு இரவாக அவர் அவனைக் கங்காபுரிக்கு அனுப்பி வைக்கத் திட்டமிட்டிருக்கிறார். பாண்டியர் மதுரைக்குத் திரும்புவதற்கு முன்பாக, மக்களிடம் செய்தி பரவுவதற்கு

முன்பாக அவர் அவனை மதுரையை விட்டுக் கடத்தி விடுவதற்குத் துணிந்திருக்கிறார்.

''கங்காபுரிக்குத்தானே என்னை அனுப்புகிறீர்கள்?'' என்று கேட்டான் புலவன்.

''எங்கு அனுப்புகிறேன் என்பதை உன்னிடம் கூற வேண்டும் என்பதில்லை?''

''தாங்கள் கூற வேண்டாம். ஆனால் இதை முன்னரே நான் தெரிந்துகொண்டிருக்கிறேன் என்பதையும் தங்களிடம் நான் கூறவேண்டும். மேலும் தங்களுடைய நூறு வீரர்களுக்கும் வீர சுவர்க்கம் புகுவதற்குத் தாங்கள் இப்போதே அனுமதி வழங்கிவிடவேண்டும். வழியில் ஆங்காங்கே வீரர்களை நிறுத்திவிட்டுதான் நான் மதுரைக்குள் புகுந்திருக்கிறேன். இவற்றையெல்லாம் இப்போதே நான் தங்களிடம் கூறுவது நல்லதல்லவா?''

அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபருக்குத் தலை சுற்றியது. மின்னல் வேகத்தில் காரியங்களை முடித்து விடலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தவர் அவர். அவனோ வழியெங்கும் இடி இடிக்கும் படைவீரர்களை நிறுத்தியிருக்கிறானாம்! அவனுடைய அஞ்சாமையைக் கண்டு அவர் அஞ்சினார்.

புலவன் யாரையும் வழியில் நிறுத்தி வைக்கவில்லை. அவனுடைய கற்பனையில் உதித்த வீரர்கள் அவர்கள். அவன் ஏதோ திட்டமிட்டு அவர் செயலைத் தடுக்க விரும்புகிறான் என்பது கயல்விழிக்குப் புலப்பட்டுவிட்டது. தீவர்த்திகள் ஒளியிலிருந்து அவள் மெல்ல நழுவிச் சென்றாள். தன் தந்தையின் செவிகளில் ஏதோ கூறிவிட்டுத் திரும்பி வந்தாள்.

பைந்தமிழ்க் குமரனை நேரே தம்முடைய மாளிகைக்கு அழைத்துச் செல்வதைத்தவிர அவருக்கு வேறு வழியில்லை. அங்கேயே அவனை அவரால் சிறை வைக்கமுடியும். தப்பிச் செல்லாமலும் கண்காணித்துக் கொள்ள முடியும்; பிறகு சோழ நாட்டுக்கு அனுப்பி வைக்கவும் முடியும்.

நேரே தம்முடைய மாளிகைக்கு அவனை அழைத்து வருமாறு கட்டளையிட்டுவிட்டு, குதிரைமீது தாவி ஏறினார் அமைச்சர். படையினர் புடைசூழ அவன் கைவிலங்கோடு ஒரு ரதத்தில் ஏற்றப்பட்டான். அவனைக் கைப்பற்றிய கூட்டம் அமைச்சரின் மாளிகையை நோக்கித் திரும்பியது. அவனை மாளிகை விடுதிக்குள் வைத்துக் கதவுகளைப் பூட்டச் செய்தார் அமைச்சர். ஐம்பது ஐம்பது பேர்களாக மாறி மாறிக் காவலுக்கு நிறுத்தி வைத்தார். அவன் தப்பி ஓடுவானானால் ஐம்பது வீரர்களின் தலைகளும் பறிபோய்விடும் என்பதை அவர் எச்சரிக்கத் தவறவில்லை.

ஒரு நாழிகை நேரந்தான் சென்றது. அதற்குள் தீவர்த்திகளும் கையுமாகக் குடிமக்களின் கூட்டம், அமைச்சரின் மாளிகையின் முன்பு கூடிவிட்டது. பட்டி மண்டபத்தின் முன்னால் திரண்டிருந்த கூட்டம் அது. விநாடிக்கு விநாடி கூட்டம், அலை அலையாகப் பொங்கிக் கொண்டே வந்தது.

கூட்டத்தினரை விலக்கிக் கொண்டு வரும் துணிவு ஒரே ஒருவருக்குத்தான் இருந்தது. அவர் விழுப்பரையர்!

அமைச்சரின் முன்பு போய் அவர் நின்றார். அவரை சுட்டு எரித்து விடுவது போல் விழித்துப் பார்த்தார் அமைச்சர். விழுப்பரையரோ சாளரத்தின் வாயிலாக வெளியே தெருவில் எரிந்து கொண்டிருந்த ஆயிரமாயிரம் தீவர்த்திகளை அவருக்குச் சுட்டிக் காட்டினார்.

''அவர்கள் எதற்காக இன்னும் பொறுத்துக் கொண்டிருக்கிறார்கள், தெரியுமா?'' என்றார் விழுப்பரையர்.

''தங்கள் மாளிகைக்குத் தீயிட்டால், அதனால் புலவருக்கும் தீங்கு நேருமே என்ற ஒரே காரணத்துக்காகத் தான்.''

''என்ன நேர்ந்தாலும் நேர்ந்துவிட்டுப் போகட்டும். இன்றைக்கு என்ன நேருகிறதோ இதேபோல் ஆயிரம் மடங்கு அழிவை நாளைக்கே நடத்தப் போகிறார் இராஜராஜ சோழர். இப்போதைக்கு என்னால் விடுவிக்க முடியாது.''

''அவரை விடுவிக்கும்படி கோருவதற்கு நானும் இங்கு வரவில்லை. அவர் தாராளமாகச் சிறையில் இருக்கட்டும். ஆனால் பாண்டியர் தலைநகரத்தில் இல்லாதபோது தங்களுக்கு ஏதும் நேர்ந்துவிட்டால் அது இந்தப் பாண்டிய நாட்டுக்கே இழுக்காகும். நான் இந்த நாட்டின் பண்பைக் காக்க விரும்பும் புலவன். அதனால் தங்கள் உதவியை நாடி வந்திருக்கிறேன்.''

''என்ன செய்ய வேண்டும்?''

''சற்று என்னோடு முகப்பு வாயிலுக்கு வாருங்கள். குடிமக்களை அமைதியோடு திருப்பி அனுப்புவது என் பொறுப்பு. தாங்கள் என் அருகில் வந்து நின்றால் போதும்.''

அமைச்சர் விழுப்பரையருடன் முகப்புக்கு வந்தார். தீவர்த்தி ஒளியில் அவர்கள் நின்று கொண்டார்கள். விழுப்பரையர் குடிமக்களைக் கையமர்த்தியவாறே கூறலானார்:

''பெருமக்களே! புலவரிடம் தாங்கள் கொண்டுள்ள பேரன்பை என்னால் உணர்ந்துகொள்ள முடிகிறது. நானும் ஒரு புலவன். ஆனால் அமைச்சரின் செய்கையால் நாம் ஆத்திரம் கொள்ளக்கூடாது. அவர்கள் சோழப் பேரரசின் கட்டளை எதுவோ அதைச் செய்திருக்கிறார்கள். அது அவர்கள் கடமை. இப்போது புலவருக்கு ஏதும் நேர்ந்து விடாது. நம்முடைய பாண்டியர் தலைநகரத்துக்குத் திரும்பிய வுடன், அவரே நம் புலவருக்கு நீதி வழங்குவார். அரசர் நீதிக்குப் புறம்பாக அமைச்சர் ஏதும் செய்துவிடமாட்டார். இந்த உறுதியை அமைச்சரின் சார்பில் தங்களுக்கு அளிக்கிறேன்.''

அமைச்சரின் முகம் இந்த உறுதிக்கு உடன்படவில்லை என்பதைச் சுட்டிக் காட்டியது. 'பாண்டியர் நீதி வழங்கும் அதிகாரம் இதில் எங்கே இருக்கிறது?' என்பதுபோல் விழித்து நோக்கினார் சயங்கொண்ட சோழ வல்லபர்.

''நான் தங்கள் சார்பில் உறுதியளித்தது சரிதானா?'' என்று கேட்டார் விழுப்பரையர்.

அமைச்சர் பதில் அளிக்கவில்லை.

''அமைச்சர் நேரில் உறுதிமொழி அளிக்க வேண்டும்!'' என்று பல குரல்கள் ஒன்றாக எழுந்தன. ''அதை அவர் காப்பாற்றவேண்டும்!''

''அமைச்சரே! தங்கள் உயிரை இப்போது நான் இழக்க விரும்பவில்லை!'' என்று அமைச்சரின் செவிகளில் ரகசியமாகக் கூறினார் விழுப்பரையர். ''கூறிவிடுங்கள். தங்கள் எண்ணத்தைப் பாண்டியரின் வாயிலாகவே நிறைவேற்றிக் கொள்ளுங்கள்.''

இது ஏற்ற யோசனையாகத்தான் தோன்றியது அமைச்சருக்கு.

''அவ்வாறே உறுதியளிக்கிறேன்'' என்று கூறினார் அமைச்சர். விழுப்பரையரின் முறையீட்டுக்குப் பணிந்து அமைதியோடு கலைந்து சென்றனர் பாண்டிய மக்கள். விழுப்பரையரும் புறப்பட்டார். சிறைக்குள் அமைதியோடு உறங்க முயன்றான் பைந்தமிழ்க் குமரன். கயல்விழியும் அவனைச் சார்ந்தவர்களும் அந்த நகர மாந்தரும் அன்றைக்கு உறங்கவில்லை. அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபர் அன்று இரவு முழுவதையும் பகலாக்கிச் சிந்தித்தார்.

மறுநாள் அவருடைய ரதம் பழமுதிர்ச் சோலைக்குச் சென்றது. பாண்டியருக்கு அலட்சியமாக வணக்கம் செலுத்திவிட்டு அவர் அருகில் அமர்ந்தார். நடந்த செய்திகளைக் கூறினார். பாண்டியருக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை.

''தாங்கள் இரண்டில் ஒன்று முடிவு செய்ய வேண்டிய நேரம் இப்போது வந்திருக்கிறது; தங்களுக்கு அந்தப் புலவன் ஒருவனுடைய உயிர் முக்கியமானதா? அல்லது பல்லாயிரக் கணக்கான குடிமக்களின் உயிர் முக்கியமானதா?''

பாண்டியர் சிந்தனை செய்தார். ''எது நீதியோ, எது நெறியோ, எது தர்மமோ அதுதான் முக்கியமானது...''

''தாங்கள் இப்போதே மதுரைக்கு என்னோடு திரும்பி வந்து சபை கூட்டவேண்டும். புலவனை விசாரணை செய்து

ஒன்று அவனுக்கு மரண தண்டனை விதிக்கவேண்டும். அல்லது கங்காபுரிக்கு அவனை அனுப்பி வைக்கவேண்டும். இந்த இரண்டில் எது நீதியோ அதுதான் நீதி! பாண்டிய நாட்டை மறு படையெடுப்பிலிருந்து காக்கத் தாங்கள் நிலை நாட்டவேண்டிய நீதி!''

பாண்டியர் இருதலைக்கொள்ளி எறும்பானார். மறுபடியும் போர் என்ற ஒன்றை நினைக்கவே அவர் நெஞ்சம் பதறியது. 'பாண்டிய நாட்டை மீண்டும் அழிவுக்குள்ளாக்குவதா? அல்லது அந்த ஒருவனை அழிப்பதா?'

# 35. *கண்ணகியும் கயல்விழியும்



பழமுதிர் சோலையாம் அழகாபுரியிலிருந்து மதுரைத் தலைநகரத்துக்கு வந்து சேர்ந்த குலசேகர பாண்டியர், மதுரை மாநகரமே குமுறிக் கொண்டிருப்பதைக் கண்டார். எந்தப் புலவனை வரவேற்றுப் பெருமை பெற வேண்டுமென்று நகரமாந்தரின் ஐம்பெரும் பிரிவினரான அறவோர், ஆளுங்கணத்தோர், வணிகர், தொழிலாளர், உழவர் ஆகி யோர் விரும்பினரோ, அவன் அதே நகரில் சிறை வைக்கப் பெற்றிருந்தான். பாண்டிய நாட்டுக்கே இது இழுக்கு என்று கூறி நகரத்துப் பெருமக்கள் அரசரிடம் வந்து முறையிட்டுச் சென்றனர்.

---

*மதுரையில் செல்லத்தம்மன் கோயிலாக உள்ள கொற்றவைக் கோயிலில் இன்றும் பத்தினித் தெய்வமாம் கண்ணகியின் வண்ணச் சிலை இருக்கிறது. பாண்டியனின் பால் சிதறக் காட்டிய ஒற்றைச் சிலம்பு போக, எஞ்சிய ஒரு கால் சிலம்பைத் தனது இடது கரத்தில் பற்றிய வண்ணம் அமர்ந்திருக்கும் திருக்கோலம் அது. தீமையைத் தமது வெஞ்சினத் தீயால் அழித்தபின்னர் அமைதிநாடி அமர்ந்துள்ள படிவம். தலைமுடி, கண்மலர்கள் போன்ற ஆபரணங்கள் சூட்டி அதை இன்று கொற்றவைத் தேவியாக வழிபடுகிறார்களென்றாலும், அது மனிதப் பெண்ணுக்குரிய அங்கலட்சணங்களுள்ள கண்ணகி சிலையே என்பதில் ஐயமில்லை.

அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபரோ புலவன் மேலுள்ள குற்றச்சாட்டுகளை ஓலையில் எழுதிப் பாண்டியரிடம் கொடுத்திருந்தார். அரசர் நகரத்துப் பெருமக்கள் கூறியதையும் ஆராய்ந்தார்; அமைச்சர் தனித்துக் கூறியதையும் ஆராய்ந்தார். ஓலையில் இருந்த குற்றச் சாட்டுகளையும் கவனித்தார்.

பொதுச் சபை கூடி, குற்றம் சாட்டப்பட்ட புலவனை விசாரணை செய்து நீதி வழங்கவேண்டிய பெருங் கடமை பாண்டியரின் முன்னே நின்றது. நாள் குறிப்பிட்டுப் பொதுச் சபை கூடுவதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்கச் செய்தார் பாண்டியர்.

நாள் குறித்தாகிவிட்டது. விழுப்பரையர் பல்வேறு பணிகளில் ஈடுபட்டிருந்ததால், கயல்விழியிடம் அமைதி யாகப் பேச அவருக்கு நேரம் கிடைக்கவில்லை. கயல்விழிக்கு மட்டிலுமே இது பயங்கரமான சோதனையாக அமைந்து விட்டது.

பைந்தமிழ்க்குமரன் சோழ சாம்ராஜ்யத்தின் ஆணைகளைத் துச்சமாக மதிப்பவன். அமைச்சரின் செருக்கைப் பொருட்படுத்தாதவன். ஆனால் பாண்டியரே அவனுக்குத் தண்டனை அளித்தால் என்ன செய்வது? எந்தப் பாண்டியருக்காகவும், அவருடைய நாட்டுக்காகவும் ஒருவன் தன்னையே தியாகம் செய்து கொண்டிருக் கிறானோ, அவரே அவனை நாடு கடத்தினால் என்ன செய்வது! சோழ சாம்ராஜ்யத்தின் சிற்றரசரான பாண்டியரின் நீதி, சிற்றரசரின் நீதியாகத்தானே இருக்கும்? அவர் எங்ஙனம் சாம்ராஜ்யத்துக் கட்டளைக்கு எதிராக அவனுக்கு விடுதலை அளிப்பார்?

வெண்ணெய் திரண்டு வரும்வேளையில் தாழி உடைவது போல் தோன்றியது கயல்விழிக்கு. ஏலமலைக் காட்டிலும், காஞ்சியிலும், திருமுனைப்பாடி நாட்டிலும் ஏதேதோ சாகசங்கள் செய்து வந்தவன் இப்போது பாண்டி

யருக்குப் பணிந்துவிடப் போகிறான். தண்டனையை ஏற்றுக் கொண்டு அவர் பாதங்களில் தண்டனிடப் போகிறான்.

சபை கூடும் நாள்.

அதிகாலையில் எழுந்துபோய்க் கயல்விழி வைகையில் நீராடினாள். நேரே கண்ணகியின் கோயிலை நாடி நடந்தாள். அரச மரங்களால் சூழப்பெற்ற அந்தச் சிறு கோயிலில் அப்போது கண்ணகியின் படிவத்துக்கு முன்பு ஓர் அகல் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. தன் கணவனுக்காக அரச நீதி கோரிய கண்ணகி, அங்கே தன் ஒற்றைச் சிலம்பும் கையுமாக வீற்றிருந்தாள். பாண்டியனிடம் முறையிட்டு நீதியை நிலை நாட்டிய பத்தினித் தெய்வம் அவள்.

''தாயே!'' என்று நாத் தழுதழுக்க விம்மினாள் கயல்விழி. ''நீ அன்றைக்குப் பாண்டியர் நெடுஞ்செழியனிடம் சென்று முறையிடுவதற்குள் நீதி செத்துப் போய் விட்டது. உன் கணவர் அதற்குள் கொல்லப்பட்டு விட்டார். ஆனால் அந்த நிலை எனக்கு இன்னும் வரவில்லை. எனக்கு என் கணவரைக் கொடு! ஆம், அவர் என் கணவர்தாம். அவரை எனக்குக் கொடு!''

கண்ணகியின் வலது கரத்திலிருந்தது செங்கோல் போல் தோன்றியது கயல்விழிக்கு. அந்தப் பத்தினியின் முகத்தில் குடிகொண்டிருந்த தூய அமைதியை கண்ணுற்றாள். மீண்டும் கயல்விழி கதறினாள்.

''பத்தினித் தெய்வமே! உனக்கு மட்டுமே என்னுடைய துன்பங்கள் முழுவதும் தெரியும். நான் யார் என்பதும் உனக்கு மட்டுமே தெரியும். அவருக்குக் கூடத் தெரியாத இரகசியம் அது. அதுவே என் குற்றமாக இருந்தால், அந்தக் குற்றத்துக்காக அவரைத் தண்டித்து விடாதே. அவரை எப்படியாவது காப்பாற்று. அவருக்கு இன்று நீதி கிடைக்காவிட்டால், நான் உன்னடியில் வந்து உயிரை மாய்த்துக் கொள்வேன். நான் பத்தினியல்ல என்று நீ நினைத்தால், எனக்கு அதுவே தண்டனையாக இருக்கட்டும்!''

மலர் தூவி, மண்டியிட்டு, கண்ணகியிடம் தன் உள்ளக் குமுறல்களையெல்லாம் கொட்டிவிட்டு வெளியில் வந்தாள் கயல்விழி. நீதி கிடைக்கும் என்ற நம்பிக்கையை அவள் இழந்துவிடத் துணியவில்லை.

அரசவை மண்டபத்துக்குள் கயல்விழியும் அவள் குழுவைச் சார்ந்தவர்களும் அநுமதி பெற்று நுழைந்தார்கள். அதற்குள் மண்டபம் முழுவதுமே பெருமக்களால் நிறைந்திருந்தது. குலசேகர பாண்டியரின் சிம்மாசனத்துக்கு முன்னால் இடது புறத்தில் செருக்கோடு அமைச்சர் சோழ வல்லபர் அமைந்திருந்தார். வலதுபுறத்தில் விழுப்பரையர் ஆழ்ந்த யோசனையில் மூழ்கியிருந்தார். பாண்டியரின் வரவு அறிவிக்கப்பட்டது, அனைவரும் எழுந்து நின்றனர்.

குலசேகர பாண்டியர் களையிழந்த முகத்தோடும் கவலைகள் சூழ்ந்த விழிகளோடும் வந்து தமது ஆசனத்தில் அமர்ந்தார். நீதி வழங்கும் பணியின் தூய்மையை உணர்ந்தவர் அவர். நடுநிலையோடு ஆராய்ந்து நீதி வழங்கும் பழக்கமுள்ளவர். ஆனால் அன்றுமட்டும் அவர் முகம் ஏதோ ஒரு விரும்பத்தகாத பணியைச் சூழ்நிலையின் வற்புறுத்தலால் ஏற்றுக் கொண்டிருப்பதை வெளிப் படையாகவே காட்டியது.

புலவனைச் சபைக்கு அழைத்து வந்தார்கள். கரங்களில் விலங்கோடு அவன் கொண்டு வரப்பட்ட காட்சி சபையோரின் கண்களை உறுத்தியது போலவே பாண்டியரின் கண்களையும் உறுத்தியிருக்க வேண்டும்.

''விலங்கை அகற்றுங்கள்!'' என்று கோபத்தோடு கட்டளையிட்டார் பாண்டியர். அந்தக் குரல் அமைச்சரை என்னவோ செய்தது.

''ஒருமுறை தப்பி ஓடிய குற்றவாளி. அதனால்...''

''இது பாண்டிய நாடு, சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த நாடு. வள்ளுவரை அரங்கேற்றிய மதுரைமாநகரம் இது;

குற்றம் சாட்டப்பட்டிருப்பவர் ஒரு புலவர்'' என்று மிடுக்கோடு கூறினார் பாண்டியர்.

பைந்தமிழ்க்குமரனின் விலங்கு அகற்றப் பெற்றது. மெல்லத் தலைதூக்கி ஒரே ஒரு கணம் பாண்டியரைப் பார்த்துவிட்டு உடனே தலையைக் கவிழ்த்துக் கொண்டான். மீண்டும் நோக்கினால் அவனால் தன் கண்ணீரை அடக்க முடியாதுபோல் தோன்றியது. எவ்வளவு மாற்றம் பாண்டியரிடத்தில்! உருக்குலைந்து, உடல் நலிந்து, முதுமைப் பருவத்தால் மெலிந்தவர் போலல்லவா தளர்வெய்தி விட்டார். புலவனின் இரத்தம் துடித்தது! ஒரே இரத்தமல்லவா!

பாண்டியரும் அவனை ஏறிட்டுப் பார்த்தார். கூர்ந்து நோக்கினார். எப்போதோ எங்கேயோ கண்டிருப்பது போன்ற பிரமை அவருக்கு. எப்போது எங்கென்று விளங்கவில்லை. அவர் இதயம் ஏனோ வேதனைப் பட்டது, அவனைப் பார்த்த மாத்திரத்தில்.

''இந்தப் புலவரின் மீதுள்ள குற்றச்சாட்டு?'' என்று அமைச்சரை வினவினார் அரசர்.

''பாண்டிய நாட்டுக்குப் பெருமை தருவதற்காக இந்தப் புலவர் சோழ சாம்ராஜ்யத்தின் தலைநகருக்கு அழைக்கப் பெற்றார். இவரை அழைத்த குலோத்துங்க சக்கரவர்த்திகள் எத்தனையோ புலவர்களை ஆதரித்துப் புகழ் பெற்றவர்கள். பரிசில்களும் பாதுகாப்பும் அளித்துத் தமிழ் வளர்த்தவர்கள். அந்த வள்ளலையே இவர் அலட்சியப்படுத்தி இவருக்கும் பாண்டிய நாட்டுக்கும் இழுக்கைத் தேடியிருக்கிறார்-இது முதல் குற்றம்.

''அதையும் பொருட்படுத்தாது, இவரை விருந்தினர் மாளிகையில் வைத்து அவர்கள் கௌரவித்திருக்கிறார்கள். இவரோ ஒரு காவலாளனை நையப் புடைத்து விட்டு, மாளிகையின் சாளரத்துக் கம்பியை வளைத்துக் கொண்டு, அங்கிருந்து யாரும் அறியாமல் தப்பி ஓடியிருக்கிறார்- இது இரண்டாவது குற்றம்.

''இவர் சோழ நாட்டுக்கு எதிராகப் பாண்டிய மக்களிடம் வெறுப்பூட்டும் வகையில் இந்த மதுரை மாநகரிலேயே உரையாற்றியிருக்கிறார். இதனால் இந்த நாட்டின் மீது மற்றொரு படையெடுப்பு நிகழும் அபாயத்தை இவர் தோற்று வித்திருக்கிறார். நாடு இன்னும் சென்ற போரின் துன்பத்திலிருந்து மீளவில்லை. இவருடைய இந்தச் செய்கை பாண்டிய நாட்டுக்கே துரோகம் செய்வதாகும்- இது மூன்றாவது குற்றமாகும்.''

பாண்டியருக்கு அச்சம் விளைவித்தது அமைச்சரின் மூன்றாவது குற்றச்சாட்டுத்தான்; மற்றொரு போரை நடத்தப் போவதாக அமைச்சரே பறையறைவித்து விட்டார்!

''புலவரே! உங்களுடைய மறுமொழி?'' என்றார் பாண்டியர்.

மறுமொழி கூறுவதற்குரிய பல செய்திகள் அவனிட மிருந்தன. ஆனால் ஏனோ அவன் அப்போது திடீரென்று கோழையாகி விட்டான். சொற்கள் நெஞ்சிலிருந்தன. தொண்டை யடைத்துக் கொண்டு விட்டது. விழுப்பரையர் அவனது மறுமொழிக்காகத் துடித்தார். மன்னரும், மற்றோரும், கயல்விழியும் ஒன்றாகத் துடித்தார்கள்.

பிறகு அவன் பேசவில்லை. கூட்டம் திடுக்கிட்டு நின்றது.

புலவன் நாத் தழுதழுத்தது. ''நான்..நான் ஏதும் கூற விரும்பவில்லை. ஆனால் இந்த நாட்டுக்கும் மக்களுக்கும் நான் கனவிலும் துரோகம் நினைக்காதவன்'' என்று கூறி முடித்து விட்டான் அவன்.

பாண்டியர் தவித்தார். விளக்கமான மறுமொழி கூறவில்லை யென்றால் அமைச்சரின் குற்றச்சாட்டுக்கள் தானே மெய்யாகும்?

சபையில் பரபரப்பு ஏற்பட்டது. கயல்விழி வெறி கொண்டவள் போல் சபை நடுவே ஓடி வந்து நின்றாள்.

# 36. முறையிட்டாள் மங்கை



குலசேகர பாண்டியருக்குச் சபை நடுவில் கயல்விழியைக் கண்டவுடன் ஏனோ கண்ணகியின் நினைவுதான் முதலில் வந்தது. பாண்டியன் நெடுஞ்செழியன் செய்த பெரும் பிழையும் அதன் பின் விளைவுகளும் அவரிடம் மின்னலெனப் பளிச்சிட்டன.

''கயல்விழி! கயல்விழி!'' என்று சபையிலிருந்த பெருமக்களில் பலர் வாய்விட்டுக் கூவினார்கள். அவளுடைய கூத்தான 'வெற்றித் திருமகளை'க் காணும் வாய்ப்பைப் பெற்றவர்கள் அவர்கள். அவளுடைய தோற்றம் வெறும் மானிடப் பெண்ணின் தோற்றமாக அவர்களுக்குப் படவில்லை. கொற்றவைத் தேவியே அங்கு வந்திருந்தாள்.

''யார் நீ?'' என்று கேட்டார் பாண்டியர்.

''கயல்விழி; புலவர் எங்கள் தலைவர்'' என்றாள் அவள். ''அவருடைய பணிப்பெண் என்ற முறையில் அவர் சார்பில் அமைச்சர் அவர்களது குற்றச்சாட்டுக்குப் பதில் அளிக்க வந்திருக்கிறேன். உண்மையைக் கூறி நீதிக்கு முறையிட வந்திருக்கிறேன்.''

அமைச்சர் குறுக்கிட்டார்; ''புலவரே முறையிடுவதற்கு ஏதுமில்லையென்று கூறிய பிறகு, அவருடைய பணிப்பெண் எதற்காக இங்கு முன் வரவேண்டும்? புலவருக்கு இல்லாத புலமை உன்னிடம் இருக்கிறதென்று சபையில் வெளிப்படுத்துவதற்காகவா?''

''அமைச்சர் அவர்கள் தயை செய்து நான் கூறும் உண்மைகளை இரக்கத்தோடு சிந்தித்தருள வேண்டும்'' என்றாள் கயல்விழி. பிறகு பாண்டியர் பக்கம் திரும்பினாள்.

அவர் முகத்தை நேருக்கு நேர் ஏறிட்டுப் பார்த்தாள். கூறத் தொடங்கினாள்;

''அறத்தையே சொல்லின் வடிவத்தில் இறைவனாக வழிபடுகிறவர்கள் புலவர்கள். அதனால்தான் இந்த நாடு அரசர்களையும் அமைச்சர்களையும் விட அறவோரை உயர்ந்தோராகப் போற்றி வந்திருக்கிறது. அரசர்களுக்குச் செங்கோலாக விளங்குபவர்கள் அறவோர். சத்தியத்தை விட வேறெதற்கும் கட்டுப்படாது, வேறெதற்குமே ஆசைப் படாது, ஒரு பற்றற்ற கூட்டம் இந்த நாட்டில் உலவி வருமானால் அது அறவோர் கூட்டம்தான். வள்ளுவர் நேரடியாக அறத்தைப் பாடினார்; கம்பர் கதைசொல்லிக் காப்பியத்துக்குள் அறத்தைத் தேனாகக் குழைத்துக் கொடுத்தார். இளங்கோவடிகளும் அரசைத் துறந்து, காப்பியம் பாடி, 'அரசியல் பிழைத்தார்க்கு அறமே கூற்றாகும்!' என்று அஞ்சாது முழங்கினார்...!''

பைந்தமிழ்க் குமரனுக்கு மெய்சிலிர்த்தது. கயல்விழியிடம் ஓய்வு நேரங்களில் அவன் பேசிய பேச்சுகளெல்லாம் எவ்வளவு ஆழமாக அவள் உள்ளத்தில் பதிந்திருக்கின்றன!

''அறவோரும் மெய்யான புலவரும் என்றுமே தங்களைப் பாதுகாத்துக்கொள்ள முனைந்ததில்லை. அவர்களை அரசர்களும், வள்ளல்களும், குடிமக்களும் பாதுகாத்தார்கள். நடமாடும் தெய்வங்களாக அவர்களைப் போற்றினார்கள். அவர்களைப் போற்றுவதால், அவர்கள் அறச்சொல் கேட்டு நடப்பதால், தங்கள் வாழ்வு சிறக்கும் என்பதால் அவர்களைப் பலரும் பேணுகிறார்கள்.

''இங்கேயோ போற்ற வேண்டிய அரசு ஒரு புலவரைக் குற்றவாளியாக நிறுத்தியுள்ளது! புலவர் தம்மை மறந்தவர். அவரைக் காத்துக்கொள்ளாததால் அவர் இழந்துவிடப் போவது ஒன்றுமில்லை. 'நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்!' என்ற பரம்பரையில் வந்தவரா, அமைச்சர் அவர்களின் புனைந்துரைகளைக் குற்றச்சாட்டுகள் என்று மதிக்கப் போகிறார்?''

அமைச்சரின் விழிகள் கோவைக் கனிகளாக மாறின. அவர் குறுக்கிடத் துடித்தார். கயல்விழி தொடர்ந்து பேசினாள்:

''புலவர் இந்த நாட்டின் பொதுச் செல்வம். பாண்டிய அரசுக்கே, அது நிலைத்திருக்க வேண்டுமானால், அவர் சார்பில் முறையிடும் கடமை இருக்கிறது. இந்த நாட்டுக் குடிமகன்- குடிமகள் ஒவ்வொருவருக்காகவும் வாழும் புலவர் இவர். சபையில் இருக்கும் ஒவ்வொருவருக்கும் அவரைக் காக்கும் கடமை உண்டு. குடிமக்கள் தங்களைக் காத்துக் கொள்வதற்காகவே இளம் புலவருக்கு நீதி கோரி முறையிட வேண்டும். அந்த முறையில், இந்த நாட்டின் குடிமகள் என்ற முறையில் நான் வந்துள்ளேன். மேலும் புலவர் அரசுக்குக் கூற வேண்டிய உண்மைகளையும் நான் ஓரளவு அறிந்தவள். நான் அவருடைய பணிப்பெண்.''

அரசர் சிலையானார்! சபையில் ஊசி விழுந்தாலும் ஓசை எழும் அளவுக்கு மௌனம் நிலவியது. விழுப்பரையரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் அருவியாகப் பெருக்கெடுத்தது. அமைச்சர் முள்ளின் மேல் அமர்ந்தவர் போல் வேதனைப்பட்டார்.

பைந்தமிழ்க் குமரனின் கண்களுக்கு அப்போது அவள் கயல்விழி இல்லை. அவனுடைய கரத்தாலும் தீண்ட முடியாத கொற்றவைத் தேவி அவள்.

''கயல்விழி! அமைச்சர் கூறிய மூன்று குற்றச் சாட்டுகளுக்கும் நீ மறுமொழி கூறலாம்'' என்று அமைதியோடு ஆணையிட்டார் அரசர்.

''குலோத்துங்க சோழச் சக்கரவர்த்திகளைச் சிறுமைப் படுத்தி, அதனால் இரு நாடுகளுக்கும் இழிவு தேடிவிட்டார் என்பது முதல் குற்றச்சாட்டு. எங்கள் தலைவர் தாமாகச் சோழ நாட்டுக்குச் சென்று சோழரின் புகழ்பாடிப் பரிசில் பெற விரும்பினாரில்லை. சோழர் வற்புறுத்தியதன் பேரிலேயே பாண்டிய நாட்டில் அவர் பாடிய கூத்துப் பாடலையே

பாடியிருக்கிறார். மக்களை வாழ வைப்பதற்காகப் பாடிய பாடல் அது. அதைக் கேட்டவர்களும் அதைக் கூத்தாக இங்கு கண்டவர்களும் இந்தச் சபையில் நிறைந்திருக்கிறார்கள். மேலும் இவர் சோழ நாட்டுக்கு அழைக்கப்பட்டது சக்கரவர்த்திகளால்; புலவரை இங்கிருந்து அனுப்பி வைத்தவர்கள் தாங்கள்! குற்றச்சாட்டென்றால் அதற்கு உரியவர்கள் சக்கரவர்த்திகளும் பாண்டியருமே!''

சபையில் சூறாவளி வீசியது. பாண்டியரின் முகத்தில் அதிர்ச்சியில்லை; அமைதி நிலவியது.

''இரண்டாவது குற்றச்சாட்டு, புலவர் விருந்தினர் மாளிகையிலிருந்து தப்பிச் சென்றது. புலவரைச் சிறையிடும்படி சக்கரவர்த்திகள் கட்டளையிடவில்லை. அதற்குச் சான்றாக நம்மிடம் பெரும் புலவர் விழுப்பரையர் இருக்கிறார்கள். சக்கரவர்த்திகளிடம் தூது சென்றவர்கள் இவர்கள். இளவரசரின் சொந்த விருப்பத்துக்கு அவர் ஒரு பாண்டிய நாட்டுக் குயிலைக் கூண்டிலடைத்து வேடிக்கை பார்க்கத் துணிந்தாரென்றால், கூவும் குயில் வேடிக்கைப் பொருளாகக் கட்டுப்பட்டிருக்க வேண்டு மென்பதில்லை. கம்பரே அவர்கள் நாட்டை விட்டு வெளியேறியிருக்கிறார். ஆகவே புலவர் செய்தது இயற்கை. அவரது அருமை அறியாமல் அவரைக் கூண்டிலடைத்த குற்றம் இளவரச ருடையது!''

''சோழ சாம்ராஜ்யத்தின் இன்றையச் சக்கரவர்த்திகளை நீ குற்றம் சாட்டுகிறாய்!'' என்று இடிக் குரலில் முழங்கினார் அமைச்சர்.

'இறைவன் செய்தாலும் குற்றம் குற்றமே!' என்று முழங்கிய நக்கீரர் வாழ்ந்த நகரம் இது'' என்று பதிலளித்தாள் கயல்விழி. பெருமக்கள் தங்களை மறந்து ஆனந்த ஆரவாரம் செய்தார்கள்.

''கடைசிக் குற்றச்சாட்டு, இவர் குடிமக்களிடம் விழிப்பேற்படுத்தி வருகிறார் என்பது. இதுவே அறவோரும்

புலவரும் செய்யும் மிக உயர்ந்த தொண்டு என்பதைப் பாண்டியர் அறிந்திருப்பார்கள்; மனிதர்கள் விலங்குகளல்லர். அவர்களை என்றென்றும் கொடுங்கோன்மையால் அடக்கி ஒடுக்கி வைத்து, எந்த சாம்ராஜ்யத்தையும் நிலைக்கச் செய்துவிட முடியாது. அரச போகத்தையே தமது இலக்கியப் பணிக்காகத் துறந்து வந்த இளங்கோவடிகள் புலவர்களுக் கோர் எடுத்துக்காட்டு. அறத்தின் வழி செல்லாத அரசரை அழிக்கும் திறன் கூர்வாளிடமில்லை. அறத்தின் வழி செல்லாத அரசரை அழிக்கும் திறன் பிறக்கும் சொல்லிடம் உள்ளது. ஆகவே, இந்த நாட்டைக் கொலையாலும், கொள்ளையாலும், கொடுமையாலும் கைப்பற்றியுள்ள சாம்ராஜ்யம் சரிய வேண்டிய சாம்ராஜ்யமே! குற்றவாளி கங்காபுரியில் வாழ்கிறார்!''

பாண்டியர் பதறிப் போய்விட்டார். தீக்கனலைப் போன்ற பேருண்மைகள், அவர் உள்ளத்தில் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்த உண்மைகள், கயல்விழியின் உருவம் பெற்று அங்கே பற்றி எரியத் தொடங்கிவிட்டது.

சரேலென்று வாளை உருவிக்கொண்டு கயல்விழியின் மீது பாய்ந்தார் சயங்கொண்ட சோழ வல்லபர். ''சொல் முனையின் வலிமையைக் காணப்போகிறேன் நான்!'' என்று கூறிக் கொண்டே தாவி வந்தார்.

''சொல் முனைப் புலவனுக்குச் சிறிது வாள் முனைப் பயிற்சியும் உண்டு!'' என்று கூறி அடுத்து நின்ற புலவன் ஒருவனின் வாளை உருவிக்கொண்டு குறுக்கே வந்தான் பைந்தமிழ்க் குமரன். ''ஆனால் சொல்லுக்கு அடங்கியதுதான் இந்த நாட்டு வாள்முனை!''

வாளும் வாளும் மோதித் தீப்பொறி உதிர்ந்தன. யாவுமே புயல் வேகத்தில் நடந்தமையால் பாண்டியர் ஏதுமே செய்வதறியாது திகைத்துப் போனார்.

# 37. இரத்தம் கலந்தது



**சொ**ல்லும் சொல்லும் மோதிக்கொண்டு நீதி கமழ வேண்டிய அரச சபையில், நீதி வழங்க வேண்டிய பாண்டியர் அரியாசனத்தில் இருக்கும்போதே, அமைச்சர் வாளை உருவிக் கொண்டு கயல்விழியின் மீது பாய்ந்தது பாண்டியருக்குப் பண்பற்ற செய்கையாகத் தோன்றியது. புலவன் தக்க சமயத்தில் வாளுடன் குறுக்கிட்டு விட்டான். இல்லையேல் கயல்விழியின் கதி என்ன ஆகியிருக்குமோ தெரியாது. இவற்றையெல்லாம் நொடிப் பொழுதில் உணர்ந்து விட்டார் குலசேகர பாண்டியர்.

'அவருடைய வாள் வீச்சுக்குப் பின்னால் சோழ சாம்ராஜ்யத்தின் படைபலம் இருக்கிறது என்ற செருக்கு அமைச்சருக்கு!' என்று நினைத்தார் அரசர். அந்தச் செருக்குத்தான் அரச சபையின் பெருமையையும் இழிவுபடுத்தத் துணிந்து விட்டது. அபலைப் பெண் ஒருத்தியின் மீது வாள் வீசும் அளவுக்குத் தாழ்ந்துவிட்டார் அவர்.

ஆகவே, பைந்தமிழ்க் குமரனின் குறுக்கீட்டைப் பாண்டியர் தமக்குள் முழு மனத்தோடு வரவேற்றார். சபையினர் அனைவருடைய முகங்களிலிருந்தும் அவர் கருத்துக்கு ஆதரவு கிடைத்தது.

சொல்லும் சொல்லும் வீசவேண்டிய சபையில் வாளும் வாளும் மோதிக் கொண்டு பேரொலி எழுப்பின. நீதி பொங்க வேண்டிய இடத்தில் குருதி பொங்கிப் பாயும்போல் இருந்தது. குலசேகர பாண்டியர் அதைத் தடுக்கவில்லை. அவர் பார்வையாளராக மாறிவிட்டார்.

அமைச்சர் சயங்கொண்ட வல்லபர் வாள் வீச்சிலும் வல்லவர். மிகவும் தேர்ச்சிபெற்ற வித்தகர். அவரிடம் ஈடுகொடுத்து நிற்கப் புலவனால் முடியாது என்பதையும் அறிந்தார் அரசர். அமைச்சர் உடனடியாகப் புலவனை வீழ்த்தி விடமாட்டார். சிறிது நேரமாவது தமது போர்க்கலை ஆற்றலை அவருக்கும் சபையோருக்கும் விளையாட்டுக் காட்டி விட்டுத்தான், இறுதியில் புலவன் மீது வாள் பாய்ச்சுவார்- அந் விநாடியில் குறுக்கிட்டுப் புலவனைக் காப்பாற்றினால் போதும் என்ற எண்ணம் பாண்டியருக்கு.

தமது உடைவாளில் கரத்தைப் பதித்தவண்ணம் போரைக் கூர்ந்து நோக்கியிருந்தார் பாண்டியர். சபை மண்டபத்தில் செந்நீர் சிந்தப்படுவதையோ, புலவனைக் கொன்ற பாவம் தம்மைச் சூழ்வதையோ அவர் சிறிதும் விரும்பவில்லை.

அமைச்சர் அலட்சியமாகவே தமது வீர சாகசங்களை முதலில் வெளியிட்டார். 'கேவலம், எழுத்தாணி பிடிப்ப வனிடம் சரிசமமாக நின்று வாள் வீச வேண்டியிருக்கிறதே!' என்ற அவமான உணர்ச்சி அவருக்கு. என்றாலும் தம்மையே எதிர்க்கத் துணிந்த அவனுக்கு அறிவு புகட்டாமல் விடலாமா? அமைச்சர் புலவனைக் கொன்று வீழ்த்த விரும்பவில்லை. சிறுபொழுது விளையாட்டாக வாள் சுழற்றிவிட்டு, எழுத்தாணியை மறந்து வாள் பற்றத் துணிந்த அவனுடைய கரத்தை மட்டிலும் துண்டித்துவிடத் திட்டமிட்டார். அதையும் விளையாட்டும் வேடிக்கையுமாகவே, அரசர் குறுக்கிடு வதற்கு இடம் வைக்காமலே செய்து விட வேண்டும். இந்த முறையில் அமைச்சரே 'நீதி' வழங்க முடிவு கட்டி விட்டார்.

சபையோர் கவலையோடும் பரபரப்போடும் வாட்போரில் ஒன்றி விட்டனர். புலவன் அதைச் சிறுபிள்ளை விளையாட்டென்று எண்ணிவிட்டான் போலும். வாள் பிடிக்கத் தெரியாதவன்போல் சிரித்துக் கொண்டே, அமைச்சரின் வீச்சுக்களைத் தன் வாளால் தடுத்துக் கொண்டு

மட்டும் நின்றான். விழுப்பரையர், கயல்விழி, சபையோர், அரசர் முதலிய அனைவருமே கண்ணிமைக்க மறந்தனர்.

அமைச்சரின் அலட்சியம் சட்டென்று மறைந்தது. புலவனின் லாவகமான தற்காப்புப் பிடிகள் அவருக்கு அதிர்ச்சி தந்தன. மின்வெட்டுகளின் வேகத்தில் சுழற்றத் தொடங்கி விட்டார். அவருடைய ஆத்திரமும் வெஞ்சினமும் இப்போது எல்லையைக் கடந்து விட்டன. கரத்தைத் துண்டிக்கும் நோக்கம் எப்போதோ பறந்துவிட்டது. எப்படியாவது அவன் தலையைத் தரையில் உருளச் செய்ய வேண்டும்; அல்லது அவன் மார்பை ஊடுருவித் துளைக்கவேண்டும்; அல்லது அவன் கரங்களைச் சரித்துக் கீழே தள்ளவேண்டும். எப்படியாவது, எப்படியாவது, எப்படியாவது அவனை வீழ்த்தியே தீரவேண்டும்!

சபை கலங்கியது; அஞ்சியது;நடுநடுங்கியது. போர்க் கலை வித்தகரான குலசேகர பாண்டியர் மட்டிலும் உன்னிப்பாகப் புலவனின் சாகசங்களை ரசிக்கத் தொடங்கி விட்டார். முகத்தில் புன்சிரிப்புக் குலையாமல், கண்களில் ஆத்திரம் பொங்காமல், அறிவை இழந்துவிடாமல் அவன் தன் வாள் முனையோடு சிந்தனைக் கூர்மையையும் ஒன்றாகப் பாய்ச்சிக்கொண்டிருந்தான். புதிய புதிய வீச்சுக்கள், புத்தம் புதுக்கற்பனைகள், அற்புதமான சித்துக்கள் அவனிடமிருந்து உதிர்ந்துகொண்டிருந்தன.

இசை பாடும் கலைஞன் போல், அம்பலத்தில் ஆடும் கூத்தன் போல், தடாரி முழங்கும் பாணன் போல் அவன் வாள் முனையில் கலை நயம் காட்டிக்கொண்டிருந்தான். கற்பனைப் புலவனல்லவா? பெற்ற பயிற்சியை அடித்தளமாகக்கொண்டு அவன் புதுப்புது வண்ணங்கள் அங்கே காட்டிச் சுழன்றான்.

உக்கிரமூர்த்தியாக மாறித் தமது சக்தி முழுவதையும் திரட்டிக்கொண்டு சீறினார் அமைச்சர். வேர்வை மழையாகப் பொழிந்தது. வாளுடன் வாள் மோதி இடிஇடித்தது. அதனால் தீப்பொறி மின்னல்கள் பளிச்சிட்டன. அமைச்சரின்

தடக்கையும் திண்தோளும் கழன்று கீழே விழுந்து விடுபவைபோல தெறிக்கத் தொடங்கின. அவருடைய மானம், சோழ சாம்ராஜ்யத்தின் மானம், அவருடைய பதவிச் செருக்கு இவ்வளவையும் கண்டு எள்ளி நகையாடிக் கொண்டிருந்தது இளைஞனின் வாள்முனை.

கயல்விழி சித்திரப் பாவையானாள். அவள் உள்ளமே அங்கயற்கண்ணி அம்மையிடமும் பத்தினித் தெய்வம் கண்ணகியிடமும் தஞ்சம் புகுந்தது. புலவனுடைய வெற்றிக்காகத் தவம் கிடந்தது. விழி கிறங்க நிற்கும் அவளையும் கடை வீச்சால் கண்டு, புதுசக்தி பொங்கப் போராடினான் அவன்.

பாண்டிய நாட்டுச் சேய் திடீரென்று துள்ளத்தொடங்கி விட்டது. அமைச்சரின் களைப்பை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டு, அவரைத் தற்காப்புக்குத் தவிக்கவிட்டு, சபையோருக்கு இப்போது தன்னுடைய கைத்திறமையைக் காட்ட முன் வந்தான் அவன். அமைச்சரை நடுங்க வைத்தான்; பதுங்க வைத்தான்; மறைந்து ஒளிய வைத்தான். சபையோரைச் சிரிக்க வைத்தான்.

இனியும் சித்திரவதை செய்து அவருடைய செருக்கைச் சீர்குலைக்க வேண்டாம் என்று இரக்கப்பட்டான் போலும். சரேலென்று அவருடைய உடைவாளின் கைப்பிடிக்குக் குறி வைத்து ஒரு வீச்சு வீசினான். அமைச்சரின் பிடியிலிருந்து நழுவிய அவருடைய வாள் தலைக்குப்புற உருண்டு கொண்டே போய் அரசரின் காலடியில் விழுந்து புலம்பியது. அந்தச் செய்கையையும் அவன் திட்டமிட்டுத்தான் செய்தான். எந்தக் கோணத்தில், எந்த வேகத்தில், எப்படி வீசினால் அமைச்சருடைய வாள் அரசரின் காலடிக்குப் போகும் என்பதைக் கணக்கிட்டு வைத்திருந்தவன் போல் வீசினான்.

பிரமித்தார் பாண்டியர். பிரமிப்பு நீங்குவதற்குள் அவருக்கு அச்சமூட்டும் மற்றொரு நிகழ்ச்சியும் நடந்து விட்டது. அமைச்சரின் நெஞ்சுக்குள்ளே வாள் பாய்ச்ச

விரும்புகிறவன்போல் போக்குக் காட்டிக்கொண்டு தனது வாள் முனையால் மெல்ல அமைச்சரின் மேலங்கியைக் கிழித்து, அவரது சூது நிறைந்த மார்பகத்தைச் சபைக்கு வெளிப்படுத்திக் காட்டினான்.

மறுகணத்தில் வாள் முனை அமைச்சரின் முதுகுப்புறம் வெளி வந்துவிடுமோ என்ற பதைபதைப்பு பாண்டியருக்கு. அதன் விளைவு புலவனுக்குப் புரியாதிருக்கலாம். அவரோ அரசர். பாண்டிய நாட்டின் தலைவிதியே அந்தக் கணத்தில் அமைச்சரின் உயிரோடுதான் ஊசலாடுகிறது என்பதைக் கண்டு கொண்டார். அமைச்சர் மடிந்து வீழ்ந்தால், மறுவாரமே மதுரை மாநகரமும் மடிந்து வீழும் என்ற பதற்றம் அவருக்கு. அமைச்சர் தனி மனிதரல்லர். சோழ சாம்ராஜ்யத்தின் ஏகபோகப் பிரதிநிதி அவர். அவர் உயிர் பிரிந்தால்?

வெகுண்டு குதித்தார் பாண்டியர். உடைவாளும் கையுமாகப் புலவன் மீது பாய்ந்து விட்டார்.

''புலவரே! நீங்கள் என்ன செய்யத் துணிந்தீர்கள்?''

''அரசே!'' என்று நாத் தழுதழுக்க அழைத்தான் புலவன்.

''நாவன்மையால் வழக்காட வேண்டியவர், இங்கே கைவன்மையைக் காட்டத் துணிந்து விட்டீரே!'' என்று புலவனின் வாளுக்குக் குறுக்கே தம் வாளை நீட்டினார் குலசேகர பாண்டியர்.

அப்போது அங்கே ஒரு பேரதிசயம் நிகழ்ந்தது.

பைந்தமிழ்க் குமரன் அருகில் வந்து நின்ற அரசரை முதன் முறையாக அகமும் முகமும் குளிர நேருக்கு நேர் உற்றுப் பார்த்தான். தாய்ப் பசுவைப் பிரிந்திருந்த இளங்கன்று மீண்டும் அதைக் காணும்போது, எவ்வளவு பரிவோடு, துடிப்போடு, பாசத்தின் வேதனையோடு பார்க்குமோ அப்படிப் பார்த்தான். வைகையாகப் பொங்கிய விழிகளால் குலசேகர பாண்டியரின் விழிகளது கருமணிப்

பாவைகளை ஊடுருவினான். அவற்றின் வாயிலாக அவரது இருதயத்தின் அந்தரங்கத்துக்கே அவன் போய்விட்டான்.

பாண்டியரின் உதடுகள் துடித்தன. அவர் இதயத்தின் துடிப்பு நின்றது. அவரால் தம் விழிகள் இரண்டையும், அந்த விழிகள் காட்டிய காட்சியையும், அந்தக் காட்சிக்குரிய கண் மணியான அவர் உடன் பிறப்பையும் நம்ப முடியவில்லை; நம்பவே முடியவில்லை. மாண்டவன் மீண்டு விட்டானா?

இருவரது வாட்களுமே ஒரே சமயத்தில் ஒன்றாக வீழ்ந்தன. வீழ்ந்த நிலையில் அவை ஒன்றிக் கிடந்தனவே தவிர, எதிர்த்துக் கிடக்கவில்லை.

மெல்ல மெல்லச் சுந்தரபாண்டியன் தரையில் சரிந்து அவர் பாதங்கள் இரண்டையும் தன் ஆசை தீரப் பற்றிக் கொண்டான். அங்கே தலையைப் புதைத்துக்கொண்டு விம்மி விம்மி விம்மி அவரது பாதங்களைக் கழுவினான்.

''தம்பி!... தம்பி! சுந்தர பாண்டியா! தம்பி!'' அரசரின் நாத் தழுதழுத்தது. அவனைப் பற்றி மெல்லத் தூக்கினார். தமது தடக்கைகள் இரண்டாலும் மார்புற அவனை அணைத்துத் தழுவிக் கொண்டார். அப்படியே மெய்ம்மறந்து விட்டார்.

சபையினரின் திகைப்புக்கோர் எல்லையில்லை, களிப்புக்கோர் கங்கு கரையில்லை.

''வாழ்க சுந்தரபாண்டியர்!'' இந்தப் பேரொலி மண்டபம் அதிரும் வண்ணம் ஒலித்தது.

மண்டபத்தில் குழுமியிருந்த சபையோர் தங்கள் தங்கள் ஆபரணங்கள், உத்திரீயங்கள், மேலங்கி முதலியவற்றை யெல்லாம் கழற்றி மலர்களாகப் பாவித்து அவர்கள் மீது பொழிந்த வண்ணம் இருந்தார்கள்.

கயல்விழிக்கு எல்லையற்ற பேரானந்தம் ஒருபுறம்; எல்லையற்ற பெருந்துயரம் மறுபக்கம். அவள் தூண்மீது துவண்டு சாய்ந்தாள்.

# ௯௪. உயிர் துடித்தாள்



குதூகலமான ஆரவாரங்களும் வாழ்த்தொலிகளும் பொங்கிக் கொண்டிருந்த சபை நடுவே இரகசியமான சில நிகழ்ச்சிகளும் நடந்தன. விழுப்பரையர் குலசேகர பாண்டியரை ஒரு தூண் மறைவுக்கு அழைத்து அவரிடம் ஓர் ஓலைச் சுவடியை நீட்டினார். பாண்டியர் அவசரமாக ஒரு கண்ணோட்டம் விட்டு, அந்தச் சுவடியில் இருந்தவற்றைப் புரிந்து கொண்டார். சுந்தர பாண்டியன் மறைந்து வாழ்ந்த காலத்தில் செய்து வைத்திருந்த ஏற்பாடுகளும் எதிர்காலத் திட்டங்களும் அங்கே எழுதி இருந்தன.

அரியாசனத்தோடு ஓர் அரியாசனம் வைக்கச் செய்து, சுந்தர பாண்டியனைத் தம் அருகில் வந்து அமரும்படி அழைத்தார் பாண்டியர். ''தம்பி! கடமைகளைச் சுமக்கும் தகுதி பெற்றவனாக நீ வளர்ந்து வந்திருக்கிறாய். நம்முடைய நாடும் குலமும் நானும் செய்த பாக்கியம் இது!'' என்று பூரிப்பு நிறைந்த உள்ளத்தோடு அவனிடம் கூறினார். புத்துயிர் வந்துவிட்டது பாண்டியருக்கு.

பாண்டியர் எழுந்து சபையோரைப் பார்த்துக் கூறலானார்.

''சபை கூடியதன் நோக்கத்தை நாம் மறந்து விடக் கூடாது. அமைச்சர் புலவனாக இருந்த சுந்தரபாண்டியனைச் சிறை செய்து, அவன் மீதுள்ள குற்றச்சாட்டுக்களைக் குறிப்பிட்டார். கயல்விழி, அவை குற்றங்கள் அல்ல என்று முறையிட்டாள். நாம் அவற்றை ஆராய்ந்து நீதி வழங்குவதற்கு முன்பாகவே, அமைச்சர் வாள் முனையின் மூலம் நீதியை நிலைநாட்டத் தொடங்கினார். அதனால் சுந்தர

பாண்டியனும் குறுக்கிட வேண்டிய அவசியம் வந்து விட்டது...''

அமைச்சர் குனிந்த தலையை நிமிரவில்லை. அவர் சிந்தனை போர்த்திட்டம் தீட்டிக் கொண்டிருந்தது. சபையோர் ஆவலுடன் பாண்டியரின் முடிவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

பாண்டியரின் குரல் ஒலித்தது: ''சோழ சாம்ராஜ்யத்தின் மேலாட்சியை நாம் ஒப்புக்கொள்வதானால் அப்போது புலவனாக இருந்த சுந்தரப்பாண்டியனை நாம் தண்டிக்க வேண்டியது கடமைதான். ஆனால் சுந்தர பாண்டியன் எந்தக் கணத்தில் இந்தச் சபைக்குள் நுழைந்தானோ அதே கணத்தில் இந்த நாடு விடுதலை பெற்றுவிட்டது. அவனுக்கு நாம் அளிக்க வேண்டிய மிகப் பெரிய தண்டனை ஒன்று இருக்கத்தான் செய்கிறது. முடிசூட்டுவித்து இந்த நாட்டின் செங்கோலை அவனிடம் கொடுக்கும் தண்டனை அது. அதை நாம் கூடிய விரைவில் நிறைவேற்றுவோம்!''

சபையோரின் கரகோஷம் நெடுநேரம் ஒலித்துக் கொண்டிருந்தது.

அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபர் மெதுவாக எழுந்தார். அரசரை நேருக்கு நேர் உற்றுப் பார்த்தார்.

''பாண்டிய நாட்டின் இன்றைய நிலையில் இது அடுத்த போரைத் தாங்குமா என்று அரசர் அவர்கள் சிந்திக்க வேண்டும். பிறகு என் மீது குறை கூறிப் பயனில்லை. போர் நடந்தால் பின்னர் இது நாடாக இருக்காது; காடாக மாறிவிடும்.''

''போர் நடத்தும் எண்ணம் எங்களுக்கு இல்லை. நாங்கள் சோழநாட்டோடு நட்புறவு கொண்டு வாழவே விரும்புகிறோம். திறை செலுத்தாமல், கட்டுப்படாமல், தோழமை பூண்ட நாடாக இது விளங்கும்'' என்றார் பாண்டியர்.

''அப்படியென்றால் நான் இந்த நாட்டின் அமைச்சராக இருக்க இயலாது. இப்போது நான் தங்களுக்கு அமைச்சராக மட்டும் இல்லை, சோழ சாம்ராஜ்யத்தின் மேலாட்சியைக்

கண்காணிக்கும் அதிகாரியாகவும் இருக்கிறேன். மேலாட்சிக்கு எதிராக இங்கு நடக்கும் நிகழ்ச்சிகளுக்கு நான் உடன்பட முடியாது.''

சுந்தர பாண்டியன் எழுந்தான். சபையோர் தலை நிமிர்ந்தார்கள்.

''அமைச்சராகத் தங்களை நாங்கள் நியமிக்கவில்லை. ஆகவே, சோழ சாம்ராஜ்யத்தின் ஒற்றர் தலைவராகவே தாங்கள் இனி நடந்து கொள்ளலாம். தூதுவர் என்ற முறையில் தங்களுக்கு இதைக் கூறுகிறோம். சோழ சாம்ராஜ்யத்தை அவர்கள் காத்துக் கொள்ள விரும்பினால், இப்போதே பாண்டிய நாடு, திருமுனைப்பாடி நாடு ஆகிய இரு நாடுகளின் உரிமைகளையும் மதிக்கும்படி கூறுங்கள். இல்லையேல் சோழநாட்டின் தலைநகரம் சுடுகாடாகும் என்பதையும் சொல்லுங்கள்! சாம்ராஜ்யம் சரிந்து விழுந்து மண்ணோடு மண்ணாகும் என்பதையும் நினைவூட்டுங்கள்! புதிய பாண்டிய நாடு ஒன்று இப்போது வீறு கொண்டு எழுந்துவிட்டது என்பதையும் அவர்கள் மறக்க வேண்டாம்!''

வீறுகொண்டு விட்டது பாண்டிய நாடு என்பதற்கு அவனே சான்று என்று சபையோர் பேசிக் கொண்டனர். ஒவ்வொருவருமே வீறு கொண்டு விட்டார்கள், அவன் அவர்களிடையே திரும்பி விட்டதால்.

சபை கலைந்தது. ஆனால் சபையோர் கலையவில்லை. தனித்தனியாகவும் கூட்டம் கூட்டமாகவும் அவனைச் சூழ்ந்து கொண்டு படாதபாடு படுத்தி விட்டார்கள். சுந்தர பாண்டியன் மெதுவாக அந்த அன்புக் கடலிலிருந்து நீந்தி வந்து கயல்விழியைத் தேடிப் பார்த்தான். மண்டபத்தில் எங்குமே அவளைக் காணவில்லை. கலைக்குழுவையும் மண்டபத்தில் காணாததால் அவள் அவர்களோடு திரும்பியிருக்கக் கூடும் என்று அவன் ஊகித்துக் கொண்டான்.

'என்னை வளர்த்த கோப்பெருந்தேவியாரைத் தரிசிக்க அவளோடு போகலாம் என்றால், அதற்குள் அவள் மறைந்து

போய்விட்டாளே!' என்று நினைத்தான் அவன். 'இருக்கட்டும்; அவளைத் தக்க மரியாதைகளுடன் அழைத்து வந்து தேவியாரின் முன் நிறுத்துகிறேன்.'

அரசர் அவசரமாக அவனை அந்தப்புரத்துக்கு அழைத்துச் சென்றார். கன்றைப் பிரிந்த தாய்ப் பசுவெனச் சுந்தர பாண்டியனைக் கட்டிக் கொண்டு கதறினார் கோப்பெருந்தேவி. அவனுடைய துறவுக் கோலமும் எளிய தோற்றமும் அவரை வெகுவாக வாட்டிவிட்டன. ஒவ்வொன்றையும் சொல்லிச் சொல்லி அழுதார் அவர்.

''அம்மா! நான் இளவரசுக் கோலத்திலேயே திரும்பிவருகிறேன்!'' என்று கூறிவிட்டு, மளமளவென்று வேடத்தைக் கலைந்து, இளவரசுக்குரிய ஆடை ஆபரணங் களுடன் வந்து நின்றான். அப்போதுதான் அரசியாருக்கு மாண்டவன் மீண்டு விட்டான் என்ற நம்பிக்கையே ஏற்பட்டது.

''நான் தனியாகத் திரும்பவில்லை, அம்மா! கயல்விழி என்ற ஒரு பெண்ணோடு திரும்பியிருக்கிறேன். இதோ விரைவில் அவளையும் தங்களிடமே கொண்டு வந்து சேர்த்துவிடுகிறேன். விழுப்பரையரும் அவளும்தான் என்னைப் பாதுகாத்து இங்கு அனுப்பி வைத்திருக்கிறார்கள்.''

சபையில் அவனுக்காகக் கயல்விழி வாதாடியதைக் கூறி மகிழ்ந்தார் பாண்டியர். கோப்பெருந்தேவியாருக்கும் அவளைக் காணவேண்டும் என்ற ஆவல் மிகுந்தது. சுந்தர பாண்டியன் அரண்மனை ரதத்தில் நகரத்தின் எல்லைக்குக் கிளம்பினான். இளவரசனாக முதன் முதலில் அவளைச் சந்திக்கப் போகும் பூரிப்பு அவனுக்கு. அவளைத் திகைக்கச் செய்து வேடிக்கை காண வேண்டும் என்ற துடிப்போடு புறப்பட்டான் அவன்.

வாயிலில் ரதத்தை நிற்கச் செய்துவிட்டு, ஓட்டமும் நடையுமாக உள்ளே புகுந்தான் சுந்தரபாண்டியன். கூடத்தில் தனித்திருந்தால் அப்படியே இரு கரங்களாலும் அவளை வாரி

அணைத்து வந்து ரதத்துக்குள் போட வேண்டும் என்ற பரவச உணர்ச்சி அவனுக்கு. அவன் எதிர்பார்த்தது போலவே அவளும் தனித்துத்தான் இருந்தாள்.

ஆனால், என்ன இது?

மூலையில் சிறகொடிந்த பறவைபோல், வாடித்துவண்ட மலர் மாலைபோல், செயலற்றுக் கிடந்தாள் கயல்விழி. திடீரென்று அவளுக்கு என்ன நடந்துவிட்டது? கண்ணீர் சொரிய விட்டுக் கலங்கிப் போயிருந்தாள் அவள். சுந்தரபாண்டியன் புள்ளி மானெனத் துள்ளி வருவதைக் கண்ட பின்னரும் அவள் கலக்கம் தீரவில்லை. அவனைக் கண்டு வியப்பும் திகைப்பும் பேரானந்தமும் அடைய வேண்டிய பெண்மணி ஏனோ அஞ்சிப் போய் ஒடுங்கினாள்.

''கயல்விழி!'' அன்போடு அழைத்துக்கொண்டே அவள் அருகில் அமர்ந்தான் சுந்தரபாண்டியன்.

கயல்விழி மெல்ல அவன் முகத்தை நோக்கினாள். பிறகு அவள் விழிகள் அவனுடைய அரசுக் கோலத்தில் லயித்து நின்றன. அவனுடன் ஒன்றிப் போன கயல்விழியின் கண்களாக அவை தோன்றவில்லை. முற்றிலும் அந்நியமான ஒரு புது மனிதனைக் காண்பதுபோல் கண்டாள். சுந்தரபாண்டியன் திடுக்கிட்டான், திகைத்தான்.

''கயல்விழி!'' என்று மீண்டும் அழைத்தான் அவன்.

அவள் விழிநீர் பெருக்கியபடியே விம்மி விம்மி அழுதாள். அவளுடைய மெல்லுடல் காற்றில் நடுங்கும் முல்லையென நடுங்கியது.

''புறப்படு, கயல்விழி! இனி நீ இருக்கவேண்டிய இடம் பாண்டிய நாட்டு அரண்மனை. ரதம் கொண்டு வந்திருக்கிறேன். புறப்படு!''

''இளவரசே!'' என்று நாத் தழுதழுக்க அழைத்துக் கொண்டே தன் கரங்களைக் குவித்து அவனை பய பக்தி யோடு கும்பிட்டாள். சிறிது விலகி அமர்ந்து கொண்டாள்.

''இளவரசியாரே, புறப்படுங்கள்!'' என்று வேண்டினான் சுந்தரபாண்டியன்.

''தயை செய்து என்னை மன்னித்து விடுங்கள். நான் தெரியாமல் தவறு செய்துவிட்டேன். தாங்கள் யார் என்பது தெரிந்திருந்தால் இந்தப் பிழை செய்திருக்க மாட்டேன், தயை செய்து என்னை மன்னித்து விடுங்கள்.''

''எது தவறு? எது பிழை? ஒன்றுமே விளங்கவில்லையே!''

''நான் ஆடிப் பிழைக்கும் பாணர்குல மங்கை. புலவர்களும் பாணர்களும் விகற்பமின்றிக் கூடிப் பழகுவது உண்டு. இருவருமே கலைவாழ்வு வாழ்பவர்கள். அந்த நினைவோடு நான் தங்களுக்குத் தவறிழைத்து விட்டேன்... இளவரசருக்குப் பெரும் பிழை செய்து விட்டேன். என்னால் நினைக்கவும் கூடாத சிகரத்தில் இருப்பவர் தாங்கள். இளவரசே! நான் கூத்தாடிப் பிழைப்பவள். தாங்கள் பாண்டிய நாட்டின் இளவரசர்...!'' அவள் பேசவும் முடியாமல் குமுறி அழுதாள்.

''அரண்மனைக்கு வா; அங்கு வந்து நீ பேசுவதெல்லாம் பேசு!''

''அரண்மனையில் நான் அடியெடுத்துவைக்கவும் தகுதி அற்றவள். தயைசெய்து என்னை இங்கேயே இருக்க விடுங்கள். தயை செய்யுங்கள்! நான்... நான்... வந்து... என்னை வற்புறுத்தாதீர்கள், இளவரசே!''

அவள் கெஞ்சினாள்; மன்றாடினாள்; அரண்மனை யிடம் அவள் கொண்டிருந்த அச்சம் அவனையே அதிர்ச்சி யுறச் செய்தது. அப்போதைக்கு அவளை அவன் அதிகமாக வற்புறுத்தத் துணியவில்லை. அவனுடைய ரதம் அவனை மட்டிலும் தனியாகச் சுமந்து கொண்டு அரண்மனைக்குத் திரும்பியது. அவளை அவன் உள்ளத்தில் மட்டிலுமே சுமந்து சென்றான்.

# 1. இறைவன் எங்கே?



**சு**ந்தரபாண்டியன் மீண்டு விட்டான் என்ற செய்தி பாண்டிய நாடு முழுவதும் எல்லையற்ற குதூகலத்தைச் சுமந்து கொண்டு பரவியது.

**கலியிருள் பரந்த காலைக்**
**கலியிருள் காக்கத் தோன்றும்**
**ஒலிகடல் அருக்க னென்ன**
**உலகுய்ய வந்து தோன்றி...**

சோழ நாட்டில் முதல் குலோத்துங்கன் தோன்றிய காலத்தில் பரணி பாடிய கவிஞர் சயங்கொண்டார் இவ்வளவு பேரானந்தத்துடன் அவன் வரவைப் பாடுகிறார். சுந்தர பாண்டியன் தனது மக்களிடையே மீண்டும் வந்துவிட்ட பெருமையைப் பாடுவதற்கு, அம்மக்கள் அவனது வரவால் பெற்ற பேரானந்தத்தைச் சொல்வதற்கு, நான் கவிஞனாகப் பிறக்கவில்லையே என ஏங்குகிறேன்.

பாண்டிய நாட்டை முந்நூறு ஆண்டுகளுக்கும் மேலாக விழுங்கியிருந்த அடிமை இருளைச் சுட்டெரிக்கும் இளங் கதிரவனாக அவன் முளைத்துவிட்டான். அந்தக் கதிரவன் தங்களை உய்ய வைப்பதற்கே வந்திருக்கிறான் என்பதை உணர்ந்த மக்கள் கூட்டமாகிய மாபெரும் கடல், ஒலி எழுப்பி ஆரவாரம்செய்து, ஆனந்தக் கூத்தாடத் தொடங்கியது.

ஒரு மனிதன் தன்னைச் சுற்றியுள்ள கோடானுகோடி மக்களிடம் இங்ஙனம் எவ்வளவு நம்பிக்கையை எழுப்ப முடிந்தது! எங்ஙனம் அவர்களுக்குப் புத்துயிரும் புது வலிமையும் கொடுக்க முடிந்தது! முடியும், அவன் குடி மக்களுக்காகவே தன்னை அர்ப்பணிப்பவனாக இருந்தால்! முடியும், அவன் சான்றாண்மை மிக்க வீரனாக இருந்தால்! முடியும்! அவன் மனிதத்தன்மையை நோக்கி வளர்ந்து கொண்டிருக்கும் மனிதனாக இருந்தால்!- சுந்தரபாண்டியனால் மட்டும் எப்படி முடிந்தது?

மக்களின் குதூகலம் அடங்குவதற்கு முன்பாகவே பாண்டிய நாட்டில் மற்றொரு பேரதிசயமும் நடைபெற்றது. சுந்தர பாண்டியனின் புகழைப் பாடிக் கொண்டே நாட்டின் எண் திசைகளிலிருந்தும் நால்வகைப் படைகள் மதுரையை நோக்கிப் பொங்கி எழுந்து வந்தன. படைகளா அவை? பொங்குமா கடல்கள்!

மேற்கில் ஏலமலைக் காட்டிலிருந்து அழகிய பெருமாள் தலைமையில் மலைக்கூட்டமென யானைப் படைகள் மதுரையை நோக்கி விரைந்து வந்தன. அத்தகைய கொம்புக் களிறுகளையும் உரோமம் அடர்ந்த உடல்களைக் கொண்ட பிடிகளையும் பாண்டிய நாட்டினர் அதற்கு முன்பு கண்டதில்லை. தென் பாண்டிய நாட்டிலிருந்து மழவச் சக்கரவர்த்தியின் தலைமையில் புயல் காற்றெனச் சீறி வந்தன குதிரைப் படைகள். அரபுநாட்டு ஆண்மை அழகுமிக்க அற்புதமான புரவிகள்! இன்னும் கிழக்கிலிருந்தும் வடக்கிலிருந்தும் தேர்ப் படைகளும் காலாட் படைகளும் மதுரையை நோக்கி வந்த வண்ணமாகவேயிருந்தன.

மதுரைத் திருநகரத்துக்குள் பாண்டியநாடு முழுவதுமே குடிபுகுந்து விட்டதோ என்று திகைப்புறும் வகையில் படைகள் அதற்குள் நிறைந்துவிட்டன. அந்த நாட்டின் வீரச் சிறப்பு முழுவதும், விடுதலை நெருப்பு முழுவதும், தியாகச் செழிப்பு முழுவதும் அங்கே அலைமோதி ஆர்ப்பரிக்க முனைந்து விட்டது. வானவெளியெங்கும் மண்டிக் கிடந்த புழுதிப் படலம் செம்மேகக் கூட்டங்களாக மாறிக் கதிரொளிக்குத் திரையிட்டுத் திரிந்தன.

பட்டத்து யானையின் மீதேறிப் பவனிவந்த சுந்தர பாண்டியன் படைகளினூடே புகுந்து எட்டுத்திசைகளிலும் தனது பார்வையைப் பரவவிட்டான். களிறுகள், களிறுகள், களிறுகள்! புரவிகள், புரவிகள், புரவிகள்! தேர்கள், தேர்கள், தேர்கள்! வீரர்கள், வீரர்கள், வீரர்கள்! யானையின் மீது வீற்றிருந்த சுந்தர பாண்டியனுக்கு அந்தக் காட்சி இளஞ் சிங்கத்தின் மன வலிமையைக் கொடுத்துவிட்டது.

அவனைப் பொறுத்தவரையில் வெற்றியை நாடி இனி அவன் போராட வேண்டும் என்பதே இல்லை. அது அவனை அப்போதே, அந்த இடத்திலேயே அந்தக் கணத்திலேயே தேடி வந்து சரணடைந்து விட்டது!

குலசேகர பாண்டியரும் விழுப்பரையரும் மேல் மாடத்திலிருந்தவாறே அந்தக் கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு பரவசமடைந்து நின்றனர். பாண்டியருக்குப் பேச நா எழவில்லை. அவர் கண்களின் முன்னே ஒரு புதிய நாடு-வீறு பெற்ற நாடு, இளந்தலைவனின் தெய்வத் திருநாடு உதய மாகிக் கொண்டிருந்தது. அச்சமற்ற, அடிமையற்ற, அறி யாமையற்ற, வறுமையற்ற, நோயற்ற எதிர்காலப் பொன் னாட்டின் மறு பிறப்பை அவர் கண்டு களித்துக் கொண்டு நின்றார். அவரது குலம் செய்த பாக்கியம் சுந்தர பாண்டியனாகத் தோன்றிச் செயற்கரிய செயல்களைச் செய்து கொண்டிருந்தது.

புலவர் விழுப்பரையரின் விழிகள் ஆனந்தக்கண்ணீர் சிந்தின. அங்கிருந்தவாறே திருப்பரங்குன்றத்தை நோக்கித் தன் இரு கரங்களையும் கூப்பினார். திருப்பரங்குன்றத்து முருகனிடம் தம்மை வழிபடுத்திக்கொண்டு புலவர் நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படை அவர் தம் உள்ளத்தில் எழுந்தது. உருக்கமாகப் பாடினார்.

'உலகமே மகிழ்ச்சிக் கடலாகத் துள்ளும்படி உதய ஞாயிறுபோல் முருகன் தோன்றிவிட்டான்! திசையெங்கும் ஒளி பொங்கக் குமரன் தோன்றிவிட்டான்! தம்மை நம்பும் நல் லோரை வாழ வைப்பவனும், அல்லாத தீயோரை இடியெனத் தாக்கி அழிப்பவனுமாகிய இளைஞன் தோன்றி விட்டான்! மறு இல்லாத கற்புடை மங்கையின் கணவன் தோன்றி விட்டான்!' என்று உதயகீதம் பாடுகிறாரல்லவா நக்கீரர்!

அதையே பாடினார் விழுப்பரையரும்:

**உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு**
**பலர்புகள் ஞாயிறு கடல்கண்டு ஆங்கு**
**ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி**
**உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன்தாள்**

**செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை**
**மறுஇல் கற்பின் வாள்நுதல் கணவன்**

''அரசே! உலகத்தை உய்விப்பதே இறைவனின் தொழில். மற்றவர்களை உய்விக்க வேண்டுமென்ற தொழிலை, யார் யார் எங்கெங்கே எந்த எந்த வகையில் செய்தாலும் அவர்களிடம் இறைவன் வெளிப்படுகிறான். இறைவனைக் குடிமக்களிடம் காணும் தன்மையைப் பெற்றிருக்கிறார் இளவரசர். அந்த அன்புக்கு உள்ள ஆற்றல் எத்தகைய அற்புதங்களெல்லாம் நிகழ்த்துகிறது கண்டீர்களா?''

''சுந்தர பாண்டியனிடம் எனக்குத் திருப்பரங்குன்றத்தான் தோன்றுகிறான்'' என்று நாத்தழுதழுக்கக் கூறினார் குலசேகர பாண்டியர்.

படைகளைப் பார்வையிட்டுவிட்டுத் திரும்பிய சுந்தர பாண்டியன் தன் தமையனாரிடமும் விழுப்பரையரிடமும் சிறிதுநேரம் அடுத்த கடமைகள் பற்றிப் பேசினான். மூவரும் ஒன்றாக அமர்ந்து உணவு உண்டார்கள். பிறகு மௌனமாக எழுந்து தன்னுடைய கூடத்துக்குத் தனிமையை நாடிச் சென்றான் சுந்தரபாண்டியன்.

விழுப்பரையருக்குச் சுந்தரபாண்டியனின் போக்கில் திடீரென்று மாறுதல் தென்பட்டது. போர் வீரர்களுக்கு இடையில் உலாவிய அஞ்சாநெஞ்சனாக அவன் இப்போது இருக்கவில்லை. அரண்மனையில் நுழைந்துவிட்டால், அதிலும் பெண்டிர் கூட்டம் நிறைந்த அந்தப்புரத்தைக் கண்டுவிட்டால், அவன் முகத்தில் துயரம் சூழ்ந்துவிடுகிறது. அவன் மாறிவிடுகிறான். மனம் துடிக்கிறான்; ஏங்குகிறான். இதை விழுப்பரையர் கூர்ந்து கவனித்துக் கொண்டுதான் வந்தார்.

அன்று அவனுடைய கூடத்துக்குள் அவர் நுழைந்த போது, அவன் வேறு எங்கோ சாளரத்தின் வழியாக நோக்கிக் கொண்டிருந்தான். அரை நாழிகைப் பொழுது அவர் அவன் பின்னால் நின்றிருப்பார்; அவன் அதைக் கவனிக்கவில்லை. விழுப்பரையர் அவனுக்குத் தெரியாமல் அவன் விழிகளில் பொங்கி வடிந்த நீரைக் கண்டு திடுக்கிட்டார்.

''இளவரசே!'' என்றழைத்து மெல்ல அவன் கரத்தைப் பற்றினார்.

"என்னால் ஏதுமே செயலாற்ற முடியாது போலிருக்கிறது. என் உறுதியெல்லாம், வலிமையெல்லாம், ஆற்றலெல்லாம் என்னை விட்டுப் போய்விடும் போலிருக்கிறது. இந்த நாட்டுக்கும் குடிமக்களுக்கும் நான் பயனற்றவனாகி விடுவேனோ என்ற அச்சம் என்னுள் ஏனோ அடிக்கடி இப்போது எழுகிறது. காரணம் விளங்கவில்லை."

"காரணம் எனக்கு விளங்குகிறது. உங்களுடைய சக்தி உங்களை விட்டுப் பிரிந்து போய்விடுமோ என்ற ஐயம் உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. அது உங்களைவிட்டு ஒரு கணமும் பிரியாத சக்தி. பிரிக்க முடியாத சக்தி, பரம் பொருளின் மறுபாதியாக இணைந்துவிட்ட சிவசக்திபோல் கயல்விழி என்றும் உங்களுடன் கலந்திருப்பாள்! கயல்விழி தானே இப்போது உங்களுக்கு வேண்டும்? அவளுடைய அன்பு மொழிகளோ, பணி விடைகளோ, துணையோ இல்லாததால்தானே இவ்வளவு கவலை? அந்தக் கவலை களை மட்டும் என்னிடம் விட்டு விடுகிறீர்களா?"

மறுமொழிக்காக அங்கே விழுப்பரையர் காத்திருக்க வில்லை. சுந்தரபாண்டியனின் செவிகளுக்கு அவருடைய குதிரையின் குளம்பொலிச் சத்தம் கேட்டது.

# 2. புலவரின் தூது



கயல்விழி தங்கியிருந்த மாளிகைக்குள் விழுப்பரையர் நுழைந்த போது அவர் கரங்கள் ஒரு வெண் பொற்கலத்தை தாங்கிக் கொண்டிருந்தன. அதில் திருநீறு, குங்குமம், மஞ்சள், மலர்மாலை, பழங்கள் முதலிய மங்கலப் பொருள்கள் நிறைந்திருந்தன. விழுப்பரையரின் பாதங்களில் விழுந்து வணங்கிவிட்டு அவற்றை பயபக்தியோடு ஏற்றுக் கொண்டாள் கயல்விழி.

''அங்கையற்கண்ணி அம்மையைத் தரிசித்துவிட்டு, அவருடைய பிரசாதங்களோடு உன்னைக் காண வந்திருக்கிறேன்'' என்று கூறிக்கொண்டே அருகிலிருந்த ஆசனத்தில் அமர்ந்தார் விழுப்பரையர்.

கயல்விழி பிரசாதங்களை எடுத்து அணிந்து கொண்டாள். அப்போது அவளிடம் அவள் தந்தையாரைப் பற்றி விசாரித்துக் கொண்டே, அவளுடைய தோற்றத்தில் தென்பட்ட மாறுதல்களைக் கவனித்தார் விழுப்பரையர். உடல் துரும்பாக இளைத்திருந்தது. முகத்தில் வழக்கம்போல் களை குலுங்கவில்லை. ஆடை, ஆபரணங்களில் அவளுடைய அலட்சியம் தென்பட்டது. கண்களில் உயிரை வைத்துக் கொண்டு அங்கு நடமாடினாள் கயல்விழி.

''கயல்விழி! உனக்கு நேர்ந்த துன்பம் என்னவென்று அறிந்து கொள்ளலாமா?'' என்று மிகுந்த பரிவோடு கேட்டார் விழுப்பரையர்.

''ஒரு துன்பமுமில்லையே? மகிழ்ச்சியோடு தானே இருக்கிறேன்!'' என்று புன்னகை பூக்க முயன்றாள் கயல்விழி. அவளுடைய முயற்சி அவளது மனத்துயரை மிகைப்படுத்திக் காட்டியது.

''முன்பு ஒருமுறை அவர் உன்னைவிட்டுப் பிரிந்து போனதாக நினைத்து உன்னையே வாட்டிக்கொண்டாய். அதையாவது என்னால் உணர முடிந்தது. இப்போது அவரோ உன்னை அரண்மனைக்கு அழைக்கும்போது நீ அவர் அழைப்பை மறுத்துவிட்டு அதற்காக வருந்துகிறாய்! இளவரசராகப் பிறந்தது அவருடைய குற்றமல்லவே? இந்த நாடு செய்த பாக்கியமல்லவோ அது?''

''இல்லை, இல்லை; அதனால் எனக்குத் துன்பமில்லை'' என்று பதறினாள் கயல்விழி.

''அவர் இளவரசராக இருந்தாலும் இனி அவர் பேரரசராக வளர்ந்தாலும் அவரால் என்றுமே உன்னை மறக்க முடியாது. உன்னை மறக்க முடியாதபடி நீ அவரிடம் வளர்ந்து விட்டாய். நீ அவருக்காகச் செய்திருக்கும் பணிகளையெல்லாம் நினைத்துப் பார்.''

அவள் எதையும் நினைத்துப் பார்க்கக்கூடிய மன நிலையில் அப்போது இல்லை. எப்போதும் ஒரே ஒரு நினைவுதான் அவளிடம் திரும்பத் திரும்பச் சுழன்று கொண்டிருந்தது. சுந்தர பாண்டியனிடம் நெருங்கிப் பழகியதனால் அவனுக்கு அபசாரம் செய்து விட்டதாக அவள் நம்பத் தொடங்கினாள். வேறு எதையுமே சிந்திப்பதற்கு அவள் மனம் மறுத்து விட்டது.

''செல்வமும் செருக்கும் மிகுந்த ஆடலணங்காக இருந்த நீ அவருக்காகக் கிராமந்தோறும் நகரந்தோறும் நடனமாடினாய். அவருக்காக உன்னுடைய சொந்த நலன்கள் எல்லாவற்றையுமே இழக்கத் துணிந்தாய். அவருக்காக மட்டிலுமின்றி, அவருடைய இலட்சியத்துக்காகவும் உன்னையே அர்ப்பணித்துக் கொண்ட பெண்மணி நீ. அவருடைய கனவுகள் நனவாகப் போகும் இந்தச் சமயத்தில், இலட்சியத்தின் வெற்றி தலைவாயிலில் வந்து நிற்கும் இந்த வேளையில், நீ அவரைப் புறக்கணிக்கலாமா?''

''நான் அவரைப் புறக்கணிக்கிறேனா? அபசாரம், அபசாரம்!'' என்று தன் செவிகளைப் பொத்திக் கொண்டாள் கயல்விழி. ''தயை செய்து அந்த அளவுக்கு என்னை உயர்த்திக் கூறாதீர்கள். நான் அவர் அன்புக்குப் பாத்திரமாகக் கூடாதவள். கூத்தாடிப் பிழைக்கும் பாணர் குல மங்கை நான்.''

விழுப்பரையரால் அவள் போக்கை உணர்ந்து கொள்ள முடிந்தது. காலம் காலமாக இரத்தத்தில் ஊறியுள்ள பழைமைப் பண்புக்கு மாறாக அவளால் நினைத்துப் பார்க்கவும் தெம்பில்லை என்று நினைத்தார். அரசர்கள் தெய்வங்களாக மதிக்கப்படுவார்கள்; அரசகுலம் தெய்வகுலமாகப் போற்றப்படும் குலம்.

கயல்விழியை அழைத்துக்கொண்டு மேல்மாடத்துக்கு வந்தார் விழுப்பரையர். எட்டுத் திசைகளிலும் சுட்டிக் காட்டினார். மதுரை மாநகரமே மாபெரும் பாசறை போன்று விளங்கியது. திரும்பிய திசைகளிலெல்லாம் யானைக் கூட்டங்கள், குதிரைக் கூட்டங்கள், தேர்க் கூட்டங்கள், வீரர்களின் கூட்டங்கள்!

''இந்த அற்புதக் காட்சிக்கு மூலகாரணமாக விளங்கும் தூய சக்தி எது தெரியுமா? அன்பு. உன் அன்பு. அவரிடம் கொண்ட மாசற்ற அன்பு!''

''இல்லை;அவர் மனித உருவில் நடமாடும் தெய்வப் பிறவி. அவருடைய பேராற்றலுக்கு முன்னால் என் அன்பு அற்பத்திலும் அற்பமானது. என் அன்பைச் சொல்லி அவர் ஆற்றலுக்கு மாசு கற்பிக்க வேண்டாம்!'' என்று முறை யிட்டாள் கயல்விழி.

பேதைப் பெண்ணின் அறியாமையைக் கண்டு நகைப்பதா அல்லது சினங்கொள்வதா என்று விழுப்பரை யருக்குப் புரியவில்லை. சுந்தரபாண்டியனின் ஆற்றலில் அவள் கொண்டிருந்த நம்பிக்கை அவளுடைய அன்பின் ஆற்றலை அவருக்குச் சுட்டிக் காட்டியது.

''கயல்விழி! இளவரசரின் பேராற்றலை நான் என்றுமே குறைத்து மதித்ததில்லை. இந்த நாட்டையே தமது குடை நிழலில் வைத்துக் காக்கும் மிகப் பெரிய ஆலமரம் போன்றவர் அவர். ஆனால் அந்த ஆற்றலுக்கு வானமுதாக அமைந்து விட்டது, உன்னுடைய அன்பு. எத்தனையோ வகை அன்பு களிலும் தலைவன் தலைவிக்குரிய அன்பு இருக்கிறதே, அதுதான் எல்லையற்ற சக்தி வாய்ந்தது. தியாகச் சுடர்விட்டு உலகையே காப்பாற்றும் வலிமை அதற்கு உண்டு. வள்ளுவரின் அறத்துப்பாலை நீ அவருடன் ஒன்றிப் படித்திருக்கிறாயல்லவா?''

அப்படிப் படித்த நாட்களையும், படித்தவாறே வாழ வேண்டுமென்று இன்பக் கற்பனைகள் எழுப்பிய நாட்களை யும் எண்ணிப் பார்த்தாள் கயல்விழி. ''அப்போது அவர் புலவர்; நான் கூத்தாடிப் பிழைப்பவள். இனிமேல் தலைவி என்ற சொல்லே என்னைச் சுட்டுவிடுமென்று அஞ்சுகிறேன்.''

கோபம் வந்துவிட்டது விழுப்பரையருக்கு. குரலைச் சிறிது கடுமையாக்கிக் கொண்டார்.

''இங்கே இந்த நகரத்துக்குள் குழுமியிருக்கும் லட்சோபலட்சம் வீரர் கூட்டத்தையும் நினைவில் வைத்துக்

கொள். இதற்கு முன்பு போரில் இந்த நகரம் தீப்பட்ட காட்சியையும் நினைவில் வைத்துக்கொள். முந்நூறு ஆண்டுகளுக்கும் மேலாக அடிமைப்பட்டுத் துன்புற்ற நாடு, அதன் முந்நூறு ஆண்டுப் பாவத்துக்கும் பிராயச்சித்தம் செய்யத் துடித்துக் கொண்டு நிற்பதைப் பார். இப்போது சொல்; இளவரசர் அவருடைய இலட்சியத்தில் வெற்றி பெறவேண்டுமென்று நீ நினைக்கிறாயா, இல்லையா?''

விழுப்பரையரின் குரலில் தொனித்த வேகம் கண்டு நடு நடுங்கிப் போனாள் கயல்விழி. மாலைமாலையாகக் கண்ணீர் வடித்தாள். அவளால் வாய்திறந்து பேச முடியவில்லை.

''இத்தனை வீரர்களின் உள்ளத்திலும் அசைக்க முடியாத நம்பிக்கையாக, தியாகத் திருவிளக்காய்ச் சுடர் விடும் அவர் வெற்றி பெறவேண்டுமா? கூடாதா? இந்த நாடு வாழ வேண்டுமா? அழிய வேண்டுமா? மறுமொழி சொல்; அதை உடனே சொல்!''

''அவருடைய வெற்றியைக் காணவே இந்த உயிர் இன்னும் உடலோடு துடித்துக் கொண்டிருக்கிறது'' என்று நாத்தழுதழுக்கக் கூறினாள் கயல்விழி.

''எப்படி அவரால் வெற்றி பெற முடியும்?'' என்று கேட்டார் விழுப்பரையர். ''அவருடைய உயிருக்குயிரான நீ, வாழ்வா சாவா, என்ற போராட்டத்தில் அவர் குதித்திருக்கும் இந்த வேளையில் அவரிடமிருந்து பிரிந்து விட்டால் எப்படி அவரால் வெற்றி பெற முடியும்? வெண்ணெய் திரண்டு வரும்போது தாழியை உடைப்பது போலல்லவோ நீ அவருக்குத் துன்பம் தருகிறாய்? இளவரசரும் மனிதர்தாமே? அவருடைய மனத்துக்குத் துன்பம் தருவதற்கு இதுவா உற்ற நேரம்? முதலில் நமது வெற்றி! அந்த இலட்சியம் நிறை வேறும் வரையில் வேறு எந்தச் சிந்தனையுமே உனக்குக் கூடாது; வேறு நினைவுகள் உன்னை வாட்டுவதற்கு நீ இடமளித்தால் நீ அவருக்கும் இந்த நாட்டுக்கும் துரோகம் செய்கிறாய்!''

''நான் என்ன செய்யவேண்டும்?''

''இப்போதே நீ அரண்மனைக்கு என்னோடு புறப்பட்டு வருகிறாய். அங்கே உன்னை அன்போடு வரவேற்கக் கோப்பெருந்தேவியார் காத்திருக்கிறார்கள். அரசரும் தேவியாரும் உன்மீது கொண்டுள்ள பற்றுதலை நீ இனிமேல் தான் தெரிந்து கொள்வாய். அங்கு வந்து இளவரசரின் குறிப்பறிந்து நீ என்றும்போல் மகிழ்ச்சியோடு நடந்து கொள்ள வேண்டும்.''

கயல்விழிக்கு அது மீறமுடியாத கட்டளையாகத் தோன்றியது. அதுவே சிறந்த வழி என்பது புலப்பட்டது. எனினும் சற்றே தயங்கினாள்.

''நான் வருகிறேன். இளவரசரின் ஆணைகளைச் சிரமேற்கொண்டு அவருக்குப் பணிபுரிகிறேன். ஆனால் ஒரே ஒரு வேண்டுகோள், ஒரே ஒரு வரம் தாங்கள் என் சார்பில் இளவரசரிடம் கோரவேண்டும். அந்த வரம்...''

''என்ன அது?''

''நான் ஒரு பணிப்பெண். வேள மகளிர் போன்ற நிலையில் உள்ள பணிப்பெண். அரண்மனையில் அடிமைப் பெண்ணாக இருப்பதையே நான் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன். என்னைப் பணிப்பெண்ணாகவே அவர் கருதவேண்டும்.''

''முதலில் போர் முடியட்டும், உன் விருப்பத்தைப் பற்றிப் பிறகு பேசிக் கொள்ளலாம். இப்போது நீ புறப்பட்டு வந்து அவருடைய முகத்தில் புன்னகை தவழச்செய். அவருக்குக் களிப்பூட்டுவதே உன் முதற்பணி என்று முடிவு செய்துகொள். போருக்குச் செல்பவர் வெற்றி பெற்றுத் திரும்ப வேண்டும்.''

விழுப்பரையரின் கடைசிச் சொல் மந்திர சக்தி பெற்று அவளை ஆட்டுவித்தது. தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டே, ''போருக்குப் பெண்களும் உடன் செல்லலாமா?'' என்று கேட்டாள்.



# 3. பணிபுரிய வந்தனள்

தமது பாதங்களில் வந்து வீழ்ந்த கயல்விழியை இரு கரங்களாலும் மெல்லப் பற்றித் தூக்கினார் கோப்பெருந்தேவி. அச்சத்தோடு அவர் பிடியிலிருந்து விலக முயன்ற கயல்விழியை அவர் நழுவ விடவில்லை. அன்புப் பெருக்கோடு அணைத்துக் கொண்டு அவள் நெற்றியில் முத்தமிட்டார். கயல்விழிக்கு மெய்சிலிர்த்தது. தன் தகுதிக்கு அப்பாற்பட்டதொரு பெரும்பாக்கியம் தன்னை வந்து அணைத்துக் கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டாள்.

''கயல்விழி! நடந்தவற்றையெல்லாம் புலவர் என்னிடம் கூறியிருக்கிறார். நீ அரசருக்கு முன்பாகவே சபையில் வந்து சுந்தரபாண்டியனுக்காக வாதாடினாயாமே! அவ்வளவு துணிவுமிக்க பெண்ணா என்னைக் காண்பதற்கு அஞ்சிக் கொண்டு விலகியிருந்தாய்? மகளே! நானும் உனக்கொரு தாய்! உன்னுடைய தமக்கையம்மா, நான்!''

தாய்ப் பாசத்தை அறியாத கயல்விழிக்கு அந்த அன்புப் பெருக்கைத் தாங்க முடியவில்லை. பாண்டிய நாடு முழுவதுக்குமே தாயான கோப்பெருந்தேவியா இவ்வளவு கனிவோடு தன்னிடம் பேசுகிறார்?

''நான்... நான் பாணர் குலப்பெண்... கூத்தாடிப் பிழைத்தவள்... நான் உங்கள் அடிமை. உங்கள் பணிப் பெண்ணாக இருக்கவும் தகுதியற்றவள்'' என்று தடுமாறினாள் கயல்விழி.

கோப்பெருந்தேவி சிரித்தார். ''நீ கூறுவது அவ்வளவும் மெய்தான். நானுமே எங்கள் அரசருக்குப் பணிப் பெண்தான்; அடிமைதான். நாம் நமது தலைவருக்கு அடிமைப் பெண்ணாக, அந்தரங்க அமைச்சராக, தாயாக, தாதியாக

இருக்கவேண்டியவர்கள் தாம். நம்முடைய பெருமையே அதில்தானே இருக்கிறது?''

கயல்விழியின் பொன்னொளிர்மேனி நடுங்கியது. தலைவிக்குரிய தகுதியைத் தேவியாரே குறிப்பிடுகிறாரே!

''இதோ பார்! நம்முடைய பரம்பரைப் பண்பு உன்னையும் என்னையும் வெறும் மானுடப் பெண்களாக மட்டும் மதிக்க வில்லை. நாம் நம் தலைவருடன் வாழும் காலம் வந்தவுடனேயே திருமகளாக, கலைமகளாக, புவி மகளாக, சயமகளாக மாறுகிறோம். நீ திருமகளின் அருள் பெற்ற சயமகள் என்பதை முன்னாலேயே உணர்த்தி விட்டாய். நீ எந்தக் குடியில் பிறந்து எப்படி வாழ்ந்திருந்தால் என்ன? சுந்தரபாண்டியனின் அன்பைப் பெற்றவுடனேயே நீ அரச குலத்தவளாகி விட்டாய். அவனுக்குப் பணி செய்து உன்னை வளர்த்துக்கொள்; அவன் மக்களுக்குப் பணி செய்து நாட்டை வளர்த்து விடுவான்!''

ஓர் இரகசியம் முதன் முறையாகக் கயல்விழியின் உள்ளத்தில் பதிந்தது. வீட்டின் வளர்ச்சியே நாட்டின் வளர்ச்சி; வீட்டின் வளமே நாட்டின் வளம். பெண்ணே பொறுமை மிக்க புவிமகள்; வெற்றிகளைத் தேடித் தரும் சயமகள். இவ்வளவு பண்புகளையும் அவள் தேடிப் பெற்றுத் தன் தலைவனுக்குத் தரவேண்டும். அவன் உலகையே ஒரு குடை நிழலில் காக்கும் உத்தமனாக வீறுபெற்று வளர்வான்.

''என் குறைகளையெல்லாம் பொறுத்து என்னை ஏற்றுக் கொள்கிறீர்கள். தலைவியாக வரும் தகுதியற்ற நான் அவருக்குத் தலைமைப் பணிப்பெண்ணாகவேனும் இருக்க முயலுகிறேன்'' என்று நன்றி பொங்கக் கூறினாள் கயல்விழி.

''நாடு தன்னுரிமை பெற்று அவன் தலைவனாகும் போது நீதான் தலைவியாகப் போகிறாய். கடமைகளை ஏற்றுக் கொள்ளவும் இப்போதிருந்தே பழகிக்கொள்!'' என்று சிரித்துக் கொண்டே கூறினார் கோப்பெருந்தேவி, ''அரசருக்கும் எனக்கும் வயதாகிறதல்லவா? எங்களுக்குச் சிறிது அமைதியும் ஓய்வும் வேண்டுமல்லவா?''

மிகப் புனிதமான அந்த எதிர்காலக் கனவுகள் பற்றிக் கற்பனை செய்யவே கயல்விழி தயங்கினாள். அவளுடைய

உள்ளமெல்லாம் அபபோது சுந்தரபாண்டியனிடம் வட்ட மிட்டுக் கொண்டிருந்தது. அவனைச் சென்று காண அவள் துடித்தாள்.

''இந்தா, இவற்றை எடுத்துக்கொண்டு அவனைப் போய்ப் பார். நீ விரும்பியது போலவே இப்போதே உன்னை இங்கு பணிப்பெண்ணாக நியமித்து விடுகிறேன்!'' என்றார் கோப்பெருந்தேவி.

செங்கதிலிகளையும் மாங்கனிகளையும் ஒரு பொன் தட்டில் வைத்துக் கயல்விழியிடம் நீட்டினார் அரசியார். ஒரு கலத்தில் தண்ணீரும் வந்தது. அவற்றை எடுத்துக் கொண்டு சுந்தர பாண்டியனின் கூடத்துக்குள் அடிமேல் அடி வைத்து நடந்தாள் கயல்விழி. எல்லாமே அவளுக்குப் புதுமையாகத் தோன்றியது.

விழுப்பரையரிடமிருந்து செய்தியைக் கேட்ட திலிருந்து ஒவ்வொரு கணத்தையும் யுகமாக்கி, அவளுக்காகக் காத்திருந்தான் சுந்தரபாண்டியன். காலம் காலமாகப் பிரிந்திருந்தவளை மீண்டும் சந்திக்கப் போகும் பரபரப்பு அவனுக்கு. சில தினங்களாக அவனிடம் குடிகொண்டிருந்த இனம் புரியாத சோர்வு அவனை விட்டுப் பறந்து விட்டது.

''வருக! வருக! வெற்றித் திருமகளே வருக!'' என்று குதூகலத்துடன் அவளை அழைத்துக் கொண்டே எழுந்து வந்தான் சுந்தரபாண்டியன். வந்தவன் அவளது இரு கரங்களையும் மெல்லப்பற்றி அழைத்துச் சென்றான். அவளுடைய கரங்கள் நடுங்கின. பழங்களும் தண்ணீரும் கரங்களில் இருந்ததால் அவள் அவற்றை இறுகப் பற்றிக் கொண்டாள். குனிந்த தலையை நிமிர்ந்து இன்னும் அவள் சுந்தரபாண்டியனைப் பார்க்கவில்லை.

கயல்விழியை மகிழ்ச்சியுடன் வரவேற்ற சுந்தர பாண்டியன், ''முன்பெல்லாம் புலவர்கள் தலைவியரின் சினம் தீர்ப்பதற்குத் தூது சென்றார்கள் என்பதை நான் நம்பவில்லை. இப்போது விழுப்பரையருக்கு நான் நன்றி சொல்லவேண்டும். மகத்தான பெரும்பணி செய்திருக்கிறார் அவர்!'' என்று கூறினான்.

அவள் மறுமொழி பேசத் துணியவில்லை; அவனது மென் பிடியில் அவளது தேகமே மென்தளிர்போல் நடுங்கியது. அவன் தனக்குள் நகைத்தபடி, பழத்தட்டை வாங்கிக் கொண்டான்.

''தலைவியின் சினம் இன்னும் ஆறவில்லையா? ஊடல் தீரவில்லையா?''

''நான் தலைவியல்ல; பணிப்பெண்!'' குனிந்த தலை நிமிராமலே பதில் கூறினாள் கயல்விழி.

வாய்விட்டுச் சிரித்தான் சுந்தரபாண்டியன். ''அப்படியென்றால் நானும் பணியாளன்தான். தலைமைப் பணிபுரிபவனே தலைவன் ஆவான். குடிமக்களைத் தலையில் சுமந்து கொண்டு அவர்களுக்காகப் பணிபுரிபவனுக்கே தலைவன் என்று பெயர். பணிப் பெண்ணே! நீ பணிப் பெண் என்றால் என் குறிப்பறிந்து, நான் கூறுவதற்கு முன்பே, என் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டியவள் என்பதை அறிந்திருக்கிறாயா?''

தன் கரங்களை மெல்ல விடுவித்துக் கொண்டு அவனுக்குப் பழங்களை எடுத்துக் கொடுத்தாள் கயல்விழி.

''நான் ஆணை இடுகிறேன்; முதலில் பணிப் பெண் பழம் சுவையாக இருக்கிறதா என்று பார்த்து விட்டுத்தான் பிறகு எனக்குக் கொடுக்க வேண்டும்!'' என்றான் சுந்தரபாண்டியன்.

அவள் கண்களில் நீர் நிறைந்தது. மெல்ல ஒரு பழத்தை எடுத்துத் தான் சாப்பிட்டுவிட்டு, அடுத்த செங்கதலியை அவனிடம் நீட்டினாள்.

''இளவரசே! போருக்குத் தாங்கள் செல்லும்போது பணிப் பெண் என்ற முறையில் நானும் உடன் வரலாமல்லவா? பெண்களும் பாசறைப் பணிகளுக்கு உடன் வரும் வழக்கம் உண்டு என்பதை நான் கேள்வியுற்றிருக்கிறேன். தாங்கள் அந்தப் பாக்கியத்தை எனக்கு அருளுவீர்களா?''

சுந்தரபாண்டியனுக்கு அப்போதே அவளைத் தூக்கிக் கொண்டு ஆனந்த நடனம் புரிய வேண்டும்போல்

தோன்றியது. சோழபுரத்தில் நிலைநாட்ட வேண்டிய வெற்றிக் கொடியை அவள் அப்போதே அவன் நெஞ்சில் நிலைநாட்டிவிட்டதுபோல் தோன்றியது!

''கயல்விழி! நீயும் போருக்கு வருகிறேன் என்று உன் வாயாலேயே சொல்லி விட்டாயல்லவா! இந்த ஒரு சொல் போதும் எனக்கு! நமது இலட்சியம் வெற்றி பெற்றுவிட்டது. கயல்விழி! இந்தக் கணத்திலேயே - இந்த இடத்திலேயே அது வெற்றி பெற்று விட்டது!''

சின்னஞ்சிறு குழந்தையின் பரவசத்தை அவன் முகத்தில் கண்டு எல்லையற்ற இன்பம் கண்டாள் கயல்விழி.

## 4. தலைவனைக் காணீரோ?



கயல்விழி விடைபெற்றுச் சென்ற பிறகு சிறிது நேரம் அந்த இனிய நினைவுகளில் தன்னை மறந்திருந்தான் சுந்தரபாண்டியன். விழுப்பரையர் அங்கு வந்து நின்றதை அவன் கவனிக்கவில்லை. சற்று நேரத்தில் அந்தரங்க ஆலோசனை மண்டபத்தில் அவசரக் கூட்டம் நடைபெறுவதாக இருந்தது. அதற்குச் சுந்தரபாண்டியனை அழைத்துச் செல்வதற்காகவே நேரில் அங்கு வந்திருந்தார் விழுப்பரையர்.

அவன் மனநிலை அவனுடைய முகமலர்ச்சியில் அவருக்குப் புலப்பட்டு விட்டது! தமக்குள் பூரிப்போடு நகைத்துக் கொண்டார் அவர்.

''இளவரசே!''

''வாருங்கள், வாருங்கள்!'' என்று குதூகலம் நிறைந்த குரலில் அவரை வரவேற்றான் சுந்தரபாண்டியன்.

''தோளுக்கு மேல் வளர்ந்துவிட்டால் மைந்தனைக் கூடத் தோழனாகவே பாவிக்க வேண்டும் என்று சொல்

வார்கள். அந்த முறைப்படி இனித் தங்களை என் தோழராகவே பாவிக்கப் போகிறேன்'' என்றார் புலவர்.

''அது என் பாக்கியம்'' என்றான் இளையபாண்டியன்.

''இளவரசரின் முகத்தில் இப்போது எவ்வளவு அற்புத மான ஒளி வீசுகிறது'' என்று பெருமையுடன் கூறினார் விழுப்பரையர். ''தங்களுடைய கண்களுக்குப் புத்தொளியும், சிந்தனைக்குக் கூர்மையும், இதயத்துக்கு இன்பமும், உடலுக்கு வலிமையும் தரக்கூடிய ஏதோ ஒரு மந்திர சக்தி என் குமாரத்தி கயல்விழியிடம் இருக்கத்தான் செய்கிறது. ஒரு நாழிகைப் பொழுதுக்குள் எவ்வளவு மாறிவிட்டீர்கள் தாங்கள்!''

நாணித் தலைகவிழ்ந்தான் சுந்தரபாண்டியன். அவருடைய ஒவ்வொரு சொல்லுமே உண்மையொளி சுடர் விடும் சொல்லாக அவனுக்குத் தோன்றியது. அவன் இழந்து கொண்டிருந்த பேராற்றல், அவனுடைய உடல், உள்ளம் உயிரெங்கும் இப்போது நீக்கமற நிறைந்து துடித்துக் கொண்டிருந்தது. கயல்விழியை அவனுக்குத் திருப்பித் தந்த அவருக்கு எங்ஙனம் நன்றி கூறுவது என்று தெரியாமல் அவன் தவித்தான்.

கடமையை நினைவூட்டினார் புலவர்.

''அந்தரங்க ஆலோசனைகளை இன்றைக்கே முடிக்க வேண்டும்; வாருங்கள்'' என்று கூறி அவனை அழைத்துக் கொண்டு மண்டபத்துக்குச் சென்றார். அங்கு முன்னதாகவே பெரும் படைத் தலைவர்களான மழவச் சக்கரவர்த்தியும், அழகம் பெருமாளும் காத்திருந்தனர். சிறிது நேரத்தில் குலசேகர பாண்டியரும் வந்து சேர்ந்தார். ஐந்து பேர்களே அடங்கிய மந்திராலோசனைக் கூட்டம் தொடங்கியது.

''கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து நாம் எதிர் பார்த்தவாறே மாற்றோலை வந்திருக்கிறது!'' என்றார் பாண்டியர். ''நாம் தன்னுரிமை வேண்டுமென்று கேட்டிருந் தோம்; எதையும் அவர்கள் பொருட்படுத்தவில்லை.''

மாற்றோலையை விழுப்பரையர் படித்தார். அதில் இராஜராஜனின் படைச்செருக்கும் அலட்சியமும் இருந்தன. சயங்கொண்ட சோழ வல்லபரையே பாண்டி மண்டலத்தின்

மேலதிகாரியாக ஏற்றுக்கொண்டு, அவர் ஆணைப்படி நாட்டை ஆட்சி செய்யாவிட்டால், உடனடியாகத் தன் படைகளை அனுப்புவதாக அவன் அச்சுறுத்தி யிருந்தான்.

சிரித்தான் சுந்தர பாண்டியன். அதைக் கவனித்த பாண்டியர் அவனுக்கு எச்சரிக்கை செய்தார்.

''நம்மைவிட ஐந்து மடங்கு அவர்கள் படை பல முள்ளவர்கள். பயிற்சியிலும் படைக்கலங்களிலும் பிற வசதிகளிலும் நம்மை அவர்கள் மிஞ்சியவர்கள். இதை நாம் அலட்சியம் செய்ய முடியாது'' என்றார் பாண்டியர்.

**''நிலைமக்கள் சால உடைத்தெனினும், தானை**
**தலைமக்கள் இல்வழி இல்!**

என்ற குறளை நான் எக்காலத்துக்கும் ஏற்ற உண்மை என நம்புகிறேன்'' என்றான் சுந்தர பாண்டியன். ''வெறும் படைப் பெருக்கமோ, மக்களின் பொருள் வளப்பெருக்கமோ ஒரு நாட்டின் வலிமையாகி விடுவதில்லை. சிந்தனைத் தெளிவும் மனத் திண்மையும் செயலாற்றலும் கொண்ட தலைவர்கள் இல்லாத நாடு அது. தலைவர்கள் எப்படியோ அப்படியே மக்கள். ஆகவே, தலையில்லாத மனிதர்களையும் தலைவர் கள் இல்லாத நாட்டையும் நாம் மிக எளிதாக வென்று அடக்கிவிட முடியும்.''

இளந்தலைவனின் இந்தச் சிந்தனைத் தெளிவைக் கண்டு மற்ற நான்கு தலைவர்களுமே வியப்படைந்தனர். சுந்தர பாண்டியன் மேலும் கூறினான்:

''அறத்துறை, அரசாட்சி, படையாட்சி, வாணிகம், உழவு முதலிய எல்லாத் தொழில்களுமே தக்க தலைவர்கள் இல்லாமையால் சோழ நாட்டில் இப்போது தடுமாறி நிற்கின்றன. குலோத்துங்க சோழரின் பிடியில் நாடு இருந்த வரை யிலும் மற்ற தலைவர்கள் அவரைப் பின்பற்றினார்கள். இப்போதோ அவர்கள் இராஜராஜனைப் பிரதிபலிக்கிறார்கள். நம் வெற்றிக்கு மிகப் பெரிய வாய்ப்பு அந்தச் சாம்ராஜ்யத்தின் தலைமையற்ற சூழ்நிலைதான். ஒரே ஒரு மாதம் போதும் நமக்கு!''

''ஒரே மாதத்தில் வெற்றியா?''

''வெற்றி அல்லது வீர மரணம் என்ற முடிவோடு நாம் போர் தொடங்கினால், அதற்கும் முன்னரே கூட நம் மீன்கொடி கங்காபுரியில் பறக்கும்!''

சுந்தரபாண்டியனைத் தனியேவிட்டு, மற்ற நால்வரும் அந்தரங்கமாகக் கூடிப் பேசினார்கள். அரசரிடம் இரகசியமாக விவாதித்தனர். பிறகு திரும்பி வந்து, ''இளவரசர் சுந்தர பாண்டியரே படைத் தலைமை தாங்கிப் போர் நடத்த வேண்டும் என்று நாங்கள் முடிவு செய்திருக்கிறோம்!'' என்று ஒரே குரலில் பேசினர்.

''அரசே!'' என்று பதறினான் சுந்தரபாண்டியன். ''பல்வேறு போர்க்களங்களில் தலைமை ஏற்றுப் போர் நடத்திய மழவச் சக்கரவர்த்திகளும் அழகம் பெருமாள் அவர்களும் இருக்கும் போது, இளைஞனாகிய எனக்கு அந்தப் பொறுப்பை அளிப்பது...''

''இளவரசர் அவர்களே! புலவனாகிய நான் தங்களுக்கு இந்தப் பாடலை நினைவூட்டலாமா?'' என்றார் விழுப்பரையர். உடனே கணீரென்று பாடத் தொடங்கிவிட்டார்.

**ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்**
**மூத்தோன் வருக என்னாது அவருள்**
**அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்**
**வேற்றுமை தெறிந்த நாற்பால் உள்ளும்**
**கீழ்ப்பால் ஒருவன் கற்பின்**
**மேற்பால் ஒருவனும் அவன்கட்படுமே!**

''ஒரே குடியில் பலர் பிறந்திருந்தாலும் அவர் வயதில் மூத்தோர் என்பதற்காக அழைக்காது, அறிவுடையோரையே அழைத்து அரசர் பணிக்க வேண்டுமென்பது நமது மரபு. அதுமட்டுமல்ல, தாழ்ந்தகுடியில் பிறந்தோனாயினும் கல்விச் சிறப்புக் கொண்டிருந்தால் அவன் அறிவுக்கு ஏனையோர் கட்டுப்படவேண்டும் என்பது நமது ஆன்றோர்களின் வழி. இளவரசர் என்ற பிறவிச் சிறப்புக்காகத் தங்களை நாங்கள் இப்போது தலைமை ஏற்கும்படி வேண்டவில்லை. நமது இலட்சிய வெற்றிக்காகப் பல்வேறு இன்னல்களை மேற் கொண்டு இந்தக் காலத்துப் போர்முனைக்கேற்ற பல்வேறு வழி வகைகளையெல்லாம் தாங்கள் அறிந்து வைத்திருக்கிறீர்கள்.''

குலசேகர பாண்டியர் கூறினார்: ''நாளைக்கு நம் வெற்றிக்குப் பிறகு பொறுப்பேற்றுப் புதிய பாண்டிய நாட்டை உருவாக்கப்போகிறவனும் நீதான். உனக்கு இது பயிற்சிக் களமாகவும் இருக்கட்டும். புதுநாட்டை உருவாக்குவதும் ஓர் ஆக்கப் போர்முனைக் கடமைதானே?''

மழவச் சக்கரவர்த்தியும் அழகம்பெருமாளும் சுந்தர பாண்டியனைத் தலைமை ஏற்கும்படி வற்புறுத்தினர். தாங்களும் விழுப்பரையரும் எப்போதும் அவனுடன் இருப்பதாகவும், ஆலோசனைகளை அவன் விரும்பும்போது அவனுக்கு அளிக்கச் சித்தமாயிருப்பதாகவும் கூறினார்கள். சுந்தரபாண்டியனால் மறுத்துக் கூற முடியவில்லை. மறுநாள் நூற்றுவர் படைத் தலைவர்களையும், ஆயிரவர் படைத் தலைவர்களையும் சபைக்குக் கூட்டுவித்து அரசர் முன்னிலையில் இந்தச் செய்தியைப் பூரிப்போடு வெளியிட்டார் மழவச் சக்கரவர்த்தி. வாழ்த்தொலியால் மண்டபமே அதிர்ந்தது.

சுந்தரபாண்டியன் எழுந்து நின்று தன்னுடைய சிறு படைத்தலைவர்களைக் கண்ணோட்டம் விட்டான். ஆயிரம் பேர்களுக்கும் குறைவான எண்ணிக்கை உள்ளவர்களின் கூட்டம் அது. அந்தக் கூட்டத்தை முதன்முதலாகத் தன்னுடைய சொற்களால் இயக்கத் தொடங்கி விட்டான் தலைவன்.

குரல் கணீரென்று ஒலித்தது.

''தலைவர்களே! நீங்கள் ஒவ்வொருவரும் உங் களுடைய நாட்டுப் பற்றாலும் உழைப்பாலும் உயர்ந்து, மற்ற வர்களுக்குத் தலைமை தாங்கும் நிலைக்கு வளர்ந்திருக்கிறீர் கள். முந்நூறு ஆண்டுகளுக்கு மேலாக நமது பரம்பரை யினரும் நாமும் பட்ட இன்னல்களை முப்பதே நாட்களுக்குள் முடிப்பதென்ற முடிவோடு நாம் இங்கே கூடியிருக் கிறோம்...''

''முப்பது நாட்களிலா?'' ஏதோ ஒரு குரல் கூட்டத்திடையே அச்சத்துடன் எழுந்தது.

''ஆம்! நாம் வெற்றி அடைந்தே தீருவோம். அதுவும் முப்பது நாட்களுக்குள் நாம் வெற்றியைக் கைப்பற்றுவோம்! நம் இந்த நோக்கத்திலோ, இதை அடைவதில் உள்ள கால வரம்பிலோ நம்பிக்கையில்லாதவர், இப்போதே இந்தக் கூட்டத்தைவிட்டு வெளியேறிவிடலாம். வெளியேறி விடும்படி கட்டளை இடுகிறேன்!''

கூட்டத்துக்குள் ஒளியும் அனலும் கலந்த ஒரு புதுச்சக்தி பரவியதுபோல் ஒவ்வொருவரும் உணர்ந்தார்கள். மந்திரத்தில் கட்டுண்டவர்கள்போல் அவர்கள் கட்டுண்டு விட்டார்கள்; முப்பது நாளைக்குள் முடித்தாலே வெற்றி என்பதையும் இல்லாவிட்டால் கோசல சாம்ராஜ்யத்துப் படைகளும் வந்து விடும் என்பதையும் கூறி, ''என்ன, செய்து முடிப்பீர்களா?'' என்று கேட்டான்.

''முடிப்போம்!'' என்று ஓராயிரம் சிம்ம கர்ஜனைகள் அங்கு ஒன்றாக எழுந்தன.

''ஆமாம்! வெற்றி ஒன்றைத் தவிர, நாம் கங்காபுரியை நோக்கி முன்னேறுவது ஒன்றைத் தவிர, நமக்கு வேறு ஒரு வழியும் இல்லை.

''தோல்வி இல்லை என்பதை நாம் முடிவு செய்து விட்டோம். ஆனால் முப்பது நாட்களுக்குமேல் ஒரு நாள் கடந்தாலும் அனைவரும் உயிருடன் இருக்கமாட்டோம். கோசல சாம்ராஜ்யம் நம்மை விழுங்கிவிடும்.

''நாம் வெற்றியுடன் திரும்புவது அல்லது வீரமரணம் அடைவது என்ற முடிவோடுதான் புறப்படுகிறோம். நம்முடைய நாட்டை மீட்காமல் நாம் மீளப்போவதில்லை.

''இந்த முடிவில் அசைக்க முடியாத நம்பிக்கையுள்ள தலைவர்களே எனக்கு வேண்டும். தங்களுடைய உயிர் பெரிதென்று நினைப்பவர்கள் இங்கேயே தங்கி விடுங்கள்!''

''முடிவை அப்படியே ஏற்கிறோம்'' என்று சிறுபடைத் தலைவர்கள் ஏகோபித்து முழங்கினார்கள்.

''ஒவ்வொருவரின் தலைமையிலும் உள்ள ஒவ்வொரு போர் வீரனுக்கும் இதுவே என் செய்தியாக இருக்க வேண்டும். வெற்றி பெறாமல் யாருமே உயிருடன் தோல்வியைச் சுமந்துகொண்டு திரும்பப் போவதில்லை என்பதை இப்போதே அறிவித்து விடுங்கள்! யாரேனும் கோழைகளிருந்தால் அவர்களை படையிலிருந்து இன்றே விரட்டி விடுங்கள். ஒரு கோழை ஓர் அணியில் இருந்தால் அவன் ஒரு நூறு கோழைகளைத் தோற்றுவித்து விடுவான்.''

குலசேகர பாண்டியர், விழுப்பரையர், மழவச் சக்கரவர்த்தி, இன்னும் அங்கிருந்த ஒவ்வொருவருமே ஓர் ஒளிப்

பிழம்பின் வெள்ளத்தில் தாங்கள் இழுத்துச் செல்லப்படுவது போல் உணர்ந்தார்கள். அந்த ஒளிப்பிழம்பாகவே அவர்களுக்குச் சுந்தரபாண்டியன் அப்போது காட்சியளித்தான்.

''கடைசியாக உங்கள் அனைவருக்குமே ஓர் எச்சரிக்கை!'' என்றான் வீரர் தலைவன். ''நாம் முனனேறிச் செல்லும் காலத்தில் ஒவ்வொரு தலைவனுக்குமே மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை முதலியவற்றைத் தூண்டுகிற வாய்ப்புகள் வந்து சேரும். மாளிகைகள் நம் காலடியிலே உருளும்; பொற்குவைகள் நம் குறுக்கே நின்று தடுக்கும்; மகளிர் கூட்டத்தின் சூழலைத் தாண்டி நாம் செல்லவேண்டிய நிலை வரும். எந்தத் தலைவனாவது தனது இறுதி இலட்சியத்தை மறந்து அவற்றால் கவரப்படுவானானால், அவன் தலை என் உடைவாளால் துண்டிக்கப்படும்.

''தலைவர்கள் எப்படியோ அப்படித்தான் மற்ற வீரர்களும் இருப்பார்கள். அப்படித்தான் மக்கள் கூட்டமும் மாறிவிடும். ஆகவே இந்த எண்ணங்களை ஒவ்வொரு தலைவரும் தம்முள் பதித்துக் கொண்டு தம்மைச் சார்ந்த வீரர்களுக்கும் பதிய வைப்பார்களாக! நாம் வெற்றி பெறுகிறோம், அதையும் முப்பது நாட்களில் பெறுகிறோம்!''

விழுப்பரையரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் அருவியாகப் பொங்கியது. ''தலைவர் தோன்றிவிட்டார்!'' என்று நாத் தழுதழுக்கக் கூறினார்.

## 5. கொற்றவைக் கூத்து



அரச சபையில் படைத் தலைவர்களிடம் சுந்தரபாண்டியன் உறை நிகழ்த்திக் கொண்டிருந்த போது, அரண்மனைப் பெண்டிர் யாவரும் மேன்மாடத்திலிருந்து அந்தக் காட்சியைப் பார்த்த வண்ணம் இருந்தனர். கலிங்கத்தினாலான மென்துகில் திரைக்குப்

பின்னே அவர்கள் கைவண்ணப் பாவைகளென மாடத்தில் கண்ணிமைக்க மறந்திருந்தனர். கோப்பெருந்தேவிக்கு அருகில் வீற்றிருந்த கயல்விழி மட்டிலும் கணத்துக்குக் கணம் அவளையே அறியாது கொற்றவைத் தேவியாக மாறிக் கொண்டு வந்தாள். கொற்றவையைத் தனது கூத்தில் வழிபடும் இயல்பு கொண்ட பெண்ணல்லவா அவள்? அந்த ஆவேசம் வந்துவிட்டது அவளுக்கு.

''முப்பது நாட்கள் எதற்கு? இப்போதே வெற்றி தந்துவிட்டேன்!'' என்று அவள் கூறியவுடன் சட்டென்று அவளைத் திரும்பிப் பார்த்தார் கோப்பெருந்தேவி.

கயல்விழி கயல்விழியாக இல்லை. தீமைகளைக் கொன்று தனது மக்களைக் காக்கும் கொற்றவைத் தேவியின் ஆவேசத்தில் அவள் இருந்தாள். அறியாமையைக் கொன்று அறிவைக் காப்பவளாக, சோம்பலைக் கொன்று ஊக்கத்தைக் காப்பவளாக, கோழைத்தனத்தைக் கொன்று தியாகத்தைக் காப்பவளாக அவள் கோப் பெருந்தேவிக்குக் காட்சியளித்தாள்.

கோப்பெருந்தேவிக்கு மெய்சிலிர்த்தது. கயல்விழியை அறியாமலே கயல்விழியிடம் குடி கொண்டிருந்த மற் றொருத்தியை அவர் கண்டு கொண்டார்; ஆனந்த பரவசம் பெற்று விட்டார் பெருந்தேவி. ஆனால், மறுகணத்திலேயே கயல்விழி மாறிப்போய்த் தன் இயற்கையான தோற்றத்துக்கு வந்துவிட்டாள்.

போருக்குப் புறப்படுவதற்கு முன்னால் கொற்றவைத் தேவியை வணங்கிவிட்டுச் செல்வதுதான் வீரர்களின் மரபு. அவளுடைய திருக்கோயிலுக்குச் சென்று அவளை ஆடிப்பாடி வணங்கிவிட்டு, அவளையும் உடன் அழைத்துக் கொண்டுதான் அவர்கள் போருக்குப் புறப்படுவார்கள். வீரர் படையின் முன்னே சென்று அவர்களை நடத்திச் செல்பவள் கொற்றவையே என்ற முழுநம்பிக்கை அவர்களுக்கு இருந்தது.

நம்மவர்களின் இந்தத் தாய்மை வழிபாட்டுக்கு விளக்கம் கூறுகிறார், பிற்காலத்தில் இந்த நூற்றாண்டில் உதித்த மகாகவி பாரதியார் :

**முன்புநிற் கின்ற தொழிலே சக்தி!**
**சோம்பர் கெடுக்கும் துணிவே சக்தி!**
**பாம்பை அடிக்கும் படையே சக்தி!**
**வாழ்வு பெருக்கும் மதியே சக்தி!**
**தாழ்வு தடுக்கும் சதிரே சக்தி!**
**ஊழ்வினை நீக்கும் உயர்வே சக்தி!**
**உள்ளத் தொளிரும் விளக்கே சக்தி!**

இந்தச் சக்திகளுக்கெல்லாம் ஓர் உருவம் கொடுத்த வைகை நதிக் கரையின் காளி கோயிலின் முன்பு அப்போது வீரர்களின் பெருங்கூட்டம் கூடி நின்றது. முன்பு ஒருமுறை விழுப்பரையர் தம்முடைய ஒரே புதல்வன் ஆலவாய் நம்பியை அழைத்துக் கொண்டு வந்து வீரசபதம் செய்யச் செய்தாரே அதே கோயில்தான்.

ஆனால் முன்னைக்கு இப்போது எத்தனை எத்தனை மாற்றங்கள்! பாலைவனத்துக் காளியாக அன்று காட்சியளித்த வள் இன்று சோலைவனத்து மங்கையாக மாறி நின்றாள். சுற்றிலும் மண்டிக் கிடந்த செடி கொடிகளில் பசுமை தவழ்ந்து தென்றல் வீசியது. செந்நிறப் பூக்கள் கொள்ளை கொள்ளையாகப் பூத்துத் தேன் சொரிந்தன. அருகிலே வைகை நல்லாள் புதிய பூரிப்போடு, மத மதப்போடு, வீறு கொண்டு சதிராடிச் சென்றாள்.

குலசேகர பாண்டியர், சுந்தரபாண்டியர், விழுப்பரை யர், மழவச் சக்கரவர்த்தி, அழகம்பெருமாள் முதலானோர் ஒருபுறம் பயபக்தியோடு நின்று வழிபாடு நடத்தினர். மறுபுறம் கோப்பெருந்தேவி, கயல்விழி, உய்யவந்தாள் முதலியோரும் அரண்மனைப்பெண்டிரும் நின்றனர்.

கொற்றவையின் பல்வேறு பெயர்களைச் சொல்லி வான் முட்டும் குரலில் வாழ்த்தொலி எழுப்பிக் கொண்டிருந் தது வீரர் கூட்டம். ''செய்து முடிப்போம் அல்லது சிரமறுத்துக் காணிக்கை தருவோம்!'' என்று தியாக முழக்கமிட்டார்கள் வெற்றி வீரர்கள்.

எடுத்த செயலை முடிக்கத் தவறினால், தங்களது கரங் களாலேயே தங்களது சிரங்களை அறுத்துக்கொண்டு காளியின்

முன்பு தங்களைப் பலி கொடுத்துக் கொள்ளும் வழக்கம் இந்த நாட்டில் உண்டு. இன்றைக்கு இது பயங்கரமானதாகத் தோன்றினாலும், தகாத செயலாகத் தோன்றினாலும், ஆண் மகன் என்பவன் ஒவ்வொருவனும் தன் கடமையை அறிந்து திறம்பட முடிக்கப் பிறந்தவன் என்ற பேராண்மைக்கு இதுவே சான்றாக நிற்கிறது.

''செய்து முடிப்போம், இல்லையேல் சிரமறுத்து வீழ்வோம்!''

''வெல்க, பாண்டியத் திருநாடு! வாழ்க, பாண்டியத் திருநாடு!''

கயல்விழியின் ஆவேசம் அவளைப் பற்றிக் கொண்டு விட்டது. சிலம்பும் கழலும் புலம்ப அவள் சீரடிகள் துள்ளி நடனம் புரியத் தொடங்கிவிட்டன. நுதல் கிழித்து விழிக்கும் செய்யவளாக, வெஞ்சினத்துப் பெருந்தேவியாக, வளை யுடைக் கையில் சூலமேந்தியவளாக, கருநாகத்தையே கச்சுடையாகக் கொண்ட முலைச்சியாக அவள் ஆனந்த நடனம் புரிந்தாள்.

குலசேகர பாண்டியர் முதல் அங்கு நின்ற ஒவ்வொரு வரும் அவளை அப்போது மானுடப் பெண்ணாகப் பாவிக்க வில்லை. அவள் வெறும் பாணர் குலப் பேரழகியல்லள், கூத்தாடும் இளமங்கையல்லள்; இரத்தமும் சதையும் கொண்டு வாழ்வுக்கும் சாவுக்குமிடையே பிறந்து மடிபவளல்லள்!

அவளே பராசக்தி! சோம்பல் என்ற எருமைக் குணத்தைக் கொன்ற மகிஷாசுரமர்த்தினி அவள்! மாந்தரிட முள்ள பொறுமையின்மையாம் வரிப்புலிக் குணத்தைக் கொன்று மேலாடை தரித்தவள்! போரில் ஆயிரமாயிரம் யானைகளைக் கொல்லும் வலிமையை வீரர்களுக்குத் தருபவள்! பரணியிலே பிறந்தவள்! வீரர்களைப் பரணிப் பாடல்களுக்குத் தலைவர்களாக்குபவள்; கவிஞர்களின் உள்ளத்திலே செந்தமிழ் நெருப்பாய்க் கனன்று பரணிபாடச் செய்பவள்! வெற்றித் தேவி அவள்!

''வெற்றி தந்து விட்டேன்! இப்போதே, இந்நாளே, இக்கணமே வெற்றி உங்களுடையது!'' என்று உரக்கக் கூவினாள் அவள்.

அரசர் முதல் அனைவருமே அவளடியில் வீழ்ந்தார்கள். சுந்தரபாண்டியனும் தன்னை மறந்து கரங்கூப்பிச் சிரந்தாழத் தரையில் வீழ்ந்து வணங்கினான். ஒவ்வொருவருமே மெய் சிலிர்த்துப் போனார்கள். போர் முரசம் அதிரத் தொடங்கியது.

# 6. அதிர்ந்தன முரசுகள்



முரசுகள் அதிர்ந்தன; ஆயிர மாயிரம் போர் முரசுகள். சங்குகள் முழங்கின; ஆயிரமாயிரம் வெண் சங்குகள். வாழ்த்தொலிகள் பொங் கின; பல்லாயிரம் பல்லாயிரம் வாழ்த் தொலிகள்.

மதுரை மாநகரத்தின் வடக்கு வாயில் வழியாகச் சோழ நாட்டை நோக்கிப் புயல் பட்ட பெருங்கடல் போல் சுந்தரபாண்டியனின் படைகள் குமுறிப் பாய்ந்தவண்ணமாக இருந்தன. வாளும் வேலும் தாங்கிய குதிரைப் படைகள் முன்னே சாரிசாரியாகச் செல்ல, மதங் கொண்ட களிறுகளின் கூட்டம் மணியோசை ஒலிக்கப் பின்னே தொடர்ந்தது. கூட்டம்கூட்டமாக தேர்களும், பொங்கிச்சீறும் கடல் அலைகளெனத் தரைப்படை அணி களும் அங்கே கண்கொள்ளாக் காட்சியாக மலர்ந்திருந்தன.

பட்டத்து யானையின்மீது சுந்தரபாண்டியன் வீற்றிருக்க அவனருகில் வெண்கொற்றக் குடை நிழலில் விழுப்பரையர் அமர்ந்திருந்தார். செம்பொற் சிலையின் முகம் போல் சிந் தனைச் சூட்டில் சிவந்து கனிந்திருந்தது சுந்தர பாண்டியனின் முகம். குடிமக்களின் ஆரவாரங்களையும் வாழ்த்தொலி களையும் ஏற்றுக் கொண்டவாறே, சிந்தையைக் கங்காபுரிக் கோட்டை மதில்கள் மீது நாட்டியிருந்தான் அவன்.

முன்னே சென்ற யானை மீது மழவச் சக்கரவர்த்தியும் பின்னே வந்த களிற்றின் மீது அழகம்பெருமாளும் அமர்ந்திருந்தனர்.

அரண்மனையின் மேன்மாடத்திலிருந்து இரண்டு உருவங்கள் சிலையாக மாறி, இந்தக் காட்சியில் தங்களைப் பறிகொடுத்திருந்தன. குலசேகர பாண்டியரும் கோப்பெருந் தேவியும் கண் இமைக்க மறந்தனர்; மூச்சு, பேச்சு, செயல் யாவற்றையும் மறந்தனர்.

அவர்களை வணங்கி விடைபெற்றுக் கொண்டபோது, சுந்தர பாண்டியன் கூறிய சொற்கள் அரசருக்கு நினைவில் வந்தது; ''வெற்றியோடுதான் திரும்புவேன்; இல்லாவிட்டால் எனக்கும் என் வீரர்கள் அனைவருக்கும் சேர்த்து ஒரே ஒரு வீரக்கல் நட்டுவிடுங்கள்!'' பெரிய பாண்டியரின் விழிகளில் பனிப்படலம் திரையிட்டது. ஒவ்வொரு வீட்டிலிருந்தும் விடைபெற்றுக் கொண்டு புறப்படும் ஒவ்வொரு வீரனையும் இவ்வாறு கூறவைத்து விட்டானே இவன்!

மண்ணுக்கும் விண்ணுக்கும் ஒன்றாக எழும்பி நின்று நகரத்தையே சூழ்ந்து கொண்டிருந்தது புழுதிப் படலம். நால்வகைப் படைகளும் பாரதிரச் சென்றதால் அலைமேல் அலையாக எழும்பிப் பரந்த செம்மண் படலம் அது. அதனூடே ஆயிரமாயிரம் கயல்மீன்கள் துள்ளித் தாவுவதை மன்னர் கண்ணுற்றார். படையினர் தாங்கிய கொடிகளின் படபடப்பில் அந்த மீன்கள் துள்ளிக் கொண்டிருந்தன.

படையாகிய பெருவெள்ளம் மேலும் மேலும் பொங்கிய வண்ணமாகவே இருந்தது. சூலம் தாங்கியவர்கள், சுடர் மழு ஏந்தியவர்கள், கொடுவாள் பற்றியவர்கள், வில்லும் வேலும் தண்டும் கொண்டவர்கள்—இங்ஙனம் பல்வகைப் பிரிவினரும் ஒரே குறிக்கோளுடன் ஒரே திசையை நோக்கி ஒரே சிந்தனையுடன் சென்ற காட்சி மெய்சிலிர்க்கும் காட்சியாகும்.

நால்வகைப் படையினருக்கும் பின்னே அவர்களுக்குப் பணிவிடைகள் செய்வோரும், உணவு சமைத்து வழங்கு வோரும், மருத்துவ உதவிகள் செய்வோரும் செல்வது வழக்கம். ஆனால் சுந்தர பாண்டியனின் அணிவகுப்பில் ஒரு புதுமை தெரிந்தது. ஐந்தாம் அணியாகச் செல்ல வேண்டிய வர்கள் ஆறாவதாக இறுதியில் சென்றனர். அவர்களுக்கு முன்னே தனியாகச் சில ரதங்கள் சென்றன.

அந்த ரதங்களில் அறவோர், புலவர், பாணர், சிற்பியர் இங்ஙனம் பலவகைக் கலைஞர்களும் தங்கள் தங்கள் கருவிகளுடன் சென்றனர். கலைப் பெண்டிரும் பணிப் பெண்டிரும் கொண்ட ரதங்களும் அவற்றிடையே இருந்தன. அந்த அணியில் முதலாகச் சென்ற ரதத்தில் ஆதிச்ச தேவர் கயல்விழியோடும் உய்யவந்தாளோடும் காணப்பட்டார்.

கோப்பெருந்தேவிக்கு இது புதுமையான காட்சி. புலவர்களும் கலைஞர்களும் வெற்றிக்குப் பின்னரே பரிசில் பெறுவதற்காக வந்து கூடுவார்கள்.

''அரசே! இது தங்களுக்குப் புதுமையாகத் தோன்ற வில்லையா!'' என்று ரதங்களைச் சுட்டிக் காட்டினார் கோப் பெருந்தேவி. ''பாடுவோரும் ஆடுவோரும் போர்க் களங் களுக்குச் செல்வதை நான் இப்போதுதான் காணுகிறேன்!''

''புதுமைதான்!'' என்றார் பாண்டியர். ''சுந்தரபாண்டி யன் கூறிய காரணங்களைக் கேட்டேன். அப்போதுதான் இது வெற்றியை நமக்கு விரைந்து தரக்கூடிய படை என்பது புலப்பட்டது.''

''என்ன படையா?''

''ஆம், புலவர் படை; கலைஞர் படை, வீரர்களுடைய வயிற்றுப் பசிபோக்கவும் அவர்களுடைய உடல் காயங் களுக்கு மருத்துவப் பணி செய்யவும்தான் இதுவரை நாம் ஏற்பாடுகள் செய்து வந்தோம். இவர்களோ படுகளத்தில் சாகசம் புரியும் வீரர்களின் உள்ளத்துக்கு உணவு வழங்குப வர்கள். அவர்களுடைய மனத்தில் ஏற்படும் விழுப் புண்களுக்குத் தீஞ்சுவை மருந்து கொடுப்பவர்கள். மகத்தான சக்தியுள்ள இந்தப் போர்க்கருவிகளை எப்படிப் பயன்படுத்து வது என்பதைக் கண்டு கொண்டான் சுந்தரபாண்டியன்.''

சுந்தரபாண்டியனின் படை கணந்தோறும் நாழிகை தோறும் வெற்றிப் பாதையில் முன்னேறிக் கொண்டே யிருந்தது. அவனுடைய முதல் இலக்கு உறையூர்; அடுத்த இலக்கு தஞ்சை; இறுதி இலக்கு கங்கை கொண்ட சோழபுரம்.

விழுப்பரையரிடம் அவன் கூறினான்: ''சோழர்களின் பழைய தலைநகரமான பூம்புகார் இப்போது பொலிவிழந்த

சிற்றூராகி விட்டது. இல்லையேல் அதனையும் நம்முடைய இலக்கில் சேர்த்துக் கொண்டிருக்கலாம்.''

புன்முறுவல் பூத்தார் விழுப்பரையர். ''அவர்களுடைய முன்னாள் தலைநகரம், இடைநாள் தலைநகரம், இன்றையத் தலைநகரம், எதையுமே விட்டு வைக்கப் போவதில்லை போலும்!''

''இன்றையத் தலைநகரமே அவர்களது கடைசித் தலை நகரமாக இருக்கட்டும்! நமது ஒரே நகரத்தை அவர்கள் ஒன்பது முறையாவது தாக்கித் தகர்த்திருப்பார்கள் அல்லவா? சாம்ராஜ்ய வெறியின் ஆணிவேரை நாம் பூண்டோடு பறித்துத் துவைத்துவிட வேண்டும்; சாம்ராஜ்ய வெறி பிடித்தவர்களை அருகில் விட்டு வைத்திருப்பது மற்ற நாடுகளுக்கு என் றென் றும் ஆபத்தாகும். ஆகவேதான் முதல், இடை, கடை, என்று உறந்தை, தஞ்சை, கங்காபுரியை வைத்துக் கொண்டிருக்கிறோம்.''

தொலைவில் தலைநிமிர்ந்து நின்ற தாயுமானவர் குன்று உறந்தையின் இருப்பிடத்தை விழுப்பரையருக்குச் சொல்லியது. அந்தக் குன்றின் உறுதியையும் உயரத்தையும் அவர் தாம் உருவாக்கிய இளம்தலைவனின் உள்ளத்தில் கண்டு பூரித்தார்.

எல்லையில் பாசறைக் கூடாரங்கள் எழுப்பப் பெற்றன. படைத் தலைவர்களை அழைத்துக் கட்டளை பிறப்பித்தான் சுந்தரபாண்டியன்: ''பெண்டிர், சிறுவர், முதியோர் இவர்களைப் பாதுகாக்கும் படை தனியே இயங்கும். அதனிடம் அவர்களை அனுப்பிவிடுங்கள். குடிமக்களில் பணிந்து விடுவோருக்கு எவ்விதத்திலும் தீங்கு செய்யவேண்டாம்; பகைவீரர்களில் எதிர்ப்போரை வீழ்த்தி விடுங்கள்; அல்லது சிறை செய்யுங்கள்—சோழ நாட்டு வீரர்களில் எவனும் புறமுதுகிட்டு ஓடினால் அவனை அதே இடத்தில் சிரமரிந்து தள்ளுங்கள்!''

கடைசியாக அவன் கூறியதைக் கேட்டுப் பழைய தலைவர்கள் அதிர்ச்சியுற்றார்கள். மழவச் சக்கரவர்த்தி மெதுவாக எழுந்து, ''இளவரசருக்கு ஒரு வேண்டுகோள்...'' என்றார். ''புறமுதுகிட்டு ஓடுவோரைக் கொல்வது வீரமாகாது என்ற கருத்து நம்முடைய பரம்பரைக் கருத்து. அதனால்...'' என்று தயங்கினார்.

''புறமுதுகிட்டு ஓடுகிறவன் சோழ நாட்டானாக இருந்தாலும் பாண்டிய நாட்டானாக இருந்தாலும் அவனவன் நாட்டுக்குத் துரோகம் செய்தவனாவான். படைத்தலைவனின் கட்டளைப்படி சரணடைபவர்களை நாம் சிறைப்படுத்தலாம். ஆனால் தலைவன் கட்டளை இல்லாமல் உயிருக்கு அஞ்சிப் புறமுதுகுகாட்டும் கோழைகளை நாம் உயிர் சுமக்கவிடக் கூடாது. பகைவர் மட்டு மல்ல; நம்மவர் புறமுதுகிட்டால் நம்மவரே வீழ்த்திவிட வேண்டும்! காலத்துக்கேற்றபடி நாம் நமது பரம்பரைக் கருத்துக்களை மாற்றிக் கொள்ளத்தான் வேண்டும். மாற்றத்தில் நியாயம் இருக்கிறது. மாற்றிக் கொள்வோம்!''

முதுமை மிக்க தலைவர்களெல்லாம் இதைக் கேட்டு இளமையின் வீறு பெற்றார்கள்.

''இளவரசர் கூறுவது முற்றிலும் பொருத்தமானது. அவ்வாறே செய்வோம்!''

''ஆமாம்!'' என்று உரத்த குரலில் தொடர்ந்து முழங்கினான் தலைவன். ''சோழ சாம்ராஜ்யத்துக்குச் சொந்தமான ஒரு மாட மாளிகை, ஒரு கூட கோபுரம், ஓர் ஆடரங்கு, ஒரு மணிமண்டபம், ஒரு வீடு, ஒரு சுவர், ஒரு தூண் நம்முடைய படை புகும் எந்த நகரத்திலும் எஞ்சியிருக்கக் கூடாது. சுடர் மழுவால் கொளுத்தி விடுங்கள்; தண்டுகளால் தகர்த்திடுங்கள்; உலக்கைகளால் பொடிப்பொடியாக்கித் தூள் பறக்க விடுங்கள்! நீங்கள் தனி மாளிகைகளையோ தனி மனிதர்களையோ அழிக்கவில்லை. நம்மைக் காலங்காலமாக அழுத்தி நசுக்கி வந்த சாம்ராஜ்யத்தை அழித்துப் பொசுக்குகிறீர்கள்!—புறப்படுவோம்!''

உறந்தை மாநகரம் பாண்டியப் படையிடம் பட்ட பாட்டை என் எழுத்துக்களால் எழுத இயலாது. அதையும் மற்ற நிகழ்ச்சிகளையும் சேர்த்துப் பாண்டியப் புலவர் ஒருவரே பாடுகிறார்.

தீக்கொழுந்துகளுக்கிடையில் வெஞ்சினங் கொண்ட வேழத்தின் மீது உறந்தைக்குள் புகுந்து கொண்டிருந்தான்

சுந்தரபாண்டியன். திரும்பிய பக்கமெல்லாம் தீக்கொழுந்துகள், இடிபாடுகள், வீரர்களின் சடலங்கள், செங்குருதிச் சேறு...

தொலைவில் தெரிந்த பதினாறு கால் மண்டபம் ஒன்றை வெறியோடு தாக்க முற்பட்டனர் பாண்டிநாட்டு வீரர் கள். ''நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!'' என்று கூறிக் கொண்டே சென்று அவர்களைத் தடுத்தான் சுந்தர பாண்டியன்.

அந்த மண்டபத்தில் விழுந்து நெடுஞ்சாண்கிடையாக வணங்கினான். வீரர்களுக்கு ஏதும் விளங்கவில்லை. வியப்பும் திகைப்புமாக அவன் செயலைக் கண்டு அஞ்சி நின்றனர்.

# 7. புலமை உணர்ந்த அரசு



**கா**விரிக் கரையை அடுத்தாற்போல் தனியே நின்று கொண்டிருந்தது அந்தப் பதினாறு கால் மண்டபம். பழங்காலத்து உறுதியான கல்தூண்கள் நான்கு புறங்களிலும் காணப்பட்டன. சுந்தரபாண்டியன் பயபக்தியுடன் அங்கே விழுந்து வணங்கியதைக் கண்ட வீரர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். 'இது கோயிலுமல்ல; இங்கு மூர்த்திகளுமில்லை; எதற்காக இளவரசர் இங்கு வீழ்ந்து வணங்குகிறார்!' என்று திகைத்தனர்.

''நல்லவேளை, தக்கசமயத்தில் நான் இங்கு வந்து சேர்ந்தேன்'' என்று அங்கு நின்ற படைத் தலைவனிடம் கூறினான் பாண்டியன். ''இல்லாவிட்டால் இந்த மண்டபத்தையும் இடித்து நொறுக்கிக் காவிரியில் தள்ளியிருப்பீர்கள்!'' என்றான்.

''என்ன மண்டபம் இது?'' என்று கேட்டான் படைத்தலைவன்.

''இது புலவர் மண்டபம். இதற்கு எந்த இடையூறும் நேராமல் பார்த்துக்கொள். நம்முடைய காவலர்கள் சிலரை இங்கே நிறுத்தி வை!''

சுந்தர பாண்டியன் நகரத்துக்குள் புகுந்து போர் நிகழ்ச்சிகளைக் கண்காணிக்கச் சென்றுவிட்டான். நகரத்தின் எல்லாப் பகுதிகளிலும் மும்முரமாகப் போர் நடந்து கொண்டிருந்தது. காலங்காலமாகச் சோழர்களின் முதல் தலைநகரமாக, இரண்டாவது தலைநகரமாக, மூன்றாம் தலைநகரமாக மாறி மாறித் திகழ்ந்த பெருநகரம் இப்போது ஒரே தீக்காடாகக் காட்சியளித்தது. சோழ மாளிகைகளில் ஒன்றுகூட விட்டு வைக்கப்படவில்லை.

உறந்தைப் போர் ஒருவாறாக முடிந்தது. திரும்பிய திசைகளிலெல்லாம் மீனக்கொடிகள் பறந்தன. பாண்டிய அதிகாரிகள் பொறுப்பில் நகரத்தின் ஆட்சியைக் கொடுத்தான் பாண்டியன்.

மாலை நேரம் வந்தது. விழுப்பரையரும் மற்றும் சில புலவர்களும் புடைசூழக் காவிரிக் கரை மண்டபத்துக்கு வந்து சேர்ந்தான். தீப்பட்ட நகரம் அருகே இருந்தாலும் அங்கே பொன்னிவள நதியின் குளுமை தோய்ந்த தென்றல் வீசியது. சுந்தரபாண்டியனும் புலவர்களும் அங்கே அமர்ந்து எதிர்க் கரையில் மரக்கூட்டத்துக்கு அப்பால் இரு திசைகளிலும் நிமிர்ந்து நின்ற திருவானைக்கா கோபுரத்தையும் திருவரங்கன் கோபுரத்தையும் உற்றுப் பார்த்தனர். இனம்புரியாத பேரமைதி அவர்களிடம் குடிபுகுந்தது.

''இந்த மண்டபத்தின் அருமை அறியாது இதையும் நம் வீரர்கள் இடித்துத் தகர்க்கத் தொடங்கிவிட்டார்கள்...!''

விழுப்பரையர் அந்த மண்டபத்தின் வரலாற்றை மற்ற புலவர்களுக்குக் கூறலானார்:

''உருத்திரங் கண்ணனார் பாடிய பட்டினப்பாலை இந்த மண்டபத்தில்தான் சோழன் கரிகால் பெருவளத்தான் முன்பு அரங்கேறியது. இங்கிருந்துதான் அவர் பாடினார். அந்தப் பாடலுக்குப் பரிசிலாகப் பதினாறு நூறாயிரம் பொன்னையும் இந்தப் பதினாறு தூண் மண்டபத்தையுமே வழங்கி விட்டார்

கரிகாலன். கண்ணனாரின் பாலையால் அன்றிருந்த பூம்புகாரின் சிறப்பும் சோழரின் ஆட்சிச்சிறப்பும் காணுகின்றோம். மன்னனின் சிறப்புக்கு இந்த மண்டபமே சான்று கூறி நிற்கிறது.''

''கரிகால் வளவனும் சோழன்; அவனையும் நகரத்தையும் பாடிய கண்ணனாரும் சோழ நாட்டுப் புலவர். அப்படி இருக்கும்போது ஏன் இந்த மண்டபத்தையும் இடிக்கக் கூடாது? இந்த எண்ணம் யாருக்கேனும் எழக்கூடும்!'' என்று கூறிப் பலமாக நகைத்தான் பாண்டியன்.

காவலுக்கு நின்ற வீரர் தலைவனுக்கு அப்படித்தான் தோன்றியது.

''பைந்தமிழும் அதன் அறிவுச் செல்வமும் பண்புச் செல்வமும் ஒரு நாட்டார் மட்டிலும் போற்றக் கூடியவையல்ல. பாடல் பெற்ற அந்தச் சோழனை, அவனுடைய வள்ளல் தன்மைக்காக நான் வணங்குகிறேன். அறிவும் பண்பும் வழங்குவோரின் ஆற்றலை உணர்ந்த புரவலன் அவன். அவனது நெறியை நிலைநாட்டி நிற்கும் மண்டபம் இது. ஒரு நாட்டிலுள்ள புலமைச் செல்வத்தைச் சுட்டிக் காட்டும் தூண்கள் இவை. மன்னனுக்கும் மக்களுக்கும் வழிகாட்டும் புலவர் பெருமக்களாகிய உங்கள் புலமைக்கு நான் இந்த இடத்திலிருந்து சிரம் தாழ்த்துகிறேன். நாங்கள் மறைந்து விடுவோம். உங்களில் ஆற்றல் மிக்கோர் நிலைத்து நிற்பீர்கள்!'' —சுந்தரபாண்டியனின் நாத்தழுதழுத்தது. அவனுடைய விழிகளில் பொன்னி மின்னியது.

கற்பனைமிக்க புலவர் ஒருவர் உணர்ச்சியால் உந்தப் பட்டு எழுந்தார். ''இளவரசே! தங்களது நெறியும் இந்த மண்டபமும் சேர்ந்து எனக்கொரு கற்பனையைத் தந்தன. ஒரே ஒரு பாடல் பாட அனுமதி தாருங்கள்.''

''பாடுங்கள்!'' என்று உற்சாகமாகக் கூவினார் விழுப்பரையர். புலவரின் குரல் கணீரென்று எழுந்தது.

**வெறியார் தளவத் தொடைச்**
**செயமாறன் வெகுண்ட தொன்றும்**
**அறியாத செம்பியன் காவிரி**
**நாட்டில் அரமியத்துப்**

**பறியாத தூணில்லை! கண்ணன்**
**செய் பட்டினப்பாலைக் கன்று**
**நெறியால் விடுந்தூண் பதினாறுமே**
**யங்கு நின்றனவே!***

''அற்புதம்; அற்புதம்!'' என்று பாராட்டினார் விழுப்பரையர்.

பாடலில் மெய்மறந்து திளைத்த பாண்டியனின் பரவசத்துக்கோர் எல்லையில்லை. ''புலவர் பெருமக்களே! நான்கு அடிப் பாடலுக்குள் ஒரு பெரும் வரலாற்றையே தொகுத்து விட்டீர்கள். இந்தப் போரும் அதன் வெற்றியும் பாடலில் வந்துவிட்டன. இதைவிட அற்புதம் இங்கே இருக்கிறது கண்டீர்களா? 'காவிரி நாட்டின் அரண்மனைத் தூண்களை ஒன்று விடாமல் பறித்த பாண்டியன், பட்டினப் பாலைக்கென்று நெறியால் விடப்பட்ட தூண் பதினாறு மட்டும் விட்டுவிட்டான்' என்று பாடியிருக்கிறீர்களே! எனக்கு இந்த ஒரு பாட்டுப் போதும். ஒன்றே போதும்!''

தன் கழுத்தை அலங்கரித்திருந்த பொன்னாபரணத்தைக் கழற்றித் தன் கரத்தாலேயே புலவருக்கு அணிவித்தான். ''இந்தப் பாடலுக்கு இது போதாது. என் மகிழ்ச்சிப் பெருக்கை வெளியிட வேண்டுமல்லவா? அதற்கு இந்தப் பொன்னாபரணம்!''

''அரசே! குளிர் நீர் பொங்கிப் பாயும் நாட்டில் செந்நெல் விளையும். உணர்ந்து போற்றும் அரசுள்ள நாட்டில் இலக்கிய வளம் பெருகும். இலக்கியச் செல்வம் எந்த நாட்டில் பெருகு கிறதோ அங்கு நன்மக்கள் பலப் பலர் தோன்றுவார்கள். அரசு எவ்வழி அவ்வழி மக்கள். நான் இப்போதே தங்களது எதிர் கால ஆட்சிச் சிறப்பையும் குடிமக்கள் மேம்பாட்டையும் காணுகின்றேன். இந்தப் பொன்னும் மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் ஆட்சிச் சிறப்பைக் காட்டுவனவல்ல. தங்கள் உள்ளம் புலமையின் உயர்வை உணரும் உள்ளம். அதுவே எங்கள் பெருஞ்செல்வம்!'' புலவர் உணர்ச்சி பொங்கக் கூறிவிட்டு அமர்ந்தார்.

---

*திருச்சிராப்பள்ளியைச் சேர்ந்த மண்ணச்சநல்லூரை அடுத்துள்ளது திருவெள்ளாறை என்ற சிற்றூர். அங்குள்ள சுந்தரபாண்டியன் கல்வெட்டில் காணப்படும் பாடல் இது.

நாழிகை ஆயிற்று, பொன்னி நல்லாள் இருமருங்கும் தொட்டுத் தழுவிக்கொண்டே சலசலத்து ஓடினாள். சோழ இளவரசன் இராஜராஜன் ஆட்சிப் பொறுப்பேற்றவுடனேயே அந்த மண்டபம் சோம்பல் மிக்கோர் பகலுறக்கம் கொள்ளும் மண்டபமாக மாறிவிட்டதை அவள் கண்டு வருந்தியவள். இப்போது அதைக் காக்க ஒரு பண்பாளன் வந்துவிட்டான் என்ற பூரிப்பு அவளுக்கு.

சுந்தர பாண்டியன் அங்கு நின்ற வீரர் தலைவனுக்குக் கட்டளையிட்டான்.

''இது இனிமேல் உறந்தைப் புலவர்களின் பட்டி மண்டபமாக விளங்க வேண்டும். புதிய படைப்புகளின் அரங்கேற்றம் இங்கு நிகழட்டும். கற்றோர் இங்கு கூடி மகிழ்வதற்கான ஏற்பாடுகளை யெல்லாம் அதிகாரிகளைக் கொண்டு கவனிக்கச் செய்துவிடு!''

''சித்தம் இளவரசே!''

அன்று இரவில் பாசறைகளைச் சுற்றி வந்தான் தலைவன். போரில் விழுப்புண் பட்டுத் துடித்துக் கொண்டிருந்த வீரர்களுக்கு மருத்துவ சிகிச்சைகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. அவர்களுக்கு ஆறுதல் கூறினான். செயற்கரிய வீரசாகசங்கள் புரிந்தவர்களின் பெயர்களைக் குறித்துக் கொள்ளும்படி கட்டளையிட்டான்.

அவனுடைய கூடாரத்துக்கு அவன் திரும்ப நெடு நேரமாகியது. அடுத்திருந்த கயல்விழியின் கூடாரத்தில் அப்போது விளக்கு எரிந்தது. ஆதிச்சதேவர், கயல்விழி, உய்யவந்தாள் ஆகியோர் அவனுக்காகக் காத்திருந்தனர்.

உடைவாளை எடுத்து அருகில் போட்டுவிட்டு, கவசத்தைக் களைந்து அருகில் வீசினான் சுந்தரபாண்டியன்.

''ஆ!'' என்ற கூக்குரல் பின்னாலிருந்து எழுந்தது. திரும்பிப் பார்த்தான். அதற்குள் கயல்விழி ஓடிவந்து அவன் தோளை உற்றுப் பார்த்தாள். தோளின் வெட்டுக் காயத்திலிருந்து செந்நீர் கசிந்து கொண்டிருந்தது. அதை அவள் சுட்டிக் காட்டினாள்.

''இப்படி ஒரு காயம் பட்டிருப்பது எனக்குத் தெரியவே யில்லையே!''

"சிறு காயமா இது?" ஆதிச்சதேவரிடம் கூறி மருத்துவரை அழைத்து வருவதற்காக அனுப்பினாள்.

அவனுக்கு எப்போது எங்கே அந்தக் காயம் பட்டது என்ற நினைவே இல்லை. அவன் தனக்குள் நகைத்துக் கொண்டே கயல்விழியிடம் பேசினான். "இந்தக் காயம் இருக்கட்டும். முதலில் உன்னிடம் ஒரு செய்தியைக் கேட்டு நான் தெரிந்து கொள்ள வேண்டும்."

"என்ன?"

"வைகைக் கரையில் முதன்முதலில் உன்னிடம் சபதம் செய்து கொடுத்ததில் இப்போது ஒரு பகுதி நிறைவேறி விட்டது. மதுரையை அவர்கள் அழித்தார்கள். இப்போது உறந்தை முடிந்திருக்கிறது. இனி தஞ்சையும் கங்காபுரியும் இருக்கின்றன. கங்காபுரியின் வெற்றி விழாவின் போது நீ விரும்பும் பரிசை நான் உனக்கு அளிக்க விரும்புகிறேன். என்ன பரிசு வேண்டும்?"

கயல்விழி அவனை உற்றுப் பார்த்தவாறே நின்றாள்.

"விரைவில் கூறிவிடு. மருத்துவரோடு உன் தந்தை திரும்புவதற்குள் கூறினால் நான் மகிழ்ச்சியடைவேன்."

கயல்விழி நிதானமாகக் கூறினாள். தெளிவாகக் கூறினாள். நெடுநாள் மனத்தில் இதைத் திட்டமிட்டு வைத்திருந்தவள் போல் கூறினாள். சுந்தரபாண்டியனுக்கு அவள் விருப்பத்தைக் கேட்டவுடன் மெய்சிலிர்த்தது.

# 8. புலி ஆணைபோய் அகல...



**மதுரையும் அரசுங்கொண்டு**
**ஜயஸ்தம்பம் நட்டு**
**மதுரையும் அரசும் நாடும்**
**பாண்டியற் களித்தருளி**
**மெய்ம் மலர்ந்த வீரக்கொடியுடன்**
**தியாகக் கொடி எடுத்த**
**செம்பொருள் வீர சிங்காதனத்துக்**
**குலோத்துங்க சோழதேவர்...**

- மூன்றாம் குலோத்துங்கர் மெய்க்கீர்த்தி

ஊழிக்காலத்துக் கடல் அலைகள் போன்று சுந்தர பாண்டியனின் படைகள் கங்காபுரியை நோக்கிச் சீறிவரும் செய்தி சோழ சாம்ராஜ்யத்துக் கடைசிப் பெருந்தலைவரான குலோத்துங்க சோழருக்கு அவருடைய கடைசிக் காலத்தில் எட்டியது. முளையிலேயே கிள்ளி எறிந்துவிட்டதாக எவனை நினைத்தாரோ, அவனே சீறும்புலியென, சாடும் மின்னலென, கோடை இடியென குமுறிக்கொண்டு வருவதை அறிந்தார்.

உறந்தை நகரம் வீழ்ந்தவுடனேயே அந்தச் செய்தி யோடு புரவிகளில் பறந்தோடி வந்தனர் வீரர்கள். அவர்கள் கங்காபுரிக்குள் நுழைவதற்கு முன்பாகவே தஞ்சைப் பெருநகரத்தின் வீழ்ச்சியும் மலைநகரத்துக்கு எட்டி விட்டது.

செய்தியைக் கேட்டவுடனேயே கங்கைகொண்ட சோழபுரம் அல்லோல கல்லோலப்பட்டு விட்டது. குடி மக்கள் தங்கள் வீடுவாசல்களையும் உடைமைகளையும் அப்படி அப்படியே விட்டுவிட்டு வெளியேறி ஓடினார்கள். காடுகளில் ஒளிந்தவர்கள் பலர்; தோப்புத் துரவுகளில் அலைந்து திரிந்தவர்கள் பலர்; வயல் வரப்புகளிடையிலும் புதர்களினூடேயும் பதுங்கியவர்கள் பலப் பலர்; மக்களிடம் நம்பிக்கையூட்டி அமைதியைக் காக்கும் ஆண்மை இராஜராஜனிடம் இல்லை. படை வீரர்களிடம் அச்சம் புகத் தொடங்கியது.

பல தினங்களாகத் தந்தையைச் சென்று காணாதிருந்த இராஜராஜன் உச்சி முதல் உள்ளங்கால்வரையில் நடுநடுங்க அவரது கட்டிலருகில் போய் நின்றான். மாதக் கணக்காக நோய்ப் படுக்கையில் கிடந்தவர், எழுந்து நடமாடவும் சக்தியின்றி இருந்தவர், அப்போது வீராவேசம் கொண்டவர் போல் கட்டிலில் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

பசித்திருக்கும் புலி பசுங்கன்றைப் பார்க்கும் பார்வை இராஜராஜன் மேல் பதிந்தது. சுட்டு எரித்து விடுபவர்போல் அவன் அருகில் வரும்வரையில் பார்த்துக்கொண்டிருந்தார். சுற்றியிருந்த பணியாட்கள் ஒவ்வொருவராக அச்சத்தோடு வெளியேறினார்கள்.

எங்கிருந்துதான் அவருக்கு உடல் வலிமை வந்ததோ! திடீரென்று கட்டிலிலிருந்து தாவித் தமது குமாரன் மீது பாய்ந்தார். பளீர் பளீரென்று தமது கை ஓயுமட்டும் அவனது கன்னத்திலும் முகத்திலும் அறைந்தார். அப்படியும் அவரது ஆத்திரம் தீரவில்லை.

''அதிகாரத்துக்கு ஆசைப்பட்டாயே. அதைக் கட்டிக் காக்க முடிந்ததா உன்னால்? விஜயாலய சோழன் ஏற்படுத்திய சாம்ராஜ்யமடா இது! இராஜராஜ சோழனின் பெயரைத் தாங்கிக் கொண்டிருக்கிறாய். அவனுடைய தகுதியில் நூற்றில் ஒரு பங்கு உனக்கு வேண்டாமா? கங்கையும், கடாரமும், ஈழமும், பழந்தீவு பன்னீராயிரமும் புலிக் கொடி நாட்டிய வேங்கையின் மைந்தன் இராஜேந்திர சோழனின் பரம்பரையில் வந்தவனடா நீ! வங்கத்தை அவன் வென்று வந்ததின் வெற்றிச் சின்னமடா இந்தக் கங்காபுரி!''

பிறகு அவர் தமக்குத்தாமே வெறிகொண்டவர்போல் தலையில் அடித்துக் கொண்டார். தேம்பித் தேம்பி அழுதார். புலம்பினார்.

''எல்லாமே என்னுடைய குற்றம்! என் குற்றம்!'' என்று பழியைத் தம் மீதே சுமத்திக் கொண்டார். மேலும் அவர் குமுறினார். 'ஐந்திலேயே வளைத்து வளர்க்கவேண்டிய உன்னைச் செல்லம் கொடுத்து வளர்த்துவிட்டேன். எல்லாப் பொறுப்புக்களையும் கடமைகளையும் நானே சுமந்து கொண்டு உன்னை உன் போக்கில் விட்டுவிட்டேன். ராமனுடைய காவியத்தை நான் இங்கு பாடச் செய்தேனே தந்தை சொல்லுக்காக அவன் காட்டுக்குப் போனான். நீயோ தந்தையிடமிருந்து நாடாளக் கற்றுக் கொள்ளாமல் காடாளப் போகிறாய்! ஆட்சி நெறி அறியாதவன், மக்கள் வாழ்க்கை அறியாதவன். படைகளை அடக்கி ஆளத் தெரியாதவன் அதிகாரிகளிடம் ஆணையிட்டு வேலைவாங்கிப் பழகாதவன்... பாசத்தால் நான் தவறு செய்துவிட்டேன்!''

இராஜராஜனுக்கு எதுவுமே பேசத் தோன்றவில்லை. ஏதாவது ஆலோசனைகள் கிடைக்கும் என்ற துடிப்பில் அங்கு வந்திருந்தான் அவன். அவரோ ஆத்திரப்பட்டு விட்டார்.

''படைத் தலைவர்கள் என்ன கூறுகிறார்கள்?'' என்று கேட்டார்.

''அவர்களுக்கும் நம்பிக்கையில்லை; எதிர்த்து நிற்பதற்கு அஞ்சுகிறார்கள்!''

''சே! இதைக் கூற நாணமில்லை உனக்கு?'' என்று வெகுண்டார் குலோத்துங்கர்; ''தலைவன் எப்படியோ அப்படித்தானே படைத் தலைவர்கள்? படைத் தலைவர்கள் எப்படியோ அப்படித்தானே படை வீரர்கள்?''

''இரண்டு வழிகள்தான் புலப்படுகின்றன...'' என்று இழுத்தான் இராஜராஜன்; ''ஒன்று, சரண் அடைந்துவிட வேண்டும்; அல்லது எதிர்த்து அழிய வேண்டும்.''

காறி உமிழ்ந்தார் குலோத்துங்க சோழர். மூன்றாவது வழியொன்று அவர் சிந்தனையில் மின்னலெனப் பளிச்சிட்டது. திடீரென்று அவர் முகத்தில் ஒளி பரவியது.

''எழுது, திருமந்திர ஓலையை!'' என்று கர்ஜித்தார். ''நான் கூறுகிறேன், எழுது!''

எழுத்தாணியும் ஏடும் எடுத்துக்கொண்டு அமர்ந்தான் இராஜராஜன். அவர் கூறத் தொடங்கினார்—

''சோழர் குலப் பாதுகாவலரான கோசல நாட்டுச் சக்கரவர்த்திகள் வல்லாள தேவருக்கும் அவருடைய திருக் குமாரரும் பாண்டிய யானைக்குச் சிங்கமுமான வீராதிவீரர் வீரநரசிம்மருக்கும் சோழ நாட்டுச் சக்கரவர்த்தி குலோத்துங்க சோழர் எழுதிக் கொள்வது. இப்போது பாண்டிய நாட்டு இளவரசன் சுந்தரபாண்டியன் உறையூரையும் தஞ்சையையும் தீயிட்டு அழித்துவிட்டு கங்காபுரியை நெருங்கிக் கொண்டிருக் கிறான். வீரநரசிம்மர் இங்கு விஜயம் செய்தபோது பாண்டிய நாட்டுப் புலவனாக வந்திருந்தவனே சுந்தர பாண்டியன் என்பது அப்போதே தெரியாமல் போய் விட்டது. இந்த ஓலை அங்கு கிடைப்பதற்குள் கங்காபுரியும் வீழ்ந்துவிடக்கூடும்— ஆனால் இந்த வீழ்ச்சியைத் தற்காலத் தோல்வியாகவே நான் கருதுகிறேன். சோழ சாம்ராஜ்யத்தைப் பாதுகாக்க வேண் டியது அதன் பாதுகாவலரான வல்லாள தேவர் கடமை. பாண்டிய யானைகள் இரண்டையும் அழித்து ஒழித்து

இராஜராஜனுக்குத் துணை நிற்க வேண்டியது வீரநரசிம்மர் பொறுப்பு. ஓலை கண்டவுடன் வீரநரசிம்மர் தலைமையில் பெரும்படை இங்கு வந்து சேருமென்று எதிர்பார்க்கிறேன். வாழ்க, கோசல சாம்ராஜ்யம்!— வாழ்க சோழ சாம்ராஜ்யம்!—குலோத்துங்க சோழர் கூற இராஜராஜன் எழுதியது.''

ஓலையை முதலில் காஞ்சிக்கும், பிறகு அங்கிருந்து கோசல அதிகாரியின் துணையோடு துவார சமுத்திரத்துக்கும் கொண்டு போய்ச் சேர்க்க ஏற்பாடு செய்தார் குலோத்துங்கர்.

செய்தியைக் கேட்ட விநாடியிலிருந்தே அவர் மீண்டும் எல்லா அதிகாரங்களையும் குமாரனிடமிருந்து பறித்து விட்டார். அவருடைய நோய் எப்படி மறைந்து ஒழிந்தது என்பது அவருக்கே வியப்பாக இருந்தது. இதயத்தில் புது ரத்தம் பாய்வது போன்ற ஓர் உணர்ச்சி.

''இந்தச் சாம்ராஜ்யத்தை என் தலையில் உள்ள சிந்தனையாலும் இருதயத்தில் உள்ள உணர்வாலும் நான் கட்டிக் காத்தவன். என் தலை உள்ள வரையிலும் நானே இதை ஆளப் போகிறேன்!'' என்று அவர் தம் குமாரனிடமே அறை கூவல் விட்டார்.

இராஜராஜனுக்கும் இப்போது அந்த உதவிதான் தேவையாக இருந்தது. இன்ப வாழ்வை அனுபவிப்பதற்கு மட்டிலுமே அரசுரிமை வேண்டுமெனப் போராடியவன் அவன். இப்போதோ நாடே பயங்கரமான சோதனைக் குள்ளாகித் தவித்தது. 'நாடாள்வது என்றால் இவ்வளவு துன்பம் உண்டா?' என்று முதன் முதலாக நடுங்கினான் அவன்.

''முரசறையச் சொல்!'' என்று முழங்கினார் சக்கரவர்த்தி. ''நான் நகரத்துக்குள் வலம் வந்துவிட்டுப் போர்ப்படைகளின் அணிகளைப் பார்வையிட வேண்டும்! முன்னதாகச் செய்தி அறிவித்துவிட்டு என் யானையை அலங்கரித்து நிறுத்தச் சொல்!''

இராஜராஜன் ஆணையை நிறைவேற்றுவதற்காக வெளியில் சென்றான். கைகளைத் தட்டி அரண்மனைப் பணியாட்களை அழைத்தார். அவருடைய தோற்றத்தைக் காண்பதற்கே பயங்கரமாக இருந்தது அவர்களுக்கு.

''என்னுடைய ஆடை, ஆபரணங்கள், முடி, உடைவாள் எல்லாவற்றையும் எடுத்து வாருங்கள். நொடிப் பொழுதில் நான் சித்தமாகி நகரத்துக்குள் கிளம்ப வேண்டும். தாமதம் வேண்டாம்!''

சக்கரவர்த்திகளுக்குச் சித்தப் பிரமை பிடித்துவிட்டதோ என்றுகூட ஒரு பணியாள் நினைத்தான். என்றாலும், எல்லாக் கட்டளைகளுமே மளமளவென்று நிறைவேற்றப்பட்டன.

குலோத்துங்கரின் யானை அவரைக் கண்டவுடனேயே ஆனந்தக் கண்ணீர்விட்டுப் பிளிறியது. அதற்கு இருந்த பாசமும் நன்றியும்கூடத் தமது மைந்தனுக்கு இல்லையே என்று அவரால் நினைக்காமல் இருக்க முடியவில்லை. வழக்கம்போல் யானை தனது முழங்காலை மடித்துக் காட்டியது அவரிடம். வேங்கையென அதன்மீது பாய்ந்து ஏறும் வழக்கமுள்ளவர் அவர்.

அவர் தயங்கி நின்றார். யானையின் கண்ணீர் மிகுதியானது. துதிக்கையால் அவரைத் தூக்கி மத்தகத்தில் வைத்துக் கொள்ள அதற்குத் தெரியாமல் இல்லை. அது தமக்கு இழுக்காகும் என்று அவர் கருதுவாரே!

மடித்த கால் மடித்தபடி நின்றது அது. அருகில் நின்ற வீரர் தலைவன் பக்கம் திரும்பினார். அவன் வந்து குனிந்து கொண்டு தரையில் அமர்ந்தான். முதலில் தம் வலது காலை அவன் தோளில் வைத்தார். அடுத்தாற்போல் யானையின் செவியைப் பற்றிய வண்ணம் இடது பாதத்தை அவன் தலையில் வைத்தார். மெதுவாக அவன் எழுந்து நின்று அவர் ஏறிக் கொள்வதற்குத் துணை செய்தான்.

குலோத்துங்கரின் கரங்கள் நடுங்கின; அவர் கால்கள் நடுங்கின. அவருடைய கண்கள் இருண்டன. தட்டுத்தடுமாறி அம்பாரியின் மீது எப்படியோ போய் உட்கார்ந்தார் அவர். மேலே வெண்கொற்றக் குடையின் நிழல் இருந்தது. கவரி வீசும் பெண் ''ஓ!'' என்று திடுக்கிட்டுக் கூவினாள்.

குலோத்துங்க சோழரின் தலை ஒருபுறமாகச் சாய்ந்து விட்டது. எந்தத் தலைக்குள்ளே அவர் சாம்ராஜ்யத்தை வைத்துப் போற்றினாரோ, அது சரிந்து விட்டது. எந்த

இதயத்தில் அவர் அதைப் பேணி வளர்த்தாரோ அதன் துடிப்பு நின்று விட்டது. வீர வேங்கை வீர சுவர்க்கம் புகுந்துவிட்டார். போர்க் களத்தில் வேல்முனை பாய்ந்து விட்டதுபோல் பட்டத்து யானை பயங்கரமாகப் பிளிறியது.

# 9. கயல் ஆணை கைவளர



பொன்னி சூழ் நாட்டில்
புலி ஆணை போய் அகலக்
கன்னி சூழ் நாட்டில்
கயல் ஆணை கைவளர
வெஞ்சின வீவுளியும்
வேழமும் பரப்பித்
தஞ்சையும் உறந்தையும்
செந்தழல் கொளுத்திக்
கூடமும் மாமதிலும்
கோபுரமும் ஆடரங்கும்
மாடமும் மாளிகையும்
மண்டபமும் பல இடித்துச்
செம்பியனைச் சினமிரியப்
பொருது சுரம் புக ஓட்டிப்
பைம்பொன் முடிபறித்துப்
பாணருக்குக் கொடுத்தருளி...

-சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தி

குலோத்துங்க சோழரின் வீரமரணம் இராஜராஜனிடம் கூட வீரத்தை ஊட்டிவிட்டது. கோசல சாம்ராஜ்யத்துப் பெரும் படைகளுடன் வீரநரசிம்மன் வந்து விடுவார் என்ற நம்பிக்கையை அவன் படைத் தலைவர்களிடம் பரப்பினான். மூன்று நூற்றாண்டுகளுக்கு மேலாகத் தோல்வியே கண்டறியாத சோழப் பெரும் படைக்கு ஊக்கம் பிறந்துவிட்டது. தலைநகரத்தின் தற்காப்புக்காகக் கடைசி வரையில் போராடுவது என்ற முடிவுக்கு வந்து விட்டனர் வீரர்கள்.

எப்படியாவது கங்காபுரியைக் காத்துவிட்டால், பிறகு வீரநரசிம்மனும் கோசலப் படைகளும் வந்த பின்னர் சாம்ராஜ்யத்தையே என்றும்போல் நிலைநாட்டி விடலாம்.

கங்காபுரியை முதன்முதலில் உருவாக்கிய கங்கை கொண்ட சோழர் அதைப் பாதுகாப்புமிக்க கட்டுக்காவலுடன் தான் அமைத்திருந்தார். புறமதிலை அடுத்த அகழிபோல் சோழ கங்கப் பேரேரி நீர் நிறைந்து நகரத்தின் ஒரு பாதியைக் காத்து நின்றது. புறமதிலுக்குள்ளே பயங்கரமான கருவேலங் காடு. முட்புதர் நிறைந்த காட்டு அரண் அது.

மறுபாதியைக் காப்பதில்தான் வீரர்கள் கண்ணும் கருத்துமாக இருந்தனர். நகர வாயில்களை மூடிவிட்டு நீண்ட நாள் முற்றுகையைத் தாங்கும் வசதிகளைச் செய்து கொண்டு கோசல நாட்டின் படைகள் வரும் வரையில் உள்ளிருந்தே போராடுவது என்பது சோழ நாட்டாரின் திட்டம்.

நகர வாயிலுக்கு முன்பாகத் தொலை தூரத்தில் சுந்தர பாண்டியனின் பாசறைகள் தெரிந்தன. அங்குதான் அவனும் இருக்க வேண்டும் என்று நம்பினான் இராஜராஜன்.

பின்புறம் சோழ கங்கத்தை அடுத்திருந்த கிராமத்து மக்கள் முன்னமேயே அதைத் துறந்துவிட்டு ஓடி ஒளிந்தார்கள். அந்தக் கிராமத்தில் வந்து பாதிப் படையினரோடு குடிபுகுந்தான் சுந்தரபாண்டியன்.

பொழுது புலர்ந்தவுடன் படை நடத்திச் செல்லுவது என்று திட்டம் வகுத்திருந்ததால், கிழக்கு வெளுப்பதற்கு முன்பே அவன் தன்னைச் சித்தப்படுத்திக் கொண்டிருந்தான். கயல்விழியும் உய்யவந்தாளும் அவனுடைய அந்தரங்கப் பணிப்பெண்களாக மாறி அவனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து கொண்டிருந்தனர்.

''கயல்விழி! உன்னுடைய வேண்டுகோள் எனக்கு விசித்திரமாகத் தோன்றுகிறது. என்றாலும் அதை நான் பெருமையுடன் நிறைவேற்றி வைக்கிறேன்'' என்றான்.

''உறந்தைப் பாசறையில் நான் கேட்டதைச் சொல்கிறீர்களா?''

''ஆமாம்; சோழமாதேவியின் ஆசனத்தில் நீ அமர்ந்திருக்க, இராஜராஜனின் பட்டத்தரசி உனக்குப் பணி விடைகள் செய்ய வேண்டுமென்றாய். அவள் உனக்குப் பணி விடைகள் செய்வதை இராஜராஜன் அருகில் இருந்து பார்க்கவும் வேண்டும் என்றாய். பாவம், அவளிடம் உனக்கு என்ன வஞ்சம்?''

''அவளை நான் கண்டதுமில்லை. அவளிடம் எனக்கு எவ்விதமான வஞ்சமுமில்லை'' என்றாள் கயல்விழி.

''தங்களை விட அவளுடைய நிலைக்காக நான் மிகவும் இரங்குகிறேன்.''

''பிறகு?''

''பெண்களின் விருப்பு வெறுப்புகளும் இன்ப துன்பங் களும் தங்களால் புரிந்து கொள்ள முடியாதவைகளாக இருக்கலாம். ஏனோ, அப்படி எனக்கோர் ஆசை தோன்றியது. பாண்டிய நாட்டுப் பெண் குலத்துக்குத் தீங்கிழைத்தவனல் லவா அவன்? அதை அவனுக்கு உணர்த்த வேண்டாமா?''

''இது என்ன வஞ்சமோ?'' என்று தனக்குள் கூறிக் கொண்டு, சரேலென்று வெளியில் வந்தான் சுந்தர பாண்டியன்.

பொழுது புலர்ந்தபோது சோழ கங்கத்தில் பாதி நீர்கூட இல்லை! இரவோடு இரவாக அதன் கரை ஒன்றைத் தகர்த்து விட்டுவிட்டது பாண்டியப் படை. வேறொரு புறம் மதிலுக் குள்ளும் வழிசெய்து தண்ணீரை நகரத்துக்குள் புக விட்டு விட்டது. மதிலைத் தகர்க்கும் வேலையில் ஒரு பாதியைச் சோழ கங்கப் பெருவெள்ளமே நிறைவேற்றிக் கொண்டிருந்த தால் அதை அடுத்துப் படைவெள்ளத்தோடு நகரத்துக்குள் பாய்ந்து விட்டான் சுந்தரபாண்டியன்.

கருவேலங்காட்டை அழித்துப் பாதைகள் வகுத்துக் கொடுத்தனர் படைப் பகுதியினரான காடு வெட்டிகள். பாய்ந்தன, பாய்ந்தன படைகள்!

மதுராந்தகம் செய்வதையே தங்கள் குலத்தொழிலாகக் கொண்டிருந்தவர்களின் தலைநகரம், தங்கள் குலத்துதித்த ஆண்களுக்கு மதுராந்தகன் என்றும், பெண்களுக்கு மதுராந்தகி

என்றும் பெயரிட்டவர்களின் தலைநகரம், தங்களது சிற்றூர்களுக்கு மதுராந்தகம் என்று பெயரிட்ட வர்களின் தலை நகரம், அந்த மதுரையில் பிறந்து வளர்ந்த ஒருவனுடைய சிந்தனைக் கூர்மை கொண்ட வாள் முனையால் படாதபாடு படத் தொடங்கிவிட்டது.

கங்காபுரியின் தரை நிலம் பாண்டி நாட்டு யானைப் படைகளால் அதிர்ச்சி காண, அதன் மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும் தாமே சரிந்து விழுந்தன. சோழ கங்கப் பெருவெள்ளம் வேறு பல திசைகளிலிருந்தும் நகரத்துக்குள் அலை மோதிக்கொண்டு வந்தது.

இடிந்தன மதில்கள்; எரிந்தன மண்டபங்கள்; எழுந்தது புகை மூட்டம். கடலும் கடலும் புயல்பட்டுச் சாடுவது போல் சோழப் படையும் பாண்டியப் படையும் பொருதிக் கொண்டன. கங்காபுரியின் பிரளயத் தலைவனாகவே மாறிப் போனான் சுந்தரபாண்டியன்.

'உலகிலுள்ள மலைகளெல்லாம் யானைகளாகிப் போர்க் களத்துக்கு வந்துவிட்டனவோ! புயற் காற்றனைத்தும் புரவிகளாக உருக்கொண்டு விட்டனவோ! வானத்து மேகங்களனைத்தும் தேர்களாக உருக்கொண்டு விட்டனவோ! கடல்கள் அனைத்துமே காலாட் படை வீரர்களாகி அலை மோதுகின்றனவோ!' என்று சோழர்கள் நடத்திய கலிங்கத்துப் போரை சயங்கொண்டார் பாடுகிறாரல்லவா? அதையே அவர் பாடிய நாட்டுக்கே திருப்பிப் பாடும்படி செய்து விட்டான் இளம்பாண்டியன்.

நூற்றுக்கணக்கான போர்க்களங்களைக் கண்ட ஆயிர மாயிரம் சோழ நாட்டு யானைகளின் சடலங்கள் தெருக்கள் தோறும் சரிந்து கிடந்தன. மதம் பொழியும் மத்தகங்களைக் கொண்ட ஏலமலைக் காட்டு யானைகளும் இடையிடையே காணப்பட்டன.

சிதைந்துபோன தேர்கள், வீழ்ந்துபட்ட புலிக் கொடிகள், முண்டங்களாகி விட்ட குதிரைகள், மாண்டுமடிந்த வீரர்கள் ஆயிரமாயிரம். நிணச் சேற்றில் துண்டிக்கப்பட்ட அவயவங்களும் தடித்த உடல்களும் காணுவதற்கே பயங்கரமான காட்சியைக் கொடுத்துக் கொண்டிருந்தன.

கங்காபுரிக்குள் கதிரொளி புகவிடாமல் கழுகுக் கூட்டம் வானத்தில் வட்டமிடத் தொடங்கியது.

வீரருக்கெல்லாம் தலைவனான மாவீரன் கங்கை கொண்ட சோழன் உருவாக்கிய தலைநகரத்தை, வேங்கையின் மைந்தனாம் அந்த வெற்றிவீரனின் கருவில் திருவாகி வளர்ந்த சாம்ராஜ்யத்தை, இந்த நிலைக்குக் கொண்டு வந்த பதரான மூன்றாம் இராஜராஜன், முதல் மாறவர்மனாம் சுந்தர பாண்டியன் முன்பு நாணித் தலைகவிழ்ந்து நின்றான்.

மதுரைப் போரில் பெண்ணாசைப்பட்டு இழிசெயல்கள் புரிந்த அந்தக் கோழை இப்போது தன்னுரிமைப் பெண்டிரையும் உற்றார் உறவினரையும்கூடக் காக்க வழியற்றவனாக நின்றான்.

அரண்மனைக்குள்ளே அரசியாரின் ஆசனத்தில் வெற்றித் திருமகளாம் கயல்விழி செருக்கோடு வந்து அமர்ந்தாள். கொற்றவைத் தேவியும் திருமகளும் ஒன்றுகலந்த திருக்கோலத்தில் அவள் வந்து ஆசனத்திலிருந்தாள். அவளுக்கு முன்னே அவளை ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சியவனாக வந்து நின்றான் இராஜராஜன்.

''அரசே! உம்முடைய தேவியாரை இங்கே சற்று அழைத்து வரச் செய்யும்!'' என்று கட்டளையிட்டாள் கயல்விழி.

அழுத கண்ணீர் ஆறு பெருக்க, தொழுதுவந்து கயல்விழியின் முன்பு கைக்கூப்பி நின்றாள் இராஜராஜனின் மனைவி.

''கவரி வீசலாமே!'' என்று அவளிடம் கூறிவிட்டுத் தன் கண்களை இறுக மூடிக்கொண்டு அங்கையற்கண்ணி அம்மையைத் தியானித்தாள் கயல்விழி. 'அம்மையே; இவ்வளவும் எனக்கல்ல; உனக்குத்தான்!' என்று தனக்குள் கூறிக் கொண்டாள்.

இராஜராஜனின் இதயத்தில் ஆயிரம் ஆயிரம் வேல்கள் பாய்ந்தாலும் அவன் இப்படிப் பதறியிருக்க மாட்டான். அவன் கண்களுக்கு முன்னால் சோழ சாம்ராஜ்யத்து அரசனின் மனைவி கூத்தாடும் பாணர் குலமங்கைக்குச் சாமரம் வீசி நின்றாள்.

# 10. வெற்றியின் சோதனை



**பாடரும் சிறப்பிற் பருதி வான்றோய்
ஆடகப் புரிசை ஆயிரத் தளியிற்
சோழவளவன் அபிஷேக மண்டபத்து
வீராபிஷேகஞ் செய்து புகழ் விரித்து...**

-சுந்தர பாண்டியன்
மெய்க்கீர்த்தி

ஆரியப் படையூர், புதுப்படையூர், பம்மைப்படையூர், மணப் படையூர் ஆகிய பல்வேறு படையூர்களும் புடைசூழக் கம்பீரச் செருக்கோடு நின்றது சோழ சாம்ராஜ்யத்தின் ஆதித் தலைநகரான பழையாறை மாநகர். சாம்ராஜ்யத்தின் பல்வேறு படை யினரின் குடியிருப்புக்களிடையில் அந்த லட்சோபலட்சம் படை வீரர்களையும் ஆட்டிப் படைக்கும் வலிமை கொண்ட படைத்தலைவர்கள் அங்கு வாழ்ந்திருக்கிறார்கள். சோழ சாம்ராஜ்யத்தின் முதுகெலும்பும் கங்காபுரியின் இதயத் துடிப்பும் பழையாறை நகரந்தான்.

அந்தப் பெருநகரத்துச் சோழ மாளிகையின் ஆயிரத்தளி மண்டபம் வானுற ஓங்கி உயர்ந்து நின்றது. எத்தனையோ சோழ மன்னர்கள் பரம்பரை பரம்பரையாகவே வீராபிஷேகம் செய்து முடிசூட்டிக்கொண்ட ஆயிரங்கால் மண்டபம் அது. ஆயிரம் தூண்களிலும் ஆயிரம் விளக்குகள் சுடர்விட்டுப் பொன்னொளி வீச, சிற்றரசர்களும், பெரு வீரர்களும் புடைசூழ சக்கரவர்த்திகள் பலர் அங்கே விழாக் கொண்டாடி யிருக்கிறார்கள். புலவர்கள் அந்த ஆயிரத்தளி மண்டபத்தை யும் அதில் வீற்றிருந்து விழா எடுத்தவர்களையும் பூரிப்போடு தீஞ்சுவைத் தமிழில் பாடியிருக்கிறார்கள்.

சுந்தரபாண்டியனின் வீராபிஷேகத்துக்கு விழுப்பரை யர் அந்தப் பழையாறைப் பழம் நகரையும் அதன் ஆயிரத்தளி மண்டபத்தையுமே தேர்ந்தெடுத்தார். பெரும் படைத்தலைவர் கள் மழவச் சக்கரவர்த்திக்கும் அழகம்பெருமாளுக்கும் அதில்

எல்லையற்ற ஆனந்தம். மதுரையின் அரண்மனைத் திருமாளிகையில் எத்தனை முறை தங்களது வீராபிஷேகத்தை நடத்தியிருக்கின்றனர் சோழர்கள்! அதன் பெயரையே 'சேர பாண்டியர் தம்பிரான்' என்று மாற்றியமைத்து, அதில் வீராபிஷேகம் செய்து கொண்டாரல்லவா குலோத்துங்க சோழர்?

''சரித்திரம் தலைகீழாகத் திரும்பிவிட்டது!'' என்று குதூகலத்தோடு விழுப்பரையரிடம் கூறினார் மழவச் சக்கரவர்த்தி.

''வரலாறு தானாகத் திரும்புவதில்லை'' என்றார் விழுப்பரையர். ''தலைவர்களால் அது திருப்பப்படுகிறது. உருவாக்கப்படுகிறது. நம்முடைய இளைய பாண்டியரின் தலைமையில் பாண்டிய நாட்டின் இரண்டாவது பொற்காலம் உதயமாகி விட்டது!''

மெய்சிலிர்த்தது மழவச் சக்கரவர்த்திக்கு. ''பெரிய பாண்டியர் இங்கு வந்து தம் கண்குளிர இந்தக் காட்சியைக் காணவில்லையே என்ற வருத்தம்தான் எனக்கு'' என்றார் அவர்.

''அவர் மதுரையில் தங்கிவிட்ட காரணம் நாம் அறிந்தது தானே? குலோத்துங்கர் உயிருடன் உள்ளவரையிலும் அவருக்கு எதிராகத் தாம் வாளெடுத்துச் சோழ நாட்டுக்குள் புகுவதில்லை என்ற பிடிவாதம் கொண்டிருப்பவர் அவர். அவருடைய தந்தை விக்கிரம பாண்டியருக்கு நாட்டை அளித்தவர் குலோத்துங்கர். தந்தையைப் போன்றே அவரும் குலோத்துங்கரிடம் நன்றி கொண்டிருப்பவர். வெஞ்சினம், செருக்கு யாவற்றுக்குமே அவருடைய மைந்தனே காரணம் என்று பெரியவர் நம்புகிறார். அதனால்தான் அவர் விலகிக் கொண்டு தம்பிக்கு முழுப் பொறுப்பும் விட்டிருக்கிறார். குலோத்துங்கரின் மரணத்துக்காக உண்மையாகவே அவர் வருந்துவார். சுந்தர பாண்டியரின் வீராபிஷேகத்தை அவர் நேரில் இருந்து நடத்தவில்லையென்றாலும் அவர் உள்ளமும் உயிரும் ஆயிரத்தளி மண்டபத்தில் தானிருக்கும்.''

பழையாறைச் சோழ மாளிகைக்கு வெளியே வீரர்களின் வாழ்த்தொலி கேட்டது. உற்றுக் கேட்டார்கள்.

''திருமுனைப்பாடி நாட்டுச் சிங்கம் வாழ்க! பல்லவர் குலத்துதித்த கடவராயக் கோப்பெருஞ்சிங்கன் வாழ்க! பாண்டியருக்குப் பெருந்துணைத் தூணாக விளங்கும் வீர சிங்கமே வாழ்க!''

வாழ்த்தொலியைக் கேட்டவுடன் மேல்மாடக் கூடத்தில் கயல்விழியோடு உரையாடிக் கொண்டிருந்த சுந்தர பாண்டியன் படிகளில் இறங்கி ஓடிவந்தான். கீழ்க் கூடத்திலிருந்த விழுப்பரையர் முதலியோரும் அவனோடு சேர்ந்துகொண்டனர். அனைவரும் கோப்பெருஞ்சிங்கனை வரவேற்க வெளி வாயிலுக்கு விரைந்தனர்.

ரதத்திலிருந்த கோப்பெருஞ்சிங்கனைத் தன் இரு கரங்களாலும் கட்டித் தூக்கி நிறுத்தித் தழுவிக்கொண்டான் சுந்தரபாண்டியன். தம் விழிகளில் துளிர்விட்ட ஆனந்தக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டார் கோப்பெருஞ்சிங்கன். சுந்தரபாண்டியனின் வெற்றிக்காக அவர் மறைமுகமாக அனுப்பி வைத்த படைக் கலன்கள், ஆட்கள், பெரும் பொருள் யாவுமே அவருடைய வெற்றியாகவும் திரும்பிவிட்டன.

''திருமுனைப்பாடி நாடு, பாண்டிய நாடு இரு நாடுகளுமே தன்னுரிமை பெற்றுவிட்டன. இன்னும் சோழ சாம்ராஜ்யத்தின் சிற்றரசர்களான வாண கோவரையர், சம்புவராயர், சேதிராயர், அனைவருக்குமே நாம் விடுதலை அளித்து விடலாம்!'' என்றான் சுந்தரபாண்டியன்.

''தங்களுடைய இந்த மாபெரும் வெற்றிக்காகத் தங்களை வாழ்த்துகிறேன். திருமுனைப்பாடி நாட்டைச் சோழர் பிடியிலிருந்து விடுவித்ததற்காக நன்றியும் கூறுகிறேன்'' என்றார் கோப்பெருஞ்சிங்கன்.

''வெற்றி என்னுடையதல்ல; நம்முடையது!'' என்றான் சுந்தரபாண்டியன். ''முதலில் நன்றி கூறக் கடமைப் பட்டவன் நான்தான்.''

அவர்கள் மாளிகைக்குள் நுழைந்த பின்னர் அளவளாவத் தொடங்கினர். குலசேகர பாண்டியர் அங்கு வராத காரணத்தை விளக்கிவிட்டு, கோப்பெருஞ்சிங்கனிடம் விழுப்பரையர் கூறினார்: ''தாங்கள்தாம் பெரிய பாண்டியரின்

பொறுப்பை ஏற்றுக்கொண்டு இந்த வீராபிஷேக விழாவை நடத்திக் கொடுக்கவேண்டும். பெரியவருக்கும் செய்தி அனுப்பியிருக்கிறோம்.''

''அது நான் செய்த தவப் பயன்!'' என்றார் கோப்பெருஞ் சிங்கன். ''பாண்டிய நாட்டின் எல்லை காஞ்சி வரையிலும் இருக்கிறதென்று இனி நினைத்துக் கொள்ளுங்கள்.''

''அவ்வாறே திருமுனைப்பாடியின் தெற்கு எல்லையில் கன்னிக்குமரி காவல் புரிகிறாள் என்பதையும் தாங்கள் மனத்தில் கொள்ளவேண்டும். நட்பும் உறவுமே இனி நமது அடிப்படைப் பண்புகளாக விளங்கட்டும்!'' என்றான் இளைய பாண்டியன்.

''எனது குமாரத்தியைத் தங்களுக்குக் கொடுத்துப் பாண்டிய நாட்டையே இணைத்துக் கொள்ளலாமென்றால், தங்களுக்குக் கொடுக்கும் வயதில் எனக்கொரு குமாரத்தி இல்லையே என்று ஏங்குகிறேன்!'' இப்படிக் கூறிவிட்டுக் கோப்பெருஞ்சிங்கன் சிரித்தார். உடன் இருந்தோரும் அந்தச் சிரிப்பில் கலந்து மகிழ்ந்தனர்.

''குமாரத்தியைக் கொடுக்காமலே குமரி வரையில் உள்ள நாட்டைத் தாங்கள் இணைத்துக் கொள்ளலாம்!'' என்றான் சுந்தரபாண்டியன். ''ஆனால் நான் ஒன்றும் கோசல நாட்டு வல்லாளதேவர் குலோத்துங்கரிடம் ஏமாந்தது போல் பெண்ணைக் கண்டு ஏமாந்து விடமாட்டேன். பெண் கொடுப்போரிடம் என்னையும் நாட்டையும் அடிமைப் படுத்திக் கொள்ளமாட்டேன்!''

மீண்டும் அங்கு சிரிப்பொலி எழுந்து அடங்கியது. கோசல சாம்ராஜ்யத்துப் பேச்சு வந்தவுடன் கோப்பெருஞ் சிங்கன் சிந்தனையில் ஆழ்ந்தார். அதைச் சுந்தரபாண்டியனும் கவனித்தான்.

''கோசல நாட்டுச் செய்தி ஏதும் கிடைத்ததா?'' என்றான்.

கோப்பெருஞ்சிங்கன் பதில் அளிக்காமல் சுற்று முற்றும் பார்த்தார். முக்கியமான பெருந் தலைவர்களைத் தவிர

வேறு யாரும் அங்கு இல்லை. நீண்ட பெருமூச்சு விட்டார். இந்தப் பெருமூச்சின் சீற்றம் இதுவரை அங்கு நிலவிய கலகலப்பையெல்லாம் நொடிப்பொழுதில் மாற்றுவது போலிருந்தது.

''கோசல சாம்ராஜ்யம் போரில் வெற்றி பெற்று விட்டது. வல்லாள தேவரும் வீரநரசிம்மனும் வடக்கில் வெற்றிக்கொடி நாட்டிவிட்டார்கள். இச் சமயத்தில் அவர்களுக்கு குலோத்துங்கரின் ஓலையும் போயிருக்கிறது.''

''குலோத்துங்கரின் ஓலையா?'' திடுக்கிட்டனர் அனைவரும்.

''ஆமாம், விவேகம் மிகுந்த அந்த வீரர் தம்முடைய கடைசி மூச்சு விடுவதற்கு முன்பு கூடத் தம் சாம்ராஜ்யத்தைக் காப்பாற்ற முனைந்திருக்கிறார். அவர்களுக்கு ஓலை அனுப்பி, 'பாண்டிய யானைக்குச் சிங்கமாக விளங்கும் அவர்கள் எப்படியாவது பாண்டியர்களை அழித்துச் சோழர் குலத்தைக் காப்பாற்ற வேண்டும்' என்று வேண்டுகோள் விடுத்திருக்கிறார். இந்தப் போரில் சோழ சாம்ராஜ்யமே அழிந்தாலும் மீண்டும் நிலைநாட்டும்படி கேட்டிருக்கிறார். பெண் வழி உறவு, வலிமை உள்ள உறவு. அந்த உறவைக் கோசல நாட்டார் மதிப்பவர்கள். அதிலும் ஓலை அனுப்பிய குலோத்துங்கர் இறந்துவிட்டதால் இறந்தவரின் ஆவலை நிறைவேற்றுவதற்காக அவர்கள் எதையும் துணிந்து செய்வார்கள்.''

கோப்பெருஞ்சிங்கன் பேசி முடிந்தவுடன் அங்கு வெகு நேரம் மௌனம் நிலவியது.

''அப்படியானால் நமது அடுத்த போராட்டம் உடனே தொடர்ந்து விட்டது'' என்றான் சுந்தரபாண்டியன். ''அதுவே நம் வாழ்வில் கடைசிப் போராகவும் இருக்கும். போரின் முடிவில் ஒன்று நாம் எஞ்சியிருப்போம்; அல்லது கோசல நாட்டார் எஞ்சியிருப்பார்கள். நம்முடைய புதிய பகைவர்கள் அறிவும் ஆற்றலும் உள்ளவர்கள். நம்மைவிடப் பன்மடங்கு படைபலமுள்ளவர்கள்.''

அனைவருமே திகைத்துவிட்டனர்.

''எனக்கு இப்போது வீராபிஷேகம் வேண்டாம்!'' என்றான் சுந்தர பாண்டியன்.

துணுக்குற்ற விழுப்பரையர், ''வீராபிஷேகம் தங்களுக்காக மட்டும் செய்வதல்ல. வீரர் கூட்டத்தின் மன எழுச்சிக்கும், மகிழ்ச்சிக்காகவும் செய்வது அது'' என்றார். ''பல்வேறு துன்பங்களுக்கிடையில் போராடும் நம் வீரர்களின் உள வலிமையைப் பெருக்குவதற்காகத்தான் நாம் விழாக்கள் நடத்துகிறோம். ஆடலும் பாடலும், கூத்தும், இசையும், விழாக்களும் கட்டாயம் வீரர்களுக்குத் தேவைதான். அவர்களுக்கு மன எழுச்சி வேண்டும். இதை மறுக்காதீர்கள்.''

சுந்தரபாண்டியனை வீராபிஷேகத்துக்கு இணங்கும்படி கோப்பெருஞ்சிங்கனும் வற்புறுத்தினார்.

''அடுத்த போர் எப்போது?'' என்று கேட்டான் சுந்தர பாண்டியன்.

''அது நம்மைத் தேடி வரத்தான் போகிறது. வருமுன் உங்களுக்குச் செய்தி அனுப்புகிறேன்'' என்றார் கோப்பெருஞ்சிங்கன்.

# 11. பாம்புக்குப் பால்வார்த்தால்



**ப**ழையாறைப் பகுதியின் ஆயிரத்தளி மண்டபத்தில் வீராபிஷேகம் நடந்தவுடன் அங்கிருந்து தில்லையம்பதிக்குப் புறப்பட்டான் சுந்தரபாண்டியன். விழுப்பரையர், கயல்விழி முதலியோரும் உடன் சென்றனர். தில்லையில் அனைவரும் 'பொன்னம்பலம் பொலியப் பூவையுடன் ஆடுவார் மன்னும் திருமேனி' கண்டு மனம் களித்தனர். கயல்விழி அதுவரையில் தன் வாழ்நாளில் கண்டறியாத பேரானந்தப் பெருக்கோடு திருச் சபையின் முன்பு நடனமாடினாள்.

மதுரைக்குத் திரும்பும் வழியில் அவர்கள் 'பூங்கமலவாவி சூழ் பொன்னமராவதி' நகருக்கு வந்தார்கள். அங்கே அவர்களது வரவு நோக்கி வரவேற்பதற்காக மதுரையிலிருந்து வந்து காத்திருந்தார் பெரிய பாண்டியர். கோப்பெருந்தேவியாரும் உடன் வந்திருந்தார்.

குலசேகர பாண்டியரின் பாதங்களில் சுந்தரபாண்டியனும் கோப்பெருந்தேவியின் பாதங்களில் கயல்விழியும் ஒன்றாக விழுந்து வணங்கினார்கள். ஆனந்தக் கண்ணீர் பொங்கியது அனைவரது விழிகளிலும். யாருக்குமே பேசுவதற்கு நா எழவில்லை.

''மதுரைக்கு நீ திரும்பும் வரையிலும் எங்களால் பொறுத்திருக்க முடியவில்லை'' என்றார் கோப்பெருந்தேவி. ''உன்னை வரவேற்பதற்கு மதுரை மாநகரம் இப்போதே விழாக்கோலம் பூண்டுவிட்டது.''

கயல்விழியை அழைத்துக்கொண்டு உட்புறம் சென்றார் கோப்பெருந்தேவி. பாண்டியரிடம் நடந்த செய்திகளனைத்தையும் கூறினார் விழுப்பரையர். சுந்தரபாண்டியன் தன்னிடம் கோப்பெருஞ்சிங்கன் கூறிய கோசல நாட்டு விவரங்களையும் கூறினான். பாண்டியர் எதிர்பார்த்திருந்த செய்தி தான் அது. ''வீரநரசிம்மனின் குறுக்கீடு தவிர்க்க முடியாத ஒன்றுதான்'' என்று அமைதியோடு கூறினார் பாண்டியர்.

பாண்டியர் பொன்னமராவதிக்கு வந்ததற்கு மற்றொரு நோக்கமும் இருந்தது. அதையும் அவரே கூறினார்.

''தம்முடைய அதிகாரிகள் சிலரைக் கங்கை கொண்ட சோழபுரத்துக்கு அனுப்பி இராஜராஜனையும் சோழநாட்டு அமைச்சர், படைத் தலைவர் முதலியோரையும் இங்கு அழைத்து வரச் சொல்லவேண்டும்.''

''எதற்காக?'' என்ற கேள்வி சுந்தரபாண்டியனிடம் எழுந்தது. ஆனால் அதைப் பெரிய பாண்டியரிடம் அவன் கேட்கவில்லை. 'அப்படியே ஆள் அனுப்புவோம்' என்றான்.

''சோழ நாட்டை இழந்து நிற்கும் அவனுக்கு நாம் அவனுடைய மணிமுடியையும் மாலையையும் திருப்பிக் கொடுத்து விடவேண்டும். சோழபதி என்ற பட்டத்தையும்

கொடுத்து அவனிடமே சோழநாட்டுப் பகுதியையும் அளித்துவிட வேண்டும்.''

திடுக்கிட்டான் சுந்தர பாண்டியன். விழுப்பரையர் இதைக் கேட்டு அதிர்ச்சியுறவில்லை.

''தீமை செய்தவர்களுக்கு நாம் அளிக்கும் ஏற்ற தண்டனை அவர்களே நாணும்படியாக நன்மை செய்வது தான். வள்ளுவர் காட்டும் வழியை நாம் பின்பற்றுவோம். மேலும், இராஜராஜன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும் அமரராகிவிட்ட குலோத்துங்கருக்காக நாம் இதைச் செய்ய வேண்டும். பாண்டிய நாட்டை அவர் பலமுறை வென்ற போதிலும் மீண்டும் நமக்கே வழங்கியிருக்கிறார். நாமும் அவ்வாறு செய்வதுதான் முறையாகும்.''

தமையனாரின் சொல்லைத் தட்டி நடப்பதென்ற நினைவே அவனிடம் எழவில்லை. என்றாலும் அவரது இந்த முடிவு பெரியதோர் அரசியல் பிழையென்றே அவனுக்குத் தோன்றியது. அவனுடைய மௌனத்தின் காரணத்தை அறிந்து கொண்டார் பெரிய பாண்டியர்.

''சுந்தரபாண்டியா! நாம் விரும்பிய ஆட்சி உரிமையை நாம் பெற்றுவிட்டோம். திருமுனைப்பாடி நாடும் உரிமை பெற்றுவிட்டது. இனியும் நாம் சோழநாட்டை அடிமைப் படுத்தி வைத்துப் பயன் என்ன? அதனால் வரக்கூடிய பின் விளைவுகளைத் தவிர்ப்பதற்காகவே நான் இவ்வாறு கூறுகிறேன்.''

''இப்படிச் செய்தால் கோசல சாம்ராஜ்யத்துப் படையெடுப்பு இருக்காது என்று நினைக்கிறீர்களா? அதைத் தவிர்க்க முடியும் என்று தங்களுக்குத் தோன்றுகிறதா?''

''இப்படிச் செய்தால் தவிர்ப்பதற்கு ஒரேஒரு வாய்ப்பு உண்டு. தவிரவும் நாம் நமது பண்பைக் காக்கவே இந்தத் தியாகம் செய்யவேண்டுமென்று நினைக்கிறேன். தியாக விநோதரின் குமாரன் நம்மால் முடி இழந்து தவித்தான் என்ற அவச் சொல் நமக்கு வேண்டாம்.''

''தங்கள் ஆணையை நிறைவேற்றுவதே என்னுடைய கடமை; அவ்வாறே நிறைவேற்றுகிறேன்'' என்றான் சுந்தர பாண்டியன்.

''உன் மனத்தில் இன்னும் ஏதோ ஐயம் இருப்பதுபோல் தோன்றுகிறதே?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டார் பாண்டியர். முழுமனத்தோடு சுந்தரபாண்டியன் இசைய வில்லை என்பது அவருக்கே புலப்பட்டுவிட்டது.

சுந்தரபாண்டியன் கூறினான்: ''இயற்கையாகவே நம் பாண்டிய நாட்டைவிட வளம் நிறைந்தது சோழ நாடு, மேலும் அவர்கள் நமது நாட்டின் செல்வத்தையெல்லாம் படை யெடுப்புகளாலும் திறைப் பொருள்களாலும் கொள்ளைக் கொண்டு போயிருக்கிறார்கள். இப்போது சோழநாடு செல்வச் செருக்கால் சீரழிந்து வருகிறது. நம்நாடு வறுமையால் வாடி நலிகிறது. நம்மிடம் சோழநாடு இருக்குமானால், அதனிடம் குவிந்திருக்கும் நம்முடைய செல்வத்தை நம் நாட்டுக்கே மீட்டுக் கொள்ளலாம். முந்நூறு ஆண்டுகளுக்கும் மேலாக நம்மை உறிஞ்சி வளர்ந்திருக்கிறது அது. நமது நாட்டை வளப்படுத்துவதற்கும் நமக்குப் பொருள் வேண்டும்.''

குலசேகர பாண்டியர் தமது தம்பியின் அறிவுத் திறனைத் தமக்குள்ளாகவே போற்றினார்.

''சோழநாடு நமக்குத் திறை செலுத்தித் தீரவேண்டும் என்று ஓலை எழுதிக் கொள்வோம். நாம் பறிகொடுத்த செல்வத்தைத் திறைப் பொருளாகவே திருப்பிப் பெறுவோம்.''

அதுவே மிகச் சிறந்த யோசனையாக விழுப்பரை யருக்கும் தோன்றியது. அவ்வாறே இராஜராஜனுக்கு ஆள் அனுப்பிக் கங்காபுரியிலிருந்து வரவழைத்தார்கள். மணி முடியும் ஆரமும் கொடுத்துச் சோழ நாட்டையும் அவனுக்கே வழங்கினார்கள்.

***வாங்கு சிறை அன்னம்***
***துயிலொழிய வண்டெழுப்பும்***
***பூங்கமல வாவிசூழ் பொன்னமராவதியில்....***
***சோலை மலிபழனச் சோணாடும், தானிழந்த***
***மாலை முடியுந் தரவருக வென்றழைத்து,....***
***சோளபதி யென்று நாமமுந் தொன்னகரும்***
***மீள வழங்கி விடைகொடுத்து விட்டருளி....***

-மெய்க்கீர்த்தி

இராஜராஜன் பெரிய பாண்டியரையும் சுந்தரபாண்டியனையும் பலமுறை விழுந்து வணங்கினான். செருக்கோடு அவன் முன்பொரு முறை புலவனாகச் சென்ற இளைய பாண்டியன் மீது சீறியெழுந்தானல்லவா? பேசாதனவெல்லாம் பேசி அவனைச் சிறுமைப்படுத்தினானல்லவா? தங்காபுரி அரண்மனைக்குள் கட்டற்ற காளைபோல் சுற்றித் திரிந்தானல்லவா?- 'அதே மனிதன்தானா இந்தக் கோழைப் பதர்!' என்று வியப்படைந்தான் சுந்தரபாண்டியன்.

நன்றி கொண்டவன்போல் குழைந்து பேசினான். திறைப் பொருளைத் தவறாது அனுப்பி வைப்பதாக வாக்களித்தான். தன் வாழ்நாள் முழுவதுமே பாண்டியர்களுக்கு நன்றிக் கடன்பட்டிருப்பதாகக் கூறினான்.

பொன்னமராவதியின் எல்லையை விட்டு அவனுடைய ரதம் வடக்கே செல்லும் வரையில்தான் இவ்வளவு குழைவுகளும் அவனிடம் குடிகொண்டிருந்தன. எல்லையைக் கடந்தவுடன் அவன் வாய்விட்டுச் சிரித்தான். அலட்சியமாக நகைத்துக் கொண்டே அருகிலிருந்த அமைச்சரிடம் அவன் பேசத் தொடங்கினான்.

''அமைச்சரே! பாண்டியர்களின் வீரத்தின் இலட்சணம் இப்போது விளங்கி விட்டது பார்த்தீர்களா? வடக்கே வீரநரசிம்மரின் வெற்றி இவர்களை நடுங்கச் செய்கிறது. அவர் வந்து பாண்டிய நாட்டை முறியடித்துவிட்டுச் சோழ சாம்ராஜ்யத்தை நிலைநாட்டி விடுவார் என்பதையும் அறிந்து கொண்டார்கள். அதற்கு முன்பாகவே தங்களின் தற்காப்புக்காக நமக்கு நாட்டை வழங்கியிருக்கிறார்கள், கோழைகள்!''

இராஜராஜன் தன்னிடமிருந்த ஒப்பந்த ஓலைகளைக் கையில் எடுத்தான். திறை செலுத்துவதாக வாக்களித்துப் பெரிய பாண்டியரின் முன்பு மண்டியிட்டுப் பெற்றுக் கொண்ட ஓலைகள்தாம் அவை. ஒவ்வொன்றாகக் கிழித்து ரதத்திலிருந்தவாறே காற்றில் பறக்கவிட்டான் அவன்.

சுந்தரபாண்டியனுக்குக் கயல்விழியைத் தனிமையில் சந்திப்பதற்கு அப்போதுதான் நேரம் கிடைத்தது. மீண்டும்

போர் மேகங்கள் சூழ்வதற்கு முன்பாகவே திருமணத்தை நிறைவேற்றி விட வேண்டுமென்று தோன்றியது அவனுக்கு. அது பற்றி அவளிடம் பேசுவதற்காக அவள் அறையை நோக்கி விரைந்தவன், திருமுனைப்பாடி நாட்டுத் தூதுவன் வந்து வணங்கி நிற்கவே, ''என்ன செய்தி'' என்று கேட்டு நின்றான்.

''அரசர் ஓலை அனுப்பியிருக்கிறார்!''

கோப்பெருஞ்சிங்கன் அனுப்பிய ஓலையைப் படித்தவுடன் அவனால் அடுத்த அடி எடுத்து வைக்க முடியவில்லை. மீண்டும் ஒருமுறை படித்தான்.

''நான் திரும்பும் வழியில் சோழநாட்டு அரசியல் ரதம் எதிர்ப்பட்டது. அவர் ஏதோ சில ஓலைகளைக் கிழித்து எறிந்து கொண்டே சென்றார். அவற்றையும் சேகரித்து வந்தேன்.''

இராஜராஜனால் கிழித்தெறியப்பட்ட ஒப்பந்த ஓலைகள் அவை. சுந்தரபாண்டியனின் நெஞ்சில் நெருப்புப் பற்றிக் கொண்டது.

## 12. மாலை சூட்டினாள்



கயல்விழியைக் காணத் துடித்துக் கொண்டிருந்தவனுடைய வழியில் கடமை குறுக்கிடவே, கோப்பெருஞ்சிங்கனது தூதுவன் கொடுத்த ஓலைகளை எடுத்துக் கொண்டு தன் தமையனாரிடம் சென்றான் சுந்தரபாண்டியன்.

அப்போது மாலைநேரம். மாளிகையை அடுத்திருந்த தாமரைத் தடாகத்திலிருந்து குளிர்ந்த காற்று வீசிக் கொண்டிருந்தது. குலசேகர பாண்டி யரும் விழுப்பரையரும் மகாகவி கம்பரின் கவிநயத்தில் மூழ்கியிருந்தனர்.

சுந்தர பாண்டியன் அங்கு வரவே அவர்களுடைய இலக்கியப் பேச்சுத் தடைப்பட்டது. கோப்பெருஞ்சிங்கன் அனுப்பிய ஓலையையும், இராஜராஜனால் வழியில் கிழித் தெறியப் பெற்ற துணுக்குகளையும் பாண்டியரிடம் நீட்டினான் சுந்தரபாண்டியன். ஆவேசம் நிறைந்த அவனுடைய தோற்றத்தைக் கண்டுவிட்டு, ''இராமபிரானின் தம்பி இலக்குமணர் போல் துடிப்போடு வந்திருக்கிறீர்களே!'' என்று புன்முறுவலோடு கேட்டார் விழுப்பரையர்.

ஓலைகளை விழுப்பரையரிடம் கொடுத்தார் பாண்டியர்.

''இராஜராஜனுடைய சிறுமை ஒருபுறம் இருக்கட்டும்; நாம் இப்போது அதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. கோசல சாம்ராஜ்யத்தைப் பற்றித்தான் சிந்திக்கவேண்டும்'' என்றார் விழுப்பரையர்.

''சோழ சாம்ராஜ்யத்தின் வீழச்சியால் வீரநரசிம்மர் கொதிப்படைந்திருக்கிறார். அவர் தந்தை வல்லாளதேவரும் குலோத்துங்கரின் ஓலையைக் கண்டும் அவர் மரணச் செய்தி கேட்டும் அதிர்ச்சியுற்றிருக்கிறார். அடுத்த போருக்கு ஆயத்தம் செய்துகொண்டு நம்மைப் பழிவாங்கப் போகிறார்களாம். முதல் தாக்குதல் திருமுனைப்பாடி நாட்டுக்குத்தானாம். போரில் நமக்குத் துணைசெய்த நம் நண்பரல்லவா கோப்பெருஞ்சிங்கன்! ஆகவே, முதலில் அவரை முறியடிக்கப் பார்க்கிறார்கள்''—ஓலைச் செய்தியை யும் அதன் காரணத்தையும் கூறினான் சுந்தரபாண்டியன்.

''நாம் கோசலர்களின் துணைவர்களான சோழர்களை முறியடித்தோம். அவர்கள் நம்முடைய துணைவர்களான காடவராயர்களை அழிக்கப் பார்க்கிறார்கள். அவர்களுடைய படையெடுப்பு நடந்தால் அது திருமுனைப்பாடியோடு நிற்காது!'' என்றார் பாண்டியர்.

''நாம் உடனடியாகச் செய்ய வேண்டியது என்ன?'' என்று கேட்டான் சுந்தரபாண்டியன்.

''உடனடியாகச் செய்யவேண்டியதை முன்னதாகவே செய்துவிட்டார்கள் நம் அரசர். சோழநாட்டை இராஜ ராஜனுக்கே திருப்பிக் கொடுத்து விட்டார்கள்; இந்தச்

செய்தி கேட்டு அவர்களுடைய சீற்றம் சிறிது தணியக்கூடும்'' என்றார் விழுப்பரையர்.

''சீற்றம் தணியலாம், அதனால் படையெடுப்பும் தாமதமாகலாம். ஆனால் அவர்களுடைய அச்சம் தீராது. தெற்கில் பாண்டியநாடு வலிமை பெற்று வளர்வதை அவர்கள் பொறுக்க மாட்டார்கள்'' என்றார் பாண்டியர். அவருக்கு இராஜராஜனின் செய்கை மிகுந்த மனக் கலக்கத்தைக் கொடுத்துவிட்டது. அதையும் அவரே வெளியிட்டார். ''நாட்டைத் திருப்பிக் கொடுத்ததால் அவன் ஓரளவாவது நம்மிடம் நன்றியுடன் நடந்து கொள்வான் என்று நம்பினோம். அவனுக்கு அந்த நன்றியிருந்தால், கோசல சாம்ராஜ்யத்துடனும் நாம் நட்புறவு கொண்டு விடலாம். எப்படியும் அடுத்த போரைத் தவிர்க்கவே நான் விரும்புகிறேன்.''

''தவிர்க்க முடியாதுபோல் தோன்றுகிறதே!'' என்றான் சுந்தரபாண்டியன்.

''ஒரே சமயத்தில் இரண்டு காரியங்களை நாம் விழிப்போடு செய்யவேண்டும். நம்மையும் திருமுனைப்பாடி நாட்டையும் கோசல சாம்ராஜ்யத்தின் படையெடுப்பிலிருந்து பாதுகாக்க எல்லா முயற்சிகளையும் செய்து வரவேண்டும். அதேசமயம் கோசல நாட்டோடு நட்புறவு கொள்வதற்கான எல்லா வழிகளையும் நாம் பின்பற்றவேண்டும். போரைத் தவிர்ப்பதற்கான நடவடிக்கைகளில் நாம் தீவிரமாக முனைந்திருப்பது அவசியமே'' என்றார் பாண்டியர்.

''இதுவே சரியான ஆலோசனை'' என்றார் விழுப்பரையர். ''கோசல சாம்ராஜ்யத்தின் வலிமைக்காக நாம் அஞ்சவேண்டும் என்பதில்லை; அவர்கள் இயல்பாகவே பரந்த மனப் பண்பு கொண்டவர்கள். அவர்களுடைய நட்பு இருந்தால் நாடெங்கும் அமைதி நிலவும்.''

சுந்தரபாண்டியனுக்கு மட்டிலும் பெரியவர்களுடைய எண்ணத்தில் நம்பிக்கை ஏற்படவில்லை. வீரநரசிம்மன் சோழ சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சியை பொறுத்துக்கொள்ளமாட்டார் என்றே நம்பினான். 'ஒன்று கோசல நாடு அழிய வேண்டும்;

அல்லது பாண்டிய நாடு அழியவேண்டும்; வேறு வழியே இல்லை' என்ற எண்ணம் ஏற்பட்டது அவனுக்கு.

''சுந்தரபாண்டியா!'' என்று அன்போடு அழைத்தார் பாண்டியர்; ''இப்போது நாம் எதற்கும் அவசரப்பட வேண்டாம். ஒரு போர் முடிந்தவுடன் மறுபோர் தொடங்குவது என்பது அவர்களுக்கும் எளிதான காரியமல்ல. நமக்கும் எளிதான காரியமல்ல. மதுரைக்குத் திரும்பிய பிறகு நாம் இப்போது முடிவு செய்த இரண்டு முயற்சிகளிலும் ஈடுபடுவோம். இடையில் எவ்வளவோ மகிழ்ச்சிகரமான காரியங்களெல்லாம் நடக்க வேண்டியிருக்கின்றன. வெற்றி விழாக்களும் உன் திருமண விழாவுமே நமக்கு இப்போது முதன்மையானவை. அவற்றை நாம் அடுத்து கவனிப்போம்.''

''ஆமாம்; நாம் பெற்றிருக்கும் வெற்றியின் அருமையையும் ஆற்றலையும் நமது மக்களிடம் முதலில் பரப்பவேண்டும். அடுத்த போர் வருமானால் அது வரும்போது வந்து கொள்ளட்டும், அதற்காக நாம் வாழ்க்கையை மறந்து விடக்கூடாது. வாழ்க்கையின் இன்பங்களை நாமும் நமது மக்களும் சுவைக்கவேண்டும் என்பதற்காகவே நாம் போராடியிருக்கிறோம். இனியும் போராடப் போகிறோம். வாழ்க்கையின் இன்பங்களை மறக்கும் அளவுக்கு நாம் போர் வெறியர்களாகி விடவேண்டாம்!'' என்றார் விழுப்பரையர்.

போரின் வெற்றியால் ஏற்படும் வெறித்தன்மையை விழுப்பரையர் உணர்ந்தவர். மேலும் மேலும் வெற்றிகள் என்ற முறையில் அரசர்கள் வெறியர்களாக மாறுவதுண்டு. அதைச் சுந்தர பாண்டியனுக்கு அவர் உணர்த்துவதற்காகவே அவ்வாறு கூறினார்.

சுந்தரபாண்டியனுக்கு அவனுடைய வாழ்க்கையைப் பற்றிய நினைவு வந்து விட்டது. அங்கிருந்து நழுவிச் சென்றான்.

மாலை மயங்கி இரவாகிக்கொண்டு வந்தது. மாளிகையை அடுத்திருந்த தாமரைப் பொய்கையின் மூன்று கரைகளிலும் அடர்ந்திருந்த மரங்களை நோக்கிப் பறவைகள்

திரும்பிக் கொண்டிருந்தன. குளமெங்கும் நீர்ப்பரப்பே தெரியாத அளவுக்குத் தாமரை மலர்களும், இலைகளும், அன்னப் பறவைகளும் நிறைந்திருந்தன. செந்தாமரைகளும் வெள்ளைத் தாமரைகளும் இணைந்து மிதந்த காட்சி சுந்தர பாண்டியனுக்குக் கண்கொள்ளாக் காட்சியாகத் தோன்றியது. அன்னங்கள் அவற்றிடையே நீந்திச் சென்ற அழகு வெண்தாமரைகளே அன்னங்களாக மாறி விட்டனவோ என்ற மயக்கத்தைக் கொடுத்தது.

கரை ஓரமாக நடந்தவன் அடுத்திருந்த ஒரு செடிப்புதரின் மறைவில் சிறிதுநேரம் தனித்திருக்க விரும்பினான். புதருக்கப்பால் இரு பெண்மணிகளின் பேச்சுக் குரல் கேட்டது. பழக்கமான குரல் என்பதால் உற்றுக் கேட்டான்.

''கயல்விழி! இனிமேல் உன்னை நான் 'அரசியாரே' என்றுதான் அழைக்கப் போகிறேன்!'' என்று விளை யாட்டாகக் கூறினாள் உய்யவந்தாள்; ''அந்த நாளும் நேரமும் நெருங்கிக் கொண்டிருக்கிறதல்லவா?''

கயல்விழி அங்கிருப்பதைக் கண்டவுடன் சுந்தர பாண்டியனின் இருதயம் வேகமாக அடித்துக்கொண்டது. அதிலும் அவன் கேட்ட உய்யவந்தாளின் சொற்கள் அவனுக்கு எல்லையற்ற பூரிப்பைக் கொடுத்தன. 'நாளும் நேரமும் மட்டுமல்ல; நானும் நெருங்கி வந்துகொண்டுதான் இருக்கிறேன்!' என்று கூற நினைத்தான்.

கயல்விழியின் பதிலை அவன் கேட்கத் தவறவில்லை, அவள் குரல் ஒலித்தது;

''உய்யவந்தாளுக்கு என்னை அரசி என்று அழைப்பது ஆனந்தமாக இருக்கலாம். ஆனால் அதனால் நான் எவ்வளவு வேதனை அடைகிறேன் என்று உனக்குத் தெரியுமா? நான் என்றும் உன்னுடைய தோழியாகவும் இளைய பாண்டியரின் பணிப் பெண்ணாகவும் இருந்தால் போதும். நான் பாணர் குலப்பெண். பணிப்பெண்ணாகவே நான் இருக்கும் பாக்கியம் கிடைக்கவேண்டும் என்று அங்கயற்கண்ணி அம்மையை வேண்டிக் கொள். அரசியாகவேண்டும் என்ற

ஆசை இருந்திருந்தால் இதற்குள் நான் தீயில் வெந்து கருகியிருப்பேன். அந்த எண்ணமே எனக்கு வேண்டாம்.''

''உன்னைத் தவிர எல்லோருக்குமே அந்த எண்ணமிருக்கிறது, கயல்விழி!''

''அந்த எண்ணம் எனக்கு வரவே வேண்டாம்! அவருக்குத் தெரிந்தும் தெரியாமலும் நான் பணி செய்து கொண்டிருந்தால் போதும்.''

''அவருக்குத் தெரியாமல் நீ செய்த பணி என்னவென்று நான் சொல்லட்டுமா? தினந்தோறும் பாசறையிலிருந்து அவரைப் போருக்கு அனுப்பிவிட்டு, அவர் திரும்பி வரும் வரையிலும் ஒவ்வொரு நாளும் மாலைமாலையாகக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாய். நீ செய்த பணி எனக்குத் தெரியாதென்று நினைக்கிறாயா?''

''அவர் வெற்றியுடன் திரும்ப வரவேண்டுமென்று ஒவ்வொரு நாளும் அங்கயற்கண்ணி அம்மையிடம் முறையிட்டுக் கண்ணீர் வடித்தேன். என்னைவிட என்னுடைய கண்ணீர் தூய்மையானது. அதனால்தான் அவருக்கு வெற்றியைத் தந்திருக்கிறாள் அங்கயற்கண்ணி. என்னுடைய கண்ணீரால் மாலை தொடுத்து அதையே அவருடைய வெற்றியின் முத்தாரமாக அணிவித்திருக்கிறேன். நான் மானசீகமாக அவருக்கு அணிவித்திருக்கும் மாலை என்னுடைய கண்களுக்கு மட்டுமே தெரியும். அதை இரகசியமாகக் கண்டு மகிழும் அந்த ஓர் இன்பத்துக்கு எந்த அரசபோகமும் ஈடாகிவிடாது. எனக்கு அது போதும்... அது போதும்!''

மெய்சிலிர்த்தது சுந்தர பாண்டியனுக்கு. ஆனந்தக் கண்ணீர் பொங்கத் தன் மார்பகத்தை ஒரு முறை பார்த்துக் கொண்டான். என்ன மாயமோ தெரியவில்லை! கதிரொளியால் சூல் பெற்று ஒளிரும் பனிமுத்து மாலையைப் போன்றதொரு கண்ணீர் மாலை, அவன் கழுத்தை வளைத்துக் கொண்டிருப்பதுபோல் தோன்றியது. தோன்றியதுடன் மறைந்தது மின்னலைப் போல்...

''கயல்விழி!'' என்று அழைத்துக் கொண்டே அவன் நெருங்கினான்.

அவன் குரல் கேட்டவுடன் அங்கிருந்து சிட்டாய்ப் பறந்து விட்டாள் உய்யவந்தாள். மறுகணத்தில் மெய்யாகவே சுந்தரபாண்டியனின் பரந்த மார்பகத்தில் கயல்விழியின் கண்ணீர் முத்துக்கள் மாலை தொடுக்கத் தொடங்கின.

# 13. அகமென்னும் போர்க்களத்தில்



கயல்விழி தன்னை முற்றிலும் மறந்தவளாய்ச் சுந்தரபாண்டியனின் மார்பகத்தில் முகம் புதைத்துத் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினாள். அங்கே பின்புறம் சூழ்ந்திருந்த சிறு புதரும் முன்புறம் பரந்து கிடந்த தாமரைக் குளமும் கயல்விழியின் மனத்துயருக்குக் காரணம் தெரியாமல் சலனமற்று அவள் துயரில் ஒன்றியிருந்தன. சுந்தரபாண்டியன் அவன் வாழ்வில் இதுவரையில் இவ்வளவு துன்பத்தையும் இன்பத்தையும் ஒன்றாக அணைத்துக் கொண்டதில்லை.

கயல்விழி தன்னையே இழந்து அங்கு பாகாய் உருகிக் கொண்டிருந்தாள். சின்னஞ்சிறு குழந்தையாக மாறி விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டாள். தாய்ப்பசுவின் மடியில் ஒன்றும் இளங்கன்றாக மாறிப் போனாள் அவள்.

''கயல்விழி! ஆனந்தக் கண்ணீர் பெருக்க வேண்டிய சமயத்தில் நீ துன்பத்தைத் துணை கொண்டிருக்கிறாயே- உன்னை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை'' என்றான் சுந்தரபாண்டியன்.

''இளவரசே! இந்தப் பேதையின் நெஞ்செல்லாம், நினைவெல்லாம் உயிரெல்லாம் உயிருக்கு மேலான உணர்வெல்லாம் நீங்கள் எப்போதும் நிரம்பி வழிந்து கொண்டிருக்கிறீர்கள். இதை மட்டிலும் நீங்கள் புரிந்து கொண்டால் போதும். வேறு எதையும் புரிந்து கொள்ள வேண்டாம். நான் எதைப் பேசினாலும் எதைச் செய்தாலும்

தங்களது நலனுக்காகவே செய்கிறேன் என்பதைத் தாங்கள் உணர்ந்து கொண்டால் போதும்!''

''இப்படிக் கண்ணீர் வடிப்பதும் என்னுடைய நலனுக்காகவா?'' என்று நாத் தழுதழுக்கக் கேட்டான் சுந்தர பாண்டியன். ''என் வாழ்நாளில் நானும் என் பரம்பரையினரும் கண்ட மாபெரும் கனவை நனவாக்கித் தந்த அந்த வீரத் திருமகள், வெற்றித் திருமகள் இப்படிக் கோழை போல் கண்ணீர் வடிக்கலாமா? என்னுடைய நெஞ்சில் நெருப்பாய்ச் சுடர் விடுபவளே, நீயே உன் கண்ணீரால் அந்த நெருப்பை அணைக்கலாமா?''

வெறி கொண்டவன் போல் அவளை நெஞ்சாரத் தழுவி அணைத்துக் கொண்டான் சுந்தரபாண்டியன். முதல் வெற்றி தந்தவளை அடுத்த வெற்றிகளைத் தர இருந்தவளை அவன் நெஞ்சத்து மஞ்சத்தில் சிறை வைக்கத் துடித்தவன் போல் நடந்து கொண்டான்.

கயல்விழி திடீரென்று விழிப்புற்றவள் போல், மெல்ல அவன் பிடியிலிருந்து விலகிக் கொண்டாள். ''நான் இனி தங்கள் முன்பு அழப்போவதில்லை!'' என்று அழுது கொண்டே இளநகை புரிந்தாள் அவள். முத்துச் சுடரொளி காட்டிய அவள் பற்களின் ஒளியில் இனம் புரியாத இன்ப மயக்கம் கொண்டான் இளவரசன்.

''கயல்விழி! திருக்கொடுங்குன்றத்தில் மங்கையொரு பாகரின் முன்பாக நீ என் மறு பாதியாவதாக வாக்களித்தாய். பின்பு ஏலமலைக் காட்டின் நிலவில் நாம் தோணியில் சுற்றி வரும்போது, நம் திருமணம் முடிந்தவுடன் அந்த ஆரண்யத்துக் குடிலில் நாம் ஒன்றி வாழவேண்டும் என்றாய். அந்தச் சித்திரா பௌர்ணமியன்றே நீ எனக்கு மலர் தொடுத்து மாலை சூட்டி விட்டாய். இனி எதற்கு எனக்குக் கண்ணீர் மாலை?'' என்று கேட்டான்.

பழைய கனவுகளை அவன் மீண்டும் நினைவூட்டத் தொடங்கவே, கயல்விழிக்குத் தன் துயரத்துக்கு அணை போட்டுக் கொள்வது மிகவும் கடினமாக இருந்தது. அந்தக்

கனவுகளின் நினைவைக்கூட அவளால் இப்போது தாங்கிக் கொள்ள முடியவில்லை.

''அப்போது தாங்கள் புலவராக இருந்தீர்கள்! இப்போது அரசராக இருக்கிறீர்கள்! அப்போதும் நான் விறலியாக இருந்தேன்; இப்போதும் விறலியாக இருக்கிறேன்; இனி எப்போதுமே நான் விறலிதான். விறலி அரசியாக முடியாது; அரசியாகக் கூடாது!''

கயல்விழியின் சொல் ஒவ்வொன்றும் கூர்வேலாக அவன் உள்ளத்தில் தைத்தது. என்றாலும், ''அரசியாக வேண்டும் என்ற ஆசை இருந்திருந்தால் நான் தீயில் வெந்து கருகியிருப்பேன்!'' என்று உய்யவந்தாளிடம் அவள் கூறியதை நினைவில் கொண்டு, அவன் பொறுமையோடிருந் தான். பிணக்கமோ கோபமோ கொள்ளாமல் அவளைத் தன் வழிக்குத் திருப்ப முயன்றான்.

''கயல்விழி, புலவர்களைவிட அரசர்கள் உயர்ந்தவர் கள் அல்லர். புலவர்கள் காலங்கடந்தும் வாழ்பவர்கள். மக்களின் சிந்தனையிலும், இதயத்திலும் ஒளியூட்டி நின்று அவர்களைக் காக்கும் காவலர்கள். அரச வாழ்வு அரியணையால் உயர்வு பெறுவது. ஆனால் புலவனாகிய என்னை மணக்க விரும்பிய நீ அரசனாகிய என்னைக் கண்டு அஞ்சவேண்டாம்.''

''புலவர்களை நான் தாழ்ந்தவர்களாகவோ அரசர்களை உயர்ந்தவர்களாகவோ நினைக்கவில்லை. இருவரும் வெவ்வேறான தன்மைகள், பழக்க வழக்கங்கள், பண்புகள், கொண்டவர்கள். ஒரு வகையில் புலவர்கள் உலக நியதிக்குக் கட்டுப்படாத விண்ணகத்துப் பறவை இனம் போன்றவர்கள்! குடிமக்களுக்கோ, வேற்றுநாட்டு அரசர்களுக்கோ, சுற்றத் துக்கோ சூழலுக்கோ, சாதி குல வழக்கிற்கோ கட்டுப்படாத சித்தர்கள் அவர்கள். நாட்டை ஆளும் அரசர்களோ குடிமக்களுக்குப் புறவாழ்விலும், அகவாழ்விலும் வழிகாட்டிகளாக இருக்க வேண்டியவர்கள்.''

சுந்தரபாண்டியன் கயல்விழியிடம் எவ்வளவோ எடுத்துரைத்தான். புலவர் விழுப்பரையர், பெரிய பாண்டியர், கோப்பெருந்தேவி ஆகியவர்களே திருமணத்தை நடத்த விரும்பும்போது, அவர்கள் எல்லாவற்றையுமே சீர்தூக்கிப் பார்த்துவிட்டுத்தான் முடிவுக்கு வந்திருப்பார்கள் என்றான். அவளிடம் தெளிவான சிந்தனையோடு வாதிட்டுப் பார்த்தான். சில சமயங்களில் அவள் பதிலளித்தாள்; சில சமயம் அவள் கண்ணீர் உதிர்த்தாள், தான் அழவில்லை என்று வாக்களித்ததையும் மறந்துவிட்டு.

''இதோ பார்! சுந்தரபாண்டியனும் அவனுடைய நாடும் பலம் பெற்று வாழவேண்டும் என்று நீ விரும்பினால் இனியும் என்னிடம் நீ வாதிட்டு மறுக்கக்கூடாது. நாம் மதுரையில் வெற்றிவிழா முடிந்தவுடன் திருக்கொடுங்குன்றத்துக்குச் செல்கிறோம். கொடுங்குன்றத்தில் திருமணம் நிறைவேறிய வுடன் ஏலமலைக் காட்டின் ஆரண்யக் குடிலுக்குப் போகிறோம். அதற்குள் அடுத்த போரும் என்னைத் தேடி வந்துவிடும்.''

''அடுத்த போரா?''– நடுங்கினாள் கயல்விழி.

''கயல்விழி! போர்கள் இல்லாமல் அரச வாழ்வு எப்படி நிலைக்கும்? இத்தனை ஆண்டுகளாகப் போராடிப் பெற்ற களைப்பையும் சோர்வையும் துன்பத்தையும் மறப்பதற்காகத் தான் நான் இப்போது உன் கரம் பற்றத் துடிக்கிறேன். நாட்டை மீட்பதற்காக நாம் வெளி உலகில் மட்டுமா போராடியிருக்கிறோம்? நமக்குள்ளே எத்தனை எத்தனை போராட்டங்கள் நடத்தி துறவு வாழ்க்கை வாழ்ந்திருக்கிறோம்? கயல்விழி! அரசனாக இருந்தாலும் நானும் மனிதன்தானே கயல்விழி! வாழ்வதற்காகத்தானே நாம் போராடுகிறோம். இதுவரையில் நான் ஏற்ற துன்பங்களை மறக்கச் செய்வதற்கும், இனி ஏற்கப் போகும் துன்பங்களை வெல்வதற்கும் நீ உன்னையே தந்து விடு; நீ உன்னைத் தந்துவிடு கயல்விழி! மறுக்காமல் தந்துவிடு.''

அவன் துடித்தான், தவித்தான், வரம் கேட்கும் பக்தனைப்போல் அவளிடம் முறையிட்டான். கயல்விழியின் உள்ளம் ஆயிரமாயிரம் சுக்கல்களாக உடைபட்டு நொறுங்குவதை அவனால் உணரமுடியவில்லை. பித்தனாகி விட்டான்.

''அடுத்த போர் என்று கூறினீர்களே!'' என்று கேட்டாள் கயல்விழி.

''அடுத்த போர் மிகமிகப் பயங்கரமான போராக இருக்கும். இந்தப் போரின் முடிவில் ஒன்று பாண்டிய சாம்ராஜ்யம் நிலைத்து நிற்கும்; அல்லது கோசல சாம்ராஜ்யம் நிலைத்து நிற்கும். ஒன்று நம்முடைய மீனக் கொடி வடக்கே கன்னட நாட்டுத் துவார சமுத்திரத்தில் பறக்கும்; அல்லது அவர்களது புலித் தலைக் கொடி மதுரையில் பறக்கும்.''

''கோசல சாம்ராஜ்யம் என்றால் காஞ்சியில் நாம் சந்தித்தோமே இளவரசி பாமினி, அவரது நாடுதானே.''

''ஆமாம்; அவள் தந்தை வீரநரசிம்மர் இப்போது நம் மீது போர் தொடுக்கத் துணிந்துவிட்டார். சோழ ராஜ்யத்துப் போரைவிடப் பயங்கரமான போராக அது இருக்கும்.''

''இளவரசே! இனி நமக்குப் போர் வேண்டாம்!'' என்று தன் இரு கரங்களையும் கூப்பிக்கொண்டு அவனிடம் முறையிட்டாள் கயல்விழி. ''இரண்டு பெரும் போர்களை இந்த வயதுக்குள் நான் கண்ணாரக் கண்டுவிட்டேன். இதன் பயங்கரமான கொடுமைகளையும் அநுபவித்துவிட்டேன். இப்போது நாம் நடத்திய போர் நம் சொந்த நாட்டின் உரிமையை மீட்பதற்காக நடத்திய போர், அடிமைத்தனத்தைச் சுட்டெரிப்பதற்காக நாம் போர் தொடுத்தோம். இனி நம் வாழ்நாள் முழுவதுமே நமக்குப் போர் வேண்டாம். இளவரசே! பாண்டிய நாட்டு ஆண்கள் அனைவரையும் களத்துக்குப் பலிகொடுத்து விட்டுப் பெண்களை அமங்கலிகளாக்கும் போர் இனி நமக்கு வேண்டாம்!'' என்று கதறினாள் கயல்விழி.

# 14. யாருக்கு வெற்றி?

சுந்தரபாண்டியனின் பிடி கயல்விழியின் மென்மையான கரத்தினூடே மின்னலின் அனலாகப் பரவியது. வேதனையில் வெந்து கருகிக்கொண்டிருந்த அவன் தன் வேதனைத் தீ முழுவதையும் அவளிடம் கொழுந்துவிட்டெரியச் செய்தான்.

''கயல்விழி! இந்தப் போரை நாம் தவிர்க்க முடியாதென்று தோன்றுகிறது. போருக்கு நான் அஞ்சியவனுமல்ல. ஆனால் வீர நரசிம்மனோடு போரிட்டு நான் மடிய நேர்ந்தாலும், வெற்றி வீரனாகவே மடிகிறேன் என்ற மன நிறைவு எனக்கு வேண்டும்!''

''மரணத்தைப் பற்றி இனியும் என்னிடம் பேசாதீர்கள்'' என்று கெஞ்சினாள் கயல்விழி. ''தாங்கள் வாழ்ந்தாலே இந்நாடு வாழும். தங்களுக்காகவே நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.''

''நீ வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறாய். எப்போது என்னோடு ஒன்றிவாழப்போகிறாய்? எப்போது என் தலைவியாகவும் அரசியாகவும் வாழப் போகிறாய்? அதைச்சொல்!''

கயல்விழி மறுமொழி கூறவில்லை. தாமரைக் குளத்தின் தென்றல் கூட அசையாது நின்றது. மரங்களுக்கு மேலே நிலவு எட்டிப் பார்த்தது.

''கயல்விழி! மரணம் என்பது எனக்குத் துச்சமானது. அந்தத் துச்சத்தைத்தான் நான் முதல் முதலில் வெற்றி கொண்டேன். அந்த வெற்றிதான் நம் நாட்டுக்கும் வெற்றி தந்தது. என்னுடைய வெற்றி இப்போது பாதி வெற்றியாக நிற்கிறது. வீர நரசிம்மனைக் கூட நான் வென்றுவிடுவேன்.

ஆனால், அதற்கு முன்பாக நான் வெற்றி கொள்ள வேண்டிய மிகப் பெரிய சாம்ராஜ்யம் ஒன்று இருக்கிறது—அது இதோ இருக்கிறது!''

கயல்விழியின் நெஞ்சத்துக்கு நேரே வேல் முனையைப் போன்ற தன் சிறு விரலைச் சுட்டிக் காட்டினான் சுந்தரபாண்டியன்.

''என்னுடைய ஒரு கனவை நிறைவேற்றிவிட்டேன். நிறைவேற்றிய கனவை என்னால் கட்டிக் காக்கவும் முடியும். ஆனால் உலகத்திலேயே நான் வெற்றி கொள்ளத் துடித்த மிகப் பெரிய சாம்ராஜ்யம் நீதான். இமயத்தையே வெற்றி கொண்டு உனக்குக் காணிக்கையாக்குகிறேன். நீ மட்டிலும் உன் இதயமாகிய புனிதமான சாம்ராஜ்யத்தை எனக்கு வழங்கிவிடு! லட்சக்கணக்கான மக்களின் உள்ளத்தில் தலைவனாக வீற்றிருக்கும் நான், உன் உள்ளக் கோயிலில் புகலிடம் கேட்கிறேன். உனக்கு இரக்கம் இருக்கிறதா, கயல்விழி?''

''இளவரசே! தாங்கள் அங்கு இனித்தானா இடம்கேட்க வேண்டும்? கொடுங்குன்றத்துக் கோயிலிலேயே தங்களை நான் என்னுள் பிரதிஷ்டை செய்து விட்டேன். தங்களைப் போல் என்னால் தங்களிடம் வாய்விட்டுப் பேச முடிய வில்லை. என்னுடைய எல்லாமுமே தாங்கள்தாம். இந்த நம்பிக்கை தங்களுக்கு இருந்தால் போதும்...''

''அப்படியானால் எப்போது நம்முடைய திருமணம்?''

''நம்முடைய திருமணம் முன்பே நிறைவேறி விட்டது. நம்முடைய திருமணத்தால் பிறந்துள்ள குழந்தைதான் இந்தப் புதிய பாண்டியநாடு! நாம் இருவரும் வரம் கேட்டு, தவமிருந்து, ஆடிப்பாடி அழுது புலம்பி, துன்பங்களை ஏற்று பெற்றெடுத்த சின்னஞ்சிறு கண்மணி இந்தப் பாண்டியநாடு! பிறந்தவுடனேயே நம் குழந்தைக்குத் துன்பம் வரப் போகிறதென்ற செய்தியைச் சொல்கிறீர்கள், அதைக் கேட்டதிலிருந்து நான் குழம்பிப் போயிருக்கிறேன்.''

''நம் குழந்தையைக் காப்பாற்றும் மருந்து உன்னிடம் தான் இருக்கிறது'' என்றான் சுந்தரபாண்டியன்.

நீண்ட பெருமூச்சு விட்டாள் கயல்விழி. சுற்றிலும் இரவு நேரத் தொடக்கத்தின் இனிய ஒலிகள் எழும்பிக் கொண்டிருந்தன. சில் வண்டுகளின் ஒலி, துள்ளும் மீன்களின் ஒலி, அன்னங்களின் ஊடல் ஒலி...இவ்வாறு பல்வகை ஒலிகள் ஒன்று சேர்ந்து அந்தக் குளத்தங்கரையில் இழைந்தன.

வானத் தடாகத்திலோ ஒரே நிலவுத் தாமரை, கீழேயோ அவர்களுக்கெதிரில் நூற்றுக்கணக்கான தாமரைகள்; அல்லி மலர்கள். அந்த நிலவு மயக்கத்தில் கூம்பிய தாமரைக் கூட்டத்துக்கும் மிதந்த அன்னங்களுக்கும் வேறுபாடே தெரியவில்லை.

இனியும் சுந்தர பாண்டியனிடம் ஏதும் பேசினால் அவன் திடீரென்று அங்கிருந்து எழுந்து போய்விடுவான் போல் கயல்விழிக்குத் தோன்றியது! விரக்தி கொண்டவனாக அவன் மாறிவிட்டால் அவனைக் கண்ணால் காணும் வாய்ப்புக்கூட அவளுக்குக் கிடைக்காது. அவள் பேசிய அவ்வளவும் அவன் இதயத்தில் தாமரைகளாக மலர்ந்து விட்டன. 'அவர் மீது அணுவளவும் தவறில்லை. இசைவு கூறும் பாக்கியம்தான் எனக்கு இல்லை' என்று அவள் நினைத்தாள்.

சுந்தரபாண்டியனின் கண்களில் கயல்விழியின் கண்கள் பதிந்தன. நகர்ந்து சென்று அவன் முழங்காலைப் பற்றிக் கொண்டு அதில் தன் தலையைச் சாய்த்தாள். தனது வலிமை அனைத்தையுமே அவனிடம் தாரைவார்த்து விட்டவள்போல் அவனிடம் சரணடைந்து விட்டாள்.

''என்னையே வழங்கிவிடுமாறு கேட்கிறீர்கள். தாங்கள் கேட்குமளவுக்குத் தங்களைக் கொண்டு வந்துவிட்ட துர்ப்பாக்கியசாலி நான்! ஆம், நான் துர்ப்பாக்கியசாலி தான்! அதனால் தான் என்னை அரசியாக்க வேண்டாம் என்றேன். அரியாசனத்தில் தாங்கள் எனக்குச் சரியாசனம் பங்கிட்டுத்

தரவேண்டும். இந்தப் பிறவியில் அதில் அமருவதற்கு எனக்குப் பேறு கிடையாது. ஆனாலும் நான் தங்களுடையவள். தங்களுடையவளேதான்! தயை செய்து என்னை நீங்கள் உங்கள் அன்புக்குப் பாத்திரமான விறலியாக ஏற்றுக் கொள்ளுங்கள், பாணர் குல மங்கையாக, ஆடல் நங்கையாக, நான் எவ்வாறு பிறந்தேனோ, வளர்ந்தேனோ அவ்வாறே ஏற்றுக்கொள்ளுங்கள். அரசர்களின் அன்புக்குப் பாத்திரமான நங்கையர் உண்டல்லவா? நான் உங்களுக்கே ஆட்பட்டு விட்டேன். ஆனால்... ஆனால்...''

திடுக்கிட்டான் சுந்தரபாண்டியன். அரச வாழ்வு கண்டு அவள் அஞ்சி நடுங்கியதற்காக அவன் திடுக்கிடவில்லை. தன்னையே அவள் தாழ்த்திக்கொண்டு அவனிடம் சரணடைந்தது கண்டே துணுக்குற்றான்.

''ஆனால்...''

''நான் தங்களின் அடிமைப் பெண்ணாகவே இருக் கிறேன். தங்களின் அடிமையாகவே என்னை ஏற்றுக் கொள்ளுங்கள். பாண்டிய சாம்ராஜ்யத்தின் அரியாசனத்தை அலங்கரிப்பதற்கு ஏற்றதோர் அரசகுமாரியைத் தாங்கள் மணந்து கொள்ளுங்கள்!''

''கயல்விழி!''

கயல்விழி அவன் மடியில் நினைவிழந்து மயங்கிக் கிடந்தாள். பேச்சில்லை; மூச்சில்லை; எவ்விதச் சலனமு மில்லை. கொற்றவையாகக் காட்சியளித்த அதே பெண் இவ்வளவு மென்மையான உணர்வுகளையெல்லாம் கொண்டவளா?

சுந்தரபாண்டியன் அப்படியே அமர்ந்திருந்தான். அவ னுடைய கண்ணீர் அவள் முகத்தை நனைத்தது; நனைத்துக் கொண்டே இருந்தது. சற்று நேரத்தில் அவள் தன் விழி திறந்தாள். அவன் முகத்தில் துயரம் தோய்ந்த புன்னகை நெளிந்தது.

''இப்படியே தங்கள் மடியில் படுத்து உறங்கி விடட்டுமா நான்? இதைவிடப் பெரிதல்லவே எனக்கு அரியாசனம்? இப்படியே உறங்கினால் ஓராயிரம் இன்பக் கனவுகள் காண்பேனே!''

''உறங்க முடியுமா உன்னால்?''

'கலீர்' என்று சிரித்துவிட்டாள் கயல்விழி. அருகி லிருந்த ஒரு சிறு அல்லி மலரைக் கொய்து அவள் கூந்தலில் மெல்லச் செருகிவிட்டான் சுந்தரபாண்டியன். செருகிக் கொண்டே ''உனக்கு நினைவிருக்கிறதா? திருக்கொடுங் குன்றத்து மங்கையொருபாகர் இப்படித்தானே தமது மங்கை நல்லாளுக்குச் சூட்டிவிடுகிறார்!''

''ஆமாம், அதேபோல் தான் அன்று ஓர் இளம் புலவரும் ஒரு பாணர் குலப் பெண்ணுக்குச் சூட்டிவிட்டார்–அது தங்களுக்கு நினைவிருக்கிறதா?''

''இன்றும் நான் உனக்குப் புலவன்தான்!'' என்றான் சுந்தரபாண்டியன். ''நீ விரும்பினால் நான் நாட்டைத் துறந்துவிட்டு ஏடும் எழுத்தாணியும் எடுத்துக்கொண்டு உன்னோடு ஏலமலைக் காட்டுக்கே வந்துவிடுகிறேன். சேரநாட்டு ஆட்சியைத் துறந்துவிட்டுச் சிலம்புப் பாட வில்லையா இளங்கோ? அப்படியே நானும் ஏதாவது காவியம் பாடுகிறேன்!''

''வேண்டாம், இளவரசே! விளையாட்டுக்குக்கூட இப்படிச் சொல்லாதீர்கள்'' என்றாள் கயல்விழி. ''தங்களைப் போன்ற ஒரு வீரரைத் தலைவராகப் பெற்றதால் இந்த நாடு எவ்வளவோ பெருமை பெற்றிருக்கிறது. இனியும் பெறப் போகிறது. நாம் பெற்ற குழந்தைகள் இந்த நாட்டுக் குடிமக்கள்! மக்களை விட்டுவிட்டு யாரும் காட்டுக்கும் மலைக்கும் ஓடுவார்களா?''

''உன்னைச் சொல்லாலும் வெல்ல முடியாது போலிருக்கிறதே!'' என்று கூறி நகைத்தான் சுந்தரபாண்டியன்.

''முதலில் தாங்கள் வென்றது என்னைத்தான்'' என்றாள் கயல்விழி. ''வைகைக் கரையில் என்னைத் தாங்கள் வெற்றி கொண்டு விட்டீர்கள். தடுத்தாட்கொண்டு விட்டீர்கள்.''

நிலவொளியில் அவர்கள் எழுந்து நடந்து மாளிகைக்குள் புகுந்தார்கள். மறுநாள் அரச பரிவாரம் பொன்னமராவதியிலிருந்து மதுரைக்குக் கிளம்பியது.

# 15. சாதனையின் சோதனை



நான்மாடக் கூடலாம் மதுரைத் திருநகரம் வெற்றி கொண்ட இளைய பாண்டியனை வரவேற்பதில் களிவெறி கொண்டு விட்டது. முன்னர் பட்ட அழிவிலிருந்து அந்த நகரத்தையும், அதன் மக்களையும் மீண்டும் உருவாக்கியவன் அவன். நாட்டில் மண்டிக் கிடந்த அடிமை இருளைச் சுட்டெரித்துச் செயற்கரும் செயல் முடித்துத் திரும்பியவன்-மதுரையைப் பின்பற்றிப் பாண்டிய நாடே விழாக்கோலம் கொண்டு குதூகலித்தது.

சுந்தர பாண்டியன் தன் மக்களுக்கு வெற்றி விழாச் செய்தியை அனுப்பினான். தலைவர்கள் அதனை முரசுகள் மூலம் சதுக்கத்துக்குச் சதுக்கம் சந்திக்குச் சந்தி ஒவ்வொரு ஊரிலும் பரப்பினார்கள்.

''இந்த வெற்றி உங்களுடைய உழைப்பின் வெற்றி; ஊக்கத்தின் வெற்றி; ஒற்றுமையின் வெற்றி! நம்முடைய வெற்றி உணர்வு விழாக் களிப்போடு ஓய்ந்துவிடக் கூடாது. வெற்றித் திருமகளை இன்றுதான் நாம் மணந்துகொண்டு பாண்டிய நாட்டுக்கு அழைத்து வந்திருக்கிறோம். அவளைப் பேணிக் காக்க வேண்டிய கடமை நம்முடையது. உழவர், தொழிலாளர், வணிகர், அதிகாரிகள், படைவீரர்கள், ஆன்

றோர், அறவோர் அனைவருமே தங்கள் தங்கள் தொழிலை முன்னிலும் பன்மடங்கு சிறப்பாகச் செய்ய வேண்டும். நாட்டைக் காக்கவும், வீட்டைக் காக்கவும் ஒவ்வொருவரும் நெறி தவறாது உழைக்க வேண்டும். அடுத்த போர் நம்மைத் தேடி வந்தால் அதிலும் நாம் நிச்சயம் வெற்றி பெறுவோம்..''

செய்தியோடு நிறுத்தாமல் அந்தச் செய்தி செயலாக வளர்வதற்காகவும் வேண்டிய ஏற்பாடுகளை மளமளவென்று கவனித்தான் சுந்தரபாண்டியன். கலைஞர்களையும் புலவர்களையும் மக்கள் கூட்டத்திடையே அனுப்பி வைத்து அவர்களுடைய இதயத்துக்கும் சிந்தனைக்கும் உணவு கொடுக்கச் செய்தான். கோசல சாம்ராஜ்யத்தின் பகைமையைப் பற்றிய செய்தியும் மக்களிடையே பரவத் தொடங்கி, அவர்களிடையே விழிப்பு உணர்ச்சி மிகுந்தது.

விழிப்புடன் இருந்த பாண்டிய நாட்டு அரண்மனைக்குள் ஒரு திகைப்பூட்டும் செய்தி புகுந்தது. மழவச் சக்கரவர்த்தியே அந்தச் செய்தியைக் கொண்டு வந்திருந்தார்.

அரண்மனை அந்தரங்க ஆலோசனை மண்டபத்தில் பெரிய பாண்டியர், சுந்தரபாண்டியன், விழுப்பரையர், மழவச் சக்கரவர்த்தி ஆகிய நால்வரும் கூடியிருந்தார்கள்.

''திறைப்பொருள் அனுப்பி வைப்பதாகக் கூறிய நாளில் இராஜராஜன் திறை அனுப்பவில்லை. நம்முடைய காவலர்களை அனுப்பி நினைவூட்டியபோது, 'பாண்டியர்கள் திறை அனுப்பும் நாள் திரும்பப் போகிறதென்று சொல்லுங்கள்' என்று கூறிவிட்டானாம். சாம்ராஜ்யம் பறிபோய்விட்டாலும் அந்தப் பழைய செறுக்கு இன்னும் அவனை விட்டு அகலவில்லை.''

''வெறும் செருக்கில்லை. அவனுக்குப் பின்னே உள்ள துணை வலிமை அவனை இவ்வாறு நடந்துகொள்ளச் சொல்கிறது'' என்றார் பெரிய பாண்டியர்.

''சயங்கொண்ட சோழ வல்லபர் இப்போது கங்காபுரியில்தானே இருக்கிறார்?'' என்று கேட்டார் விழுப்பரையர்.

''அவரைப் பற்றித்தான் இப்போது சொல்ல வந்தேன்'' என்று மீண்டும் தொடங்கினார் மழவச் சக்கரவர்த்தி. ''சோழ வல்லபரே இப்போது இராஜராஜனின் வலது கரமாக விளங்குகிறார். அவருடைய ஆலோசனைகளின் படியே யாவும் நடைபெறுகின்றன. நமக்குத் திறைப் பொருளை மறுத்த மறுநாளே அவர் பெருத்த பொருட்குவையோடு காஞ்சிக்குத் திரும்பியதாகச் செய்தி கிடைத்திருக்கிறது.''

சுந்தரபாண்டியன் துடித்தான். படையெடுப்பின்போது சோழ நாட்டின் தன பண்டாரம் வெறுமையாகக் காட்சி யளித்தது. பொருளை ஒளித்து வைத்துவிட்டு, ''ஏதுமே இல்லை!'' என்று அப்போது சாதித்தான். அதில் ஒரு பகுதியை முதலில் திறையாகப் பெறுவதற்கே பொன்னமராவதியில் ஒப்பந்தம் நடைபெற்றது.

''அப்போதே ஒப்பந்த ஓலையைக் கிழித்தெறிந்து விட்டான். செய்தி கேட்டும் நாம் பேசாதிருந்தோம். இப்போது நமக்குச் சேரவேண்டிய திறைப்பொருள் நம்மீது படையெடுக்கச் செய்வதற்காக வீர நரசிம்மனுக்கு அனுப்பப் பட்டிருக்கிறது'' என்றான் சுந்தரபாண்டியன்.

''பொருளோடு சென்றிருக்கும் சோழவல்லபர் நம் நாட்டில் அமைச்சராக இருந்தவர். நம்முடைய எல்லைகள், நாட்டு இரகசியங்கள், மக்கள் மனப்போக்கு யாவற்றையும் அறிந்தவர். வீர நரசிம்மனின் மனத்தைக் கலைக்கும் சொல்லாற்றலும் அவரிடம் உண்டு. உடனடியாக நாம் ஏதும் நடவடிக்கை எடுத்தாக வேண்டும்!'' மழவச் சக்கரவர்த்தி மெய்யாகவே அதிர்ச்சியடைந்திருந்தார்.

பெரியபாண்டியரும் விழுப்பரையரும் மௌனமாகச் சுந்தரபாண்டியனின் முகத்தைப் பார்த்தனர்.

''நீ என்ன கூறுகிறாய்?'' என்று கேட்டார் பாண்டியர்.

''நாம் இப்போதே படைகளை அனுப்பித் தீர வேண்டும். இல்லாவிட்டால் நம்முடைய இந்த வெற்றி நிலைக்காது. நம்முடைய வலிமையைக் குறைவாக மதிப்பிட்டு விடுவார் வீரநரசிம்மன். மழவச் சக்கரவர்த்தியின் தலைமையில் வீரர்களைக் கொண்டு வருவோம்.

இராஜராஜனைச் சிறை செய்து மதுரைக்குக் கொண்டு வருவோம். அவனை நம்மிடம் வைத்துக்கொண்டு பிறகு கோசல நாட்டுடன் போர் தொடுப்போம். அல்லது அவர்கள் இணங்கினால் நட்புடன் பேசுவோம்.''

''வீரநரசிம்மன் இணங்குவாரா?'' என்று கேட்டார் பாண்டியர்.

''நாம் இதற்கு இணங்கலாமா!'' என்று கேட்டான் சுந்தர பாண்டியன். ''வீரத்துக்கு உறைவிடம் வீரநரசிம்மன் மட்டும் தான் என்று நினைக்க நாம் இடம் கொடுத்துவிடக் கூடாது. வருவது வரட்டும். நாம் முதலில் தாக்குதல் நடத்துவதே போருக்குரிய இலக்கணம்!''

தம்பியின் கூற்றை மறுக்கவும் முடியாமல் ஏற்றுக் கொள்ளவும் முடியாமல் தயங்கினார் குலசேகரபாண்டியர். சுந்தரபாண்டியனின் கருத்தே சிறந்தது என்று அவருக்கும் தோன்றியது. ஆனால், 'அஞ்சுவது அஞ்சாமை பேதமை' யல்லவா? வீரநரசிம்மனிடம் வலியச் சென்று போருக்கு அழைக்கிறானே இவன்!

''அரசர் அவர்களுக்கும் இளவரசர் அவர்களுக்கும் ஒரு சிறு ஆலோசனை...'' என்றார் புலவர் விழுப்பரையர்.

''கூறுங்கள்!'' என்றார்கள் இருவரும் ஒரே குரலில்.

''இளவரசர் படைகளை உடனடியாக அனுப்ப வேண்டியதும் நியாயம்தான். இராஜராஜனை அவன் போக்கில் விட்டு வைக்கவும் கூடாது. அதே சமயம் வீரநரசிம்மன் நம் மீது கடும் பகைகொண்டு விடாமலும் பார்த்துக் கொள்ளவேண்டும்.''

''அது எப்படி முடியும்? 'அம்பு எய்து வீழ்த்தவும் வேண்டும்; வீழ்ந்தவருக்கு வேதனையும் கூடாது' என்றால், அது நடைபெறக் கூடியதா?'' என்றான் இளைய பாண்டியன்.

''வீர நரசிம்மரின் பகைமை நமக்கு ஆபத்தானது. அதைத் தவிர்ப்பதற்கு நாம் தயங்கக் கூடாது. மழவச் சக்கரவர்த்தி கங்காபுரியில் போர் நடத்தட்டும். நான் காஞ்சி நகருக்கு நட்புறவு பேசத் தூது போகிறேன்!''

விழுப்பரையரை அன்போடு தழுவிக் கொண்டார் பாண்டியர். ஒரே சமயத்தில் இரு வழிகளையும் பின்

பற்றும் இராஜதந்திர ஆலோசனை அவருக்குச் சமய சஞ்சீவியாகப்பட்டது.

"அப்படியே செய்வோம். நான் படையெடுத்துச் செல்கிறேன்; புலவர் ஏடு எடுத்துச் செல்லட்டும்" என்றார் மழவச் சக்கரவர்த்தி.

சுந்தரபாண்டியனுக்கு அது பயன் தர முடியாத முயற்சியாகத் தோன்றியது. "ஏற்கனவே அங்கு சயங்கொண்ட சோழவல்லபர் வேறு இருக்கிறார். இந்த நிலையில் நாம் தூது அனுப்புவது நேருக்கு மாறாகவே முடியலாம். புலவர் அவர்களை நாமே வலிந்து கோசல நாட்டுச் சிறைக்கு அனுப்புகிறோம். நாம் இராஜராஜனைச் சிறை செய்வதற்குப் பிரதியாக அவர்களுடைய சிறைக்கு விழுப்பரையர் அவர்களை நாமே வழியனுப்பி வைக்கிறோம்."

"நான் அப்படியே சிறைப்பட்டால் என்ன நேர்ந்து விடும்? சிறையிலிருப்போரை விடுவிப்பதற்காகவாவது இருநாடுகளும் நட்புக்கொள்ள என்னால் ஒரு வாய்ப்புக் கிடைக்குமே!" என்றார் விழுப்பரையர்.

தியாகத்திலேயே ஊறித் திளைக்கும் அவர் உள்ளம் அவர்கள் அனைவரையும் நெக்குருகச் செய்தது.

"தூது செல்லும் புலவனை அவர் சிறைப்படுத்த மாட்டார். அப்படியே ஏதும் நடந்தாலும் நாட்டுக்கு நன்மையாகத்தான் முடியும். ஆகவே, தூது செல்ல எனக்கு அனுமதி தாருங்கள்."

புலவருக்கும் படைத்தலைவருக்கும் அவரவர்களின் சேவையை நிறைவேற்ற அனுமதி கிடைத்துவிட்டது. சுந்தரபாண்டியன் வீரர்களை அனுப்பிவைக்கும் வேலையில் மூழ்கிவிட்டான். விழுப்பரையர் பெரிய பாண்டியரிடம் செய்திகளைக் கேட்டுக்கொண்டார்.

அரண்மனையில் அந்தப்புரத்துக்குள் செய்தி எட்டியது. போரும் உடன்பாடும் ஒன்றாக நடைபெறப் போகும் செய்தி பற்றிக் கயல்விழியும் அறிந்துகொண்டாள். பரபரப்பு மிக்க சூழ்நிலை அரண்மனைக்குள்ளேயும் உருவாகிவிட்டது.

உடன்பாடு வெற்றி பெறும் என்ற நம்பிக்கை யாருக்குமே அங்கு இல்லை.

விழுப்பரையரைத் தனியே கண்டு அவர் கரங்கள் இரண்டையும் பற்றிக் கொண்டாள் கயல்விழி. "நானும் தங்களுடன் காஞ்சிக்குப் புறப்பட்டு வரவேண்டும். எப்படியாவது என்னையும் தங்களுடன் அழைத்துச் செல்ல மறுக்காதீர்கள்! யார் மறுத்தாலும் என்னை விட்டு விடாதீர்கள்!" என்றாள்.

விழுப்பரையருக்குத் தம்முடைய தூது முயற்சியை விடக் கயல்விழியின் வேண்டுகோள் பெரிய சோதனையாகத் தோன்றியது.

# 16. பாண்டியனின் சபதம்



சுந்தரபாண்டியன் கங்காபுரிக்குப் படைகளை அனுப்பி வைப்பதில் தீவிரமாக முனைந்து நின்ற அதே சமயத்தில் கயல்விழியும் தன்னுடைய தூது முயற்சியில் தீவிரமாக முனைந்திருந்தாள். "பெரியவர்களின் அனுமதியும் சுந்தர பாண்டியனின் இசைவும் இருந்தால் நான் உன்னைக் காஞ்சி நகரத்துக்கு அழைத்துக் கொண்டு போகிறேன்" என்று அவளிடம் வாக்களித்து விட்டார் விழுப்பரையர்.

கோப்பெருந்தேவியைத் தன் முயற்சிக்கு முதல் துணையாகப் பற்றிக்கொண்டாள் கயல்விழி. அவரைக் கரையாய்க் கரைத்து அவரிடம் மன்றாடத் தொடங்கினாள். தேவியாருக்கு ஏதுமே புரியவில்லை. சுந்தரபாண்டியனின் மனம் திருமணத்தில் நாட்டம் கொண்டிருப்பது அவருக்குத் தெரியும். திருமணப் பெண்ணோ எந்த சமயத்தில் பிரிந்து செல்லத் துடிக்கிறாள்...

''கயல்விழி! திருமணம் செய்துகொண்டு அரண்மனையை அலங்கரிக்க வேண்டிய பெண் இப்படி வந்து மன்றாடுகிறாயே, இது சரிதானா?'' என்று கேட்டார் அவர். ''எதிர்காலத்துப் பட்டத்தரசி நீ! பகைவர் நாட்டுக்கு நீ தூது செல்வது பொருத்தமா என்று யோசித்துப் பார்.''

''அரண்மனையை நான் அலங்கரிக்க வேண்டுமானால் அடுத்த போரில் இந்த அரண்மனை மிஞ்சியிருக்க வேண்டுமே? நான் பட்டத்தரசியாக வேண்டுமானால் இளவரசருக்குப் பட்டம் நிலைக்க வேண்டுமே? அதனால் தான் நான் தங்களிடம் அனுமதி வேண்டுகிறேன்'' என்றாள் கயல்விழி.

கோப்பெருந்தேவியார் பேரதிர்ச்சி அடைந்தார். பெரும்பாலும் போரும் அரசியலும் ஆண்களின் கடமைகள் என்றே இதுவரையில் நம்பியிருந்தார். இப்போது கயல்விழியின் கூற்று அவரைத் திடுக்கிட வைத்தது. என்றாலும், ''அதற்காகவே விழுப்பரையர் போகும்போது, நீயும் ஏன் போய்த் துன்புற வேண்டும்?'' என்று கேட்டார்.

''தேவியாரே! பெண்களாகிய நாம்தான் போரின் கொடுமைகளையும் துன்பங்களையும் மிகுதியாக அனுபவிப்பவர்கள். ஆண்களுக்கு என்ன? 'வெற்றி அல்லது வீர சுவர்க்கம்' என்று தோள் தட்டிக்கொண்டு அவர்கள் களத்தில் குதித்து விடுகிறார்கள். அவர்கள் மாண்டு போனால் நாமும் தீக்குளிக்கிறோம் என்றே வைத்துக் கொள்ளுங்கள். நிராதரவாக விடப்பட்ட குழந்தையின் கதி என்ன ஆவது! முதியவர்களின் கதி என்ன ஆவது! அவர்களுக்காக நாம் வாழ்ந்தாலும் துன்பம், மடிந்தவர்களுக்காக நாமும் மடிந்தாலும் துன்பம்; போரே நமக்குப் பெருந்துன்பம்.''

''கயல்விழி! நேரில் போரின் கொடுமையைக் கண்டதால் நீ எல்லாவற்றையும் உணர்ந்திருக்கிறாய். ஆனாலும் உன்னைப்போல் ஒரு பேதைப் பெண் எவ்வாறு நடக்கப் போவதைத் தடுத்து நிறுத்த முடியும்?''

''அங்கயற்கண்ணி அம்மையின்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு என்னால் முடிந்ததைச் செய்கிறேன். கோசல

சாம்ராஜ்யத்து அரசியாரிடமும் இளவரசியாரிடமும் எனக்குச் சிறிது பழக்கமுண்டு. நம்மைப் போலவே போர்களால் துன்புற்று அவர்களும் வருந்துவார்கள். வீர நரசிம்மருக்குத் தமது அரசியாரிடமும் பெண்களிடமும் பேரன்பு உண்டு. அந்த அன்பில் நம்பிக்கை வைத்து நான் செல்கிறேன்.''

அரசியார் யோசனையில் ஆழ்ந்து விட்டு , ''அரசரும் சுந்தரபாண்டியனும் இசைய வேண்டுமே?' என்று கேட்டார்.

''தாங்கள் மனம் வைத்தால் அரசர் இணங்கி விடுவார். பிறகு தாங்களும் அரசரும் விழுப்பரையரும் ஒன்றாகச் சேர்ந்து இளவரசரிடமும் கூறினால் அவரால் மறுக்க முடியாது. இளவரசருக்கு மட்டிலும் நான் கோசலநாட்டுப் பெண்டிரிடம் பேசப் போவது தெரிய வேண்டாம். புலவரோடு துணைக்குச் செல்வதுபோல் இருக்கட்டும்.''

கோப்பெருந்தேவியார் கயல்விழியைக் கண்ணீர் அருவியோடு தழுவிக்கொண்டு உச்சியில் முத்தமிட்டார்.

''கயல்விழி! பாண்டியநாடு உன்னைப்போல் ஒரு பெண்ணைப் பெற்றெடுத்ததாலேயே உயர்ந்து விட்டதம்மா! என் வயிற்றில் பிறந்த பெண்ணைப் பிரிந்திருப்பதுபோல் நீ திரும்பும் வரையில் நான் உனக்காகத் தவித்திருப்பேன். நான் மற்றவர்களிடம் கூறி ஏற்பாடு செய்கிறேன். நீ பத்திரமாகத் திரும்பிவிடு.''

புறப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்தன. மூன்று பெரியவர்களும் ஒரே குரலில் பேசியதால் சுந்தர பாண்டியனால் மறுத்துக் கூற முடியவில்லை. இனம் விளங்காத துன்ப உணர்ச்சி வண்டைப்போல் அவன் உள்ளத்தில் புகுந்து குடையத் தொடங்கியது. கயல்விழி எப்படித் தன்னைவிட்டுப் பிரிந்து செல்லத் துணிந்தாள் என்பது அவனுக்கே புதிராக இருந்தது.

ரதம் அரண்மனை வாயிலில் காத்து நின்றது. விழுப் பரையர் பெரிய பாண்டியரிடம் விடைபெற்றுக் கொள்வதற் காகச் சென்றார். ஆதிச்சதேவரும் கயல்விழியோடு புறப்படு வதாக இருந்ததால், அவரும் ரதத்தருகில் காத்து நின்றார். கோப்பெருந்தேவியாரிடமும் அரசரிடமும் வணங்கி

விடைபெற்றுக் கொண்டு, சுந்தர பாண்டியனின் கூடத்துக்கு வந்தாள் கயல்விழி.

சுந்தரபாண்டியன் தன் கரங்களைக் கட்டிக் கொண்டு ஆசனத்தில் சிலையென வீற்றிருந்தான். அவனுடைய கண்கள் இமைப்பதை மறந்தன. கயல்விழியின் புறத்தோற்றத்தை மட்டும் அவன் காணவில்லை. அவள் நெஞ்சையே இரு கூறாகக் கிழிப்பதுபோல் அவன் விழிமுனைகள் கூர்மை பெற்றிருந்தன.

அவள் முகத்தினூடே அகத்தையும், அகத்தினூடே அதன் ஆழத்தையும், அந்த ஆழத்தினூடே அதன் உட்பொருளையும் காணத் துடிப்பவன்போல் பார்த்தான். 'யார் இந்தப் பெண்? இவள் எங்கிருந்து என்னிடம் வந்தாள்? ஏன் வந்தாள்? இவள் எங்கு போகிறாள்? ஏன் போகிறாள்?' என்று தனக்குத்தானே அவன் கேட்டுக் கொண்டான். ஆனால் அவனால் ஏதுமே அறிந்துகொள்ள முடியவில்லை. அவனுக்கு எந்த விடையும் கிடைக்கவில்லை.

''தங்களிடம் விடைபெற்றுக் கொள்ள...'' அதற்கு மேல் பேச முடியாமல் பார்க்கத் துணிவின்றித் தலைகுனிந்து நின்றாள்.

''பெரியவர்களிடம் கூறிஎன்னைக் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டாய். அவர்கள் வாயிலாக என்னைச் செயலற்றவனாக்கி விட்டாய். இப்போது பெயரளவில் என்னிடம் விடை பெற வந்திருக்கிறாய்!''

மெல்லத் தரையில் முழந்தாளிட்டு அவன் பாதங்கள் இரண்டையும் தொட்டுத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள் கயல்விழி. அவளுடைய இருதயம் அவளுக்கே ஒரு சுமையாக வலித்தது. குமுறும் தன் உணர்ச்சிப் பெருக்கை எப்படியோ அடக்கிக் கொண்டாள்.

''தங்களுக்கும் நமது நாட்டுக்கும் அமைதி தேடி வரும் பெரும் பணிக்கு இப்போது புறப்படுகிறேன். நான் சிறு துரும்பிலும் அற்பமானவள். ஆனால் நான் மேற்கொண்டுள்ள பணியோ மிகவும் புனிதமானது. இதில் நான் வெற்றியடைய வேண்டுமானால் தங்களது உளம் நிறைந்த ஆசி எனக்கு

இருக்கவேண்டும். என் பணி வெல்ல வேண்டுமென்று முழு மனத்தோடு என்னை ஆசீர்வதித்து அனுப்புங்கள்.''

''உன்னை அனுப்பச் சொல்கிறாயா?'' என்று தொண்டை அடைக்கக் கேட்டான் சுந்தரபாண்டியன்.

''நான் தனியாகச் செல்லவில்லை; தங்களையும் என் எண்ணத்தில் சுமந்து கொண்டுதான் செல்கிறேன். விடை கொடுத்து அனுப்புங்கள்!''

''விடை கொடுப்பதற்கு முன்பாக நான் உன்னிடம் ஒரு முக்கியமான செய்தியைக் கூறவேண்டும்'' என்றான் அவன். அவள் தலை தூக்கிப் பார்த்தாள். அவன் கூற வந்த செய்தியைக் கூறாமலே தயங்கினான்.

''என்ன செய்தி?''

''பொன்னமராவதியிலேயே நான் இதைக் கூறியிருப்பேன். ஆனால் அதற்குள் நீ மூர்ச்சையுற்று விழுந்து விட்டாய். அதை இப்போது கூறுகிறேன்...''

இதைக் கேட்டவுடன் அவளுக்கு மீண்டும் மூச்சுத் திணறுவதுபோல இருந்தது. அவன் கூறினான்:

''உன் எண்ணத்தில் நீ என்னைச் சுமந்துகொண்டு போனால் போதாது. நான் சுந்தரபாண்டியன்! சுந்தர பாண்டியன் உன் உள்ளத்தில் நிலைக்க வேண்டுமானால் உன் உள்ளம் அவன் வாழத்தக்க அரண்மனையாக இருக்க வேண்டும். நீயே உன்னைத் தாழ்த்திக் கொள்ளும் வழக்கத்தை இந்தக் கணத்திலேயே கொன்றுவிடு. 'அடிமை' 'பணிப் பெண்' 'விறலி' என்ற நினைவெல்லாம் இன்றோடு ஒழியட்டும். நான் உன்னை அரசியாகத்தான் ஏற்றுக் கொள்ளப் போகிறேன். நீ எங்கு சென்றாலும் உன்னை முதலில் இந்த நாட்டு அரசி என்று நினைத்துக்கொள். அந்த எண்ணத்தோடு சென்று வா!''

''இளவரசே!'' எனப் பதறினாள் கயல்விழி.

''நான் உன்னை அரசியாகத்தான் ஏற்றுக் கொள்ளுவேன். இதுதான் என் முடிவு! இதுவே என் சபதம்!''

கயல்விழியின் கண்களுக்கு முன்னால் அந்த மாளிகையே சுழன்றது. பொறி கலங்கிப் போய் நின்றாள் அவள். அவளுடைய உச்சி முதல் உள்ளங்கால்வரையில் தீப்பற்றியது போன்ற ஓர் உணர்ச்சி பரவியது.

''சென்று வா! வென்று வா!'' என்றான் சுந்தரபாண்டியன், ''பாண்டிய நாட்டின் அரசியாவதற்குரிய எல்லா இலட்சணங்களும் உன்னிடம் இருக்கின்றன. போரில் நீ வெற்றி தந்தாய்; இப்போது அமைதியிலும் வெற்றி தேடிக் கொண்டு வருவாய். அரசியாரே, என் ஆசியோடும் வாழ்த்தோடும் சென்று வாருங்கள்!''

அருகிலிருந்த பொற்சிமிழில் குங்குமம் நிறைந்திருந் தது. அதை எடுத்து அவள் நெற்றியில் புருவங்களுக்கிடை யில் பொட்டிட்டு விட்டான் சுந்தரபாண்டியன். அந்தக் கரத்தைப் பற்றிக் கண்களில் ஒற்றிக்கொண்டு, மௌனமாக ரதத்தை நோக்கி மெல்ல நடந்தாள் கயல்விழி. அவளுடைய கால்கள் தடுமாறின.

# 17. சிங்கத்தின் கர்ஜனை



மழவச் சக்கரவர்த்தியிடம் பேசி ஒரு திட்டம் வகுத்துக் கொண்டு, பாண்டியப் படைகள் கங்காபுரியை நெருங்குவதற்கு முன்பாகவே காஞ்சிக்குப் போய்ச் சேர்ந்தார் விழுப்பரையர். அங்கிருந்த திருமுனைப்பாடி நாட்டு மாளிகை யைச் சுற்றிலும் கோசல நாட்டு ஒற்றர்கள் நடமாட்டம் மிகுதியாக இருந்தது. இருப்பினும் முதலில் அங்கேயே சென்று இறங்கிக் கொண்டார். கயல்விழியும் ஆதிச்ச தேவரும் ரதத்திலிருந்து இறங்கியபோது, அவர்களை இனம் கண்டு கொண்டார்கள் வீரநரசிம்மனின் ஒற்றர்கள். முன்பு பாணனாக வந்த பாண்டியனுடன் அரண்மனைக்கு வந்து தங்கியிருந்தவர்களல்லவா அவர்கள்?

விழுப்பரையருக்கு அங்கு வந்தவுடன் ஒரு நம்பிக்கை தரும் செய்தி கிடைத்தது. சயங்கொண்ட சோழ வல்லபர் முதல் நாளே காஞ்சியிலிருந்து புறப்பட்டு விட்டார் என்ற செய்திதான் அது. சோழ வல்லபர் அங்கிருந்தால் மிகவும் நிதானத்துடனேயே காலமறிந்து வீரநரசிம்மனைக் காண வேண்டும் என்று நினைத்திருந்தார் புலவர். இப்போதோ வழி நேராக இருந்தது.

ஆதிச்ச தேவரையும் கயல்விழியையும் திருமுனைப் பாடி மாளிகையில் தங்கச் செய்துவிட்டுத் தனியாக அவர் கோசல நாட்டு மாளிகைக்குப் புறப்பட்டார். பாண்டிய நாட்டு கயல் துள்ளும் கொடியோடு ரதம் ஒன்று தெருவில் செல்வதை அனைவருமே வியப்போடும் திகைப்போடும் பார்த்தனர். கோசல நாட்டு வீரர்களின் விழிகள் அதைக் கண்டு அனல் உமிழ்ந்தன. ஆனால் போர் தொடங்குவதற்குக் கட்டளை பிறக்கவில்லையாதலால் அவர்களால் ரதத்தைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. ஒற்றர்கள் கூட்டம் மட்டிலுமே சுறுசுறுப்பாக இயங்கியது.

மாளிகையின் வாயிற்காவலர் தலைவனிடம் செய்தியைக் கூறினார் விழுப்பரையர்: ''குலசேகர பாண்டியரிடமிருந்து சக்கரவர்த்திகள் வீரநரசிம்மருக்குத் திருமுகம் கொண்டு வந்திருக்கிறேனென்று கூறுங்கள். பாண்டிய நாட்டின் அரசவைப் புலவரான விழுப்பரையர் வந்திருப்பதாகத் தெரியப்படுத்துங்கள்.''

காவலன் திரும்பி வந்து விழுப்பரையரை அழைத்துச் சென்றான். வீரநரசிம்மனிடம் அதுவரை பேசிக் கொண்டிருந் தவர்கள் வெளியில் வந்து கொண்டிருந்தார்கள். நீண்ட கூடத்தின் பிற்பகுதியில் தனியே அமர்ந்திருந்தார் வீரநரசிம்மன். காவலர் தலைவன் உள்வாயில் வரையிலும் வந்து நின்று விட்டான்.

தம்மை நோக்கி வந்து கொண்டிருந்த புலவரின் தோற்றத்தை ஊடுருவிப் பார்த்தவாறே அமர்ந்திருந்தார் வீரநரசிம்மன். தோற்றத்திலும் நரசிம்மன்தான் அவர்.

''பாண்டியர் இருவரது அன்பையும் பாண்டிய நாட்டு மக்களின் அன்பையும் சுமந்து கொண்டு தங்களிடம் தூது வந்திருக்கிறேன். நான் பாண்டிய நாட்டின் அரசவைப் புலவன். விழுப்பரையர் என்று என்னை அழைப்பார்கள்.'' வீரநரசிம்மனுக்குப் பணிவோடு கரம் கூப்பி வணக்கம் செலுத்தினார் விழுப்பரையர்.

''ஓ! நீங்கள்தானா அந்தப் புலவர்? பாண்டிய நாட்டின் சாணக்கியரே, வாருங்கள்!'' என்று கர்ஜித்துக் கொண்டே இருக்கையைச் சுட்டிக் காட்டினார் வீர நரசிம்மன்.

ஓலையை நீட்டினார் புலவர். அதை வாங்கி அருகில் வைத்துக்கொண்டே, ''பாண்டிய நாட்டுப் புலவர்கள் என்றாலே என்னால் அவர்களை நம்ப முடியவில்லை; உங்களுடைய இளவரசனையும் நான் புலவனின் வேடத்தில் கண்டிருக்கிறேன்!'' என்றார்.

''அரசர்கள் மாறு வேடம் பூண்டு, உலவுவது அரச தர்மமல்லவா? அதற்கொப்ப இளவரசரும் நடந்து கொண்டிருப்பார்.''

விழுப்பரையரின் வயதும் பணிவும் புலமையும் வீரநரசிம்மனின் உள்ளத்தில் அவரைப்பற்றிய நல்லெண் ணத்தை உருவாக்கத் தொடங்கின. என்றாலும், அவரால் சுந்தர பாண்டியனின் செயலைப் பொறுக்க முடியவில்லை.

''நாங்கள் போர் தொடுக்கப் போகிறோம் என்பதை முன்னதாகவே அறிந்துகொண்டு எங்களிடம் உறவு பூண விரும்புவது போல் நடிப்பதற்கு வந்திருக்கிறீர்கள்! அப்படித் தானே?'' இப்படிக் கேட்டுவிட்டு எரிமலைபோல் பொங்கி எழுந்து சொற்களைக் கொட்டினார் வீரநரசிம்மன். நெருப்புச் சுடர் சூழ்ந்த இடம் போல் அந்தக் கூடமே மாறி விட்டது. தாம் உயிரோடு உள்ள வரையில் சோழ சாம்ராஜ்யத்தை அவர்களால் அசைக்க முடியாது என்று முழங்கினார்.

விழுப்பரையர் எல்லாவற்றையும் பொறுமையோடு கேட்டுக் கொண்டார். வீர நரசிம்மனின் கர்ஜனை அடங்கவில்லை.

''நீங்கள் சோழ சாம்ராஜ்யத்தை அழித்தால் என்ன? எங்களை அழித்தால் என்ன? இரண்டும் ஒன்றுதானே? நாங்கள் யார் தெரியுமா? பாண்டிய யானைக்குச் சிங்கங்கள்! சோழ சாம்ராஜ்யத்தைப் பிரதிஷ்டை செய்வதற்கும் காப்பதற்கும் மட்டுமே பிறந்தவர்கள்! பாண்டிய யானை இப்போதுதான் சிம்ம சொப்பனம் காணத் தொடங்கியிருக்கிறது. அது வெறும் சொப்பனமாகவும் போய் விடாது என்று உங்கள் சுந்தரபாண்டியனிடம் கூறுங்கள்.''

''சக்கரவர்த்திகள் என்னை மன்னித்தருள வேண்டும். அச்சத்தின் காரணமாக என்னை அரசர் அவர்கள் தூது அனுப்பவில்லை.''

''இப்படிச் சொல்ல என்ன துணிவு உங்களுக்கு!'' என்று சீறினார் வீரநரசிம்மன்.

''மெய்கூற வேண்டியது என் கடமை. அதையேதான் கூறுகிறேன். புதிதாக உருவாக்கியுள்ள பாண்டிய நாட்டின் தன்னுரிமையை மதித்து, அதையும் தங்களுடன் நட்புறவு கொண்ட நாடுகளில் ஒன்றாகத் தாங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். இந்த வேண்டுகோள் கொண்ட ஓலையுடன் தான் நான் வந்திருக்கிறேன். பகைமையும், போரும், பிணக்கும் நிறைந்த இந்த உலகத்தில் அன்பை வளர்ப்பதே புலவர்களாகிய எங்களது தொழில். நாங்கள் எந்நாட்டவர்களுக்கும் பொதுவானவர்கள். தங்களது சித்தத்தில் பாண்டிய நாட்டுக்கு ஓர் இடம் வேண்டும்.''

பயங்கரமாக நகைத்தார் வீரநரசிம்மன். ''பாண்டிய யானை சோழ சாம்ராஜ்யப் புலியை அடித்து வீழ்த்திய துணிவில் சிங்கத்திடம் உறவு பேசத் துணிந்திருக்கிறது.''

''சக்கரவர்த்திகளே! பாண்டி நாட்டில் யானைகளின் காலம் மாறிவிட்டது. அங்கே ஓர் இளஞ்சிங்கம் இப்போது தோன்றியிருக்கிறது. அந்த இளஞ்சிங்கம் இந்த வீரநரசிங்கத்திடம் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டிருக்கிறது. இனம் இனத்தைத்தானே சேரும். இளஞ்சிங்கம் பெருஞ்சிங்கத்தின் நட்பை நாடி என்னை அன்புத் தூதாக அனுப்பியிருக்கிறது.''

வீரநரசிம்மன் மௌனமாக ஆலோசனையில் ஆழ்ந் தார். முன்பு கங்காபுரியில் குலோத்துங்க சோழருக்கு முன்பாகச் சுந்தரபாண்டியன் கூத்துப் பாடல் பாடிய காட்சி அவர் மனக்கண் முன்னே தோன்றியது. சோழர் முன்பாகவே அதைப் பாடத் துணிந்தவனை அவரால் தமக்குள் அப்போது பாராட்டாமல் இருக்கமுடியவில்லை. அடுத்தாற்போல் இராஜராஜன் ஆத்திரப்பட்டு அவனை வாளால் குத்திக் கிழிக்க முனைந்த போதும் அவன் அதிர்ச்சியுறாமலிருந்தான். பாமினி குறுக்கே பாய்ந்து தடுத்திருக்காவிட்டால் விபரீத மாக அன்று ஏதும் நடந்திருக்கும். அவன் வீரன்தான்!

''வீரன் என்றால் சோழ நாட்டை அழிக்கவேண்டும் மென்பதில்லையே?''

''எங்களது பாண்டிய நாட்டின் அடிமை இருளைத்தான் அவர் சுட்டெரித்தார். சாம்ராஜ்ய ஆசை அவருக்கு இருந்திருந் தால் சோழ நாட்டை உடனடியாகத் திருப்பித் தந்திருக்க மாட்டார் சக்கரவர்த்திகளே! நாங்களாகவே சோழ சாம் ராஜ்யத்தை மீண்டும் பிரதிஷ்டை செய்துவிட்டோம்.''

கலகலவென்று நகைப்பொலி எழுந்தது வீரநர சிம்மனிடமிருந்து. ''வடக்கில் திருமுனைப்பாடி நாடும் போய் விட்டது. தெற்கில் பாண்டிய நாடும் போய்விட்டது. சோழ சாம்ராஜ்யம் பின் எங்கே இருக்கிறது?''

''அதன் அரசர் இராஜராஜனால் எந்த அளவுக்கு நாட்டைக் கட்டியாள முடியுமோ அந்த அளவுக்கு அவரிடம் இருக்கிறது. குலோத்துங்கரின் குமாரர் என்ற நிலைக்கும் தங்களது உறவினர் என்ற நிலைக்கும் அவர் தம்மைத் தகுதி வாய்ந்தவராக வளர்த்துக் கொள்ளவில்லை. பாண்டிய நாட்டுக்கு அவர் இழைத்த தீங்கை இந்தத் தலைமுறையில் உள்ள யாருமே மறக்க முடியாது.''

''என்ன இருந்தாலும் சுந்தரபாண்டியன் சோழ நாட்டுக்குச் செய்துள்ள இழிவை என்னால் மன்னிக்க முடியாது!'' என்று உறுமினார் வீரநரசிம்மன்.

''பாண்டிய நாட்டுக்குச் சோழ நாட்டால் ஏற்பட்ட துன்பங்கள் கண்டு அவரும் இப்படித்தான் கொதிப்படைந் தார்'' என்றார் புலவர் மெல்லிய குரலில்.

கூடத்தின் வாயிலருகே ஏதோ சத்தம் கேட்டது. வீரநரசிம்மன், விழுப்பரையர் ஆகிய இருவருமே திரும்பிப் பார்த்தார்கள். விழுப்பரையர் அங்கு கண்ட காட்சியால் பதற்ற மடைந்து இருக்கையைவிட்டு எழுந்தார்.

கயல்விழியும் ஆதிச்சதேவரும் வேல் தாங்கிய இரு காவலர்களுக்கு இடையில் நின்றுகொண்டிருந்தார்கள்.

''முன்பு இங்கு வந்து நம் அரண்மனையில் தங்கிச் சென்ற பாண்டிய நாட்டு ஒற்றர்கள் இவர்கள். இன்று திருமுனைப்பாடி நாட்டு மாளிகையிலிருந்து வெளியில் வந்த போது சிறை செய்தோம்.''

''உங்கள் பெயர்கள் என்ன?'' என்று அதட்டினார் வீர நரசிம்மன். கயல்விழி பதிலளித்தாள்.

''இருவரையும் இங்குள்ள மாளிகைச் சிறையில் அடைத்து வையுங்கள்!'' என்று கட்டளையிட்டார் சக்கரவர்த்தி.

''சக்கரவர்த்திகளே! இதுதான் கோசல நாட்டுப் பண் பென்றால் முதலில் என்னைச் சிறையிலடையுங்கள்!'' என்று பணிவோடு வேண்டினார் விழுப்பரையர்.

## 12. தலைவியே தோழியானாள்



ஒற்றர்களின் உதவியோடு காவலர்களால் சிறைப் பிடிக்கப் பட்ட கயல்விழி, வீரநரசிம் மனுக்கு அருகில் விழுப்பரையரைக் கண்டவுடன் அச்சம் நீங்கி அமைதியோடு நின்றாள். அவள் தந்தை ஆதிச்ச தேவருக்குத்தான் உச்சி முதல் உள்ளங்கால் வரையில் நடுக்கம் எடுத்தது. விழுப்பரை யரிடம் அவர் ஓலமிடத் தொடங்கினார்.

''புலவர் அவர்களே! இவளை இங்கு வரவேண்டா மென்று தாங்களும் தடுத்தீர்கள். நானும் தடுத்தேன்.

பெரியவர்களின் சொல் கேட்காத பெண்ணுக்கு இரங்கியதால் இப்போது வினை வந்துவிட்டது, பார்த்தீர்களா!'' என்று பதற்றத்துடன் கூறினார்.

விழுப்பரையர் வீரநரசிம்மனின் அருகில் சென்றார். ''சக்கரவர்த்திகளே! என்னோடு வந்தவர்கள் ஒற்றர்களென் றால் அவர்களுடைய தலைவன் நான். ஆகவே தலைமை ஒற்றனாகிய என்னையும் தயவுசெய்து அவர்களுடன் சிறையில் அடைக்கச் செய்யுங்கள்!'' என்று மீண்டும் வேண்டிக் கொண்டார்.

''இவர்கள் இருவரும் முன்பு இங்கு உளவறிய வந்தவர்கள். சக்கரவர்த்திகளின் கட்டளைப்படியே நாங்கள் சிறை செய்திருக்கிறோம்'' என்றான் காவலர் தலைவன்.

''சுந்தரபாண்டியர் முன்பு ஒரு வேளை ஒற்றாட வந்திருக்கலாம். இவர்களும் அவரோடு ஒன்றாக வந்திருக் கலாம். ஆனால் அவர்தான் இளைய பாண்டியர் என்பது இவர்களுக்கு எங்ஙனம் தெரியும்? கூடுவிட்டுக் கூடு பாயும் சித்தரைப் போல் உலவிய அவர், தம் சொந்தச் சகோதரரான பாண்டியரிடமே தாம் உயிருடன் இருப்பதைக் கூற வில்லையே!''

வீரநரசிம்மருக்கு இந்தச் செய்தி எட்டியிருந்தது. 'இளைஞன் வீரன் மட்டிலுமல்ல; தந்திரசாலிபோல் இருக்கிறதே!' என்று தமக்குள் வியந்துகொண்டார்.

''சக்கரவர்த்திகளே! இந்தப் பேதைப்பெண் நான் வந்த காரணத்தை அறியாமல் தங்கள் குமாரத்தியைக் காண வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தாள். இளவரசியார் அவர்களுக்கும் இவளுக்கும் பழக்கம் உண்டாம். இவள் ஆடற்கலையில் பித்துக் கொண்டவள். இளவரசியாருக்கும் அதில் பற்றுதல் உண்டு என்றாள். நான் எவ்வளவோ தடுத்துப் பார்த்தேன். அரச குலத்தாரோடு பழகுவதிலுள்ள அபாயங் களைப் பற்றி எச்சரிக்கை செய்தேன். காஞ்சி நகருக்குள் வந்தவுடனேயே ஆபத்து வந்துவிட்டது. அவளுக்கு மட்டும் ஆபத்து வரவில்லை. நான் வந்த நோக்கமே இவளால் சீர் குலைந்துவிடும் போலிருக்கிறது'' என்றார் விழுப்பரையர்.

''என்னால் தங்களுக்கும் ஆபத்து வரவேண்டாம்; இந்த நாட்டுக்கும் ஆபத்து வர வேண்டாம். நாங்கள் சிறைக்குப் போகிறோம். சக்கரவர்த்திகள் இளவரசியாரை அரை நாழிகைப் பொழுது சிறைக்கு அனுப்பி வைத்தால் போதும். அவர்களைப் பார்க்க வேண்டுமென்கிற என் ஆவல் நிறைவேறினால், பிறகு தண்டனையைப் பொறுமையோடு ஏற்றுக் கொள்ளுகிறேன். சக்கரவர்த்திகளே, தயுவுசெய்து அவர்களைக் கண்டு மகிழும் பாக்கியத்தை மட்டும் எனக்கு மறுக்காதீர்கள்.''

வீரநரசிம்மனின் நெற்றி சுருங்கியது.

''நாங்கள் அனைவருமே நட்பை நாடி வந்திருக்கிறோம். பிறகு தங்கள் சித்தம்'' என்று கூறிவிட்டு, ''எங்கள் இளவரசரின் மனம் பகைமையில் திரும்பிவிடக் கூடாதென்பதற்காகவே நான் இங்கு ஓடோடியும் வந்தேன். வடக்கில் உள்ள தங்கள் பகைவர்கள் அவருடைய ஆற்றலை அறிந்து கொண்டு எப்படியோ அதற்குள் தூதுவர்களை அனுப்பி விட்டார்கள்'' என்றார் விழுப்பரையர்.

விழுப்பரையரின் இந்த ராஜதந்திர யோசனை வீர நரசிம்மனிடம் பலிக்கத் தொடங்கியது. வடக்கில் தெலுங்குச் சோழர்கள், காகதீயர்கள் முதலானோர் கோசலர்களின் ஆதிக்கத்துக்கு எதிராகத் திட்டங்கள் வகுத்துக் கொண்டிருந் தார்கள்- 'அவர்கள் அதற்குள் தெற்கே பாண்டியர்களிடம் தங்களுக்கு நட்பைத் தேடுகிறார்களா?'

காவலர்களை நோக்கி, ''இந்தப் பெண்ணை அந்தப்புரத்துக்கு அழைத்துச் சென்று இளவரசியாரிடம் விட்டுவிடு; இவள் தந்தையும் நம் விருந்தினராகவே தங்கியிருக்கட்டும்'' என்றார் வீரநரசிம்மன்.

விழுப்பரையர் நன்றி கூறினார். கயல்விழியும் ஆதிச்ச தேவரும் இருவரையும் வணங்கி விடை பெற்றுக் கொண்டு காவலர்களோடு திரும்பினார்கள்.

அந்தப்புரத்தின் விருந்தினர் அறையில் கயல்விழி தனித்திருக்க, செய்தி கேட்டுப் பாமினி ஆவலோடும் தயக்கத்தோடும் அங்கு வந்து சேர்ந்தாள். காணவேண்டும்

என்ற ஆவலின் பரபரப்பு ஒருபுறம் இருந்தாலும் கயல்விழியிடம் ஏனோ அவளுக்குச் சந்தேகமும் ஏற்பட்டிருந்தது. முன்பு அவர்கள் அங்கு வந்து சென்ற பிறகு நடந்த நிகழ்ச்சிகள் அவளுக்கு அச்சத்தை ஊட்டியிருந்தன. புலவனாகவும் பாணனாகவும் வந்தவன் சுந்தரபாண்டியன் தான் என்று அறிந்தவுடனேயே அவள் தன்னையும் மீறிய பரவசத்தில் ஒருகணம் ஆழ்ந்து விட்டாள். மறுகணமே அவன் தங்களது குலப் பகைவன் என்ற உணர்வும் வந்துவிட்டது. அவன் பகைவன் என்பதற்காக மட்டிலும் பாமினி அவனை வெறுக்கவில்லை. தன்னுடைய தூய்மையான அன்பையும் இராஜ தந்திரத்துக்காகப் பயன்படுத்திக் கொண்டானே என்ற ஆத்திரம் அவளுக்கு. தனக்கு அவன்மீது இருந்த ஆத்திரத்தையெல்லாம் கயல்விழியிடம் கொட்டித் தீர்க்க வேண்டும் என்ற துடிப்புடன் பாமினி அங்கு வந்து சேர்ந்தாள்.

''இளவரசியாரே!'' என்று துள்ளிக் குதித்து வந்து பாமினியை அன்போடு தழுவிக் கொண்டாள் கயல்விழி.

''உன்னுடைய இளவரசர் இப்படியும் ஒரு கூத்து நடத்தச் சொல்லி உனக்குக் கற்றுத் தந்திருக்கிறார் போலும்!'' என்று சீறினாள் பாமினி. '' இனியும் இந்த மாளிகையைக் கூத்தரங்கு ஆக்க வேண்டாம்; சிறிது எச்சரிக்கையுடன் தொலைவிலிருந்து பழகுவதே நம் இருவருக்கும் நல்லது.''

அம்புபட்ட அன்னப் பறவையெனச் சொல்லம்பு பட்டுத் துடித்தாள் கயல்விழி.

''இளவரசியாரே! பெரியவர்கள் சொல்லை மீறி இங்கு வந்த எனக்கு இதுவும் வேண்டும்; இதற்கு மேலும் வேண்டும். தங்கள் தந்தையார் அவர்களோ என்னைச் சிறை செய்யும்படி கட்டளையிட்டார்கள். அவர்களையாவது நான் முன்பு நேரில் கண்டதில்லை. ஆகவே அவர்களுடைய தண்டனையே எனக்கு இப்போது தங்களது வரவேற்பைவிட உயர்ந்ததாகத் தோன்றுகிறது. ஒன்று அவர்கள் எண்ணப்படி என்னைச் சிறைக்கு அனுப்புங்கள். இல்லையேல் இப்போதே எனக்கு விடை கொடுத்து விடுங்கள். நான் மதுரைக்குத் திரும்பிச் செல்கிறேன். அரச குலத்தவர் என்பது தெரியாமல் நான்

பாண்டியரிடம் பழகிவிட்டேன். அது தெரிந்தே தங்களிடமும் பழகத் துணிந்தேன். இருபுறத்திலும் எனக்குத் துன்பந்தான் ஏற்படுகிறது. நான் சென்று வருகிறேன், இளவரசி!''

திரும்பிச் சென்றவளின் கரத்தைப் பற்றிக்கொண்டு ஆறுதல் கூறினாள் பாமினி. தன்னை அவர்கள் ஏமாற்றி விட்டதால் தன் கோபத்தை அடக்க முடியவில்லை என்றாள். அவளுக்கும் பல விஷயங்கள் சுந்தரபாண்டியனைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டியிருந்ததால், கயல்விழியை அவள் விட்டுவிடத் துணியவில்லை.

''அவர்கள் தங்களை மட்டுமா ஏமாற்றினார்கள்? என்னையுந்தான் ஏமாற்றிவிட்டார்கள்!'' என்று, அவன் சுந்தர பாண்டியன் என்பது தனக்கே தெரியாமல் இருந்தது என்பதை அவள் மனத்தில் நயமாகப் பதியவைத்தாள் கயல்விழி.

''பிறகு அவர் ஒற்றாட இங்கு வரவில்லை என்று நம்பச் சொல்கிறாயா?''

''நான் எதற்குத் தங்களை நம்பச் சொல்லவேண்டும்? அவர்கள் ஒற்றாடத்தான் வந்திருப்பார்கள் என்று நானே நம்புகிறேனே?''

திடுக்கிட்டு, ''என்ன?'' என்றாள் பாமினி.

''ஆமாம்; அவர்கள் என்னையும்கூட ஒற்றாடத் தூண்டி யிருக்கிறார்கள் என்பது இப்போதுதான் புலப்படுகிறது!''

''கயல்விழி!'' என்று அதட்டினாள் பாமினி.

''இளவரசியாரே! முழுதும் கேட்டுவிட்டு என்மீது கோபித்துக் கொள்ளுங்கள்'' என்றாள் கயல்விழி. ''இளவரசர் தங்கள் சாம்ராஜ்யத்து இரகசியங்களை அறிந்துகொள்ள விரும்பியிருந்தால் அவர்களுக்கு எத்தனையோ ஒற்றர்கள் இருந்திருப்பார்கள். அதற்கு அவர்களே நேரில் வரவேண்டும் என்பதில்லை. ஒரு பெண்ணின் துணையும் அவர்களுக்கு அவசியமில்லை. அவர்கள் கோசல சாம்ராஜ்யத்தை மிக உயர்வாக மதிக்கும் ஒரு சாம்ராஜ்யத்தின் இரகசியங்களைத் தேடித்தான் இங்கு வந்திருக்கிறார்கள். அந்தச் சாம்ராஜ்யம் இளவரசியாரிடமே இருக்கிறது. தங்களது உள்ளமாகிய

அழகிய சாம்ராஜ்யத்தின் மீது அன்பு கொண்டுதான் அவர்கள் இங்கு வந்திருக்கிறார்கள். தங்களையும் என்னையுமே சேர்த்து ஏமாற்றியிருக்கிறார்கள்.''

இப்படிக் கூறிவிட்டுத் தனக்குள்ளாகவே சமாதானமும் கூறிக்கொண்டாள் கயல்விழி. 'நல்ல செயலுக்காகப் பொய் கூறினால் அதுவும் வாய்மையே என்று வள்ளுவர் கூறியிருக்கிறார். வள்ளுவர் கூறியதை அவர்தாம் எனக்கும் எடுத்துச் சொல்லியிருக்கிறார். ஆகவே என் தூது வெற்றி பெற வேண்டும்!'

பாமினியின் முகம் செந்தாமரையாக மலர்ந்தது.

''பிறகு?''

''பிறகு என்ன? எதற்காக அவர் தங்களிடம் என்னைப் பழகும்படி தூண்டுகிறார்? தாங்கள் எந்தெந்தக் கலைகளில் தேர்ச்சி பெற்றவர்கள், இன்மொழியில் பேசுகிறீர்களா, அன்புடன் நடந்து கொள்கிறீர்களா, பொறுமை என்னும் அணிகலம் பூண்டிருக்கிறீர்களா, தங்களுடைய குண விசித்திரங்கள் என்ன, பாண்டியர் குலத்திடம் இயல்பாகவே வெறுப்புக் கொண்டிருக்கிறீர்களா- இவ்வளவு விஷயங்களை யும் என்னை ஒற்றறிந்து வரச்செய்தார்! நானும் எதற்கென்று தெரியாமலே அவர் கட்டளைப்படி நடந்து கொண்டேன்.''

''உன்னிடம் பண்பில்லாமல் நடந்து கொண்டதற்கு என்னை மன்னித்துவிடு, கயல்விழி!'' என்று கூறிக்கொண்டே வந்து அவள் கழுத்தை வளைத்துக் கொண்டாள் பாமினி!

''நாமெல்லாம் என்ன இருந்தாலும் பேதைகள்? தவறுகள் செய்கிறோம். தங்கள் மீது துளியும் எனக்குக் கோபமில்லை?'' என்றாள் கயல்விழி.

''அவரிடம் என்னைப்பற்றி நீ என்ன கூறினாய்?''

''எப்படி முன்பு சோழமாதேவி என்ற ஓர் உத்தமி கோசல சாம்ராஜ்யத்தையும் சோழ சாம்ராஜ்யத்தையும் ஒன்றாகவே இணைக்கப் பிறந்தாரோ, அதேபோல் நம் இருநாடுகளையும் இணைக்கப் பிறந்த திருமகள் இவர் என்று நான் சொல்லியிருப்பேன். அவர்தாம் சுந்தரபாண்டியர் என்று

தெரியாததால் நான் அப்போது அதைக் கூறவில்லை. தங்களைப் போன்ற ஒரு பெண்மணியோடு பழகும் வாய்ப்பைத் தந்ததற்காக அவருக்கு நான் நன்றி கூறினேன். தங்களது அழகும் அன்பும் என்னையே கவர்ந்து இங்கு அழைத்து வந்து விட்டனவே! அவர் அவற்றில் மயங்கியதில் என்ன வியப்பு இருக்கிறது!''

''நீ என் உயிர்த்தோழியாகி விட்டாய் கயல்விழி!''

பாமினி கயல்விழியைத் தழுவிக்கொண்ட போது கயல்விழியின் கண்கள் ஊற்றுப் பெருக்கெடுத்தன. வழிந்தோடும் இரத்தக் கண்ணீரைப் பாமினி ஆனந்தத்தின் வெள்ளமென நினைத்துக்கொண்டாள். கண்ணீருக்கு நிறம் ஏது, அதை உதிர்ப்போரைக் காட்டிக் கொடுப்பதற்கு?

# 19. வெஞ்சினம் வென்றது



வீரநரசிம்மன் பாண்டிய நாட்டின் உரிமையை மதித்து அதை அங்கீகாரம் செய்வதா அல்லது அதன்மீது போர் தொடுத்து முன் போலவே சோழருக்கு ஆட்சி வழங்கச் செய்வதா என்று இன்னும் முடிவு செய்யவில்லை. விழுப்பரையருக்கு முன்பாகவே சயங்கொண்ட சோழ வல்லபர் அங்கு வந்து சுந்தரபாண்டியன்மீது பெரும் பகையை அவர் உள்ளத்தில் மூட்டி விட்டிருந்தார். விழுப்பரையரோ பாண்டியரின் ஓலையோடு நட்புக்காக வந்திருக்கிறார். அவர் இரண்டையும் சீர்தூக்கிப் பார்க்க முனைந்தார்.

கோசல நாட்டுப் படைத் தலைவர்களான தண்டின கோபன், ஜகதொப்ப கண்டன், அப்பண தண்ணாக்கண் முதலியோரை அழைத்து அவர் அந்தரங்கமாக ஆலோசனை நடத்தினார்.

''சோழ சாம்ராஜ்யத்தின் தோல்வி நம்முடைய தோல்விக்கு ஒப்பாகும். நாம் 'சோழ குலக் காப்பாளர்கள்' என்று பெயர் பெற்றிருக்கிறோம். பாண்டியருடன் உறவு கொள்வது நம்முடைய வலிமைக்கு இழுக்காகும்'' என்றார் தண்டினகோபன்.

'சோழர் குலத்து இராஜராஜன் ஆண்மையும் வீரமும் உள்ளவனாக இருந்தால் ஓரளவாவது தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ள முனைந்திருப்பான். தன்னைக் காப்பாற்ற முடிந்தவனுக்கே நாமும் உதவி செய்ய முடியும். இல்லாவிட்டால் கோழைக்கு உதவுவதால் நமது வலிமையும் குன்றிவிடும். அதனால்தான் நான் யோசிக்கிறேன்'' என்றார் வீரநரசிம்மன்.

''ஏன்? பாண்டிய நாட்டை முறியடித்து நேரடியாக நம் சாம்ராஜ்யத்தின் கீழ் கொண்டுவந்து விடலாமே?'' என்றார் ஜகதொப்பகண்டன்.

''சுந்தரபாண்டியன் நேரடியாக நம்மைத் தாக்கவில்லை. உறையூரையும் தஞ்சையையும் அழித்தவன். அருகிலிருந்த நமது படையிருப்புக் கோட்டையை அவன் அழிக்கவில்லை. நம்முடைய படைகள் அங்கே இல்லை என்பது தெரிந்தும் கூட அவன் அதைக் கைப்பற்றவில்லை; அவன் வீரனாகவும் ராஜதந்திரியாகவும் இருக்கிறான். வீரர்களைவிட ராஜதந்திரி களிடமே நாம் விழிப்போடு இருக்கவேண்டும்.''

''அவனை வளர விடுவதோ அவனோடு நட்புக் கொள் வதோ நமக்கு ஆபத்தென்று சோழவல்லபர் கூறினாரே!''

''ஆமாம்; அவருடைய அதிகாரத்தின் கீழ்தான் அவன் வளர்ந்திருக்கிறான்!'' என்று கூறி நகைத்தார் வீர நரசிம்மன்.

''சக்கரவர்த்திகளின் சித்தம் எதுவோ அதன்படி நடக்கிறோம்'' என்றார் தண்டினகோபன்.

வீரநரசிம்மனுக்குச் சுந்தரபாண்டியனின் திறமையை மெச்சும் அளவுக்குப் பண்பிருந்தாலும் அவர் கோசல சாம்ராஜ்யத்து மாபெரும் தூணான வல்லாள தேவரின் குமாரர், பரம்பரைச் செருக்குமிக்கவர். திடீரென்று முளைத் தெழுந்த இளைஞனுக்குள்ள வீரத்துக்கும் விவேகத்துக்கும்

தம்முடையது சிறிதும் குறைந்ததல்ல என்பதை அவனுக்கு வலியுறுத்த விரும்பினார்.

''தூது வந்திருப்பவரிடம் நான் நட்புறவுபற்றிப் பேசிச் சில நாட்கள் கடத்துகிறேன். அதற்குள் நம்முடைய படையில் பாதிப் பகுதியை உறையூருக்கு அடுத்துள்ள கண்ணனூர்க் கோட்டைக்கு அனுப்பி விடுங்கள். அவசியம் நேர்ந்தால் நானே நேரில் வந்து படை நடத்துகிறேன்.''

படைத் தலைவர்களுக்கு எல்லையற்ற பூரிப்பு. உடனடியாக அவ்வாறே செய்வதாக வாக்களித்தார் பெரும் படைத்தலைவர் தண்டினகோபன்.

வீரநரசிம்மன் தமது அந்தப்புரத்தில் நடக்கும் செய்திகளைப் பற்றி அரசியாரிடம் மெல்ல விசாரித்தார். இளவரசி பாமினியின் மனம் எங்கே போய்க் கொண்டிருந்தது என்பது அவருக்குத் தெரியாமலில்லை. கயல்விழியின் வாயிலாக ஏதும் செய்தி கிடைத்ததா என்பதில் அவர் கவனம் செலுத்தினார்.

''சக்கரவர்த்திகளுக்குச் செய்தி தெரியுமோ?'' என்று ஆவலோடு கேட்டுவிட்டு, தாமே அதைக் கூறினார் அரசியார். ''அந்தச் சுந்தர பாண்டியன் முன்பு தாங்கள் இங்கு இல்லாத போது பாணனாக வந்தது, நம்முடைய குமாரத்தியைச் சந்திப்பதற்குத் தானாம்! கங்காபுரியில் இருவருக்கும் பரிச்சயம் ஏற்பட்டிருக்கும் போல் இருக்கிறது. அவனால் பாமினியை மறக்க முடிய வில்லையாம்.''

''அவனால் மறக்க முடியவில்லையா? அல்லது நமது குமாரத்தியால் அவனை மறக்கமுடியவில்லையா? என் செவிகளுக்கு ஏதும் எட்டியதாக நீ காண்பித்துக் கொள்ள வேண்டாம். புலவரை எனக்குத் தூதாகவும் விறலியை நம் குமாரத்திக்குத் தூதாகவும் அனுப்பி, நம்மை அவன் வலைக்குள் வீழ்த்தப் பார்க்கிறான் போலிருக்கிறது. சுண்டெலி பின்னும் வலைக்குள் சிங்கத்தை வீழ்த்திவிட முடியாது.''

''பாமினி இவ்வளவு குதூகலமாக இருந்து நான் பார்த்ததே இல்லை!''

''நம்மைத் தோல்வியுறச் செய்தவன் அவன். அவன் நம்மை வெற்றி கொண்டதற்காக அவள் தன்னை அவனுக்குப் பரிசளிக்கச் சொல்கிறாளா?'' இப்படி அவர் கேட்ட போது அவர் குரலில் கடுமை ஒலித்தது.

அரசியார் அதிர்ச்சியுற்றார்.

''கோசல சாம்ராஜ்யத்தின் இளவரசி என்னும் நினைவு பாமினியின் நினைவில் எப்போதும் இருக்க வேண்டும் என்று சொல். சாம்ராஜ்யத்தின் நன்மை தீமைகளை வைத்துத் தான் நாம் எதையுமே முடிவு செய்ய வேண்டுமே தவிர, என் குமாரத்தி என்பதற்காக நான் எதையுமே அனுமதிக்க முடியாது. சோழ சாம்ராஜ்யம் நம்முடைய வலக்கரமாக விளங்கியது. அதையே அவன் ஒடித்துவிட்டு, நம்மிடமும் உறவாடத் துணிந்திருக்கிறான்.''

''குலோத்துங்கர் உயிருடன் இருந்தபோது அவர் எப்படியாவது தமது குமாரனுக்கே இவளை மணம் செய்து வைக்க முயற்சி செய்தார். அதுவும்தான் நடைபெறவில்லை. சாம்ராஜ்யத்துச் சக்கரவர்த்திகளாகிய தங்களுக்குக் கால மெல்லாம் போர்க்களங்கள் இருக்கின்றன. சாம்ராஜ்யத்தில் பிறந்ததற்காகவும் புகுந்ததற்காகவும் பெண்கள் தங்கள் வாழ்வையே துறந்துவிட வேண்டும் போலும்!''

சுருக்கென்று தைத்தது வீரநரசிம்மனுக்கு. வாழ்க்கை யின் பெரும் பகுதியைக் களங்களில் கழித்தவர் அவர்.

''தங்களது குமாரத்தி பாமினிக்கு ஏற்ற இளவரசன் எங்கே இருக்கிறான் என்றே தெரியவில்லை. வடக்கிலும் எல் லோரும் பகை அரசர்கள், தெற்கில் உள்ளவன் பகைவன்...''

அன்றைக்கு இரவில் வீரநரசிம்மனால் அமைதியோடு உறங்க முடியவில்லை. வெற்றி மேல் வெற்றிகளை அவர் தொடர்ந்து பெற்றார் என்றாலும் அவரிடம் நட்புறவு கொண்டவர்கள் மிகமிகக் குறைவு. நட்பை நாடித் துணிந்து முதன் முதலில் ஆள் அனுப்பியவர்களே பாண்டியர்கள் தாம்.

மறுநாள் பாமினியிடம் தனித்துப் பேசவேண்டும் என்ற முடிவோடு சிறிதுநேரம் கண்களை மூடி எழுந்தார் வீரநரசிம்மன். மறுநாள் பொழுதோ நேருக்கு மாறாக

முடிந்தது. சிறிதும் அவர் எதிர்பாராத செய்திகளைச் சுமந்து கொண்டு வந்தார்கள் சோழ நாட்டுத் தூதுவர்கள்.

''சக்கரவர்த்திகளே! சுந்தரபாண்டியன் மீண்டும் படைகளை அனுப்பி கங்காபுரியைக் கைப்பற்றி விட்டான். எங்களுடைய சக்கரவர்த்திகள் சுற்றம் சூழலோடு தங்களிடம் அடைக்கலம் புகுவதற்குப் புறப்பட்டு வந்தார்கள். அப்படித் தப்பி வந்தவர்களைப் பாண்டியனின் நண்பன் கோப்பெருஞ் சிங்கன் வழிமறித்துக் கொண்டான். திருமுனைப்பாடி நாட்டுச் சேந்தமங்கலம் கோட்டைக்குள் இப்போது சக்கரவர்த்தி சிறைப்பட்டிருக்கிறார். பாண்டியனும் காடவராயனும் ஒன்றாகிவிட்டார்கள். தங்களைத் தவிரச் சோழநாட்டுக்கு வேறு கதியில்லை.''

''சயங்கொண்ட சோழ வல்லபர்?''

''அவரையும் பாண்டியனின் ஆட்கள் சிறைப் பிடித்து விட்டார்கள். சோழநாடு திறை செலுத்தாமல் இருந்ததற்கு அவரே காரணமாம்!''

உடனடியாகப் படைத் தலைவர்களை அழைத்து வரும்படி கட்டளையிட்டார் வீரநரசிம்மன்.

''காஞ்சியிலிருக்கும் படைகளை அழைத்துக் கொண்டு திருமுனைப்பாடி நாட்டுக்குச் செல்லுங்கள். பாண்டியனின் நண்பனான கோப்பெருஞ்சிங்கனிடம் நம்முடைய வலிமை முழுவதையும் காட்டுங்கள். உங்களுடைய படைகள் புகுந்த இடமெல்லாம் ஊழிக் காலத்துக் கடல் புகுந்த இடம்போல் மாறவேண்டும். சோழனைப் பாண்டியன் பழிவாங்கி னானல்லவா? இப்போது கோப்பெருஞ்சிங்கனும் அவனைச் சிறையில் அடைத்திருக்கிறானல்லவா? அவனை நீங்கள் பழி வாங்குங்கள்! அவனுடைய நாட்டைச் சுடுகாடாக்குங்கள்!''

''தாங்கள்?'' என்று தயக்கத்தோடு கேட்டார் தண்டின கோபன்.

''முன்னமேயே நம்முடைய படை கண்ணனூருக்குப் புறப்பட்டு விட்டதல்லவா? அந்தப் படையைக் கொண்டு நான் பாண்டிய நாட்டுக்குள் போகிறேன்! பாண்டிய நாட்டுக்கு

முடிவு கட்டுகிறேன்! சோழனைச் சிறை மீட்காமல் இனி நம் எக்காளம் ஊதுவதில்லை.''

மாளிகையின் உட்புறத்துக்கு அவர் திரும்பியவுடன் ஓடி வந்து அவர் பாதங்களில் வீழ்ந்தாள் பாமினி. அவர் அவளைத் தாண்டிக்கொண்டு மேலே சென்றார்.

## 20. சபதம் செய்தான்



சுந்தரபாண்டியனிடம் திறை செலுத்துவதாக ஒப்பந்தம் செய்து கொண்டு, பின்னர் ஓலையையே கிழித்தெறிந்து பாண்டியனை அவமதித்த இராஜராஜனால் பாண்டியப் படைகளை எதிர்த்து நிற்க முடியவில்லை. இரவோடு இரவாகக் கங்காபுரியை விட்டுத் தன் அரண்மனைச் சுற்றத்தாரோடும், உடன் கூட்டத்தாரோடும் வடக்கே புறப்பட்டான். எப்படியும் காஞ்சிக்குச் சென்று வீரநரசிம்மனிடம் அடைக்கலம் புகுந்துவிட வேண்டும் என்ற எண்ணம் அவனுக்கு.

இராஜராஜன் புகலிடம் தேடி ஓடும் செய்தி கோப் பெருஞ்சிங்கனுக்கு எட்டியது. பாண்டியப் படையினரிடம் தப்பி வந்த அவனையும் அவன் கூட்டத்தாரையும் அவர் தெள்ளாற்றில் வளைத்துப் பிடித்துக் கொண்டார். தம்முடைய சேந்தமங்கலம் கோட்டைச் சிறைக்குள் தள்ளி அடைத்தார். வீரநரசிம்மனின் பெயரைச் சொல்லிக் காடவராயர் கோப்பெருஞ் சிங்கனை அச்சுறுத்திப் பார்த்தான் இராஜராஜன்.

''எந்தச் சிங்கம் வந்தாலும் இனி இந்தச் சிங்கம் அஞ்சப்போவதில்லை!'' என்றார் கோப்பெருஞ்சிங்கன். ''சுந்தரபாண்டியனுக்கும் எனக்கும் உள்ள நட்பின் வலிமையை உன்னுடைய நண்பர் அறிந்துகொள்ளட்டுமே? உனக்கொரு துணை என்றால் எனக்கும்தான் துணை இருக்கிறது!''

காஞ்சியில் விழுப்பரையரும் கயல்விழியும் நட்புறவுக் காகத் தூது சென்றிருந்த அதே சமயத்தில், சேந்தமங்கலத்தில் பகைமை உருவாகி விட்டது. மறுபோரின் வித்தும் ஊன்றப் பட்டுவிட்டது.

கோப்பெருஞ்சிங்கனது அவைக்களப் புலவர் தமது மன்னரிடம் சோழன் சிறைபட்ட பூரிப்பால், பகை மன்னர்களுக்கு எச்சரிக்கை விடுவதுபோல் கவிதை பாடத் தொடங்கிவிட்டார்!

**திறையிட் டிருமின்கள்**
**தெவ்வேந்தர்; செம்பொன்**
**திறையிட்ட பூம்புகார்ச்**
**சோழன் சிறை கிடந்த**
**கோட்டந் தனைநினைமின்**
**கோப்பெருஞ்சிங்கன் கமல**
**நாட்டங் கடைசி வந்த நாள்!***

கோப்பெருஞ்சிங்கன் எதிர்பார்த்ததற்கு முன்பே வீரநரசிம்மன் போர்க்கோலம் பூண்டு விட்டார் என்ற செய்தி வந்தது. ''சோழமண்டல பிரதிஷ்டாசாரியன் என்ற விருதுப் பெயரை நிலை நாட்டாமல், சோழனைச் சிறைமீட்டுச் சிம்மாசனத்தில் வைக்காமல் எக்காளம் ஊதுவதில்லை என்று சபதம் செய்திருக்கிறாராம்'' என்று ஒற்றர் தலைவன் வந்து கூறினான். எக்களிப்பை வெளிப்படுத்தும் மகிழ்ச்சிகரமான ஊதுகொம்பு எக்காளம்.

அடுத்தாற்போல முன்னிலும் பயங்கரமான செய்தி கோப்பெருஞ்சிங்கனுக்கு எட்டியது. திருமுனைப்பாடி நாட்டின் வடக்கு எல்லையில் வீரநரசிம்மனின் படைத் தலைவர்களான அப்பண தண்டநாயகனும் கொப்பைய தண்ட நாயகனும் புகுந்துவிட்டார்களாம். பயங்கரமான அழிவு வேலைகளையெல்லாம் தொடங்கி விட்டார்களாம்.

---

* வட ஆர்க்காடு மாவட்டம் வயலூர்க் கோப்பெருஞ்சிங்கன் கல்வெட்டுப் பாடல்.

உடனடியாகத் தமது வீரர்கள் அனைவரையும் திரட்டி வடக்கே அனுப்பினார் கோப்பெருஞ்சிங்கன். சுந்தர பாண்டியனுக்கும் மதுரைக்கு ஒரு திருமந்திர ஓலை அனுப்பினார்.

''நம்முடைய நட்புக்கும் நமது நாட்டுக்கும் சோதனைக் காலம் வந்துவிட்டது. தாங்கள் துரத்திவிட்ட சோழனை நான் சிறைபிடித்து அடைத்து வைத்திருக்கிறேன். சோழனைச் சிறை மீட்பதற்காகவும் என்னைப் பழிவாங்குவதற்காகவும் வீர நரசிம்மன் என்மீது போர் தொடங்கிவிட்டார். எது வந்தாலும் நான் அஞ்சப் போவதில்லை. ஆனால் நாம் இருவரும் ஒன்றாக இணைந்து நின்றால் வீரநரசிம்மனால் நம்மை எளிதில் வெற்றி கொள்ள முடியாது. உடனடியாகத் தாங்கள் படை நடத்திக் கொண்டு திருவரங்கத்தின் வழியாகச் சென்று வீரநரசிம்மனின் கண்ணனூர்க் கோட்டையைத் தாக்குங்கள். கோசலப் படைகளை நாம் இரு கூறாகப் பிரித்துவிட வேண்டும். அப்படியே நாம் இந்தப் போரில் அழிய நேர்ந்தாலும் இருவரும் ஒன்றாக அழிவோம்!''

கோப்பெருஞ்சிங்கனின் ஓலையைக் கண்டவுடன் குலசேகர பாண்டியர் சித்தப் பிரமை கொண்டு விட்டவர் போல் மாறினார். அமைதியை நாடி அவர் கட்டிய மனக்கோட்டைகளும், வகுத்த திட்டங்களும், செய்த முயற்சிகளும் ஆயிரம் சுக்கல்களாக வெடித்துச் சிதறுவது போல் தோன்றியது.

''எத்தனையோ ஆண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடந்த இரு நாடுகளும் இப்போதுதான் உரிமை பெற்றிருக்கின்றன. அதற்குள் இப்படி ஒரு சோதனையா?''

''சோதனைகள் இல்லாமல் சாதனைகள் நடைபெறுவதில்லை'' என்றான் சுந்தரபாண்டியன். ''எதிர்பாராத சமயங்களில் எதிர்பாராத இடங்களிலிருந்தெல்லாம் நாம் இன்னல்களை எதிர்பார்க்கத்தான் வேண்டும். இதுவோ நாம் எதிர்பார்த்த இன்னல்தான்; மெல்ல வரும் என்று நினைத்தோம், சற்று விரைவாகவே வந்துவிட்டது.''

''விழுப்பரையரையும் கயல்விழியையும் நாம் தூது அனுப்பியிருந்தோமே? அதன் முடிவு என்னவாயிருக்கும்?''

''தூது முறிந்து போயிருக்கும்'' என்றான் சுந்தர பாண்டியன்.

''அவர்களின் கதி?''

அதை நினைத்துத்தான் அவனும் கலங்கினான். விழுப்பரையரை அவன் தனது வழிகாட்டும் தெய்வமாகப் போற்றி வந்தவன். அவர் தமது ஒரே குமாரனான ஆலவாய் நம்பியைத் தன் பொருட்டுப் பலியிட்டவர் என்பதை அவன் மறக்கவே இல்லை. கயல்விழியோ அவனது உயிருக்கும் மேலானவள். 'அவர்கள் இருவரும் எந்த நிலையில் இருக்கிறார்களோ?' என்று எண்ணித் துடித்தான்.

''பாண்டிநாடு, திருமுனைப்பாடி நாடு ஆகிய இரு நாடுகளுக்கு மட்டிலும் இப்போது சோதனை வரவில்லை. எங்கள் இருவரது நட்புக்குமே பெரும் சோதனை வந்திருக்கிறது'' என்றான் இளைய பாண்டியன்.

மலை குலைந்தாலும் மனம் குலையாத தமது தம்பியே இப்படிக் கலங்குவதைக் கண்ட பெரிய பாண்டியர், தமக்குச் சிறந்ததாகத் தோன்றிய ஓர் ஆலோசனையை வெளியிடலானார்.

''சேந்தமங்கலத்துச் சிறையில் இராஜராஜன் இருக்கிறான். கோசல நாட்டுச் சிறையில் விழுப்பரையரும் கயல்விழியும் இருக்கக்கூடும்; நம்மவர்களுக்குப் பதிலாக இராஜராஜனை விடுவிப்பதாக கோப்பெருஞ்சிங்கனை விட்டு வீரநரசிம்மனுக்கு ஓலை அனுப்பச் செய்யலாமே? எப்பாடுபட்டாவது நாம் போர்களைத் தவிர்க்க வேண்டும்; அவர்களையும் மீட்க வேண்டும்.''

பெரிய பாண்டியரின் அச்சத்தை இளைய பாண்டியனால் உணர முடிந்தது. ஆனால் அவன் கோப்பெருஞ்சிங்கனின் நிலையையும் எண்ணிப் பார்த்தான்.

''அண்ணா! நமது நண்பருக்கு இப்படி நாம் ஓலை விடுத்தால் அது அவருடைய ஆபத்தில் நாம் அவரைக் கைவிட்டது போலாகும். நமக்காக உதவி செய்தவரின்

துன்பத்தை நமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டது போலாகும். நாம் அவரை இப்போது வீரநரசிம்மனிடம் சரணடையச் சொல்வது நட்புக்கு இழுக்காகுமல்லவா?''

''வேறு வழி?''

''கோப்பெருஞ்சிங்கன் காட்டிய வழியில் துணிந்து குதித்துவிட வேண்டியதுதான். இன்றைக்கே போர் முரசறையச் செய்வோம். நிலைமையை மக்களிடமும் வீரர்களிடமும் எடுத்துக் கூறுவோம். நான் மீண்டும் போர் மேல் செல்லுகிறேன். திருவரங்கத்திலும் கண்ணனூரிலும் கோசலப் படைகள் குவிந்து வருவதாகச் செய்தி வந்திருக்கிறது. காவேரிக் கரை ஓரமாகச் சென்று வீரநரசிம்மனின் படைகளின் மீது மோதுகிறேன்.''

பதிலளிக்கத் தோன்றவில்லை குலசேகர பாண்டியருக்கு. சுந்தரபாண்டியனின் துணிவு அவருக்கு வியப்பைத் தந்த தென்றாலும், அவன் செல்லும் வழியின் முடிவை நினைக்கவே அவர் நெஞ்சம் நடுங்கியது.

''தம்பி!'' என்று உணர்ச்சி பொங்க அழைத்துக் கொண்டே அவனுடைய கரங்கள் இரண்டையும் பற்றிக் கொண்டார் பாண்டியர். ''மாண்டு விட்டாய் என்று நினைத்திருந்தேன்; மீண்டும் திரும்பி வந்தாய். நாடு பறிபோய் விட்டது என்று நம்பிக்கை இழந்திருந்தேன். அதையும் மீட்டுக் கொடுத்து விட்டாய். எனக்கு நீ வேறில்லை; நாடு வேறில்லை. நீதான் நாட்டின் உயிர் மூச்சு; அது உன் உடல். இரண்டும் ஒன்றி வளர வேண்டிய எதிர்காலம் உன் முன்னே நீண்டு கிடக்கிறது. இரண்டையும் இழந்துவிட்டால் பிறகு என் உயிர் நிலைக்காது. மின்னல்போல் தோன்றி மறைந்து என்னை மீண்டும் கதியற்றவனாக்கி விடாதே!''

''போர் தொடுக்க வேண்டாமென்கிறீர்களா? அது நம்மைத் தேடி வந்துவிட்டது. இனி தயங்குவது தர்மமுமல்ல; ஆண்மையுமல்ல. நாடு அழிந்தாலும் நட்புக்குத் துரோகம் செய்யக் கூடாது.''

''நட்புக்காகப் பரிந்துதான் வீரநரசிம்மனும் போரில் குதித்து விட்டார்; நீயும் துணிந்து நிற்கிறாய். இருவர் சார்பிலும் நட்புத்தான் பகையைத் தூண்டுகிறது.''

''கோழையின் நட்பை அவர் ஒரு பொருட்டாக மதிக்கிறார்; நான் வீரரின் நட்பைப் போற்றுகிறேன்'' என்றான் சுந்தரபாண்டியன்.

சிந்தனை செய்தார் பெரிய பாண்டியர். அவனை வாழ்த்துக் கூறிப் போருக்கு அனுப்புவதைத் தவிர வேறு வழி அவருக்குப் புலப்படவில்லை. ஆனால் இந்தப் போர் மூண்டால் நிலைமை எப்படி மாறும் என்று நினைக்கவே அவர் தயங்கினார்.

''நீ போருக்குச் சென்று வெற்றியுடன் திரும்ப வேண்டும் என்று வாழ்த்துக் கூறுகிறேன்'' என்று வாழ்த்தி விட்டு, ''அதோடு நீ எனக்கொரு வாக்குறுதியும் அளிக்க வேண்டும்'' என்றார்.

சுந்தரபாண்டியன் அவர் முகத்தை உற்று நோக்கினான்.

''தம்பி! நாடு என்பது வெறும் மண் பரப்பல்ல. நீ இந்த நாட்டின் தலைவன்; குடிமக்கள் உன் குழந்தைகள். அவர்களைப் போரின் அழிவிலிருந்து காக்க ஏதும் வழி தெரிந்தாலும் அதில் செல்லத் தயங்கக்கூடாது. போரைத் தவிர்க்க முடியுமானால் தவிர்க்க வேண்டும்.''

ஏன் இப்படிக் கூறுகிறார் என்று இளையபாண்டியனுக்குத் தெரியவில்லை. அவரே கூறினார்: ''விழுப்பரையரும் கயல்விழியும் அங்கிருப்பதால் சமாதானத்தின் கடைசி நம்பிக்கை என்னுள் இன்னும் ஒரு மூலையில் ஊசலாடுகிறது. சமாதானத்துக்காக நீ எதையாவது இழக்க நேர்ந்தாலும் பொருட்படுத்தக் கூடாது.''

''எதை இழக்க நேரிடும்?''

''எதை என்று என்னால் ஒன்றையும் இப்போது குறிப்பிட்டுக் கூற முடியவில்லை. போரில் வெற்றி என்பது எண்ணற்ற வீரர்களின் உயிரை நாம் இழந்தபிறகே கிடைக்கக் கூடியது. அதேபோல் அமைதியின் வெற்றிக்காகவும் நீ சிலவற்றை இழக்க நேரிடலாம். பாண்டிய நாட்டின் வாழ்வு உன் கையில் இருக்கிறது. அதைக் காப்பவனே காவலன்.''

தயங்கி நின்றான் சுந்தரபாண்டியன்.

ஆவேசம் வந்தவர்போல் கூறினார் பாண்டியர். ''நீ உனக்குள் இப்படி ஒரு சபதம் செய்துகொள்; நாட்டின் நல்வாழ்வுக்காக நான் உடன்பாடு செய்து கொள்ளவும் தயங்க மாட்டேன். அமைதி காப்பதற்காக நான் எதையேனும் இழக்க நேர்ந்தாலும் இழக்கத் துணிவேன். நாட்டின் தலைவனாக இருந்து நான் எதையும் முடிவு செய்வேன். நான் குடிமக்களின் தலைவன்!''

அவ்வாறே திருப்பிக் கூறிச் சபதம் செய்தான் சுந்தரபாண்டியன். அப்போது அவனது அங்கம் முழுவதுமே தீ பரவுவது போல் ஒரு வேதனை கொழுந்துவிட்டது. எதனை இழக்கத் துணிந்தான் அவன்?

# 21. போர்தான் முடிவா?



தமது படைவீரர்களில் ஒரு பகுதியினரைத் திருமுனைப்பாடிக்கும் மற்றொரு பகுதியினரைக் கண்ணனூருக்கும் அனுப்பச் செய்தார் வீரநரசிம்மன். கண்ணனூருக்கு அனுப்பப் பெற்ற வீரர்கள் திருமுனைப்பாடிக்குச் சென்றவர்களை விட இருமடங்கு எண்ணிக்கையில் மிகுந்தவர்கள். கண்ணனூரிலிருந்து நேரே பாண்டிய நாட்டுக்குள் புகுந்துவிட வேண்டும் என்பது அவரது திட்டம். அவரே முன்னின்று படை நடத்திச் செல்ல வேண்டும் என்று முடிவு செய்தார்.

பாமினியின் குறுக்கீடு அவருடைய வெஞ்சின நெருப்புக்கு நெய்வார்த்ததே தவிர, அதை அணைக்க முடியவில்லை. இரவில் அந்தப்புரத்தில் அவர் தனித்திருந்தபோது அரசியாரின் கண்களும் சிவந்திருந்தன.

அரண்மனைப் பெண்டிர் அனைவருமே கண்ணீர் சிந்தியிருக்கிறார்கள் என்பதைக் கண்டு கொண்டார்.

''காலமெல்லாம் ஒரே போர்க்களமாக இருந்துவிட்டது தங்களுக்கு. நான் இந்த வாழ்க்கைக்கு என்னைப் பழக்கப் படுத்திக் கொண்டு விட்டேன். நம்முடைய குமாரத்தி பாமினியாவது சிறிது காலம் அமைதியாக வாழ்வதை நான் கண்டு மகிழ வேண்டும். இந்த ஒரே ஒரு வரத்தைத் தாங்கள் எனக்கு அருள வேண்டும்!''

வீரநரசிம்மன் திடுக்கிட்டார். இதுவரை அரசியாருக்கு இவ்வளவு மெய்த் துணிவு ஏற்பட்டதில்லை. காரணத்தை அவர் ஊகித்துக் கொண்டார். பாண்டிய நாட்டுப் பாணர் குலப் பெண் அந்தப்புரத்துக்குள்ளேயே தனது சதிச் செயலைத் தொடங்கி விட்டாள் போலும்!

''உன் மீது குற்றமில்லை. எல்லாம் அந்தப் பாண்டிய நாட்டுப் பெண்ணால் வந்த வினை. அவளை அழைத்துக் கொண்டு வா!''

கயல்விழியும் பாமினியும் ஒன்றாக அங்கு வந்தார்கள். கயல்விழி கரம்கூப்பி வணங்கி நின்றாள்.

''நட்புறவு பேசுவதற்காக அவன் உங்களை அனுப்பினானா அல்லது அந்தப்புரத்துக்குள் பகைமூட்ட உன்னையும், நாட்டுக்குள் உட்பகை மூட்டப் புலவரையும் அனுப்பினானா?''

''எங்கள் இருவரையுமே அவர் அனுப்பவில்லை'' என்றாள் கயல்விழி.

''என்ன!''

''அவருடைய மனம் எனக்குத் தெரியும். பெரிய பாண்டியர் புலவரை அனுப்பி வைத்தார். நான் எனது வற்புறுத்தலின் பேரில் வந்தேன்.''

''இதோ பார்! முயலைப்போல் இதுகாலம் பதுங்கி யிருந்த கோப்பெருஞ்சிங்கன், என்னுடைய பகை வரும் என்பதை அறிந்தும் இப்போது இராஜராஜனைச் சிறையிட் டிருக்கிறான். அவனாக இதைச் செய்யவில்லை. சுந்தர பாண்டியனின் தூண்டுதலும் துணையும் இருப்பதால் அவனுக்கு இந்த நெஞ்சுரம் வந்திருக்கிறது. நானே பாண்டிய

நாட்டுக்குள் படையோடு புகுந்து அவனைச் சிறையிட்டுக் கண்ணனூர்க் கோட்டத்தில் அடைக்கப் போகிறேன்.''

இதைக் கேட்டதும் மூச்சுத் திணறியது கயல்விழிக்கு. அவரே மேலும் கர்ஜித்தார்:

''முதலில் உன்னையும் அந்தப் புலவரையும் கண்ணனூர்க் கோட்டத்தில் அடைக்கப் போகிறேன்.''

''இறைவனின் திருவுள்ளம் நமது இருநாடுகளுமே அழிந்து சுடுகாடுகளாக மாறிப் போக வேண்டுமென்று இருக்குமானால் அதை யாரால் தடுக்கமுடியும்?'' என்று பணிவோடு கூறினாள் கயல்விழி. ''சுந்தரபாண்டியர் வந்த பிறகு பாண்டியநாடே பெரும் பாசறையாக மாறிவிட்டது. கோசல நாடும் எப்போதும் பாசறைதான். நீங்கள் போரிட்டு உங்களில் யார் வெற்றி பெற்றாலும், அழியப் போவது மட்டிலும் குடிமக்களாகிய நாங்கள்தாம். இந்தப் போரில் தோல்வி பெறுபவர்கள் அடுத்த போரில் வெற்றி பெற்றவர் களை அழிப்பார்கள். காலம்காலமாக இதுதானே நடக்கிறது? நடந்துவிட்டுப் போகட்டும்! காவலர்களாக இருக்கவேண்டிய அரசர்கள் காலனின் தூதுவர்களாக மாறிவிட்டீர்கள். சுந்தர பாண்டியரும் வெற்றிச் செருக்கில் இவ்வாறுதான் துடித்து நிற்கிறார்.''

கயல்விழியின் பணிவும் துணிவும் அவள் சிந்தனைத் தெளிவும் வீரநரசிம்மனுக்கு அதிர்ச்சியைத் தந்தன.

''கூரைக் குச்சுகளில் வாழும் பெண்களிலிருந்து அரண்மனைகளின் அந்தப்புரங்களில் வாழும் பெண்கள் வரையில் போரால் பெறும் துன்பங்களை வீரர்கள் அறிய மாட்டீர்கள். நீங்கள் போர் செய்து மடியுங்கள். நாங்கள் தீக்குளித்து மடிகிறோம். பிறகு நாங்கள் சுமந்து பெற்ற குழந்தைகளுக்கு துன்பம்; எங்கள் கையால் உணவு கொள்ளும் முதியோருக்குத் துன்பம். நாங்கள் அமங்கலிகளாக வாழ்ந்தாலோ அதைவிட வேறு கொடுமை வேண்டாம்!''

''சுந்தரபாண்டியன் மட்டிலுமே சோழ சாம்ராஜ்யத்தை அழித்து நிர்மூலமாக்கலாம் போலும்!'' என்று கூறி நகைத்தார் சக்கரவர்த்தி.

''பாண்டிய நாட்டை அழிவிலிருந்து தடுத்துக் கொள்வதற்காக நடத்திய உரிமைப் போர் அது. பாண்டிய நாட்டிலிருந்து கொள்ளை கொண்ட பெருஞ் செல்வத்தில் சிறு பகுதியைத்தான் நாங்கள் திறைப்பொருளாகத் திருப்பிக் கேட்டோம். அதைக் கொடுப்பதாக வாக்களித்துப் பிறகு மாறிவிட்டார் சோழர். எங்கே மீண்டும் பாண்டிய நாட்டின் மீது படை எடுப்பு நிகழுமோ என்ற அச்சத்தால் அவரை ஒடுக்க முனைந்திருக்கிறார் பாண்டியர்.''

''கோசல சாம்ராஜ்யம் ஒன்று நிலைத்திருக்கும் வரையில் சோழ சாம்ராஜ்யமும் நிலைத்திருக்கும்!''

''பாண்டிய சாம்ராஜ்யமும் அதோடு நிலைத்திருக் கலாமே?'' என்று கேட்டாள் கயல்விழி.

''வலிமை மிகுந்தோர் நிலைத்திருப்பார்கள்! எளியவர் கள் வீழ்ந்து விடுவார்களல்லவா?''

''அப்படியென்றால் இராஜராஜனைவிட எங்கள் இளைய பாண்டியர் நூறு மடங்கு வலியவர். நட்பென்றால் உயிரையே வழங்கக் கூடியவர். அந்த வலிமைமிக்கவர் இந்த வலிமை மிக்கவரின் நட்பை நாடுகிறார்.''

''பெண்ணே! நீ அவனுக்கு அமைச்சராக இருக்க வேண்டியவள்!'' என்று கூறிச் சிரித்தார் வீரநரசிம்மன். ''அவன் வலிமை மிகுந்தவன் என்பதை நீ கூறிவிட்டால் போதுமா? நான் நம்ப வேண்டுமல்லவா? அதை இந்தப் போரே முடிவு செய்யட்டும்! அவன் வலியவனாக இருந்தால் மதுரைச் சிறைக்குள் நான் இருப்பேன்; நான் வலியவனாக இருந்தால் கண்ணனூர்ச் சிறைக்குள் அவன் இருப்பான். என்ன தெரிந்ததா, உனக்கு?''

கயல்விழி எதுவுமே பேசவில்லை.

''துவார சமுத்திரத்திலிருந்தவர்கள் இதுவரை காஞ்சியில் தங்கிவிட்டோம்; இப்போது எங்களையும் கண்ணனூர் மாளிகைக்கு அழைத்துச் செல்லவேண்டும்'' என்று கேட்டாள் பாமினி.

தமது குமாரத்தியை ஒரு கணம் உற்று நோக்கிவிட்டு, ''நான் கண்ணனூரில் தங்கப் போவதில்லை; படைகளுடன்

பாண்டியனின் தலைவாயில் கதவைப் போய்த் தட்டப் போகிறேன்!'' என்றார்.

''தாங்கள் எங்கு சென்றாலும் எங்களைக் கண்ணனூர் மாளிகைக்கு அழைத்துச் செல்லுங்கள். போர் முடியும் வரையிலும் நாங்கள் அங்கு தங்குகிறோம்!''

அரசியாரும் அவ்வாறே வேண்டிக் கொண்டார். சக்கரவர்த்தி சிறிதுநேரம் ஆழ்ந்து ஆலோசித்தார். பிறகு, ''நீங்கள் விரும்புவது போலவே வந்து கண்ணனூர் மாளிகையில் தங்கலாம்'' என்றார்.

அரச பரிவாரத்தினர் கண்ணனூர்க் கோட்டையை நெருங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களை எதிர் கொண்டழைக்க வந்த கோசல நாட்டுப் படைத் தலைவன் வீரநரசிம்மனிடம் ஒரு செய்தி கூறினான்.

''சுந்தரபாண்டியன் தனது படைகளோடு வந்து நம் தலைவாயிலைத் தட்டுகிறான். காவேரிக் கரையில் உள்ள மகேந்திர மங்கலத்தில் பாசறை அமைத்துக்கொண்டு காத்திருக்கிறான்.''

பாண்டியனின், தலைவாயிலைத் தட்டப் போவதாக மார் தட்டியவருக்கு இப்போது தலைசுற்றியது. கயல்விழியும் பாமினியும் ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டு கண் கலங்கினார்கள்.

# 22. அழிவுக்கு எதிர்முனை



வீரநரசிம்மனிடம் செய்தியைக் கூறிய படைத் தலைவரின் குரலிலிருந்தே சுந்தரபாண்டியனின் மெய்த் துணிவையும் படை பலத்தையும் ஊகித்துக் கொள்ள முயன்றார் சக்கரவர்த்தி. அவருக்கு விவரம் தெரிந்த காலமாக வீரநரசிம்மன் இப்படி ஒரு செய்தியைக் கேள்வியுற்றதில்லை.

வழக்கமாகப் படையெடுத்து முன்னேறித் தாக்குபவர்கள் கோசலநாட்டுப் படையினராகத்தான் இருப்பார்கள். மற்றவர்களோ தற்காப்புக்காகப் போரிடுவார்கள்; பின் வாங்குவார்கள்; முடிவில் பணிந்து விடுவார்கள். சுந்தர பாண்டியனோ கோசலப் படையினரின் வரலாற்றையே மாற்றி, அவர்களையே தற்காத்துக் கொள்ளும்படி அறைகூவல் விட்டுவிட்டான்.

''வந்தவன் நேரடியாகக் கண்ணனூர்க் கோட்டையைத் தாக்காமல் ஏன் தயங்கி நிற்கிறான்?'' என்று கேட்டார் வீரநரசிம்மன்.

''சக்கரவர்த்திகள் வந்த பிறகுதான் அவன் வாளெடுத்துப் போர் தொடுப்பானாம்; சக்கரவர்த்திகளோடு அவன் போர் புரியும்போதுதான் யுத்தமும் தொடங்கப் பெறுமாம். நம்முடைய ஒற்றர்கள் அவனைப் பற்றிச் சில விசித்திரமான செய்திகளைக் கூறுகிறார்கள். நேரில் அவனைப் பார்த்துவிட்டு வந்திருக்கிறார்கள்.''

''நேரில் பார்த்துவிட்டு உயிருடன் திரும்ப முடிந்ததா நம் ஒற்றர்களால்!''

''அவனே கட்டுக்காவலுடன் அவர்களைத் திருப்பி அனுப்பியிருக்கிறான். செய்திகளையும் வெளிப்படை யாகவே அவர்களிடம் பேசியிருக்கிறான்—''

வியப்பும் திகைப்பும் மாறிமாறி எழுந்தன வீர நரசிம்மனுக்கு. ஒற்றர் தலைவனை அழைக்கச் செய்து அவனிடம் விசாரித்தார். ஒற்றர் தலைவன் விவரம் கூறினான்;

''எவ்வளவு படைகள் வந்திருக்கின்றன என்பதைக் கண்காணிப்பதற்காகச் சோழ நாட்டுக் குடியானவர்களைப் போல் நாங்கள் ஆற்றின் மறுகரைக்குச் சென்றோம். தொலை விலிருந்து கொண்டே கண்ணோட்டம் விட்டோம். நாங்கள் திரும்பும் சமயத்தில் எங்களைப் பிடித்துச் சுந்தரபாண்டியன் முன்னால் நிறுத்திவிட்டார்கள் பாண்டிய வீரர்கள்.''

''படையில் எவ்வளவு பேர்கள் இருப்பார்கள்?''

''இங்கே வந்திருக்கும் நமது படைகளும் திருமுனைப்பாடியில் போர் புரியும் படைகளும் ஒன்று

சேர்ந்தால் எவ்வளவு பேர்கள் இருப்பார்களோ அவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள்'' என்றான் ஒற்றர் தலைவன்.

''என்ன?'' திடுக்கிட்டார் சக்கரவர்த்தி.

''அதைப்போல் இன்னும் இருமடங்கு படையினர் தென்பாண்டி நாட்டிலிருந்து வந்து கொண்டிருப்பதாகப் பேசிக் கொள்கிறார்கள். அவர்களுக்காகப் பாசறை அமைக்கும் வேலைகள் நடந்து கொண்டிருந்ததையும் நாங்கள் கண்டோம்.''

அச்சம் என்பதையே அறியாதிருந்த மாவீரர் முதன் முதலாக அது தம்முள்ளே தலைநீட்டுவதை உணர்ந்தார். உடனடியாக அதை உதறிவிட்டு, ''அவன் உங்களை எப்படித் திருப்பி அனுப்பத் துணிந்தான்?'' என்று கேட்டார்.

''காவல் வீரர்கள் எங்களைக் கைப்பற்றிப் பாண்டியனுக்கு முன்னால் கொண்டுபோய் நிறுத்தினார்கள். அவன் எங்களைப் பொருட்படுத்தவே இல்லை. 'ஒற்றர்கள் தானே? அவர்களை அவர்கள் விரும்பும் இடங்களுக்கெல் லாம் அழைத்துச் சென்று காட்டுங்கள். அவர்கள் விரும்பும் செய்திகள் அனைத்தையும் அவர்களிடம் கூறுங்கள். கோழைகளிடமும் ஆண்மையற்றவர்களிடமும் தான் இரகசியம் மிகுந்திருக்கும். இங்கே வந்திருப்பதும், கடல்போல் பின்னால் வந்து கொண்டிருப்பதும் சுந்தரபாண்டி யனின் படை என்பதை மட்டும் அந்தச் சக்கரவர்த்தியிடம் சொல்லச் சொல்லுங்கள்!' என்றான். தங்களுடைய வருகைக்காகவே போர் தொடங்காமல் காத்திருக்கிறான் என்ற செய்தியும் கிடைத்தது.''

வீரநரசிம்மன் சிந்தனையில் ஆழ்ந்தார். அவனுடைய நடவடிக்கைகளை அவரால் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. விசித்திரமான பகைவனாக அவன் அவருக் குத் தோற்றமளித்தான். பாவம்! 'தென்பாண்டி நாட்டிலிருந்து கடல்போல் வந்துகொண்டிருக்கும் பெரும்படை' புலவனாகிய அவன் உருவாக்கிய கற்பனைப் படை என்பதை அவர் அறிந்தாரில்லை.

சொல்வன்மை, நாவன்மை ஆகிய கூர்மையான போர்க் கருவிகளை அவன் சிந்தனையிலிருந்து ஏவிவிட்ட வண்ணம் இருந்தான். காவேரி ஆற்றைக் கடந்துவந்த அந்த ஆயுதங்கள் கோசலப் படையினரின் நெஞ்சில் தாக்கிப் பயத்தையும் பீதியையும் கிளறிவிட்ட வண்ணமாக இருந்தன. புதிய போர்க் கருவியாகிய சொல்லாயுதத்தை அதில் வலியவரான வள்ளுவர் என்ற மாவீரரிடம் பயின்றவனல்லவா அவன்?

படைத்தலைவர்களோடு கண்ணனூர்க் கோட்டை மாளிகைக்குள் வீரநரசிம்மன் மந்திராலோசனை நடத்தினார்.

''வயதில் இளையவன்; சிறு நாட்டுத் தலைவன்; இந்த நிலையிலும் நம்மை எதிர்க்கத் துணிந்துவிட்டான். நாம் தயங்கிப் பயனில்லை. வீரர்களுக்கு வெறியூட்டி முழுமூச்சோடு போரைத் தொடங்க வேண்டியதுதான்'' என்றார் சக்கரவர்த்தி.

''செய்ய வேண்டியதுதான். ஆனால்...''

''என்ன?''

''இந்தப் போரில் எப்படியும் நமக்கு வெற்றி கிடைக்கும். ஆனால் வீரர்களில் முக்கால் பகுதிப் பேர்களுக்கு மேல் நாம் இழக்க வேண்டியிருக்கும். போர் மற்றப் போர்களைப் போல் எளிதாக இருக்காது. இந்தப் போரில் நாம் வெற்றி பெற்றாலும், இந்த வெற்றிக்குப் பிறகு நம்முடைய சாம்ராஜ்யத்தின் பலம் பாதிக்கு மேல் சரிந்துவிடும்—மீண்டும் இவன் படையெடுக்கக்கூடும்!''

''என்ன செய்வது?'' என்று கேட்டார் சக்கரவர்த்தி.

''திருமுனைப் பாடிப் போர் முடிந்து அந்த வீரர்களும் இங்கு வந்தால் விரைவில் வெற்றி கிடைக்கும்'' என்றார் படைத் தலைவர்.

முடிவு ஏதும் கூறாமலே சபையைக் கலைத்தார் வீரநரசிம்மன். சுந்தரபாண்டியனை முன்பு கங்காபுரியில் அவர் சந்தித்த காட்சி அவர் கண்முன்னே வந்தது. அழகன், இளைஞன். அறிவாற்றலும் கலைப்பயிற்சியும் கொண்டவன்; பண்பிலும் பணியிலும் அவனது தனிச் சிறப்புக்கள் அன்றே அவருக்கு விளங்கின. 'அவன் இன்று பயங்கரப் பகைவனாக முளைத்து வந்து நமக்கு முன்னே தோள் தட்டிக்கொண்டு

நிற்கிறான்! பாமினியோ அவனைக் கரம் பற்றிக் கணவனாக அடையத் துடிக்கிறாள்!'

பாமினியைச் சந்திப்பதற்காக மாளிகையின் பின்புறம் வந்துகொண்டிருந்த சக்கரவர்த்தி, பாமினியும் கயல்விழியும் ஏதோ இரகசியமாகப் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டார். சுவரின் மறைவிலிருந்து கொண்டு சாளரத்தின் வழியாக நடக்கும் நிகழ்ச்சிகளைக் கூர்ந்து நோக்கினார். இரு பெண்களும் ஒருவரையொருவர் கட்டிக் கொண்டு அழுதார்கள்; இருவரும் இரகசியமான குரல்களில் வாதிட்டுக் கொண்டார்கள். பிறகு பாமினி ஓர் ஓலையை எழுதிக் கயல்விழியின் கரத்தில் கொடுத்தாள். தன்னுடைய மோதிரத்தைக் கழற்றி அவளுடைய விரலில் அணிவித்தாள். கோசலநாட்டுப் புலித்தலை பொறித்த இலச்சினை ஒன்றை யும் அவளிடம் கொடுத்தாள். அது பெண்கள் தங்கும் இடமாத லால் அங்கு வேறு யாரும் வரமுடியாது என்ற நினைப்பில் அவர்கள் சற்று மனம் விட்டே பேசிக் கொண்டார்கள்.

நேரம் மாலை மயங்கும் நேரம். இருட்டிக்கொண்டு வரும் நேரம். மாளிகையில் பணியாளர்கள் தீப்பந்தங்களை ஏந்தி ஒவ்வொரு விளக்காக ஏற்றிய வண்ணம் நடந்து கொண்டிருந்தார்கள்.

சக்கரவர்த்தி சரேலென்று இருட்டில் மறைந்து மீண்டும் வெளியில் வந்தார். அவர் வெளியில் திரும்பி வந்தபோது அவருக்கு வெண்தாடி காடுபோல் மண்டிக் கிடந்தது. காவலர்கள் தலைவனைப் போன்ற உடைக்குள் அவரது கம்பீரமான தோற்றம் மறைந்து கொண்டது.

பாமினி வீரனை அழைப்பதற்காக அருகில் தொங்கிய செம்புத் தகட்டில் ஓங்கியடித்தாள். கிழவர் ஓடோடியும் சென்று வணங்கி நின்றார்.

''இந்தப் பெண்மணியைப் பத்திரமாகத் தோணியில் ஏற்றி விட்டுக் காவேரியின் எதிர்க்கரைக்கு அனுப்பிவிடவேண்டும். நம் வீரர்கள் கேட்டால் நான் அனுப்பியதாகச் சொல்!''

''சக்கரவர்த்திகள் கேட்டால்...?''

''அவருக்குத் தெரிய வேண்டுமென்பதில்லை. தெரிய நேர்ந்தாலும் பாதகமில்லை. நம்முடைய இலச்சினை இவளிடம் இருக்கிறது.''

தயங்குவது போல் தயங்கிவிட்டு, ''சித்தம் இளவரசி!'' என்று கரகரத்த குரலில் கூறினார் கிழவர்.

மீண்டும் பாமினி கயல்விழியைக் கட்டிக்கொண்டு கண்ணீருடன் விடை கொடுத்தாள். ''நாம் வெற்றி பெறுவோம்; இல்லாவிட்டால் காவேரித் தாயின் மடியில் நாம் இருவருமே ஒன்றாய்த் தஞ்சம் புகுந்து விடுவோம்'' என்றாள் பாமினி.

முன்னிருட்டு வேளையில் காவேரியைக் கிழித்துக்கொண்டு ஒற்றைத் தோணி எதிர்க்கரையை நாடிச் சென்றது. தோணியில் கயல்விழி மட்டிலுமே தனித்திருந்து துடுப்பு வலித்தாள். மறு கரையிலிருந்த சுந்தரபாண்டியனின் வீரர்கள் அந்தக் காட்சியைக் கண்டு திகைத்து நின்றார்கள். படைவீடுகள் உள்ள இடத்துக்கு இரவு நேரத்தில் தனித்து வரத் துணிந்தவள் யார்?

# 23. நீரும் நெருப்பும்



சுந்தரபாண்டியனின் பாசறைக்குள் அப்போதுதான் அந்தரங்கப் போர்த் திட்டங்கள் ஒருவாறு ஆலோசிக்கப் பெற்று முடிவடைந்தன. ஆலோசனைகளில் பங்கு கொண்ட மழவச் சக்கரவர்த்தியும் அழகம் பெருமாளும் தங்களது முகங்களில் எவ்வித உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தாது தங்களது பாசறைகளுக்குச் சென்றனர்.

வீரநரசிம்மன் கண்ணனூருக்கு வந்துவிட்ட செய்தி மகேந்திரமங்கலத்துக்கு எட்டியது. அடுத்தாற்போல் எந்தக்

கணத்திலும் கோசல நாட்டுப் போர்ப் பறைகளை காவேரியின் எதிர்க்கரையில் கேட்கலாம். பொழுது விடிந்தால் அது போர்த் தொடக்கப் பொழுதாகத்தான் விடியும்.

சுந்தரபாண்டியன் எல்லாவிதப் போர்த் தந்திர முறைகளையும் கைக்கொண்டு பகைவர்களிடையே பெரும் குழப்பத்தை ஏற்படுத்தி வந்தானென்றாலும், அவனுக்குத் தன்வலிமையையும் பகைவர் வலிமையையும் சீர்தூக்கத் தெரியாமலில்லை. அவனுடைய படையினரில் ஒரு பகுதியினர் கங்காபுரியிலும் சோழ நாட்டிலும் இருந்தார்கள். அவர்களை அவன் திருப்பி அழைத்துக் கொள்ள முடியவில்லை.

கோப்பெருஞ்சிங்கனுடைய படைகளுக்குத் துணையாகத் திருமுனைப்பாடி நாட்டுக்கு அதில் ஒரு பகுதியை அனுப்பி விட்டான். வந்திருக்கும் புலவர்கூட்டம், கலைஞர் கூட்டம் இவர்களையெல்லாம் போர்வீரர்கள் என்று கோசல நாட்டு ஒற்றர்கள் நம்பும்படியாகச் செய்தாயிற்று. பின்னால் வந்து கொண்டிருக்கும் தென்பாண்டிப் படைக்கடல் பற்றியும் பறைசாற்றியாயிற்று. ஆனால் உண்மையில்...!

''நம்முடைய உண்மையான படை பலத்தை அவர்கள் தெரிந்து கொள்வதற்கு முன்பாகவே நாம் பாதிவெற்றியை அடைந்துவிட வேண்டும்!'' என்றான் சுந்தரபாண்டியன்.

''நாம் இந்தப் போரில் முழு வெற்றி பெறுவோம் என்று கூறமுடியாது. ஆனால் பெருத்த சேதத்தை அவர்களுக்கு விளைவித்து, அவர்களது வலிமையை இப்போது குறைத்து விடலாம். அடுத்த போரில்தான் நாம் வெற்றியைக் கைப்பற்ற முடியும்'' என்றார் மழவச் சக்கரவர்த்தி.

சுந்தரபாண்டியனுக்கு அடுத்த போர் என்பதில் நம்பிக்கை இல்லை. வெற்றி அல்லது வீர மரணமே அவனது முடிவு. மின்னல் வேகத்தில் நடைபெறும் போர் நிகழ்ச்சிகளில், துரும்பைப் போன்ற ஒரு நிகழ்ச்சி தனக்குச் சாதகமாக அமைந்தாலும் அதைத் தூணாகக் கொண்டு பகைவரை அழிக்க விரும்பினான்.

இந்தச் சமயத்தில்தான் பாசறைக்கு வெளியில் குதூகலம் நிறைந்த ஆரவாரம் கேட்டது. கயல்விழியின் வரவு உண்ட

வீரர்கள் கொற்றவைத் தேவியையே கண்டு விட்டவர்கள் போல் பேரானந்தம் கொண்டார்கள். விழுப்பரையரோடு அவள் காஞ்சிக்குத் தூது சென்ற செய்தியும் படைத் தலைவர்கள் பலருக்குத் தெரியும்.

பாசறையின் முகப்புக்கு வந்து அவளை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றான் சுந்தரபாண்டியன். வீரர்கள் விடைபெற்றுச் சென்றனர். இனம் புரியாத ஏதோ ஒரு நம்பிக்கை அவர்களிடம் ஏற்பட்டது. எதிர்பாராத வகையில் தங்களுக்கும் பாண்டிய நாட்டுக்கும் திடீரென்று நன்மை பிறந்துவிட்டதுபோல் அவர்கள் உணர்ந்தார்கள். பாண்டிய நாட்டின் சிம்மாசனத்தில் இளைய பாண்டியரின் அருகில் வீற்றிருக்கப் போகிறவள் கயல்விழிதான் என்ற எண்ணமும் அவர்களுக்கு உண்டு.

பாசறைக்குள்ளே தூண்டாமணி விளக்கு சின்னஞ்சிறு சுடர்விட்டு நிலவொளி போன்ற மங்கலான ஒளியைக் கசிய விட்டுக் கொண்டிருந்தது. சுந்தரபாண்டியன் அப்போது இந்த உலகம் முழுவதையுமே மறந்த நிலையில் இருந்தான். மெய்யாகவே கயல்விழி உயிரும் உடலுமாக அந்தப் பாசறைக்குள் அடி எடுத்து வைத்திருக்கிறாளா அல்லது அவ்வளவும் கனவு மயக்கந்தானா என்று ஐயம் எழுந்து விட்டது அவனுக்கு.

அந்த ஆற்றங்கரைப் பொட்டல் வெளிக்கு, பாசறைகள் சூழ்ந்த பயங்கரமான போர்க்களத்துக்கு, நள்ளிருளுக்குச் சற்று முன்பாக அவள் எங்ஙனம் வந்து சேர்ந்தாள்?

அது பாசறை என்பதோ, ஆயிரமாயிரம் வீரர் கூட்டம் தன் உடல் பொருள் ஆவி அனைத்தையும் வழங்கத் துடிக்கும் சூழல் என்பதோ, தான் அந்தக் கூட்டத்தின் தலைவன் என்பதோ அந்தக் கணத்தில் அவனுக்கு மறந்தேபோய் விட்டது. பொழுது விடிந்தவுடன் போர் முரசு கொட்டச் சொல்லிச் சற்று முன்தான் ஆணையிட்டவன் அவன். யாவற்றையுமே மறந்து நின்றான் சுந்தரபாண்டியன்.

அவன் அந்தக் கணத்தில் நாட்டுத் தலைவனில்லை; போர்ப்படைத் தலைவனில்லை; அவனுடைய தலைவிக்குத்

தலைவன். எவளை அவன் தன் அகத்தில் சிறையிட்டு வைத்திருந்தானோ அந்த அகத்தின் தலைவிக்குத் தலைவன்.

எத்தனையோ யுகங்களாகப் பிரிந்திருந்தவர்களை மீண்டும் காண்பது போன்ற பேரானந்தம் அவனுக்கு. அவனுடைய எல்லையற்ற பூரிப்பை உணர்ந்த கயல்விழி சிறிது அச்சத்துடன் அருகில் சென்றாள். அமர்ந்து உரையாடுவதற்கு அருகில் ஏதேனும் ஆசனங்கள் இருக்கின்றனவா என்று சுற்றும் முற்றும் பார்த்தாள். அவனுடைய பாசறைக் கட்டில் ஒன்றைத் தவிர வேறு இருக்கைகளைக் காணோம். பட்டும் பஞ்சணையும், அகிற் புகையுமாகக் காட்சியளித்தது அந்தக் கூடம். ஆங்காங்கே கலிங்கமும் காஞ்சியுமாகத் திரைகள் தொங்கி அது தலைவனின் பாசறை என்பதைத் தனித்துச் சுட்டிக் காட்டின.

கரங்களிரண்டையும் மெல்லப் பற்றி அவளைக் கட்டிலில் அமரச் செய்தான்.

''கயல்விழி! நான் கனவு காணவில்லையே? நீதானே இப்போது இங்கு வந்திருக்கிறாய்?'' என்று மெல்லக் கேட்டான் சுந்தர பாண்டியன்.

மறுமொழி பேசுவதற்கு அவளால் முடியவில்லை. அவளுடைய இதயத்திலிருந்து கண்ணீர் ஊற்றெடுத்துப் பொங்கி அவள் தொண்டையை அடைத்தது.

''இதோ பார்! உன்னுடைய வருகை இப்போது எப்படி இருக்கிறது தெரியுமா? திருமணத்தை அடுத்து முதன் முதலாகத் தன் தலைவனைத் தனிமையில் காண வருவாளே புது மணப்பெண், அவளைப் போலவே நீ இங்கு வந்திருக்கின்றாய். இது பாசறையல்ல, கயல்விழி! நம்முடைய மணவறை! காவேரித் தென்றல், கனிந்த நிலவு, கைப்பிடியில் கயல்விழி! என் வாழ்வில் என் கனவுகளெல்லாம் இந்தக் கணத்திலேயே நனவாகி விட்டன. வீரநரசிம்மனையும் வெற்றி கொண்டு விடுவேன் என்று தோன்றுகிறது!''

''இளவரசே! இது போர்க்களம்; நாம் பாசறைக்குள் இருக்கிறோம்!'' என்று விம்மினாள் கயல்விழி. ''பொழுது விடிந்தால் எது மயான பூமியாகச் சுடர்விட்டு எரியப்

போகிறதோ, எங்கே ஆயிரமாயிரம் உயிர்கள் ஓலமிட்டு ஓய்ந்துவிடப் போகின்றனவோ அந்த மண்ணின் மீது நாம் இப்போது இருக்கிறோம்!''

''அதனால் என்ன? எனக்கென்னவோ இந்த வாழ்க்கை என்பதே ஒரு பகலும் ஓர் இரவும் கொண்ட மிகச் சிறுபொழுது என்றுதான் தோன்றுகிறது. பகலில் ஆண்மகன் புற வாழ்வுப் போர்க் களத்தில் போராட வேண்டும். இரவில் தலைவியின் அன்புக் கரங்களில் தலை சாய்ந்து இன்புற வேண்டும்.—கயல்விழி! உன்னோடு ஒரு நாள் வாழ்வதற்காக நான் ஒன்பது முறை பிறவி எடுக்கவும் தயங்க மாட்டேன்!''

கயல்விழிக்குச் சித்தம் கலங்கிவிடும் போலிருந்தது.

''இந்தக் கணத்தில் உன்னோடு வாழ்ந்து மறுகணத்தில் நான் படுகளத்தில் வீழ்ந்து மடிந்தாலும் வெற்றி வீரனாகத்தான் மடிவேன். மிகப் பெரிய சாம்ராஜ்யத்தையே வெற்றி கொண்ட பெருமையை நீ எனக்குத் தருவாய்!''

''இளவரசே! இந்த இரவும் நிலவும் நானும் சேர்ந்திருப் பதால் உங்கள் சித்தம் சிறிதளவு தடுமாறியிருக்கிறது. போர்க் களத்தில் உள்ள தலைவருக்கு முதலில் வேண்டியது சிந்தனைத் தெளிவு ஒன்றுதான். தயைசெய்து என்பொருட்டு அதை நீங்கள் இழந்து விடாதீர்கள்'' என்று மன்றாடினாள் கயல்விழி.

சுந்தரபாண்டியன் மெல்ல நகைத்தான். அவனுடைய குறுநகை அவள் உயிரையே பறித்துச் செல்லும் கூற்றாக இருந்தது கயல்விழிக்கு.

''வீழ்ந்து மடிவதைப் பற்றித் தலைவராகிய தாங்கள் எளிதாகப் பேசிவிட்டீர்கள். தாங்கள் வீழ்ந்து மடிந்துவிட்டால் பிறகு என் கதி என்ன என்பதைக் கூறுங்கள். நம்முடைய குழந்தைகளான லட்சோப லட்சம் குடிமக்களின் கதி என்ன என்பதையும் சொல்லுங்கள். போரில் தலைவரை இழந்த கைம்பெண், மகனைப் பறிகொடுத்த தாய், தந்தையை இழந்த குழந்தைகள் இவர்களுக்கு நீங்கள் என்ன நீதி வழங்கப் போகிறீர்கள்? நாசமாக்கப்படும் வீடுகள், சுட்டெரிக்கப்படும் உடைமைகள், அங்கமிழந்தவர்களின் மறுவாழ்வு, இவற் றுக்கு என்ன வழி செய்யப் போகிறீர்கள்?''

''கயல்விழி!'' என்று ஆத்திரத்தோடு கத்தினான் சுந்தரபாண்டியன்.

''இது நம்முடைய விடுதலைக்காக நடக்கும் போரல்ல! கோசல சாம்ராஜ்யத்தின் படைவலிமைத் துன்பத்தை இப்போது உங்கள் நட்புறவு நாடான திருமுனைப்பாடி நாடு அநுபவித்துக் கொண்டிருக்கிறது. என் உடலில் உயிர் உள்ளவரை என் பாண்டிய நாடு தீப்பட்டு எரிவதையும், என் தலைவரும் மக்களும் வீழ்ந்து மடிவதையும் நான் அநுமதிக்க மாட்டேன். ஒரு போதும் இந்தப் போர் நடக்கக் கூடாது. நடந்தால் அழியப் போவது நம் மக்கள் தான்; நம் நாடுதான்!''

வேல்பட்ட வேழமெனத் துடி துடித்தான் சுந்தர பாண்டியன். கயல்விழி கோசல சாம்ராஜ்யத்தின் படை வலிமையைத் தெரிந்து கொள்ளாமல் இவ்வாறு கூற மாட்டாள். நெடுநேரம் அவன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

''தவிர்ப்பதற்கு இனி வழி இல்லை'' என்று முணு முணுத்தது அவன் வாய்.

''தவிர்க்க முடியும். தாங்கள் விரும்பினால்!'' என்று கூறிப் பாமினியின் ஓலையை எடுத்து நீட்டினாள் கயல்விழி.

அதைப் படித்தான். பின்னர் சுட்டெரித்துவிடுபவன் போல் கயல்விழியைப் பார்த்தான். ''இதைவிடப் போரையும் அழிவையுமே நான் வரவேற்கிறேன்!'' என்றான்.

## 24. இதயம் பிளந்தது



சுந்தரபாண்டியனின் சுடுசொல் கேட்டுக் கயல்விழி துடித்துக் கொண்டிருந்தாள். சுந்தரபாண்டியனின் கரத்தில் பாமினி அனுப்பி வைத்த ஓலை துடித்துக் கொண்டிருந்தது.

பாமினி எழுதியிருந்தாள்.

''இளவரசே! தாங்கள் தாம் பாண்டிய நாட்டு இளவரசர்

என்பதை அறிந்தவுடனே, சோழநாட்டுப் போரில் தாங்கள் வெற்றி பெறவேண்டும் என்று நான் இறைவனிடம் முறை யிட்டேன். தங்களுடைய வெற்றி ஒருவகையில் எங்களது தோல்வி என்பதை அறிந்தும் தங்களுடைய செயலில் தர்மம் இருந்ததால் நான் அவ்வாறே வேண்டிக் கொண்டேன்.

நட்புறவுக்காகத் தாங்கள் புலவரையும் கயல்விழியை யும் தூது அனுப்பியபோது, அதன் வெற்றிக்காக நானும் என் அன்னையாருமே தந்தையாரிடம் முறையிட்டோம்.

வெண்ணெய் திரண்டு வரும்போது தாழியை உடைத்து விட்டீர்கள். மீண்டும் இராஜராஜனைப் போரில் வென்று சிறையிலடைப்பதற்குக் காரணங்கள் இருக்கலாம். ஆனால் தாங்களும் என் தந்தையாரும் கூடிப்பேசி ஒரு நல்ல முடிவுக்கு வந்திருக்கலாம். தாங்கள் அரசர். என்னைவிட வயதிலும் அநுபவத் திலும் தேர்ந்தவர்கள். ஆனால் நானும் ஓர் அரச குலப்பெண் என்ற முறையில் சொல்கிறேன்; ஒரு முறை போரில் வென்று விட்டால், போர்க்களத்தின் இரத்தச் சுவை அரசர்களைப் போர் வெறியர்களாகவே மாற்றி விடுகிறது. இந்தவகையில் தாங்களும் என் தந்தையும் ஒன்றுதான்.

முன்பு காஞ்சியில் என்னிடம் விடை பெற்றுக்கொண்ட போது, எங்கள் அன்புக்கு நன்றி சொல்ல மீண்டும் தந்தையை வந்து காணப் போவதாக வாக்களித்தீர்கள். இப்போது போர் முனையில் நின்று வாள் முனையில் அன்பு சொல்லத் துணிந்து விட்டீர்கள்.

ஒன்று தங்களது அன்பை நாடித் துடிக்கும் என் இதயத்தில் வாள் பாய்ச்சி விட்டுப் பிறகு போர் தொடங்குங்கள்; அல்லது என் கரம் பற்றி நம் இரு நாடுகளையும் அன்பாலும் உரிமையாலும் ஒன்றி வாழச் செய்யுங்கள். தங்களை மறவாத பாமினி.''

ஓலையை எழுதியவள் மீது சுந்தரபாண்டியனுக்குச் சீற்றமில்லை. அதை எழுதச் செய்தவள் மீது அவன் சீறினான். அதைத் சுமந்து கொண்டு தன்னிடம் வந்தவள் மீது அவன் ஆத்திரம் கொண்டான்.

''பாமினி ஒரு நிகழ்ச்சியைத் தங்களிடம் நினைவூட்டும் படி என்னிடம் கேட்டுக் கொண்டாள்'' என்றாள் கயல்விழி. ''கங்காபுரியில் தாங்கள் பாடி முடித்தவுடன் தங்கள் மார்பில் வாள் பாய்ச்சத் துணிந்தானாம் இராஜராஜன். குலோத்துங்கர் கூட அதைத் தடுக்க முயலவில்லையாம். எதிர்பாராத வேகத்தில் அவன் பாய்ந்ததால் வீரநரசிம்மனும் அதிர்ச்சி யுற்று விட்டாராம். பாமினி வந்து தடுத்திருக்காவிட்டால் அப்போதே...'' அதற்கு மேல் பேச முடியாமல் கயல்விழியின் குரல் தழுதழுத்தது.

''அதற்காக நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான் பாண்டியன். ''அவள் என் உயிரைக் காப்பாற்றியது உண்மைதான், அதற்குப் பதிலாக நாளைக்கு என் உயிரையே போர்க்களத்தில் அவள் தந்தையிடம் கொடுத்து விடுகிறேன். உயிர் எனக்குப் பெரிதில்லை,உயிரைவிட மேலான ஒன்றை அவள் கேட்கிறாள். அதை என்னால் கொடுக்க முடியாது.''

''அவள் எதையும் கேட்கவில்லை. தன்னையே தங்களிடம் கொடுக்கத் துடிக்கிறாள்.''

''கயல்விழி'' என்று கத்தினான் சுந்தரபாண்டியன். ''என் தலைவியான நீ என்றைக்கு அவளுடைய தோழியாக மாறினாய்? ஏன் மாறினாய்? சொல் உடனே சொல்லி விடு!''

இளங்குருத்துப் போன்ற கயல்விழியின் தோளைத் தன் முரட்டுக்கரத்தால் பற்றிக்குலுக்கினான் சுந்தரபாண்டியன். கயல்விழி தன் பற்களைக் கடித்துக் கொண்டாள். உணர்ச்சி களைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

''நான் தங்களுக்குத் தலைவியாக இருக்கும் பாக்கியத் தைப் பெறாதவள் என்று முன்பே பொன்னமராவதியில் கூறியிருக்கிறேன். இப்போது அந்தப் பாக்கியத்தைப் பெற்ற தலைவிக்குத் தோழியாக வந்திருக்கிறேன்!'' என்றாள் கயல்விழி.

''அப்படியானால் நீ காஞ்சிக்குத் தூது சென்றது இதை முன்னிட்டுத்தான் சென்றாயா?''

''ஆமாம்!''

''கயல்விழி!'' என்று குரலில் கண்ணீர்மல்க அவளைக் கனிவோடு அழைத்தான் சுந்தர பாண்டியன். ''அணுவளவா வது என் மீது அன்பு கொண்டிருக்கிறாயா நீ? அன்பு கொண்டிருந்தால் இப்படிச் செய்யத் துணிந்திருப்பாயா?''

''தங்கள் மீதுள்ள அன்பு ஒன்றைத் தவிர அணுவளவும் வேறு உணர்ச்சிக்கே என்னிடம் இடமில்லை இளவரசே! அதனால்தான் இப்போது தங்களிடம் அன்புத் தூது வந்திருக்கிறேன்'' என்றாள் கயல்விழி.

''நீ இதில் வெற்றிபெறப் போவதில்லை!'' என்று விரக்தியோடு கூறினான் சுந்தரபாண்டியன்; ''நான் போரில் ஏற்படப்போகும் வெற்றி தோல்விகளைப் பொருட்படுத்தப் போவதில்லை. என் ஆத்திரம் தீரப் பகைவர்களைக் கொன்று குவிக்கப் போகிறேன். பகைவர்களும் அப்படியே என்மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ளட்டும். வெற்றி உனக்கா எனக்கா என்பதை இந்தப் போரே முடிவு செய்யட்டும்!''

வெறிகொண்டுவிட்ட புதல்வனைத் தாய் ஒருத்தி தன் பாசத்தோடு தழுவி அவன் மீது அன்பைச் சொரிவதுபோல், அவன் கரங்களைப் பற்றிக் கொண்டு அவற்றில் கண்ணீர் சொரிந்தாள் கயல்விழி.

''என் அன்பின் மீது தங்களுக்குச் சந்தேகம் பிறந்து விட்டதா?'' என்று கேட்டாள். ''அன்பு என்பது என்ன? அன்பு கொண்ட தங்களுக்கு என் உடல், பொருள், ஆவி, சிந்தனை, செயல் யாவற்றையுமே வழங்குவதுதானே? அதைவிட உயர்ந்த அன்பு தங்களுடைய இலட்சியத்தின் வெற்றிக்காக அனைத்தையும் வழங்குவதில்தான் இருக்கிறது. நான் எப்போதும் தங்களுக்குப் பணி செய்யச் சித்தமாயிருக்கிறேன்.''

''இல்லை! உன்னைக் கொடுக்கத் துணியவில்லை நீ!'' என்றான் இளைய பாண்டியன்.

''தாங்கள் உடனடியாகப் போரை நிறுத்திவிட்டு நம் நாட்டை அழிவிலிருந்து காப்பாற்றுங்கள். பாமினியை மணந்துகொண்டு நிரந்தரமான அமைதிக்கும் உறுதிக்கும் வழி கோலுங்கள். ஒரு நாட்டையே உருவாக்கிய தலைவர் என்ற முறையில் சிந்தித்துப் பாருங்கள். இளவரசே! நான்

தங்களுடைய அடிமையாக வாழ்கிறேன்; தாசியாக வாழ்கிறேன். என்னைத் தலைவியாக்க நினைப்பது எனக்குத் தண்டனையளிப்பதாகும்.''

சுந்தரபாண்டியனின் நெற்றி சுருங்கியது; ''ஏதோ எனக்கே தெரியாத ஓர் இரகசியம் சூழ்ந்த பெண் உனக்குள்ளே இருக்கிறாள். அவள்தான் இவ்வாறு எனக்கு எதிராக உன்னைப் போராடத் தூண்டுகிறாள். திருக்கொடுங்குன்றத்திலிருந்தே அவளுடைய இந்தப் போராட்டத்தை நான் கவனித்து வருகிறேன்'' என்றான்.

வேல் பாய்ந்ததுபோல் சுரீரென்று கயல்விழியின் உள்ளத்தில் தைத்தன இந்தச் சொற்கள். இந்த வேதனையை மறைப்பதற்காக அவனிடம் அவள் புன்னகை பூத்தாள்.

''ஓர் இரகசியமும் இல்லை! தாங்கள் தாம் எனக்கு இந்த இராஜதந்திர இரகசியத்தையே கற்றுக் கொடுத்தீர்கள். கோசல சாம்ராஜ்யத்து வல்லாளதேவர் சோழமாதேவியை மணந்து கொண்டதால் எவ்வாறு இரு சாம்ராஜ்யங்களும் செழித்தோங்கி வளர்ந்தன என்பதைத் தாங்கள் தாம் என்னிடம் கூறினீர்கள். அதே திருமண உறவின் வலிமையால்தான் இப்போதுகூடக் கோசல நாடு நம் நாட்டை அழிக்கப் பார்க்கிறது. அதனால்தான் நானும் இப்போது திருமண உறவின் மூலம் நம் பகையை அழித்து அன்பை வளர்க்கத் தூது வந்திருக்கிறேன்!''

கயல்விழியின் மோகனச் சிரிப்பில் அவளுடைய ஆழ்ந்த துயரம் இழையோடுவதை அவன் கண்டான். தாயின் மடியில் தலைசாய்ந்துள்ள குழந்தையின் உணர்வே அவனுக்கு அப்போது ஏற்பட்டிருந்தது. கயல்விழி அவனது கற்பனைக்கும் எட்டாத உயரத்துக்கு அவன் கண்முன்னே வளர்ந்து கொண்டிருந்தாள்.

''இந்த ஓலைக்குத் தாங்கள் கூறும் மறுமொழியிலோ, தாங்கள் கொடுக்கும் மாற்றோலையிலோ பாண்டிய நாட்டின் எதிர்காலம் இருக்கிறது. நாட்டின் தலைவர் என்ற முறையில் சிந்தனை செய்து ஒரு முடிவு கூறுங்கள். நமது சொந்த வாழ்வை இழந்தாவது குடிமக்களின் வாழ்வைக் காப்பாற்றக் கடமைப்பட்டவர்கள் நாம்.''

ஆயிரம் மின்னல்கள் பளீர் பளீரென்று சுந்தரபாண்டியனின் சிந்தனையில் மின்னின. குலசேகர பாண்டியரிடம் அவன் செய்துகொடுத்த சபதம் அவனுடைய நினைவுக்கு வந்தது. அவரும் இப்படித்தான் கூறினார். ''வெற்றி என்பதும் நம்முடைய இழப்பின் வாயிலாகத்தான் நமக்குக் கிடைக்கிறது. ஒன்றை நாம் இழக்கத் துணியாமல் மற்றொன்றைப் பெற முடியாது. அமைதிக்காவும் நட்புறவுக்காகவும் நீ எதையேனும் இழக்க நேர்ந்தால் அதற்காகத் தயங்காதே! நீ இந்த நாட்டின் தலைவன்; குடிமக்களின் தந்தை!''

சரேலென்று கட்டிலிலிருந்து குதித்தான் சுந்தர பாண்டியன். மௌனமாகவே பாசறைக்குள் குறுக்கும் நெடுக்கும் நடந்தான். 'கயல்விழியா? பாண்டியநாடா? கயல்விழியா? பாண்டியநாடா...'

அவனுடைய இதயமே குபீரென்று பற்றி எரிவதுபோல் தோன்றியது. அந்தத் தீயை அணைக்கும் குளிர் அருவியான கயல்விழி அருகிலேயே இருந்தாள். ஆனால், அவனது இதயத்தீ அணையுமானால், அதையடுத்துப் பாசறை முழுவதும், பாண்டிய நாடு முழுவதும் கோசல நாட்டுத் தீ பரவிவிடுமே.

பரவட்டும் தீ! இதயமே வெந்து தணியும்போது, நாடு போனால் என்ன, மக்கள் போனால் என்ன, அரச வாழ்வு போனால்தான் என்ன?

''நாழிகையாகிறது; நான் உடனடியாகத் திரும்ப வேண்டும்'' என்றாள் கயல்விழி; ''இப்போதே நான் திரும்பவில்லையானால் அங்கு விழுப்பரையர் அவர்களுக்கு ஏதும் துன்பம் நேரலாம். பாமினிக்குத் தங்கள் கரத்தால் ஓர் ஓலை தருகிறீர்களா?''

''முடியாது!'' என்று கூறித் தலையசைத்தான் சுந்தரபாண்டியன்;''நான் உன்னை இழக்க முடியாது!''

விடிவெள்ளிக்கு முன்பாக வீரர்களுக்குத் துயில் எழுப்பும் முரசு பாசறையைச் சுற்றிலும் அதிர்ந்தது. ஆளரவம் கேட்கத் தொடங்கியது. கயல்விழி விரைந்து செல்வதற்காகத்

துடிதுடித்தாள்; அவனிடம் கெஞ்சினாள்; புலம்பினாள்; மன்றாடினாள்.

விழுப்பரையர் மட்டிலும் கோசல நாட்டாரிடம் இருந்திருக்காவிட்டால் கயல்விழியை அவன் அனுப்பியிருக்க மாட்டான். சுந்தரபாண்டியனுக்காகவும் நாட்டுக்காகவும் தமது ஒரே குமாரனைப் பலிகொடுத்த உத்தமரை நினைத்தவுடன் அவனுக்கு உடல் புல்லரித்தது.

கயல்விழியை அவன் தடுக்கவில்லை. முரசுகள் தொடர்ந்து அதிர்ந்தன.

காவேரிக்கரையில் அவன் நின்றான். தோணிக்குள்ளே துவண்டுகிடந்த கயல்விழியான அவனுடைய இதயம் இரு கூறாகப் பிளந்து, ஒரு பாதியை இந்தக் கரையில் விட்டு, மறுபாதியை மறு கரைக்கு இழுத்துச் சென்றது.

## 25. கள்வெறிக் களிறு



சுந்தரபாண்டியன் தன்னுடைய மனத்தை ஒரு நிலையில் நிறுத்திப் போர் தொடங்குவதற்கான ஆயத்தங்களைச் செய்ய முயன்றான். பணியாட்கள் சுழன்றோடி வந்து அவன் களத்துக்குப் புறப்படுவதற்கான வேலைகளில் முனைந்தனர். கவசத்தை அணிவித்தான் ஒருவன்; உடைவாளைப் பணிவுடன் எடுத்து நீட்டினான் மற்றொருவன்; தலைமுடியை ஏந்தி நின்றான் வேறொருவன்.

சுந்தரபாண்டியனால் மட்டும் அவன் மனத்தை ஒரு நிலைப்படுத்த முடியவில்லை. கூண்டிலிருந்து பல்வேறு திசைகளிலும் பறந்து செல்லும் வெண்புறாக்களைப்போல் அது கட்டுக்கடங்காமல் பறந்தது. அவனுடைய கலக்கத்தைக் கண்ணுற்ற வீரர்களோ, அதற்குள்ளாகவே போர்வெறி அவனை ஆட்கொண்டு விட்டதாக நினைத்தார்கள்.

பாசறைக் கூடங்களுக்குக் கிழக்கில் சற்றுத் தொலைவில் காவேரி பரவலாக ஓடியது. ஆற்றின் அந்தப் பகுதியில் ஆழமில்லை. பரந்துகிடந்த மணல் திட்டுகளும் படிகம் போன்ற நீர்ப்படலமுமாக அந்த இடம் போருக்கு ஏற்ற இடமாகத் தோன்றியது. ஆற்றின் எதிர்க்கரையில் கோசலப் படைகளும் இந்தக் கரையில் பாண்டியப் படைகளுமாக வந்து குவிந்த வண்ணம் இருந்தன.

வெறியூட்டும் இசைக் கருவிகள் இருபுறமும் முழங்கின. போர்ப்பறைகள், கொம்புகள், முரசுகள், சங்குகள் யாவுமே ஒன்றுகூடி வீரர்களின் செவி நரம்புகளைத் தவிடுபொடியாகச் செய்தன. அவர்களுடைய நெஞ்சுகளைத் தட்டி எழுப்பி, அவர்களைக் கள்வெறி கொள்ளச் செய்தன.

கொலை வெறி ஒவ்வொரு வீரனின் குருதியிலும் கணத்துக்குக் கணம் விஷம்போல் ஏறிக் கொண்டிருந்தது. நெஞ்சிலே மூண்ட தீ தலைக்குள்ளே பரவி அங்கிருந்த சிந்தனைப் பிறப்பிடத்தைச் சூழ்ந்து கொண்டுவிட்டது. 'கொலை, பழி, இரத்தம்; கொலை, பழி, இரத்தம்!' என்று மீண்டும் மீண்டும் சொல்வது போலவே அங்கிருந்த அத்தனை இதயங்களும் அடித்துக் கொண்டன.

முதல் நாள் வரையிலும் அந்த ஆற்றின் இரு கரைகளிலும் மருந்துக்குக்கூட ஒரு கற்பாறையைக் காண முடியாதபோது, இன்று மட்டிலும் எப்படி அங்கே குன்றுகள் குவிந்தன! மலைகள் முளைத்தன!

போர் யானைகளுக்கு மதுவூட்டி வெறியேற்றி அங்கே கொண்டுவந்து நிறுத்தியிருந்தார்கள். இயல்பாகவே மதங் கொண்டவைபோல் தோன்றிய யானைகள் மதுவையும் மாந்திவிட்டால் கேட்கவா வேண்டும்? மேலும் குதிரைப் படைகள், தேர்ப்படைகள், தரைப்படைகள் யாவும் அணி அணியாக இருபுறங்களிலும் சூழ்ந்தன.

கொலைப் பசியின் கொக்கரிப்பு அங்கே பயங்கரமாக முழங்கியது. பறையொலி அனைவரையும் சாவுக்குக் கூவி அழைத்தது. கொம்பொலி அவர்களை, 'கூற்றுவனின் தூதுவர்களே!' என்று அழைத்துக் கும்மாளமிடச் செய்தது.

சங்கொலி அவர்கள் மயான பூமிக்கே வந்துவிட்டார்கள் என்பதை அவர்களுக்கே நினைவூட்டியது.

எதிர்க்கரையெங்கணும் புலித்தலைக் கொடிகள்! இக்கரையெங்கணும் துள்ளுமீன் கொடிகள்; இருபுறங்களிலும் வேல்கள், வில்கள், வாட்கள், இரும்புலக்கைகள், தீப்பந்தங்கள்!

தீப்பந்தம்!- சிந்தனைத் தீ இல்லாத மந்தைக் கூட்டம் தன்னைத்தானே அழித்துக்கொண்டு மடியட்டும் என்றுதான் இறைவன் அணுத்துளி போன்ற நெருப்புக்குள்ளே அபாயகர மான அழிவுச் சக்தியை நிரப்பி வைத்திருக்கிறான் போலும்! ஆற்றங்கரை இப்போது சுடலையாகவும் காட்சியளித்தது.

களத்தின் காட்சியைக் கண்டவுடனேயே பிணம் தின்னும் கழுகுக் கூட்டம் கார்மேகப் படலம்போல் வானில் குவியத் தொடங்கியது. காட்டுப் புதர்களுக்குள் பதுங்கிக் கிடந்த குள்ளநரிக் கூட்டம் தனது நாவைத் தீட்டிக்கொண்டது. ஊர்ப்புறத்தின் சொறி நாய்க் கூட்டம் முன்னதாகவே நிண விருந்துண்ணக் காத்திருந்தது.

அறிவிலும் ஆற்றலிலும் சிறந்த மூவேந்தர்களும் மூவாயிரம் போர்க்களங்களையாவது கண்டிருப்பார்கள். தங்களைத் தாங்களே கொன்று குவித்துக்கொண்டிருப்பார்கள். அவர்கள் வள்ளுவனைப் படித்தார்கள்; அவன் சொற்படி நடந்தாரில்லை. இளங்கோவைக் கற்றார்கள்; கற்றபடி நின்றாரில்லை. கம்பனைப் போற்றினார்கள்; கம்பன் வழி சென்றாரில்லை. அரசு எவ்வழி அவ்வழி மக்கள்!

சுந்தரபாண்டியனும் அதே தமிழ்ப் பரம்பரையில் வந்தவன்தானே? முதற் போரில் வெற்றிச் சுவையும் இரத்தச் சுவையும் கண்டுவிட்டதால், அவனாக முந்திக்கொண்டு வந்துவிட்டான் அடுத்த போருக்கு.

பொழுது நன்றாகப் புலர்ந்துவிட்டது. ருத்திர தேவனின் நெற்றிக் கண்ணேபோல் கீழ்த் திசையிலிருந்து செவ்விரத்தம் பொழிந்து கொண்டே கதிரவன் மேலே எழும்பினான். வீரநரசிம்மனின் கட்டளைக்காகக் காத்திருந் தனர் கன்னட

நாட்டு வீரர்கள். சுந்தரபாண்டியனின் கட்டளைக்காகக் காத்திருந்தனர் பாண்டிய வீரர்கள்.

அரசர்கள் இருவரும் தங்கள் தங்களது யானைகளின் மீது ஏறி அமர்ந்து கொண்டார்கள். முதன் முதலில் அரசும் அரசும் மோதியவுடன், அவர்களைத் தொடர்ந்து படையும் படையும் மோதுவது போரில் ஒருவகைப் பழக்கம். இந்தப் போரில் அந்த முறையே கையாளப்படுகிறது என்பதைக் கண்ட படைத்தலைவர்கள் அதற்கேற்றவாறு அணிகளை அமைத்திருந்தார்கள்.

காவேரியாற்றின் மையத்தில் பரவலானதோர் மணற் பரப்புக் காணப்பட்டது. இரு கரைகளின் அருகேயும் அந்த இடத்தில் பரவலாக முழங்கால் அளவே நீர் ஓடியது. முன்னணியிலிருந்த யானைகள் இரண்டும் ஆற்றைக் கடந்து நடுத்திட்டுக்குச் செல்லச் சித்தமாகிவிட்டன. தொலைதூரத் தில் நேருக்கு நேர் நின்ற இருவருக்கும் மற்றவர்களின் யானைகள் தெரிந்தனவே தவிர, அவர்களின் உருவங்கள் தெரியவில்லை.

குபீரென்று பல்வகை ஒலிகளும் ஒரே சமயத்தில் எழுந்து மயிர்க்கூச்செறிய வைத்தன. மதுவுண்டு மதங்கொண்ட களிறுகள் இரண்டும் காவேரியில் பாய்ந்து நீரைக் கலக்கிச் சேறாக்கி முன்னே வந்தன. மெய்க் காத்துப் போர் புரியும் உடன் கூட்டமும் அரசர்களைப் புரவிகளில் பின்பற்றியது.

திடீரென்று இரட்டைச் சங்குகள் மட்டிலும் இடையில் வேறொரு திசையிலிருந்து ஒலித்தன. எங்கிருந்து வந்தன என்று தெரியாதபடி மேற்குத் திசையிலிருந்து, நட்டாற்றைக் கிழித்தபடி இரு வெண்புரவிகள் பறந்து வந்தன.

இருபுறத்து அரசர்களும் அதிர்ச்சியுற்றார்கள். இருபுறத்துப் படையினரும் மெய் விதிர்த்தார்கள்.

மீனக்கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது ஒரு குதிரையிலிருந்து. புலித்தலைக் கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது மற்றொரு புரவியிலிருந்து. இரண்டு குதிரைகளுமே இணைந்து பறந்தன.

போர்க்களத்தின் கொலை வெறியையும் மறந்து, ''கயல் விழி அம்மையார்! கயல்விழி அம்மையார்!'' என்று குதூகலத் துடன் ஆரவாரம் செய்தார்கள், பாண்டிய நாட்டு வீரர்கள்.

அதேபோன்று, ''நம்முடைய இளவரசி! இளவரசி பாமினி தேவியார்!'' என்று எக்காளமிட்டார்கள் கன்னடத்து வீரர்கள்.

கயல்விழியை அந்தக் கோலத்தில் கண்டவுடன் யானையின் மீது வீற்றிருந்த சுந்தரபாண்டியனின் தேகம் முழுவதும் நடுங்கியது. அவனுடைய யானைமீது வந்து மோதப் போகிறவள்போல் அவள் தன் குதிரையை விரட்டிக் கொண்டு வந்தாள். பாமினியும் அவ்வாறே தன் தந்தையின் யானையை நோக்கிச் சென்றாள்.

பின்னால் வந்த மெய்க்காவல் வீரர்கள் சட்டென்று நின்றுவிட்டார்கள்.

குதிரையைக் கொண்டு வந்து சுந்தரபாண்டியனுக்கு முன்னால் நிறுத்திக் கொண்டு, ''அரசே!'' என்று பாண்டி யனைக் கூவி அழைத்தாள் கயல்விழி. ''போர் தொடங்கு வதற்கு முன்பாகப் போரின் வெற்றிக்காகக் களப்பலி கொடுப் பது நம்முடைய பழைய மரபல்லவா?'' என்று கேட்டாள்.

வெறிகொண்டு பாய்ந்த யானையை அடக்கி நிறுத்துவதற்கு அரும்பாடு பட்டான் யானைப்பாகன். சுந்தரபாண்டியனின் வாயடைத்து விட்டது. கயல்விழியே தொடர்ந்து பேசினாள்.

''பாண்டிய நாட்டின் சார்பில் நான் என்னைக் களப்பலி கொடுக்க இங்கு வந்திருக்கிறேன். என்னை முதலில் உங்களுடைய போர் வெறிக்குப் பலிகொடுத்துவிட்டு, அடுத்தாற்போல் உங்கள் வீரர்களையும் குடிமக்களையும் பலிகொடுங்கள். பிறகு நீங்கள் மயான பூமியாகச் சுட்டெரிக்கப்பட்ட நாட்டில் உங்கள் வெற்றி விழாவைக் கொண்டாடலாம்!''

''கயல்விழி!'' என்று கத்தினான் இளையபாண்டியன்.

''பாமினியை அவளுடைய தந்தையார் அவருடைய வெற்றிக்காகப் பலிகொடுப்பார். நீங்கள் உங்கள் வெற்றிக்காக என்னைப் பலிகொடுங்கள்!''

மதங்கொண்ட யானையை எதிர்த்துப் போராட ஓடி வருபவள்போல் தன் குதிரையிலிருந்து தாவிக்குதித்து வந்தாள் கயல்விழி. போர் வெறியால் கிறங்கியிருந்த தலைவனைப் போலவே அவன் யானையும் கள்ளுண்டு மதங் கொண்டிருந்தது. ஓடிவந்தவளைச் சட்டென்று திரும்பித் தன் துதிக்கையால் வளைத்துப்பிடித்தது; சீற்றத்துடன் காலில் போட்டுத் துவைக்க மேலே தூக்கியது.

## 26. உரிமை போற்றும் உறவு



அந்தக் காலைப் பொழுதில் காவேரியாற்று மணற் பரப்பில் மின்வெட்டும் நேரத்துக்குள் என்ன வெல்லாமோ நடந்து விட்டன. கள்வெறி கொண்ட சுந்தரபாண்டி யனின் களிறு கயல்விழிமேல் பாய்ந்தது. இதைத் சிறிதும் எதிர் பாராத யானைப்பாகன் கதிகலங்கிப் போய்ச் செயலிழந்து விட்டான்.

மத்தகத்தைப் பிளந்து யானையின் குருதியைக் குடிக்க வரும் சிங்கம்போல் அதன் தலை உச்சிக்குத் தாவினான் சுந்தரபாண்டியன். பொறி கலங்கும்படி யானையின் தலையில் தன் கைவேலால் ஓங்கி அடித்தான். காலடியில் வைத்துக் கயல்விழியைத் தேய்க்கத் துணிந்த யானை, அடி தாங்காது கோப வெறியோடு அவளைத் தூக்கி வீசி எறிந்தது.

சுந்தரபாண்டியனும் யானைமீதிருந்து குதித்தான். கயல்விழி விழுந்த இடத்தை நாடி விரைந்தோடினான்.

ஓடியவனைத் திகைக்க வைப்பதுபோல் அங்கு மற்றோர் அதிசயம் நிகழ்ந்தது. கயல்விழியின் தலையைத் தூக்கித் தமது மடியில் கிடத்திக்கொண்டு வீரநரசிம்மன் பதறினார். பாமினி ஓடிச் சென்று ஆற்று நீரை அள்ளி அள்ளி முகத்தில் தெளித்தாள்.

வீரநரசிம்மனுக்குத் தொண்டை அடைத்தது. ''மகளே மகளே!'' என்று நாத் தழு தழுக்கக் கயல்விழியை அன்புடன் அழைத்தார். அந்த மாவீரனின் கண்களும் அவளுக்காகக் கலங்கிவிட்டன. பாமினி கதறிக் கதறி அழத் தொடங்கினாள்.

குற்றம் புரிந்துவிட்ட உணர்ச்சியோடு சுந்தரபாண்டியன் மெல்ல அவர்களின் அருகில் சென்றான். அந்தக் காட்சியைக் கண்ட பல்லாயிரம் போர் வீரர்களும் தங்களை அறியாமலே தங்கள் உள்ளத்தில் அன்பு சுரந்து ஊற்றுப் பெருக்கெடுப்பதை உணர்ந்து கொண்டார்கள்.

''கயல்விழி!'' என்று மூன்று குரல்கள் ஒன்றாக இழைந்து அவளைத் துன்பத்தோடு அழைத்தன.

கயல்விழி மெல்லக் கண்திறந்து நோக்கினாள்; சிறிது சிறிதாக அவளுக்கு நினைவு திரும்பியது. வீரநரசிம்மன், சுந்தரபாண்டியன், பாமினி மூவரும் அவளைச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். மூவரும் அவளுக்கு நேர்ந்த ஆபத்துக்காக வருந்தினார்கள்.

''எனக்கு ஒன்றும் நேரவில்லை'' என்று கூறிக் கொண்டே மெல்ல எழுந்தாள் கயல்விழி. காயங்கள் ஒன்றும் ஏற்படவில்லை என்றாலும், வலியும் வேதனையும் அவளைப் பிழிந்தெடுத்தன. இருந்தாலும் அவற்றை அவள் வெளியிட்டுக் கொள்ளாது சுந்தரபாண்டியனைப் பார்த்தாள்.

''நான் இறந்து போயிருந்தால் இந்தப் போரைக் காண வேண்டிய துர்ப்பாக்கியம் எனக்கு நேர்ந்திருக்காது'' என்றாள் கயல்விழி.

''போர் நடக்கத்தான் வேண்டுமா?'' என்றாள் பாமினி.

திடீரென்று கயல்விழி சுந்தரபாண்டியனைப் பார்த்துப் பேசத் தொடங்கினாள்:

''இளவரசே! தாங்கள் சோழ சாம்ராஜ்யத்தின் மீது போர் தொடுத்து அதில் வெற்றி அடைந்தீர்கள். அது உரிமைக் காகவும் தர்மத்துக்காகவும் நடந்த போர். இப்போது தாங்கள் கோசல நாட்டின்மீது போர் தொடுப்பதற்கு என்ன காரணம்?''

சுந்தரபாண்டியன் வாய் திறந்து மறுமொழி கூறுவதற்குள் பாமினியே குறுக்கிட்டாள்.

''கயல்விழி! பாண்டியர் போர் தொடுப்பதில் தவறு என்ன இருக்கிறது; அவருடைய நண்பர் கோப்பெருஞ் சிங்கன் மீது படையெடுத்து அந்த நாட்டை இப்போது கோசலப் படைகள் அழித்து வருகின்றன. நண்பருக்கு ஆபத்தென்றால் பாண்டியர் கோழையைப்போல் ஒளிந்து கொண்டிருக்க வேண்டுமா? ஆபத்துக்குதவாத நட்பு என்ன நட்பு!''

சுந்தரபாண்டியன் திடுக்கிட்டான். பேசுவது பாமினி என்ற பகை நாட்டரசரின் குமாரத்திதானா? வீரநரசிம்மனுக்கும் மீசை துடித்தது. ''துரோகி!'' என்று தமக்குள் கூறிக் கொண்டே, ''பாமினி'' என்று அதட்டினார்.

''ஆம். பாண்டியர் தர்மத்துக்காகத்தான் போர் புரிகிறார்!'' என்று மீண்டும் கூறினாள் பாமினி.

''நானும் என்னுடைய நண்பர் இராஜராஜனுக்காகத் தான் போரிடுகிறேன். அவர் இப்போது திருமுனைப்பாடி நாட்டுச் சிறையில் இருக்கிறார் என்பதை மறந்து விடாதே!'' என்று குமுறினார் வீரநரசிம்மன். ''சோழ சாம்ராஜ்யத்துச் சக்கரவர்த்தி பாண்டியரிடம் நாட்டை இழந்துவிட்டு, சிற்றரசர் காடவராயரிடம் சிறைப்பட்டிருப்பதைப் பொறுத்துக் கொண்டிருக்கச் சொல்கிறாயா?''

கயல்விழி இருவரிடமும் இனிய மொழிகளால் வாதிட்டாள். இருவருடைய குணநலன்களையும் போற்றினாள். இருவருடைய சிறப்புக்களையும் எடுத்துக் கூறினாள்.

''நீங்கள் இருவருமே நட்பு என்னும் அருங்குணத்தைப் போற்றும் பரந்த உள்ளம் கொண்டவர்கள். இருவருமே நட்புக்காகத் தியாகம் செய்யத் துணிந்தவர்கள். இருவருமே விவேகத்திலும் வீரத்திலும் சிறந்தவர்கள்- இத்தகைய இருவர் போர்க்களத்தில்தான் சந்திக்க வேண்டுமா?''

பாமினி குறுக்கிட்டு, ''நட்பு என்றால் அது இருவருக்கிடையில்தான் இருக்க வேண்டும் என்பதில்லையே!'' என்றாள். ''நால்வருமே நட்புக் கொண்டால் குமரி முனையிலிருந்து துங்கபத்திரைக்கப்பாலும் உள்ள சாம்ராஜ்யத்தை உறவோடும் உரிமையோடும் கட்டி ஆளலாமே!''

ஆண்கள் இருவரும் ஒருவரையொருவர் அன்போடு ஏறிட்டுப் பார்த்துக் கொண்டனர். கயல்விழி கண்ணீர்பொங்க அங்கு சூழ்ந்திருந்த பல்லாயிரக் கணக்கான போர் வீரர் களையும் சுட்டிக்காட்டி முறையிட்டாள்.

''இந்த வீரர்களில் பலர் ஆண்களையும் பெண்களையும் பெற்றெடுத்த தந்தைகள்; தலைவியரைக் கடைசிவரையில் காப்பதாகக் கரம் பற்றியவர்கள்; கட்டிளம் காளையரும் பெற்றோரின் கண்ணீர் துடைத்துக் களத்துக்கு வந்தவர்களும் இவர்களில் இருக்கிறார்கள். பாசம், பற்றுதல், காதல், நட்பு, தோழமை, முதலிய அன்புணர்ச்சிகளின் அருமையை உணர்ந்தவர்கள்; அநுபவித்தவர்கள்-இவர்களை நட்பின் பெயரால் கொலை வெறியர்களாக்குகிறோம்- ஒருவரை யொருவர் கொன்று குவித்து நாம் அழியத்தான் வேண்டுமா?''

ஆவேசம் வந்துவிட்டது கயல்விழிக்கு. முன்பொரு நாள் கொற்றவையாகத் தோன்றிய அதே கயல்விழி இப்போது புண்பட்டெழுந்த பூமித் தாயாக மாறிவிட்டாள்.

''அரச குலத்தோரே! நாங்கள் தாய்க் குலத்தைச் சேர்ந்த வர்கள். மக்களைச் சுமந்து பெற்று, பாலூட்டிச் சீராட்டி, எறும்பு கடிக்கவும் பொறுக்காமல் பேணி வளர்த்து மனிதர் களாக்குகிறோம். உயிர்களை ஆக்கப் பிறந்தவர்கள் நாங்கள். காக்கப் பிறந்தவர்கள் நாங்கள். உங்களால் அழிக்கப் படுவதற்காகவா நாங்கள் மக்களைப் பெற்று வளர் க்கிறோம்?- உங்களைப் பெற்ற பெண்குலத்தை நீங்கள் எப்படியெல்லாம் இந்தப் போரினால் துன்புறுத்துகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா?''

சட்டென்று தன் உடைவாளைக் கழற்றி வீசினான் சுந்தரபாண்டியன். வீரநரசிம்மனைப் பார்த்து, ''நான் போர் புரியாமலே என் தோல்வியை ஏற்றுக் கொள்கிறேன்'' என்றான் அமைதியோடு.

''என்ன!'' என்றார் வீரநரசிம்மன்.

''ஆம்; போர் வேண்டாம். சேந்தமங்கலம் சிறையில் இருக்கும் இராஜராஜனை உடனே விடுவிக்கும்படியாக

நண்பர் கோப்பெருஞ்சிங்கருக்கு ஓலை அனுப்புகிறேன். சோழ நாட்டை இனி இராஜராஜனே ஆளட்டும்.''

''தோற்றவன் நான்; வென்றவர் நீங்கள்!'' என்று அன்போடு சுந்தரபாண்டியனைத் தழுவிக் கொண்டார் வீரநரசிம்மன்.

''விவேகத்தோடு நீங்கள் போரைப் போலவே அமைதியிலும் முந்திக் கொண்டு விட்டீர்கள். இனி நாம் நம்முடைய உரிமைகளை மதித்து உறவை வளர்த்துக் கொள்வோம். திருமுனைப்பாடிப் போரை நிறுத்தச் சொல்லி இப்போதே என் படைத் தலைவர்களுக்குக் கட்டளை அனுப்புகிறேன்!''

''உரிமைகளை மதித்து உறவை வளர்ப்போம் என்ற சொற்கள் எவ்வளவு ஆழம் நிறைந்த சொற்கள்! இந்தச் சொற்களின் பொருளைச் செயலாக்கினால் உலகில் போர் ஏது?அழிவு ஏது? துன்பமேது?'' என்று ஆனந்தக் கண்ணீர் பொங்கக் கூறினாள் கயல்விழி. பின்னர் வீரநரசிம்மரிடம், ''சக்கரவர்த்திகளே! உறவை வளர்ப்பதாகத் தாங்கள் கூறியது மெய்தானே?'' என்று கேட்டாள்.

''கட்டாயம் வளர்த்துக்கொள்வோம்!'' என்று கூறிச் சுந்தரபாண்டியனையும் பார்த்துச் சிரித்தார் சக்கரவர்த்தி; ''சோழ நாட்டுக்கும் எங்கள் நாட்டுக்கும் எப்படி உறவு தோன்றி வளர்ந்ததோ, அதேபோல் இந்த உறவும் வளரட்டும்.''

''இளவரசியாரே! உங்கள் தந்தையார் கூறுவதைக் கேட்டீர்களா? இந்தக் கணத்திலேயே நீங்கள் எங்கள் பாண்டிய நாட்டுக்குச் சொந்தமாகி விட்டீர்கள். நாங்கள் இப்போதே உங்களை மதுரைக்கு அழைத்துப் போவதென்று முடிவு செய்து விட்டோம்'' என்றாள் கயல்விழி.

கலகலவென்று நகைத்த வீரநரசிம்மன், ''ஆம் அதுவே நல்லது; பகைவரான பாண்டியருக்குப் பரிந்துகொண்டு எப்போது பேசத் துணிந்தாளோ, அப்போதே இவள் கோசல நாட்டில் வாழும் உரிமையை இழந்துவிட்டாள்!'' என்றார்.

''எங்களது இளைய பாண்டியரையே வென்று விட்டார் இவர். பாண்டிய நாட்டிடம் ஆழ்ந்த பற்றுதல் கொண்ட ஒருவரை நாங்கள் அரசியாகப் பெறுவது எங்கள் நாடு செய்த பாக்கியம்!'' என்றாள் கயல்விழி.

சுந்தரபாண்டியனைக் கேளாமலே, அவனுடைய திருமணப் பேச்சு அங்கு மிகுந்த உற்சாகத்துடன் நடை பெற்றது. அவனுக்கு அவர் பாமினியை மணம் செய்து கொடுக்க இசைந்த செய்தி காற்றைப்போல் அந்தக் களமெங்கும் பரவியது. வீரர்கள் ஆனந்த வெறிகொண்டு அங்கு கூத்தாடத் தொடங்கி விட்டார்கள்.

ஒருவரை ஒருவர் கொன்று குவிக்க வந்தவர்கள் ஒருவரை ஒருவர் கட்டித் தழுவிக் கொண்டார்கள். இரு நாட்டுக் கொடிகளையும் இணைத்துப் பிடித்து ஆடினார்கள். கன்னடத்து வீரன் சுந்தரபாண்டியனுக்கு வாழ்த்திசைத்தான். பாண்டிய வீரன் வீரநரசிம்மனுக்கு எக்காளமிட்டான்.

பல்வகை இசைக் கருவிகளும் அங்கே மங்கல இசையைப் பொழியத் தொடங்கின. காவேரிப் பெருக்கில் குருதி வெள்ளம் பாய்ந்தோடாமல் ஆனந்த வெள்ளம் பொங்கிச் சுழன்றது.

சுந்தரபாண்டியன் மட்டிலுமே நெடுமூச்செறிந்து நின்றான். சுந்தரபாண்டியனுக்கு அந்தக் காவேரி ஆற்றின் காட்சி விதி வழியே காலங்காலமாகச் சுழன்றோடும் வாழ்க்கைப் பெருவெள்ளத்தின் காட்சியாகவே தோன்றியது.

## 27. கூத்து முடிந்தது



கோசல சாம்ராஜ்யத்தையே சுந்தரபாண்டியன் போரில் வென்றுவிட்டது போலவும் அந்த வெற்றிக்குப் பரிசாக அவனுக்கு இளவரசி பாமினி கிடைத்திருப்பது போலவும் பாண்டிய நாட்டுக் குடிமக்கள் பெருமை பேசிக் கொண்டார்கள். நாடே திருமண விழாக்கோலம் பூண்டு விட்டது. மதுரை மாநகரத்துக்குப் பல்வேறு நாட்டுச் சிற்றரசர்களும் வந்து குழுமியிருந்தார்கள்.

சோழன் இராஜராஜன் ஒருவன் மட்டிலுமே திருமணத்துக்கு வரவில்லை. வீரநரசிம்மன் அதற்காகத் தமக்குள் வருந்தினார். அவருக்கு நெருங்கிய உறவின னல்லவா இராஜராஜன்?

நாடு முழுவதுமே எல்லையற்ற களிப்பில் ஆழ்ந்திருந்தபோது, அந்தக் களிப்புக்குக் காரணமாக இருந்த சுந்தர பாண்டியன் மட்டிலுமே இரு வேறு உணர்ச்சிகளுக்கு இடையில் அகப்பட்டுத் தவித்தான். கயல்விழியும் விழுப்பரையரும் சேர்ந்துகொண்டு அவனுக்கு எதிராகச் சூழ்ச்சி செய்வதாகவே அவனுக்குத் தோன்றியது. பெரிய பாண்டியரும் கோப்பெருந்தேவியாரும் கூட அந்தத் திருமணத்தை மிகப் பெரிய ராஜதந்திர வெற்றி என்று நம்பினார்கள். கயல்விழியை ஆலோசனை கேட்டு ஒவ்வொரு காரியமும் அங்கு அரண்மனைக்குள் நடைபெற்றன.

சுந்தர பாண்டியனிடம் தனிமையில் நெடுநேரம் வாதா டிய குலசேகர பாண்டியர், கடைசியில் அவனிடம் கூறினார்:

''தியாகம் செய்யமுடியாத ஒன்றைத் தியாகம் செய்யச் சொல்கிறேன். இழக்கக் கூடாத ஒன்றை இழந்துவிடும்படி வேண்டுகிறேன். உன்னுடைய துன்பம் எனக்குத் தெரியும். ஆனாலும் நம்முடைய குடிமக்களைப் போரின் அழிவி லிருந்து காக்கும் கடமை நமக்கு இருக்கிறது. அரசியல் வாழ் வில் நாம் சொந்த நலன்களைத் தியாகம் செய்யத்தான் வேண்டும்.''

சுந்தரபாண்டியனின் கண்கள் கலங்கின. ''நான் எவ்விதத் தியாகமும் செய்யவில்லை'' என்று அவன் தடுமாறினான்.

''திருமகளே பெண்ணுருக் கொண்டு கயல்விழியாக வந்திருப்பதுபோல் எனக்குத் தோன்றுகிறது. நம்முடைய குலதெய்வம், அந்தப் பெண்'' என்று நாத்தழுதழுக்கக் கூறினார் பாண்டியர்.

திருமணம் நிறைவேறியது. செந்தமிழ்ச் சுந்தரன் கன்னடத்துப் பைங்கிளி பாமினிக்கு மாலை சூட்டினான்.

நடுங்கிய அவன் கரங்களைப் பற்றிப் பாமினிக்கு மாலை சூட்ட வைத்தாள் திருமணப் பெண்ணின் தோழியான கயல் விழி. ஆனந்தக் கண்ணீர் துளிர்விட்டது அவள் விழிகளில்.

திருமணத்தை அடுத்து அன்று மாலையிலேயே அரண்மனைக்குள் 'பாண்டித் திருமகள்' என்ற கூத்து நடைபெறுவதாக இருந்தது. பாமினி தன் ஆவலைத் தன் தந்தையிடம் வெளியிட்டாள். அவரும் கோப்பெருஞ்சிங்கன் முதலிய அரசர்களும் சூழ்ந்து கொண்டு குலசேகர பாண்டியரிடம் தங்கள் விருப்பத்தைக் கூறினார்கள். சுந்தர பாண்டியனைக் கூத்துடைத் தலைவனாகக் கண்டுகளிக்க வேண்டுமென்ற ஆவல் அவர்களுக்கு. மேலும், நாட்டில் வீரப் புரட்சியைத் தூண்டிவிட்டு, வெற்றியும் கொண்டு வந்த அந்தக் கூத்தைக் காண மற்ற அரசர்களும் துடித்தார்கள்.

பெரிய பாண்டியரும் கோப்பெருந்தேவியும் கூட அந்தக் கூத்தை நேரில் கண்டதில்லை. ஆகவே, அரண் மனைக்குள்ளாகவே அரங்கத்தில் அன்றிரவு கூத்து நடைபெறுவதாக இருந்தது.

பிற்பகலில் திருமணப் பெண்ணான பாமினிக்கு மலர் சூட்டிப் பொட்டிட்டு மைதீட்டி அழகு பார்க்கத் தொடங் கினாள் கயல்விழி. பேச்சோடு பேச்சாகச் சுந்தரபாண்டி யனின் குணச் சிறப்புகளையும் அவனை மகிழ்விக்கும் வழி வகைகளையும் அவளிடம் கூறிக்கொண்டு வந்தாள்.

''கயல்விழி! எல்லாவற்றையும் இன்றைக்கே கூறிவிட வேண்டாம். சிறிது சிறிதாகக் கேட்டுக் கொள்கிறேன். நான் உன்னைவிட்டு இனி எப்போதுமே பிரியப் போவதில்லை'' என்றாள் பாமினி.

''அவரை விட்டு நீங்கள் பிரியாதிருந்தால் போதும்!'' என்று கூறி நகைத்தாள் கயல்விழி.

இரவில் நடைபெறவிருந்த கூத்தைப் பற்றிப் பேசினாள் பாமினி. ''கயல்விழி! கூத்தில் நடிப்பதற்கு அவர் இசைந்தும்

கூட நீ முதலில் மறுத்துவிட்டாயாமே! தலைவரும் தலைவியு மாக நீங்கள் நடிக்கும்போது, தலைவரின் கரம் பற்றிய நான் நேரில் இருந்து காணப் போகிறேன் என்ற நாணம் பிறந்து விட்டதா உனக்கு? இதோ பார்! உன்னிடம் நான் கொண் டிருக்கும் பாசத்தை எனக்கு எப்படி வெளியிடுவதென்றே தெரியவில்லை. நீ வேறு, நான் வேறு என்ற எண்ணமே நமக்குள் வேண்டாம்.''

''இளவரசி!''

''நான் உன் தங்கை. நீ என்னைப் பெயரிட்டு அழைத் தால் போதும். எனக்கும் ஓரளவு உன்னைப்பற்றித் தெரியும்.'' பாமினி கயல்விழியின் கண்களில் பொங்கிய நீரைத் துடைத்து விட்டு, அவளை அன்போடு அணைத்துக் கொண்டாள்.

மதுரை அரண்மனைக்கு பாமினி வந்த பிறகு அங்கு உள்ளவர்களின் வாயிலாக ஏதும் அவளுக்குத் தெரிந்திருக்கும் என்று கயல்விழி நினைத்தாள். பெரிய பாண்டியர், கோப்பெருந்தேவி இன்னும் அங்கிருந்த அனைவருமே கயல்விழியை அந்த அரண்மனையில் பிறந்து வளர்ந்த இளவரசியாகத்தான் மதித்தார்களே தவிர, அவள் பணிப் பெண் என்ற நினைவே யாரிடமும் இல்லை. பாமினிக்கும் முழுவதும் தெரியவில்லை என்றாலும் ஓரளவு உணர்ந்து கொண்டாள்.

இரவு வந்தது. அரண்மனை மண்டபத்துக்குள் கூட் டமும் கூடியது. பாண்டியர், வீரநரசிம்மன், கோப்பெருஞ் சிங்கன் மற்ற சிற்றரசர்கள் ஒருபுறமும் அவர்களைச் சேர்ந்த அரண்மனைப் பெண்டிர் மறுபுறமும் வந்து அமர்ந்தார்கள். பாமினிக்கு ஒருபுறமும் கோப்பெருந்தேவியும் மறுபுறமும் அவள் அன்னையாரும் இருந்தனர். பல்வேறு நாடுகளின் படைத்தலைவர் கூட்டமும் அங்கு குழுமியிருந்தது. போர்க் களங்களில் எதிர்த்து நின்று போராடிய தலைவர்களோ அந்தக் கூத்தரங்கின் முன்பாக ஒருவரையொருவர் தழுவியவாறு நெருக்கமாக வீற்றிருந்தனர்.

கூத்தரங்கில் தீவர்த்திகள் ஒளி உமிழ்ந்தன. பல்வகை இன்னிசைக் கருவிகளும் ஒன்றுகூடி ஒலி பொங்கச் செய்தன. கூத்துப் பாடலின் இன்குரல் கேட்டது.

பாண்டித் திருமகளாம் கயல்விழி அரங்கத்தில் தோன்றினாள். செம்பொன்னின் நிறம், செங்கமலமும், காதள வோடிய கயல், அன்ன நடை, மின்னலிடையுடன் தோகை விரித்தாடும் கலாப மயிலென அவள் அரங்கில் ஆடினாள்.

கூடியிருந்த ஆண் பெண் அனைவரது உள்ளமும் அவள் உள்ளத்தோடு ஒன்றித் தோகை விரித்தது.

தலைவன் தோன்றினான். தலைவியின் கண்ணழகு, சொல்லழகு, குரல் அழகு, உடல் அழகு, நடையழகு, உள்ளத்து அழகு இவ்வளவையும் உருக்கத்தோடு பாடினான். அகத்துறைக்கென்றே தனியான இலக்கியம் தந்து அதனை இலக்கணத்தால் வேலியிட்டுக் காத்த தீஞ்சுவைத் தமிழமுதம் அ.ான் உள்ளத்திலிருந்து ஊற்றுப் பெருக்கெடுத்தது.

அவனுடைய இதயத்தின் தாபம் கேட்டுக் கூத்துடைத் தலைவி மட்டுமா சிந்தை தடுமாறினாள்? அங்கிருந்த அனைவருமே உருகினார்கள். பாமினியின் உள்ளம் அப்போதே பறந்துசென்று அவன் காலடியில் விழத் துடித்தது.

நடிப்பா இது? நடிப்புத்தானா? அரங்கத்துள்ளிருந்த விழுப்பரையர் தமது விழிகளைத் துடைத்துக் கொண்டார்.

கூத்துக் கதை வளர்ந்தது. தலைவனும் தலைவியும் ஒருவர் உள்ளத்தில் ஒருவர் புகுந்தார்கள். கடிமணம் புரிந்து கொண்டு களிப்போடு வாழ்வதற்கு முடிவு செய்தார்கள். திருமணத்துக்குப் பிறகு அவர்கள் நடத்த விரும்பிய இல்லற வாழ்வு பற்றிய இன்பக் கனவுகள் அரங்கத்தில் மலர்ந்தன.

எத்தனை எத்தனை இன்பக் கனவுகள் அவர்களுக்கு! தலைவி அவனுக்கோர் ஆண் மகனைப் பெற்றுத் தருவாளாம்; குழந்தைக்குப் பாலூட்டித் தாலாட்டிச் சீராட்டுவாளாம். தலைவனோ அந்தப் புதல்வனைத் தலைசிறந்த சான்றாண்மை வீரனாக வளர்ப்பானாம்! வீட்டுக்கும் நாட்டுக்கும் உலகுக்கும்

உயர்வு தரும் வகையில் மக்களை வளர்ப்பதே பெரும் பணியாம்! தலைவனும் தலைவியும் மாறிமாறிப் பாடினார்கள்; ஆனந்த வெறிகொண்டு ஆடினார்கள்.

கூட்டத்திலிருந்த பெண்கள் பாமினியைப் பரிகசிக்கத் தொடங்கி விட்டனர். விரைவில் பாண்டிய நாட்டுக்கு அப்படி ஓர் இளவரசனைப் பெற்றுத் தரவேண்டும் என்று கேலி பேசினர். அவள் பெருமை தாங்காது நாணித் தலைகவிழ்ந்தாள்.

வீரநரசிம்மன் பாண்டியரின் காதருகில், ''திருமண விழாவுக்கு இது மிகவும் ஏற்ற கூத்துதான்! இத்தகைய கூத்துக்களை இனி திருமண விழாக்களில் நடத்த வேண்டியது தான்!'' என்று பூரிப்போடு கூறினார்.

ஆயிற்று; திடீரென்று கூத்தின் திசை திரும்பியது. பயங் கரமாகப் போர் முரசுகள் ஒலிக்கத் தொடங்கின. கட்டிளம் காளையரைப் போருக்கு அழைக்கும் பறையோசை கேட்டது.

திருமணம் தடைப்பட்டது. போருக்குச் செல்லப் பிரியா விடை கேட்டு நின்றான் தலைவன். 'வெற்றியுடன் திரும்புவேன், இல்லையேல் வீரமரணம் எய்துவேன்' என்கிறான். 'கால மெல்லாம் காத்திருப்பேன். கன்னியாகவே தவம் இருப்பேன்' என்றாள் தலைவி.

போரில் அவன் வீரமரணம் எய்தினாலும், அவனை மறுபிறப்பில் தலைவனாக அடையவேண்டும் என்பதற்காக, காலமெல்லாம் கன்னித்தவம் புரிந்து நோன்பு நோற்பாளாம் அவள்!

அத்தகைய அறக் கற்புத் தெய்வத்துக்கே சோதனை வந்துவிட்டது. போர் வெறி பகை நாட்டுக் கயவன் ஒருவனின் உருவத்தில் தலைவி தனித்திருக்கும்போது வீட்டுக்குள் நுழைந்தது.

பதறித் துடித்தாள் பேதை. தப்பியோடப் பார்த்தாள்; தற்கொலை செய்துகொள்ள முயன்றாள்; பொங்கிச்

சீறினாள்; விம்மிக் கதறினாள்; கெஞ்சினாள்; மன்றாடினாள்; 'தாய்க்குப் பிறக்கவில்லையா? தங்கை இல்லையா? தலைவி இல்லையா வீட்டில்? அவர்களுக்கும் இந்த கதி நேராதா?' என்று கேட்டுப் புலம்பினாள்.

தனது உள்ளத்துக் கனலைக் காக்கச் சொல்லி எல்லாத் தெய்வங்களிடமும் முறையிட்டாள் தலைவி. ஆலவாய் அண்ணல், அங்கயற்கண்ணி, பத்தினியாம் கண்ணகி, பத்திர காளியாம் கொற்றவை, இன்னும் எல்லாத் தெய்வங் களையுமே கூவினாள்.

பயனில்லை. மயங்கி வீழ்ந்தாள். அந்தக் காட்சியின் திரையும் வீழ்ந்தது.

கூத்தைக் கண்ட அரசர்கள் அனைவருமே அப்போது கண்ணீர் வடித்தார்கள். படைத் தலைவர்கள் எல்லோருமே ''இனிப் போர் வேண்டாம்! போர் வேண்டாம்!'' என்று புலம்பினார்கள். வீரச் செருக்குப் பேசித் தன் இனத்தைத் தானே அழித்துக் கொண்ட தமிழ்க்குலத்து வேந்தர்களும், அயலாரை அழிக்க முயன்று தாமும் அழிந்த மற்ற அரசர்களும் போர் வெறிச் செயலின் பயங்கரமான விளைவொன்றைத் தமது கண்களால் கண்டார்கள்.

பெண்கள் பலர் தேம்பியழும் குரல் எழுந்தது.

அரங்கத்தின் திரை விலக, அங்கே போருக்குச் சென் றிருந்த தலைவன் விழுப்புண்களோடு திரும்பிவந்தான். தாபத் துடிப்போடு, பிரிவின் ஏக்கம் தந்த வெறியோடு, தலைவியின் கரத்தைப் பற்றுவதற்கு அவன் விரைந்தோடி வந்தான்.

தலைவி கொற்றவைக் கொடுந்தேவியாக மாறி அவனிடம் சீறினாள்; ''தீண்டாதீர்கள், என்னை! உடலால் மட்டுமல்ல, உள்ளத்தாலும் தீண்டாதீர்கள்! நான் நிறையழிந்தவள்! பழி சுமந்தவள்! பாவியிலும் பாவி!''

கயல்விழியின் அன்றையத்தோற்றத்தில் என்றுமே அவன் கண்டிராத ஒரு பயங்கரமான பேரொளியைக் கண்டு நடுநடுங்கினான் சுந்தரபாண்டியன். கூத்துப்பாடலை மறந்து விட்டவள் போல் மீண்டும் மீண்டும் அவள் அதையே கூறினாள்.

கண்ணீர் அருவி பொங்கிற்று; இதழ்கள் துடித்தன; மார்பகம் விம்மியது; அனல் கொழுந்து வீசியது, அவள் நெடு மூச்சில். தடாரென்று அவன் காலடியில் வீழ்ந்து விட்டாள்.

வீழ்ந்தவளைக் கவனியாது அவன் தொடர்ந்து கதறினான்: ''பாண்டியத் திருமகளே! நீ நிறையழிந்தவளல்ல! நீ பழிசுமந்தவள் அல்ல; பத்தரை மாற்றுப் பசும்பொன் நீ! பத்தினி தெய்வமாம் கண்ணகி நீ! அங்கயற் கண்ணியின் அருமைச் செல்வி நீ! மறு இல்லாக் கற்பினளே, ஆண் குலத்தின் சான்றாண்மையற்ற வெறிச் செயலின் பழி பாவத்தை நீ சுமந்து கொண்டாய்!''

சுந்தரபாண்டியன் கீழே குனிந்தவுடன் திடுக்கிட்டான். கயல்விழியின் கண்கள் அவன் முகத்தில் நிலைகுத்தி நின்றன. அவள்...? அவள்..?

''இளவரசே! தாங்கள் இறுதியாகப் பேசியது அவ்வளவும் மெய்தானே? நான் நிறையழிந்தவள் அல்லவே?'' என்று மெல்லக் கேட்டாள். பிறகு, ''விழுப்பரையரிடம் எல்லாவற்றையும் கூறியிருக்கிறேன்; அவர்கள் சொல்வார்கள்!'' என்று கூறிக்கொண்டே, தன் விழிகளை இமைக்காமல் அவனை நோக்கிப் புன்னகை புரிந்தாள்.

''கயல்விழி!'' என்று அந்த அரண்மனையே கிடுகிடுக்க அலறினான் சுந்தரபாண்டியன். அவளுடைய புன்னகை பூத்த விழிகளில் புத்தொளி பொங்கி அவனது இதயத்துக்குள்ளே பரவியது. அவர்களது கடைசிக் கூத்தும் முடிந்தது.

# ௨௯. மலர்மிசை ஏகினாள்



**வ**ளர்பிறை நிலவும் வானத் தடாகத்து மீன்களும் சிந்திய ஒளியில் அங்கயற்கண்ணி அம்மையின் கோயில் கோபுரங்கள் கண்ணீரால் வரையப்பெற்ற திரைச்சீலை ஓவியங்களைப் போல் காட்சி யளித்தன. அரண்மனை மேல் மாடத்துத் திறந்த வெளியில் வைகைக் காற்றுகூட வெம்மை கலந்தாற்போல் வீசியது. கயல்விழியின் மேல் விழுந்து கதறிய சுந்தரபாண்டியனைப் பற்றி இழுத்துக் கொண்டு அங்கு வந்து சேர்ந்தார் விழுப்பரையர்.

கூத்தரங்கில் வீழ்ந்த கயல்விழியைச் சூழ்ந்துகொண்டு அரண்மனைப் பெண்டிரும் அரசர்களும் படைத் தலைவர்களும் ஒன்றாகக் கண்ணீர் வடித்தனர். பாமினி தன் தோழியின் முகத்தோடு முகம் வைத்துக்கொண்டு கதறினாள். கோப்பெருந்தேவியார் அந்த அதிர்ச்சியிலிருந்து இன்னும் மீளவில்லை.

'போர் வேண்டாம்; இனி போரே வேண்டாம்!' என்று கதறத் தோன்றியது அரசர்களுக்கு. 'கொலை, கொள்ளை, தீயிடுதல், பெண்டிரை அழித்தல் இவ்வளவும் மனிதர்கள் செய்யக்கூடிய செயல்கள்தாமா?' என்ற கேள்வி ஒவ்வொருவர் உள்ளத்திலும் அப்போது எழுந்தது.

''போரில் இதுவரை நாம் உணராத ஒரு கொடுமையை இன்று நமக்கு உணர்த்திவிட்டுப் போய்விட்டாள் கயல்விழி. இந்தக் கொடுமை நம் வீட்டுப் பெண்டிரான தாய், தங்கை, தலைவி யாருக்கும் ஏற்படலாம். இனியாவது நமக்குள் போரின்றி வாழ்வோம். இந்தக் கணத்திலேயே இப்படி ஒரு

முடிவு செய்து கொள்வோம்'' என்று நாத் தழுதழுக்கக் கூறினார் வீரநரசிம்மன். அனைவருமே அதைப் புனிதமான முடிவாக ஏற்றுக் கொண்டனர்.

அரசர்கள் செய்துகொண்ட அந்த முடிவைத் தொலைவில் இருந்து சுந்தரபாண்டியனும் கவனித்தான். ஆனால் அவனுடைய மனம் அப்போது எதிலும் ஒட்டவில்லை.

விழுப்பரையர் அவனைத் தேற்றத் தொடங்கினார்:

''இளவரசே! கயல்விழி தெய்வமாகிவிட்டாள். அந்தக் காட்சியைத் தான் இப்போது இந்த அரசர்களின் மனமாற்றத்தில் காணுகிறீர்கள்.''

''எனக்குத் தெரியாத ஏதோ ஒன்றை அவள் தங்களிடம் கூறியிருக்கிறாள் என்று தெரிகிறது. நான் அதைத் தெரிந்து கொள்ளலாமென்றால்...''

விழுப்பரையர் அவனருகில் நெருங்கி அவன் கரங்கள் இரண்டையும் பற்றிக் கொண்டார். சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தார். பிறகு மெல்லக் கூறினார்:

''கயல்விழிக்குள்ளே இரண்டு பெண்மணிகள் இருப்பதாகத் தாங்கள் கூட அவளிடம் கோபத்தோடு கூறுவதுண்டாம். அந்தக் கூற்று மெய்தான். மகேந்திர மங்கலத்தில் ஏற்பட்ட போர் நிறுத்தத்துக்குப் பிறகு அவளே என்னிடம் ஒப்புக்கொண்டாள்.''

சுந்தரபாண்டியனின் நெற்றி சுருங்கியது. நெஞ்சுத் துடிப்பு இருமடங்காகியது.

''இந்தக் கூத்தை எழுதி முடித்து அவளை இதில் நடிக்க வேண்டுமென்று நீங்கள் கொடுங்குன்றத்தில் கேட்டபோது, முதலில் மறுத்துவிட்டுப் பிறகு தங்கள் மனம் நோகக் கூடாது என்பதற்காக இசைந்தாளாம். அடுத்தாற்போல் திருவிழாவின் போதும், அரங்கேற்றம் நடந்தபோதும், கூத்தின் முடிவில்

வேண்டுமென்றே தீக்குளிக்க முயன்றாளாம்- பின்னர் தாங்கள் தாம் இளவரசர் என்று தெரிந்தவுடன், தங்கள் கண்களில் படாமலே மறைந்து வாழத் துடித்தாளாம்- இப்படி ஒரு கயல்விழியும், தங்கள் மேல் வைத்த பேரன்பால், இந்த முயற்சிகளில் படுதோல்வியுற்ற மற்றொரு கயல்விழியும் அவளுக்குள்ளே இருந்திருக்கிறார்கள்.''

சுந்தரபாண்டியனுக்கு அவன் கயல்விழியோடு நடத்திய எல்லாப் போராட்டங்களுமே நினைவுக்கு வந்தன. திருக்கொடுங்குன்றத்தில் தொடங்கிய போராட்டம், பொன்னமராவதியில் முற்றிக் கிளைத்ததும், மகேந்திர மங்கலத்துப் பாசறைக்குள் அது பயங்கரமான புயலாக வீசியதும், அதை அடுத்த நிகழ்ச்சிகளும் அவன் முன்னே சுழன்றன.

மௌனமாக விழுப்பரையரைப் பார்த்தான் சுந்தர பாண்டியன். அவர் தொடர்ந்து கூறினார்:

''பாண்டித் திருமகள் என்ற கூத்தைத் தாங்கள் புனைந்தீர்கள் அல்லவா? எந்த நிகழ்ச்சியைக் கொண்டு அதைப் புனைந்தீர்களோ, எந்தத் துயரம் போரின்போது கூத்துடைத்தலைவிக்கு ஏற்படுகிறதோ, அதே போல்...''

''அதேபோல்...-'' நடுக்கமுற்றது இளைய பாண்டியனின் குரல்.

விழுப்பரையருக்கும் தொண்டையை அடைத்தது. ''குலோத்துங்கர் மதுரையின்மீது படையெடுத்தபோது, அவர் குமரன் இராஜராஜனால் நம் கயல்விழிக்கும் அதே துன்பம் நேர்ந்திருக்கும் என்று தோன்றுகிறது. அதனாலேயே அவள் வைகை வெள்ளத்தில் வீழ்ந்து மற்ற பெண்டிரைப் போலவே உயிர் துறக்க ஓடி வந்திருக்கிறாள். அப்போதுதான் தாங்களும் விழுப்புண்ணோடு மருத்துவர் குடிலை விட்டு வெளியே சென்றீர்கள்...''

''ஐயோ, கயல்விழி!'' என்று கூவிக்கொண்டே தன் கரங்களில் முகம் புதைத்துக்கொண்டு தேம்பித் தேம்பி

அழுதான் சுந்தரபாண்டியன். அவனது மயிர்க்கால்கள் தோறும் வெஞ்சினத் தீ கொழுந்து விட்டெரிந்தது. உடைவாளை உருவிச் சட்டென்று மேலே உயர்த்தினான்.

''இப்போதே நான் கங்காபுரிக்குப் புறப்படவேண்டும். என் கயல்விழிக்குத் தீங்கிழைத்த அந்த இராஜராஜனைக் கணுக்கணுவாய்ச் சிதைக்க வேண்டும். இந்தப் பெண் தெய்வத்தின் பெயரைச் சொல்லியே அவனைப் பழி தீர்க்க வேண்டும்!- போர், போர், போர்!'' என்று வெறி கொண்டு கத்தினான் அவன்.

விழுப்பரையர் அவனைக் கட்டிப் பிடித்தார். அவனுடைய வாயைப் பொத்தினார். அவனோடு அழுது புலம்பி அவன் ஆத்திரத்தை அடக்க முயன்றார்.

''இளவரசே! கயல்விழியே கொற்றவையாக மாறித் தனக்கு நேர்ந்த பழியை மிகப்பயங்கரமான முறையில் தீர்த்துக் கொண்டாள். தங்களிடம் சக்திக் கனலாகச் சுடர் விட்டு இராஜராஜனுடைய சாம்ராஜ்யத்தைச் சரித்து வீழ்த்தி விட்டாள். மாபெரும் சோழ சாம்ராஜ்யம் இப்பொழுது தன் பொலிவிழந்து சிற்றரசாகி விட்டது. அது போதாதென்று அவனுடைய மனைவியையே அவனுக்கு முன்னால் தனக்குக் கவரி வீச வைத்திருக்கிறாள். மேலும் இராஜராஜன் கோப் பெருஞ்சிங்கனிடம் சிறைப்பட்டுத் தன் செருக்கனைத்தும் இப்போது இழந்து நிற்கிறான். இனிமேலும் அவனை ஒரு பொருட்டாக மதித்துப் போர் நடத்த வேண்டுமா என்பதைத் தயைசெய்து சிந்தித்துப் பாருங்கள்.''

''நான் நடத்தும் கடைசிப் போராக இது இருக்கட்டும். அவனைப் போன்ற வெறிகொண்ட கோழைகளை இந்த மண்ணில் நடமாட விடுவதே தவறு. அவனுடைய உயிரையே நான் கயல்விழிக்கு என் காணிக்கையாக்குகிறேன்!''

சுந்தரபாண்டியனின் குமுறலைத் தணிப்பதற்கு எவ்வளவோ முயற்சிகள் செய்தார் விழுப்பரையர். அவ

னுடைய துயரம் அவரையும் ஒன்றாகச் சேர்ந்து உருக்கி விட்டது. நெடுநேரம் அவனிடம் மன்றாடினார்.

''கயல்விழிக்கு மெய்யாகவே தாங்கள் காணிக்கை செலுத்த விரும்பினால், அதைத் தங்களது போர்க்குணத்தை அடக்கி ஆள்வதன் வாயிலாகவே செலுத்த முடியும். வன்முறைப் போருக்கு ஒரு முடிவே இருக்காது. தமிழ் இனம் ஒற்றுமை இழந்து காலம் காலமாகவே கொலை, கொள்ளை, தீ இவற்றால் தன்னைத்தானே அழித்துக் கொண்டு வந்திருக்கிறது. கயல்விழியின் பெயரால் தங்களை வேண்டிக் கொள்கிறேன். விலங்குணர்ச்சிப் போராட்டம் இனி நமக்கு வேண்டாம். சிந்தனாசக்தியே எல்லா ஆயுதங்களையும் விட வலிமையானது. நாம் இனி அதைக் கொண்டு போராடுவோம். அதனால் வெல்ல வேண்டியவர்களை வெல்லுவோம். உறவு கொள்ள வேண்டியவர்களை உறவு கொள்ளுவோம்.''

''பரணி பாட வேண்டிய புலவர் அவர்களே இப்படிக் கூறுகிறீர்களே!'' என்று துடித்தான் இளையபாண்டியன்.

''கயல்விழியே என்னிடம் ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறாள். வீரரான தங்களிடமுள்ள போர்க் குணமாகிய ஆயிரம் யானைகளைத் தாங்கள் என்றைக்குச் சிந்தனை கூர்வேலால் சிதைக்கிறீர்களோ, அன்றைக்கே தங்கள்மீது பரணி பாடச் சொல்லியிருக்கிறாள். தற்காப்புக்காக மட்டிலும் போரிட்டால் போதும். பகைவரும் அஞ்சக்கூடிய ஆற்றலை வளர்க்க வேண்டுமே தவிர,அதனால் அழிவுப் போர் நடத்தக் கூடாது.''

சுந்தரபாண்டியன் திடுக்கிட்டான். குடிமக்களின் தாயாக வளர்ந்துவிட்டவளின் வேண்டுகோள் அது என்றாலும் அவனுக்கு இராஜராஜன் மீது வெஞ்சினம் தீரவில்லை.

''இளவரசே! இதை மட்டும் சிந்தித்துப் பாருங்கள்; மற்ற அரசர்கள் யாவருமே ஒற்றுமையோடு வாழ்வதென ஒரே

மனத்தோடு இப்பொழுது உறுதி பூண்டிருக்கிறார்கள். இந்தச் சமயத்தில் போர் தொடுத்தால் அவர்களிடம் கயல்விழிக்கு அந்தப் பதர் தீங்கிழைத்து விட்டான் என்றுதானே கூற வேண்டும்? தீயாலும் எரிக்க முடியாத அந்தப் பெண் தெய்வத்தின் பண்பை அறியாதவர்கள் என்ன நினைப்பார்கள்?''

இதைக் கேட்டவுடன் உடைவாளை ஒருபுறம் வீசினான் சுந்தரபாண்டியன். ''என்னை மன்னித்துவிடுங்கள்'' என்றான்.

''கயல்விழி தங்களுக்காக மற்றொரு செய்தியும் என்னிடம் கூறியிருக்கிறாள். தங்களைவிட்டுக் கணப் பொழுதும் அவளால் பிரிந்திருக்க முடியாதாம். கோசல நாட்டு இளவரசியின் உடல், உள்ளம், ஆவி அனைத்திலும் கலந்து தங்களை மகிழ்விக்கப் போவதாக முன்பே எ ன்னிடம் கூறினாள். அதன் பொருளை இப்போதுதான் நான் உணர்ந்தேன்- இளவரசே, இனித் தாங்கள் கயல்விழியைக் கோசல நாட்டு இளவரசியாரின் உருவத்தில் காணப் பழகிக் கொள்ளவேண்டும்.''

நேரம் சென்றது. அழுத கண்ணீரும் கையில் கயல்விழிக்கு ஒரு மலர் மாலையுமாக வந்து அவனருகில் நின்றாள் பாமினி. அந்த மாலையைச் சுமந்து கயல்விழியை நாடிச் சென்றான்.

''என் தெய்வமே! தீயாலும் தீயவர்களாலும் அழிக்க முடியாத திருமகளே! என்னையும் நாட்டையும் வாழவைக்க வந்த அருஞ் செல்வமே! நீ என்றென்றும் எங்களுடன் வாழ்ந்து உன் குடிமக்களுக்கு வழிகாட்ட வேண்டும்!'' என்று நாத்தழுதழுக்கக் கூறிக்கொண்டே அவளுக்கு மாலை சூட்டினான்.

புதுமண மங்கையின் முகத்தில் படரும் நாணமும் புன்னகையும் அப்போது கயல்விழியின் முகத்தில் படர்வது போல் சுந்தரபாண்டியனுக்குத் தோன்றியது.

பொழுதும் புலர்ந்தது. தாமரை மலர் போன்ற தெருக்களின் அமைப்பைக் கொண்ட மதுரைமா நகரத்துக் கோயிலின் கிழக்குக் கோபுரம் விண்ணை நோக்கி நெடிதுயர்ந்து நின்றது.

